உ

श्रीगुरुभ्यो नमः



# स्मृतिमुक्ताफलम्

# ஸ்ம்ருதி முக்தாபலம்

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

द्रविडानुवादयुतम्

षष्ठो भागः ஆறுவது பாகம்

## श्राद्ध काण्डः - उत्तरभागः

## ச்ராத்த காண்டம் - உத்தர பாகம்



வெளியிடுபவர்:

வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்,

காஞ்சீபுரம்

உ

श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

द्रविडानुवादयुतम्

षष्ठो भागः

## श्राद्ध काण्डः - उत्तरभागः

# ஸ்ம்ருதி முக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

ஆறுவது பாகம்

## ச்ராத்த காண்டம் - உத்தர பாகம்

தமிழுரையுடன்

தொகுத்தளிப்பவர் :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர் :

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502

கர ௵ 2011

**SMRITI MUKTAPHALAM - PART - 6**

**SRADDHA KANDAM - UTHTHARA BHAGA**

With Tamil translation :

Khara 2011 - II Edition

Edited by :

Vaidya **S.V. Radhakrishna Sastri, Srirangam**

Published on behalf of

**Veda Dharma Sastra Paripalana Sabha**

Kumbakonam

by

**Sri Kanchi Kamakoti Peetam,**

Sri Matam Samsthanam

1, Salai Street, Kancheepuram=631 502.

---

Lasertypeset & Prnted at :

V.K.N. Enterprises

164, R.H. Road, Mylapore, Chennai-4, Phone : 98402 17036

Phone : 044-2722115
Fax : 044-27224305, 37290060
e:mail:skmkanci@md3.vsnl.net.in

Sri Chandramouleeswaraya Namaha:
Sri Sankara Bhagavazdpadacharya
Paramaparagatha Moolamnaya Sarvagnapeeta:
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
Srimatam Samasthanam
No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502.



मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान् ।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात् ॥

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिलस्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणबृन्दमाक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति । धर्म एव विशिनष्टि समाजं समजात् । मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः । धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षिताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागारं निर्मथ्य

पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत् । सोऽयं ग्रन्थः वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति । यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च । स वै राघवशार्दूल धर्मस्त्वामभि-रक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठु अवगम्यते । लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः । सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते । तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डादिः भागशः वैद्यश्री शिवे. राधाकृष्णशास्त्रिभिः द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे । सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बा-समेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थ-सम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयो-विलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्त-मङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधि-गच्छन्त्विति चाशास्महे ।

शाङ्करसंवत्सरः २५२०

काञ्चीपुरम् नारायणस्मृतिः ।

# முன்னுரை

சிராத்தத்தின் பெருமை பற்றி சிராத்த காண்டத்தின் பூர்வபாகத்தில் மிக விரிவாக விளக்கம் தரப்பட்டுள்ளது. ச்ராத்தத்தின் செய்முறை அதற்குரிய காலம், தேசம், சிராத்தம் செய்பவனின் உரிமை, தகுதி, பித்ருக்களாக வரிக்கத் தக்கவரின் தகுதி, அதன் செய்முறை என்ற பல சிறந்த விஷயங்கள் இதில் இடம் பெறுகின்றன. வருஷம், ருது, மாஸம், திதி, வாரம், நக்ஷத்திரம் முதலிய பல காலப் பகுதிகள் இறந்தவனைக் குறித்துச் செய்கிற கர்மங்களில் முக்கிய இடம் பெறுகின்றன. இவற்றில் மரித்த திதி முதலிடம் பெறுகிறது. மாதம் தோறும் ஆண்டு தோறும் மரித்தவளின் அடுத்த தலைமுறை வாழும் நாட்களில் இறந்தவனைக் குறித்துப் பல சடங்குகள் கடமையாக செய்ய வேண்டியிருக்கின்றன. இதில் தவறு நேர்ந்தால் ஸந்ததியினரின் வாழ்வில் பல கேடுகள் நேர்கின்றன. உரிய காலத்தில் உரிய முறையில் அந்தச் சடங்குகளைச் செய்ய ஸந்ததியினர் நல்வாழ்வு பெறுகின்றனர. மனிதனுக்குரிய கடமைகளில் தேவ குணம், ருஷி குணம் போல் பித்ரு ருணமும் முக்யத்வம் பெறுகிறது. அக்கடமைகளையும் உரிய காலத்தில் உரிய நேரத்தில் உரிய இடத்தில் உரிய முறைப்படி உரியவர் நிறைவுறச் செய்வது மிக மிக அவச்யமாகிறது. அதற்கு மூலமான பண்பு ச்ரத்தையும் பக்தியும்.

காலம் தேசம் சூழ்நிலை என மூன்று மனிதனைக் கட்டுப்படுத்துகின்றன. காலம் பல பிரிவுகள் கொண்டது. அதில் மாதமும் திதியும் பித்ரு ருணத்தை அடைப்பதில் முக்யமானவை. முன்னோர்கள் மறைந்த நாள் மறக்கக் கூடாதது. வாரம் திதி நக்ஷத்ரம் என்று பல அதனைக் குறிப்பிட்டாலும் திதி ஒன்றே பொருட்படுத்தத் தக்கது. காலக் கணக்கீட்டில் ஸௌரம்,

 

சாந்திரம், ஸாவனம் எனப் பல முறைகள் இருந்தாலும் ஸௌரமானமும் சாந்திரமானமும் இதில் முக்யத்துவம் பெறுகின்றன. பித்ருக்களின் சடங்கில் பிற்பகலில் அதிக இடம் பெறுகிற திதி ஏற்புடையது. அதிலும் பல குறுக்கீடுகள் நேரலாம். ச்ராத்தத்திற்குரிய வேளை குதபம் என்ற நடுப்பகலில் இடம் பெறும் முஹூர்த்தம் (48 நிமிஷங்கள்). (பொதுவாக முற்பகல் 11.36 மணி முதல் பிற்பகல் 12.24 மணிவரை 'பரவி நிற்பது அந்த முஹூர்த்தம்). அதனைத் தொடர்ந்து வருகிற முஹூர்த்தங்கள் ச்ராத்தத்திற்கு எற்றவை. குதபம் என்ற அந்த முஹூர்த்தத்தில் சூரியனின் நடுப்பகலின் கடும் தாபம் சற்று மந்தமாகும். அதனால் அது குதபம்-தாபத்தில் குறைவுள்ளது. குதபம் முதல் ஸூரியனின் அஸ்தமன வேளைக்கு முன்னுள்ள பிற்பகல் பகுதிவரை சிராத்தத்திற்குரிய வேளை. சிராத்த திதி அந்த வேளைப் பகுதியில் அதிகம் வியாபித்திருப்பது அவசிய மென்பர். அமாவாஸ்யை முதலிய நாட்களில் கூட தர்ப்பணம் முதலியவை செய்ய ஏற்ற நேரம் இதுவே. பல நெருக்கடி நிலைகள் திதி நிர்ணயத்தில் குழப்பம் தரும். இவற்றைப் பற்றிய ஆராய்ச்சி இந்த உத்தர பாகத்தில் அதிகம் இடம் பெறுகிறது எனலாம்.

சிரத்தைக்கும் பக்திக்கும் உள்ள முக்யத்துவம் போல் செய்முறை, கர்த்தாவின் நடைமுறை, சிராத்தத்தில் பித்ருக்களின் ஸ்தானத்தில் வரிக்கப்ப பெற்றவரின் நடைமுறை, பயன்படுகிற பொருள் என்று பலவற்றின் தூய்மையும் கவனத்தில் கொள்ளத்தக்கதென்பர்.

சிராத்த முறையை வகுத்துத் தந்த பெரியோர்கள் நம்மிடம் பரிவும் அக்கரையும் மிக்கவர்களே. அதனால் ''சக்திக் கேற்ப'' என்ற கவசத்தை அளித்துள்ளனர். அதை நம் அக்கரையின்மையால் துருபயோகப் படுத்துவது பாபச் செயலாக முடியும் என்பதும் கவனிக்கத் தகுந்தது.

நம் வணக்கத்துக்குரிய பூஜ்யஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்து ஆசார்யர்களின் ஆழ்ந்த தர்மபரிபாலன சிரத்தையின் பயனாக வேத தர்ம பரிபாலன ஸபை பல்லாண்டுகளுக்கு முன் உருவானது. அதன் முக்யக் கடமையின் பயனாக ஸ்ம்ருதி முக்தாபலத்தின் அனைத்துப் பகுதிகலும் வரிசையாக வெளிவந்தன. வேதத்தைக் காப்பதில் வேத தர்மத்தை அனுஷ்டிப்பதில் அளவற்ற அக்கரை கொண்ட ஆஸ்திகப் பெருமக்களுக்கு அது வழி காட்டிப் பேருதவி புரிந்தது. அதனால் தர்ம பரிபாலனத்தில் முழு அக்கரை கொண்ட பூஜ்யஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களும் இந்நூலின் மறுபதிப்பில், காலத்திற்கேற்ப மூல நூலை தேவநாகரிலிபியிலும் முன் வெளிவந்த தமிழுரையுடன் சேர்த்து புதிதாக பதிப்பிப்பதில் மிக்க அக்கரை காட்டி இவனை அதனை மறு பதிப்பிற்குப் பணிபுரிய ஆஜ்ஞையிட்டனர். அவ்வருள் நோக்கு தன் பணியை விரைவுடன் நிறைவுறச் செய்து வருகிறது.

திதி நிர்ணய காண்டமும் பிராயச்சித்த காண்டமும் இதனைத் தொடர்ந்து வெளியாகி அருட் செயலை நிறைவுறச் செய்யும். இவனை இப்பணியில் புகுத்தி அருளாசி வழங்கி வருகிற ஸ்ரீ சரணர்களின் ஸ்ரீ சரணங்களில் இதனை ஸமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீரங்கம்
20.7.2011

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்த்ரீ
பதிப்பாளர்

# श्राद्धकाण्डः - उत्तरभागः

## विषयानुक्रमणिका

## சிராத்த காண்டம் - உத்தரபாகம்

## பொருளடக்கம்

உ

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

## ஸ்ம்ருதி முக்தாபலம்

## ।। श्राद्धकाण्डः ।।

## (उत्तरभागः)

# ஸ்ம்ருதி முக்தாபலம்

# ச்ராத்த காண்டம்

## (உத்தர பாகம்)

### आब्दिकनिरूपणम्

अथ आब्दिकं निरूप्यते । तत्र याज्ञवल्क्यः — मृतेऽहनि तु कर्तव्यं प्रतिमासं च वत्सरम् । प्रतिसंवत्सरं चैवमाद्यमेकादशेऽहनि इति । लोकाक्षिः — श्राद्धं कुर्यादवश्यं तु प्रमीतपितृकः स्वयम् । इन्दुक्षये मासि मासि वृद्धौ प्रत्यब्दमेव च इति । जातुकर्णिकः — पितुः पितृगणस्थस्य कुर्यात् पार्वणवत् सुतः । प्रत्यब्दं प्रतिमासं च विधिर्ज्ञेयः

सनातनः इति। पितृगणस्थस्य - कृतसपिण्डीकरणस्य पितुः, प्रत्यब्दं प्रतिमासमाब्दिकं मासिकं च श्राद्धं पार्वणवत् - पितृपितामहप्रपितामहात्मकत्रिपुरुषोद्देशेन सुतो मृताहे कुर्यादित्यर्थः।

## ஆப்திக நிருபணம்

1. இனி ஆப்திகம் சொல்லப்படுகிறது. அதில், யாஜ்வல்க்யர்:— ஒரு வர்ஷம் வரையில் ப்ரதி மாஸமும் ம்ருத திதியில் ச்ராத்தம் செய்ய வேண்டும். பிரதி வருஷமும் ம்ருத திதியில் சிராத்தம் செய்ய வேண்டும். 11-ஆவது நாளில் ஆத்ய ச்ராத்தமும் செய்ய வேண்டும். லோகாக்ஷி:— இறந்த பிதாவை உடையவன் ப்ரதி மாஸம் தர்சத்திலும், சுபத்திலும், ப்ரதி வர்ஷமும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ஜாதுர்கணி:— ''பித்ரு கணத்திலுள்ள பிதாவுக்குப் புத்ரன் பார்வண விதியாய் ப்ரதி வர்ஷமும், ப்ரதி மாஸமும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இது ஸநாதனமான விதி''. பித்ருகணஸ்தஸ்ய - ஸபிண்டீகரணம் செய்யப்பட்ட பிதாவுக்கு ப்ரதி வர்ஷம் ஆப்திகத்தையும், ப்ரதி மாஸம் மாஸிகத்தையும், பார்வணவத் - பித்ரு பிதாமஹப்ரபிதாமஹர்களான மூன்று புருஷர்களை உத்தேசித்து, புத்ரன் ம்ருத திதியில் செய்ய வேண்டும் என்பது பொருள்.

कात्यायनः — प्रत्यब्दं यो यथा कुर्यात् पितुः पुत्रः सदा द्विजः। तथैव मातुः कर्तव्यं पार्वणं तु विधानतः इति। स्मृतिचिन्तामणौ — मृताहे मासिकं कार्यं द्व्यहोने तूनमासिकम्। आब्दिकं प्रथमं कुर्यान्मृतमासे मृतेऽहनि इति। धर्मसुधानिधौ — यस्मिन् मासि मृतिः पक्षे यस्य यस्यां तिथौ भवेत्। तस्यामेव तिथौ कुर्यादाब्दिकं तु विचक्षणः इति। स्मृत्यन्तरे — यस्मिन् मासि मृतिः पूर्वं तस्मिन् मासि च तद्दिने। प्रथमाब्दिकमारभ्य कुर्यदामरणान्तिकम्॥

**காத்யாயனர்:—** புத்ரன் பிதாவுக்கு ப்ரதி வர்ஷமும் எப்படிச் செய்வானோ அப்படியே மாதாவுக்கும் பார்வண ச்ராத்தத்தை விதிப்படி செய்ய வேண்டும். **ஸ்ம்ருதி சிந்தாமணியில்:—** ம்ருத திதியில் மாஸிகத்தைச் செய்யவும். 2-நாட்கள் குறைந்துள்ள போது ஊனமாஸிகத்தைச் செய்ய வேண்டும். ம்ருத மாஸத்தில் ம்ருத திதியில், முதலாவதான ஆப்திகத்தைச் செய்யவும். **தர்மஸுதாநிதியில்:—** எவனுக்கு எந்த மாஸத்தில் எந்தப் பக்ஷத்தில் எந்தத் திதியில் ம்ருதி ஏற்பட்டதோ, அவனுக்கு அதே திதியில் ஆப்திகத்தைச் செய்ய வேண்டும் அறிந்தவன். **மற்றொரு ஸ்ம்ருதியில்:—** எந்த மாஸத்தில் எந்தத் திதியில் முன்பு ம்ருதி ஏற்பட்டதோ அதே மாஸத்தில் அதே திதியில் ப்ரதமாப்திகம் முதல் கொண்டு செய்து வரவேண்டும், மரணம் வரையில்,

नारदः — यस्यां तिथौ मृतिःप्राप्ता तस्यामेवाब्दिकं भवेत्। तिथिनक्षत्रवाराणां तिथिरेव बलीयसी इति । चन्द्रिकायां- मासपक्षतिथिस्पृष्टे यो यस्मिन् म्रियतेऽहनि। प्रत्यब्दं तु तथाभूतं क्षयाहं तस्य तं विदुः इति। अत्र सर्वत्र मृताहस्य मासनिरूप्यत्वं प्रतीयते, मासश्च सौरचान्द्रसावनभेदेन त्रिविधो भवति। मसी परिमाणे (णामे) इत्यस्माद्धातोर्निष्पन्नोऽयं मासशब्दः, सूर्यस्य राशिगतिर्यत्र परिमीयते स सौरः, मस्येते परिमीयेते यावता कालेन चन्द्रवृद्धिक्षयौ स चान्द्रो मासः, अहोरात्राणां त्रिंशत् संख्या यत्र परिमीयते स सावनः।

**நாரதர்:—** எந்தத் திதியில் மரணம் அடையப்பட்டதோ அந்தத் திதியிலேயே ஆப்திகம் செய்யப்பட வேண்டும். திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளுக்குள் திதியே பலம் உள்ளது. **சந்த்ரிகையில்:—** எவன் எந்த மாஸ பக்ஷ திதிகளுடன் கூடிய தினத்தில் இறந்தானோ, அவனுக்கு, ப்ரதி வர்ஷமும் அதே விதமான காலத்தை ம்ருதாஹ ச்ராத்த காலமாகச் சொல்லுகின்றனர்.

இவ்விஷயத்தில் எல்லா வசனங்களிலும் திதிக்கு மாஸ ஸம்பந்தம் தோன்றுகிறது. மாஸம் என்பது ஸௌரம், சாந்த்ரம், ஸாவநம் என்ற பேதத்தால் மூன்று விதமாகிறது. 'மஸீபரிமாணே' (ணாமே) என்ற தாதுவினின்றும் உண்டாகியது மாஸ சப்தம். ஸூர்யனுடைய ராசிகமனம் எதில் அளக்கப்படுகிறதோ அது ஸௌர மாஸம். சந்த்ரனுடைய வ்ருத்தி க்ஷயங்கள் எவ்வளவு காலத்தால் அளக்கப்படுகின்றனவோ அது சாந்த்ரமாஸம். முப்பது நாட்கள் எதில் கணக்கிடப்படுகின்றனவோ அது ஸாவனமாஸம்.

तदुक्तं ब्रह्मसिद्धान्ते — चान्द्रश्शुक्लादिदर्शान्तः सावनस्त्रिंशता दिनैः। एकराशौ रविर्यावत्कालं मासः स भास्वतः इति। शुक्लादिः - शुक्लप्रतिपदादिः दर्शान्तश्चान्द्रः। तथा च स्मृत्यन्तरे — मेषादिस्थे सवितरि यो यो दर्शः प्रवर्तते। चान्द्रमासास्तत्तदन्ताश्चैत्राद्या द्वादश स्मृताः इति। चन्द्रिकायाम् — दर्शाद्दर्शश्चान्द्रः त्रिंशद्दिवसस्तु सावनो मासः। रविसंक्रमचिह्नोऽसौ सौरो मासो निगद्यते तज्ज्ञैः इति। चान्द्रस्तु द्विविधः, दर्शान्तः पूर्णिमान्त इति। तथा च श्रूयते — अमावास्यया मासान् संपश्यन्ति पौर्णमास्या मासान् सम्पाद्याहरुत्सृजन्ति पौर्णमास्या हि मासान् संपश्यन्ति इति।

**ப்ரம்ஹ ஸித்தாந்தத்தில்:—** சுக்லபக்ஷம் முதல் தர்சம் முடியும் வரை உள்ளது சாந்த்ரமாஸம். 30-நாட்கள் கொண்டது ஸாவன மாஸம். ஸூர்யன் ஒரு ராசியில் எவ்வளவு காலம் இருக்கின்றானோ அக்காலம் ஸௌரமாஸம். சுக்லபக்ஷ ப்ரதமை முதல் தர்சம் முடிய உள்ளது சாந்த்ரமாஸம். அவ்விதமே, ஓர் **ஸ்ம்ருதியில்:—** மேஷம் முதலிய ராசிகளில் ஸூர்யன் இருக்கும் பொழுது எந்தெந்தத் தர்சம் வருகிறதோ, அந்தந்தத் தர்சங்களை முடிவாக உடையவைகள் சைத்ரம் முதலிய 12-மாஸங்கள் என்று சொல்லப்பட்டுள்ளன. **சந்த்ரிகையில்:—**

தர்சத்திற்குப் பிறகு தர்சம் வரை உள்ளது சாந்தரமாஸம். 30-நாட்கள் கொண்டது ஸாவனமாஸம். ஸூர்யனின் ஸங்க்ரமணத்தை அடையாளமாய் உள்ளது ஸௌர மாஸம் என்று ஜ்யோதிஷஜ்ஞர்களால் சொல்லப்படுகிறது. சாந்த்ர மாஸமோ வெனில் இரண்டு ப்ரகாரம் உடையது. தர்சாந்தம் என்றும், பூர்ணிமாந்தம் என்றும், அவ்விதம் ச்ருதியிலும் உள்ளது. 'அமாவாஸ்யா + ஸம்பச்யந்தி' என்று. அமாவாஸ்யையைக் கொண்டும், பூர்ணிமையைக் கொண்டும் மாஸத்தைச் சொல்லுகிறுர்கள் என்பது அதன் பொருள்.

तत्र प्रथमपक्षे चान्द्रः शुक्लादिदर्शान्त इत्यादयः स्मृतय उदाहार्याः । शिष्टाचारबाहुल्यं च तत्र प्रसिद्धम् । द्वितीयपक्षस्योपोद्बलकं स्मृतिलिङ्गं च । तथा हि महालयप्रकरणे पठ्यते आश्वयुक्कृष्णपक्षे तु श्राद्धं कुर्याद्दिनेदिने इति । तत्र यदि दर्शान्तमासो विवक्ष्येत, तदा भाद्रपद कृष्णपक्ष इत्युच्येत, नत्वेवमुक्तम्, आश्वयुजमासान्तर्गतत्वं त्विहोच्यते, तच्च कृष्णपक्षप्रतिपदादिपूर्णिमान्तत्वे सम्भवति । तथा जयन्तीप्रकरणे च स्मर्यते — मासि भाद्रपदेऽष्टम्यां कृष्णपक्षेऽर्धरात्रके । भवेत् प्रौष्ठपदे मासि जयन्तीनामसंज्ञिता इति । अत्रापि जयन्त्या भाद्रपदान्तर्गतत्वं मासस्य पूर्णिमान्ततां गमयति ।

அவைகளுள் முதல் பக்ஷத்தில் 'சாந்த்ரச் சுக்லாதி தர்சாந்த:' என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்களை உதாஹரிக்கவும். சிஷ்டாசார பாஹுள்யமும் அதில் ப்ரஸித்தம். இரண்டாவது பக்ஷத்திற்குப் (பூர்ணிமாந்த மாஸத்திற்கு) பலத்தைக் கொடுக்கும் ஸ்ம்ருதி லிங்கமும் உள்ளது. அவ்விதமே- மஹாளய ப்ரகரணத்தில் படிக்கப்படுகிறது - 'ஆச்வயுஜ மாஸத்தின் க்ருஷ்ண பக்ஷத்தில் ப்ரதி தினம் ச்ராத்தம் செய்ய வேண்டும்' என்று. அவ்விதத்தில் தர்சாந்த மாஸத்தைச் சொல்வதாகில்

பாத்ரபத க்ருஷ்ண பக்ஷத்தில் என்று சொல்லியிருக்க வேண்டும். அவ்விதம் சொல்லப்படவில்லை. ஆச்வயுஜ மாஸத்திற்குட்பட்டது என்பது இங்கு சொல்லப்படுகிறது. அதுவும், க்ருஷ்ண பக்ஷ ப்ரதமை முதல் பூர்ணிமை முடியும் வரையில் என்ற பக்ஷத்தில் தான் ஸம்பவிக்கும். அவ்விதம் ஜயந்தீ ப்ரகரணத்தில் சொல்லப்படுகிறது. 'பாத்ரபத மாஸத்தில் க்ருஷ்ண பக்ஷத்தில் அஷ்டமியில் அர்த்தராத்ரத்தில் ஜயந்தீ என்று சொல்லப்படுகிறது' என்று. இந்த வசனத்திலும் ஜயந்திக்குப் பாத்ரபதத்திற்குள் இருப்பது என்பது, மாஸம் பூர்ணிமாந்தம் என்பதைத் தெரிவிக்கின்றது.

यतिधर्मप्रकरणे च स्मर्यते — सन्धिषु वापयेत् इति ।। तत्र यदि दर्शान्तविवक्षा स्यात् तदा दर्शस्यैव सन्धित्वात् तत्रैव वपनं कुर्युः, कुर्वन्ति च पूर्णिमायाम्, तस्माद्दर्शान्तत्व पूर्णिमान्तत्वयोर्व्यवस्थितो विकल्पः । तथा च ब्रह्मसिद्धान्ते — अमावास्यापरिच्छिन्नो मासः स्यात् ब्राह्मणस्य तु । सङ्क्रान्तिपौर्णमासीभ्यां तथैव नृपवैश्ययोः इति । ज्योतिः शास्त्रे — दर्शान्तः पूर्णिमान्तश्च चान्द्रो मासो द्विधा मतः । जातिभेदाद्देशभेदात् तौ च मासौ व्यवस्थितौ । नर्मदादक्षिणे भागे दर्शान्तो मास इष्यते । नर्मदोत्तरभागे तु पूर्णिमान्त इति स्थितिः इति ।

யதி தர்ம ப்ரகரணத்திலும் சொல்லப்படுகிறது:— 'ஸந்திகளில் வபநம் செய்து கொள்ள வேண்டும்' என்று. அதில் தர்சாந்த மாஸத்தைச் சொல்ல வேண்டும் ஆனால், அப்பொழுது தர்சமே 'ஸந்தி' ஆவதால் தர்சத்திலேயே வபநம் செய்ய வேண்டும். பூர்ணிமையில் செய்து கொள்கிறார்கள். ஆகையால் தர்சாந்தத்வ பூர்ணிமாந்தத்வங்களுக்கு வ்யவஸ்தித விகல்பம். அவ்விதமே, ப்ரம்ஹஸித்தாந்தத்தில்:— அமாவாஸ்யையால் அளவிடப்பட்ட மாஸம் ப்ராம்ஹணனுக்கும் ஸங்க்ரமணத்தாலும், பூர்ணிமையாலும் அளவிடப்பட்ட

மாஸங்கள் முறையே க்ஷத்ரியனுக்கும் வைச்யனுக்குமாம். ஜ்யோதிச்சாஸ்த்ரத்தில்:— சாந்த்ர மாஸம், தர்சாந்தம் என்றும், பூர்ணிமாந்தம் என்றும், இரண்டு விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது. ஜாதி பேதத்தாலும், தேச பேதத்தாலும், அந்த 2-மாஸங்களும் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளன. நர்மதா நதியின் தெற்குப் பாகத்தில் தர்சாந்த மாஸம் விதிக்கப்படுகிறது. நர்மதையின் வடக்குப் பாகத்தில் பூர்ணிமாந்த மாஸம் என்பது நிர்ணயம்.

चन्द्रिकायामपि — शुक्लप्रतिपदादिदर्शान्तश्चान्द्रो मास इत्येतद्दक्षिणापथे द्रष्टव्यम् । उत्तरापथे तु कृष्णप्रतिपदादि पौर्णमास्यन्तश्चान्द्रो मास इति द्रष्टव्यम् इति । तदेवं सौरचान्द्रसावनभेदेन मासस्त्रिविधः, तत्र चान्द्रमासो दर्शान्तः पूर्णिमान्तो वा देशभेदेन जातिभेदेन च व्यवस्थितः । नाक्षत्रमपि मासं केचिदिच्छन्ति - सर्वर्क्षैः परिभुक्तैस्तु नाक्षत्रो मास इष्यते इति विष्णुधर्मोत्तरे अभिधानात् ।

சந்த்ரிகையிலும்:— 'சுக்ல பக்ஷ ப்ரதமை முதல் தர்சம் வரையுள்ளது சாந்த்ரமாஸம் என்பது தெற்குப் பாகத்தில் என்றறியவும். வடக்குப் பாகத்திலோ வெனில் க்ருஷ்ண பக்ஷ ப்ரதமை முதல் பூர்ணிமை வரையுள்ள சாந்த்ரமாஸம் என்று அறியவும்' என்று உள்ளது. இவ்விதம் ஸௌரம், சாந்த்ரம், ஸாவனம் என்ற பேதத்தால் மாஸம் மூன்று விதம். அவைகளுள் சாந்தரமாஸம் தர்சாந்தம் அல்லது பூர்ணிமாந்தம் தேச பேதத்தாலும், ஜாதி பேதத்தாலும் வ்யவஸ்தையை அடைந்து உள்ளது. 'நாக்ஷத்ர' மாஸத்தையும் சிலர் சொல்லுகின்றனர்:— 'எல்லா நக்ஷத்ரங்களும் முடிவானால் ஒரு நாக்ஷத்ர மாஸம் எனப்படுகிறது' என்று விஷ்ணு தர்மோத்தரத்தில் சொல்லப்பட்டு இருப்பதால்.

## ऋतुनिर्णयः

प्रसङ्गादृतुर्निर्णीयते — ऋतुर्वसन्तादिः कालविशेषः । स च षड्विधः, षड्वा ऋतवः इति श्रुतेः । यत्तु द्वादशमासाः पञ्चर्तवः इति श्रुतम्, तत्र हेमन्तशिशिरयोरेकीकरणं विवक्षितम् । तथा च बह्वृचब्राह्मणे पठ्यते — द्वादशमासाः पञ्चर्तवो हेमन्तशिशिरयोः समासेन इति । तथा पञ्चमप्रयाजस्यानुमन्त्रणमन्त्रः श्रूयते — हेमन्तशिशिरावृतूनां प्रीणामि इति ।

## ருது நிர்ணயம்.

*ப்ரஸங்கவசத்தால் ருது நிர்ணயிக்கப்படுகிறது. வஸந்தம் முதலிய கால விசேஷம் ருது எனப்படுகிறது. அது ஆறு விதமாய் உள்ளது. 'ஆறு ருதுக்கள்' என்று ச்ருதியால். ஆனல், 'பன்னிரண்டு மாஸங்கள் ஐந்து ருதுக்கள்' என்று ச்ருதி உள்ளதே ? எனில், ஹேமந்த சிசிரங்களுக்கு ஏகீபாவம் சொல்ல இஷ்டப்பட்டது. அவ்விதமே பஹ்வ்ருச ப்ராம்ஹணத்தில் படிக்கப்படுகிறது:— 'பன்னிரண்டு மாஸங்கள் ஐந்து ருதுக்கள், ஹேமந்த சிசிரங்களை ஒன்ருக்குவதால்' என்று. அவ்விதமே ஐந்தாவது ப்ரயாஜத்தின் அனுமந்த்ரணத்தில் மந்த்ரம் ச்ருதியில் உள்ளது, 'ஹேமந்த சிசிராவ்ருதூநாம் ப்ரீணாமி' என்று.*

एवं स्वरूपेण ऋतवष्षोढा भिद्यन्ते, तत्रैकैक ऋतुर्मास-द्वयात्मकः । द्वन्द्वमुपदधाति तस्माद्द्वन्द्वमृतवः इत्युपधानब्राह्मणे श्रवणात् । कस्मिन् ऋतौ कयोर्मासयोर्द्वन्द्वं ग्रहीतव्यमित्याकाङ्क्षायां वसन्तादि ऋतुषु क्रमेण चैत्रमासादि द्वन्द्वं ग्राह्यमिति श्रुतिरेवाह — 'मधुश्च माधवश्च वासन्तिकावृतू शुक्रश्च शुचिश्च ग्रैष्मावृतू नभश्च नभस्यश्च वार्षिकावृतू इषश्चोर्जश्च शारदावृतू सहश्च सहस्यश्च हैमन्तिकावृतू तपश्च तपस्यश्च शैशिरा वृतू इति । एषु च वाक्येषु ऋतू इति

द्विवचनमृत्व-वयवमासाभिप्रायम्, अन्यथा षड्वा ऋतवः इति श्रूयमाणा षट्संख्या बाध्येत। अवयविन ऋतोर्वसन्तादेरेकैकात्मकत्व-माधानब्राह्मणे एकवचनेन व्यवहारादवगन्तव्यम् - वसन्तो वै ब्राह्मणस्यर्तुः, ग्रीष्मो वै राजन्यस्यर्तुः, शरद्वै वैश्यस्यर्तुः इति। संवत्सरोपक्रमरूपत्वेन वसन्तस्य प्राधान्यं द्रष्टव्यम्, मुखं वा एतदृतूनाम्। यद्वसन्तः इति श्रुतेः।

இவ்விதம் ஸ்வரூபத்தால் ருதுக்கள் -6-ப்ரகாரமாய்பப் பிரிகின்றன. அவைகளுள் ஒவ்வொரு ருது 2-மாஸம் கொண்டது. 'த்வந்த்வமுப+ம்ருதவ:' என்று உபதான ப்ராம்ஹணத்தில் கேட்கப்படுவதால். எந்த ருதுவில் எந்த மாஸங்களின் இரட்டை சேர்க்கப்பட வேண்டும் ? என்று ஆகாங்க்ஷை வரும் பொழுது, வஸந்தாதி ருதுக்களில் க்ரமமாய், சைத்ரம் முதலிய இரட்டை க்ரஹிக்கப்பட வேண்டும் என்று ச்ருதியே சொல்லுகிறது — ''மதுவும் மாதவமும் வாஸந்திக ருதுக்கள். சுக்ரமும் சுசியும் க்ரைஷ்ம ருதுக்கள். நபமும் நபஸ்யமும் வார்ஷிக ருதுக்கள், இஷமும் ஊர்ஜமும் சாரத ருதுக்கள், ஸஹமும் ஸஹஸ்யமும் ஹைமந்திக ருதுக்கள், தபமும் தபஸ்யமும் சைசிர ருதுக்கள்'' என்று. இந்த வாக்யங்களில் 'ருதூ' என்று உள்ள த்விவசனம் ருதுக்களின் அவயவங்கள் என்ற அபிப்ராயம் உடையது. இல்லை எனில் '6-ருதுக்கள்' என்று கேட்கப்படும் ஆறு என்ற ஸங்க்யை பாதிக்கப்படும். அவயவியான வஸந்தாதி ருதுக்கள் ஒவ்வொன்று என்பது ஆதான ப்ராம்ஹணத்தில் உள்ள ஏகவசனவ்யவஹாரத்தால் அறியப்பட வேண்டும். 'வஸந்தோவை + ஸ்யர்து:' என்று. வர்ஷத்தின் ஆரம்ப ரூபமாய் இருப்பதால் வஸந்தத்திற்கு ப்ராதான்யம் அறியத்தக்கது. 'வஸந்தம் என்பது ருதுக்களுக்கு முகமாகும்' என்று ச்ருதி இருப்பதால்,

ते च वसन्तादय ऋतवो द्विविधाः चान्द्राः सौराश्च, चैत्रादयश्चान्द्राः, ते चोदाहृता मधुश्च माधवश्चेत्यादिना। न च तत्र चैत्रादयो नोक्ता इति शङ्कनीयम्, मध्वादिशब्दानां चैत्रादिपर्यायित्वात्। अत एवाहुः — चैत्रो मासो मधुः प्रोक्तो वैशाखो माधवो भवेत्। ज्येष्ठमासस्तु शुक्रस्स्यादाषाढः शुचिरुच्यते। नभोमासः श्रावणः स्यात् नभस्यो भाद्र उच्यते। इषश्चाश्वयुजो मासः कार्तिकश्चोर्जसंज्ञकः। सहो मासो मार्गशीर्षः सहस्यः पुष्यनामकः। माघमासस्तपः प्रोक्तस्तपस्यः फाल्गुनः स्मृतः इति।

அந்த வஸந்தம் முதலிய ருதுக்கள் 2-விதமாகியவை, சாந்த்ரங்கள், ஸௌரங்கள் என்று. சைத்ரம் முதலாகியவை சாந்த்ரங்கள். அவைகள் சொல்லப்பட்டன, 'மதுச்சமாதவச்ச' என்பது முதலாகிய வாக்யத்தால். அதில் சைத்ராதி சப்தங்கள் இல்லையே என்று சங்கை வேண்டாம். 'மது' முதலிய சப்தங்கள் சைத்ராதிகளுக்குப் பர்யாய பதங்கள் ஆகியதால். ஆகையால் தான் இவ்விதம் சொல்லுகிறார்கள், ''சைத்ர மாஸம் மது எனப்படுகிறது. வைசாகம் மாதவம் எனப்படுகிறது. ஜ்யேஷ்ட மாஸம் சுக்ரம் எனப்படும். ஆஷாடம் சுசி எனப்படுகிறது. ச்ராவணம் நபம் எனப்படுகிறது. பாத்ரபதம் நபஸ்யம் எனப்படுகிறது. ஆச்வயுஜம் இஷம் எனப்படுகிறது. கார்த்திகம் ஊர்ஜம் எனப்படுகிறது. மார்க்கசீர்ஷம் ஸஹம் எனப்படுகிறது. புஷ்ய மாஸம் ஸஹஸ்யம் எனப்படுகிறது. மாக மாஸம் தபம் எனப்படுகிறது. பால்குன மாஸம் தபஸ்யம் எனப்படுகிறது.'' என்று.

चान्द्रमासानां चैत्रादिसंज्ञाः नक्षत्रप्रयुक्ताः। यस्मिन् मासे पूर्णिमा चित्रानक्षत्रेण युज्यते स चैत्रः, एवं वैशाखादिषून्नेयम्। चित्राविशाखादि योगस्योपलक्षणत्वात्, क्वचित् चित्रादिप्रत्यासन्न-स्वात्यनुराधादियोगेऽपि चैत्रवैशाखादिसंज्ञा न विरुध्यते। एतेषां

चैत्राद्यात्मकानां वसन्तादीनां चन्द्रपरिकल्प्यत्वाच्चान्द्रत्वम् । अत एवाम्नायते - चन्द्रमाष्षड्ढोता स ऋतून् कल्पयाति इति ।

சாந்த்ர மாஸங்களுக்கு சைத்ரம் முதலிய பெயர்கள் நக்ஷத்ரங்களால் ஏற்பட்டவை. எந்த மாஸத்தில் பூர்ணிமை சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடுகிறதோ அது சைத்ரம். இவ்விதம் வைசாகம் முதலியவைகளாலும் ஊஹிக்கவும். சித்ரா, விசாகா முதலியதின் ஸம்பந்தம் உபலக்ஷணம் ஆகியதால் சில இடத்தில் சித்ரை முதலியதற்குச் சமீபமாய் உள்ள ஸ்வாதீ அனுஷம் முதலியதின் ஸம்பந்தம் இருப்பதாலும் சைத்ரம் விசாகம் முதலிய பெயர் விரோதிப்பது இல்லை. இந்த சைத்ராதி ஸ்வரூபமாகிய வஸந்தாதிகள் சந்திரனால் கல்பிக்கப்படுவதால் சாந்த்ரத் தன்மை. ஆகையால் தான் வேதத்தில் சொல்லப்படுகிறது — 'சந்த்ரன் ஷட்டோதா, அவன் ருதுக்களைக் கல்பிக்கின்றான்' என்று.

ननु अस्त्वेवं मध्वादीनां द्वादशानां चान्द्रमासानां वसन्ताद्यृतुत्वम्, मलमासस्य तु त्रयोदशस्य चान्द्रमासस्य कथमृतुषु निर्वाहः उच्यते । ययोर्मासयोर्मध्ये मलमासो दृश्यते तयोरुत्तरस्मिन् तस्यान्तर्भावः । तथा चासौ षष्टिदिनात्मको मलिनशुद्धभागद्वयात्मक इति मध्वादिशब्दवाच्यत्वेनोक्तेष्वन्तर्भावात् न काऽप्यनुपपत्तिः । सौरेष्वृतुषु बोधायनेन मीनमेषयोर्मेषवृषभयोर्वासन्त इत्यभिधानात् मीनादित्वं मेषादित्वञ्च वैकल्पिकं वसन्तस्याङ्गीकृतम् । वृद्धगार्ग्योऽपि — मीनमेषौ रविर्यावद्वसन्तस्तावदिष्यते इति । वृद्धवसिष्ठः — यावन्मेषर्षभौ भानुर्वसन्तस्तावदुच्यते इति । कालनिर्णये — वसन्ताद्यृतवो द्वेधा चान्द्राः सौराश्च चान्द्रगाः । चैत्राद्या अथ मीनाद्या मेषाद्या वा विवस्वतः इति ।

இவ்விதம் மது முதலிய 12-சாந்த்ர மாஸங்களுக்கும் வஸந்தாதி ருதுபாவம் இருக்கட்டும். மலமாஸம் ஆகிய 13-ஆவது சாந்த்ர மாஸத்திற்கு எப்படி ருதுக்களில் நிர்வாஹம் ? எனில் சொல்லப்படுகிறது. எந்த 2-மாஸங்களின் நடுவில் மலமாஸம் காணப்படுகிறதோ அவைகளுள் இரண்டாவது மாஸத்தில் மல மாஸத்திற்கு அந்தர்பாவம், அவ்விதம் இருக்க, இந்த மாதம் 60-நாட்கள் உடையது, மலிநம் என்றும் சுத்தம் என்றும் 2-பாகங்கள் உடையது, என்பதால், மது முதலிய சப்தங்களால் சொல்லப்பட்ட மாதங்களிலேயே உள்ளடங்கியதால் அனுபபத்தி ஒன்றும் இல்லை. ஸௌரமான ருதுக்களில் போதாயனரால் 'மீனமேஷங்களுக்கு, அல்லது மேஷவ்ருஷபங்களுக்கு வஸந்த ருது' என்று பெயர் சொல்லப்பட்டு இருப்பதால், மீனம் முதலாவதாக என்பதும் அல்லது மேஷம் முதலாவதாக என்பதும் விகல்ப்பமாய் உள்ளதாய் வஸந்தத்திற்கு அங்கீகரிக்கப்பட்டு உள்ளது. வ்ருத்த கார்க்யரும்:— 'மீன மேஷ ராசிகளில் ஸூர்யன் இருக்கும் வரையில் வஸந்தம் எனப்படுகிறது' என்றார் வ்ருத்த வஸிஷ்டர்:— 'மேஷ வ்ருஷபங்களில் ஸூர்யன் இருக்கும் வரையில் வஸந்தம் எனப்படுகிறது' என்றார். காலநிர்ணயத்தில்:— வஸந்தம் முதலிய ருதுக்கள் சாந்த்ரங்கள் என்றும், ஸௌரங்கள் என்றும் 2-ப்ரகாரங்களாய் உள்ளன. சாந்த்ரங்கள் சைத்ரம் முதல் கொண்டு, ஸௌரங்கள் மீனம் முதல் அல்லது மேஷம் முதலாக உள்ளவைகள்' என்று உள்ளது.

तदेवम्, वसन्ते ब्राह्मणोऽग्नीनादधीत, ग्रीष्मे राजन्य आदधीत, शरदि वैश्य आदधीत, वसन्ते ब्राह्मणमुपनयीत, ग्रीष्मे राजन्यम्, शरदि वैश्यम्, वसन्ते ज्योतिष्टोमेन यजेत इत्यादि श्रुतिस्मृतिपुराण-विहितेषु कर्मसु चान्द्रः सौरो वा ऋतुर्देशाचारानुसारेण विकल्पतो द्रष्टव्यः।

இவ்விதம் இருப்பதால், 'வஸந்தத்தில் ப்ராம்ஹணன் ஆதானம் செய்யவும், க்ரீஷ்மத்தில் க்ஷத்ரியனும், சரத் ருதுவில் வைச்யனும், ஆதானம் செய்யவும். வஸந்தத்தில் ப்ராம்ஹணனுக்கு உபநயனம் க்ரீஷ்மத்தில் க்ஷத்ரியனுக்கு, சரத் ருதுவில் வைச்யனுக்கு உபநயனம், வஸந்தத்தில் ஜ்யோதிஷ்டோமத்தைச் செய்யவும்' என்பது முதலாகிய ச்ருதி ஸ்ம்ருதி புராண விஹிதங்களான கர்மங்களில், சாந்திர ருதுவாவது, ஸெளரருதுவாவது தேசாசாரத்தை அனுஸரித்து விகல்பத்தால் அறியத் தக்கது.

## अयननिरूपणम्।

अथ अयने। अयत्यनेन ऋतुत्रयेण सूर्यो दक्षिणाशामुत्तराशां चेत्यृतुत्रयमयनम्। तथा च श्रुतिः — तस्मादादित्यः षण्मासो दक्षिणेनैति षडुत्तरेण इति । अत्र कालनिर्णयः — आदित्यगतिमुपजीव्य अयननिष्पत्तेस्सौरमेवैतत् । अत एव विष्णुधर्मोत्तरे सौरमानमधिकृत्योक्तम् - ऋतुत्रयं चायनं स्यात् इति। केचित्तु, चान्द्रमानेनायनद्वयमभ्युपगच्छन्ति, मार्गशीर्षमासादिकैस्त्रिभिः ऋतुभिः कल्पितः कालष्षण्मासात्मक उत्तरायणम्, ज्येष्ठमासादिको दक्षिणायनम् इति। तत्र प्रमाणं ज्योतिश्शास्त्रादौ मृग्यम्। श्रौतस्मार्तकर्मानुष्ठाने मकरकर्कटसङ्क्रान्त्यादिक एवायनद्वयकालः इति।

## அயன நிருபணம்.

இனி அயனங்கள் சொல்லப்படுகின்றன. அயதி = செல்லுகிறான், இதனால், மூன்று ருதுக்களால், ஸூர்யன், தெற்கு திக்கையும் வடக்கு திக்கையும் என்ற வ்யுத்பத்தியால் மூன்று ருதுக்கள் ஒரு அயனம். அவ்விதமே ச்ருதி — 'ஸூர்யன் 6-மாதங்களில் தெற்கில் செல்லுகிறான்' ஆறு மாதங்களில் வடக்கில் செல்லுகிறான்' என்று உள்ளது.

இவ்விஷயத்தில், காலநிர்ணயம்:— ஸூர்ய கதியை உபஜீவித்து அயநம் என்ற சப்தம் நிஷ்பன்னமாய் இருப்பதால் இது ஸௌரமே. (சாந்த்ரமல்ல) ஆகையால் தான், விஷ்ணு தர்மோத்தரத்தில்:— ஸௌர மாஸத்தை ஆரம்பித்துச் சொல்லப்பட்டு உள்ளது — 'மூன்று ருதுக்கள் ஒரு அயனம் ஆகின்றது' என்று. சிலரோ வெனில்:— சாந்த்ரமானத்தால் 2-அயனங்களை ஒப்புக் கொள்கின்றனர். மார்கசீர்ஷம் முதலிய மூன்று ருதுக்களால் கல்பிக்கப்பட்ட காலம் 6-மாதம் உள்ளது உத்தராயணம், ஜ்யேஷ்ட மாஸம் முதல் தக்ஷிணாயனம் என்று. அது விஷயத்தில் ப்ரமாணத்தை ஜ்யோதிச் சாஸ்த்ரம் முதலியதில் தேட வேண்டும். ச்ரௌத ஸ்மார்த்த கர்ம அனுஷ்டானத்தில் மகர கர்க்கட ஸங்க்ராந்திகளை முதலாக உடையதே இரண்டு அயனங்களின் காலம்.

## संवत्सरनिरूपणम्।

अथ संवत्सरः। संवत्सरो नाम अयनाद्यवयवयुक्तोऽवयवी कालविशेषः। सम्यग्वसन्त्यस्मिन्नयनर्तुमासादय इति व्युत्पत्तेः। स च द्वादशमासात्मकः, द्वादश मासाः संवत्सरः इति श्रुतेः। चान्द्रसावनसौरमासभेदेन संवत्सरस्त्रिविधः। तदुक्तं ब्रह्मसिद्धान्ते — चान्द्रसावनसौराणां मासानां तु प्रभेदतः। चान्द्रसावनसौरास्तु त्रयः संवत्सरा अपि इति। अत्र चान्द्रसंवत्सरः चैत्रशुक्लप्रतिपदादिकः फाल्गुनदर्शान्तः। सौरस्तु मेषादिमीनान्तः। सावनः षष्ट्युत्तरशतत्रयाहोरात्रात्मकः।

### ஸம்வத்ஸர நிரூபணம்.

இனி ஸம்வத்ஸரம் சொல்லப்படுகிறது. ஸம்வத்ஸரம், என்பது, அயனம் முதலிய அவயவங்களுடன் கூடிய கால விசேஷம் ஆகும். 'நன்ருய் இதில் வஸிக்கின்றன, அயனம், ருது, மாஸம் முதலியவை

என்ற வ்யுத்பத்தியினால். அந்த ஸம்வத்ஸரம் 12-மாஸங்களாய் உள்ளது. 'பன்னிரண்டு மாஸங்கள் ஸம்வத்ஸரம்' என்ற ச்ருதியால். சாந்தரம், ஸௌரம், ஸாவநம் என்ற மாஸ பேதத்தால் ஸம்வத்ஸரம் மூன்று விதம். அது சொல்லப்பட்டுள்ளது, ப்ரம்ஹஸித்தாந்தத்தில்:— 'சாந்த்ர, ஸாவன, ஸௌர மாஸங்களின் பேதத்தால், ஸம்வத்ஸரங்களும் சாந்த்ர ஸாவன ஸௌரங்கள் என்று மூன்று விதங்களாய் உள்ளன' என்று. இவைகளில், சாந்த்ர ஸம்வத்ஸரம் சைத்ர சுக்ல ப்ரதமை முதல் கொண்டு, பால்குன தர்சம் முடியும் வரையில். ஸௌரமோ வெனில், மேஷம் முதல் மீனம் முடியும் வரையில் உள்ளது. ஸாவனம் என்பது, 360-நாட்கள் கொண்டது.

पञ्चविधत्वं संवत्सरस्योक्तमायुर्वेदे— सौरबृहस्पतिसावन शशधरनाक्षत्रिकाः क्रमेण स्युः । मातुलपातालातुलविमलवराङ्गैस्तु वत्सराः पञ्च इति । अस्यामर्थः — गणकप्रसिद्धयाऽक्षरसङ्ख्यया मातुलशब्दः पञ्चषष्ट्यधिकशतत्रय-माचष्टे, तावद्दिवसपरिमितः सौरस्संवत्सरः । पातालशब्दः एकषष्ट्यधिकशतत्रयमाचष्टे, तावद्दिवसपरिमितकालो बृहस्पतेः संवत्सरः । अतुलशब्दः षष्ट्यधिकशतत्रयमाह, तावद्दिवसपरिमितः सावनस्संवत्सरः । विमलशब्दश्चतुःपञ्चाशदधिकशतत्रयमाचष्टे, तावद्दिवस-परिमितश्चान्द्रः संवत्सरः । वराङ्गशब्दश्चतुर्विंशत्यधिकशतत्रयमाह, तावद्दिवसपरिमितो नाक्षत्रिकस्संवत्सर इति । तत्र नाक्षत्रिकस्य ज्योतिः शास्त्रप्रसिद्धे आयुर्दायादावुपयोगः । बार्हस्पत्यस्तु सिंह बृहस्पती त्यादिविशेषमुपजीव्य गोदावर्यादिस्नानादौ प्रवृत्ते सांवत्सरिके व्रतादौ द्रष्टव्यः ।

ஸம்வத்ஸரம் ஐந்து விதம் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆயுர்வேதத்தில்:— ஸௌரம்,

பார்ஹஸ்பத்யம், ஸாவநம், சாந்த்ரம், நாக்ஷத்ரம் என்று ஸம்வத்ஸரங்கள் ஐந்து விதமாய் உள்ளன. அவை முறையே, சொல்லப்படும் கணக்குப்படி உள்ளன. கணக சாஸ்த்ர ப்ரஸித்தமான அக்ஷரக் கணக்கினுல் மூலத்தில் உள்ள 'மாதுல' என்ற பதம் 365 என்பதைச் சொல்லுகிறது. அவ்வளவு நாட்கள் கொண்டது ஸௌர ஸம்வத்ஸரம். 'பாதாள' என்பது 361 என்பதைச் சொல்லுகிறது. அவ்வளவு நாட்கள் கொண்டது பார்ஹஸ்பத்ய ஸம்வத்ஸரம். 'அதுல' என்பது 360 என்பதைச் சொல்லுகிறது. அவ்வளவு நாட்கள் கொண்டது ஸாவன ஸம்வத்ஸரம். 'விமல' என்பது 354 என்பதைச் சொல்லுகிறது. அவ்வளவு நாட்கள் கொண்டது சாந்த்ர ஸம்வத்ஸரம். 'வராங்க' என்பது 324 என்பதைச் சொல்லுகிறது. அவ்வளவு நாட்கள் கொண்டது நாக்ஷத்ர ஸம்வத்ஸரம் என்பது பொருள். அவைகளுள் 'நாக்ஷத்ரிக' ஸம்வத்ஸரத்திற்கு, ஜ்யோதிச் சாஸ்த்ர ப்ரஸித்தமான ஆயுர்தாயம் முதலியதில் உபயோகம். 'பார்ஹஸ்பத்ய'மோ வெனில், ஸிம்ஹ ப்ருஹஸ்பதி என்பது முதலிய விசேஷத்தை உபஜீவித்து, கோதாவரீ ஸ்நானம் முதலியதில் விநியோகிக்கப்படுகிறது. ஸௌர ஸம்வத்ஸரம் மேஷாதி ராசிகளை முன்னிட்டு ப்ரவ்ருத்தித்து உள்ள வ்ரதம் முதலியதில் காணப்பட வேண்டியது. அவ்விதமே வ்ரதம் சொல்லப்பட்டு உள்ளது.

तथा च व्रतं विष्णुधर्मोत्तरेऽभिहितम् — भगवन् कर्मणा केन तिर्यग्योनौ न जायते । म्लेच्छदेशे च पुरुषस्तदाचक्ष्व च वै मुने ।। मार्कण्डेयः — मेषसङ्क्रमणे भानोस्सोपवासो नरोत्तमः । पूजयेद्भार्गवं देवं रामं भक्त्या यथाविधि इत्यारभ्य - मीन सङ्क्रमणे मत्स्यं वासुदेवञ्च पूजयेत् इत्यन्तेन ग्रन्थेन व्रतं विधायान्ते तदुपसंहृतम्, कृत्वा व्रतं वत्सरमेतदिष्टं म्लेच्छेषु तिर्यक्षु च नापि जायते इति । षष्ट्यधिकशतत्रयसङ्ख्याकैर्दिनैर्निर्वर्त्यो गवामयनादौ सावनो द्रष्टव्यः ।

पक्षविशेषे तिथिविशेषे वा प्रतिसंवत्सरं विहितं निरूढपशुबन्धप्रकरणे श्रूयते - तेन संवत्सरे संवत्सरे यजेत इति।

**விஷ்ணுதர்மோத்தரத்தில்:—** ஹே பகவன்! மனிதன் எந்தக் கர்மத்தால் (பசுபக்ஷி முதலிய) திர்யக்ஜாதியில் பிறக்க மாட்டான். ம்லேச்ச தேசத்திலும் பிறக்க மாட்டான். அதை எங்குச் சொல்ல வேண்டும் ஓ முனிவரே! மார்கண்டேயர்:— மனிதன் ஸூர்யனின் மேஷ ஸங்க்ரமணத்தில் உபவாஸத்துடன் யதா சக்தி விதிப்படி பரசுராம தேவனைப் பூஜிக்க வேண்டும் என்று ஆரம்பித்து, 'மீன ஸங்க்ரமணத்தில் மத்ஸ்ய ரூபியான வாஸுதேவனைப் பூஜிக்க வேண்டும்' என்று முடியும் க்ரந்தத்தினால் வ்ரதத்தை விதித்து, முடிவில் அது உபஸம்ஹாரம் செய்யப்பட்டு உள்ளது, 'ஒரு வர்ஷம் முழுவதும் இந்த வ்ரதத்தைச் செய்தால், திர்யக் ஜாதிகளிலும், ம்லேச்ச தேசங்களிலும் பிறக்கமாட்டான்' என்று. 360-நாட்களால் முடிக்கக் கூடிய 'கவாமயனம்' முதலியதில் ஸாவன ஸம்வத்ஸரம் அறியத்தக்கது. பக்ஷவிசேஷத்திலாவது திதி விசேஷத்திலாவது ப்ரதி வர்ஷம் விதிக்கப்பட்டது எந்தக் கர்மமோ அதில் சாந்த்ர ஸம்வத்ஸரம் என்று அறியவும். அவ்விதம் நிரூடபசு பந்தப்ரகரணத்தில் கேட்கப்படுகிறது, 'அதனால் ஒவ்வொரு வர்ஷத்திலும் யாகம் செய்யவும்' என்று.

आपस्तम्बः —सर्वान् लोकान् पशुबन्धयाज्यभिजयति। तेन यक्ष्यमाणोऽमावास्यायां पौर्णमास्यां वा इति। अत्र चान्द्रः संवत्सरो ग्राह्यः, चान्द्रतिथौ तदनुष्ठानविधानात्, तदाद्यास्तिथयो द्वयोः इत्यमरसिंहेन च चान्द्राहोरात्रेष्वेव तिथिशब्दानुशासनात्। पक्ष परिग्रहे इत्यस्मद्धातोः चन्द्रस्य पञ्चदशानां कलानां पूरणमपक्षयो वा यत्र परिगृह्यते स पक्ष इति निर्वचनात् शुक्लादिपक्षपुरस्कारेण प्रवृत्ते कर्मणि चान्द्र एव द्रष्टव्यः। यथा — शुक्लपक्ष अनन्तव्रतं विहितं नववर्षाणि

पञ्च च इति । संवत्सरस्य चानन्त व्रताङ्गत्वं प्रतीयते । तत्र चान्द्रसंवत्सरः । यत्र तु - गुरुता शिष्यता चैव तयोर्वत्सरवासतः, संवत्सरमेतद्व्रतञ्चरेत् इत्यादौ नियामकं नास्ति, तत्र चान्द्रादीनामन्यतम इच्छया ग्रहीतव्यः ।

ஆபஸ்தம்பர்:— 'பசுபந்தயாகம் செய்தவன் எல்லா உலகங்களேயும் அடைகிருன். அந்த யாகத்தைச் செய்யப் போகிறவன் அமாவாஸ்யையிலாவது பூர்ணிமையிலாவது' என்ருர். இதில் சாந்த்ர ஸம்வத்ஸரம் க்ரஹிக்கத்தக்கது. சாந்த்ர திதியில் அதை அனுஷ்டிக்கும்படி விதி இருப்பதால். 'ததாத்யாஸ்திதயோ த்வயோ:' என்று அமர ஸிம்ஹனுலும் சாந்த்ர தினங்களிலேயே திதி சப்தம் சொல்லப்பட்டு இருப்பதால். 'பக்ஷபரிக்ரஹே' என்ற தாதுவினின்றும் சந்தரனின் 15-கலேகளுக்கு நிறைவும் குறைவும் எதில் பரிக்ரஹிக்கப்படுகிறதோ, அது பக்ஷம் என்று நிர்வசனத்தால், சுக்ல பக்ஷம் முதலிய பக்ஷத்தை முன்னிட்டு ப்ரவ்ருத்தித்துள்ள கர்மத்தில் சாந்த்ர ஸம்வத்ஸரமே என்று அறியப்பட வேண்டும். எவ்விதம் எனில், சுக்ல பக்ஷத்தில் அனந்த வ்ரதம் விதிக்கப்பட்டு உள்ளது. '14 வர்ஷங்களில்' என்று. ஸம்வத்ஸரத்திற்கு, அனந்த வ்ரதத்தின் அங்கத் தன்மை தோன்றுகிறது. அதில் சாந்த்ர ஸம்வத்ஸரம். எந்த இடத்தில் 'குரு சிஷ்யர்களுக்குக் குரு பாவமும் சிஷ்ய பாவமும் ஒரு வர்ஷம் வாஸத்தால் ஏற்படுகிறது'. 'ஒரு வர்ஷம் முழுவதும் இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கவும்' என்பது முதலிய எந்த ஸ்தலங்களில் நியமத்திற்குக் காரணம் இல்லேயோ அவ்விடங்களில் சாந்த்ரம் முதலியவைகளுள் ஏதாவது ஒன்றை இச்சைப்படி க்ரஹித்துக் கொள்ளலாம்.

प्रकृतमनुसरामः — यस्मिन् मासि मृतिः पक्षे यस्य यस्यां तिथौ भवेत् । तस्यामेव तिथौ कुर्यादाब्दिकं तु विचक्षणः इत्यादिभिः

पूर्वोक्तैः वचनैः पक्षतिथिसम्बन्धेन आब्दिकस्य विधानात् चान्द्रस्याब्दस्य ग्राह्यत्वं प्रतीयते। अत्र गार्ग्यः — विवाहादौ स्मृतः सौरो यज्ञादौ सावनः स्मृतः। आब्दिके पितृकार्येऽपि चान्द्रो मासः प्रशस्यते इति। चन्द्रिकायामिदं व्याख्यातम् — यज्ञादौ - माससंवत्सरसाध्ययज्ञव्रतप्रायश्चित्त क्रियादौ। तत्र माससाध्ययज्ञाः - मासं वैश्वदेवेनेत्यादिवाक्यैर्विहिताः। माससाध्यव्रतानि - मासोपवासादीनि। माससाध्यप्रायश्चित्तक्रियास्तु - गोष्ठे वसन् ब्रह्मचारी मासमेकं पयोव्रतः। गायत्रीजप्यनिरतो मुच्यतेऽसत् प्रतिगह्रात् इत्यादिवाक्यविहिताः। संवत्सरसाध्ययज्ञाः - गवामयनादयः। संवत्सरसाध्यव्रतानि - चरेत् इत्यादिविहितानि। संवत्सरसाध्याः प्रायश्चित्तक्रियाः - द्वादशवार्षिकाद्याः द्रष्टव्याः। आब्दिके - सांवत्सरिकश्राद्धे। पितृकार्ये - मासिकादौ। अपिशब्दात् माससंवत्सरसाध्ये यज्ञव्यतिरिक्ते सर्वस्मिन् देवकार्ये चान्द्रो मासः प्रशस्यते इति।

இனி ப்ரக்ருதத்தை அனுஸரிப்போம். 'எவனுக்கு எந்த மாஸத்தில், எந்தப் பக்ஷத்தில் எந்தத் திதியில் ம்ருதி ஏற்பட்டதோ அவனுக்கு அதே மாஸத்தில் அதே பக்ஷத்தில் அதே திதியில் ஆப்திகத்தைச் செய்யவும் அறிந்தவன்' என்பது முதலாக முன் கூறப்பட்ட வசனங்களால் பக்ஷ திதி ஸம்பந்தத்தினுல் ஆப்திகத்தை விதித்து இருப்பதால், சாந்த்ர ஸம்வத்ஸரம் க்ரஹிக்கப்பட வேண்டும் எனத் தோன்றுகிறது. அவ்விஷயத்தில், கார்க்யர்:— 'விவாஹம் முதலியதில் ஸௌர ஸம்வத்ஸரம் விதிக்கப்பட்டு உள்ளது. யாகம் முதலியதில் ஸாவன ஸம்வத்ஸரம் விதிக்கப்பட்டு உள்ளது. 'ஆப்திகத்திலும், பித்ரு கார்யத்திலும், சாந்த்ர மாஸம் ப்ரசஸ்தம் எனப்படுகிறது' என்ருர். இதற்கு, சந்த்ரிகையில்:— இவ்விதம் வ்யாக்யானம் செய்யப்பட்டு உள்ளது. ''யஜ்ஞாதௌ =

ஸம்வத்ஸர ஸாத்யமான யஜ்ஞம், வ்ரதம், ப்ராயச்சித்த க்ரியை முதலியதில், அவைகளுள் மாஸ ஸாத்யயஜ்ஞங்கள் 'ஒரு மாஸம் முழுவதும் வைச்வதேவ யாகத்தைச் செய்யவும்' என்பது முதலிய வாக்யங்களால் விதிக்கப்பட்டவை. மாஸ ஸாத்ய வ்ரதங்கள் = மாஸோபவாஸம் முதலியவைகள். மாஸ ஸாத்ய ப்ராயச்சித்த க்ரியைகளோவெனில், 'பசுவின் கொட்டிலில் ஒரு மாஸம் முடியும் வரையில், ப்ரம்ஹசாரியாய், பாலைமட்டில் ஆஹாரமாய் உடையவனாய், காயத்ரீ ஜபத்திலேயே நிரதனாய் வஸித்தால் துஷ்ட ப்ரதிக்ரஹத்தினின்றும் விடுபடுவான்' என்பது முதலிய வசனங்களால் விதிக்கப்பட்டவை. ஸம்வத்ஸர ஸாத்ய யஜ்ஞங்கள் = கவாமயநம் முதலியவை. ஸம்வத்ஸர ஸாத்ய வ்ரதங்கள் = 'ஒரு வர்ஷம் முழுவதும் இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்' என்பது முதலிய வசனங்களால் விதிக்கப்பட்டவை. ஸம்வத்ஸர ஸாத்ய ப்ராயச்சித்த க்ரியைகளோவெனில், 12-வர்ஷம் அனுஷ்டிக்க வேண்டிய ப்ராயச்சித்தம் முதலியவைகள் என்று அறியவும். ஆப்திகே = ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தில், பித்ரு கார்யே = மாஸிகம் முதலியதிலும், 'அபி' என்ற சப்தத்தால் மாஸத்தாலும், ஸம்வத்ஸரத்தாலும் ஸாத்யமான யக்ஞம் தவிர்த்த எல்லாத் தேவ கார்யத்திலும் சாந்த்ர மாஸம் ப்ரசஸ்தம் எனப்படுகிறது'' என்று.

उक्तं च पितामहेन — दैवे कर्मणि पित्र्ये च मासश्चान्द्रमसः स्मृतः इति। आत्रेयोऽपि — अभिषेके तु नाक्षत्रं सावनं वेतनादिषु। पित्र्ये चान्द्रमसं शस्तं सौरं स्मार्तेष्वनिन्दितम् इति । अभिषेके - राज्याभिषेके, स्मार्तेषु - विवाहादिष्वित्यर्थः । लघुहारीतः — प्रत्यब्दं द्वादश मासि कार्या पिण्डक्रिया सुतैः । कचित्त्रयोदशेऽपि स्यादाद्यं मुक्त्वा तु वत्सरम् इति। द्वादश मासि अतीत इति शेषः । अत्र त्रयोदशग्रहण सामर्थ्याच्चान्द्रो मास इति ज्ञेयम्, सौरसंवत्सरे

त्रयोदशमासासंभवात् । हारीतोऽपि — असङ्क्रान्तेऽपि कर्तव्यमाब्दिकं प्रथमं द्विजैः इति । अत्रापि सङ्क्रान्तिरहित सौरमासासम्भवाच्चान्द्र एव ग्रहीतव्यः ।

பிதாமஹறராலும் சொல்லப்பட்டுள்ளது:— 'தேவ கர்மத்திலும், பித்ரு கர்மத்திலும் சாந்த்ரமாஸம் விதிக்கப்பட்டுள்ளது' என்று. ஆத்ரேயரும்:— அபிஷேகத்தில் நாக்ஷத்ர மாஸம், வேதநம் (கூலி) முதலியவைகளில் ஸாவந மாஸம், பித்ரு கார்யத்தில் சாந்த்ர மாஸம், ஸ்மார்த்த கார்யங்களில் ஸௌர மாஸம் ப்ரசஸ்தம் எனப்படுகிறது. அபிஷேகம் = ராஜ்யாபிஷேகம். ஸ்மார்த்தகர்மங்கள் = விவாஹாதிகள் என்று பொருள். லகுஹாரீதர்:— ப்ரதி வர்ஷம் 12-ஆவது மாஸத்தில் ச்ராத்தத்தைப் புத்ரர்கள் செய்ய வேண்டும். ஒரு ஸமயத்தில் 13-ஆவது மாஸத்திலும் செய்யப்பட வேண்டும். முதல் வர்ஷத்தைத் தவிர்த்து. இதில் 'த்வாதசேமாஸி' என்பதுடன் 'அதீதே' என்று சேர்க்கவும். 12-ஆவது மாதம் சென்ற பிறகு என்பது பொருள். அவ்விதம் 13-ஆவதிலும். இந்த ச்லோகத்தில் '13-ஆவது' என்ற பதத்தை க்ரஹித்த பலத்தால் சாந்த்ர மாஸம் என்று அறியவும். ஸௌர ஸம்வத்ஸரத்தில் 13-ஆவது மாஸம் ஸம்பவியாதாகையால், ஹாரீதரும்:— 'ஸங்க்ரமணம் இல்லாத மாஸத்திலும் ப்ராம்ஹணர்கள் முதலாவதான ஆப்திகத்தைச் செய்ய வேண்டும்' என்றார். இவ்வசனத்திலும், ஸங்க்ரமணம் இல்லாத ஸௌர மாஸம் ஸம்பவியாததால் சாந்த்ரமாஸமே க்ரஹிக்கப்பட வேண்டும்.

वृद्धगार्ग्योऽत्र विशेषमाह — अन्वष्टक्यं च पूर्वेद्युरष्टकाऽमायुगादयः । मन्वादयोऽक्षयापञ्चम्यादौ चान्द्रौ प्रकीर्तितौ । मासिके चाब्दिके वस्त्रधान्यस्वर्णादिवृद्धिषु ।

भृत्योपकल्पनादौ च मासाब्दौ सौरसावनौ इति। मासिके चाब्दिके च मासाब्दौ सौरौ, धान्यस्वर्णादिवृद्धिषु भृत्योपकल्पनादौ च मासाब्दौ सावनाविति व्याख्यातारः । कालादर्शेऽपि — अष्टकापरपक्षामावास्यादौ चान्द्रमानतः । मासिकाब्दिकवृद्ध्यादौ मासाब्दौ सौरसावनौ इति । अपरपक्षः - भाद्रपदकृष्णपक्षः । आदिशब्दात् पूर्वेद्युरन्वष्टक्याक्षयतृतीयामन्वादि युगादिपञ्चम्यादीनामुपसङ्ग्रहः । वृद्धिः - ऋणीकृतसुवर्णादेर्वृद्धिः, आदिशब्देन भृत्युपकल्पनाद्युपसङ्ग्रहः ।

வ்ருத்தகார்க்யர்:— இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார்:— 'அன்வஷ்டகா, பூர்வாஷ்டகா, மத்யாஷ்டகா, அமா, யுகாதிகள், மன்வாதிகள், அக்ஷயா பஞ்சமீ முதலியதில் சாந்த்ர மாஸம், வர்ஷமும் சாந்த்ரம். மாஸிகம், ஆப்திகம், வஸ்த்ரம் தான்யம் ஸ்வர்ணம் முதலியவைகளின் வட்டி, வேலைக்காரனின் சம்பளம் முதலியதில் மாஸமும் வர்ஷமும் ஸௌர ஸாவநங்கள்' என்று. 'மாஸிகத்திலும் ஆப்திகத்திலும் மாஸ வர்ஷங்கள் ஸௌரங்கள், தான்யஸ்வர்ணாதி வ்ருத்திகளிலும், வேலைக்காரனின் சம்பளம் முதலியதிலும், மாஸ வர்ஷங்கள் ஸாவநங்கள் என்றார்கள் வ்யாக்யானகாரர்கள். காலாதர்சத்திலும்:— 'அஷ்டகா, அபரபக்ஷம், அமா முதலியதில் சாந்த்ர மானத்தாலும், மாஸிகம், ஆப்திகம், வட்டி முதலியதில் மாஸ வர்ஷங்களை ஸௌர ஸாவநமானத்தாலும் க்ரஹிக்கவும்' என்று உள்ளது. அபரபக்ஷம் பாத்ரபத க்ருஷ்ண பக்ஷம், ஆதி சப்தத்தால் பூர்வேத்யுரஷ்டகா, அன்வஷ்டகா, அக்ஷயத்ருதீயா, மன்வாதி, யுகாதி, பஞ்சமீ முதலியவைகளுக்கும் க்ரஹணம். வ்ருத்தி: = கடனாகக் கொடுக்கப்பட்ட ஸ்வர்ணம் முதலியதற்கு வட்டி, ஆதிசப்தத்தால் வேலைக்காரனின் சம்பளம் முதலியதற்கு க்ரஹணம்.

त्रिकाण्डी च — चान्द्रो मासः श्रुतिस्मृत्योः कर्मणोर्मासिकाब्दिके । विहाय भृतिवृद्ध्यादावितरौ परिकीर्तितौ इति । मासिकाब्दिकव्यतिरिक्त श्रौतस्मार्तकर्मणोः चान्द्रो मासः, मासिकाब्दिकयोः भृतिवृद्ध्यादौ च इतरौ सौरसावनावित्यर्थः । यस्मिन् राशौ स्थिते सूर्ये यो मृतिं प्रतिपद्यते । पुनस्तद्राशिमापन्ने भानावाब्दिकमाचरेत् इति । हेमाद्रावपि — यस्मिन् राशौ स्थिते सूर्ये विपत्तिं याति मानवः । तद्राशावेव कर्तव्यं पितृकार्यं मृतेऽहनि इति । स्मृत्यन्तरे — व्रते चान्द्रमसं शस्तं न श्राद्धेषु प्रशस्यते । अस्थिरश्चान्द्रमासः स्यात् स्थिरः सौरोऽत्र कारणम् इति । चान्द्रमासोऽधिमाससम्भवादस्थिरः । तदसम्भवात् सौरः स्थिरः । अत्र सौरपरिग्रहे स्थिरत्वं कारणमित्यर्थः

**த்ரிகாண்டீ:**— ச்ருதி ஸம்ருதி விஹிதமான கர்மத்தில் சாந்த்ர மாஸம், மாஸிகாப்திகங்களைத் தவிர்த்து. சம்பளம் வட்டி முதலியதில் ஸௌர ஸாவந மாஸங்கள். மாஸிகாப்திகங்களைத் தவிர்த்த ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களில் சாந்த்ர மாஸம், மாஸிகாப்திகங்களிலும், சம்பளம், வட்டி முதலியதிலும், இதரௌ = ஸௌர ஸாவந மாஸங்கள் என்பது பொருள். **த்ரிகாண்டியே:**— ஸூர்யன் எந்த ராசியில் இருக்கும் போது எவனுக்கு ம்ருதி ஏற்பட்டதோ அவனுக்கு அந்த ராசியை ஸூர்யன் மறுபடி அடைந்த போது ஆப்திகத்தைச் செய்ய வேண்டும். **ஹேமாத்ரியிலும்:**— ஸூர்யன் எந்த ராசியில் இருக்கும் போது மனிதன் ம்ருதியை அடைந்தானோ அந்த ராசியில் ஸூர்யன் இருக்கும் போதே ம்ருத திதியில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். **ஓர் ஸ்ம்ருதியில்:**— ''வ்ரத அனுஷ்டானத்தில் சாந்த்ர மாஸம் ப்ரசஸ்தம். ச்ராத்தங்களில் அது ப்ரசஸ்தம் அல்ல. சாந்த்ர மாஸம் ஸ்திரம் அல்லாதது. ஸௌர மாஸம் ஸ்திரமாகியது என்பது காரணமாகும் என்று ஸௌர மாஸத்தைப் பரிக்ரஹிக்கும்

விஷயத்தில் சாந்த்ர மாஸம் அதிக மாஸம் ஸம்பவிப்பதால் ஸ்திரம் அல்லாதது. அதிக மாஸம் ஸம்பவிக்காததால் ஸௌரமாஸம் ஸ்திரம் ஆகிறது என்பது.

अत्र केचिदमूलं श्लोकमिमं वर्णयन्तो व्याचक्षते चान्द्रमानविधानेन मामले दिवसे सति। आद्याब्दिकं प्रकुर्वीत सौरेण पुनराब्दिकम् इति । सौरमानानुवर्त्यपि चान्द्रमानविधानेन मृतदिवसात् मामले देवसे - पञ्चपञ्चाशदुत्तरशतत्रयदिवसे प्रथमाब्दिकं प्रकुर्वीत, द्वितीयाद्याब्दिकं तु सौरमानेन प्रकुर्वीत । प्रथमाब्दिकस्य चान्द्रमानेन कर्तव्यत्व विधानसामर्थ्यात् । मासिकान्यपि तेनैव मानेन कर्तव्या नीति । तत्तु मासिके चाब्दिके वस्त्रधान्यस्वर्णादिवृद्धिषु इति पूर्वोक्तवृद्धगार्ग्यादिवचनविरोधादुपेक्ष्यम्।

இவ்விஷயத்தில் சிலர் மூலமற்ற இந்த ச்லோகத்தை வர்ணிப்பவர்களாய் வ்யாக்யானம் செய்கின்றனர். ச்லோகம் இது - 'சாந்த்ர மாநவிதாநேந மாமலே திவஸே ஸதி. ஆத்யாப்திகம் ப்ரகுர்வீத ஸௌரேண புனராப்திகம்' என்று. இதன் பொருள் இவ்விதம் — ''ஸௌரமானத்தை அனுஸரிப்பவன் ஆயினும், சாந்த்ரமான விதானப்படி ம்ருதி தினத்தில் இருந்து, மாமலே திவஸே = 355-ஆவது தினத்தில் முதலாவதான ஆப்திகத்தைச் செய்ய வேண்டும். 2-ஆவது முதலாகிய ஆப்திகத்தையோ வெனில் ஸௌரமானத்தால் செய்ய வேண்டும். முதலாவதான ஆப்திகத்தைச் சாந்த்ரமானத்தால் செய்யவும் என்ற விதியின் பலத்தால் மாஸிகங்களும் சாந்த்ர மாநத்தாலேயே செய்யப்பட வேண்டும்'' என்று. அவ்வசனமோ வெனில் 'மாஸிகே சாப்திகே வஸ்த்ர தான்ய ஸ்வர்ணாதி வ்ருத்திஷு' என்று முன் சொல்லப்பட்ட வ்ருத்தகார்க்யாதி வசனங்களுக்கு விருத்தமாய் இருப்பதால் உபேக்ஷிக்கத் தகுந்தது.

तदेवं मासिकाब्दिकविषये सौरविधिपराणां चान्द्रविधिपराणां तत्तत्प्रशंसापराणां च बहूनां वचनानां सत्वात्, तुल्यबलविरोधे विकल्पः इति गौतम स्मरणात्, व्रीहियववद्विकल्पः स च देशकुलानुरोधेन व्यवस्थितो विज्ञेयः । तथा च मनुः — येनास्य पितरो याता येन याताः पितामहाः । तेन यायात्सतां मार्गं तेन गच्छन्न रिष्यति । सद्भिराचरितं यस्माद्धार्मिकैश्च द्विजातिभिः । तद्देशकुलजातीनामविरुद्धं प्रकल्पयेत् इति । सुमन्तुरपि — यत्र शास्त्रगतिर्भिन्ना सर्वकर्मसु भारत । उदितेऽनुदिते चैव होमभेदो यथा भवेत् । तस्मात् कुलक्रमायात माचारं त्वाचरेद्बुधः । स गरीयान्महाबाहो सर्वशास्त्रोदितादपि इति ।

இவ்விதம் மாஸிகம், ஆப்திகம் இவைகளின் விஷயத்தில் ஸௌர விதிபரங்களாயும், சாந்த்ரவிதிபரங்களாயும், அவைகளை ப்ரசம்ஸிப்பதில் தாத்பர்யம் உள்ளவைகளுமான அநேகம் வசநங்கள் இருப்பதால் 'துல்யபலவசனங்களுக்கு விரோதம் ஏற்பட்டால் விகல்பம்' என்று கௌதம ஸ்ம்ருதி இருப்பதால், வ்ரீஹியவ சாஸ்த்ரங்களுக்குப் போல் விகல்பம். அதுவும், தேச குலங்களை அனுஸரித்து வ்யவஸ்திதம் என்று அறியத்தக்கது. அவ்விதமே, மனு:— இவனது பித்ருக்கள் எந்த வழியாய்ச் சென்றார்களோ, பிதாமஹர்கள் எந்த வழியாய்ச் சென்றார்களோ, அவ்வழியாய் ஸாதுக்களின் மார்க்கத்தை அனுஸரித்துச் செல்ல வேண்டும். அவ்வழியாய்ச் செல்பவன் குறைவை அடைய மாட்டான். ஸாதுக்களாலும், தார்மிகர்களான ப்ராம்ஹணர்களாலும் ஆசரிக்கப்பட்டு இருப்பதால், அந்தந்தத் தேசம், குலம், ஜாதி இவைகளுக்கு விரோதம் இல்லாமல் உள்ளதை அனுஷ்டிக்க வேண்டும். ஸுமந்துவும்:— ஓ! பாரத! எவ்விஷயத்தில் எவ்விதக் கார்யங்களிலும் சாஸ்த்ரத்தின் மார்க்கம் பேதம் உள்ளதாய்

இருக்கின்றதோ, உதயத்திற்கு பிறகு, உதயத்திற்கு முன்பு என்று ஹோமத்தின் பேதம் எப்படியோ, அது போல், அவ்விஷயத்தில் குலக்ரமப்படி வந்துள்ள ஆசாரத்தை, அறிந்தவன் அனுஷ்டிக்க வேண்டும். ஓ! மஹாபாஹோ! எல்லாச் சாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்டதை விட அது பெரிதாகும்.

## सौरमासे तिथिद्वयसम्भवे

सौरमासे तिथिद्वयसम्भवे मासिकाब्दिकयोः परा तिथिर्ग्राह्या। यदाह वृद्धवसिष्ठः — मासे संवत्सरे चैव तिथिद्वैधं यदा भवेत्। तत्रोत्तरोत्तमा ज्ञेया पूर्वा स्यात्तु मलिम्लचा इति। मासे - मासिके, संवत्सरे - सांवत्सरिक इत्यर्थः। तथा च संवर्तः — उत्तरे दिवसे कुर्यादाब्दिकं मासिकं तथा। प्रत्याब्दिकं तथा कुर्यात् श्रेयस्कामो भवेद्यदि इति। स्मृत्यन्तरे — मासे संवत्सरे चैव तिथिद्वैधं यदा भवेत्। तत्रोत्तरा तिथिर्ग्राह्या न पूर्वा तु मलिम्लुचा इति।

## ஸெளர மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால்.

ஸெளர மாஸத்தில் இரண்டு திதிகள் ஸம்பவித்தால், மாஸிகத்திலும், ஆப்திகத்திலும் இரண்டாவது திதி க்ரஹிக்கத்தக்கது. அதைச் சொல்லுகிறூர், வ்ருத்த வஸிஷ்டர்:— மாஸத்திலும், வர்ஷத்திலும் திதி இரண்டாகும் ஆகில், அவைகளுள் இரண்டாவது திதி சிறந்தது என அறியத்தக்கது. முந்தியது துஷ்டம் ஆகும். மாஸே = மாஸிகத்திலும், ஸம்வத்ஸரே = ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்திலும், என்று பொருள். அவ்விதமே, ஸம்வர்த்தர்:— ஆப்திகம், மாஸிகம் இவைகளை மேல் திதியில் செய்ய வேண்டும். நன்மையை விரும்புகிறவனுகில், ப்ரத்யாப்திகத்தையும் அவ்விதம் செய்யவும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— மாஸிகத்திலோ, ஸாம்வத்ஸரிகத்திலோ இரண்டு திதி எப்பொழுது வருமோ அப்பொழுது இரண்டாவது திதியை க்ரஹிக்க

வேண்டும். துஷ்டமாகிய முதல் திதியை க்ரஹிக்கக் கூடாது.

आपस्तम्बः — आब्दिके मासिके चापि पूर्वस्मिन् दिवसे कृते । तदानीं कुलहानिस्स्यादुत्तरे गोत्रवर्धनम् इति । बृहस्पतिः — मासिकाब्दिककृत्ये तु तिथिद्वैधं यदा भवेत् । पूर्वत्र दोषजननमुत्तरे भाग्यसाधनम् इति । स्मृत्यन्तरे — एकमासि तिथिद्वैधे परत्राब्दिकमासिके । तद्वत् प्रत्याब्दिकं कुर्यादित्याह भगवान् यमः । यदि पूर्वदिने कुर्यात् कुलक्षयकरं भवेत् इति । नारदः — पितृकार्यं तु सर्वेषामृद्धिभाजनमुत्तरे । दिवसद्वितये प्राप्ते पूर्वत्र तु कुलक्षयः इति ।

ஆபஸ்தம்பர்:— ஆப்திகமும், மாஸிகமும் முதல் திதியில் செய்யப்பட்டால் அப்பொழுது குலத்திற்கு ஹானி உண்டாகும். இரண்டாவது திதியில் செய்யப்பட்டால் குலத்திற்கு வ்ருத்தி உண்டாகும். ப்ருஹஸ்பதி:— மாஸிகத்திலும், ஆப்திகத்திலும் இரண்டு திதிகள் ஏற்பட்டால், முன் திதியில் செய்தால் தோஷம் உண்டாகும். பின் திதியில் செய்தால் பாக்யம் உண்டாகும். ஓர் ஸ்ம்ருதியில்:— ஒரே மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் பின் திதியில் ஆப்திகம், மாஸிகம் இவைகளைச் செய்யவும். ப்ரத்யாப்திகத்தையும் அவ்விதமே செய்யவும், என்றார் பகவான் யமன். முன் திதியில் செய்தால் குலத்திற்கு க்ஷயம் உண்டாகும். நாரதர்:— இரண்டு திதிகள் வந்தால் பின் திதியில் பித்ரு கார்யம் செய்வது எல்லோருக்கும் வ்ருத்திக்குக் காரணம். முன் திதியில் செய்வது குலக்ஷயகரமாம்.

तत्र परतिथेः सङ्क्रान्त्युपरागदुष्टत्वे पूर्वा ग्राह्या । उभयत्र तथात्वे तु परा तिथिर्ग्राह्या । यदाह सङ्ग्रहकारः — मास्येकस्मिन् द्वौ तिथी चेत् परस्स्यात् पूर्वस्तस्मिन् सूर्यसङ्क्रान्तियुक्ते । द्वावप्येवं सङ्गतौ चेत् परस्स्यात् सर्वं त्याज्यं चन्द्रसूर्योपरागे इति ।

அவ்விஷயத்தில் பின் திதியானது ஸங்க்ராந்தி, க்ரஹணம் இவைகளால் துஷ்டமாகில் முன் திதியை க்ரஹிக்க வேண்டும். இரண்டு திதிகளும் அவ்விதம் துஷ்டமாகில் பின் திதியை க்ரஹிக்க வேண்டும். அதைச் சொல்லுகிறார் ஸங்க்ரஹகாரர்:— ஒரே மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் பின் திதி க்ராஹ்யம் ஆகும். பின் திதி ஸூர்யனின் ஸங்க்ரமணத்தால் துஷ்டமாகில் பூர்வ திதி க்ராஹ்யம் ஆகும். இரண்டு திதிகளும் துஷ்டங்களாகில் பின் திதி க்ராஹ்யம் ஆகும். சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களால் துஷ்டமாகில் இரண்டு திதிகளும் வர்ஜ்யங்கள் ஆகும். விசேஷம் சொல்லப்பட்டு உள்ளது.

(नखाङ्काङ्कितोभागः मूलकोशे न दृश्यते।) (मास्येकस्मिन् द्वौ तिथी चेत् परस्स्यादित्यादिना तिथेस्सङ्क्रमोपरागदुष्टत्वे तत्तिथेर्वर्जनीयत्वमुच्यते। तत्र मृततिथौ प्रथमादौ खण्डतिथिविषये श्राद्धदिने वा तत्पूर्वापरदिने वा सङ्क्रमे सति मृततिथिप्रयुक्तं श्राद्धं तद्दिने कर्तव्यमित्यर्थो वा ? यस्मिन् दिने श्राद्धं कर्तव्यत्वेन निर्णीतं तस्मिन्नेव दिने तत्तिथौ वा तिथ्यन्तरेऽपि वा सङ्क्रमे तच्छ्राद्धं न कर्तव्यमित्यर्थो वेति संशयः। मास्येकस्मिन्निति तिथेरेव ग्रहणात् तिथौ सङ्क्रम एव दोष आश्रयणीय इति प्राप्ते उच्यते - तत्र तिथिग्रहणं तिथ्युपलक्षितदिनपरं न तिथिपरम्, तथा च उत्तरे दिवसे कुर्यात्, पूर्वस्मिन् दिवसे कृते, यदि पूर्वदिने कुर्यात्, इत्यादिवचनेषु पितृकार्यं तु सर्वेषामृद्धिभाजनमुत्तरे। दिवसद्वितये प्राप्ते पूर्वत्र तु कुलक्षयः इत्यादिस्मृतिवचनेषु दिवसदिनयोर्ग्रहणात्। किञ्च, तिथिनिर्णये च तिथिमुपलक्षणीकृत्य तिथ्युपलक्षितदिन एव श्राद्धकरणं निर्णीयते, न तु तिथिविशिष्टदिने वा तिथिविशिष्टापराह्णे वा।

(இந்த நகக் குறியிட்ட பகுதி சில மூல கோசங்களில் இல்லை.) ('மாஸ்யேகஸ்மின்த்வௌ திதீ சேத் பரஸ்ஸ்யாத்' என்பது முதலியதால் திதிக்கு ஸங்க்ரமணம், க்ரஹணம் இவைகளால் தோஷம் ஏற்பட்டால் அந்தத் திதியை வர்ஜிக்க வேண்டும் என்பது சொல்லப்படுகிறது. அவ்விஷயத்தில், ம்ருத திதியான ப்ரதமை முதலியதில் கண்ட திதி விஷயத்தில் ச்ராத்த தினத்திலோ அதற்கு முன்பின் தினத்திலோ ஸங்க்ரமணமானுல், ம்ருத திதியைச் சேர்ந்த ச்ராத்தம் அந்தத் தினத்தில் செய்யப்பட வேண்டும் என்று அர்த்தமா ? எந்தத் தினத்தில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும் நிர்ணயிக்கப்பட்டு உள்ளதோ அதே தினத்தில் அந்த திதியிலாவது வேறு திதியிலாவது ஸங்க்ரமணமானுல் அந்தச் ச்ராத்தம் செய்யப்படக் கூடாது என்று அர்த்தமா, என்பது ஸம்சயம். 'மாஸ்யே கஸ்மின்' என்ற வசனத்தால் திதியையே க்ரஹிப்பதால் திதியில் ஸங்க்ரணம் ஸம்பவிக்கும் விஷயத்திலேயே தோஷம் என்று கொள்ள வேண்டும், என்று ப்ராப்தமாகியது. அவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது. அந்த வசனத்தில் சொல்லிய திதி சப்தம் தித்யுபலக்ஷிதமான தினத்தையே சொல்வது ஆகும். ஏனெனில்' 'உத்தரே திவஸே, பூர்வஸ்மின் திவஸே, யதி பூர்வதினே' என்பது முதலிய வசனங்களிலும், 'பித்ரு கார்ய + முத்தரே, திவஸ + க்ஷய:, என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்களிலும், திவஸ தின சப்தங்களை க்ரஹித்து இருப்பதால். இனியும், திதி நிர்ணயத்திலும் திதியை உபலக்ஷணம் ஆக்கி, திதியால் உபலக்ஷிதமாகிய தினத்திலேயே ச்ராத்த கரணம் நிர்ணயிக்கப்படுகிறது. திதி விசிஷ்ட தினத்திலோ, திதி விசிஷ்ட அபராஹ்ணத்திலோ நிர்ணயிக்கப்படுகிறது இல்லை.

(तथा हि — कुतपमारभ्य यावदपराह्णं श्राद्धस्य मुख्यकालः, मध्याह्नसायाह्नावपि गौणकालौ, अन्ततो गत्वा रात्रेः प्रथमयामोऽपि।

एतेषु कालेषु श्राद्धे क्रियमाणे तत्काले तया तिथ्या भवितव्यमिति न नियमः, किं तु यावदपराह्णं वा अपराह्णैकदेशे वा दिनद्वये अपराह्णे तिथ्यभावे पूर्वदिने सायाह्ने वा तिथिसम्भवे श्राद्धकरणकाले तिथ्यन्तरेऽपि श्राद्धमिति निर्णयः। एवं माससम्बन्धेऽप्यूहनीयम्। यस्मिन् दिने अपराह्णे तन्माससम्बन्धभूयस्त्वं नास्ति, तद्दिने श्राद्धकरणकाले तन्मासासम्भवेऽपि श्राद्धमिति निर्णयः।

*(அது இவ்விதம், குதபம் முதல் அபராஹ்ணம் முடியும் வரையில் ச்ராத்தத்திற்கு முக்ய காலம். மத்யாஹ்னம், ஸாயாஹ்னம் இவைகளும் கௌண காலம். கடைசியில் சென்ற ராத்ரியின் முதல் யாமமும் கௌண காலம். இக்காலங்களில் ச்ராத்தம் செய்யப்படும் பொழுது அக்காலத்தில் அந்தத் திதி இருக்க வேண்டும் என்ற நியமம் இல்லை. ஆனல், அபராஹ்ணம் முடியும் வரையிலாவது, அபராஹ்ணத்தின் ஏகதேசத்திலாவது, இரண்டு நாட்களிலும் அபராஹ்ணத்தில் திதி இல்லாவிடில் முதல் தினத்தில் ஸாயாஹ்னத்திலாவது திதி இருந்தால், ச்ராத்தம் செய்யும் காலத்தில் வேறு திதி இருந்தாலும் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும் என்பது நிர்ணயம். இம்மாதிரி மாஸ ஸம்பந்தத்திலும் ஊஹிக்க வேண்டும். எந்தத் தினத்தில் அபராஹ்ணத்தில் அந்த மாஸத்தின் ஸம்பந்தம் அதிகமாய் இல்லையோ, அந்தத் தினத்தில் ச்ராத்தம் செய்யும் காலத்தில் அந்த மாஸத்தின் ஸம்பந்தம் இல்லாவிடினும் ச்ராத்தம் என்பது நிர்ணயம்.)*

(तस्मात्तन्मासमृततिथिस्पृष्टदिनस्यैव श्राद्धदिनत्वेन ग्रहणात् प्राधान्यात्तद्दिन एव सङ्क्रमदोषः परिहरणीयः, न तु पूर्वापरदिने तत्तिथौ सङ्क्रम इति कृत्वा श्राद्धार्हदिनं परिहरणीयम्। मास्येकस्मिन् द्विनक्षत्रे द्वे तिथी च भविष्यतः। आदितः पितृकार्याणि देवकार्याणि चोत्तरे इति वचनं केरलादिदेशान्तर विषयम्, देशान्तर एव मृतदिननक्षत्र

एवान्नेनाब्दिकादिकरणात् । तत्साहचर्यात् पूर्वतिथिवचनमपि देशान्तरविषयम्। अस्मिन् देशे तु परतिथेरेव ग्रहणे वचनबाहुल्य-दर्शनादाचारबाहुल्याच्च परस्मिन्नेव श्राद्धं कार्यम्। यद्वा, पञ्चदशस्वपि तिथिषु तथा सप्तविंशति नक्षत्रेष्वपि काम्यश्राद्धं विहितम्, तद्विषयं वा ।)

(ஆகையால், அந்த மாஸ ம்ருத திதியால் தொடப்பட்ட தினமே ச்ராத்த தினம் ஆகியதால், ப்ராதான்யமாய் அந்த தினத்திலேயே ஸங்க்ரமண தோஷம் பரிஹரிக்கத் தக்கது. இவ்விதம் இன்றி, முதல் நாளிலோ மறுநாளிலோ அந்தத் திதியில் ஸங்க்ரமணம் வந்தது என்று நினைத்து ச்ராத்தத் தினத்தைப் பரிஹரிக்கக் கூடாது. 'ஒரு மாஸத்தில் இரண்டு நக்ஷத்ரங்களோ, இரண்டு திதிகளோ வந்தால் பித்ரு கார்யங்களை முந்தியதிலும், தேவ கார்யங்களைப் பிந்தியதிலும் செய்ய வேண்டும்' என்ற வசனம் கேரளம் முதலிய தேசாந்தரத்தைப் பற்றியது. தேசாந்தரங்களில் தான் ம்ருத தின நக்ஷத்ரத்திலேயே அன்னத்தால் ஆப்திகம் முதலியதைச் செய்வதால். அத்துடன் சேர்ந்து இருப்பதால் பூர்வ திதியில் செய்ய வேண்டும் என்பதும் தேசாந்தர விஷயம். இந்தத் தேசத்திலோ வெனில், பிந்திய திதியையே க்ரஹிக்கும் விஷயத்தில் வசனங்கள் பலவாய்க் காணப்படுவதாலும், ஆசாரம் பஹுளமாய் இருப்பதாலும் பிந்திய திதியிலேயே ச்ராத்தம் செய்யப்பட வேண்டும் அல்லது 15-திதிகளிலும், அவ்விதம், 27-நக்ஷத்ரங்களிலும் காம்ய ச்ராத்தம் விதிக்கப்பட்டு உள்ளது. அது விஷயமாகியது என்றுவது ஆகலாம்.)

ननु दिनस्यैव संक्रान्तिदोषो विचारणीयश्चेत् अहोरात्रयोरपि सङ्क्रमदोषः परिहरणीयो वा ? अविशेषस्मरणात्, मास्येकस्मिन् द्वौ तिथी चेत् सौरमासे तिथिद्वैधे इति च तत्तिथ्युपलक्षितदिनस्यैव

ग्रहणादहोरात्रयोरपि दिनशब्दवाच्यत्वात् षष्टिघटिकापरिमितेषु सङ्क्रमः परिहर्तव्य एव ॥

தினத்தில் ஸங்க்ராந்தி தோஷம், பரிஹரணீயம் எனில், பகல் ராத்ரி இரண்டிலும் ஸங்க்ரம தோஷம் பரிஹரிக்கப்பட வேண்டுமா ? விசேஷிக்காமல் ஸ்ம்ருதி வசனம் இருப்பதால் 'மாஸ்யே + சேத்' 'ஸௌரமாஸே திதித்வைதே' என்று, அந்தத் திதியால் சொல்லப்படும் தினத்தையே க்ரஹித்து இருப்பதால், பகல் இரவு இரண்டும் சேர்ந்ததைத் தினம் என்று சொல்லுவதால் 60-நாழிகைகளிலும் ஸங்க்ரமதோஷம் பரிஹரிக்கத் தக்கதே.

अत्र केचिदाहुः — सङ्क्रान्तितर्पणविषये अर्धरात्रादधस्तात् सङ्क्रमणे पूर्वदिने मध्याह्नस्यैवोपरिक्रिया, अर्धरात्रात् परं चेदुत्तरदिन प्रहरद्वयमिति विधाना दर्धरात्रात्परं सङ्क्रमे दोषो नास्तीति । तदसत् । अस्य नियमस्य अयनद्वये व्यभिचारात् ।

இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:— ஸங்க்ராந்தி தர்ப்பண விஷயத்தில் அர்த்தராத்ரத்திற்கு முன் ஸங்க்ரமண விஷயத்தில் முன் தினத்தில் மத்யாஹ்னத்திற்கு மேல் செய்வது, அர்த்தராத்ரத்திற்குப் பிறகானால், மறுநாளில் 2-யாமம் என்று விதி இருப்பதால், அர்த்தராத்ரத்திற்குப் பிறகு ஸங்க்ரமணம் ஆனால் தோஷம் இல்லை என்று. அது ஸாதுவல்ல. இந்த நியமம் அயநத்வயத்தில் மாறுவதால்.

अन्ये तु उपाकर्मविषये अर्धरात्रात्पूर्वं ग्रहणं चेदुपाकर्म न कर्तव्यं परं चेत् कर्तव्यमिति वचनस्य सत्त्वात्तद्वद्भवत्विति । तदप्यसाधु, विषयभेदात् । यथोचितं ग्राह्यम् । एकादश्या उदये घटिकामात्रसद्भावे यथा तद्दिने उपवासः, एवमपराह्णे मृततिथिसद्भावे तद्दिनं श्राद्धदिनं तदेव सङ्क्रान्तिदुष्टम्, न तु समुद्रस्नाने अमावास्यादिवत्

तिथिविशिष्टाकाले श्राद्धम्, दिवैव श्राद्धकरणात्। अत एव तत्र सङ्क्रान्ति दोष इत्यपि न वाच्यम्, रात्रेः प्रथमयामस्यापि गौणकालत्वेन श्राद्धस्याङ्गीकारात्। तस्मादहोरात्रमध्ये सङ्क्रान्तिदोषः परिहरणीयः।

மற்றவரோ வெனில்:— உபாகர்ம விஷயத்தில் அர்த்தராத்ரத்திற்கு முன் க்ரஹணம் ஆனால் உபாகர்மத்தைச் செய்யக் கூடாது. பிறகாயிருந்தால் செய்யலாம் என்ற வசனம் இருப்பதால் அது போல் ஆகலாம் என்றனர். அதுவும் ஸாதுவல்ல. விஷய பேதம் இருப்பதால், இவ்விஷயத்தில் உசிதமாய் உள்ளதை க்ரஹிக்கவும். ஏகாதசி உதய காலத்தில் கலாமாத்ரம் இருந்தாலும், அந்தத் தினத்தில் எவ்விதம் உபவாஸமோ, இவ்விதம் அபராஹ்ணத்தில் ம்ருத திதி இருந்தால் அந்தத் தினம் ச்ராத்த தினம். அதுவே ஸங்க்ராந்தி துஷ்டம். இதன்றி, ஸமுத்ர ஸ்நானத்தில் அமாவாஸ்யாதிகளுக்குப் போல் திதியுடன் சேர்ந்த காலத்தில் ச்ராத்தம் என்பது இல்லை. பகலிலேயே ச்ராத்தம் செய்யப்படுவதால். ஆகையால் அதில் ஸங்க்ராந்தி தோஷம் என்று சொல்லக் கூடாது. ராத்ரியின் முதல் யாமத்தையும் கௌண காலம் என்று ச்ராத்தத்திற்கு அங்கீகரித்து இருப்பதால். ஆகையால் பகல் ராத்ரி இரண்டிலும் ஸங்க்ரமண தோஷம் பரிஹரிக்கத்தக்கது.

स्मृत्यन्तरे विशेषोऽभिहितः — यस्मिन्नहनि सङ्क्रान्तेः परं मध्यं दिनं भवेत्। आब्दिकं तत्र कुर्वीत ह्यन्यथा ग्राह्यमुत्तरम् इति। उभयत्रापि सङ्क्रान्ति दोषे आवर्तनादर्वाग्यदि सङ्क्रान्तिस्तदा पूर्वत्र, आवर्तनात् परं चेत् परत्रेत्यर्थः। (अस्तमयात् परं नास्ति सङ्क्रान्तिदोष इति केचित्। अर्धरात्रात् परमित्यपरे। एतदेव युक्तमुपरागसाहचर्यात्। (पूर्वापरदिने यत्राधिके सति।) उभयोः कर्मकालस्य दुष्टत्वे यत्र तन्मासासम्बन्धभूयस्त्वं तत्र कुर्यात्।

ஓர் ஸ்ம்ருதியில்:— எந்தத் தினத்தில் ஸங்க்ரமணத்திற்குப் பிறகு மத்யாஹ்னம் வருகின்றதோ அன்று ஆப்திகத்தைச் செய்யவும். அவ்விதம் இல்லாவிடில் மேல் திதியை க்ரஹிக்கவும். இரண்டு திதிகளிலும் ஸங்க்ரமண தோஷம் இருந்தால் ஆவர்த்தனத்திற்கு முன் ஸங்க்ரமணம் ஆனால் அப்பொழுது முன் திதியில், ஆவர்த்தனத்திற்கு பிறகு ஆனால் பின் திதியில், என்பது பொருள்.) அஸ்தமயத்திற்குப் பிறகு ஸங்க்ரமண தோஷம் இல்லை என்று சிலர். அர்த்த ராத்ரத்திற்குப் பிறகு தோஷம் இல்லை என்று சிலர். இதுவே யுக்தம் ஆகும். உபராகத்துடன் சேர்ந்ததால். 'அர்த்தராத்ரத்திற்கு முன் ஸங்க்ராந்தியாவது க்ரஹணமாவது நேர்ந்தால் உபாகர்மத்தைச் செய்யக் கூடாது, பிறகு ஆனால் தோஷம் இல்லை' என்ற வசனத்தில் க்ரஹணத்துடன் ஸங்க்ரமணத்தைச் சேர்த்துச் சொல்லி இருப்பதால், என்பது பொருள். இரண்டு திதிகளிலும் கர்மகாலமாகிய அபராஹ்ணம் துஷ்டம் ஆனால் எந்தத் திதியில் அந்த மாஸத்தின் ஸம்பந்தம் அதிகமாய் உள்ளதோ அந்தத் திதியில் செய்யவும். அது சொல்லப்பட்டுள்ளது,

तदुक्तं सङ्ग्रहे — सौरमासे तिथिद्वैधे मासिकाब्दिकयोः परा। सा चोपरागसङ्क्रान्तिदुष्टा चेत् पूर्विका मता। द्वयोर्दोषेऽर्कसङ्क्रान्ति रर्वागावर्तनाद्यदि। पूर्वापराऽन्यथा ग्राह्या कर्मकाले द्वयोरपि। दुष्टे तन्माससम्बन्धभूयस्त्वं यत्र सा मता इति। (तथा मास्येकस्मिंस्तिथि-द्वयेऽपि तुल्यः) इति।

ஸங்க்ரஹத்தில்:— ஸௌர மாஸத்தில் இரண்டு திதிகள் இருந்தால் மாஸிகத்திலும் ஆப்திகத்திலும் பிந்திய திதியை க்ரஹிக்கவும். அது உபராகத்தாலாவது ஸங்க்ரணமத்தாலாவது துஷ்டமாகில் பூர்வ திதியை க்ரஹிக்கவும். இரண்டு திதிகளுக்கும் தோஷம் இருந்தால், ஸூர்ய ஸங்க்ரமணம் மத்யாஹ்னத்திற்கு முன் இருந்தால்

பூர்வ திதி க்ராஹ்யம் ஆகும். இல்லாவிடில் பிந்திய திதி க்ராஹ்யம் ஆகும். இரண்டு திதிகளிலும் கர்மகாலமாகிய அபராஹ்ணம் துஷ்டமாகில் எந்தத் திதியில் மாஸ ஸம்பந்தம் அதிகமாய் உள்ளதோ அந்தத் திதி க்ராஹ்யம் ஆகும்.

सङ्क्रमदोषनिर्णयः हेमाद्रौ — रवेरस्तमयात् पूर्वं यदि सङ्क्रमणं भवेत्। सा तिथिस्सङ्क्रमाद्दुष्टा परतश्चेन्न दोषभाक् इति।

ஸங்க்ரமண தோஷ நிர்ணயம் ஹேமாத்ரியில் சொல்லப்பட்டுள்ளது. ஸூர்யனின் அஸ்தமயத்திற்கு முன் ஸங்க்ரமணமாகில் அந்தத் திதி ஸங்க்ரமணத்தால் துஷ்டமாகும். அஸ்தமயத்திற்குப் பின்பு ஸங்க்ரமணம் ஆனால் தோஷமுள்ளதாகாது.

किञ्च - सौरमासे तिथिद्वैधे मासिकाब्दिकयोः परा । सा चोपरागसङ्क्रान्तिदुष्टा चेत् पूर्विका मता। द्वयोर्दोषेऽर्कसङ्क्रान्तिरर्वागा-वर्तनाद्यदि । पूर्वा पराऽन्यथा ग्राह्या कर्मकाले द्वयोर्यदि ।। दुष्टे तन्माससम्बन्धभूयस्त्वं यत्र सा मता इति । आवर्तनात् पूर्वं चेदेव मावर्तनात् परं चेदेवं कर्मकालेऽपराह्णे चेदेवमिति वचनैर्दिवा सङ्क्रमणे एव दोषप्रतीतेर्न रात्रौ दिवासङ्क्रमण रहिततिथावेव श्राद्धं कर्तव्यम्।

இனியும்:— ஸௌர மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் மாஸிகத்திலும், ஆப்திகத்திலும் பிந்திய திதி க்ராஹ்யம் ஆகும். அது க்ரஹணத்தாலும், ஸங்க்ரமணத்தாலும் துஷ்டமாகில் பூர்வ திதி க்ராஹ்யம் ஆகும். இரண்டு திதிகளும் துஷ்டங்களாகில், ஸூர்ய ஸங்க்ரமணம் ஆவர்த்தன காலத்திற்கு முந்தி இருந்தால் முன் திதி க்ராஹ்யம் ஆகும். பிந்தி இருந்தால் பிந்திய திதி க்ராஹ்யம் ஆகும். இரண்டு திதிகளிலும் கர்ம காலம். துஷ்டமாகில் அந்த மாஸ ஸம்பந்தம் எந்தத் திதியில் அதிகமாய் உள்ளதோ, அந்தத் திதி க்ராஹ்யம் ஆகும்.

''ஆவர்த்தனத்திற்கு முன்பு ஆனால் இவ்விதம், ஆவர்த்தனத்திற்கு பின்பு ஆனால் இவ்விதம், கர்மகாலமான அபராஹ்ணத்தில் ஆனால் இவ்விதம்'' என்ற வசனங்களால் பகலில் ஸங்க்ரமண விஷயத்திலேயே தோஷம் தோன்றுவதால் ராத்ரியில் என்பது தோன்ருததால் பகலில் ஸங்க்ரமணம் இல்லாத திதியிலேயே ச்ராத்தம் செய்யத்தக்கது.

माधवीये — या तिथिः संक्रमाद्दुष्टा निशीथात्पूर्वमेव तु। आब्दिके मासिके त्याज्या सा तिथिः कव्यकर्मणि। मास्ये कस्मिन् तिथौ पित्रोर्दिवा सङ्क्रमणे सति। अपराह्णात् परो दोषो न भवेत् श्राद्धकर्मणि इति।

மாதவீயத்தில்:— எந்தத் திதி அர்த்தராத்ரத்திற்கு முன்பே ஸங்க்ரமணத்தால் துஷ்டமாகியதோ, அந்தத் திதி ஆப்திகம் மாஸிகம் என்ற பித்ரு கர்மத்தில் வர்ஜிக்கத் தகுந்தது. ஒரு மாஸத்தில் மாதா பிதாக்களின் ம்ருத திதியில் பகலில் ஸங்க்ரமணம் நேர்ந்தால் அது அபராஹ்ணத்திற்குப் பிறகு ஆனால் ச்ராத்த விஷயத்தில் தோஷம் உண்டாவது இல்லை.

अखण्डादर्शे — एकस्मिन् मासे एकस्मिन् दिने तिथौ सङ्क्रमदुष्टायां सत्यामपराह्णात् परं न सङ्क्रमदोष इत्यर्तः ॥ किं च - उभयोः कर्मकाले च सङ्क्रमो न भवेद्यदि। परत्रैव तु कर्तव्यमाब्दिकं मासिकं तथा इति।

அகண்டாதர்சத்தில்:— ஒரு மாஸத்தில் ஒரு தினத்தில் திதியானது ஸங்க்ரமணத்தால் துஷ்டமானால் அபராஹ்ணத்திற்குப் பிறகு ஸங்க்ரமண தோஷம் இல்லை என்பது பொருள். இனியும், இரண்டு திதிகளிலும் கர்மகாலத்தில் ஸங்க்ரமணம் இல்லாவிடில், பிந்திய திதியிலேயே ஆப்திகம் மாஸிகம் இவைகளைச் செய்யவும், என்று உள்ளது.

ब्रह्मयामले विशेषः । ऋषीन् प्रति व्यासः — उत्तरे षडशीत्यां च प्रातश्चेदपि सङ्क्रमः । पश्चात् पुण्यतया दोषः सायाह्ने न तु दुष्यति इति । अयमर्थः — मकरसङ्क्रान्तौ षडशीति सङ्क्रान्तौ च प्रातः काले सङ्क्रमेऽपि आवर्तनात् पूर्वं सङ्क्रम इति दोषाभावशङ्का न कार्या । किं तु, अनयोः सङ्क्रान्त्योः पश्चादेव पुण्यकालतया यदहः पुण्यकालः स्यात्तदहर्दोष इष्यते इति परिभाषामनुस्मृत्य तदहः प्रत्याब्दिकं न कर्तव्यम् । अपि तूत्तरसङ्क्रान्तिः सायाह्ने चेत् तत्र यथोक्तदोषाभावात् तत्रैव कर्तव्यमिति । एवं च प्रकृते चापसङ्क्रान्तेः षडशीतित्वेन पूर्वाह्णसङ्क्रमेऽपि दोष एव । मकरसङ्क्रान्तेः पूर्वाह्णसङ्क्रमेऽपि दोष एव । मकरसङ्क्रान्तेः सायन्तनत्वे दोषाभावात् तत्रैव श्राद्धं कर्तव्यमिति निर्णयः ।

ப்ரம்ஹயாமளத்தில் விசேஷம்:— ருஷிகளை நோக்கி வ்யாஸர் சொல்லுகிறார்:— 'உத்தராயணத்திலும் ஷடசீதியிலும் ப்ராத: காலத்தில் ஸங்க்ரமணம் ஆனாலும், புண்யகாலம் பிறகு ஆகியதால் தோஷம் உண்டு, ஸாயாஹ்னத்தில் ஸங்க்ரமணமானால் தோஷம் இல்லை' என்று. இதன் பொருள் இது:— "மகர ஸங்க்ராந்தியிலும் ஷடசீதி ஸங்க்ராந்தியிலும், ப்ராத:காலத்தில் ஸங்க்ரமணம் ஆனாலும், ஆவர்த்தனத்திற்கு முன்பு ஸங்க்ரமணம் என்பதால் தோஷம் இல்லை என்று சங்கை செய்யத்தக்கது இல்லை. ஆனால், இந்த இரண்டு ஸங்க்ரமணங்களுக்கும் பிறகே புண்ய காலம் ஆனதால். 'எந்தத் தினத்தில் புண்ய காலம் ஏற்படுகிறதோ, அந்தத் தினத்தில் தோஷம் சொல்லப்படுகிறது' என்ற பரிபாஷையை அனுஸரித்து அந்தத் தினத்தில் ப்ரத்யாப்திகத்தைச் செய்யக் கூடாது. ஆனால், உத்தராயண ஸங்க்ரமணம் ஸாயாஹ்னத்திலானால் அந்தத் தினத்தில் சொல்லிய தோஷம் இல்லாததால் அந்தத்

தினத்திலேயே செய்ய வேண்டும்'' என்று. இவ்விதம் இருப்பதால் ப்ரக்ருதத்தில், தனுஸ் ஸங்க்ரமணம் ஷடசீதியாகியதால் அபராஹ்ண ஸங்க்ரமண விஷயத்திலும் தோஷம் தான். மகர ஸங்க்ரமணம் பூர்வாஹ்ணத்திலுலும் தோஷமே. மகர ஸங்க்ரமணம் ஸாயங்காலத்திலானுல் தோஷம் இல்லாததால் அன்றே ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்பது நிர்ணயம்.

## सौरतिथ्यलाभे चान्द्रतिथिग्रहणप्रतिपादनम्।

सौरमासे मृततिथ्यभावे चान्द्रमासमृततिथिः ग्राह्या। तदाह हारीतः —सौरे यदि दिनं शून्यं तदा चान्द्रविधानतः। पूर्वमासे कृतं चेत् स्यात् पितॄणां तृप्तिकारणम् इति। पराशरः —सौरालाभे ततः पूर्वं कृतं चेत् सफलं भवेत्। उत्तरस्मिन् कृते मासि तच्छ्राद्धमसुरालयम् इति। संवर्तः - सौरमासविधाने तु मृतमासे तिथिर्नचेत्। पूर्वमासे तदा कुर्यादुत्तरे मासि दुःखदम् इति। स्मृत्यन्तरेऽपि — वृश्चिकादित्रिमासेषु मृताहो न भवेद्यदि। पूर्वमासि तिथौ कुर्यान्मासिकं चाब्दिकं तथा इति।

### ஸெளர திதி கிடைக்காவிடில் சாந்த்ர திதி

ஸெளர மாஸத்தில் ம்ருத திதி இல்லாவிடில் சாந்த்ர மாஸத்திய ம்ருத திதியை க்ரஹிக்கவும். அதைச் சொல்லுகிறுர், ஹாரீதர்:— ஸெளர மாஸத்தில் திதி இல்லாவிடில், சாந்த்ர மாஸவிதாநத்தால் முன் மாஸத்தில் செய்யவும். செய்தால் அது பித்ருக்களுக்கு த்ருப்திக்குக் காரணம் ஆகும். பராசரர்:— ஸெளர மாஸ திதி கிடைக்காவிடில், அதற்கு முன் திதியில் செய்தால் ச்ராத்தம் ஸபலம் ஆகும். அடுத்த மாஸத்தில் செய்தால் அது அஸுரர்களைச் சேரும். ஸம்வர்த்தர்:— ஸெளர மாஸ விதிப்படி ம்ருத மாஸத்தில் திதி இல்லாவிடில், அப்பொழுது முன் மாஸத்தில் செய்யவும். அடுத்த

மாஸத்தில் செய்தால் அது துக்கத்தைக் கொடுப்பது ஆகும். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— வ்ருச்சிகம் முதலிய மூன்று மாஸங்களில் ம்ருத திதி இல்லாவிடில் முன் மாஸ திதியில் மாஸிகம் ஆப்திகம் இவைகளைச் செய்யவும்.

वसिष्ठोऽपि — आब्दिकं सौरमासे स्यात् सङ्क्रान्तिरहिते तिथौ । सौरमासे यदि तिथिर्न स्याच्चान्द्रमसे स्मृतम् इति । पितृमेधसारे — सौरमास्येकस्मिन् तिथिद्वयसम्भवे परस्यामेव श्राद्धं कुर्यात्, तत्र सङ्क्रान्त्युपरागदोषे पूर्वस्याम्, तत्रैवं चेत् परस्याम्, उभयत्राप्येवं चेत् परस्याम्, क्वचित् सौरे तिथ्यभावे चान्द्रे मासि कुर्यात् इति । तस्मिन् चान्द्रे क्षयं गते सति तदुत्तरे मासे तिथिर्ग्राह्या ।

வஸிஷ்டரும்:— ஆப்திகத்தை ஸௌர மாஸத்தில் ஸங்க்ரமணம் இல்லாத திதியில் செய்ய வேண்டும். ஸௌர மாஸத்தில் திதி இல்லாவிடில் சாந்த்ர மாஸ திதியை க்ரஹிக்கவும். பித்ருமேதஸாரத்தில்:— ஒரு ஸௌர மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் பிந்திய திதியிலேயே ச்ராத்தத்தைச் செய்யவும். அந்தத் திதியில் ஸங்க்ரமணம், க்ரஹணம் இவைகளால் தோஷம் ஏற்பட்டால், முந்திய திதியில் செய்யவும். அதில் தோஷம் இருந்தால் பிந்திய திதியில் செய்யவும். இரண்டிலும் தோஷம் இருந்தால் பிந்திய திதியில் செய்யவும். ஒரு காலத்தில் ஸௌர திதி இல்லாவிடில் சாந்த்ர மாஸத்தில் செய்யவும். அந்தச் சாந்த்ர மாஸம் க்ஷயத்தை அடைந்து இருந்தால் அடுத்த மாஸத்தின் திதியை க்ரஹிக்க வேண்டும்.

तदुक्तं स्मृत्यन्तरे — सौरमासे तिथ्यभावे मासिकाब्दिकयोरपि । चान्द्रो मासो भवेद् ग्राह्यस्तस्मिंश्चान्द्रे क्षयं गते ।। तदुत्तरे मासि तिथिर्ग्राह्या पूर्वत्र नेष्यते इति । यदा शुक्लप्रतिपदि धनुस्सङ्क्रान्तिः दर्शमध्ये मकरसंक्रान्तिश्च तदा धनुःस्थे रवौ दर्शस्यासमाप्त्या न तस्य मार्गशीर्षत्वम्, मकरस्थे रवौ तत्समाप्त्या तस्य पौषत्वमेव,

मार्गशीर्षस्तु लुप्त इत्येवं कदाचित् सम्भाविते क्षयमासे सति धनुर्मासामावास्या मृततिथिस्तदुत्तरमासे ग्राह्येत्यर्थः ।

ஓர் ஸ்ம்ருதியில்:— மாஸிகத்திற்கும், ஆப்திகத்திற்கும் ஸௌர மாஸத்தில் திதி இல்லாவிடில், அப்பொழுது சாந்த்ர மாஸத்தை க்ரஹிக்கவும். அந்தச் சாந்த்ர மாஸம் க்ஷயத்தை அடைந்து இருந்தால் அடுத்த மாஸத்தின் திதியை க்ரஹிக்கவும். முந்திய மாஸத்தின் திதியை க்ரஹிக்கக் கூடாது. எப்பொழுது சுக்ல ப்ரதமையில் தனுஸ் ஸங்க்ரமணமும், தர்சத்திற்குள் மகர ஸங்க்ரமணமும் வருகிறதோ அப்பொழுது ஸூர்யன் தனுஸ்ஸில் இருக்கும் பொழுது தர்சம் முடியாததால் அதற்கு மார்க்க சீர்ஷத்வம் இல்லை. ஸூர்யன் மகரத்தில் இருக்கும் பொழுது அது முடிவதால் அதற்குப் பௌஷமாஸத்வமே தான். மார்க்கசீர்ஷ மாஸமோ வெனில் லுப்தமாயிற்று என்று இவ்விதம் எக்காலத்திலாவது ஸம்பவிக்கக் கூடிய க்ஷய மாஸம் நேர்ந்தால், தனுர் மாஸாமாவாஸ்யா ம்ருத திதியை அதன் உத்தர மாஸத்தில் க்ரஹிக்க வேண்டும் என்பது பொருள்.

## आब्दिकपरित्यागे प्रत्यवायोक्तिः

आब्दिकश्राद्धपरित्यागे प्रत्यवायमाह मरीचिः — पण्डिता ज्ञानिनो मूर्खाः स्त्रियोऽथ ब्रह्मचारिणः । मृताहं समतिक्रम्य चण्डालाः कोटिजन्मसु इति । भविष्यत्पुराणप्रभासखण्डयोश्च — मृताहं समतिक्रम्य चण्डालाः कोटिजन्मसु । अतो विप्रैर्न तत्त्याज्यं प्राणैः कण्ठगतैरपि । मृतेऽहनि पितुर्यस्तु न कुर्यात् श्राद्धमादरात् । मातुश्चैव वरारोहे वत्सरान्ते मृतेऽहनि ॥ नाहं तस्य महादेवि पूजां गृह्णामि नो हरिः इति । आश्वलायनः - मन्वादिभ्यो युगादिस्तु सहस्रगुण-तोऽधिकः । युगादेश्चायनद्वन्द्वमयनाद्विषुवद्वयम् । विषुद्वयाद्व्यती-

पातो व्यतीपातात्तु द्वादशी। द्वादश्यास्तु तथा दर्शो दर्शात् पित्रोस्तु वार्षिकम् इति।

### ஆப்திகம் செய்யாவிடில் ப்ரத்யவாயம்.

ஆப்திக ச்ராத்தத்தைச் செய்யாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார், மரீசி:— பண்டிதர்களோ, ஜ்ஞானிகளோ, மூர்க்கர்களோ, ஸ்த்ரீகளோ, ப்ரம்ஹசாரிகளோ, எவராயினும் ம்ருதாஹ ச்ராத்தத்தைச் செய்யாவிடில் கோடி ஜன்மங்களில் சண்டாளர்களாய் ஆவார்கள். பவிஷ்யத் புராணம், ப்ரபாஸ கண்டம் இவைகளிலும்:— ச்ராத்தத்தைச் செய்யாதவர்கள் கோடி ஜன்மங்களில் சண்டாளர்களாய் ஆவார்கள். ஆகையால் ப்ராம்ஹணர்கள் ப்ராணன்களின் ஆபத் காலத்திலும் ச்ராத்தத்தை விடக்கூடாது. எவன் மாதா பிதாக்களின் வர்ஷாந்தத்தில் ம்ருத தினத்தில் ச்ராத்தத்தைப் பக்தியுடன் செய்வதில்லையோ, அவன் செய்யும் பூஜையை நான் க்ரஹிப்பது இல்லை, விஷ்ணுவும் க்ரஹிப்பது இல்லை. ஆச்வலாயனர்:— மன்வாதிகளைக் காட்டிலும் யுகாதி ஆயிரம் மடங்கு அதிகமாகியது. யுகாதியை விட இரண்டு அயனங்களும், அயனங்களை விட இரண்டு விஷுவங்களும், விஷுவங்களை விட வ்யதீபாதமும், வ்யதீபாதத்தை விட த்வாதசியும், த்வாதசியை விடத் தர்சமும், தர்சத்தை விட மாதா பிதாக்களின் வார்ஷிக ச்ராத்தமும் ஆயிரம் மடங்கு அதிகம் ஆகும்.

देवलः — अध्वगश्चातुरश्चैव विहीनश्च धनैस्तथा। आमश्राद्धं प्रकुर्वीत हेम्ना वा द्विजसत्तमः। द्रव्याभावे द्विजाभावे त्वन्नमात्रं तु पाचयेत्। पैतृकेन तु सूक्तेन होमं कुर्याद्विचक्षणः। अत्यन्तद्रव्यशून्यश्चेत् शक्त्या दद्याद्गवां तृणम्। स्नात्वा च विधिवद्विप्रः कुर्याद्वा तिलतर्पणम्। अथ वा रोदनं कुर्यादत्युच्चैर्विजने वने। दरिद्रोऽहं महापापी वदन्निति विचक्षणः इति। अन्यत्रापि — भोजको यस्तु वै श्राद्धं न करोति

खगाधिप। मातापितृभ्यां सततं वर्षे वर्षे मृतेऽहनि। स याति नरकं घोरं तामिस्रं नाम नामतः इति।

**தேவலர்:—** வழிப்போக்கனும், வ்யாதி உள்ளவனும், பணம் இல்லாதவனும் ஆமச்ராத்தத்தையாவது, ஹிரண்ய ச்ராத்தத்தையாவது செய்ய வேண்டும். த்ரவ்யம் இல்லாவிடினும், ப்ராம்ஹணர் இல்லாவிடினும் அன்னத்தை மட்டில் சமைக்கவும். பைத்ருகமான ஸூக்தத்தினால் ஹோமம் செய்ய வேண்டும் அறிந்தவன். மிகவும் த்ரவ்யம் இல்லாதவனாயின் யதாசக்தி பசுக்களுக்குப் புல்லைக் கொடுக்கவும் அல்லது ஸ்நானம் செய்து விதிப்படி தில தர்ப்பணத்தைச் செய்யவும் அல்லது ஜனங்களற்ற வனத்தில் உரக்க ரோதனம் செய்யவும், நான் தரித்ரன், மகாபாபி என்று சொல்லிக் கொண்டு. மற்றொரு **ஸ்ம்ருதியில்:—** எவன் ப்ரதி வர்ஷமும் ம்ருத தினத்தில் மாதா பிதாக்களுக்கு எப்பொழுதும் போஜனத்துடன் ச்ராத்தத்தைச் செய்வது இல்லையோ அவன் தாமிஸ்ரம் என்ற கோரமான நரகத்தை அடைவான்.

**कार्ष्णाजिनिः —** ऊषरे तु यथा क्षिप्तं बीजं न प्रतिरोहति। तथा च तत् भवेत्तेषां यन्न दत्तं मृतेऽहनि इति। मृताहे यन्न दत्तमन्यत्र दत्तं तन्निष्फलं भवेत्, अतो मृताहे अवश्यं दातव्यमित्यभिप्रायः। तथा - पण्डिता ज्ञानिनो वापि मूर्खा योषित एव वा। मृताहं समतिक्रम्य चण्डालेष्वभिजायते इति। कौर्मेऽपि — नैमित्तिकं तु कर्तव्यं ग्रहणे चन्द्रसूर्ययोः। बान्धवानां च मरणे नरकी स्यादतोऽन्यथा इति।

**கார்ஷ்ணாஜினி:—** களர் பூமியில் விதைக்கப்பட்ட விதை எப்படி முளைப்பது இல்லையோ அது போல் பித்ருக்களுக்கு ச்ராத்த தினத்தில் கொடுக்கப்படாதது வீணாய் ஆகும். "ச்ராத்தத் தினத்தில் எது கொடுக்கப்படவில்லையோ, மற்றக் காலத்தில் எது கொடுக்கப்பட்டதோ அது நிஷ்பலம் ஆகும், ஆகையால்

ச்ராத்தத் தினத்தில் அவச்யம் கொடுக்க வேண்டும் என்பது அபிப்ராயம்.'' **அவ்விதம்:—** பண்டிதராயினும், ஜ்ஞானிகளாயினும், மூர்க்கராயினும், ஸ்த்ரீகளாயினும் ச்ராத்தத்தை அதிக்ரமித்தால் சண்டாளரில் பிறப்பார்கள். **கௌர்மத்திலும்:—** சந்த்ர ஸூர்யர்களின் க்ரஹணத்தில் நைமித்திக ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பந்துக்களின் மரண தினத்தில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இவ்விதம் செய்யாவிடில் நரகத்தை அடைவான்.

## श्राद्धीयतिथिकालादिः

कर्मकालव्यापिनी तिथिरत्र ग्राह्या। यदाह वृद्धयाज्ञवल्क्यः — कर्मणो यस्य यः कालस्तत्कालव्यापिनी तिथिः। तया कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति। गार्ग्योऽपि — यो यस्य विहितः कालस्तत्कालव्यापिनी तिथिः इति। कर्मकालश्च सपिण्डीकरणात् पूर्वभाविन्येकोद्दिष्टे मध्याह्नः, तदुत्तरभाविनि मासिकाब्दिकादावपराह्णः। तथा च वृद्धगौतमः — मध्याह्नव्यपिनी या स्यात् सैकोद्दिष्टे तिथिर्भवेत्। अपराह्णव्यापिनी स्यात् पार्वणे स तिथिर्भवेत् इति।

### ச்ராத்தத்திற்கு உரிய திதி காலம் முதலியவை.

இவ்விஷயத்தில் கர்மகாலத்தில் வ்யாப்தி உள்ள திதி க்ரஹிக்கத் தகுந்தது. அதைச் சொல்லுகிறார், **விருத்தயாக்ஞவல்க்யர்:—** 'எந்தக் கர்மத்திற்கு எது காலமோ அந்தக் காலத்தில் வ்யாபித்து உள்ளதாய் திதி இருக்க வேண்டும். அத்திதியால் கர்மங்களைச் செய்ய வேண்டும். குறைவும், வ்ருத்தியும் காரணம் அல்ல. **கார்க்யரும்:—** 'எந்தக் கர்மத்திற்கு எக்காலம் விஹிதமோ அக்காலத்தில் வ்யாபித்திருக்க வேண்டும் திதி. கர்மகாலமும், ஸபிண்டீகரணத்திற்கு முன்பு உள்ள ஏகோத்திஷ்டத்தில் மத்யாஹ்னம், அதற்கு மேல் வரும் மாஸிகம், ஆப்திகம் முதலியதில் அபராஹ்ணம்.

அவ்விதமே, வ்ருத்தகௌதமா்:— எந்தத் திதி மத்யாஹ்னத்தில் வ்யாப்தி உடையதோ, அத்திதி ஏகோத்திஷ்டத்திற்கு உரியது ஆகும். அபராஹ்ணத்தில் வ்யாப்தி உள்ளது எதுவோ அது பார்வணத்திற்கு உரியது ஆகும்.

व्यासः — एकमुद्दिश्य यत् श्राद्धं दैवहीनं विधीयते। एकोद्दिष्टं तु तत् प्रोक्तं मध्याह्ने तत् प्रकीर्तितम् इति। कालादर्शेऽपि — एकोद्दिष्टं तु मध्याह्ने नवश्राद्धादिकं चरेत् इति । मध्याह्नश्च सप्तमाष्टमनवममुहूर्तात्मकः। ते च मुहूर्ताः गान्धर्वकुतपरौहिणसंज्ञकाः। तथा चाह्नः पञ्चदश मुहूर्ताः स्मर्यन्ते — रौद्रः श्वेतश्च मैत्रश्च तथा पालविदः स्मृतः । सावित्रो वैश्वदेवश्च गान्धर्वः कुतपस्तथा। रौहिणस्तिलकश्चैव विभवो निरृतिस्तथा। शम्बरो विजयश्चैव बोधः पञ्चदश स्मृताः इति। एते पञ्चदश सूर्योदयमारभ्य क्रमात् दिवा मुहूर्ताः क्रमशो निश्यपि।

வ்யாஸர்:— ஒருவனை உத்தேசித்து எந்த ச்ராத்தம் தேவ வரணம் இல்லாததாய் விதிக்கப்படுகிறதோ, அது ஏகோத்திஷ்டம் என்று சொல்லப்பட்டு உள்ளது. அது மத்யாஹ்னத்தில் விதிக்கப்பட்டு உள்ளது. காலாதர்சத்திலும்:— ஏகோத்திஷ்டமான நவச்ராத்தம் முதலியதை மத்யாஹ்னத்தில் செய்யவும். மத்யாஹ்னம் என்பது பகலின் 7-8-9- முஹூர்த்தங்கள் ஆகியது. அந்த முஹூர்த்தங்கள், காந்தர்வம், குதபம், ரௌஹிணம் என்று பெயர் உள்ளவைகள். அவ்விதமே பகலில் பதினைந்து முஹூர்த்தங்கள் சொல்லப்படுகின்றன:— அவை, ரௌத்ரம், ச்வேதம், மைத்ரம், பாலவிதம், ஸாவித்ரம், வைச்வதேவம், காந்தர்வம், குதபம், ரௌஹிணம், திலகம், விபவம், நிர்ருதி, சம்பரம், விஜயம், போதம் என்பவை. இந்தப் பதினைந்தும் ஸூர்யோதயம் முதல்

முறையே பகலில் முஹூர்த்தங்கள். இரவிலும் இவ்விதமே க்ரமமாய் உள்ளன.

तथा विष्णुधर्मोत्तरे — त्रिंशन्मुहूर्ताश्च तथा त्वहोरात्रेण कीर्तिताः। तत्र पञ्चदश प्रोक्ता राम रात्रौ दिवा तथा। दिवसश्च यदा राम वृद्धिं समधिगच्छति। तदाश्रितमुहूर्तानां तदा वृद्धिः प्रकीर्तिता। दिनवृद्धिर्यदा राम दोषहानिस्तदा भवेत्। तदाश्रितमुहूर्तानां हानिर्ज्ञेया तदा तथा इति।

அவ்விதம் விஷ்ணுதர்மோத்தரத்தில்:— ஒரு அஹோராத்ரத்திற்கு 30-முஹூர்த்தங்கள் சொல்லப் பட்டுள்ளன. அவைகளுள் பதினைந்து இரவிலும், பதினைந்து பகலிலும் ஆகும். ஓ ராமா! பகல் எப்பொழுது வ்ருத்தியை அடைகின்றதோ அப்பொழுது பகலிலுள்ள முஹூர்த்தங்களுக்கு வ்ருத்தி சொல்லப்பட்டுள்ளது. எப்பொழுது பகல் வ்ருத்தியாகின்றதோ அப்பொழுது இரவுக்குக் குறைவு உண்டாகும். அப்பொழுது அதை அடைந்துள்ள முஹூர்த்தங்களுக்குக் குறைவு அறியத்தக்கது என்று.

यथोक्तनानात्मकत्रिंशन्मुहूर्तोपेतस्य सावनाहोरात्रस्य यदहः पञ्चदशमुहूर्तात्मकं तस्याह्नो भागा मतभेदेन पञ्चधा विकल्प्यन्ते। द्वेधा त्रेधा चतुर्धा पञ्चधा पञ्चदशधा इति पञ्च भेदाः। तत्र द्वेधा विभागः स्कान्दपुराणे दर्शितः — आवर्तनात्तु पूर्वाह्णो ह्यपराह्णस्ततः परः इति ।

இவ்விதம் சொல்லப்பட்டுள்ள அநேகவிதமான 30-முஹூர்த்தங்களுடன் கூடிய ஸாவன அஹோராத்ரத்தின் எந்தப் பகல் 15-முஹூர்த்தங்களை உடையதோ அந்தப் பகலின் பாகங்கள் மத பேதத்தால் 5-விதமாய் விகல்ப்பிக்கப்படுகின்றன. இரண்டு பாகமாய்,

மூன்று பாகமாய், நான்கு பாகமாய், ஐந்து பாகமாய், பதினைந்து பாகமாய் என்று ஐந்து பேதங்கள். அவைகளுள் இரண்டு பாகமாகிய விபாகம் ஸ்காந்த புராணத்தில் சொல்லப்பட்டு உள்ளது. 'ஆவர்த்தனத்திற்கு முன் உள்ளது பூர்வாஹ்ணம், பிறகு உள்ளது அபராஹ்ணம் என்று இந்த அபிப்ராயத்தைக் கொண்டே சொல்லுகிறார்,

एतदेवाभिप्रेत्य मनुराह — यथा चैवापरः पक्षः पूर्वपक्षाद्विशिष्यते। तथा श्राद्धस्य पूर्वाह्णादपराह्णो विशिष्यते इति। त्रेधा विभागः शातातपेन दर्शितः — तस्मादहरहः पूर्वाह्णे देवा अशनमभ्यवहरन्ति, मध्यन्दिने मनुष्याः, अपराह्णे पितरः इति।

மனு:— எவ்விதம் பூர்வபக்ஷத்தை விட அபரபக்ஷம் ச்லாகிக்கப்படுகின்றதோ, அவ்விதம் ச்ராத்தத்திற்குப் பூர்வாஹ்ணத்தை விட அபராஹ்ணம் ச்லாக்யம் எனப்படுகிறது. மூன்று விதமாகிய விபாகம் சாதாதபரால் காண்பிவிக்கப்பட்டு உள்ளது:— 'ஆகையால் ப்ரதி தினம் பூர்வாஹ்ணத்தில் தேவர்கள் ஆஹாரத்தைப் புஜிக்கின்றனர், மத்யாஹ்னத்தில் மனுஷ்யர்களும், அபராஹ்ணத்தில் பித்ருக்களும் புஜிக்கின்றனர்' என்று.

एतमेव विभागमभिप्रेत्य समाम्नायते — ऋग्भिः पूर्वाह्णे दिवि देव ईयते। यजुर्वेदे तिष्ठति मध्ये अह्नः। सामवेदेनास्तमये महीयते। वेदैरशून्यस्त्रिभिरेति सूर्यः इति। श्रुत्यन्तरेऽपि — पूर्वाह्णो वै देवानां मध्यन्दिनो मनुष्याणामपराह्णः पितॄणाम् इति।

இந்த விபாகத்தையே அபிப்ராயத்திற் கொண்டு ச்ருதியில் சொல்லப்படுகிறது - 'ஆகாசத்தில் ஸூர்யன் பூர்வாஹ்ணத்தில் ருக் வேத தேவதைகளால் ஸ்துதிக்கப்படுகிறான். மத்யாஹ்னத்தில் யஜுர் வேத தேவதையின் இடத்தில் இருக்கிறான். அஸ்தமயத்தில் ஸாம வேத தேவதையால் பூஜிக்கப்படுகிறான். ஸூர்யன்

மூன்று வேத தேவதைகளுடன் கூடியவனுகவே செல்லுகிருன்' என்று. மற்ருேர் ச்ருதியில்:— 'பூர்வாஹ்ணம் தேவர்கள் உடையது. மத்யந்தினம் மனுஷ்யர்கள் உடையது. அபராஹ்ணம் பித்ருக்கள் உடையது' என்று.

चतुर्धा विभागमाह गोभिलः — पूर्वाह्णः प्रहरः पूर्वो मध्याह्नः प्रहरस्ततः । अपराह्णस्तृतीयः स्यात् सायाह्नश्च ततः परम् इति । पञ्चधा विभागं व्यास आह — मुहूर्तत्रितयं प्रातस्तावानेव तु सङ्गवः । मध्याह्नस्त्रिमुहूर्तस्स्यादपराह्णोऽपि तादृशः । सायाह्नस्त्रिमुहूर्तस्तु सर्वकर्मबहिष्कृतः इति । वृद्धपराशरोऽपि — लेखाप्रभृति सूर्यस्य मुहूर्तास्त्रय एव तु । प्रातस्तु संस्मृतः कालो भागश्चाह्नः स पञ्चमः । सङ्गवस्त्रिमुहूर्तोऽथ मध्याह्नस्तत्समः स्मृतः । ततस्त्रयो मुहूर्ताश्च ह्यपराह्णो विधीयते । पञ्चमोऽथ दिनांशो यस्सायाह्न इति स स्मृतः इति ।

நான்கு ப்ரகாரமாய் விபாகத்தைச் சொல்லுகிருர். கோபிலர்:— 'முதல் யாமம் பூர்வாஹ்ணம் எனப்படும். அடுத்த யாமம் மத்யாஹ்னம் எனப்படும். மூன்ருவது யாமம் அபராஹ்ணம் எனப்படும். நான்காவது யாமம் ஸாயாஹ்னம் எனப்படும்' என்று. ஐந்து விதமாய் விபாகத்தை வ்யாஸர் சொல்லுகிருர்:— மூன்று முஹூர்த்தங்கள் (6-நாழிகைகள்) ப்ராத:காலம் எனப்படும். பிறகு மூன்று முஹூர்த்தம் கொண்டது ஸங்கவம் எனப்படும். பிறகு மூன்று முஹூர்த்தம் கொண்டது மத்யாஹ்னம். பிறகு மூன்று முஹூர்த்தம் கொண்டது அபராஹ்ணம். பிறகு மூன்று முஹூர்த்தம் கொண்டது ஸாயாஹ்னம். இது எல்லாக் கர்மங்களுக்கும் அர்ஹம் அல்லாதது. வ்ருத்தபராசரரும்:— ஸூர்ய பிம்ப தர்சனம் முதல் மூன்று முஹூர்த்தங்கள் உள்ள காலம் 'ப்ராத:' எனப்படுகிறது. அது பகலின் ஐந்தில் ஒரு பாகம்.

பிறகு மூன்று முஹூர்த்தங்கள் கொண்டது ஸங்கவம் எனப்படும். பிறகு மூன்று முஹூர்த்தங்கள் உடையது மத்யாஹ்னம். பிறகு மூன்று முஹூர்த்தங்கள் உடையது அபராஹ்ணம் எனப்படுகிறது. பகலில் மீதியுள்ள ஐந்தாவது பாகம் ஸாயாஹ்னம் எனப்படுகிறது.

साधिष्ठातृदेवताः पञ्च भागाः समाम्नायन्ते — देवस्य सवितुः प्रातः, मित्रस्य सङ्गवः, बृहस्पतेर्मध्यन्दिनः, भगस्यापराह्णः, वरुणस्य सायम् इति । पञ्चदशधा विभागश्शङ्खेन दर्शितः — रौद्रश्चैत्रस्तथा मैत्रस्तथा सालकटः स्मृतः । सावित्रश्च जयन्तश्च गान्धर्वः कुतपस्तथा । रौहिणश्च विरिञ्चश्च विजयो नैरऋतस्तथा । महेन्द्रो वरुणश्चैव बोधः पञ्चदशः स्मृतः इति

அதிஷ்டாத்ரு தேவதைகளுடன் கூடியவைகளாய் ஐந்து பாகங்கள் ச்ருதியில் சொல்லப்படுகின்றன:— 'ப்ராத: என்பது ஸவிதாவினுடையது. ஸங்கவம் மித்ரனுடையது. மத்யந்தினம் ப்ருஹஸ்பதியினுடையது. அபராஹ்ணம் பகனுடையது. ஸாயாஹ்னம் வருணனுடையது' என்று. 15-ப்ரகாரமாய் விபாகம் காண்பிவிக்கப்பட்டு உள்ளது சங்கரால்:— 'ரௌத்ரம், சைத்ரம், மைத்ரம், ஸாலகடம், ஸாவித்ரம், ஜயந்தம், காந்தர்வம், குதபம், ரௌஹிணம், விரிஞ்சம், விஜயம், நைர்ருதம், மஹேந்த்ரம், வருணம், போதம் என்று பதினைந்து முஹூர்த்தங்கள் சொல்லப்பட்டுள்ளன' என்று.

अत्र कालनिर्णयकारः — तत्र पञ्चधा विभागपक्षस्य बहुश्रुतिस्मृतिसिद्धत्वात् प्रायेणैतमेव पक्षमाश्रित्य विधिनिषेध-शास्त्राणि प्रवर्तन्ते, त्रेधा विभागस्तु सोमयागे सवनत्रये उपयुज्यते । यथोक्तेषु पञ्चसु कालेषु यानि विहितानि कर्माणि तानि दैवपित्र्यरूपेण राशिद्वयं कृत्वा तयोर्गौणकालाभ्यनुज्ञया द्वेधा विभागो दर्शितः । चतुर्धा विभागस्तु प्रकरणबलात् गोभिलस्मृत्युक्तकर्मविशेषेषु द्रष्टव्यः ।

पञ्चदशधा विभागो मुहूर्तकर्मविशेषोपजीवनेन विधिनिषेध प्रवृत्ते ज्योतिः शास्त्रे द्रष्टव्यः इति।

**காலநிர்ணயகாரர்:—** 'அவைகளுள் ஐந்து விதமாய் விபாகம் செய்யும் பக்ஷம் வெகு ச்ருதி ஸ்ம்ருதிகளால் ஸித்தமாய் இருப்பதால், அநேகமாய் இந்தப் பக்ஷத்தையே ஆச்ரயித்து விதிநிஷேத சாஸ்த்ரங்கள் ப்ரவ்ருத்திக்கின்றன. மூன்று ப்ரகாரமாகிய விபாகமோ வெனில் ஸோமயாகத்தில் மூன்று ஸவனங்களில் உபயோகிக்கப்படுகிறது. முன் சொல்லியபடி ஐந்து காலங்களில் எந்தக் கர்மங்கள் விதிக்கப்பட்டுள்ளனவோ, அவைகளைத் தைவம், பித்ர்யம் என்ற ரூபத்தால் இரண்டு பாகமாய்ச் செய்து, அவைகளுக்குக் கௌண காலத்தை அனுக்ஞை செய்வதால் 2-ப்ரகாரமாய் விபாகம் சொல்லப்பட்டது. நான்கு விதமான விபாகமோ வெனில், ப்ரகரண பலத்தால், கோபில ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட சில கர்மங்களில் உபயுக்தம் என்று அறியவும். 15-விதமாய் உள்ள விபாகம் முஹூர்த்தங்களில் செய்ய வேண்டிய சில கர்மங்களை ஆச்ரயித்து விதி நிஷேதங்களுக்காக ப்ரவ்ருத்தமான ஜ்யோதிஷ சாஸ்த்ரத்தில் உபயுக்தமாகியது என்று அறியவும்.

कालादर्शे तु — पञ्चधा पञ्चदशधा त्रेधा द्वेधा च वासरम्। विभक्तं मुनयः प्राहुस्तत्राद्यौ संमतौ मम इति। तत्र - तेषु पक्षेषु, आद्यौ पञ्चधा - पञ्चदशधा पक्षौ मम संमतावित्यर्थः। यस्तु नवधा विभाग आत्रेयेण दर्शितः — प्रातरार्तः सङ्गवश्च रुग्णो मध्याह्नसन्तपौ। अपराह्णः खनिः सायं नवधा भिद्यते त्वहः इति, तत्र आर्तरुग्ण-सन्तपखनीनां स्मृतिषु विनियोगादर्शनात् नवधा विभाग उपेक्ष्यः।

**காலாதர்சத்திலோவெனில்:—** 'ஐந்து விதமாயும், பதினைந்து விதமாயும், மூன்று விதமாயும், இரண்டு

விதமாயும், பகலைப் பிரித்துள்ளதாய் முனிவர்கள் சொல்லுகின்றனர். அவைகளுள், ஆதியிலுள்ள இரண்டு பக்ஷங்கள் எனக்கு இஷ்டமானவை' என்றுள்ளது. தத்ர = அந்தப் பக்ஷங்களுள், ஆத்யெள = ஐந்தாகவும், பதினைந்தாகவும் விபாகம் என்ற பக்ஷங்கள் எனக்கு இஷ்டமானவை என்பது பொருள். ஆனால், ஆத்ரேயர்:— 'ப்ராத:, ஆர்த்த:, ஸங்கவ:, ருக்ண:, மத்யாஹ்ன:, ஸந்தப:, அபராஹ்ண:, கநி:, ஸாயம் என்று ஒன்பது விதமாய்ப் பகல் பிரிக்கப்படுகிறது' என்று சொல்லி உள்ளாரே ? எனில், அவைகளுள் ஆர்த்த, ருக்ண, ஸந்தப, கனி என்பவைகளுக்கு ஸ்ம்ருதிகளில் விநியோகம் காணப்படாததால் ஒன்பது விதமாய் விபாகம் என்பது உபேக்ஷிக்கத் தகுந்தது.

एवं च सति पञ्चस्वह्नो भागेषु तृतीयो मध्याह्नो भाग एकोद्दिष्टे ग्राह्यः । तत्रैकोद्दिष्टस्योपक्रमे कुतपस्य पूर्वोत्तरभागौ इच्छया विकल्पितौ। तदाह व्यासः —कुतपप्रथमे भाग एकोद्दिष्टमुपक्रमेत्। आवर्तनसमीपे वा तत्रैव नियतात्मवान् इति । समाप्तिकालमाह श्लोकगौतमः —आरभ्य कुतपे श्राद्धं कुर्यादारौहिणं बुधः। विधिज्ञो विधिमास्थाय रौहिणं तु न लङ्घयेत् । रौहिणं लङ्घयेद्यस्तु ज्ञानादज्ञानतोऽपि वा। आसुरं तत् भवेत् श्राद्धं पितॄणां नोपतिष्ठते इति ।

இவ்விதம் இருப்பதால் பகலின் ஐந்து பாகங்களுள் மூன்றுவதாகிய மத்யாஹ்ன பாகம் ஏகோத்திஷ்டத்தில் க்ரஹிக்கத் தகுந்தது. அதில் ஏகோத்திஷ்டத்தின் ஆரம்ப விஷயத்தில் குதபத்தின் பூர்வோத்தர பாகங்கள் இஷ்டப்படி விகல்ப்பிக்கப்பட்டுள்ளன. அதைச் சொல்லுகிறார், வ்யாஸர்:— 'குதபத்தின் முதல் பாகத்தில் ஏகோத்திஷ்டத்தை உபக்ரமிக்கவும் அல்லது அதிலேயே ஆவர்த்தனத்திற்குச் சமீப காலத்திலாவது சுத்தனாய்

ஆரம்பிக்கவும்' என்று. ஸமாப்தி செய்யும் காலத்தைச் சொல்லுகிறார், ச்லோக கௌதமர்:— அறிந்தவன் ச்ராத்தத்தைக் குதபகாலத்தில் ஆரம்பித்து, விதிப்படி ரௌஹிணம் வரையில் செய்யவும். விதியை அறிந்தவன் ரௌஹிணத்தைத் தாண்டக் கூடாது. அறிந்தோ அறியாமலோ எவன் ரௌஹிணத்தைத் தாண்டுகின்றானோ அவனது ச்ராத்தம் அஸுரர்களைச் சேரும், பித்ருக்களைச் சேருவது இல்லை.

यद्यपि पार्वणश्राद्धस्यापि कुतपे प्रारम्भस्समानः, तथाऽपि समापनं तस्य कालान्तर एव। तदुक्तं मत्स्यपुराणे— अह्नो मुहूर्ता विख्यांता दश पञ्च च सर्वदा। तत्राष्टमो मुहूर्तो यः स कालः कुतपः स्मृतः । अष्टमे भास्करो यस्मान्मन्दी भवति सर्वदा । तस्मादनन्तफलदस्तत्रारम्भो विशिष्यते । ऊर्ध्वं मुहूर्तात् कुतपाद्यन्मुहूर्तचतुष्टयम्। मुहूर्तपञ्चकं ह्येतत् स्वधाभवनमिष्यते इति । एवं च रौहिणसमाप्तिप्रतिपादकं यद्वचनमस्ति तत् सर्वमेकोद्दिष्टविषयं वेदितव्यम् । तदेवमेकोद्दिष्टश्राद्धे मध्याह्नस्य कर्मकालत्वात् मध्याह्नव्यापिनी या स्यात् सैकोद्दिष्टे तिथिर्भवेत् इति स्मरणात् त्रिमुहूर्तव्यापिनी तिथिर्ग्रहीतव्येति स्थितम्।

பார்வண ச்ராத்தத்திற்கும் குதபத்தில் ஆரம்பம் என்பது ஸமானம் தான், ஆயினும் அதற்கு முடிவு வேறு காலத்தில் தான். அது சொல்லப்பட்டுள்ளது. மத்ஸ்யபுராணத்தில்:— எப்பொழுதும் பகலின் முஹூர்த்தங்கள் பதினைந்து என்று ப்ரஸித்தங்கள். அவைகளுள் எட்டாவது முஹூர்த்தம் எதுவோ அது குதபம் எனப்படுகிறது. எப்பொழுதும் எட்டாவது முஹூர்த்தத்தில் ஸூர்யன் மந்தனாய் (தாபம் குறைந்தவனாய்) ஆவதால் அக்காலத்தில் ஆரம்பிப்பது அளவற்ற பலனைக் கொடுப்பதாகியதால் ப்ரசஸ்தம்

எனப்படுகிறது. குதப முஹூர்த்தத்திற்கு மேல் உள்ள நான்கு முஹூர்த்தங்கள் எவையோ அவையுடன் ஐந்து முஹூர்த்தங்களும் ச்ராத்த காலம் எனப்படுகிறது. இவ்விதம் இருப்பதால், ரௌஹிணத்தில் ஸமாப்தியை ப்ரதி பாதிக்கும் வசனம் எல்லாம் ஏகோத்திஷ்டத்தைப் பற்றியது என்று அறியவும். இவ்விதம் இருப்பதால், ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தில் மத்யாஹ்னம் கர்மகாலம் ஆனதால், 'எந்தத் திதி மத்யாஹ்ன வ்யாப்தி உள்ளதோ அது ஏகோத்திஷ்டத்திற்குரிய திதி' என்று ஸ்ம்ருதி இருப்பதால் மூன்று முஹூர்த்த வ்யாப்தி உள்ள திதியை க்ரஹிக்க வேண்டும் என்பது நிலைத்துள்ளது.

अत्र निर्णेतव्यो विषयः षोढा भिद्यते, पूर्वेद्युरेव मध्याह्नव्यापित्वम्, परेद्युरेव मध्याह्नव्यापित्वम्, उभयत्र तद्व्यापित्वम्, उभयत्र तदव्यापित्वम्, उभयत्र साम्येन तदेकदेशव्यापित्वम्, वैषम्येण तदेकदेशव्यापित्वं चेति ।। तत्र पूर्वेद्युरेव परेद्युरेव वा मध्याह्नव्याप्तिरित्येतयोः पक्षयोर्मध्याह्न व्यापित्वस्यैव निर्णायकत्वात् न कोऽपि सन्देहः । मध्याह्नव्यापिनी या स्यात्तिथिः पूर्वाऽपराऽपि वा । तत्र कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति स्मरणात् । उभयत्र च तद्व्यापित्वतदव्यापित्वरूपयोः पक्षयोः पूर्वेद्युरेवानुष्ठानम् ।

இவ்விஷயத்தில் நிர்ணயிக்கக் கூடிய விஷயம் ஆறு விதமாய்ப் பிரிகிறது. "முதல் நாளில் மட்டில் மத்யாஹ்ன வ்யாபித்வம், மறுநாளில் மட்டில் மத்யாஹ்ன வ்யாபித்வம், இரண்டு நாட்களிலும் மத்யாஹ்ன வ்யாபித்வம், இரண்டு நாட்களிலும் மத்யாஹ்ன வ்யாபித்வம் இல்லாமை, இரண்டு நாட்களிலும் ஸமமாய் மத்யாஹ்னத்தின் ஏகதேசத்தில் வ்யாப்தி, ஸமமாயில்லாமல் ஏகதேசவ்யாப்தி" என்று. இவைகளுள் முதல் நாளில் மட்டில் மத்யாஹ்ன வ்யாபித்வம், மறு

நாளில் மட்டில் மத்யாஹ்ன வ்யாபித்வம் என்ற இந்த இரண்டு பக்ஷங்களிலும் மத்யாஹ்ன வ்யாப்தியே நிர்ணய காரணம் ஆகியதால் ஸந்தேஹம் ஒன்றும் இல்லை. 'எந்தத் திதி மத்யாஹ்ன வ்யாபிநியாய் உள்ளதோ, அது முந்தியதாயினும், பிந்தியதாயினும் அதில் கர்மங்களைச் செய்யவும். குறைவும் வ்ருத்தியும் காரணமல்ல' என்று ஸ்ம்ருதி இருப்பதால். இரண்டு நாட்களிலும் மத்யாஹ்ன வ்யாப்தி, வ்யாப்தி இல்லாமை என்ற இரண்டு பக்ஷங்களிலும் முதல் நாளிலேயே அனுஷ்டானம்.

तथा च सति, अपराह्णस्तथा ज्ञेयः पित्र्येषु च शुभावहः । दिनान्ते पञ्च नाड्यस्तु पुण्याः प्रोक्ता मनीषिभिः । उदये च तथा पित्र्ये दैवे चैव तु कर्मणि । देवकार्ये तिथिर्ज्ञेया यस्यामभ्युदितो रविः । पितृकार्ये तिथिर्ज्ञेया यस्यामस्तमितो रविः' इत्यादीन्यपराह्णसायाह्नास्तमय व्याप्तिविषयाणि पित्र्यसामान्यवचनान्यनुगृहीतानि भवन्ति। उभयत्र सामान्येनैकदेशव्याप्तौ खर्वादिवाक्यं द्रष्टव्यम्, तच्च पार्वणप्रस्तावे योजयिष्यते। वैषम्येणैकदेशव्याप्तौ तु यदा पूर्वेद्युर्महती तदा महत्त्वानुग्रहात् सामान्यवचनानुग्रहाच्च पूर्वेद्युरेवानुष्ठानम्। यदा तु परेद्युरेव महती तदा सामान्यशास्त्रमुपेक्ष्यापि महत्त्वमेवादरणीयम् ।

அவ்விதம் இருக்கும் போது, "அபராஹ்ணம் பித்ருகார்யத்தில் சுபகரம். மாலையில் 5-நாழிகைகள் புண்யங்கள் என வித்வான்களால் சொல்லப்பட்டு உள்ளன. உதயம் முதல் ஐந்து நாழிகைகள் அவ்விதமே, முறையே பித்ருகார்யத்திலும், தேவகார்யத்திலும். எந்தத் திதியில் ஸூர்யன் உதிக்கின்றானோ அது தேவகார்யத்திற் குரியது. எதில் ஸூர்யன் அஸ்தமிக்கின்றானோ அது பித்ரு கார்யத்திற்குரியது" என்பது முதலிய அபராஹ்ண ஸாயாஹ்ந அஸ்தமயவ்யாப்தியைப் பற்றிய பித்ர்யகர்ம ஸாதாரணங்களான வசனங்கள் அனுக்ரஹிக்கப்

பட்டவைகளாய் ஆகின்றன. இரண்டு நாட்களிலும் ஸமானமாய் ஏகதேச வ்யாப்தி என்ற பக்ஷத்தில் கர்வாதி வாக்யத்தைப் பார்க்க வேண்டும். அது பார்வண ச்ராத்தத்தைச் சொல்லும் இடத்தில் சேர்க்கப்படப் போகிறது. ஸமம் இல்லாமல் ஏகதேச வ்யாப்தி என்ற பக்ஷத்திலோ வெனில், எப்பொழுது முதல் நாளில் அதிக வ்யாப்தியோ அப்பொழுது அதிகத் தன்மையின் பலத்தாலும், ஸாமான்ய வசனத்தின் பலத்தாலும், முதல் நாளிலேயே அனுஷ்டானம். எப்பொழுது மறு நாளிலேயே அதிக வ்யாப்தியோ அப்பொழுது ஸாமான்ய வசனத்தை உபேக்ஷித்தாவது அதிகத் தன்மையையே ஆதரிக்க வேண்டும்.

यदाह मरीचिः — द्व्यपराह्णव्यापिनी चेदाब्दिकस्य यदा तिथिः। महतीं तत्र तद्विद्धां प्रशंसन्ति महर्षयः इति। अनेनैव न्यायेन अत्रापि परेद्युरेवानुष्ठानं द्रष्टव्यमिति कालनिर्णयादावुक्तोऽय-मेकोद्दिष्टनिर्णयः। एतच्च सपिण्डीकरणात् पूर्वं दैवहीनं विधीयते इति सपिण्डीकरणात् पूर्वं यदेकोद्दिष्टं विहितं तत्रैव मध्याह्नव्यापिनी तिथिः । न तु अपुत्रस्य पितृव्यस्य भ्रातुश्चैवाग्रजन्मनः इत्यादिना सपिण्डीकरणात् परमपि विहिते एकोद्दिष्टश्राद्धे, पितॄणामपराह्णः स्यात् इत्यादिना सपिण्डीकरणेन पितृत्वं प्राप्तस्य सर्वस्याप्यविशेषेणापराह्णविधानादित्याहुः।

ஏனெனில், மரீசி:— 'எப்பொழுது ஆப்திகத்தின் திதி இரண்டு நாட்களின் அபராஹ்ணத்திலும் வ்யாபித்துள்ளதோ அப்பொழுது, அதிக வ்யாப்தி உள்ள வித்ததிதியையே மஹர்ஷிகள் ச்லாகிக்கின்றனர்' என்றார். இந்த ந்யாயத்தாலேயே இவ்விஷயத்திலும் மறுநாளிலேயே அனுஷ்டானம் என்று காலநிர்ணயம் முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டு உள்ளது இந்த

ஏகோத்திஷ்ட நிர்ணயம். இதுவும், 'ஸபிண்டீகரணத்திற்கு முன் தேவ வரணம் இல்லாமல் ஏகோத்திஷ்டம் விதிக்கப்படுகிறது' என்று விதிக்கப்பட்ட ஏகோத்திஷ்டம் எதுவோ அதிலேயே மத்யாஹ்ன வ்யாப்தி உள்ள திதி. மற்ற ஏகோத்திஷ்டத்தில் இல்லை. அதாவது, 'புத்ரன் இல்லாத பித்ருவ்யன், ஜ்யேஷ்ட ப்ராதா இவர்களுக்கு' என்பது முதலிய வசனங்களால் ஸபிண்டீகரணத்திற்குப் பிறகும் விதிக்கப்பட்டுள்ள ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தில் இல்லை. 'பித்ருக்களுக்கு அபராஹ்ணம் விஹிதம்' என்பது முதலிய சாஸ்த்ரத்தால், பித்ருத்வத்தை அடைந்துள்ள எல்லோருக்குமே விசேஷம் இன்றி அபராஹ்ணம் விதிக்கப்படுவதால் என்கின்றனர்.

अत्र कश्चित् सङ्ग्रहकारः — ग्राह्याऽऽवर्तनकालिकी द्विदिवसे यद्येवमत्राधिका शस्ता तत्र समा क्षये यदि तदा पूर्वा तु वृद्धौ परा । वृद्धिह्रासवियुक्समाऽपि च परा मध्याह्नयोस्सा न चेत् पूर्वैवेति तिथिः सपिण्डनकृतेः प्राङ्मासिके नित्यशः इति ।

ஒரு ஸங்க்ரஹகாரர்:— ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யப்படும் மாஸிகத்தில் எப்பொழுதும் இந்த நிர்ணயப்படி திதியை க்ரஹிக்கவும். அதாவது:— ''மத்யாஹ்ன வ்யாப்தி உள்ள திதியை க்ரஹிக்கவும். இரண்டு தினங்களில் மத்யாஹ்ன வ்யாப்தி இருந்தால் அதிக வ்யாப்தி உள்ளதை க்ரஹிக்கவும். இரண்டு தினங்களிலும் வ்யாப்தி ஸமமாய் இருந்தால் க்ஷய விஷயத்தில் பூர்வ திதியையும் வ்ருத்தி விஷயத்தில் உத்தர திதியையும் க்ரஹிக்கவும். க்ஷய வ்ருத்திகளில் இல்லாமல் ஸமமாய் இருக்கும் பக்ஷத்தில் பர திதியை க்ரஹிக்கவும். இரண்டு தினங்களிலும் மத்யாஹ்ன வ்யாப்தி இல்லாவிடில் முன் திதியை க்ரஹிக்கவும்'' என்று.

## पार्वणश्राद्धकालनिर्णयः

अथ पार्वणश्राद्धकालस्य निर्णयः। तस्यापराह्णः कर्मकालः। तथा च शातातपः — अपराह्णे पितॄणां तु तत्प्रदानं विशिष्यते इति। मनुरपि — तथा श्राद्धस्य पूर्वाह्णादपराह्णो विशिष्यते इति। शङ्खोऽपि — पूर्वाह्णे दैविकं कृत्यमपराह्णे पितृक्रिया। ग्रहणे निशि वा कार्या न रात्रौ पैतृकं पुनः इति।

## பார்வண ச்ராத்தகால நிர்ணயம்

இனி பார்வண ச்ராத்தத்திற்குக் காலநிர்ணயம் சொல்லப்படும். அதற்கு அபராஹ்ணம் கர்மகாலம். அவ்விதமே, சாதாதபர்:— பித்ருக்களுக்கு ச்ராத்தத்தை அபராஹ்ணத்தில் கொடுப்பது ச்லாக்யம் எனப்படுகிறது. மனுவும்:— ச்ராத்தத்திற்குப் பூர்வாஹ்ணத்தை விட அபராஹ்ணம் ச்லாக்யம் ஆகும். சங்கரும்:— தேவகார்யத்தைப் பூர்வாஹ்ணத்தில் செய்யவும். பித்ருகார்யத்தை அபராஹ்ணத்தில் செய்யவும். க்ரஹணத்தில் ராத்ரியிலும் செய்யலாம். இதைத் தவிர்த்து ராத்ரியில் பித்ரு கார்யத்தைச் செய்யக் கூடாது.

हारीतोऽपि — अपराह्णः पितॄणां तु याऽपराह्णानुयायिनी। सा ग्राह्या पितृकार्ये तु न पूर्वाह्णानुयायिनी इति। बृहन्मनुरपि — यस्यामस्तं रविर्याति पितरस्तामुपासते। तिथिं तेभ्यो यतो दत्तो ह्यपराह्णः स्वयम्भुवा इति। स्मृत्यन्तरे — अपराह्णे तु पैतृकम् इति। श्रुतिश्च — अपराह्णः पितॄणाम् इति। कालादर्शे — चोदनादपराह्णस्य गजच्छायोपदेशनात् इति। श्रुत्या स्मृत्या चापराह्णस्य पार्वणश्राद्धाङ्गत्वेन विधानात्, तथा स्मृत्या गजच्छायायाः पार्वणाङ्गत्वेन विधानात्, सा चापराह्णे भवतीत्यपराह्णादर इत्यर्थः।

ஹாரீதரும்:— அபராஹ்ணம் பித்ருக்களுடையது. அபராஹ்ண வ்யாப்தி உள்ள திதி எதுவோ அதைப் பித்ரு கார்யத்தில் க்ரஹிக்கவும். பூர்வாஹ்ண வ்யாப்தி உள்ளதை க்ரஹிக்கக் கூடாது. ப்ருஹன்மனுவும்:— எந்தத் திதியில் ஸூர்யன் அஸ்தமயத்தை அடைகின்றானோ அந்தத் திதியைப் பித்ருக்கள் அடைகின்றனர். ஏனெனில், ப்ரம்ஹதேவன் பித்ருக்களுக்கு அபராஹ்ணத்தைக் கொடுத்துள்ளான் அல்லவா. ஓர் ஸ்ம்ருதியில்:— அபராஹ்ணத்தில் பித்ரு கார்யத்தைச் செய்யவும். ச்ருதியும்:— அபுராஹ்ணம் பித்ருக்கள் உடையது. காலாதர்சத்தில்:— 'சோதநாதபராஹ்ணஸ்ய கஜச்சாயோபதேசநாத்' என்று. இதன் பொருள்:— ''ச்ருதியும், ஸ்ம்ருதியும், அபராஹ்ணத்தைப் பார்வண ச்ராத்தாங்கமாய் விதித்து இருப்பதால், அவ்விதம் ஸ்ம்ருதி கஜச்சாயையைப் பார்வணாங்கமாய் விதித்து இருப்பதால், அந்தக் கஜச்சாயை அபராஹ்ணத்தில் இருக்கிறது என்ற காரணத்தால் அபராஹ்ணத்தில் ஆதரவு'' என்பதாம்.

तदुक्तं भरद्वाजेन — वनस्पतिगते सोमे याच्छाया पूर्वतोमुखी। गजच्छाया हि सा प्रोक्ता पितृणां दत्तमक्षयम् इति। स्मृत्यन्तरेऽपि — द्विगुणा याऽऽत्मनश्छाया दर्शे स्यादापराह्णिकी। गजच्छाया हि सा प्रोक्ता पितृणां तृप्तिकारिणी इति। देवलः — पूर्वाह्णे दैविकं कर्म ह्यपराह्णे तु पैतृकम्। एकोद्दिष्टं तु मध्याह्ने प्रातर्वृद्धिनिमित्तकम् इति।

அது சொல்லப்பட்டு உள்ளது, பரத்வாஜரால்:— 'சந்த்ரன் வனஸ்பதிகளில் (அமையில்) இருக்கும் போது எந்த நிழல் கிழக்கு நோக்கி உள்ளதோ, அது 'கஜச்சாயா' எனப்பட்டுள்ளது. அக்காலத்தில் பித்ருக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது குறைவற்றது ஆகும்' என்று. மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— அமாவாஸ்யையில் அபராஹ்ணத்தில் எப்பொழுது தனது நிழல் இரண்டு பாகம் அளவு உள்ளதாய் உள்ளதோ, அக்காலம் கஜச்சாயை

எனப்படுகிறது. அது பித்ருக்களுக்கு த்ருப்தியை அளிக்கக் காரணம் ஆகும். தேவலர்:— பூர்வாஹ்ணத்தில் தேவ கார்யமும், அபராஹ்ணத்தில் பித்ருகார்யமும், மத்யாஹ்னத்தில் ஏகோத்திஷ்டமும், வ்ருத்தி நிமித்த ச்ராத்தம் (நாந்தீ) ப்ராத:காலத்திலும் செய்யப்பட வேண்டும்.

ननु सायाह्नव्यापिनः क्वचित् कर्मकालत्वं स्मर्यते दिनान्ते पञ्च नाड्यस्तु पुण्याः प्रोक्ता मनीषिभिः। उदये च तथा पित्र्ये दैवे चैव हि कर्मणि इति। मैवम्, यमेन प्रतिषिद्धत्वात्, सायाह्नस्त्रिमुहूर्तः स्यात् श्राद्धं तत्र न कारयेत्। राक्षसी तामसी वेला गर्हिता सर्वकर्मसु इति। तर्हि पञ्चनाडीवचनं निर्विषयं स्यादिति चेन्न, केनापि निमित्तेन अपराह्णासम्भवे गौणकालस्याभ्यनुज्ञापरत्वात्। अत एव व्यासः — स्वकालातिक्रमे कुर्याद्रात्रेः पूर्वं तथा विधिः इति।

ஸாயாஹ்ன வ்யாப்தி உள்ளதற்கும் ஓரிடத்தில் கர்ம காலத்வம் சொல்லப்படுகிறது:— 'பகலின் முடிவில் ஐந்து நாழிகைகள் புண்யங்கள் என்கின்றனர் வித்வான்கள். உதயத்திலும் அப்படியே, பித்ரு கர்மத்திலும், தைவ கர்மத்திலும், என்று ? எனில், அவ்விதம் சொல்லக்கூடாது, யமன்:— ''மூன்று முஹூர்த்தங்கள் கொண்டது ஸாயாஹ்னம். அதில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அது ராக்ஷஸீ, தாமஸீ, எக்கார்யங்களிலும் நிந்திக்கப்பட்டு உள்ளது'', என்று ப்ரதிஷேதித்து இருக்கிறார், அப்பொழுது ஐந்து நாழிகைகளை விதிக்கும் வசனம் அவகாசம் அற்றதாகுமே ? எனில் அவ்விதம் அல்ல. எக்காரணத்தாலாவது அபராஹ்ணம் ஸம்பவிக்காவிடில், கௌணகாலத்தை விதிப்பதில் தாத்பர்யம் உள்ளது ஆகின்றது என்பதால். ஆகையால் தான், வ்யாஸர்:— 'விஹிதகாலம் அதிக்ரமித்துவிட்டால் ராத்ரிக்கு முன் செய்யவும். அவ்விதம் விதி உள்ளது' என்றார்.

व्याघ्रपादोऽपि — विधिज्ञः श्रद्धयोपेतः सम्यक्पात्रे नियोजकः। रात्रेरन्यत्र कुर्वाणः श्रेयः प्राप्नोत्यनुत्तमम् इति। ननु, सायाह्नेऽपि यदा कथञ्चित् प्रत्यूहः तदा किं श्राद्धस्य लोप एव, किं वा रात्रावपि कर्तुं शक्यते? तत्र लोप एवेति तावत् प्राप्तम्। कुतः? मुख्यकालगौणकालत्वयोरुभयोरपि निषेधात्।

வ்யாக்ரபாதரும்:— விதியை அறிந்தவனும், ச்ரத்தையுடன் கூடியவனும், யோக்யனிடத்தில் நன்கு கொடுப்பவனுமாய் உள்ளவன், ராத்ரியைத் தவிர்த்த காலத்தில் (ச்ராத்தத்தை) செய்தால், சிறந்த நன்மையை அடைவான். ஸாயாஹ்னத்திலும் எவ்விதத்தாலோ விக்னம் ஏற்பட்டால், அப்பொழுது ச்ராத்தத்திற்கு லோபமே தானோ? அல்லது ராத்ரியிலும் செய்யக்கூடுமோ எனில், அவ்விஷயத்தில் லோபமே தான் என்பது ப்ராப்தமாகியது. ஏன்? முக்ய காலத்வம், கௌண காலத்வம் என்ற இரண்டும் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால்.

मुख्यकालत्वं प्रतिषेधति मनुः — रात्रौ श्राद्धं न कुर्वीत राक्षसी कीर्तिताहि सा। सन्ध्ययोरुभयोश्चैव सूर्ये चैवाचिरोदिते इति। न चैवं सति ग्रहणश्राद्धमपि तत्र निषिध्यत इति शङ्कनीयम्, शातातपेन विशेषितत्वात्, रात्रौ श्राद्धं न कुर्वीत राहोरन्यत्र दर्शनात्। सूर्योदयमुहूर्ते च सन्ध्ययोरुभयोस्तथा इति। गौणकालत्वमपि व्यासव्याघ्रपादाभ्यां पर्युदस्तं रात्रेः पूर्वम् रात्रेरन्यत्र इति ताभ्यामुक्तत्वात्। तस्मादह्नि श्राद्धासम्भवे लोप एवेति प्राप्ते ब्रूमः।

முக்கிய காலத்வத்தை தடைசெய்கிறார் மனு:— 'ராத்ரியில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அது ராக்ஷஸரின் உடையது என்று சொல்லப்பட்டு உள்ளது அல்லவா. இரண்டு ஸந்த்யாகாலங்களிலும், ஸூர்யன் உதித்த ஸமீப

காலத்திலும் கூடாது' என்று. இவ்விதம் இருக்க, க்ரஹண ச்ராத்தமும் அப்பொழுது நிஷேதிக்கப்படுகிறது என்று சங்கிக்கக் கூடாது. சாதாதபர் விசேஷித்து இருப்பதால்:— 'ராத்ரியில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. க்ரஹணம் தவிர்த்து. ஸூர்யோதய முஹூர்த்தத்திலும், இரண்டு ஸந்த்யைகளிலும் அப்படியே' என்று. கௌண காலத்வமும், வ்யாஸர், வ்யாக்ரபாதர் இவர்களால் பர்யுதாஸம் செய்யப்பட்டு உள்ளது, 'ராத்ரே: பூர்வம், ராத்ரேரந்யத்ர' என்று அவர்களால் சொல்லப்பட்டு இருப்பதால். ஆகையால் பகலில் ச்ராத்தம் செய்வது ஸம்பவிக்காவிடில் லோபமே, என்ற நிலையில் சொல்லுகிறோம்.

न तावद्रात्रि श्राद्धस्य सर्वात्मना निषेधो वक्तुं शक्यः । आपस्तम्बेन रात्रौ श्राद्धसमाप्त्यभ्युपगमात्, न च नक्तं श्राद्धं कुर्वीतारब्धे चाभोजनमापरिसमापनात् इति । ननु सन्ध्यासमीपे प्रारब्धस्य रात्रौ समाप्तिः प्रसक्ता । तादृशस्तु प्रारम्भः स्कन्देन निषिद्धः, उपसन्ध्यं न कुर्वीत पितृपूजां कथञ्चन । स काल आसुरः प्रोक्तः श्राद्धं तत्र विवर्जयेत् इति । मैवं सन्ध्यासमीपस्य मुख्यकालत्वनिषेधात्। गौणकालत्वं तु पूर्वमभिहितम्। तत्र प्रारब्धस्य रात्रौ समाप्तिः सम्भाव्यते। नन्वेवमपि रात्रौ समाप्तिरेवाभ्यनुज्ञायते, न त्वारम्भ इति चेत्, मैवम्, आरम्भस्यापि समाप्त्या उपलक्षणीयत्वात्, आब्दिकश्राद्धपरित्यागे प्रत्यवाय बाहुल्यस्मरणात्।

ராத்ரி ச்ராத்தத்திற்கு முழுவதும் நிஷேதம் சொல்ல முடியாதது. ஆபஸ்தம்பர் ராத்ரியில் ச்ராத்த ஸமாப்தியை 'ராத்ரியில் ச்ராத்தம் செய்யக் கூடாது. பகலில் ச்ராத்தத்தை ஆரம்பித்தால் ராத்ரியில் முடிக்கலாம். கர்த்தா புஜிக்கக் கூடாது' என்று ஒப்புக் கொள்கிறார். ஸந்த்யா ஸமீப காலத்தில் ஆரம்பிக்கப்பட்டதற்கு ராத்ரியில் ஸமாப்தி

ப்ரஸக்தம் ஆகிறது. அவ்விதமாகிய ஆரம்பமோ வெனில் ஸ்கந்தரால் நிஷேதிக்கப்பட்டு உள்ளது:— 'ஸந்த்யாஸமீப காலத்தில் பித்ரு பூஜையை எவ்விதத்தாலும் செய்யக் கூடாது. அக்காலம் ஆஸுரம் எனச் சொல்லப்பட்டு உள்ளது. அதில் ச்ராத்தத்தை வர்ஜிக்கவும்' என்று, எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. ஸந்த்யாஸமீப காலத்திற்கு முக்ய காலத்வத்தை நிஷேதிப்பதால். கௌணகாலத்வமோ வெனில் முன்பே சொல்லப் பட்டுள்ளது. அதில் ஆரம்பிக்கப்பட்டதற்கு ராத்ரியில் ஸமாப்தி ஊஹிக்கப்படுகிறது. 'இவ்விதமாயினும் ராத்ரியில் ஸமாப்தி தான் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆரம்பம் ஒப்புக் கொள்ளப்படவில்லையே' எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. ஸமாப்தி என்பதனுல் ஆரம்பமும் சொல்லப்படுவதால். ஆப்திகத்தைச் செய்யாவிடில் ப்ரத்யவாயம் அதிகம் என்று ஸ்ம்ருதி இருப்பதால்,

तथा जाबालिः — रात्रावपि च शंसन्ति श्राद्धं केचन सूरयः। पितॄणां दिनभागित्वात् त्यागे दोष इति स्मृतिः इति। देवलश्च — पितृकर्माणि सर्वाणि प्रेतकर्माणि यानि च। रात्रावपि च कर्तव्यान्यत्र भुक्त्यादि नाचरेत् इति। मनुस्तु — पितॄणां तु दिवाभावे यदि रात्रावपीरितम्। पैतृकं कर्म मुनिभिर्ग्राह्यमेतच्च सङ्कटे। श्राद्धकर्म निशाकाले कर्तव्यं मनुजैर्भुवि। मध्यपिण्डाशनं पत्न्याः स्वभुक्तिं च न कारयेत् इति।

ஜாபாலி:— ராத்ரியிலும் ச்ராத்தத்தைச் செய்யலாம் என்கின்றனர் சில வித்வான்கள். அஹோராத்ரம் முழுவதும் பித்ருக்கள் உடையதால். ச்ராத்த த்யாகத்தில் தோஷம் உண்டென்று ஸ்ம்ருதி உள்ளது. தேவலரும்:— எல்லாப் பித்ரு கர்மங்களும், ப்ரேத கர்மங்களும், ராத்ரியிலும் செய்யப்படலாம். ராத்ரியில் போஜநம் முதலியதைச்

செய்யக் கூடாது. மனுவானல்:— பித்ருக்களுக்குப் பகலில் செய்ய முடியாவிடில், ராத்ரியிலும் செய்யலாம். ஆனல் இது ஸங்கட விஷயத்தில் க்ரஹிக்கத் தகுந்தது. மனிதர் ராத்ரி காலத்தில் ச்ராத்தத்தைச் செய்யலாம். பத்னி மத்யம பிண்டத்தை ப்ராசனம் செய்யக் கூடாது. கர்த்தாவும் போஜனம் செய்யக்கூடது.

स्मृत्यन्तरेऽपि — यथा कथं चित् कर्तव्यं नित्यं कर्म विजानता । न प्राप्तस्य विलोपोऽस्ति पैतृकस्य विशेषतः इति । अन्यत्रापि — दिवोदितानि कर्माणि प्रमादादकृतानि वै । यामिन्याः प्रथमे यामे तानि सर्वाणि कारयेत् इति । दिवाश्राद्धक्रियाया असम्भवे रात्रावारम्भसमापने कार्ये इति कालनिर्णयकृन्मतम् । अन्ये तु रात्रि श्राद्धवचनानि सर्वाणि दिवाऽऽरब्धविषयाणि, आपस्तम्बे न रात्रिश्राद्धं प्रतिषिध्य तत्समापनमात्रस्य विधानात् इत्याहुः ।

ஓர் ஸ்ம்ருதியில்:— நித்ய கர்மத்தை எப்படியாவது அறிந்தவன் செய்ய வேண்டும். விஹிதகர்மத்திற்கு லோபம் என்பது கூடாது. பித்ர்ய கர்மத்திற்கு லோபம் கூடவே கூடாது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— பகலில் விதிக்கப்பட்டுள்ள கர்மங்கள் கவனம் இன்மையால் பகலில் செய்யப்படாவிடில், அவைகள் எல்லாவற்றையும் இரவின் முதல் யாமத்தில் செய்யவும். பகலில் ச்ராத்தம் செய்வது ஸம்பவிக்காவிடில், ராத்ரியில் ஆரம்பம் ஸமாபனம் இவைகளைச் செய்யலாம் என்பது காலநிர்ணயகாரரின் மதம். சிலரோவெனில் 'ராத்ரி ச்ராத்த விதி வசனங்கள் எல்லாம் பகலில் ஆரம்பித்ததைப் பற்றியவை. ஆபஸ்தம்பரால் ராத்ரி ச்ராத்தத்தை நிஷேதித்து அதை முடிக்கலாம் என்பது மட்டில் விதிக்கப்பட்டு இருப்பதால்' என்கின்றனர்.

अपरे तु — सन्ध्यारात्र्योर्न कर्तव्यं श्राद्धं खलु विचक्षणैः इत्यादिभिः रात्रिश्राद्धमात्रस्य निषेधात् दिवारब्धस्यापि श्राद्धस्य रात्रौ समापनं नास्ति, अपरेद्युर्दिवैव श्राद्धशेषकरणम् इति वदन्ति। तथैवापस्तम्बवचनं हरदत्तेनान्यथा व्याख्यातम् — न च नक्तं श्राद्धं कुर्वीत। श्राद्धकर्मण्यारब्धे करणविलम्बेन मध्ये यद्यादित्योऽस्तमियात्तदा श्राद्धशेषं न कुर्वीत, अपरेद्युर्दिवैव कुर्वीत इति। आरब्धे चाभोजनमापरिसमापनादन्यत्र राहुदर्शनात् इति तद्वचनमपि तेन व्याख्यातम्, पूर्वेद्युर्निवेदन प्रभृति आपिण्डनिधानात् मध्ये कर्तुः भोजननिषेधः। अन्यत्र राहुदर्शनात् इति, न च नक्तमित्यस्याप वादः राहुदर्शने नक्तमपि कुर्वीत इति।

மற்றவரோவெனில், அறிந்தவர்கள் ஸந்த்யையிலும் ராத்ரியிலும் ச்ராத்தத்தைச் செய்யக்கூடாது என்பது முதலிய வசனங்களால் ராத்ரியில் ச்ராத்தம் எல்லாவற்றையும் நிஷேதித்து இருப்பதால் ராத்ரியில் ச்ராத்தத்திற்கு ஸமாபநம் இல்லை. மறுநாள் பகலிலேயே ச்ராத்த சேஷத்திற்கு ஸமாபநம் என்கின்றனர். அவ்விதமே ஆபஸ்தம்ப வசனம் ஹரதத்தரால் வேறு விதமாய் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது:— ராத்ரியில் ச்ராத்தம் செய்யக் கூடாது. ச்ராத்த கர்மம் ஆரம்பிக்கப்பட்ட பிறகு செய்வதில் விளம்பம் ஏற்பட்டு நடுவில் ஸூர்யன் அஸ்தமயத்தை அடைந்தால், அப்பொழுது ச்ராத்த சேஷத்தைச் செய்யக்கூடாது. மறுநாள் பகலிலேயே செய்ய வேண்டும்' என்று. 'ஆரப்தே+தர்சனுத்' என்ற வசனமும் அவரால் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது:— முதல் நாளில் ப்ராம்ஹணருக்குத் தெரிவித்தது முதல் பிண்ட ப்ரதானம் வரையில் நடுவில் போஜன நிஷேதம். 'அன்யத்ர ராஹுதர்சனுத்' என்பது, 'ந ச நக்தம்' என்பதற்கு அபவாதம். ராஹுதர்சனத்தில் ராத்ரியிலும் ச்ராத்தம் செய்ய வேண்டும்' என்று.

केचित्तु — श्राद्धविघ्ने समुत्पन्ने ह्यविज्ञाते मृतेऽहनि । एकादश्यां तु कर्तव्यं कृष्णपक्षे विधुक्षये इति मरीचिस्मरणात् दिवाश्राद्धारम्भासम्भवे तद्दिने श्राद्धप्रतिनिधीनामन्यतमं कृत्वा तन्मासि कृष्णैकादश्याममावास्यायां वा श्राद्धं कर्तव्यमित्याहुः । यथोचितमत्र ग्राह्यम् । ननु — रात्रेरन्यत्र कुर्वाणः श्रेयः प्राप्नोत्यनुत्तमम् इति स्मरणात् अपराह्णवन्मुख्यत्वेन वा सायाह्नवद्गौणत्वेन वा प्रातःसङ्गवावपि कर्मकालौ प्रसज्ज्येयाताम्। नायं दोषः, शिवराघवसंवादे प्रातःकालस्य निषिद्धत्वात्, प्रातः काले तु न श्राद्धं प्रकुर्वीत द्विजोत्तमः । नैमित्तिकेषु श्राद्धेषु न कालनियमः स्मृतः इति ।

சிலரோவெனில்:— 'ச்ராத்தத்திற்கு விக்னம் உண்டானாலும், ம்ருததினம் அறியப்படாவிடினும், க்ருஷ்ணபக்ஷத்தின் ஏகாதசியிலாவது, தர்சத்திலாவது செய்ய வேண்டும்' என்று மரீசி ஸ்ம்ருதி இருப்பதால், பகலில் ச்ராத்தம் செய்ய முடியாவிடில், அன்று ச்ராத்த ப்ரதிநிதிகளுள் ஒன்றைச் செய்து, அந்த மாஸத்தில் க்ருஷ்ண ஏகாதசியிலாவது, அமையிலாவது ச்ராத்தம் செய்ய வேண்டும் என்கின்றனர். இவ்விஷயத்தில் உசிதமாகியதை க்ரஹிக்கவும். 'ராத்ரியைத் தவிர்த்த மற்ற காலத்தில் செய்பவன் சிறந்த ச்ரேயஸ்ஸை அடைவான்' என்ற ஸ்ம்ருதியினால், 'அபராஹ்ணம் போல் முக்யமாயாவது, ஸாயாஹ்னம் போல் கௌணமாயாவது ப்ராத:காலமும் ஸங்கவ காலமும் கர்மகாலமாய் வரக்கூடுமே' எனில், இது தோஷமல்ல. சிவராகவ ஸம்வாதத்தில் ப்ராத:காலம் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால்:—'ப்ராம்ஹணன் ப்ராத:காலத்தில் ச்ராத்தம் செய்யக் கூடாது. நைமித்திக ச்ராத்தங்களில் காலநியமம் சொல்லப்படவில்லை' என்று.

यद्यपि सङ्गवो न साक्षान्निषिद्धः, तथाऽपि कुतपमुहूर्ते मुख्योपक्रमस्य गान्धर्वमुहूर्ते गौणोपक्रमस्य चाभिधाने सति अर्थान्निषेधः परिशिष्यते, तथा शिवराघवसंवाद एव ग्रहणादिव्यतिरिक्तस्य प्रक्रमे कुतपः स्मृतः । कुतपादथ वाऽप्यर्वाक् भासनं कुतपो भवेत् इति । ग्रहः - ग्रहणम् । आदिशब्देन सङ्क्रान्त्यादिनिमित्तमुच्यते, इतरस्य तु सांवत्सरिकादेरस्ति कुतपनियमः, स च मुख्य उपक्रमकालः, कदाचित् कार्यवशात् श्राद्धस्य सहसा करणीयत्वे सति कुतपादर्वाचीनो गान्धर्वोऽप्युपक्रमकालतयाऽभ्यनुज्ञायते, कुतपस्य मुख्यत्व मनेकवचनविहितत्वादवगन्तव्यम् । तत्र कुतपस्वरूपं भविष्यत्पुराणेऽभिहितम् — प्रविश्य भानुः स्वां छायां शङ्कुर्वद्यत्र तिष्ठति । स कालः कुतपो नाम मन्दीभूतस्य संज्ञया इति ।

எப்படியும் ஸங்கவகாலம் நேராய் நிஷேதிக்கப்படவில்லை. அப்படியாயினும் குதபமுஹூர்த்தத்தில் முக்யமாகிய ஆரம்பத்தையும், காந்தர்வ முஹூர்த்தத்தில் கௌணமாகிய ஆரம்பத்தையும் சொல்லி இருக்கும் பொழுது, அர்த்தத்தால் நிஷேதம் மீதியாகின்றது. அவ்விதம் சிவராகவ ஸம்வாதத்திலேயே 'க்ரஹணம் முதலியதைத் தவிர்த்த ச்ராத்தத்தின் ஆரம்பத்தில் குதபம் விதிக்கப்பட்டு உள்ளது. அல்லது, குதபத்திற்கு முன் உள்ளதும் குதபம் ஆகும்' என்று உள்ளது. ஆதிசப்தத்தால் ஸங்க்ராந்தி முதலிய நிமித்த ச்ராத்தம் சொல்லப்படுகிறது. அது நிமித்தத்திற்கு அதீனம் ஆகியதால் குதபநியமம் சொல்ல முடியாது. மற்ற ஸாம்வத்ஸரிக ச்ராத்தம் முதலியதற்குக் குதப நியமம் உண்டு. அது ஆரம்ப முக்ய காலம். ஒரு காலத்தில் கார்ய வசத்தால் ச்ராத்தத்தைச் சீக்ரமாய்ச் செய்ய வேண்டியது ஆனால் குதபத்திற்கு முந்திய காந்தர்வ

முஹூர்த்தமும் உபக்ரமகாலமாய் அனுஜ்ஞை செய்யப்படுகிறது. குதபத்திற்கு முக்யத் தன்மை அநேக வசனங்களால் விதிக்கப்பட்டு இருப்பதால் அறியத்தக்கது. அவ்விஷயத்தில் குதபத்தின் ஸ்வரூபம் பவிஷ்யத் புராணத்தில் சொல்லப்பட்டு உள்ளது:— 'எக்காலத்தில் ஸூர்யன் தனது நிழலை அடைந்து முளை போல் (நேராக) இருக்கின்றானோ, அக்காலம் குதபம் எனப்படுகிறது, பெயரளவில் மந்தமாய் உள்ளவன்' என்று.

नारदः — सन्त्यज्य सप्तमं भागमष्टमं क्रमते यदा। स कालः कुतपो ज्ञेयो मन्दीभूतस्य संज्ञया इति। आपस्तम्बः – सप्तमात् परतो यस्तु नवमात् पूर्वतः स्थितः। उभयोरपि मध्यस्थः कुतपः स उदाहृतः इति। स च कुतपो मुख्यत्वाद्वायुपुराणे प्रशस्यते — दिवसस्याष्टमे भागे मन्दीभवति भास्करः। स कालः कुतपो नाम पितॄणां दत्तमक्षयम् इति। कुतपात् पूर्वोत्तरयोर्गान्धर्वरौहिणयोर्गौणोपक्रमकालत्वं सूचयितुं छत्रिन्यायेन मुहूर्तत्रयं कुतपशब्देन व्याजहार नारदः— मध्याह्ने त्रिमुहूर्तं तु यदा चलति भास्करः। स कालः कुतपो नाम पितॄणां दत्तमक्षयम् इति। कुतपे प्रक्रान्तस्य सायाह्नादर्वाचीनः सर्वोऽपि मुख्यकालः।

நாரதர்:— ஸூர்யன் எப்பொழுது ஏழாவது பாகத்தை விட்டு எட்டாவது பாகத்தை அடைகின்றானோ, அக்காலம் குதபம் எனப்படும். அது மந்தமாய் உள்ளவனின்பெயர். ஆபஸ்தம்பர்:— ஏழாவது முஹூர்த்தத்திற்குப் பிந்தியதும், ஒன்பதாவது முஹூர்த்தத்திற்கு முந்தியதுமாகிய காலம் குதபம் எனப்பட்டுள்ளது. அந்தக் குதபகாலம் முக்யமாகியதால் வாயு புராணத்தில் ஸ்துதிக்கப்படுகிறது:— 'பகலின் எட்டாவது பாகத்தில் ஸூர்யன் மந்தனாய் ஆகிறான். அக்காலம் குதபம் எனப்படுகிறது. அக்காலத்தில் பித்ருக்களுக்குக்

கொடுக்கப்பட்டது அக்ஷயம் ஆகும்' என்று. குதபத்திற்கு முந்தியதும், பிந்தியதுமாகிய காந்தர்வ ரௌஹிணங்களுக்குக் கௌணோபக்ரம காலத் தன்மையை ஸூசிப்பதற்குச் சத்ரிந்யாயத்தால் மூன்று முஹூர்த்தங்களையும் குதப சப்தத்தால் சொன்னார் நாரதர்:— 'மத்யாஹ்னத்தில் மூன்று முஹூர்த்தங்களில் ஸூர்யன் செல்லும் காலம் குதபம் எனப்படுகிறது. அக்காலத்தில் பித்ருக்களுக்குக் கொடுக்கப்பட்டது அக்ஷயம் ஆகும்' என்று. (குடை இல்லாதவர்களும் குடை உள்ளவர்களும் சேர்ந்துள்ள கூட்டத்தைக் குடையுள்ளவர்கள் என்று சொல்வது சத்ரி ந்யாயம்.) குதபத்தில் ஆரம்பிக்கப்பட்டதற்கு, ஸாயாஹ்னத்திற்கு முன் உள்ள காலமெலாம் முக்ய காலம். அது சொல்லப்பட்டுள்ளது.

तदुक्तं मत्स्यपुराणे — अह्नो मुहूर्ता विख्याता दश पञ्च च सर्वदा। तत्राष्टमो मुहूर्तो यः स कालः कुतपः स्मृतः। अष्टमे भास्करो यस्मान्मन्दीभवति सर्वदा । तस्मादनन्तफलदस्तत्रारम्भो विशिष्यते । ऊर्ध्वं मुहूर्तात् कुतपाद्यन्मुहूर्तचतुष्टयम्। मुहूर्तपञ्चकं ह्येतत् स्वधाभवनमिष्यते इति।

மத்ஸ்யபுராணத்தில்:— பகலின் முஹூர்த்தங்கள் பதினைந்து என்று ப்ரஸித்தங்கள். அவைகளுள் எட்டாவது முஹூர்த்தம் எதுவோ அக்காலம் குதபம் எனப்படுகிறது. எட்டாவது முஹூர்த்தத்தில் எப்பொழுதும் ஸூர்யன் மந்தனாய் ஆகிறான். ஆகையால் அதில் ஆரம்பம் அழிவற்ற பலனைக் கொடுப்பது ஆகும் என்று ச்லாகிக்கப்படுகிறது. குதபத்திற்கு மேல் உள்ள நான்கு முஹூர்த்தங்களும் குதபமும் ஆக ஐந்து முஹூர்த்தங்களும் ச்ராத்தார்ஹம் எனப்படுகிறது.

ननु अपराह्णस्यान्तिमो भागो निषिद्धः । तथा च यमः — चतुर्थे प्रहरे प्राप्ते यत् श्राद्धं कुरुते नरः । आसुरं तद्भवेत् श्राद्धं दाता च नरकं व्रजेदिति । स्मृत्यन्तरेऽपि — चतुर्थे प्रहरे प्राप्ते यत् श्राद्धं कुरुते द्विजः । तदन्नं राक्षसो भुङ्क्ते निराशाः पितरो गताः इति । अपराह्णस्यान्तिमेन पादन्यूनमुहूर्तेन सह सायाह्नश्चतुर्थप्रहरो भवतीति चेत्, सत्यम्, तत्र सायाह्नभागकटाक्षेणायं निषेधः, नत्वपराह्णभागकटाक्षेण । तामेतां विवक्षां विशदीकर्तुं यमो वचनान्तरेण सायाह्नं निराचकार - सायाह्नस्त्रिमुहूर्तः स्यात् श्राद्धं तत्र न कारयेत् इति ।

'அபராஹ்ணத்தின் முடிவுப் பாகம் நிஷேதிக்கப்பட்டு இருக்கிறது. அவ்விதம், **யமன்**:— 'நான்காவது யாமம் ப்ராப்தமாய் இருக்க மனிதன் எந்த ச்ராத்தத்தைச் செய்கின்றானோ அது அஸுரர்களைச் சேர்ந்தது ஆகும். செய்பவனும் நரகத்தை அடைவான்' என்றார். ஓர் **ஸ்ம்ருதியிலும்**:— 'நான்காவது யாமம் வந்திருக்க எந்த ச்ராத்தத்தைச் செய்கின்றானோ அதனது அன்னத்தை ராக்ஷஸன் புஜிப்பான், பித்ருக்கள் ஆசை அற்றுப் போவார்கள்' என்று உள்ளது. 'அபராஹ்ணத்தின் முக்கால் முஹூர்த்தத்துடன் சேர்ந்துள்ள ஸாயாஹ்னம் நான்காவது யாமம் ஆகின்றது' எனில், இது உண்மை. அதில், ஸாயாஹ்னபாகத்தில் த்ருஷ்டியால் இந்த நிஷேதம், அபராஹ்ணபாக த்ருஷ்டியால் அல்ல. சொல்லிய இந்த விவக்ஷையை ஸ்பஷ்டமாக்குவதற்கு, யமன் மற்றொரு வசனத்தால் ஸாயாஹ்னத்தை நிராகரித்தார்:— 'ஸாயாஹ்னம் மூன்று முஹூர்த்தம் கொண்டது. அதில் ச்ராத்தம் செய்யக் கூடாது' என்று.

ननु अपराह्णस्य मुख्यकालत्वं च प्रतिनियतम्, शुक्लपक्षे व्यभिचारात् । तथा च मार्कण्डेयः — शुक्लपक्षे तु पूर्वाह्णे श्राद्धं

कुर्याद्विचक्षणः । कृष्णपक्षेऽपराह्णे तु रौहिणं तु न लङ्घयेत् इति । नैष दोषः, अत्र शुक्लपक्षकृष्णपक्षयोर्दैवपित्र्यपरत्वात्, देवानुद्दिश्य क्रियमाणं श्राद्धं दैवम्, तत्तु फलकामिन उत्साहहेतुतया चित्तप्रसादं जनयतीति शुक्लशब्देनाभिधीयते, पित्र्यं तु पितृमरणादिस्मारकतया चित्तकालुष्यं जनयतीति कृष्णशब्देनाभिधीयते, शुक्लस्य दैवस्य कर्मणः पक्षः शुक्लपक्षः, यदा दैवं श्राद्धं करिष्यामीति बुद्धिस्तदैवेत्यर्थः, एवमितरत्रापि योजनीयम् । एवं च सत्यपराह्णे न पार्वण श्राद्धं व्यभिचरति । रौहिणं तु न लङ्घयेदित्येकोद्दिष्ट विषयम् । यद्यापातप्रतीत एवार्थो वचनस्य परिगृह्यते, तदा पूर्वोदाहृतं वचनजातं निखिलमपि व्याकुलीभवेत् इति कालनिर्णये व्याख्यातम् ।

அபராஹ்ணத்திற்கு ச்ராத்த காலத்வம் என்பதும் நியதம் அல்ல. சுக்ல பக்ஷத்தில் மாறுவதால். அவ்விதமே, மார்க்கண்டேயர்:- 'சுக்ல பக்ஷத்திலானுல் பூர்வாஹ்ணத்தில் அறிந்தவன் ச்ராத்தம் செய்ய வேண்டும். க்ருஷ்ண பக்ஷத்தில் ஆனுல் அபராஹ்ணத்தில் செய்யவும். ரௌஹிணத்தைத் தாண்டக்கூடாது' என்றுர், எனில், இது தோஷமல்ல. இவ்விடத்தில், சுக்ல பக்ஷ க்ருஷ்ண பக்ஷ சப்தங்கள் தைவகர்மத்தையும், பிதர்யகர்மத்தையும் சொல்வதில் தாத்பர்யம் உள்ளதாகியதால், தேவர்களைக் குறித்துச் செய்யப்படும் ச்ராத்தம் தைவம், அது பலனை விரும்பியவனுக்கு உத்ஸாஹ காரணம் ஆகியதால் மனதிற்குத் தெளிவை உண்டாக்குகின்றது என்பதால் சுக்ல சப்தத்தால் சொல்லப்படுகிறது. பித்ர்ய சப்தமோ வெனில் பித்ரு மரணம் முதலியதை ஸ்மரிக்கச் செய்வதால் மனதிற்குக் கலக்கத்தைச் செய்கின்றது என்பதால் க்ருஷ்ண சப்தத்தால் சொல்லப்படுகிறது. சுக்லத்தின் - தைவ கர்மத்தின், பக்ஷம் சுக்ல பக்ஷம். எப்பொழுது தேவர்களைப் பற்றிய ச்ராத்தத்தைச் செய்யப் போகிறேன் என்ற புத்தி உண்டாகின்றதோ அப்பொழுதே என்பது பொருள்.

இவ்விதம் மற்றதிலும் சேர்க்க வேண்டும். இவ்விதம் இருக்கும் பொழுது அபராஹ்ணத்தில் பார்வண ச்ராத்தம் என்பது வ்யபிசரிப்பது இல்லை. 'ரௌஹிணம் து நலங்கயேத்' என்பது ஏகோத்திஷ்டத்தைப் பற்றியது. இவ்விதம் இன்றி மேலாகத் தோன்றும் அர்த்தமே வசனத்திற்கு என்று க்ரஹித்தால், முன் சொல்லிய வசனங்கள் எல்லாம் வ்யாகுலங்களாய் ஆகும் என்று கால நிர்ணயத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டு உள்ளது.

अन्ये त्वाहुः — मार्कण्डेयवचनमिदं युगादिश्राद्धविषयम्। तदाह बृहस्पतिः। द्वौ शुक्लौ द्वौ तथा कृष्णौ युगादीन् मुनयो विदुः। शुक्ले पौर्वाह्णिकी ग्राह्या कृष्णे चैवापराह्णिकी इति। तस्माद्युगादिश्राद्धं पूर्वपक्षे विहितं पूर्वाह्णे सङ्गवात्परं पञ्चदशनाड्यभ्यन्तरे कुर्यात्, अपरपक्षे विहितमपराह्णे आवर्तनात्परं सार्धमुहूर्ताभ्यन्तरे कुर्यात्, रौहिणं तु न लङ्घयेदित्युक्तत्वात्। अनेनैव न्यायेन पूर्वपक्षविहितश्राद्धस्य सर्वस्यापि पूर्वाह्णे सार्धमुहूर्तः कालः इति।

மற்றவரோவெனில் இவ்விதம் சொல்லுகின்றனர்:— 'இந்த மார்க்கண்டேய வசனம் யுகாதி ச்ராத்தத்தைப் பற்றியது. அதைச் சொல்லுகிறார், ப்ருஹஸ்பதி:— 'யுகாதிகள் இரண்டு சுக்லபக்ஷத்திலும், இரண்டு க்ருஷ்ண பக்ஷத்திலும் என்கின்றனர் முனிவர்கள். சுக்ல பக்ஷத்தில் பூர்வாஹ்ணத்தில் உள்ள திதி க்ராஹ்யம் ஆகும். அபரபக்ஷத்தில் அபராஹ்ணத்தில் உள்ள திதி க்ராஹ்யம்' என்று. ஆகையால் பூர்வபக்ஷத்தில் விஹிதமான யுகாதி ச்ராத்தத்தை பூர்வாஹ்ணத்தில் ஸங்கவத்திற்குப் பிறகு, பதினைந்து நாழிகைக்குள் செய்ய வேண்டும். க்ருஷ்ண பக்ஷத்தில் விதிக்கப்பட்டதை அபராஹ்ணத்தில் ஆவர்த்தனத்திற்குப் பிறகு ஒன்றரை முஹூர்த்தத்திற்குள் செய்ய வேண்டும், 'ரௌஹிணத்தைத் தாண்டக்கூடாது' என்று இருப்பதால். இந்த ந்யாயத்தாலேயே சுக்ல

பக்ஷத்தில் விதிக்கப்பட்டுள்ள ச்ராத்தங்கள் எல்லாவற்றுக்கும் பூர்வாஹ்ணத்தில் ஒன்றரை முஹூர்த்தம் காலம்' என்று.

तदेवं पार्वणश्राद्धस्य ग्रहणादिश्राद्धवर्जितस्य अपराह्णः कर्मकालः, कुतपः प्रारम्भकाल इति स्थितम्। आब्दिकादौ किं पूर्वविद्धा तिथिर्ग्राह्या उतोत्तरविद्धेति विवक्षायां देवस्वामी ब्रूते — यस्मिन् काले यद्विहितं कर्मोपक्रमोपसंहारयुक्तं तस्मिन् काले तस्यां तिथौ, यस्मिन्नहनि संभावयितुं शक्यते तदुत्तरं पूर्वं वा ग्रहीतव्यम् इति। एवं च कुतपापराह्णोभयव्यापिनी तिथिर्ग्राह्येत्युक्तं भवति, यदा तदुभयव्यापिनी तिथिर्न सम्भवति, तदा केवलापराह्णव्यापिन्यपि ग्राह्या, पित्र्यर्थे चापराह्णिकी, अपराह्णः पितॄणां तु याऽपराह्णानुयायिनी इत्यादिस्मरणात्।

ஆகையால், இவ்விதம் க்ரஹண ச்ராத்தம் முதலியதைத் தவிர்த்த பார்வண ச்ராத்தத்திற்கு அபராஹ்ணம் கர்மகாலம், குதபம் ப்ராரம்ப காலம் என்பது நிலைத்தது. ஆப்திகம் முதலியதில் பூர்வவித்தமான திதி க்ரஹிக்கத் தகுந்ததா அல்லது உத்தரவித்த திதியா ? என்று விவக்ஷையில் சொல்லுகிறார், தேவஸ்வாமீ:— 'எந்தக் காலத்தில் எந்தக் கர்மம் உபக்ரமம் முடிவு இவைகளுடன் கூடியதாய் விதிக்கப்பட்டு உள்ளதோ, அக்காலத்தில் அந்தத் திதியில் எந்தத் தினத்தில் செய்ய முடியுமோ அந்தத் தினம் முந்தியது அல்லது பிந்தியதாய் இருந்தாலும் அதை க்ரஹிக்கவும்' என்று. இவ்விதம் இருப்பதால் குதபம் அபராஹ்ணம் இவ்விரண்டிலும் வ்யாபித்துள்ள திதியை க்ரஹிக்க வேண்டும் என்று சொல்லியதாய் ஆகின்றது. எப்பொழுது அவ்விரண்டிலும் வ்யாப்தியுள்ள திதி ஸம்பவிக்கவில்லையோ அப்பொழுது, அபராஹ்ணம் மட்டில் வ்யாப்தி உள்ளதையும் க்ரஹிக்க வேண்டும்.

'அபராஹ்ண வ்யாப்தி உள்ளது பித்ரு கார்யத்தில், அபராஹ்ணம் பித்ருக்களுக்கு, எந்தத் திதி அபராஹ்ணத்தை அனுஸரித்து உள்ளதோ' என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்கள் உள்ளன.

ननु केवलापराह्णव्याप्तिवत् केवलकुतपव्यापिन्यपि स्मृत्यन्तरे प्रतीयते - मध्याह्नव्यापिनी या स्यात् तिथिः पूर्वाऽपराऽपि वा। तत्र कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति । मैवम्, वचनान्तरसंवादेनास्यैकोद्दिष्टविषयत्वेनोपपत्तेः। अपराह्णव्याप्तिरप्येकोद्दिष्ट न्यायेन षोढा भिद्यते । तत्र पूर्वेद्युरेवापराह्णव्याप्तौ यथोक्तवचनेन, क्षयाहस्य तिथिर्विप्रा यदि खण्डतिथिर्भवेत् । व्याप्तापराह्णिकायां तु श्राद्धं कार्यं विजानता इति नारदवचनेन च सा ग्राह्या। अपरेद्युरेवापराह्णव्याप्तौ यथोक्तवचनात् प्रारम्भकालसम्भवाच्च प्रशस्ततरा॥

அபராஹ்ணம் மட்டில் வ்யாப்தி உள்ள திதியைப் போல் குதபம் மட்டில் வ்யாப்தியுள்ள திதியும் க்ராஹ்யம் என்று ஒர் ஸ்ம்ருதி உள்ளதே ? 'எந்தத் திதி மத்யாஹ்ன வ்யாப்தி உள்ளதோ, முந்தியதாயினும் பிந்தியதாயினும் அதில் கர்மங்களைச் செய்யவும், க்ஷயமும் வ்ருத்தியும் காரணம் அல்ல' என்று, எனில், இவ்விதம் சொல்லக் கூடாது. மற்ற வசனங்களைச் சேர்த்துப் பார்த்தால் இந்த வசனம் ஏகோத்திஷ்ட விஷயம் என்பதால் உபபன்னம் ஆகும். அபராஹ்ண வ்யாப்தியும் ஏகோத்திஷ்டத்தில் சொல்லிய ந்யாயப்படி ஆறு விதமாய்ப் பேதம் உள்ளதாகிறது. அவைகளுள், முதல் நாளிலேயே அபராஹ்ண வ்யாப்தி என்ற பேதத்தில், முன் சொல்லிய வசனத்தாலும், 'விப்ரர்களே ! ம்ருதாஹத்தின் திதி எப்பொழுது கண்ட திதியாய் ஆகுமோ அப்பொழுது, அபராஹ்ண வ்யாப்தியுள்ள திதியில் அறிந்தவன் ச்ராத்தம்

செய்ய வேண்டும்' என்ற நாரத வசனத்தாலும் அதை க்ரஹிக்க வேண்டும். மறுநாளில் மட்டில் அபராஹ்ண வ்யாப்தி என்ற பக்ஷத்தில் சொல்லிய வசனத்தாலும் ப்ராரம்ப காலத்தில் ஸம்பவிப்பதாலும் அது மிகவும் ச்லாக்யமாகியது.

उभयत्रापराह्णव्यापित्वे बोधायन आह — अपराह्णद्वयव्यापिन्यतीतस्य च या तिथिः । क्षये पूर्वा तु कर्तव्या वृद्धौ कार्या तथोत्तरा इति । अतीतस्य - मृतस्य । अत्र ग्राह्यतिथेर्वृद्धिक्षयाभ्यां न निर्णयः, किं तु तदुत्तरतिथि-वृद्धिक्षयाभ्याम् । कुतः? अपराह्णद्वयव्यापित्वाभिधानात् । पूर्वेद्युरामध्याह्नावसानं पूर्वतिथिः प्रवृत्ता, ततोऽपराह्णोपक्रममारभ्यापरेद्युरपराह्णावसानपर्यन्तत्वे सति मृताहतिथेर्द्व्यपराह्णव्यापित्वं भवति, तच्च त्रिमुहूर्तवृद्ध्या संपद्यते, न तु क्षयेण । तथा सति क्षये पूर्वा तु कर्तव्या इत्येतन्नोपपद्यते, उत्तरतिथिगतवृद्धि क्षयस्वीकारे त्विदं वचनमुपपद्यते । यदोत्तर तिथिस्सायाह्नं प्रविशति तदा तिथिवृद्धिः, तत्रापरेद्युरनुष्ठानं न्याय्यम्, कुतपमारभ्य त्वशेषमुख्यकालव्यापित्वात् । यदा उत्तरतिथि-रपराह्णेऽपक्षीयते तदा मृततिथिः पूर्वविद्धा कर्तव्या, उत्तरविद्धायास्तस्याः ज्योतिःशास्त्रप्रक्रियया अपराह्णव्यापित्वेऽपि पारिभाषिक्या स्मार्तप्रक्रियया तदव्यापित्वात् ।

இரண்டு நாட்களிலும் அபராஹ்ண வ்யாப்தி இருக்கும் பக்ஷத்தில் போதாயனர் சொல்லுகிறார்:— 'ம்ருதாஹ திதி இரண்டு நாட்களிலும் அபராஹ்ண வ்யாப்தி உள்ளதாகில், க்ஷயத்தில் முன் திதியையும், வ்ருத்தியில் பின் திதியையும் க்ரஹிக்கவும்' என்று. இவ்விஷயத்தில், க்ரஹிக்க வேண்டிய திதியின் வ்ருத்தி க்ஷயங்களால் நிர்ணயம் என்பது இல்லை. ஆனால், க்ராஹ்ய திதியின் மேல் உள்ள திதியின் வ்ருத்தி க்ஷயங்களால். ஏன் ? எனில்,

இரண்டு அபராஹ்ணங்களில் வ்யாபித்து இருப்பது என்பதைச் சொல்லி இருப்பதால். முதல் நாளில் மத்யாஹ்னம் முடியும் வரையில் முந்திய திதி. பிறகு அபராஹ்ணத்தின் ஆரம்பம் முதற்கொண்டு, மறுநாள் அபராஹ்ணம் முடியும் வரையில் இருந்தால் ச்ராத்தீய திதி இரண்டு அபராஹ்ணங்களிலும் வ்யாபித்துள்ளது என்பது ஸம்பவிக்கும். அதுவும் மூன்று முஹூர்த்தம் வ்ருத்தியினுல் ஏற்படும். க்ஷயத்தால் ஏற்படாது. அவ்விதம் இருக்க 'க்ஷயேபூர்வாது கர்த்தவ்யா' என்பது உபபன்னமாகாது. மேல் திதியில் உள்ள வ்ருத்தி க்ஷயங்களை ஸ்வீகரித்தாலோ வெனில் இந்த வசனம் உபபன்னமாகிறது. எப்பொழுது மேல் திதி ஸாயாஹ்னத்தில் ப்ரவேசிக்கின்றதோ அப்பொழுது திதி வ்ருத்தி. அவ்விஷயத்தில் மறுநாளில் அனுஷ்டிப்பது ந்யாயம் ஆகும். குதபம் முதற்கொண்டு முக்ய காலம் முழுவதிலும் வ்யாபித்து இருப்பதால். எப்பொழுது உத்தர திதி அபராஹ்ணத்தில் க்ஷயத்தை அடைகிறதோ, அப்பொழுது ச்ராத்த திதி பூர்வ வித்தையாய் உள்ளது க்ரஹிக்கத்தக்கது. உத்தர வித்தையான அத்திதிக்கு, ஜ்யோதிச் சாஸ்த்ரப்படி அபராஹ்ண வ்யாபித்வம் இருந்தாலும், பாரிபாஷிகமான ஸ்மார்த்த ப்ரக்ரியையால் அபராஹ்ண வ்யாப்தி இல்லை.

तथा च स्मर्यते — तिथ्यादौ तु भवेद्यावत् ह्रासो वृद्धिः परेऽहनि । तावान् ह्रासश्च पूर्वेद्युरदृष्टोऽपि स्वकर्मणि इति । तिथ्यादावित्यादिशब्देन नक्षत्रयोगौ गृह्येते, तिथिनक्षत्रयोगेषु क्षीयमाणेषु क्षयो यावद्धटिकापरिमितो भवति, तावद्धटिका-परिमितः क्षयस्तेभ्यः पूर्वेषु तिथिनक्षत्रयोगेषु ज्योतिः शास्त्रेणादृष्टोऽपि स्मार्तपारिभाषया ग्रहीतव्यः । एवं वृद्धिरपि द्रष्टव्या । तथा सति प्रकृते ह्युत्तरतिथेरपराह्णे यावान् क्षयः तावान् पूर्वेद्युर्ग्राह्यतिथौ योजनीयः ।

तथा सत्युत्तरविद्धा मृततिथिर्नापराह्णव्यापिनी, पूर्वविद्धा तु तद्व्यापिनीति सैव ग्रहीतव्या भवति । उत्तरतिथेस्साम्ये तु देवस्वामिवचनात् उत्तरविद्धैव ग्राह्येति निर्णयः ।

அவ்விதமே ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறது:— 'தித்யாதௌது + ஸ்வகர்மணி' என்று. இதன் பொருள் — 'தித்யாதௌ என்பதில் உள்ள ஆதி சப்தத்தால் நக்ஷத்ரம், யோகம் இவைகளும் க்ரஹிக்கப்படுகின்றன. திதி, நக்ஷத்ரம் யோகம் இவைகள் க்ஷயிக்கும் போது (குறையும் போது) க்ஷயம் எவ்வளவு நாழிகை அளவு உள்ளதோ, அவ்வளவு நாழிகை அளவு உள்ள க்ஷயம் அவைகளுக்கு முந்தி உள்ள திதி நக்ஷத்ர யோகங்களில், ஜ்யோதிச் சாஸ்த்ரத்தால் காணப்படாவிடினும் ஸ்மார்த்த பரிபாஷையால் க்ரஹிக்கப்பட வேண்டும். இவ்விதம் வ்ருத்தியும் அறியத் தக்கது' என்று. அவ்விதம் இருப்பதால், ப்ரக்ருதத்தில் உத்தர திதிக்கு அபராஹ்ணத்தில் எவ்வளவு க்ஷயமோ அவ்வளவு க்ஷயத்தை முதல் நாளில் க்ராஹ்ய திதியில் சேர்க்க வேண்டும். அவ்விதம் ஆனால் உத்தர வித்தமான ம்ருத திதி அபராஹ்ண வ்யாப்தி உள்ளதாய் ஆவது இல்லை. பூர்வவித்த திதியோ வெனில் அபராஹ்ண வ்யாப்தி உள்ளதாய் உள்ளது. ஆகையால் அதையே க்ரஹிக்க வேண்டும் என்றுகிறது. உத்தர திதி ஸமமாய் உள்ள விஷயத்திலோ வெனில் தேவஸ்வாமியின் வசனப்படி உத்தர வித்தையே க்ரஹிக்கத்தக்கது என்பது ஸித்தாந்தம்.

यदा दिनद्वयेऽप्यपराह्णस्पर्शाभावः तदा पूर्वविद्धा ग्राह्या । तदाह मनुः — न द्व्यहव्यापिनी चेत् स्यान्मृताहे तु यदा तिथिः । पूर्वविद्धैव कर्तव्या त्रिमुहूर्ता भवेद्यदि इति । सुमन्तुरपि — न द्व्यहव्यापिनी चेत् स्यान्मृताहस्य च या तिथिः । पूर्वस्यां निर्वपेत् पिण्डानित्याङ्गिर-सभाषितम् इति । नन्वपराह्णस्पर्शाभाव उभयोः समानः, प्रारम्भकाले

तु कुतपेऽपरेद्युस्तिथिसद्भावो विशिष्यते, तत्र परविद्धैव कुतो न ग्राह्येति चेत्, गुणाधिक्यात् पूर्वविद्धैव ग्राह्या। अपरेद्युः कुतपव्याप्तिरेको गुणः, पूर्वेद्युस्तिथिमूलसम्बन्धस्त्रिमुहूर्त-मस्तमयव्याप्तिश्चेति गुणद्वयम्।

எப்பொழுது 2-நாட்களிலும் அபராஹ்ண ஸம்பந்தம் இல்லையோ அப்பொழுது பூர்வ வித்தையை க்ரஹிக்கவும். அதைச் சொல்லுகிறார், மனு:— ச்ராத்த திதி எப்பொழுது 2-நாட்களிலும் வ்யாப்தியில்லாமல் உள்ளதோ அப்பொழுது பூர்வ வித்தையாய் உள்ளதையே க்ரஹிக்கவும், 3-முஹூர்த்தங்கள் உள்ளதாகில், ஸுமந்துவும்:— ச்ராத்த திதி 2-நாட்களிலும் வ்யாப்தி இல்லாமல் இருந்தால் முதல் திதியில் ச்ராத்தத்தைச் செய்யவும் என்பது ஆங்கிரஸ வசனம். அபராஹ்ண ஸ்பர்சம் இல்லை என்பது இரண்டிலும் ஸமானம். ஆரம்ப காலமாகிய குதபத்தில் மறுநாளில் திதி இருப்பது விசேஷம் ஆகியது. அப்படி இருக்க, பரவித்த திதியே ஏன் க்ராஹ்யம் ஆகாது ? எனில், குணம் அதிகமாய் உள்ளதால் பூர்வ வித்த திதியே க்ராஹ்யமாக வேண்டும். மறுநாளில் குதப வ்யாப்தி என்பது ஒரு குணம். முதல் நாளில் திதி மூல ஸம்பந்தம், மூன்று முஹூர்த்தம் அஸ்தமய வ்யாபித்வம் என்று 2-குணங்கள்.

तिथिमूलसम्बन्धस्य प्राशस्त्यं नारदीयपुराणे दर्शितम् — पित्र्ये मूलं तिथेः प्रोक्तं शास्त्रज्ञैः कालकोविदैः । तथैव दैवकार्येषु तिथेरन्त्यः प्रशस्यते इति। सौरपुराणेऽपि — मूलं हि पितृतृप्त्यर्थं तिथेरुक्तं महर्षिभिः इति। अस्तमयव्याप्तेः प्राशस्त्यमाह मनुः — यस्यामस्तं रविर्याति पितरस्तामुपासते । सा पितृभ्यो यतो दत्तो ह्यपराह्णः स्वयंभुवा इति । व्यासः — अह्न्यस्तमयवेलायां कलामात्राऽपि या तिथिः । सैव प्रत्याब्दिके श्राद्धे नेतरा पुत्रहानिदा इति।

திதி மூல ஸம்பந்தம் ப்ரசஸ்தம் என்பது சொல்லப்பட்டு உள்ளது நாரதீய புராணத்தில்:— 'பித்ரு கர்மத்தில் காலஜ்ஞர்களான சாஸ்த்ரஜ்ஞர்களால். திதியின் மூலம் (ஆதி) ப்ரசஸ்தம் எனப்படுகிறது. அவ்விதம் தைவ கார்யங்களில் திதியின் கடைசிப் பாகம் ச்லாகிக்கப்படுகிறது' என்று. ஸௌரபுராணத்திலும்:— திதியின் ஆதிபாகம் பித்ருக்களின் த்ருப்திக்காக உள்ளது என்று மஹர்ஷிகளால் சொல்லப்பட்டு உள்ளது. அஸ்தமய வ்யாப்திக்கு ப்ரசம்ஸையைச் சொல்லுகிறார், மனு:— எந்தத் திதியில் ஸூர்யன் அஸ்தத்தை அடைகின்றாரோ அந்தத் திதியை பித்ருக்கள் அடைகின்றனர். அந்தத் திதி பித்ருக்களுக்கு உரியதாகும். ப்ரம்ஹ தேவனால் அபராஹ்ணம் பித்ருக்களுக்குக் கொடுக்கப்பட்டு இருக்கிறது. வ்யாஸர்:— பகலில் அஸ்தமய வேளையில் எந்தத் திதி கலாமாத்ரமாவது இருக்கின்றதோ அதுவே ப்ரத்யாப்திக ச்ராத்தத்திற்கு உரியது மற்றது உரியதல்ல. புத்ரஹானியைக் கொடுக்கும்.

न चापराह्णवेलायामविद्यमानतया कर्मकालव्याप्तिरहिता-यास्तिथेरनुपादेयत्वं शङ्कनीयम्, आपाद्यायास्तद्व्याप्तेर्विद्यमान-त्वात् । अत एव वसिष्ठः — पित्र्येऽस्तमयवेलायां स्पृष्टा पूर्णा निगद्यते इति । नारदीयपुराणेऽपि — पा(र)र्वणे मरणे नृणां तिथिस्तात्कालिकी स्मृता। पित्र्येऽस्तमयवेलायां स्पृष्टा पूर्णा निगद्यते इति । सुमन्तुः — उदिते दैवतं भानौ पित्र्यं चास्तमिते रवौ । द्विमुहूर्तस्त्रिरह्नो या सा तिथिर्हव्यकव्ययोः इति । यथाक्रममुदये द्विमुहूर्ता तिथिर्दैवे कर्मणि ग्राह्या, सायं त्रिमुहूर्ता कव्ये ग्राह्येत्यर्थः ।

அபராஹ்ண வேளையில் இல்லாததால் கர்மகால வ்யாப்தி இல்லாத திதி க்ராஹ்யம் அல்ல என்று சங்கிக்க வேண்டாம். ஆபாத்யமான வ்யாப்தி இருப்பதால். ஆகையால் தான் வஸிஷ்டர்:— 'பித்ர்ய கார்ய விஷயத்தில்,

அஸ்தமய வேளையில் ஸ்பர்சம் இருந்தாலும் அத்திதி பூர்ணம் எனச் சொல்லப்படுகிறது' என்றார். நாரதீய புராணத்திலும்:— மனிதர்களுக்குப் பாரணத்திலும் மரணத்திலும் அக்கால வ்யாப்தி உள்ள திதி க்ராஹ்யம் ஆகும். பித்ரு கார்யத்தில், அஸ்தமய வேளையில் ஸம்பந்தம் உள்ள திதி பூர்ணை எனப்படுகிறது. ஸுமந்து:— ஸூர்யோதயத்திற்குப் பிறகு 2-முஹூர்த்த வ்யாப்தி உள்ள திதி தைவ கார்யத்தில் க்ராஹ்யம் ஆகும். ஸாயங்காலத்தில் 3-முஹூர்த்த வ்யாப்தி உள்ள திதி பித்ரு கார்யத்தில் க்ராஹ்யம் ஆகும்.

एवं च सति — दर्शं च पूर्णमासं च पितुः सांवत्सरं दिनम्। पूर्वविद्धमकुर्वाणो नरकं प्रतिपद्यते इति नारदवचनम्, यस्यामस्तं रविर्याति इत्यादि पूर्वोक्तमन्वादिवचनजातं च अपराह्णद्वयस्पर्शाभावे सायं त्रिमुहूर्तव्यापितिथिग्रहणपरं द्रष्टव्यम्। त्रिमुहूर्तव्यापित्वाभावे तु गोभिलः — त्रिमुहूर्ता न चेद्ग्राह्या परैव कुतपे हि सा। कुर्वीत कुतपे श्राद्धं सायाह्नव्यापिनी न चेत् इति।

இவ்விதம் இருப்பதால், 'தர்சம், பூர்ணமாஸம், பிதாவின் ச்ராத்த தினம் இவைகளில் பூர்வவித்த திதியை க்ரஹித்துச் செய்யாதவன் நரகத்தை அடைவான்' என்ற நாரத வசனமும், 'யஸ்யாமஸ்தம்ம ரவிர்யாதி' என்பது முதலிய முன் சொல்லப்பட்ட மன்வாதி வசனம் முதலியதும், 2-அபராஹ்ணங்களிலும் ஸ்பர்சம் இல்லாவிடில் ஸாயங்காலத்தில் 3-முஹூர்த்த வ்யாப்தி உள்ள திதியை க்ரஹிக்க வேண்டும் என்பதில் தாத்பர்யம் உள்ளதாகியது என்று அறியவும். 3-முஹூர்த்த வ்யாப்தி இல்லாவிடிலோ வெனில், கோபிலர்:— '3-முஹூர்த்த வ்யாப்தி இல்லாததாகில் பர திதியே க்ராஹ்யம் ஆகும். அது குதபத்தில் உள்ளது அல்லவா ? ஸாயாஹ்ன வ்யாப்தி

இல்லாவிடில் குதபத்தில் (உள்ள திதியில்) ச்ராத்தத்தைச் செய்யவும்' என்றார்.

यदा तु दिनद्वयेऽप्यपराह्णैकदेशव्यापिनी तदाऽपि वैषम्येण तद्व्याप्तौ महत्त्वेन निर्णेतव्यम्। तदाह मरीचिः — द्व्यपराह्णव्यापिनी चेदाब्दिकस्य यदा तिथिः। महतीं तत्र तद्विद्धां प्रशंसन्ति महर्षयः इति। साम्येन उभयत्र व्याप्तिश्च ग्राह्यतिथिगतैर्वृद्धिक्षयसाम्यैस्त्रिधा भिद्यते। तत्र गोभिलः — खर्वा दर्पा तता हिंस्रा त्रिविधं तिथिलक्षणम्। खर्वा दर्पा परा कार्या हिंस्रा स्यात् पूर्वकालिकी इति। खर्वा - वृद्धिक्षयरहिता अपराह्णद्वये समा, दर्पा - वृद्धिपक्षे अपराह्णद्वये समा, हिंस्रा - क्षय पक्षे अपराह्णद्वये समा इतीह विवक्षितोऽर्थः ॥

எப்பொழுது, 2-தினங்களிலும் அபராஹ்ணத்தின் ஏகதேசத்தில் வ்யாப்தி உள்ளதாய் உள்ளதோ அப்பொழுதும் வைஷம்யத்தால் வ்யாப்தியானால் அதிகம் உள்ளதை க்ரஹிக்கவும். அதைச் சொல்லுகிறார் மரீசி:— ச்ராத்த திதி 2-அபராஹ்ணங்களிலும் வ்யாப்தி உள்ளதானால் அதிக வ்யாப்தி உள்ள திதியை ச்லாகிக்கின்றனர் மஹர்ஷிகள். 2-நாட்களிலும் ஸமமாய் வ்யாப்தி இருந்தால், அது க்ராஹ்ய திதியைச் சேர்ந்த வ்ருத்தி, க்ஷயம், ஸாம்யம் இவைகளால் 3-ப்ரகாரமாய்ப் பேதத்தை அடைகின்றது. அவ்விஷயத்தில், கோபிலர்:— 'கர்வா, தர்ப்பா, ஹிம்ஸ்ரா என்று திதி மூன்று விதம் ஆகும். கர்வா, தர்ப்பா இவைகளில் பரதிதி க்ராஹ்யம் ஆகும். ஹிம்ஸ்ரை ஆனால் பூர்வ திதி க்ராஹ்யம் ஆகும். கர்வா - வ்ருத்தி, க்ஷயம், 2-ம் இல்லாமல் 2-அபராஹ்ணங்களிலும் ஸமமாய் உள்ளது. தர்ப்பா - வ்ருத்தி பக்ஷத்தில் 2-அபராஹ்ணங்களிலும் ஸமமாய் உள்ளது. ஹிம்ஸ்ரா - க்ஷயபக்ஷத்தில் 2-அபராஹ்ணங்களிலும் ஸமமாய் உள்ளது, என்பது இவ்விடத்தில் சொல்ல வேண்டிய அர்த்தம்.

उक्तं च कालनिर्णयसंग्रहे — कुतपाद्यपराह्णान्तव्याप्तिराब्दिक उत्तमा। तदभावेऽपराह्णस्य व्यापिका गृह्यतां तिथिः॥ क्षये पूर्वोत्तरा वृद्धौ व्याप्तिश्चेदपराह्णयोः। न ग्राह्यतिथिगौ वृद्धिक्षयावूर्ध्वतिथेस्तु तौ। साम्ये तूर्ध्वतिथिर्ग्राह्या परविद्धैव वृद्धिवत्। न स्पृशत्यपराह्णौ चेत् पूर्वा स्यात् कुतपो वृथा। वैषम्येणैकदेशस्य व्याप्तौ ग्राह्या महत्त्वतः। साम्येन चेत् क्षये पूर्वा परा स्याद्वृद्धिसाम्ययोः। वृद्धिसाम्यक्षया ग्राह्यास्तिथिगा नोर्ध्वगा इह इति।

காலநிர்ணய ஸங்க்ரஹத்திலும்:— ஆப்திக ச்ராத்த விஷயத்தில், திதிக்குக் குதபம் முதல் அபராஹ்ணத்தின் முடிவு வரையில் வ்யாப்தி உத்தமம் ஆகும். அவ்விதம் இல்லாவிடில், அபராஹ்ண வ்யாப்தி திதியை க்ரஹிக்கவும். 2-அபராஹ்ணங்களிலும் வ்யாப்தி இருந்தால், திதி க்ஷய விஷயத்தில் பூர்வ திதி, வ்ருத்தி விஷயத்தில் உத்தர திதி க்ராஹ்யம். இவ்விஷயத்தில் வ்ருத்தி க்ஷயங்கள் ச்ராத்தீய திதியைச் சேர்ந்தவை அல்ல, மேல் திதியைச் சேர்ந்தவை. 2-அபராஹ்ணங்களிலும் வ்யாப்தி ஸமமாய் இருந்தால் மேல் திதியை க்ரஹிக்கவும். பரவித்தையையே வ்ருத்தியில் போல். 2-அபராஹ்ணங்களிலும் திதி ஸ்பர்சம் இல்லாவிடில், பூர்வ திதி க்ராஹ்யம் ஆகும். குதபவ்யாப்தி வீணாகவே ஆகும். 2-அபராஹ்ணங்களிலும் வ்யாப்தி விஷமமாய் இருந்தால் அதிக வ்யாப்தி உள்ளதை க்ரஹிக்கவும். ஸமமாய் இருந்தால் க்ஷய விஷயத்தில் பூர்வ திதியும், வ்ருத்தி, ஸாம்யம் இவைகளில் பரதிதியும் க்ராஹ்யம் ஆகும். வ்ருத்தி, ஸாம்யம், க்ஷயம் இவைகளை க்ராஹ்ய திதியைச் சேர்ந்தவைகளை க்ரஹிக்கவும். உத்தர திதியைச் சேர்ந்தவைகளை க்ரஹிக்கக் கூடாது.

षड्धर्मीये — सायन्तन्यपरत्र चेन्मृततिथिः सैवाब्दिके मासिके ग्राह्या सा द्व्यपराह्णयोर्यदि तदा यत्राधिका सा मता। तुल्या

चेदुभयापराह्णसमये पूर्वा न चेत् सा द्वयोः पूर्वैव त्रिमुहूर्तगाऽस्तसमये नोचेत् परैवोदिता इति । कालादर्शेऽपि — प्रत्याब्दिकेऽप्येवमेव तिथिर्ग्राह्याऽऽपराह्णिकी । उभयत्र तथात्वे तु महत्त्वेन विनिर्णयः ॥ समत्वे पूर्वविद्धैव ह्ययथात्वेऽपि सा यदि । त्रिमुहूर्ता भवेत् सायं सर्वेष्टोऽयं विनिर्णयः इति । इत्याब्दिकतिथिनिर्णयः ।

ஷட்தர்மீயத்தில்:— ம்ருத திதி மறுநாளில் ஸாயங்காலத்தில் இருந்தால் ஆப்திகத்திலும் மாஸிகத்திலும் அதையே க்ரஹிக்கவும். அது 2-நாட்களிலும் அபராஹ்ணத்தில் இருந்தால், என்று அதிகமாய் உள்ளதோ அது க்ராஹ்யம் ஆகும். 2-நாட்களின் அபராஹ்ணங்களிலும் ஸமமாய் இருந்தால் முன் திதியை க்ரஹிக்கவும். 2-நாட்களிலும் அபராஹ்ணத்தில் இல்லாவிடில் முன் திதியே க்ராஹ்யம் ஆகும். அஸ்தமய ஸமயத்தில் மூன்று முஹூர்த்த வ்யாப்தியுடன் இருந்தால். அவ்விதம் இல்லாவிடில் பரதிதியே க்ராஹ்யம் ஆகும். காலாதர்சத்திலும்:— ப்ரத்யாப்திகத்திலும் இவ்விதமே அபராஹ்ண வ்யாப்தி உள்ள திதி க்ராஹ்யம் ஆகும். 2-நாட்களிலும் அபராஹ்ண வ்யாப்தி இருந்தால் அதிக வ்யாப்தி உள்ளதை க்ரஹிக்கவும். இரண்டு நாட்களிலும் ஸமமாய் இருந்தால் பூர்வ திதியே க்ராஹ்யம் ஆகும். அவ்விதம் இல்லாவிடில் முதல் நாளில் ஸாயங்காலத்தில் மூன்று முஹூர்த்த வ்யாப்தி உள்ளதானால் முந்திய திதியே க்ராஹ்யம் ஆகும். இது எல்லோருக்கும் ஸம்மதமான நிர்ணயம் ஆகும்.

## प्रथमाब्दिकादीनां विभक्तैः पृथगनुष्ठानम् ।

प्रथमाब्दिकादीनि श्राद्धानि विभक्तैः पुत्रैः सर्वैरपि पृथगेव कार्याणि । नवश्राद्धं सपिण्डत्वं श्राद्धान्यपि च षोडश । एकेनैव तु

कार्याणि संविभक्तधनेष्वपि इत्येवकारेण ऊनाब्दिकपर्यन्तस्यैवानेक-कर्तृकत्वव्यावृत्तिप्रतीतेः, एकपाकेन वसतां पितृदेवद्विजार्चनम्। एकं भवेद्विभक्तानां तदेव स्याद्गृहे गृहे । विभक्ता भ्रातरः सर्वे स्वस्वार्जितधनाशनैः। दर्शाब्दिकादिकं पित्रोः श्राद्धं कुर्युः पृथक् पृथक् इत्यादिस्मरणाच्च।

**ப்ரதமாப்திகம் முதலியதை விபக்தர்கள் தனித்தனியே செய்ய வேண்டும்.**

முதலாப்திகம் முதலிய ச்ராத்தங்களை விபக்தர்களான புத்ரர்கள் எல்லோரும் தனித்தனியே செய்ய வேண்டும். 'நவச்ராத்தம், ஸபிண்டீகரணம், ஷோடச ச்ராத்தங்கள் இவைகளை ஒருவனே செய்ய வேண்டும். ப்ராதாக்கள் விபக்தர்களாயினும்' என்ற வசனத்தில் உள்ள 'ஏவ' என்பதால் ஊனாப்திகம் வரையில் உள்ளதையே அநேகர்கள் செய்யக்கூடாது என்று தோன்றுவதாலும், 'ஒரு பாகத்துடன் வஸிப்பவர்களுக்கு, பித்ருக்கள், தேவர்கள், ப்ராம்ஹணர்கள் இவர்களின் பூஜை ஒன்றே ஆகும். விபக்தர்களாகில் பித்ருதேவ ப்ராம்ஹண பூஜை அவரவர் க்ருஹத்தில் தனியே ஆகவேண்டும். ப்ராதாக்கள் அவரவர் ஸம்பாதிக்கும் தனம், ஆஹாரம் இவைகளால் விபக்தர்களாகில், மாதா பிதாக்களுக்குத் தர்ச ச்ராத்தம், ஆப்திக் ச்ராத்தம் முதலியதை, தனித்தனியே செய்ய வேண்டும்' என்பது முதலிய ஸ்ம்ருதி இருப்பதாலும்.

अत एव पैठीनसिः — विभक्तैस्तु पृथक्कार्यं प्रतिसांवत्सरादिकम्। एकेनैवाविभक्तेषु कृते सर्वैस्तु तत्कृतमिति। स्मृत्यन्तरे — भिन्नस्थानगतैः पुत्रैरविभक्तधनैरपि । प्रत्याब्दिकं पृथक्कार्यमन्यश्राद्धानि संभवे इति।

ஆகையாலேயே, பைடீநஸி:— ப்ரத்யாப்திக ச்ராத்தம் முதலியதை விபக்தர்களான ப்ராதாக்கள் தனியே செய்ய வேண்டும். விபக்தர்கள் அல்லாதவர்களாயின் ஒருவன் செய்தாலே அது எல்லோராலும் செய்யப் பட்டதாகும். ஓர் ஸ்ம்ருதியில்:— அவிபக்தர்களான புத்ரர்களாயினும் வெவ்வேறு இடங்களில் இருப்பவராயின் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தைத் தனியே செய்ய வேண்டும். மற்ற ச்ராத்தங்களைச் செய்ய முடியுமானால் செய்யவும்.

## अन्नेनैव आब्दिकादिविधिः ।

एतच्च सांवत्सरिकश्राद्ध मन्नेनैव कार्यम् । तदाह लोकाक्षिः— पुष्पवत्स्वपि दारेषु विदेशस्थोऽप्यनग्निकः । अन्नेनैवाब्दिकं कुर्याद्धेम्ना वाऽमेन न क्वचित् इति । मरीचिरपि — अनग्निश्च प्रवासी च यस्य भार्या रजस्वला । आमश्राद्धं प्रकुर्वीत न तत् कुर्यान्मृतेऽहनि इति ।। केचित् मातापित्रोः क्षयादृत इति चतुर्थपादं पठित्वा पितृग्रहणादन्येषा माब्दिकमामेन कुर्यात् इति व्याचक्षते।

## ஆப்திகம் முதலியதை அன்னத்தாலேயே செய்ய வேண்டும்.

இந்த ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தை அன்னத்தாலேயே செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார், லோகாக்ஷி:— பார்யை ரஜஸ்வலையாய் இருந்தாலும், விதேசத்தில் இருப்பவனாயினும், அக்னியில்லாதவனாயினும், ஆப்திக ச்ராத்தத்தை அன்னத்தாலேயே செய்ய வேண்டும். ஒருக்காலும் ஹிரண்யத்தாலாவது ஆமத்தாலாவது செய்யக் கூடாது. மரீசியும்:— அக்னியில்லாதவனும், ப்ரவாஸியும், ரஜஸ்வலாபதியும் ஆம ச்ராத்தத்தைச் செய்யவும். ம்ருத திதி ச்ராத்தத்தை ஆமத்தால் செய்யக் கூடாது. இதில் சிலர் 'மாதா பித்ரோ: க்ஷயாத் ருதே' என்று நான்காவது

பாதத்தைப் படித்து, 'மாதா பித்ரோ:' என்று இருப்பதால் மாதா பிதாக்களைத் தவிர்த்த மற்றவரின் ஆப்திக ச்ராத்தத்தை ஆமத்தால் செய்யலாம் என்று வ்யாக்யானம் செய்கின்றனர்.

हारीतोऽपि — श्राद्धविघ्ने द्विजातीनामामश्राद्धं प्रकीर्तितम्। अमावास्यादिनियतं माससंवत्सराद्दते इति । माधवीये वचनमिदं व्याख्यातम् — मासं - मासिकं, संवत्सरं - सांवत्सरिकम्, एतद्व्यतिरिक्तं यदमावास्यादि नियतमस्ति, तत्र भार्यारजोदर्शनादिना श्राद्धविघ्ने सति आम श्राद्धं प्रकीर्तितम् इति । अन्यैस्तु व्याख्यातम् - नियतममावास्यादिश्राद्धं मासिकं सांवत्सरिकं च वर्जयित्वा अन्यश्राद्धे आपदादिना विघ्निते सति तत्रामश्राद्धं कर्तव्यम् इति।

ஹாரீதரும்:— த்விஜர்களுக்கு, ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் ஆம ச்ராத்தம் விதிக்கப்பட்டுள்ளது. அமாவாஸ்யா ச்ராத்தம் முதலிய நித்யங்களைச் செய்யலாம். மாஸிகம், ஸாம்வத்ஸரிகம் இந்த ச்ராத்தங்களைத் தவிர்த்து. இந்த வசனம் மாதவீயத்தில் இவ்விதம் வ்யாக்யானம் செய்யப்பட்டு உள்ளது:—'மாஸம் = மாஸிகம், ஸம்வத்ஸரம் = ஸாம்வத்ஸரிகம் இவைகளைத் தவிர்த்த அமாவாஸ்யை முதலிய எந்த நியத ச்ராத்தம் உள்ளதோ அதில் பார்யையின் ரஜோதர்சனம் முதலியதால் ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் ஆம ச்ராத்தம் விதிக்கப்பட்டுள்ளது' என்று. மற்றவரோவெனில்:— 'நியதமான அமாவாஸ்யாதி ச்ராத்தம், மாஸிகம், ஸாம்வத்ஸரிகம் இவைகளைத் தவிர்த்து மற்ற ச்ராத்தம் ஆபத்து முதலியதால் விக்னம் உள்ளதாகில், அவ்விஷயத்தில் ஆம ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்' என்று.

तथा च कालादर्शे — रजस्वलाङ्गनोऽनग्निर्विदेशस्थोऽपि वाऽऽब्दिके। दर्शादावपि नामेन त्वन्नेन श्राद्धमाचरेत् इति। रजस्वला अङ्गना यस्य स तथाविधः, अनग्निः - औपासनाग्निरहितः, विदेशस्थः - प्रवासी, एवं विधोऽपि वा द्विजः मृताहे दर्शादावपि नामेन श्राद्धमाचरेत्, किन्त्वन्नेनैव कुर्यादित्यर्थः। सङ्ग्रहे — विदेशगो वा विगताग्निको वा रजस्वलायामपि धर्मपत्न्याम्। श्राद्धं मृताहे विदधीत पक्वैर्न चामदानेन न पञ्चमेऽहनि इति।

அவ்விதமே, காலாதர்சத்தில்:— ரஜஸ்வலையான பார்யையை உடையவனும், அனக்னி = ஔபாஸனுக்னி இல்லாதவனும், விதேசஸ்தன் = ப்ரவாஸியாய் இருப்பவனும், இவ்விதமான ப்ராம்ஹணனும், ம்ருத தினத்திலும், தர்சம் முதலியதிலும் ஆமத்தால் ச்ராத்தம் செய்யக் கூடாது. ஆனுல் அன்னத்தாலேயே செய்ய வேண்டும். ஸங்க்ரஹத்தில்:— விதேசத்தில் இருப்பவன் ஆயினும், அக்னி இல்லாதவன் ஆயினும், பத்னி ரஜஸ்வலையாய் இருந்தாலும், ம்ருத திதியில் ச்ராத்தத்தைப் பக்வங்களாலேயே செய்ய வேண்டும். ஆம தானத்தால் செய்யக்கூடாது. ஐந்தாவது நாளிலும் செய்யக் கூடாது.

मृताहव्यतिरिक्तश्राद्धस्य विघ्ने त्वामश्राद्धमाह उशनाः — अपत्नीकः प्रवासी च यस्य भार्या रजस्वला। सिद्धान्नेन न कुर्यात् स आमं तस्य विधीयते इति। गालवः — तीर्थेऽनग्नावापदि च देशभ्रंशे रजस्यपि। हेम श्राद्धं द्विजैः कार्यं शूद्रैः कार्यं सदैव हि इति॥ कात्यायनोऽपि — आपद्यनग्नौ तीर्थे च प्रवासे पुत्रजन्मनि। आम श्राद्धं प्रकुर्वीत यस्य भार्या रजस्वला इति। व्याघ्रपादः — आर्तवे देशकालानां विप्लवे समुपस्थिते। आमश्राद्धं द्विजः कुर्याच्छूद्रः कुर्यात् सदैव हि इति।

ம்ருதாஹம் தவிர்த்த ச்ராத்தத்திற்கு விக்னத்திலோ வெனில் ஆம ச்ராத்தத்தைச் சொல்லுகிருர், உசனஸ்:— பத்னி இல்லாதவன், ப்ரவாஸியாய் இருப்பவன், ரஜஸ்வலாபதி, இவர்கள் பக்வான்னத்தால் செய்யக் கூடாது. ஆம ச்ராத்தம் விதிக்கப்படுகிறது. காலவர்:— தீர்த்தத்திலும், அக்னி இல்லாவிடினும், ஆபத்திலும், ப்ரவாஸத்திலும், பார்யையின் ரஜ:காலத்திலும் த்விஜர்கள் ஹிரண்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். சூத்ரர்கள் எப்பொழுதுமே ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். காத்யாயனரும்:— ஆபத்திலும், அக்னி இல்லாவிடினும், தீர்த்தத்திலும், ப்ரவாஸத்திலும், புத்ர ஜனனத்திலும், பார்யையின் ரஜோதர்சனத்திலும், ஆம ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். வ்யாக்ரபாதர்:— ரஜ: காலத்திலும், தேச காலங்களின் மாறுதலிலும், த்விஜன் ஆம ச்ராத்தத்தைச் செய்யவும். சூத்ரன் எப்பொழுதும் ஆம ச்ராத்தத்தைச் செய்யவும்.

न चैतादृशवचनैर्मासिकाब्दिकयोरप्यामश्राद्धं प्राप्नोतीति वाच्यम्, मासंसंवत्सरादृते न तत् कुर्यान्मृतेऽहनि इति विशेषवचनैरामश्राद्धस्य तद्व्यतिरिक्तविषयत्वावगमात् । यत्तु स्मृत्यन्तरे भार्यायां रजस्वलायां - मृतेऽहनि श्राद्धनिषेधवचनम् — मृतेऽहनि तु सम्प्राप्ते यस्य भार्या रजस्वला। श्राद्धं तदा न कर्तव्यं कर्तव्यं पञ्चमेऽहनि इति, यदपि मरीचिवचनम् — आब्दिके समनुप्राप्ते यस्य भार्या रजस्वला। पञ्चमेऽहनि तत् श्राद्धं न तत् कुर्यान्मृतेऽहनि इति, एतादृशस्य वचनस्यायं विषयः, अपुत्रायाः पत्न्या एव पत्युर्मृताह श्राद्धेऽधिकारात् यदा रजस्वला स्यात् तदा मृतेऽहनि श्राद्धं न कर्तव्यम्, किंतु पञ्चमेऽहनि कर्तव्यमिति।

இவை போல் உள்ள வசனங்களால் மாஸிகம் ஆப்திகம் இவைகளிலும் ஆம ச்ராத்தம் ப்ராப்தம்

ஆகின்றது என்று சொல்லக் கூடாது. 'மாஸஸம்வத்ஸராத்ருதே, நதத்குர்யாத் ம்ருதேஹனி' என்ற விசேஷ வசனங்களால், ஆமச்ராத்தம் மாஸிக ஸாம்வத்ஸரிக ச்ராத்தங்களைத் தவிர்த்த ச்ராத்தத்தைப் பற்றியது என்பது அறியப்படுகிறது. ஆனால், ஓர் ஸ்ம்ருதியில்:— பார்யை ரஜஸ்வலையாய் இருந்தால் ச்ராத்த நிஷேதம சொல்லப்பட்டு உள்ளதே, 'ச்ராத்த தினம் ப்ராப்தமாய் இருக்க, எவனது பார்யை ரஜஸ்வலையோ, அவன் அப்பொழுது ச்ராத்தம் செய்யக் கூடாது. ஐந்தாவது நாளில் செய்ய வேண்டும்' என்றும், 'ஆப்திகம் ப்ராப்தமாய் இருக்க எவனது பார்யை ரஜஸ்வலையோ அவன் அப்பொழுது ச்ராத்தம் செய்யக் கூடாது. ஐந்தாவது நாளில் செய்ய வேண்டும்' என்றும் மரீசி வசனமும் உள்ளதே எனில், இது போன்ற வசனத்திற்கு விஷயம் இதுவாம்:— 'புத்ரனில்லாத பத்னிக்கே பதியின் ச்ராத்தத்தில் அதிகாரமானதால், அவள் எப்பொழுது ரஜஸ்வலையோ அப்பொழுது ம்ருத தினத்தில் ச்ராத்தம் செய்யக் கூடாது, ஆனால் ஐந்தாவது நாளில் செய்ய வேண்டும்' என்று.

तथा च श्लोकगौतमः — अपुत्रा तु यदा भार्या सम्प्राप्ते भर्तुराब्दिके। रजस्वला भवेत् सा तु तत् कुर्यात् पञ्चमेऽहनि इति। प्रभासखण्डेऽपि — सा शुद्धौ स्याच्चतुर्थेऽह्नि स्नानान्नारी रजस्वला। दैवे कर्मणि पित्र्ये च पञ्चमेऽहनि शुद्ध्यति इति। माधवीयादौ विशेषोऽभिहितः॥

ச்லோக கௌதமர்:— பார்யை புத்ரன் இல்லாதவளாகில், பர்த்தாவின் ச்ராத்தம் ப்ராப்தமாய் இருக்கும் பொழுது ரஜஸ்வலையானால், அவள் அந்த ச்ராத்தத்தை ஐந்தாவது நாளில் செய்ய வேண்டும். ப்ரபாஸகண்டத்திலும்:— ரஜஸ்வலையான ஸ்த்ரீ 4-ஆவது நாளில் ஸ்நானத்தால் சுத்தையாவாள். தைவ கர்மத்திலும்,

பித்ர்ய கர்மத்திலும் 5-ஆவது நாளில் சுத்தையாவாள். இவ்விதம் விசேஷம் மாதவீயம் முதலியதில் சொல்லப்பட்டுள்ளது.

अन्ये तु — श्राद्धीयेऽहनि सम्प्राप्ते यस्य भार्या रजस्वला। श्राद्धं तत्र न कर्तव्यं कर्तव्यं पञ्चमेऽहनि इति श्लोकगौतमवचनमन्यथा पठित्वा श्राद्धादौ कर्मणि भार्यया सहैवाधिकारश्रवणात्तस्यां रजोदर्शन-दूषितायामधिकारे निवृत्ते मुख्यकालमतिक्रम्य पञ्चमेऽहनि श्राद्धं कर्तव्यमिति मन्यन्ते, तत्रैकभार्येण मृताहश्राद्धं रजोदर्शनरूप विघ्नो परम काल एव कर्तव्यम्। भार्यान्तरयुक्तेन त्वधिकारानपायात् मुख्य एव काले कर्तव्यमिति च। यदत्र युक्तं तत् ग्राह्यम् इति।

மற்றவரோவெனில்:— 'ச்ராத்த தினம் ப்ராப்தமாய் இருக்க, எவனது பார்யை ரஜஸ்வலையோ அவன் அன்று ச்ராத்தம் செய்யக் கூடாது, ஐந்தாவது நாளில் செய்ய வேண்டும்' என்ற ச்லோகத்தை வேறு ப்ரகாரமாய்ப் படித்து, ச்ராத்தம் முதலிய கர்மத்தில் பார்யையுடன் கூடவே அதிகாரம் என்று இருப்பதால், அவள் ரஜோதர்சனத்தால் அசுத்தையாய் இருக்கும் பொழுது அதிகாரம் இல்லாததால், முக்ய காலத்தை அதிக்ரமித்து, ஐந்தாவது நாளில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும் என்று சொல்லுகின்றனர். அவ்விஷயத்தில் ஒரு பார்யை உடையவன், ச்ராத்தத்தை, ரஜோதர்சன ரூபவிக்னம் நிவ்ருத்தித்த காலத்திலேயே செய்ய வேண்டும். மற்றொரு பார்யை உள்ளவனோவெனில் அதிகாரம் உள்ளதால் முக்ய காலத்திலேயே செய்ய வேண்டும் என்றும் சொல்லுகின்றனர். இவ்விஷயத்தில் யுக்தமாகியதை க்ரஹிக்கவும்' என்கின்றனர்.

रजस्वलायां भार्यायां क्षयाहं यः परत्यजेत्। स वै नरकमाप्नोति यावदाभूतसप्लवम्॥ पित्रोः क्षयदिने प्राप्ते यस्य भार्या रजस्वला। अग्निं

सन्धाय विधिवत् श्राद्धं कृत्वा विसर्जयेत् इत्यादिस्मरणादेक-पत्नीकोऽपि भार्यायां रजस्वलायां पित्रोर्मृताहे एवान्नेन सांवत्सरिकं कुर्यात् इति युक्तमित्याहुः । आपदादिना विघ्ने सति विशेषमाह मरीचिः — श्राद्धविघ्ने समुत्पन्ने चाविज्ञाते मृतेऽहनि । कुर्यादन्नेन कृष्णायामेकादश्यां विधुक्षये इति । विधुक्षये - अमावास्यायाम् ।

''பார்யை ரஜஸ்வலையாய் இருக்கும் பொழுது ச்ராத்தத்தை (ம்ருத திதியை) எவன் விடுகிறானோ, அவன் நரகத்தை அடைவான், ப்ரளய காலம் வரையில்'', ''மாதா பிதாக்களின் ச்ராத்தம் ப்ராப்தமாய் இருக்க, எவனது பார்யை ரஜஸ்வலையோ அவன் அக்னி ஸந்தானம் செய்து கொண்டு விதிப்படி ச்ராத்தம் செய்து விட்டு அந்த அக்னியை விட வேண்டும்'' என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்கள் இருப்பதால் ஒரு பத்னி உள்ளவனும் பார்யை ரஜஸ்வலையாய் இருந்தால் மாதா பிதாக்களின் ம்ருத திதியிலேயே அன்னத்தால் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்' என்பது யுக்தம் என்கின்றனர் (சிலர்). ஆபத்து முதலியதால் விக்னம் ஏற்பட்டால் விசேஷத்தைச் சொல்லுகிறார், மரீசி:— 'ச்ராத்தத்திற்கு விக்னம் ஏற்பட்டாலும், ம்ருத திதி அறியப்படாவிட்டாலும், க்ருஷ்ண ஏகாதசியிலாவது, அமாவாஸ்யையிலாவது அன்னத்தால் செய்யவும்' என்று.

काष्णाजिनिरपि-आपन्नोऽप्याब्दिकं नैव कुर्यादामेन कर्हिचित् । अन्नेन तदमायां तु कृष्णे वा हरिवासरे इति । कालादर्शेऽपि — आपद्यपि च नामेन तन्मासि हरिवासरे । कृष्ण इन्दुक्षये वाऽपि कुर्यादन्नेन वार्षिकम् इति । एतच्च कृच्छ्रप्रतिनिधिं कृत्वा कुर्यात् । तदुक्तं स्मृत्यर्थसारे – निमित्तश्राद्धे हीने संस्कारकालातिक्रमे च प्राजापत्यं कुर्यादिति ।

**கார்ஷ்ணாஜினியும்:—** ஆபத்தை அடைந்தவனாயினும் ஆப்திகத்தை ஆமத்தால் ஒரு காலும் செய்யக் கூடாது. அமாவாஸ்யையிலாவது க்ருஷ்ண ஏகாதசியிலாவது அன்னத்தால் அந்த ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். **காலாதர்சத்திலும்:—** வார்ஷிக ச்ராத்தத்தை ஆபத்காலத்திலும் ஆமத்தால் செய்யக் கூடாது. க்ருஷ்ண ஏகாதசியிலாவது, தர்சத்திலாவது அன்னத்தால் செய்ய வேண்டும். இதையும், க்ருச்ர ப்ரத்யாம்னாயம் செய்து பிறகு செய்யவும். அது சொல்லப்பட்டுள்ளது, **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:—** 'நிமித்த ச்ராத்தம் தவறினாலும், ஸம்ஸ்கார காலம் அதிக்ரமித்தாலும் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தைச் செய்யவேண்டும்' என்று.

## आशौचान्तरितश्राद्धे विशेषः

आशौचेन विघ्निते सति विशेषमाह देवलः – देये प्रत्याब्दिके श्राद्धे त्वन्तरा मृतसूतके । आशौचानन्तरं कुर्यात्तन्मासीन्दुक्षयेऽपि वा इति ।। आशौचानन्तरकरणासम्भवे दर्शे वा कुर्यादित्यर्थः । अत एव ऋश्यशृङ्गः – शुचिभूतेन दातव्यं या तिथिः प्रतिपद्यते । सा तिथिस्तत्र कर्तव्या न त्वन्या वै कदाचन इति । शुचिना तावत् श्राद्धं कर्तव्यम्, तत्र मुख्यकाले कर्तुः शुद्ध्यभावे शुद्ध्यनन्तरं या तिथिः प्रतिपद्यते - लभ्यते सा ग्राह्या । आशौचदुष्टा तु न ग्राह्येत्यर्थः ।

### ஆசௌசத்தால் தடையுற்ற ச்ராத்தத்தில் விசேஷம்.

ஆசௌசத்தால் ச்ராத்தம் விக்னமுற்றால் விசேஷத்தைச் சொல்லுகிறார், தேவலர்:— ம்ருதாசௌசம் ஜனனாசௌசம் இவைகளில் மத்யத்தில் ப்ரத்யாப்திக ச்ராத்தம் ப்ராப்தமாய் இருந்தால் அதை ஆசௌசத்திற்குப் பிறகு செய்யவும். ஆசௌசத்திற்குப் பிறகு செய்ய முடியாவிடில் அந்த மாஸத்தில் தர்சத்திலாவது செய்யவும். ஆகையாலேயே, ருச்யச்ருங்கர்:— 'சுசிபூதேந தாதவ்ய'

என்றார். இதன் பொருள்:— சுத்தனாயிருந்தே ச்ராத்தம் செய்ய வேண்டும். முக்ய காலத்தில் கர்த்தாவுக்குச் சுத்தி இல்லாவிடில் சுத்தி உண்டானவுடன் எந்தத் திதி கிடைக்கின்றதோ அந்தத் திதியை க்ரஹிக்க வேண்டும். ஆசௌசத்தால் துஷ்டமான திதியை ஒரு காலும் க்ரஹிக்கக் கூடாது, என்பது பொருள், என்பதாம்.

एतदेवाभिप्रेत्य व्यासोऽपि – श्राद्धविघ्ने समुत्पन्ने त्वन्तरा मृतसूतके। अमायां वा प्रकुर्वीत शुद्धावेके मनीषिणः इति। मायामिति कृष्णैकादश्या अप्युपलक्षणम्। तथा च श्राद्धविघ्ने समुत्पन्ने इति पूर्वोक्तमरीचिवचनं द्रष्टव्यम्।। ऋश्यशृङ्गः – आब्दिके चैव सम्प्राप्ते त्वाशौचं जायते यदि। आशौचे तु व्यतिक्रान्ते तेभ्यः श्राद्धं प्रदीयताम् इति।

இவ்வித அபிப்ராயத்துடனேயே:— வ்யாஸரும்:— ச்ராத்தத்திற்கு விக்னம் ஏற்பட்டாலும், ம்ருத ஸூதகாசௌசங்களில் ச்ராத்தம் வந்தாலும், அமாவாஸ்யையிலாவது செய்யவும். சுத்தியானவுடன் செய்யலாம் என்று சில புத்திமான்கள் சொல்லுகின்றனர் என்றார். இதில் அமாயாம் என்றது க்ருஷ்ண ஏகாதசியையும் சொல்லும். அவ்விஷயத்தில் 'ச்ராத்த விக்னேஸமுத்பன்னே' என்று முன் சொல்லிய மரீசி வசனத்தைப் பார்க்கவும். ருச்யச்ருங்கர்:— ஆப்திகம் ப்ராப்தமாய் இருக்க ஆசௌசம் நேர்ந்தால், ஆசௌசம் சென்ற பிறகு ம்ருதர்களுக்கு ச்ராத்தத்தைச் செய்யவும்.

आब्दिके चैव सम्प्राप्ते इति विशेषणात् दर्शादि श्राद्धस्य नित्यत्वेऽपि कालान्तरे विधानाभावे लोप एव। यत्तु – वर्षश्राद्धे तु सम्प्राप्ते पित्रोराशौचसम्भवे। तदानीमशुचिर्न स्यात् कुर्यात् श्राद्धं मृतेऽहनि इति, तत् श्राद्धोपक्रमानन्तरमागताशौचविषयम्, निमन्त्रितेषु विप्रेषु प्रारब्धे श्राद्धकर्मणि। देहे पितृषु तिष्ठत्सु नाशौचं

विद्यते क्वचित् इति स्मरणात् । श्राद्धोपक्रमश्च कुतपकाले द्वितीयवरणम् । प्रारम्भो वरणं यज्ञे सङ्कल्पो व्रतसत्रयोः । नान्दीमुखं विवाहादौ श्राद्धे पाकपरिक्रिया इति वचनं कुतपकाल-वरणादूर्ध्वमारब्धपाकपरिक्रियाविषयमित्येतत् सर्वमधस्तान्नि-रूपितम् ।

'ஆப்திகேசைவ ஸம்ப்ராப்தே' என்ற விசேஷணத்தால், தர்சாதி ச்ராத்தம் நித்யமாயினும் காலாந்தரத்தில் செய்யும்படி விதி இல்லாததால் அதற்கு லோபமே. ஆனால், 'மாதா பிதாக்களின் வர்ஷ ச்ராத்தம் ப்ராப்தமாய் இருக்க ஆசௌசம் ஸம்பவித்தால், அப்பொழுது அசுத்தனாகான். ம்ருத தினத்தில் ச்ராத்தத்தைச் செய்யவும்' என்ற வசனம் உள்ளதே ? எனில், அது ச்ராத்தம் ஆரம்பித்த பிறகு ப்ராப்தமான ஆசௌசத்தைப் பற்றியது. 'ப்ராம்ஹணர்களை வரித்த பிறகு, ச்ராத்தம் ஆரம்பிக்கப்பட்டு இருக்கும் பொழுது, தேஹத்தில் பித்ருக்கள் இருக்கும் பொழுது, ஆசௌசம் இல்லை ஒரு காலும்' என்று ஸ்ம்ருதி உள்ளது. ச்ராத்தாரம்பம் என்பது குதப காலத்தில் இரண்டாவது முறை செய்யப்படும் வரணம். 'யாகத்தில் ருத்விக்குகளை வரிப்பது ஆரம்பமாம். வ்ரதத்திலும், ஸத்ரத்திலும் ஸங்கல்ப்பம் செய்வதுமாம். ச்ராத்தத்தில் பாகத்தின் ஆரம்பம் ஆரம்பமாம்' என்ற வசனம், குதப காலத்தில் செய்யப்படும் வரணத்திற்குப் பிறகு ஆரம்பிக்கப்படும் பாகாரம்பத்தைப் பற்றியது, என்ற இதெலாம் முன் சொல்லப்பட்டுள்ளது.

## ग्रहणादिसम्भवे सांवत्सरिकश्राद्धविधिः

सांवत्सरिकश्राद्धे चन्द्रग्रहणादिसंभवे सङ्ग्रहकारः — चन्द्रसूर्योपरागे तु पित्रोः श्राद्ध उपस्थिते । हेम्ना वाऽऽमेन वा कृत्वा श्राद्धं कुर्यात् परेऽहनि इति । स्मृत्यन्तरे तु — आब्दिके समनुप्राप्ते ग्रहणे

चन्द्रसूर्ययोः । उपोष्य तद्दिनं सम्यक् परेऽह्नि श्राद्धमाचरेत् इति । वसिष्ठश्च – दर्शे रविग्रहे पित्रोः प्रत्याब्दिकमुपस्थितम्। आमश्राद्धं तु कर्तव्यं हेमश्राद्ध मथापि वा इति । स्मृत्यन्तरेऽपि – ग्रहणे तु द्वितीयेऽह्नि रजोदृष्टौ तु पञ्चमे इति।

### க்ரஹணம் முதலியது நேர்ந்தால் ஸாம்வத்ஸரிக ச்ராத்த விதி.

ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தில் க்ரஹணம் முதலியது ஸம்பவித்தால், ஸங்க்ரஹகாரர்:— 'சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களில் மாதா பிதாக்களின் ச்ராத்தம் ப்ராப்தம் ஆனால் ஹிரண்யத்தாலாவது ஆமத்தாலாவது செய்து விட்டு, மறுநாளில் ச்ராத்தத்தைச் செய்யவும்' என்றார். ஓர் ஸ்ம்ருதியில்:— ஆப்திகம் ப்ராப்தமாயிருக்க சந்த்ர ஸூர்ய க்ரஹணங்கள் நேர்ந்தால், அன்று முழுவதும் உபவாஸம் இருந்து, மறுநாளில் ச்ராத்தத்தை விதிப்படி செய்யவும். வஸிஷ்டரும்:— அமாவாஸ்யையில் ஸூர்ய க்ரஹணத்தில் ப்ரத்யாப்திகம் ப்ராப்தமானால், ஆம ச்ராத்தத்தையாவது, ஹிரண்ய ச்ராத்தத்தையாவது செய்யவும். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— க்ரஹணத்திலானால் இரண்டாவது நாளிலும், ரஜோதர்சனத்திலானால் ஐந்தாவது நாளிலும் செய்யவும்.

तथा — श्राद्धविघ्ने समुत्पन्ने सूतकान्मृतकादपि । सोमसूर्योपरागाभ्यां श्राद्धं कुर्यात् परेऽहनि इति। अत्र विशेषमाह सङ्ग्रहकारः — भुजेर्निषेधकले तु श्राद्धकालो भवेत्तदा। आमश्राद्धं तु कर्तव्यं हेमश्राद्धमथापि वा इति। भोजननिषेधकालश्च वृद्धवसिष्ठेनोक्तः — सूर्यग्रहे तु नाश्नीयात् पूर्वं यामचतुष्टयम्। चन्द्रग्रहे तु यामांस्त्रीन् बालवृद्धातुरैर्विना। सन्ध्याकाले यदा राहुर्ग्रसते शशिभास्करौ। तदहर्नैव भुञ्जीत रात्रावपि कदाचन इति।। एतच्च सविस्तरं प्रतिपादित-मधस्तात् ।

அவ்விதம் — ஸூதகத்தாலாவது, ம்ருதகத்தாலாவது ச்ராத்த விக்னம் ஏற்பட்டாலும், சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களிலும் மறுநாளில் ச்ராத்தத்தைச் செய்யவும் என்று உள்ளது. இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், ஸங்க்ரஹகாரர்:— போஜனத்திற்கு நிஷித்தமான காலத்தில் ச்ராத்த காலம் நேர்ந்தால், ஆம ச்ராத்தத்தையாவது ஹிரண்ய ச்ராத்தத்தையாவது செய்யவும். போஜன நிஷித்த காலத்தைச் சொல்லுகிறார். வ்ருத்தவஸிஷ்டர்:— ஸூர்ய க்ரஹணத்தில், அதற்கு முன் 4-யாமங்களில் புஜிக்கக் கூடாது. சந்த்ர க்ரஹணத்திலானால் முன் 3-யாமங்களில் புஜிக்கலாகாது, பாலர், வ்ருத்தர், பிணியாளர் இவர்களைத் தவிர்த்து. ஸந்த்யா காலத்தில் சந்த்ர ஸூர்ய க்ரஹணம் ஸம்பவித்தால் அந்தப் பகல் முழுவதும் ராத்ரி முழுவதும் புஜிக்கக் கூடாது. இவ்விஷயம் விஸ்தாரமாய் முன்பே சொல்லப்பட்டுள்ளது.

यस्तु स्मृत्यन्तरवचनम् — दर्शे रविग्रहे पित्रोः प्रत्याब्दिकमुपस्थितम्। अन्नेनासम्भवे हेम्ना कुर्यादामेन वा सुतः इति। तस्याप्ययमर्थः — निषेधादन्नेनासम्भवे सति हेम्ना आमेन वा कुर्यादिति। एवं च कर्मकालात् प्रागेव मुक्ते सूर्यग्रहणे अपराह्णे श्राद्धमन्नेन कार्यमित्युक्तं भवति ॥ (रात्रौ यामद्वयादूर्ध्वं चन्द्रग्रहेऽपि पितृश्राद्धं कर्तव्यम्। द्वितीये यामे ग्रहणेऽपि यामद्वयात् पूर्वं गान्धर्वे उपक्रम्य दिवा पञ्चदशनाड्याः पूर्वं कर्तव्यम्। भुजेरनिषेधात् इत्याहुः इति पूर्णसङ्ग्रहः ।)

ஆனால், ஓர் ஸ்ம்ருதியில்:— 'அமாவாஸ்யையில், ஸூர்ய க்ரஹணத்தில் மாதா பிதாக்களின் ப்ரத்யாப்திகம் ப்ராப்தமானால், அன்னத்தால், ஸம்பவிக்காவிடில் ஹிரண்யத்தாலாவது ஆமத்தாலாவது செய்ய வேண்டும்' என்று வசனம் உள்ளதே எனில், அதற்கும் இவ்விதம் அர்த்தம் — 'நிஷேதம் இருப்பதால் அன்னத்தால் ச்ராத்தம் ஸம்பவிக்காமல் இருக்கும் பொழுது, ஹிரண்யத்தாலாவது

ஆமத்தாலாவது செய்ய வேண்டும், என்று. இவ்விதம் இருப்பதால், கர்ம காலத்திற்கு முன்பே மோக்ஷம் ஆனால் ஸுர்ய் க்ரஹணத்தில், அபராஹ்ணத்தில் ச்ராத்தத்தை அன்னத்தால் செய்ய வேண்டும் என்பது சொல்லப்பட்டதாய் ஆகின்றது. (இரவு 2-யாமத்திற்கு மேல் சந்த்ர க்ரஹணம் நேர்ந்தால் தந்தைக்கான ச்ராத்தம் செய்ய வேண்டும். 2-ஆவது யாமத்தில் க்ரஹணமானாலும் பகலில் 15 நாழிகைக்குள் காந்தர்வத்தில் தொடங்கிச் செய்யவும். இக்கால வரையில் உணவேற்கத் தடையில்லை என்பதால் என்று பூர்ணஸங்க்ரஹம்.)

एवमेव विषयमभिप्रेत्य कालादर्शकारः — प्रत्याब्दिकस्य चालभ्ययोगेषु विहितस्य च। संपाते देवताभेदात् श्राद्धयुग्मं समाचरेत् इति। ग्रहणार्धोदयादिरलभ्ययोगः ॥ ग्रहणनिमित्तश्राद्धमाह मनुः — सन्ध्यारात्र्योर्न कर्तव्यं श्राद्धं खलु विचक्षणैः। तयोरपि च कर्तव्यं यदि स्याद्राहुदर्शनम् इति।

இவ்விஷயத்தையே அபிப்ராயத்தில் கொண்டு, காலாதர்சகாரர்:— 'ப்ரத்யாப்திகமும், அலப்ய யோகங்களில் விதிக்கப்பட்ட ச்ராத்தமும் ஒரு நாளில் சேர்ந்தால், தேவதாபேதம் இருப்பதால் இரண்டு ச்ராத்தங்களையும் செய்ய வேண்டும்' என்றார். க்ரஹணம் அர்த்தோதயம் முதலியது அலப்யயோகமாம். க்ரஹண நிமித்த ச்ராத்தத்தைச் சொல்லுகிறார், மனு:— அறிந்தவர்கள் ஸந்த்யாகாலத்திலும், ராத்ரியிலும் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. ராஹு தர்சனம் ஏற்பட்டால், அக்காலங்களிலும் செய்ய வேண்டும்.

महाभारते — सर्वस्वेनापि कर्तव्यं श्राद्धं वै राहुदर्शने। अकुर्वाणस्तु नास्तिक्यात् पङ्के गौरिव सीदति इति। (आश्वमेधिके — उपप्लवे चन्द्रमसो रवेश्च श्राद्धस्य कालो ह्ययनद्वये च। पानीयमप्यत्र तिलैर्विमिश्रं दद्यात् पितृभ्यः प्रयतो मनुष्यः इति।) अङ्गिराः — सर्वे

वर्णाः सूतके च मृतके राहुदर्शने । स्नात्वा श्राद्धं प्रकुर्वीत् वित्तशाठ्यविवर्जितम् इति ।

மஹாபாரதத்தில்:— ராஹு தர்சனத்தில் எவ்விதத்தாலாவது ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். நாஸ்திக்யத்தால் செய்யாமல் இருப்பவன் சேற்றில் ஆழ்ந்த பசுப்போல் அழிவான். (ஆச்வமேதிகத்தில்:— சந்த்ர ஸூர்ய க்ரஹணங்கள், இரண்டு அயனங்கள், இவை ச்ராத்த காலங்களாம். இவைகளில் மனிதன் எள்ளுடன் சேர்ந்துள்ள ஜலத்தையாவது பித்ருக்களுக்குச் சுத்தனாய் கொடுக்க வேண்டும்.) அங்கிரஸ்:— எல்லா வர்ணத்தார்களும், ஜநநா சௌசம், மரணா சௌசமிவைகளுடன் கூடியவராயினும், க்ரஹண காலத்தில் ஸ்நானம் செய்து, பண விஷயத்தில் வஞ்சனை இல்லாமல் ச்ராத்தம் செய்ய வேண்டும்.

अत्र राहुदर्शनग्रहणात् सङ्क्रान्त्यादिष्वाशौचे श्राद्धं न कर्तव्यमित्युक्तं भवति ॥ इदं ग्रहणादिश्राद्धमामे कर्तव्यम् । तथा बोधायनः —— सङ्क्रमेऽन्न द्विजाभावे प्रवासे पुत्रजन्मनि । आमश्राद्धं सङ्ग्रहे च द्विजः शूद्रस्सदाऽऽचरेत् इति ॥ सङ्क्रमे च, अन्नाभावे च द्विजाभावे च, प्रवासादौ, सङ्ग्रहे - ग्रहणे चेत्यर्थः । (हिरण्ये तूदकं पश्चात् मृतेऽहनि परेऽहनीति वचानात् तदनन्तरमेव तर्पणं कार्यम् । प्रतिनिधित्वेन तिलतर्पणे क्रियमाणे पितृतर्पणानन्तरं क्षेत्रपिण्डदानमिति पूर्णसंग्रहे)

இவ்வசனத்தில் 'ராஹுதர்சனே' என்றிருப்பதால் ஸங்க்ரமணம் முதலியதில் ஆசௌசம் ஸம்பவித்தால் ச்ராத்தம் செய்யப்பட வேண்டாம் என்று சொல்லியதாய் ஆகின்றது. இந்த க்ரஹண ச்ராத்தத்தை ஆமத்தினால் செய்ய வேண்டும். அவ்விதம் சொல்லுகிறார், போதாயனர்:— ஸங்க்ரமணத்திலும், அன்னாபாவத்திலும், ப்ராம்ஹணா பாவத்திலும், ப்ரவாஸத்திலும், புத்ரஜனனத்திலும், க்ரஹணத்திலும் ஆம ச்ராத்தத்தைச் செய்யவும். சூத்ரன்

எப்பொழுதுமே ஆம ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். (ஹிரண்ய ச்ராத்தத்தில் பின் உதகதானம் மரண தினத்திலும் மறுநாளும் என்பதால் பின் தான் தர்பணம். ச்ராத்தத்திற்குப் ப்ரதிநிதியாக தில தர்பணம் செய்வதானால், தர்ப்பணத்திற்குப் பின் க்ஷேத்ர பிண்ட தானம் என பூர்ணஸங்கிரஹத்தில்)

श्राद्धोद्देश्याः

पितुर्मृताहे पितृपितामहप्रपितामहास्त्रय एवोद्देश्याः । मातुर्मृताहे मातृपितामहीप्रपितामह्य एव देवताः ।। तदुक्तं सायणीये — पितुः प्रत्याब्दिकं कार्यमुद्दिश्यैव त्रिपूरुषम् । वर्गान्तरं न वृणुयाद्वृतं चेन्निष्फलं भवेत् ।। पुंसां मृताहे पुरुषा एव भोज्या न तु स्त्रियः । एवं स्त्रीणां मृताहेऽपि स्त्रिय एव न चापरे इति । प्रयोगसारे — पितुरेव पितुः कुर्यान्मातुरेव मृतेऽहनि । मोहाच्चेदन्यथा कुर्याद्रौरवं नरकं व्रजेत् इति ।

ச்ராத்தத்தில் உத்தேச்யர்

பிதாவின் ச்ராத்தத்தில், பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்கள் என்ற மூவரே உத்தேச்யர்கள். மாதாவின் ச்ராத்தத்தில் மாத்ரு பிதாமஹீ ப்ரபிதாமஹிகள் என்ற மூவரே உத்தேச்யர்கள். ஸாயணீயத்தில்:— பிதாவின் ப்ரத்யாப்திகத்தை மூன்று பேர்களை உத்தேசித்தே செய்யவும். வேறு வர்க்கத்தை வரித்தால் ச்ராத்தம் நிஷ்பலமாகும். புருஷர்களின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் புருஷர்களையே புஜிப்பிக்கவும். ஸ்த்ரீகளைப் புஜிப்பிக்கக் கூடாது. இவ்விதம் ஸ்த்ரீகளின் ம்ருதாஹத்திலும் ஸ்த்ரீகளையே புஜிப்பிக்கவும். மற்றவரைப் புஜிப்பிக்கக் கூடாது. ப்ரயோகஸாரத்தில்:— பிதாவின் ச்ராத்தத்தில் பிதாவுக்கு மட்டுமே செய்ய வேண்டும். மாதாவின் ம்ருதாஹத்தில் மாதாவுக்கு மட்டும் செய்ய வேண்டும். அறியாமையால் மாறிச் செய்தால் ரௌரவ நரகத்தை அடைவான்.

पाद्मेऽपि — पितुरेव पितुः कुर्यान्मातुरेव मृतेऽहनि । यदि कुर्यात् सपत्नीकं तत् श्राद्धमसुरालयम् इति । पितुर्मृताहे पित्रादीनामेव कुर्यात्, न सपत्नीकानाम्, मातुर्मृताहे मात्रादीनामेव कुर्यादित्यर्थः । तथा च शङ्खः — पित्रादित्रयपत्नीनां भोज्या मातॄः प्रति द्विजाः । स्त्रीणामेव तु तस्मात्तु मातृश्राद्धमिहोच्यते इति । मातॄः प्रति - मातृपितामहीप्रपितामहीरुद्दिश्य भोज्या द्विजाः पित्रादित्रयपत्नीनां स्त्रीणामिह पृथगेवैतत् श्राद्धं यस्मात्तस्मान्मातृश्राद्धमुच्यत इत्यन्वयः ।

பாத்மத்திலும்:— பிதாவின் ம்ருதாஹத்தில் பித்ராதிகளுக்கு மட்டில் செய்யவும். மாதாவின் ம்ருதாஹத்தில் மாத்ராதிகளுக்கு மட்டில் செய்யவும். பிதாவின் ம்ருதாஹத்தில் ஸபத்னீகர்களான பித்ராதிகளை உத்தேசித்துச் செய்தால் அந்த ச்ராத்தம் அஸுரர்களைச் சேரும். அவ்விதமே, சங்கர்:— 'பித்ராதி+மிஹோச்யதே' என்றார். இதன் பொருள்:— 'மாத்ரூ:ப்ரதி = மாத்ரு பிதாமஹி ப்ரபிதாமஹிகளை உத்தேசித்து ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். பிதா முதலிய மூவர்களின் பத்னிகளான ஸ்த்ரீகளுக்கு இங்கு தனியே இந்த ச்ராத்தம் ஆகியதால் மாத்ரு ச்ராத்தம் எனப்படுகிறது, என அன்வயம்' என்று.

शातातपः — सपिण्डीकरणं कृत्वा कुर्यात् पार्वणवत् सदा । प्रतिसंवत्सरं विद्वांश्छागलेयोदितो विधिः । नान्दीमुखेऽष्टकाश्राद्धे गयायां च मृतेऽहनि । पितामह्यादिभिस्सार्द्धं मातुः श्राद्धं समाचरेत् इति । यमः — अन्वारोहे तु भर्त्रैव मातुस्सह सपिण्डनम् । सपिण्डीकरणादूर्ध्वं पितामह्यादिभिस्सह इति । हारीतः — अनुयाने तु सापिण्ड्यं जनकेन सहात्मजः । पितामह्यादिभिः सार्धमाब्दिक श्राद्धमाचरेत् इति ।

சாதாதபர்:— ஸபிண்டீகரணம் செய்து பிறகு, எப்பொழுதும் ப்ரதி வர்ஷமும் பார்வண விதியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்பது சாகலேயரால்

சொல்லப்பட்ட விதி ஆகும். நாந்தீ ச்ராத்தம், அஷ்டகா ச்ராத்தம், கயா ச்ராத்தம், ம்ருதாஹ ச்ராத்தம் இவைகளில், மாதாவின் ச்ராத்தத்தை, பிதாமஹ்யாதிகளுடன் சேர்த்துச் செய்யவும். யமன்:— அன்வாரோஹண விஷயத்தில் மாதாவின் ஸபிண்டீகரணத்தைப் பிதாவுடன் சேர்த்துச் செய்யவும். ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு பிதாமஹீ முதலியவருடன் சேர்த்துச் செய்யவும். ஹாரீதர்:— அனுமரண விஷயத்தில் மாதாவின் ஸாபிண்ட்யத்தைப் புத்ரன் பிதாவுடன் சேர்த்துச் செய்யவும். ஆப்திகச்ராத்தத்தை, பிதாமஹீ முதலியவருடன் சேர்த்துச் செய்யவும்.

स्मृत्यन्तरे — मातुर्मृताहे पित्रादीन्पूजयेद्यदि नाशयेत्। तथा पितुर्मृताहे तु न पूज्या मातरः स्मृताः इति। अन्यत्रापि — मातुर्मृताहे पित्रादीन्नाशयेद्द्विजसत्तमः। तथा पितुर्मृताहेऽपि न भोज्याः तत् स्त्रियः स्मृताः इति। नाशयेत् - न भोजयेदित्यर्थः। पारिजाते — पित्रोः श्राद्धे समायाते तत्तद्वर्गं निमन्त्रयेत्। वर्गान्तरं न वृणुयाद्वृतं चेन्निष्फलं भवेत्। मातृश्राद्धं मातृवर्गवरणेनैव कारयेत्। तत्र पित्रादिवर्गस्य वरणे मातृहा भवेत् इति।

ஓர் ஸ்ம்ருதியில்:— மாதாவின் ச்ராத்தத்தில் பித்ராதிகளைப் பூஜித்தால் புஜிப்பிக்கக் கூடாது. அவ்விதம் பிதாவின் ச்ராத்தத்தில் மாதா முதலியவரைப் பூஜிக்கக்கூடாது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— மாதாவின் ச்ராத்தத்தில் பிதா முதலியவரை நஆசயேத் - புஜிப்பிக்கக் கூடாது. அவ்விதம் பிதாவின் ச்ராத்தத்திலும் மாதா முதலியவரைப் புஜிப்பிக்கக் கூடாது. பாரிஜாதத்தில்:— மாதா பிதாக்களின் ச்ராத்தம் வந்த பொழுது, அந்தந்த வர்க்கத்தை வரிக்க வேண்டும். வேறு வர்க்கத்தை வரிக்கக் கூடாது. வரித்தால் ச்ராத்தம் நிஷ்பலமாய் ஆகும். மாத்ரு ச்ராத்தத்தை மாத்ரு வர்க்கத்தை மட்டில் வரித்துச் செய்யவும். அதில் பிதா முதலிய வர்க்கத்தை வரித்தால் மாதாவை ஹிம்ஸித்தவனாவான்.

स्मृत्यन्तरे — प्रत्यब्दाङ्गं तिलं दद्यान्निषिद्धेऽपि परेऽहनि। वर्गैकस्य वचो येषामन्येषां तु विवर्जयेत् इति। येषां - पितृपितामहप्रपितामहानां मातृपितामहीप्रपितामहीनां वा, वचः - उद्देश्यत्वोक्तिः, तेषामेकस्य वर्गस्य निषिद्धेपि परदिने तिलोदकं दद्यात्। अन्येषाम् - अनुद्दिष्टानां वर्जयेदित्यर्थः। ततश्चैकस्य वर्गस्य तिलोदकविधानात् 'यानुद्दिश्य भवेत् श्राद्धं तेभ्यस्तर्पयति द्विजः इति विष्णुपुराणाच्च, कर्षूसमन्वितं मुक्त्वा तथाऽऽद्यश्राद्धषोडशम्। प्रत्याब्दिकं च शेषेषु पिण्डाः स्युष्षडिति स्थितिः इति कात्यायनेन प्रत्याब्दिकपर्युदासेन षट्पिण्डविधानाच्च एकस्यैव वर्गस्योद्देश्यत्वम्।

ஓர் ஸ்ம்ருதியில்:— 'ப்ரத்யப்தாங்கம் + விவர்ஜயேத்' என்று. இதன் பொருள்:— யேஷாம் = எவர்களுக்கு, பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்கோ மாத்ரு பிதாமஹீ ப்ரபிதாமஹிகளுக்கோ, வச: — உத்தேச்யத்வம் சொல்லப்பட்டு உள்ளதோ, அவர்களின் ஒரு வர்க்கத்திற்கு, நிஷித்தமாய் உள்ளதாயினும் மறு தினத்தில் திலோதகத்தைக் கொடுக்க வேண்டும். அன்யேஷாம் = உத்தேசிக்கப்படாதவர்களுக்கு, விவர்ஜயேத் = தர்ப்பணத்தைச் செய்யக் கூடாது என்பது. அவ்விதம் இருப்பதால் ஒரு வர்க்கத்திற்குத் திலோதகம் விதிக்கப்படுவதாலும், 'எவர்களை உத்தேசித்து ச்ராத்தம் செய்யப்படுமோ அவர்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும்' என்று விஷ்ணு புராண வசனத்தாலும், 'கர்ஷூச்ராத்தம் = ஸபிண்டீகரணம், ஆத்ய ச்ராத்தம், ஷோடச ச்ராத்தம், ப்ரத்யாப்திகம் இவைகளைத் தவிர்த்து மற்ற ச்ராத்தங்களில் ஆறு பிண்டங்கள் விதிக்கப்படுகின்றன' என்று காத்யாயனரால் ப்ராத்யாப்திகத்தைத் தவிர்த்து மற்றதில் ஆறு பிண்டங்கள் விதிக்கப்படுவதாலும் ஒரு வர்க்கத்திற்கு மட்டில் உத்தேச்யத்வம்.

अत्र पितृमेधसारकृत् — मातृमृताहे मात्रादय एव भोज्याः, न पित्रादयः, निषेधादयुग्मत्वविरोधात् पार्वणत्वभङ्गादाचाराभावाच्च इति। निमन्त्रयेत त्र्यवरान् सम्यग्विप्रान् यथोदितान्। अयुग्मांस्त्र्यवराननथपिक्षो भोजयेत् इति मन्वापस्तम्बादिभिरयुग्म-ब्राह्मणभोजनं विहितम्, तत्र पित्रादीनामपि भोजने अयुग्मत्वविरोध इत्यर्थः। अत्र विज्ञानेश्वरः — येन केनापि मातुः सापिण्ड्ये यत्राष्टकादिषु मातृश्राद्धं पृथग्विहितम्, अष्टकासु च वृद्धौ च गयायां च मृतेऽहनि। मातृश्राद्धं पृथक्कुर्या दन्यत्र पतिना सह इति, तत्र पितामह्यादिभिरेव पार्वण श्राद्धं कर्तव्यम् इति।

இவ்விஷயத்தில், பித்ருமேதஸாரகாரர்:— மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் மாத்ராதிகளையே புஜிப்பிக்கவும். பித்ராதிகளைப் புஜிப்பிக்கக்கூடாது. நிஷேதம் இருப்பதாலும், ஒற்றைப்படையாய் இருக்க வேண்டும் என்பதற்கு விரோதம் ஆவதாலும், பார்வணத்திற்குப் பங்கம் ஆவதாலும், ஆசாரம் இல்லாததாலும், 'மூன்று பேர்களுக்குக் குறையாமல், முன் சொல்லியபடி லக்ஷணமுள்ள ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். 'ஒற்றைப் படையாய் உள்ளவரும், மூன்றுக்குக் குறையாதவர்களும் ஆகிய ப்ராம்ஹணர்களை, ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் என்று மனு ஆபஸ்தம்பர் முதலியவர்களால் ஒற்றைப்படையான ப்ராம்ஹணர் களுக்குப் போஜனம் விதிக்கப்பட்டுள்ளது. அதில் பிதா முதலியவரையும் புஜிப்பித்தால் அயுக்மத்வத்திற்கு விரோதம் வரும் என்பது பொருள். இவ்விஷயத்தில், விஜ்ஞானேச்வரர்:— 'எவனுடனாவது மாதாவுக்கு ஸாபிண்ட்யம் செய்யப்பட்டு இருந்தாலும், எந்த அஷ்டகை முதலியவைகளில் மாத்ரு ச்ராத்தம் தனியாய் விதிக்கப்பட்டு உள்ளதோ, 'அஷ்டகைகளிலும், நாந்தியிலும், கயையிலும், ம்ருதாஹத்திலும், மாதாவுக்கு ச்ராத்தத்தைத் தனியாய்ச் செய்யவும். மற்றவைகளில் பதியுடன் சேர்த்துச் செய்யவும்' என்று, அவைகளில்

பிதாமஹீ முதலியவருடனேயே பார்வண ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்றார்.

एवं पितृश्राद्धे पित्रादय एव भोज्याः न मांत्रादयः । अत्र तात्पर्यदर्शनम्— अत्र यद्यपि मात्रादिभ्यः पृथगेव पिण्डदानदर्शनम्, तथाऽपि तासां पृथक् ब्राह्मणभोजनं न भवति, होमाभिमर्शनयोः पृथक्त्वादर्शनात् पितृमात्रर्थब्राह्मणसङ्ख्या-सङ्कलने सत्ययुग्मत्व-विरोधादाचाराभावाच्च । अपि च अष्टकासु च वृद्धौ च' इति वचनादष्टकादिभ्योऽन्यत्र मासिश्राद्धादौ पृथक्त्वा-भावः स्पष्ट एवावगम्यते इति। पृथगुद्देशाभावेऽपि मातृवर्गस्यापि तत्र तृप्तिर्भवति इत्युक्तं चन्द्रिकायाम्। बृहस्पतिरपि — स्वेन भर्त्रा समं श्राद्धं माता भुङ्क्ते सदैवतम् । पितामही तथा स्वेन स्वेनैव प्रपितामही इति । सदैवतम्— पार्वणश्राद्धमित्यर्थः ।

இவ்விதம் பித்ரு ச்ராத்தத்தில் பிதா முதலியவரையே புஜிப்பிக்க வேண்டும். மாதா முதலியவரைப் புஜிப்பிக்கக் கூடாது. இவ்விஷயத்தில், தாத்பர்ய தர்சனம்:— 'இவ்விடத்தில் மாதா முதலியவர்க்குத் தனியே பிண்டதானம் காணப்படுகிறது தான். அப்படி இருந்தாலும் அவர்களுக்குத் தனியாய் ப்ராம்ஹண போஜனம் கிடையாது. ஹோமம் அபிமர்சனம் இவைகள் தனியாய்க் காணப்படாததால், பிதா மாதா இருவர்களுக்குமாகிய ப்ராம்ஹணர்களின் கணக்கைக் கூட்டினல் ஒற்றைப்படைத் தன்மைக்கு விரோதம் ஆவதாலும், ஆசாரம் இல்லாததாலும்' என்று உள்ளது. இனியும் 'அஷ்டகாஸுச வ்ருத்தெளச' என்ற வசனத்தால் அஷ்டகாதிகளைத் தவிர்த்த மாஸிச்ராத்தம் முதலியதில் தனியாய் என்பது இல்லை என்பது ஸ்பஷ்டமாகவே அறியப்படுகிறது' என்று உள்ளது. 'தனியாய் உத்தேசிக்கப்படாவிடினும், மாத்ரு வர்கத்திற்கும் அதில்

த்ருப்தி உண்டாகின்றது' என்று சொல்லப்பட்டுள்ளது சந்த்ரிகையில், ப்ருஹஸ்பதியும்:— ஸதைவதம் ச்ராத்தம் = பார்வணச்ராத்தத்தை, மாதா தனது பர்த்தாவோடு கூடிப் புஜிக்கிறாள். பிதாமஹியும் அப்படியே. ப்ரபிதாமஹியும் தனது பர்த்தாவுடனேயே புஜிக்கின்றாள்.

शातातपः — एकमूर्तित्वमायाति सपिण्डीकरणे कृते । पत्नीपतिपितृणां तु तस्मादंशेषु भागिनी इति । स्मृत्यन्तरेऽपि — सपिण्डीकरणादूर्ध्वं यत् पितृभ्यः प्रदीयते। सर्वत्रांशहरा माता त्विति धर्मेषु निश्चयः इति। मनुः — स्नेहाद्भर्त्रा समं श्राद्धं माता भुङ्क्ते स्वधाशनम्। पितामही स्वधां स्वेन तथैव प्रपितामही इति।

சாதாதபர்:— ஸபிண்டீகரணம் செய்யப்பட்ட பின் பத்னீ ஏக சரீரத்வத்தை அடைகிறாள். ஆகையால் அவள் பதியின் பித்ருக்களின் அம்சங்களில் பாகம் உடையவள் ஆகிறாள். ஓர் ஸ்ம்ருதியிலும்:— ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு, எது பித்ருக்களுக்குக் கொடுக்கப்படுகிறதோ, அது எல்லாவற்றிலும் மாதா பாகத்தை அடைகின்றவள், என்பது தர்மசாஸ்த்ரங்களிலுள்ள நிர்ணயம். மனு:— மாதா தனது பர்த்தாவுடன் ஸ்நேஹத்தால் ச்ராத்தான்னத்தைப் புஜிக்கின்றாள். பிதாமஹியும் அப்படியே, ப்ரபிதாமஹியும் அப்படியே.

चन्द्रिकायाम् — एभिर्वचनैः सपिण्डीकरणोत्तरकालं पत्यादिदेवत्ये श्राद्धे पृथगुद्देशाभावेऽपि मातृणां सहभावेन देवतात्वं भवतीत्येतावन्मात्रमभिधीयते, न तु येन सह सपिण्डीकरणं कृतम्, तद्देवत्ये श्राद्धे सहभावेन देवतात्वम्, एषु वचनेषु तथाविधविशेषानवगमात् । ततश्च पितामह्यादिभिः सह सपिण्डीकृतायामष्टकादिभ्योऽन्यत्र मातुर्न पृथक् श्राद्धम् इति । पितृमेधसारेऽपि — श्वश्रूवादिसापिण्ड्येऽपि दर्शमासिश्राद्धादौ पित्रादिभिरेव सह मात्रादयो भुञ्जते । अर्घ्यसंसर्गेण भर्तृसाहित्यात्

स्नेहाच्च। तदर्थं हि पित्रर्घ्येषु मात्रर्घ्यसंसर्गं कुर्वन्ति इति।

சந்த்ரிகையில்:— இந்த வசனங்களால் ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு பதி முதலியவரைத் தேவதையாய் உடைய ச்ராத்தத்தில் தனியாய் உத்தேசம் இல்லாவிடினும், மாதாக்களுக்குக் கூட இருப்பதால் தேவதாத்வம் உண்டாகின்றது, என்ற இவ்வளவு மட்டில் சொல்லப்படுகிறது, இதன்றி, எவனுடன் ஸபிண்டீகரணம் செய்யப்பட்டதோ அவனைத் தேவதையாய் உடைய ச்ராத்தத்தில் கூடவே தேவதாத்வம் உண்டு என்பது சொல்லப்படவில்லை. இந்த வசனங்களில் அவ்விதமான விசேஷம் அறியப்படாததால். ஆகையால் பிதாமஹ்யாதிகளுடன் ஸபிண்டீகரணம் செய்யப்பட்ட பின் அஷ்டகாதிகளைத் தவிர்த்து மற்ற ச்ராத்தங்களில் மாதாவுக்குத் தனியாய்ச் ச்ராத்தமில்லை. பித்ருமேத ஸாரத்திலும்:— மாமியார் முதலியவருடன் ஸாபிண்ட்யம் செய்யப்பட்டு இருந்தாலும், தர்சம் மாஸி ச்ராத்தம் முதலியவைகளில் பிதா முதலியவருடன் சேர்ந்தே மாதா முதலியவர் பூஜிக்கின்றனர். அர்க்ய ஸம்ஸர்கம் செய்து இருப்பதால் பர்த்தாவின் சேர்க்கை ஏற்பட்டு இருப்பதாலும், ஸ்நேஹத்தாலும். அதற்காகவே பித்ரர்கியங்களில் மாத்ரர்க்யத்தைச் சேர்க்கின்றனர்.

एवं च अष्टकादिष्वेव पृथक्त्वविधानात् तद्व्यतिरिक्तेषु युगादिमन्वादिदर्शमासिश्राद्धादिषु पृथगुद्देशाभावोऽवगम्यते । यत्तु चतुर्विंतिमतेऽभिहितम्— केचिदिच्छन्ति नारीणां पृथक् श्राद्धं महर्षयः इति, तदष्टकादिविषयम्, अत्र अष्टकासु च वृद्धौ च इति वचनं पूर्वमुक्तम्। तथा जातुकर्णिः — अन्वष्टक्यं तथा वृद्धिं मातुः श्राद्धं मृतेऽहनि। एकोद्दिष्टं तथा मुक्त्वा स्त्रीणां नास्ति पृथक् क्रिया इति ।

இவ்விதம் இருப்பதால், அன்வஷ்டகை முதலியவைகளிலேயே தனிமை விதிக்கப்பட்டு இருப்பதால், அவைகளைத் தவிர்த்த யுகாதி, மன்வாதி, தர்ச,

மாஸி ச்ராத்தங்கள் முதலியவைகளில் தனியாய் உத்தேசிப்பது என்பது இல்லை என்பது தோன்றுகிறது. ஆனால், சதுர்விம்சதிமதத்தில்:— 'சில மஹர்ஷிகள் ஸ்த்ரீகளுக்கும் தனியே ச்ராத்தத்தை விரும்புகின்றனர்' என்றுள்ளதே ? எனில், அது அஷ்டகாதிகளைப் பற்றியது. இதில் 'அஷ்டகாஸு ச வ்ருத்தௌச' என்ற வசனம் முன்பு சொல்லப்பட்டுள்ளது. அவ்விதம், ஜாதுர்கணி:— அன்வஷ்டகை, நாந்தீ, மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தம், ஏகோத்திஷ்டம் இவைகளைத் தவிர்த்து ஸ்த்ரீகளுக்குத் தனியாய் ச்ராத்த க்ரியை கிடையாது.

चन्द्रिकायाम् — अष्टकासु च वृद्धौ च प्रतिसंवत्सरे तथा। अत्र मातुः पृथक् श्राद्धमन्यत्र पतिना सह इति। तत्रैव — क्षयाहं वर्जयित्वैकं स्त्रीणां नास्ति पृथक् क्रिया। केचिदिच्छन्ति नारीणामन्यत्रापि महर्षयः इति। अन्यत्र - अष्टकादिषु॥ पारिजाते — अष्टकासु च वृद्धौ च प्रतिसंवत्सरे तथा। महालये गयायां च सपिण्डीकरणात् पुरा। एषु मातुः पृथक्कुर्यादन्यत्र पतिना सह इति।

சந்த்ரிகையில்:— அஷ்டகை, நாந்தீ, ப்ரதி ஸாம்வத்ஸரிகம் இவைகளில் மாதாவுக்குத் தனியே ச்ராத்தம். மற்றவைகளில் பதியுடன் ச்ராத்தம். சந்த்ரிகையிலேயே:— ம்ருதாஹ ச்ராத்தம் ஒன்றை தவிர்த்து மற்றதில் ஸ்த்ரீகளுக்குத் தனியாய் ச்ராத்தம் கிடையாது. சில மஹர்ஷிகள், அன்யத்ராபி = அஷ்டகை முதலியதிலும் ஸ்த்ரீகளுக்குத் தனி ச்ராத்தத்தை விரும்புகின்றனர். பாரிஜாதத்தில்:— அஷ்டகைகளிலும், நாந்தியிலும், ம்ருதாஹ ச்ராத்தத்திலும், மஹாளயத்திலும், கயையிலும், ஸபிண்டீகரணத்திற்கு முன்பு மாதாவுக்குத் தனியாய்ச் செய்யவும். மற்றவைகளில் பதியுடன் சேர்த்துச் செய்யவும்.

स्मृत्यन्तरे — अष्टकासु च वृद्धौ च गयायां च महालये। चन्द्रसूर्योपरागे च व्यतीपाते मृतेऽहनि॥ मातुश्श्राद्धं पृथक्कुर्यादन्यत्र

पतिना सह इति। अन्वष्टकादौ मातृपितामहीप्रपितामह्यः पृथक् तत्र विहितदेवताभिः सहोद्देश्याः । मातृश्राद्धे तु ता एवोद्देश्याः । अष्टकावृद्धिमहालयोपरागव्यतीपातव्यतिरिक्तेषु पतिभोजने तासां सह तृप्तिरित्यर्थः। शातातपोऽपि — मासिके चाब्दिके श्राद्धे मातुः कुर्यात् पृथग्विधिम् इति।

ஓர் ஸ்ம்ருதியில்:— அன்வஷ்டகை, வ்ருத்தி, கயை, மஹாளயம், சந்த்ர ஸூர்ய க்ரஹணம், வ்யதீபாதம், ம்ருதாஹம் இவைகளில் மாத்ரு ச்ராத்தத்தைத் தனியாய்ச் செய்யவும். மற்றவைகளில் பதியுடன் செய்யவும். அன்வஷ்டகை முதலியதில் மாத்ருபிதாமஹீ ப்ரபிதாமஹிகள் தனியாய் அவைகளில் விதிக்கப்பட்ட தேவதைகளுடன் உத்தேச்யர்கள். மாத்ரு ச்ராத்தத்தில் ஆனால் அவர்கள் மட்டில் உத்தேச்யர்கள். அஷ்டகா, நாந்தீ, மஹாளயம், க்ரஹணம், வ்யதீபாதம் இவைகளைத் தவிர்த்த மற்றவைகளில் பதிபோஜனத்தால் அவர்களுக்கும் சேர்ந்து த்ருப்தி உண்டாகின்றது, என்பது பொருள். சாதாதபரும்:— மாஸிகத்திலும், ஆப்திக ச்ராத்தத்திலும், மாதாவுக்குத் தனியாய்ச் செய்யவும்.

यत्तु — सपत्नीकत्वहानेऽपि पितुर्दार्शं समाचरेत्। पितामहादिषु तथा सपत्नीकत्वसम्भवात् इति। तस्यार्थः - मातरि स्थितायामपि पितामहादीनां दार्शं पिण्डं तिलोदकं च समाचरेदिति । एवं च पितृमृताहे पितृपितामहप्रपितामहानामेवोद्देश्यत्वम्, मातृमृताहे मातृपितामहीप्रपितामहीनामेवोद्देश्यत्वं न पित्रादीनामिति स्थितम्।

ஆனால்:— 'பிதாவுக்கு ஸபத்னீகத்வம் இல்லாவிடினும், (மற்றவர்க்கும்) தர்சச்ராத்தத்தைச் செய்யவும். பிதாமஹன் முதலியவர் இடத்தில் ஸபத்னீகத்வம் ஸம்பவிப்பதால், என்ற வசனம் உள்ளதே ? எனில், அதற்கு அர்த்தம் இது:— மாதா ஜீவித்து இருந்தாலும்,

பிதாமஹீ முதலியவர்க்குத் தர்ச ச்ராத்தத்திய பிண்டம் திலோதகம் இவைகளைக் கொடுக்க வேண்டும் என்று. இவ்விதம் இருப்பதால், பிதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்கு மட்டில் உத்தேச்யத்வம். மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில், மாத்ரு பிதாமஹீ ப்ரபிதாமஹிகளுக்கு மட்டில் உத்தேச்யத்வம். பிதா முதலியவர்க்கு உத்தேச்யத்வம் இல்லை, என்பது நிலைத்தது.

ननु माभूत् पितृमृताहे मातुरुद्देश्यता, तद्विधायकवचनाभावात्। मातुर्मृताहे तु, मातुर्मृताहे संप्राप्ते पितरं तत्र पूजयेत्। अपूजिते तु पितरि मात्रा पिण्डो न गृह्यते इति विधिबलेन पितुरप्युद्देश्यता स्यादिति चेत्, अत्र केचिदाहुः — वचनमेतदापस्तम्बिनां मातृमृताहे पित्रादेर्होम पिण्डदानविधिपरम्। तत एव - मात्रा पिण्डो न गृह्यते इत्युक्तम्।

பிதாவின் ம்ருதாஹத்தில் மாதாவுக்கு உத்தேச்யத்வம் வேண்டாம். அதை விதிக்கும் வசனங்கள் இல்லாததால். மாதாவின் ம்ருதாஹத்திலோ வெனில் 'மாதாவின் ம்ருதாஹம் ப்ராப்தம் ஆனால் அதில் பிதாவையும் பூஜிக்கவும். பிதா பூஜிக்கப்படாவிடில் மாதாவினால் பிண்டம் க்ரஹிக்கப்படுவது இல்லை' என்ற விதிவசன பலத்தால், பிதாவுக்கும் உத்தேச்யத்வம் வரக்கூடுமே ? எனில், இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர். இந்த வசனம் ஆபஸ்தம்பீயர்களுக்கு மாதாவின் ம்ருதாஹத்தில் பிதா முதலியவர்க்கு ஹோம பிண்டங்களைக் கொடுக்க வேண்டும் என்ற விதியில் தாத்பர்யம் உள்ளது. ஆகையாலேயே, 'மாத்ராபிண்டோ ந க்ருஹ்யதே' என்று சொல்லப்பட்டது.

तथा च स्मृत्यन्तरे — स्त्रीमृताहे स्त्रियो भोज्याः पितरः स्त्रीसपिण्डने। पित्रादेरेव होमः स्यात् पिण्डदानं तु वर्गयोः इति। मातृमृताहे पित्रादेरेव होमो मात्रादेरेव भोजनम्, स्त्रीसपिण्डने पित्रादेरेव भोजनम्, उभयत्र वर्गद्वयस्यापि पिण्डदानमित्यर्थः। एतच्चापस्तम्बिनाम्। अन्येषां तु यथासूत्रं द्रष्टव्यम्। विष्णुः — मातुर्मृताहे पित्रादीन्

होमपिण्डैः प्रपूजयेत् इति। सङ्ग्रहेऽपि — मातुः श्राद्धे तु पित्रादीन् होमपिण्डैः प्रपूजयेत्। पिण्डहोमौ परित्यज्य श्राद्धं च कुरुते यदि। सन्ततेस्तु विनाशाय सम्पदो हरणाय च इति।

அவ்விதமே, ஓர் ஸ்ம்ருதியில்:— 'ஸ்த்ரீயின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் ஸ்த்ரீகளைப் புஜிப்பிக்கவும். ஸ்த்ரீயின் ஸாபிண்ட்யத்தில் பித்ருக்களைப் புஜிப்பிக்கவும். பித்ராதிகளுக்குத் தான் ஹோமம். பிண்டதானம் இரண்டு வர்க்கங்களுக்கும்' என்று உள்ளது. மாதாவின் ம்ருதஹாத்தில் பிதா முதலியவர்க்கே ஹோமம், மாதா முதலியவர்க்கே போஜனம், ஸ்த்ரீ ஸாபிண்ட்யத்தில் பித்ருக்களுக்கே போஜனம். இரண்டு இடங்களிலும் இரண்டு வர்க்கங்களுக்கும் பிண்டதானம் என்பது பொருள். இது ஆபஸ்தம்பீயர்களுக்கு. மற்றவர்க்கானால் அவரவர் ஸூத்ரப்படி அறிந்து கொள்ளவும். விஷ்ணு:— மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் பிதா முதலியவர்களை ஹோம பிண்டங்களால் பூஜிக்கவும். ஸங்க்ரஹத்திலும்:— மாதாவின் ச்ராத்தத்தில் பிதா முதலியவர்களை ஹோம பிண்டங்களால் பூஜிக்கவும். ஹோம பிண்டங்களை விட்டு ச்ராத்தத்தைச் செய்தானாகில் ஸந்ததியும், ஸம்பத்தும் நாசத்தை அடையும்.

अन्यत्रापि — पिता जीवेन्मृता माता तद्दिने होमदेवताः। पितामहादयो ह्येव तदुद्देशात् कृतार्थता। मन्त्रेऽमुष्मा इति बलात् पितरो होमदेवताः। ये च त्वामनुयाश्चेति बलात् पिण्डास्तु वर्गयोः। पत्नीपतीनां श्रुत्यक्तभेदराहित्यवैभवात्। सप्ताहुतीनां पित्रादेरुद्देशाच्चरितार्थता। पित्रोः श्राद्धे समायाते पार्थक्येनाथ वा सह। सप्ताहुतीस्तु जुहुयाच्चोद्देशो मातुरिष्यते इति।

மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— பிதா ஜீவித்திருக்கும் பொழுது மாதா இறந்தால் மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில்

ஹோம தேவதைகள் பிதாமஹாதிகள். அந்த உத்தேசத்தால் ஸார்த்தக்யம் உண்டாகிறது. ஹோம மந்த்ரத்தில் 'அமுஷ்மை' என்ற பதத்தின் பலத்தால் பித்ருக்கள் ஹோம தேவதைகள். 'யேசத்வாமனு, யாச்சத்வாமனு' என்ற பலத்தால் பிண்டங்கள் இரண்டு வர்க்கத்திற்கும். பத்னிகளுக்கும் பதிகளுக்கும் ச்ருதியில் சொல்லப்பட்டுள்ள அபேத மாஹாத்ம்யத்தால், ஏழு ஆஹுதிகளுக்கும் பித்ராதிகள் உத்தேச்யராவதால் சாரிதார்த்யம் உண்டாகிறது. மாதா பிதாக்களின் ச்ராத்தம் தனியாகவோ சேர்ந்தோ வந்தால் ஏழு ஆஹுதிகளை ஹோமம் செய்யவும். மாதாவுக்கு (ஹோமத்தில்) உத்தேசம் விதிக்கப்படவில்லை.

अपरे पुनराहुः — मातुर्मृताहे सम्प्राप्ते पितरं तत्र पूजयेत् इति वचनं होमपिण्डदानमात्रविधानपरं न भवति, किंतु पित्राद्युद्देशेन भोजनमपि तेन विधीयते। तथा च स्मृत्यन्तरे — मातुर्मृताहे सम्प्राप्ते पितरं भोजयेत् पुरा। मातरं भोजयेत् पश्चाद्द्वयोः पिण्डान् पृथक् पृथक् इति। शिवधर्मोत्तरे — मासिके चाब्दिके वाऽपि मातुर्मरणसम्भवे । पित्रा सहैव यद्भुक्तं तस्यास्तृप्तिकरं भवेत्। पित्रा हीनान् जनन्यास्तु मासिकादीन् करोति यः। तत्कुलस्य च नाशः स्यात्तस्यास्तृप्तिर्न जायते इति।

மற்றவரோவெனில் இவ்விதம் சொல்லுகின்றனர்:— 'மாதாவின் ம்ருதாஹம் ப்ராப்தம் ஆனால் அதில் பிதாவைப் பூஜிக்க வேண்டும்' என்ற வசனம் ஹோம பிண்ட தானத்தை விதிப்பதில் மட்டில் தாத்பர்யம் உள்ளது அல்ல. ஆனால் பித்ராதிகளை உத்தேசித்துப் போஜநம் செய்விப்பதும் அதனால் விதிக்கப்படுகிறது. அவ்விதமே, ஓர் ஸ்ம்ருதியில்:— 'மாதாவின் ம்ருதாஹத்தில் பிதாவை முந்திப் புஜிப்பிக்கவும். பிறகு மாதாவைப் புஜிப்பிக்கவும். இருவர்க்கும் பிண்டங்களைத் தனித்தனியே கொடுக்கவும்' என்று உள்ளது. சிவதர்மோத்தரத்திலும்:— மாதா

இறந்தால் அவளுடைய மாஸிகத்திலும் ஆப்திகத்திலும், பிதாவுடன் கூடியே புஜிப்பிக்கப்பட்டது எதுவோ அதுவே மாதாவுக்கு த்ருப்திகரமாய் ஆகும். பிதா இல்லாததாய் மாஸிகம் முதலியதை மாதாவுக்கு எவன் செய்கின்றானோ, அவனது குலமும் நாசமடையும், மாதாவுக்கும் த்ருப்தி உண்டாவதில்லை.

हारीतः — पित्र्यं तूभयसामान्यं मातुर्मृतदिने इति । भर्तृराधिक्यभावेन ह्युभौ च परिपूजयेत् । गरीयसी तु पुत्रस्य माता सम्भरणाद्यथा । पालनाद्भरणाद्भर्ता गरीयान् सर्वदा तथा इति । नारदः - भर्तुराधिक्यभावेन तस्यास्तृप्तिर्हि शाश्वती । मातृप्रीतिं समन्विच्छन् पितृप्रीतिं तथाऽऽचरेत् इति । व्यासः — मातरं पितरं चैव समत्वेनैव पूजयेत् । न्यूनातिरेकं कुर्वाणस्तामसीं गतिमाश्रयेत् इति ।

ஹாரீதர்:— பித்ர்யம் என்பது இருவருக்கும் ஸாதாரணமானது. மாதாவின் ம்ருத தினத்தில் பிதாவுக்கு ஆதிக்யம் இருப்பதால் இருவரையும் அதில் பூஜிக்க வேண்டும். புத்ரனுக்கு மாதா போஷிப்பதால் எப்படிப் பெரியவளோ, அப்படிப் பிதாவுக்கு அவளது பர்த்தா பாலநத்தாலும், பரணத்தாலும் எப்பொழுதும் பெரியவன். நாரதர்:— பர்த்தாவைப் பூஜிப்பதால் அவளுக்கு த்ருப்தி அழிவற்றதாகும். ஆகையால் மாதாவின் ப்ரீதியை விரும்புகிறவன் பிதாவுக்கு ப்ரீதியைச் செய்ய வேண்டும். வ்யாஸர்:— மாதாவையும் பிதாவையும் ஸமமாய்ப் பூஜிக்க வேண்டும். அதிகம் குறைவு இவைகளைச் செய்தால் நரகத்தை அடைவான்.

सङ्ग्रहेऽपि — पितुर्मृताहे पितरो हि भोज्याः पिण्डप्रदानं तु सहैव मात्रा । मातुर्मृताहे पितृवर्गपूर्वं भोज्याः स्त्रियः पिण्डविधौ षडत्र इति । जीवपितृकस्य मातृश्राद्धे विशेषमाहतुः शङ्खलिखितौ - ध्रियमाणे तु पितरि माता चेन्निधनं गता । पितुस्थाने स्वपितरं तत्स्थानेऽन्यं

नियोजयेत् इति। अस्यार्थः — वर्गादिर्यदि जीवेत्तु तं वर्गं परिवर्जयेत् इति वचनात् पितरि जीवति सति मातृश्राद्धे पितृवरणमकृत्वा तत्स्थाने स्वपितरं तूष्णीं भोजयेत्, मातृस्थाने च वरणपूर्वकमन्यं भोजयेत् इति।

**ஸங்க்ரஹத்திலும்:—** பிதாவின் ச்ராத்தத்தில் பித்ருக்களைப் புஜிப்பிக்கவும். பிண்டப்ரதானம் மாதாவுடன் சேர்த்தே. மாதாவின் ச்ராத்தத்தில் பித்ரு வர்க்கத்தை முன்னிட்டு ஸ்த்ரீகளுக்குப் போஜனம். பிண்டதானத்தில் பிண்டங்கள் ஆறு. பிதா ஜீவித்திருக்கும் பொழுது மாத்ரு ச்ராத்தத்தில் விசேஷத்தைச் சொல்லுகின்றனர் சங்க லிகிதர்கள்:— 'பிதா ஜீவித்திருக்கும் பொழுது மாதா மரணம் அடைந்தால் பித்ரு ஸ்தானத்தில் தனது பிதாவையும், அவளின் ஸ்தானத்தில் அன்யனையும் புஜிப்பிக்கவும்' என்று. இதன் பொருள்:— வர்க்கத்தின் முதலில் உள்ளவன் ஜீவித்து இருந்தால் அந்த வர்க்கத்தை வர்ஜிக்க வேண்டும் என்ற வசனத்தால், பிதா ஜீவித்து இருந்தால் மாத்ரு ச்ராத்தத்தில் பித்ரு வரணத்தைச் செய்யாமல் அந்த ஸ்தானத்தில் தனது பிதாவை வரணம் இல்லாமல் புஜிப்பிக்கவும். மாத்ரு ஸ்தானத்தில் வரணம் செய்து ஒருவனைப் புஜிப்பிக்கவும்' என்று.

चन्द्रिकायाम् — ध्रियमाणे तु पितरि पूर्वेषामेव निर्वपेत्। विप्रवद्वाऽपि तं श्राद्धे स्वकं पितरमाशयेत्। पिता यस्य तु वृत्तः स्याज्जीवेच्चापि पितामहः। पितामहो वा तत् श्राद्धं भुञ्जीतेत्यब्रवीन्मनुः इति।

तथा स्मृत्यन्तरे — जीवितस्तु पिता यस्य माता चेन्निधनं गता। तूष्णीं निवेश्य पितरं वरयेन्मातृवर्गजाः। होमकार्यं तदा तासां नास्त्येव पितृवर्गतः। पिण्डप्रदानमूहेन वर्गयोरुभयोरपि इति। होमकार्यं तासां नास्ति, पितृवर्गस्यैव होमः। पिता जीवेन्मृता माता तद्दिने होमदेवताः। पितामहाद्यो होम तदुद्देशात् कृतार्थता इति स्मरणात्।

சந்த்ரிகையில்:— பிதா ஜீவித்து இருக்கும் பொழுது அவனுக்கு முந்தியவர்களுக்குக் கொடுக்கவும் அல்லது தனது பிதாவை ப்ராம்ஹணனைப் போல் புஜிப்பிக்கவும். எவனுக்குப் பிதா இறந்து பிதாமஹன் ஜீவித்து உள்ளானோ அவனது ச்ராத்தத்தில் பிதாமஹனுவது புஜிப்பிக்கவும் என்றார் மனு. அவ்விதமே, ஓர் ஸ்ம்ருதியில்:— 'எவனது பிதா ஜீவித்து இருக்கும் பொழுது மாதா மரித்தாளோ, அவள் பிதாவை வரணம் இல்லாமல் உட்கார்த்தி, மாத்ரு வர்க்கத்தில் உள்ளவர்களை வரிக்கவும். அப்பொழுது அவர்களுக்கு ஹோமம் இல்லை. பித்ரு வர்க்கத்திற்கே ஹோமம். பிண்ட ப்ரதானம் இரண்டு வர்க்கங்களுக்கும் உண்டு' என்று. ஹோம கார்யம் மாத்ரு வர்க்கத்தில் உள்ளவர்க்கு இல்லை, பித்ரு வர்க்கத்திற்கே ஹோமம், 'பிதா ஜீவித்து இருக்கும் பொழுது மாதா இறந்தால் அந்த தினத்தில் ஹோம தேவதைகள் பிதாமஹன் முதலியவரே, அவர்களை உத்தேசிப்பதாலேயே மாத்ருவர்க்கத்தில் உள்ளவர்க்கும் த்ருப்தி' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

निगमेऽपि — यो वा जीवति पितॄणां तं भोजयेत् पितृस्थाने इत्येके जीवतामजीवतां वा देयमेवेति हिरण्यकेतुः इति। एतदेवाभिप्रेत्योक्तं पाद्मे — मातुर्मृताहे सम्प्राप्ते पितरं तत्र पूजयेत् । न जीवन्तमिति प्राहुर्गार्ग्यगौतमभार्गवाः इति । जीवन्तं पितरं वरणपूर्वकं न पूजयेदित्यर्थः । यत्तु कैश्चिदुक्तम् — जीवपितृकस्य पित्रादीनां होमपिण्डदाननिषेधपरमेतत् इति, तत्, पिता जीवेन्मृता माता पिण्डप्रदानमूहेनेति पूर्वोक्तवचनविरोधादुपेक्ष्यम्।

20. நிகமத்திலும்:— பித்ராதிகளுள் எவன் ஜீவித்து இருக்கின்றானோ அவனைப் புஜிப்பிக்கவும். பித்ரு ஸ்தானத்தில் என்றனர் சிலர். ஜீவித்து இருப்பவர்க்கும் ஜீவித்து இல்லாதவர்க்கும் கொடுக்கவே வேண்டும் என்றார் ஹிரண்ய கேது. இந்த அபிப்ராயத்துடனேயே சொல்லப்பட்டு

உள்ளது. பாத்மத்தில்:— மாதாவின் ச்ராத்தம் ப்ராப்தமானால் அதில் பிதாவைப் பூஜிக்கவும். ஜீவித்து இருக்கும் பிதாவைப் பூஜிக்கக் கூடாது என்றனர் கார்க்யர், கௌதமர், பார்கவர் இவர்கள். ஜீவித்து இருக்கும் பிதாவை வரண பூர்வமாய்ப் பூஜிக்கக் கூடாது என்பது பொருள். ஆனால்:— 'ஜீவிபித்ருகனுக்கு, பித்ராதிகளுக்கு ஹோம பிண்டதானத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யம் உள்ளது இந்த வசனம் என்று சிலர் சொல்லி உள்ளனரே ? எனில், அது 'பிதாஜீவேந்ம்ருதா மாதா, பிண்டப்ரதானமூஹேந' என்று முன் சொல்லிய வசனங்களின் விரோதத்தால் உபேக்ஷிக்கத் தகுந்தது.

तथा च पितृमेधसारकृत् — जीवपितृकस्य मातुः श्राद्धे पितुः पित्रादिभ्यो होमो वर्गद्वयस्य पिण्डदानं कार्यम् इति। अपरे तु — पितरं तत्र पूजयेत् इत्यादिवचनानां जीवत्पितृकमातृ श्राद्धविषयत्वात् योनिगोत्रमन्त्रान्तेवास्यसम्बन्धान् इति सगोत्रस्य निमन्त्रण निषेधात् अनिमन्त्रितस्य श्राद्धपङ्क्तौ भोजनदाने श्राद्ध कर्ताऽवृतानां तु इत्यादिना दोषाभिधानात् न जीवन्तमिति प्राहुर्गार्ग्यगौतमभार्गवाः इति पाद्मपुराणवचनात् प्रत्यक्षमर्चनं श्राद्धे निषिद्धं मनुरब्रवीत्, इति भविष्यत्पुराणवचनात् पितृस्थाने स्वपितरम् इत्यादेः शिष्टाचाराभावेनोपेक्ष्यत्वात् जीवपितृकस्य मातृश्राद्धे मातृपितामहीप्रपितामहीनामेव भोजनम्, होमः पितामहादेः पितृवर्गस्य, पिण्डदानमुभयोरित्याहुः।

அவ்விதமே, பித்ருமேதஸாரகாரர்:— 'ஜீவபித்ருகனின் மாத்ரு ச்ராத்தத்தில் பிதாவின் மாதா முதலியவர்க்கு ஹோமம், இரண்டு வர்க்கத்திற்கும் பிண்டதானத்தைச் செய்ய வேண்டும்' என்றார். மற்றவரோவெனில்:— "பிதரம் தத்ர பூஜயேத்" என்பது முதலிய வசனங்கள் ஜீவ பித்ருகன் செய்யும் மாத்ரு

ச்ராத்தத்தைப் பற்றியதால், 'யோநி, கோத்ரம், மந்த்ரம், சிஷ்யத்வம் இல்லாதவர்களை' என்று ஸகோத்ரனை நிமந்த்ரிப்பதில் நிஷேதம் இருப்பதால், நிமந்த்ரிக்கப்படாதவனுக்கு ச்ராத்தபங்க்தியில் போஜனத்தைக் கொடுப்பதில் 'ச்ராத்த கர்த்தா அவ்ருதாநாம்து' என்பது முதலியதால் தோஷம் சொல்லப்படுவதால், 'நஜீவந்த + பார்க்கவா:' என்று பாத்ம புராண வசனத்தால், 'ப்ரத்யக்ஷ + ப்ரவீத்' என்று பவிஷ்யத் புராண வசனத்தால் 'பித்ரு ஸ்தானே ஸ்வபிதரம்' என்பது முதலிய வசனங்கள் சிஷ்டாசாரம் இல்லாததால் உபேக்ஷிக்கத் தகுந்ததாதலால், ஜீவ பித்ருகன் செய்யும் மாத்ரு ச்ராத்தத்தில் போஜனம், மாத்ரு பிதாமஹீ ப்ரபிதாமஹிகளுக்கு மட்டில், ஹோமம் பிதாமஹன் முதலாகிய பித்ருவர்க்கத்திற்கு, பிண்டதானம் இரண்டு வர்க்கங்களுக்கும்'' என்கின்றனர்.

सामसूत्रप्रयोगवृत्तौ तु — मातुर्मृताहे सम्प्राप्ते सामतित्तिरिशाखिनाम्। पितरं भोजयेदग्रे सह तन्त्रेण मातरम् इति। एवं च — पितुरेव पितुः कुर्यान्मातुरेव मृतेऽहनि इत्याश्वलायन-स्मरणादाश्वलायनानां मातृश्राद्धे मात्रादीनामेवोद्देश्यत्वम्। मातुर्मृताहे सम्प्राप्ते पितरं तत्र पूजयेत् इति भारद्वाजस्मरणात्, यजुःशाखिनां भारद्वाजीयानां पित्रादीनां मात्रादीनां चोद्देश्यत्वम् । तथा सामशाखिनामपि। इतरेषां स्वकुलाचाराद्व्यवस्था॥

22. ஸாமஸூத்ர ப்ரயோக வ்ருத்தியிலோ வெனில்:— மாதாவின் ச்ராத்தம் ப்ராப்தமாகிய பொழுது ஸாமசாகிகளுக்கும், தைத்திரீய சாகிகளுக்கும் முதலில் பிதாவைப் புஜிப்பித்துப் பிறகு ஸமாநதந்த்ரமாய் மாதாவைப் புஜிப்பிக்க வேண்டும் என்பது விதி. இவ்விதம் இருப்பதால், 'பிதாவின் ம்ருதாஹத்தில் பிதாவுக்கே செய்யவும், மாதாவின் ம்ருதாஹத்தில் மாதாவுக்கே செய்யவும்' என்று ஆச்வலாயன ஸ்ம்ருதி இருப்பதால், ஆச்வலாயன ஸூத்ரிகளுக்கு

மாதாவின் ச்ராத்தத்தில் மாதா முதலியவர்க்கே உத்தேச்யத்வம். 'மாதுர் ம்ருதாஹே ஸம்ப்ராப்தே பிதரம் தத்ர போஜயேத்' என்று பரத்வாஜ ஸ்ம்ருதி இருப்பதால், யஜுச்சாகிகளான பாரத்வாஜ ஸூத்ரிகளுக்கு, பித்ராதிகளும், மாத்ராதிகளும் உத்தேச்யர்கள். அவ்விதம் ஸாமசாகிகளுக்கும். மற்றவர்க்கு, தங்கள் குலாசாரப்படி வ்யவஸ்தை.

## अनुमरणाब्दिकविषयः।

अनुमरणाब्दिकविषये भृगुः - या समारोहणं कुर्याद्भर्तृचित्यां पतिव्रता । तां मृतेऽहनि सम्प्राप्ते पृथक्पिण्डे नियोजयेत् इति । पृथक्पिण्डनियोजनं - पृथक्श्राद्धकरणम्। अत एव स्मृत्यन्तरे — एकचित्यां समारूढौ दम्पती निधनं गतौ। पृथक् श्राद्धं तयोः कुर्यादोदनं च पृथक् पृथक् इति। ओदनमत्र पिण्डदानम्, सहपाकस्य पूर्वमेवोक्तत्वात्। कुर्यात्समानतन्त्रेण सांवत्सरिकमेव च इति सङ्घातानुमृत्योः सांवत्सरिकस्य समानतन्त्रत्वस्मरणमापद्विषयमिति पूर्वमेवोक्तम्।

## அனுமரணாப்திக விஷயம்.

அனுமரணாப்திக விஷயத்தில், ப்ருகு:— எந்தப் பதிவ்ரதை பதியின் சிதையில் ஏறி மரித்தாளோ, அவளுக்கு ம்ருத தின ச்ராத்தம் ப்ராப்தமாகிய பொழுது தனியாய் ச்ராத்தம் செய்ய வேண்டும். ஆகையாலேயே, ஓர் ஸ்ம்ருதியில்:— எந்தத் தம்பதிகள் ஒரே சிதையில் ஏறி மரித்தனரோ அவர்களுக்குத் தனித்தனியே ச்ராத்தத்தைச் செய்யவும். ஓதனத்தையும் தனித்தனியாய்ச் செய்யவும். இதில் ஓதனம் என்பதற்குப் பிண்டதானம் என்று பொருள். பாகத்தைச் சேர்த்துச் செய்ய வேண்டும் என்பது முன்பே சொல்லப்பட்டு இருப்பதால். 'ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தையும் சேர்த்துச் செய்யவும்' என்று ஸங்காதமரணத்திலும் அனுமரணத்திலும்

ஸாம்வத்ஸரிகத்தைச் சேர்த்துச் செய்ய வேண்டும், என்ற ஸ்ம்ருதி வசனம் ஆபத்தைப் பற்றியது, என்று முன்பே சொல்லப்பட்டு உள்ளது.

यत्तु वचनम् — पत्या सह सपिण्डत्वे तन्मृताहे सहत्वभाक् इति, तस्यार्थः — भिन्नतिथ्यनुमरणविषये पितुराब्दिकं पूर्वदिने कृत्वा परदिनेऽपि पितृवरणपूर्वकं मातृश्राद्धं कुर्यात् इति ।। स्मृत्यन्तरे — पितृव्याग्रजयोः श्राद्धे तत्तत्पितृपितामहौ । स्त्रीश्राद्धे वृणुयाद्भर्ता पत्नीमातृपितामहीः इति । एवं यस्य मृताहे पार्वणमुक्तं तत्तत्पितृपितामहौ च तत्र वृणुयात् ।

ஆனால், 'பத்யாஸஹஸபிண்டத்வே தந்ம்ருதாஹே ஸஹத்வபாக்' என்ற வசனம் உள்ளதே ? எனில், அதன் பொருள் இவ்விதம்:— 'வேறு திதியில் அனுமரணம் செய்திருந்த விஷயத்தில், பிதாவின் ச்ராத்தத்தை முதல் நாளில் செய்து, மறுநாளிலும் பித்ரு வரணத்தை முன்னிட்டு மாத்ரு ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்' என்று. மற்றோர் ஸ்ம்ருதியில்:— 'பித்ருவ்யன், ஜ்யேஷ்ட ப்ராதா இவர்களின் ச்ராத்தத்தில் அவரவரின் பிதா, பிதாமஹன் இருவர்களைச் சேர்த்து வரிக்கவும். பத்னியின் ச்ராத்தத்தில் பர்த்தா, பத்னீ, மாதா, மாதாமஹீ என்ற இவர்களை வரிக்கவும்'. இவ்விதம் எவனது ச்ராத்தத்தில் பார்வணம் சொல்லப்பட்டு உள்ளதோ அந்த ச்ராத்தத்தில் அவனுடன் அவனது பித்ரு பிதாமஹர்களையும் வரிக்க வேண்டும்.

कारिकारत्ने — मातुः पित्रोर्मासिकादीन् दौहित्रः स्वीयवह्निना । तथा महालयादींश्च कुर्यात् पार्वणतः शुचिः । सपिण्डनस्य पश्चात्तु दौहित्रः स्वीयवह्निना । तत्सूत्राद्वत्सरादर्वाक् कुर्यात् पश्चात् स्वसूत्रतः इति । सङ्ग्रहेऽपि — मातुः पित्रोर्मासिकानि दौहित्रः स्वीयवह्निना । तत्सूत्राद्वत्सरादर्वाक् कुर्यात् पश्चात् स्वसूत्रतः इति । यत्तु — मातामहस्य

सूत्रेण सपिण्डीकरणात् पुरा। सूत्रान्तरेण यः कुर्याच्छुनां योनिं स गच्छति इति, तत् वत्सरान्तसपिण्डीकरणाभिप्रायम्।

**காரிகாரத்னத்தில்:—** மாதாமஹன், மாதாமஹீ இவர்களுக்கு, தௌஹித்ரன், மாஸிகம் முதலியவைகளையும் மஹாளயம் முதலியவைகளையும் தனது அக்னியினுல், பார்வண விதியினுல் சுத்தனுய்ச் செய்யவும். தௌஹித்ரன் ஸபிண்டனத்திற்குப் பிறகு தனது அக்னியினுல் ஒரு வர்ஷத்திற்கு முன்பு மாதாமஹனின் ஸூத்ரத்தாலும், பிறகு தனது ஸூத்ரத்தாலும் செய்ய வேண்டும். **ஸங்க்ரஹத்திலும்:—** மாதாமஹன், மாதாமஹீ இவர்களுக்குத் தௌஹித்ரன் தனது அக்னியினுல், வர்ஷத்திற்கு முன் மாதாமஹ ஸூத்ரத்தாலும், பிறகு தனது ஸூத்ரத்தாலும் செய்ய வேண்டும். ஆனுல்:— 'மாதாமஹனின் ஸூத்ரத்தால் ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்ய வேண்டும். வேறு ஸூத்ரத்தால் செய்பவன் நாயாய்ப் பிறப்பான்' என்று வசனம் உள்ளதே ? எனில், அது வத்ஸராந்த ஸாபிண்ட்யத்தில் அபிப்ராயம் உள்ளது.

सङ्ग्रहे - कर्तुः सगोत्रिणश्चैव भोक्तृणां च सगोत्रिणः। न निमन्त्र्याः किल श्राद्धे सोदकुम्भं विनैव तु इति। अत्र भोक्तृपदं भोक्तृदेवतापरम्, श्राद्धे निमन्त्रयेद्विप्रान् पितॄणामसगोत्रिणः। कर्तुस्सगोत्रिणश्चैव विशेषेण विवर्जयेत् इति स्मरणात्। पुत्रिकापुत्रस्य धनहारिणो दौहित्रस्य च मातामहमृताहश्राद्धं नित्यम्। तच्च प्रतिपादितं विज्ञानेश्वरेण—मातामहेन मातुः सापिण्ड्ये मातामहश्राद्धं पितृश्राद्धवन्नित्यमेव। पत्या पितामह्या वा मातुः सापिण्ड्ये मातामहश्राद्धं न नित्यम्। कृते त्वभ्युदयोऽकृते न प्रत्यवायः इति।

**ஸங்க்ரஹத்தில்:—** கர்த்தாவின் ஸகோத்ரிகளையும், போக்தாக்களின் ஸகோத்ரிகளையும் ச்ராத்தத்தில் வரிக்கக் கூடாது. ஸோதகும்ப ச்ராத்தத்தைத் தவிர்த்து. இந்த

வசனத்திலுள்ள 'போக்த்ரூணாம்' என்ற பதம் போக்தாக்களான தேவதைகளைப் பற்றியது. 'அறிந்தவன் ச்ராத்தத்தில் பித்ருக்களுக்கு ஸகோத்ரர் அல்லாதவரை வரிக்க வேண்டும். ச்ராத்த கர்த்தாவின் ஸகோத்ரர்களையும் அவச்யம் வர்ஜிக்க வேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். புத்ரிகாபுத்ரனுக்கும், தனஹாரியான தௌஹித்ரனுக்கும் மாதாமஹனின் ம்ருதாஹ ச்ராத்தம் நித்யம். அதைச் சொல்லி உள்ளார் விஜ்ஞாநேச்வரர்:— 'மாதாமஹனுடன் மாதாவுக்கு ஸாபிண்ட்யம் செய்யப்பட்டு இருந்தால், மாதாமஹ ச்ராத்தம் பித்ரு ச்ராத்தம் போல் நித்யமே ஆகும். பதியுடனாவது, பிதாமஹியுடனாவது, மாதாவுக்கு ஸாபிண்ட்யம் செய்யப்பட்டு இருந்தால் மாதாமஹ ச்ராத்தம் நித்யம் ஆகாது. செய்யப்பட்டால் நன்மை உண்டு. செய்யப்படாவிடில் தோஷம் இல்லை' என்று.

न च वाच्यम् — पितरो यत्र पूज्यन्ते तत्र मातामहा अपि। अविशेषेण पूज्यास्स्युर्विशेषान्नरकं व्रजेत्। पार्वणं कुरुते यस्तु केवलं पितृहेतुतः। मातामहान्न कुरुते पितृहा चोपजायते इत्यादिवचनात् पितुर्मृताहे मातामहादीनामपि श्राद्धं कार्यम् इति। पितुर्गतस्य देवत्वमौरसस्य त्रिपूरुषम् इति विशेषस्मरणात्।

ஆனால், ''பித்ருக்கள் எந்த ச்ராத்தத்தில் பூஜிக்கப்படுகின்றனரோ அதில் மாதாமஹர்களும் பூஜிக்கப்பட வேண்டும் ஸாமான்யமாய். அவ்விதம் செய்யாவிடில் நரகத்தை அடைவான். 'எவன் பித்ருக்களை மட்டில் உத்தேசித்துச் செய்வதில்லையோ, அவன் பித்ருக்னனாகிறான்' என்பது முதலிய வசனத்தால் பிதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் மாதாமஹாதிகளுக்கும் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்'' என்றும் சொல்லக் கூடாது. 'தேவத் தன்மையை அடைந்த பிதாவுக்கு ஔரஸ புத்ரன் ச்ராத்தத்தை மூன்று புருஷர்களை உத்தேசித்துச் செய்ய வேண்டும்' என விசேஷ ஸ்ம்ருதி இருப்பதால்.

तथा चन्द्रिकायाम् — याज्ञवल्क्येन कालस्तु ह्यमावास्यादिनोदितः। अविशेषेण पित्र्यस्य तथा मातामहस्य च। युगपच्च स विज्ञेयो वचनाद्वक्ष्यमाणकात्। कालभेदे न तन्त्रं स्याद्देशभेदे न चैव हि। तस्मात्तन्त्रविधानात्तु यौगपद्यं प्रतीयते। अमावास्यादिकालेषु तत् ज्ञेयं न मृतेऽहनि। अमावास्यादिकालेषु कालैकत्वात् सहक्रिया। मृतेऽहनि तु तद्भेदान्न युज्येत सहक्रिया इति। अयमर्थः — अमावास्यादिना - अमावास्याष्टकावृद्धिः कृष्णपक्षोऽयनद्वयम् इत्यादिवचनेन श्राद्धकालः सामान्येन पितृश्राद्धस्य मातामहश्राद्धस्य च याज्ञवल्क्येनोदितः, स च कालः पितृयज्ञदर्शश्राद्धयोरिव न भागक्रमेण। किं तु — मातामहानामप्येवं तन्त्रं वा वैश्वदेविकमिति वक्ष्यमाणा-द्वचनाद्युगपदेवावगन्तव्यः। यौगपद्यमेव समर्थयते कालभेदे न इत्यादिना। समानतन्त्रतया विधानात् पैतृकस्य मातामहश्राद्धस्य च यौगपद्यं प्रतीतम्, तच्च समानतन्त्रत्व ममावास्यादिकाल एव न पुनर्मृताह इति।

சந்த்ரிகையில்:— 'யாஜ்ஞவல்க்யேந + ஸஹக்ரியா' என்று மூலத்தில் உள்ள நான்கு ச்லோகங்களுக்கும் இவ்விதம் பொருள்:— 'அமாவாஸ்யாதிநா = அமாவாஸ்யாஷ்டகா வ்ருத்தி: க்ருஷ்ணபக்ஷோऽயநத்வயம் என்பது முதலாகிய வசனத்தால், ச்ராத்த காலமானது ஸாமான்யமாய், பித்ரு ச்ராத்தத்திற்கும் மாதாமஹ ச்ராத்தத்திற்கும் யாஜ்ஞவல்க்யரால் சொல்லப்பட்டு உள்ளது. அந்தக் காலம் பித்ருயஜ்ஞம், தர்ச ச்ராத்தம் இவைகளுக்குப் போல் பாக க்ரமமாய்ச் சொல்லப்படவில்லை. ஆனால், 'மாதாமஹர்களுக்கும் இவ்விதம் செய்யவும். விச்வேதேவ வரணம் ஒன்றாயும் இருக்கலாம்' என்று இனி சொல்லப்படும் வசனத்தால் சேர்ந்தே என்று அறியத் தகுந்தது. சேர்ந்தே செய்யப்பட வேண்டும் என்பதை ஸமர்த்திக்கின்றார் 'காலபேதேந' என்பது முதலியதால். சேர்த்துச் செய்ய வேண்டும் என்று

விதித்து இருப்பதால், பித்ர்ய ச்ராத்தத்தையும் மாதாமஹ ச்ராத்தத்தையும் சேர்த்துச் செய்ய வேண்டும் என்பது தோன்றுகிறது. அவ்விதம் செய்வது என்பது அமாவாஸ்யை முதலிய காலத்தில் மட்டில். ம்ருதாஹ ச்ராத்தத்தில் இல்லை'' என்று. அமாவாஸ்யாதி காலங்களில் காலம் ஒன்றாகியதால் சேர்த்து அனுஷ்டானம். ம்ருத தினத்திலோவெனில் கால பேதம் இருப்பதால் சேர்த்து அனுஷ்டிப்பது யுக்தம் அல்ல, என்று ச்லோகங்களின் பொருள்.

एवं च पितृमृताहे पित्रादीनामेवोद्देश्यत्वमिति स्थितम् । सङ्कल्पविधानेन पितृश्राद्धं न कार्यम्। मातापित्रोर्मृतदिने सङ्कल्पं कुरुते तु यः । सन्ततेस्तु विनाशः स्यात् सम्पदामपि संक्षयः इति स्मरणात् । एकादश्यामपि मृताहश्राद्धमुक्तं स्मृत्यन्तरे — मातापित्रोः क्षयाहे च भवेदेकादशी यदा । संभाव्य पितृदेवांश्च त्वाजिघ्रेत् पितृसेवितम् इधति ।

இவ்விதம் இருப்பதால், பிதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் பிதா முதலியவர்க்கே உத்தேச்யத்வம் என்பது நிலைத்தது. பித்ரு ச்ராத்தத்தை ஸங்கல்ப விதானமாய் செய்யக் கூடாது. 'மாதா பிதாக்களின் ம்ருத திதியில் எவன் ஸங்கல்ப விதியாய் ச்ராத்தம் செய்கின்றானோ அவனது ஸந்ததிக்கு நாசம் உண்டாகும். ஸம்பத்துக்களுக்கும் க்ஷயம் உண்டாகும்' என்று ஸ்ம்ருதி. ஓர் ஸ்ம்ருதியில்:— மாதா பிதாக்களின் ச்ராத்த தினத்தில் ஏகாதசீ ஸம்பவித்தால் பித்ருக்களைப் பூஜித்து விட்டு, பித்ரு சேஷத்தை ஆக்ராணம் செய்யவும்.

कात्यायनोऽपि — उपवासो यदा नित्यः श्राद्धं नैमित्तिकं भवेत् । उपवासं तदा कुर्यादाघ्राय पितृसेवितम् इति । यत्तु पुराणवचनम् — ये कुर्वन्ति महीदेवाः श्राद्धमेकादशीदिने । त्रयस्ते नरकं यान्ति दाता भोक्ता पिता तथा । यथाऽऽशौचगतं श्राद्धं आशौचान्ते विधीयते । तथैवैकादशीं मुक्त्वा द्वादश्यामेव कारयेत् इति, तत् तान्त्रिकविषयम्, अन्यथा कात्यायनादिस्मृतिविरोधप्रसङ्गः । प्रथमाब्दिके श्राद्धाङ्गतर्पणं

नास्ति, एकोद्दिष्टेषु सर्वेषु सपिण्डीकरणे तथा। मासिकेष्वाब्दिके चैव न कुर्यात्तिलतर्पणम् इति स्मरणात्। इत्याब्दिक निर्णयः।

**காத்யாயனரும்:—** எப்பொழுது நித்யமான உபவாஸமும், நைமித்திகமான ச்ராத்தமும் ஸம்பவிக்கின்றதோ, அப்பொழுது பித்ரு சேஷத்தை ஆக்ராணம் செய்து விட்டு உபவாஸத்தைச் செய்யவும். **ஆனுல், புராண வசனம்:—** "எந்த ப்ராம்ஹணர்கள் ஏகாதசீ தினத்தில் ச்ராத்தம் செய்கின்றனரோ, அவர்களின் ச்ராத்தத்தில் கர்த்தா, போக்தா, பிதா என்ற மூவரும் நரகத்தை அடைகின்றனர்" என்றும், "ஆசௌசத்தில் ஸம்பவித்த ச்ராத்தம் எப்படி ஆசௌசத்தின் முடிவில் விதிக்கப்படுகிறதோ, அவ்விதமே ஏகாதசியில் ப்ராப்தமான ச்ராத்தத்தை த்வாதசியிலேயே செய்ய வேண்டும்" என்றும் உள்ளதே ? எனில் அது தாந்த்ரிகர்களைப் பற்றியது. அவ்விதம் இல்லை எனில் காத்யாயனர் முதலியவரின் ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் ப்ரஸக்தம் ஆகும். முதல் ஆப்திகத்தில் ச்ராத்தாங்க தர்ப்பணம் இல்லை. ஏகோத்திஷ்டங்கள் எல்லாவற்றிலும், ஸபிண்டீகரணத்திலும், மாஸிகத்திலும், ஆப்திகத்திலும் தில தர்ப்பணத்தைச் செய்யக் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

## अथ मलमासनिरूपणम्।

तस्य स्वरूपं ब्रह्मसिद्धान्तेऽभिहितम् — चान्द्रो मासो ह्यसङ्क्रान्तो मलमासः प्रकीर्तितः इति। पराशरः — रविणा लङ्घितो मासश्चान्द्रः ख्यातो मलिम्लुचः। तत्र यद्विहितं कर्म ह्युत्तरे मासि कारयेत् इति।

## மலமாஸ நிருபணம்.

மலமாஸத்தின் ஸ்வரூபம் சொல்லப்பட்டுள்ளது ப்ரம்ஹஸித்தாந்தத்தில்:— ஸங்க்ரமணம் இல்லாத சாந்த்ர

மாஸம் 'மலமாஸம்' எனப்பட்டுள்ளது. பராசரர்:— ஸூர்யனால் தாண்டப்பட்ட சாந்த்ரமாஸம் மலமாஸம் என ப்ரஸித்தமாய் உள்ளது. அந்த மாஸத்தில் விதிக்கப்பட்ட கர்மம் எதுவோ அதை அடுத்த மாஸத்தில் செய்ய வேண்டும்.

लघुहारीतोऽपि —— इन्द्राग्नी यत्र हूयेते मासादिः स प्रकीर्तितः। अग्नीषोमौ स्थितौ मध्ये समाप्तौ पितृसोमकौ। तमतिक्रम्य तु यदा रविर्गच्छेत् कदाचन। आद्यो मलिम्लुचो ज्ञेयो द्वितीयः प्राकृतः स्मृतः इति। अयमर्थः —— दर्शपूर्णमासयाजिनां, शुक्लप्रतिपदि दर्शेष्टिदेवा-विन्द्राग्नी हूयेते, कृष्णप्रतिपदि पौर्णमासेष्टिदेवावग्नीषोमौ, अमावास्यायां पिण्डपितृयज्ञदेवौ पितृसोमकौ। तत्रैवं सति शुक्लप्रतिपदादि दर्शान्तो मासः सङ्क्रान्ति रहितो मलिम्लुच इति।

லகுஹாரீதரும்:— 'இந்த்ராக்னிகளுக்கு எப்பொழுது ஹோமம் செய்யப்படுகிறதோ அது மாஸத்தின் ஆதி எனப்படுகிறது. அக்னீஷோமர்கள் நடுவிலுள்ளனர். முடிவில் பித்ருஸோமர்கள் உள்ளனர். அதை அதிக்ரமித்து ஸூர்யன் எப்பொழுது செல்லுகின்றானோ அப்பொழுது முதல் மாஸம் மலமாஸம் என்று அறியவும். இரண்டாவது மாஸம் ப்ராக்ருத (சுத்த) மாஸம்' எனப்பட்டுள்ளது. இதன் பொருள் இவ்விதம்:— ''தர்ச பூர்ண மாஸ யாகங்கள் செய்பவர்களுக்கு சுக்லபக்ஷ ப்ரதமையில் தர்சேஷ்டி தேவர்களான இந்த்ராக்னிகளுக்கு ஹோமம் செய்யப்படுகிறது. க்ருஷ்ண பக்ஷ ப்ரதமையில் பூர்ணமாஸேஷ்டி தேவர்களான அக்னீஷோமர்களுக்கு ஹோமம் செய்யப்படுகிறது. அமாவாஸ்யையில் பிண்ட பித்ரு யஜ்ஞ தேவர்களான பித்ருஸோமர்கள் இருவருக்கும் ஹோமம் செய்யப்படுகிறது. அது இவ்விதம் இருப்பதால் சுக்ல பக்ஷ ப்ரதமை முதல் தர்சம் முடியும் வரையில் உள்ள மாஸம் ஸங்க்ரமணம் இல்லாது இருந்தால் 'மலிம்லுசம்' மலமாஸம் எனப்படுகிறது''.

मलिम्लुचत्वं च तस्य राक्षसैस्तस्करैराक्रान्चत्वात् । तदाह शातातपः — वत्सरान्तर्गतः पापो यज्ञानां फलनाशकृत् । नैरृतैर्यातुधानाद्यैः सदाऽऽक्रान्तो विनाशकैः । मलिम्लुचैः समाक्रान्तं सूर्यसङ्क्रान्तिवर्जितम् । मलिम्लुचं विजानीयाद्गर्हितं सर्वकर्मसु इति । मैत्रेयः — मासद्वये यद्येकराशिं सङ्क्रमेतादित्यस्तत्राद्यो मलमासः शुद्धोऽन्यः इति ।

அது மலமாஸம் என்பதற்குக் காரணம் ராக்ஷஸர்களான திருடர்களால் ஆக்ரமிக்கப்பட்டு இருக்கும் தன்மை. அதைச் சொல்லுகிறார், சாதாதபர்:— வர்ஷத்திற்குள் அடங்கிய பாபியான மாஸம் யாகங்களின் பலத்தை நாசம் செய்யக் கூடியது. நாசகாரிகளான நைர்ருதர்கள், யாதுதானர்கள் இவர்களால் எப்பொழுதும் ஆக்ரமிக்கப்பட்டது. பாபிகளால் ஆக்ரமிக்கப்பட்டதும், ஸூர்ய ஸங்க்ரமணம் இல்லாததுமான மாஸத்தை மலிம்லுசம் (பாபமுடையது) என்றும், எல்லாக் கர்மங்களிலும் தூஷிதம் என்றும் அறியவும். மைத்ரேயர்:— ஸூர்யன் இரண்டு மாஸத்தில் ஒரு ராசியை அடைந்தால், அவைகளுள் முந்தியது மலமாஸம், பிந்தியது சுத்த மாஸம்.

मलत्वं च कालाधिक्यात् । तथा च गृह्यपरिशिष्टे — मलं वदन्ति कालस्य मासं कालविदोऽधिकम् इति । अधिकं मासं कालस्य मलं वदन्तीत्यन्वयः । श्लोकगौतमः — द्वौ मासावेकनामानावेकस्मिन् वत्सरे यदि । तत्राद्ये देवकार्याणि पितृकार्याणि चोभयोः इति । राशिद्वयनिबन्धनात् द्वावित्युक्तं, चैत्राद्येकसंज्ञत्वादेकनामाना-विति । तत्राद्ये देवकार्याणीत्यस्य व्यवस्था वक्ष्यते चन्द्रिकायाम् — एवं षष्टिदिनो मासस्तदूर्ध्वं तु मलिम्लुचः । त्यक्त्वा तदुत्तरे कुर्यात् पितृदेवादिकाः क्रियाः इति ।

மலத்தன்மை, காலம் அதிகமாகியதால். அவ்விதமே, க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:— அதிகமான மாஸத்தைக் காலத்தின் மலம் என்கின்றனர் காலம் அறிந்தவர்கள். ச்லோக கௌதமர்:— ஒரு வர்ஷத்தில் ஒரே பெயருடைய இரண்டு மாஸங்கள் வந்தால், அவைகளுள் தேவ கார்யங்களை முதல் மாஸத்திலும், பித்ரு கார்யங்களை இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும். இரண்டு ராசிகளைப் பொறுத்து இரண்டு மாஸங்கள் எனப்பட்டது. சைத்ரம் முதலிய பெயர் ஒன்ருய் இருப்பதால் ஒரே பெயருடையவை எனப்பட்டது. 'தத்ராத்யே தேவ கார்யாணி' என்பதற்கு வ்யவஸ்தை சொல்லப்படப் போகிறது. சந்த்ரிகையில்:— இவ்விதம் அறுபது நாட்கள் கொண்டது ஒரு மாஸம். அதில் பாதி மாஸம் மலமாஸம். அதைத் தள்ளி இரண்டாவது மாஸத்தில் பித்ர்யம் தைவம் முதலிய க்ரியைகளைச் செய்யவும்.

व्यासः — षष्ट्या तु दिवसैर्मासः कथितो बादरायणैः । पूर्वार्धं तु परित्याज्यमुत्तरार्द्धं प्रशस्यते इति । गार्ग्यः — अमावास्याद्वयं यत्र सूर्यसङ्क्रान्तिवर्जितम्। अधिमासः स विज्ञेयो मासश्शुद्धाख्य उत्तरः इति। नारदः — नष्टेन्दु पर्वकाले स्यात् सूर्यसङ्क्रमणं यदि । तस्मिन् मासि पुनः पर्व स मासोऽधिकमासकः इति। नष्टेन्दुकलया युक्तदर्शकाले दर्शान्तकाल इत्यर्थः । दर्शान्तयुक्ते तस्मिन्नेव मासि पुनरपि दर्शान्तश्चेत् सोऽधिकमास इत्यर्थः । वसिष्ठसिद्धान्ते — द्वात्रिंशद्भिर्गतैर्मासैर्दिनैः षोडशभिस्तथा । घटिकानां चतुष्केण भवत्यधिकमासकः इति ।

வ்யாஸர்:— அறுபது நாட்களுடன் கூடியது ஒரு மாஸம் என்று பாதராயணர்கள் சொல்லி உள்ளனர். அதில் முதல் பாதி வர்ஜிக்கத் தகுந்தது. மேல் பாதி ச்லாகிக்கப்படுகிறது. கார்க்யர்:— எந்த மாஸத்தில் ஸூர்ய ஸங்க்ரமணம் இல்லாமல் இரண்டு அமாவாஸ்யைகள் உள்ளனவோ, அது அதிகமாஸம் என்று அறியவும். அடுத்தது

சுத்த மாஸம் எனப்படும். நாரதர்:— சந்த்ரன் இல்லாத பர்வகாலத்தில் (அமையில்) ஸூர்ய ஸங்க்ரமணம் ஏற்பட்டு, அதே மாஸத்தில் மறுபடி அமை ஏற்பட்டால் அந்த மாஸம் அதிக மாஸமாம். தர்சாந்த காலத்தில் ஸங்க்ரமணம் ஏற்பட்டு, அதே மாஸத்தில் மறுபடி தர்சாந்தம் ஏற்பட்டால் அது அதிகமாஸம் என்பது பொருள். வஸிஷ்ட ஸித்தாந்தத்தில்:— முப்பத்திரண்டு மாஸங்களும், பதிஞறு நாட்களும், நான்கு நாழிகைகளும் சென்ற பிறகு அதிக மாஸம் ஏற்படும்.

विष्णुधर्मोत्तरेऽपि — सौरसंवत्सरस्यान्ते मानेन शशिजेन तु। एकादशातिरिच्यन्ते दिनानि भृगुनन्दन । समाद्वये साष्टमासे तस्मान्मासोऽतिरिच्यते। स चाधिमासकः प्रोक्तः काम्यकर्मसु गर्हितः इति । सौरसंवत्सरं चान्द्राद्वत्सरादेकादशदिनैरधिकम्, तथा सति चान्द्रवत्सरद्वयात् सौरसंवत्सरद्वयं द्वाविंशत्या दिनैरधिकंभवति, तत ऊर्ध्वं सौरमासाष्टकं चान्द्रमासाष्टकात् सार्धैः सप्तभिर्दिनैरतिरिच्यते । अवशिष्टदिनार्धं च यथोक्तकालादूर्ध्वं पूर्वोक्तषोडशभिर्दिनैः सम्पद्यते। तथा च मिलित्वा मासो भवति। सोऽयमधिको मास इत्यर्थः।

விஷ்ணு தர்மோத்தரத்திலும்:— ஸௌரமான வர்ஷத்தின் முடிவில், சாந்த்ரமானரீதியால் பதினோரு நாட்கள் அதிகமாகின்றன, ஓ பார்க்கவா! இரண்டு வர்ஷங்களும் எட்டு மாஸங்களும் ஆன பிறகு சாந்த்ரமானத்தில் ஒரு மாஸம் அதிகமாகிறது. அதுவே அதிகமாஸம் எனப்பட்டுள்ளது. அது காம்யகர்மங்களில் நிஷித்தமாகியது. ஸௌரமான வர்ஷம் சாந்த்ரமான வர்ஷத்தை விட பதினோரு நாள் அதிகமாய் உள்ளது. அப்படியிருக்க, சாந்த்ர வர்ஷம் இரண்டுக்கும் மேல் ஸௌரவர்ஷம் இருபத்திரண்டு நாட்கள் அதிகம் உள்ளதாய் ஆகின்றது. அதற்கு மேல் ஸௌர மாஸங்கள் எட்டு, சாந்த்ர மாஸங்கள் எட்டுக்கு மேல் ஏழரை நாட்கள் அதிகமாய் உள்ளதாகின்றன.

மீதியுள்ள அரை நாளும் சொல்லிய காலத்திற்கு மேல், முன் சொல்லிய 16-நாட்களுடன் சேருகின்றது. அவ்விதம் சேர்ந்து ஒரு மாஸம் ஆகின்றது. அவ்விதமாகிய இது அதிகமாஸம் என்பது பொருள்.

स्मृत्यन्तरेऽपि — सौरे वर्षे पञ्चमे पञ्चभिः स्यान्मासैर्युक्ते चाधिमासद्वयं हि । द्वात्रिंशद्भिर्मासिकैस्तत्र चैकः शिष्टैर्मासैः स्यात्तथैवापरोऽपि इति । ज्योतिःशास्त्रेऽपि — अब्दद्वयं चाष्टमासाष्षोडशाहं त्रिनाडिकाः । विनाड्यः पञ्चपञ्चाशदधिमासान्तरं स्फुटम् इति । न च कालाधिक्यमात्रेण तिथ्यादिवृद्धेरपि मलत्वं प्रसज्येतेति शङ्कनीयम् । कालाधिक्ये सति नपुंसकत्वेन मलत्वाङ्गीकारात् । नपुंसकत्वं च ज्योतिः शास्त्रेऽभिहितम् — असङ्क्रान्तो हि यो मासः कदाचित्तिथिवृद्धितः । कालान्तरात् समायाति स नपुंसक इष्यते इति ।

**மற்றோர் ஸ்ம்ருதியில்:—** ஸௌர வர்ஷம் ஐந்தும், ஐந்து மாஸங்களும் சேர்ந்தால் பிறகு அதிகமாஸம் இரண்டு ஏற்படும். முப்பத்திரண்டு மாஸம் சென்ற பிறகு ஒரு மாஸமும், மீதியுள்ள மாஸங்கள் சென்ற பிறகு மற்றொன்றும் ஏற்படும். **ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும்:—** இரண்டு வர்ஷம், எட்டு மாஸம், பதினாறு நாட்கள், மூன்று நாழிகை, ஐம்பத்தைந்து விநாடி சென்ற பிறகு அதிகமாஸம் ஏற்படும். காலம் அதிகமாவதால் மட்டில் திதி முதலியதின் வ்ருத்திக்கும் மலத்வம் வரக்கூடும் என்று சங்கை வேண்டாம். காலாதிக்யமிருக்கும் பொழுது நபும்ஸகத்வம் இருப்பதால் மலத்வத்தை அங்கீகரிப்பதால். நபும்ஸகத் தன்மையும் சொல்லப்பட்டு உள்ளது **ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில்:—** திதிகள் வ்ருத்தி ஆவதால் எப்பொழுது ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் வருகிறதோ, அந்த மாஸம் நபும்ஸகன் எனப்படுகிறது.

पुरुषस्य सूर्यस्य तत्राभावान्नपुंसकत्वम् । तदपि तत्रैवोक्तम्— अरुणः सूर्यो भानुस्तपनश्चन्द्रो रविर्गभस्तिश्च । अर्यमा हिरण्यरेता

दिवाकरो मित्रविष्णू च। एते द्वादश सूर्या माघाद्येषूदयन्ति मासेषु। निस्सूर्योऽधिकमासो मलिम्लुचाख्यस्ततः पापः । मासेषु द्वादशादित्यास्तपन्ति हि यथाक्रमम्। नपुंसकेऽधिकेमासि मण्डलं तपते रविः इति। सङ्क्रान्तिरहितमासवत् सङ्क्रान्तिद्वययुक्तोऽपि चान्द्रो मलमासः । तथा च काठकगृह्यम्— यस्मिन्मासे न संक्रान्तिस्सङ्क्रान्तिद्वयमेव वा। मलमासः स विज्ञेयो मासे त्रिंशत्तमे भवेत् इति।

புருஷனாகிய ஸூர்யன் அதில் இல்லாததால் நபும்ஸகத்வம். அதுவும் அதிலேயே சொல்லப்பட்டு உள்ளது. அருணன், ஸூர்யன், பானு, தபநன், சந்த்ரன், ரவி, கபஸ்தி, அர்யமா, ஹிரண்யரேதா:, திவாகரன், மித்ரன், விஷ்ணு என்ற பன்னிரண்டு ஸூர்யர்கள் மாகம் முதலிய மாஸங்களில் முறையே உதிக்கின்றனர். அதிக மாஸமானது மலிம்லுசம் என்று பெயருடையது ஆனதால் அது பாபமுடையது. பன்னிரண்டு மாஸங்களிலும் பன்னிரண்டு ஸூர்யர்கள் ப்ரகாசிக்கின்றனர். நபும்ஸகமான அதிக மாஸத்தில் ரவி என்பவர் மண்டலத்தை ப்ரகாசிப்பிக்கின்றார். ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் போல் இரண்டு ஸங்க்ரமணங்களுடன் கூடிய சாந்த்ர மாஸமும் மல மாஸம். அவ்விதமே, காடக க்ருஹ்யம்:— எந்த மாஸத்தில் ஸங்க்ரமணம் இல்லையோ, அல்லது இரண்டு ஸங்க்ரமணம் உள்ளதோ, அது மலமாஸம் என்று அறியத்தக்கது. அது முப்பதாவது மாஸத்தில் ஏற்படும்.

द्वात्रिंशद्भिर्गतैर्मासैः इति पूर्वोक्तेन मासे त्रिंशत्तमे भवेत् इत्यस्य विरोधे सति समाहितं माधवीये - ज्योतिः शास्त्रप्रसिद्धं मध्यमं मानमाश्रित्य द्वात्रिंशद्भिः सति वचनं प्रवृत्तम्। यस्मिन् मासे इति तु स्फुटमानमाश्रित्य प्रवृत्तम् इति। चन्द्रिकायां तु — मासे त्रिंशत्तमे इत्येतत् त्रिंशमासादर्वाक् न संभवतीत्येवंपरम् इति। महाभारते —

पञ्चमे पञ्चके वर्षे द्वौ मासावधिमासकौ । तेषां कालातिरेकेण ग्रहाणामतिचारतः सति ।

'முப்பத்திரண்டு மாஸங்கள் சென்ற பிறகு' என்று முன் சொல்லிய வசனத்துடன், 'முப்பதாவது மாஸத்தில் ஏற்படும்' என்ற இந்த வசனத்திற்கு விரோதம் ஏற்பட்டுள்ள போது, ஸமாதானம் சொல்லப்பட்டுள்ளது மாதவீயத்தில். 'ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமான மத்யமமானத்தை ஆச்ரயித்து 'முப்பத்திரெண்டு மாஸங்கள் சென்ற பிறகு' என்ற வசனம் ப்ரவ்ருத்தித்துள்ளது. 'யஸ்மிந் மாஸே' என்ற வசனமோ வெனில் ஸ்புடமானத்தை ஆச்ரயித்து ப்ரவ்ருத்தித்து உள்ளது' என்று. சந்த்ரிகையிலோ வெனில்:— ''முப்பதாவது மாஸத்தில் என்ற வசனம் முப்பதாவது மாஸத்திற்குள் ஸம்பவிக்காது என்பதில் தாத்பர்யம் உடையது'' என்று உள்ளது. மஹாபாரதத்தில்:— ஸௌர வர்ஷங்கள் ஐந்தைந்து ஆனவுடன் அவைகளின் காலா திக்யத்தாலும் க்ரஹங்களின் அதிசாரத்தாலும் இரண்டு அதிக மாஸங்கள் உண்டாகின்றன.

माधवीये त्वाक्षिप्य परिहृतम् नन्वधिकमासस्य क्वचित्त्रिंशत्तमत्वं व्यभिचरति, न्यूनाधिकसङ्ख्याया अपि दर्शनात् । नायं दोषः, त्रिंशत्तमत्वस्य लक्षणत्वेनानङ्गीकारात्, उदाहरणप्रदर्शनार्थमेतदुक्त-मित्यविरोधः इति । सत्यव्रतः — राशिद्वयं यत्र मासे सङ्क्रमेत दिवाकरः । नाधिमासो भवेदेष मलमासस्तु केवलम् इति ।

மாதவீயத்திலோ வெனில்:— ஆக்ஷேபம் செய்து பரிஹாரமும் சொல்லப்பட்டுள்ளது:– 'அதிக மாஸம் முப்பதாவது என்பது சில இடத்தில் மாறுகிறது. குறைந்த கணக்கும், அதிகக் கணக்கும் காணப்படுவதால்' எனில், இது தோஷமல்ல. முப்பதாவது என்றது லக்ஷணம் என்று அங்கீகரிக்கப்படாததால். உதாஹரணத்தைக் காண்பிப்பதற்காக இது சொல்லப்பட்டுள்ளது என்பதால் விரோதம் இல்லை என்று. ஸத்யவ்ரதர்:— எந்த மாஸத்தில்

ஸூர்யன் இரண்டு ராசிகளில் ஸங்க்ரமிக்கின்றனே, இது அதிகமாஸம் ஆகாது, ஆனால் மலமாஸமே.

ज्योतिस्सिद्धान्ते — असङ्क्रान्तिमासोऽधिमासः स्फुटस्स्यात् द्विसङ्क्रान्तिमासः क्षयाख्यः कदाचित्। कार्तिकादित्रये नान्यदास्याक्षयः त्तदा वर्षमध्येऽधिमासद्वयं च इति । अयमर्थः — स्फुटमानेन योऽयमसङ्क्रान्तः स स्फुटोऽधिमासः, तेनैव मानेन यो द्विसङ्क्रान्तियुक्तस्स क्षयमासः, स च कार्तिकमार्गशीर्षपौषमासेष्वेव त्रिष्वन्यतमेऽवतिष्ठते, नान्येषु माघादिषु नवसु। एवंविधक्षयमासयुक्ते वर्षे क्षयमासात् पूर्वं द्वित्रिमासेषु मध्ये कश्चिदधिमासो भवति, क्षयमासादूर्ध्वमासि मासत्रयमध्येऽपरोऽधिमासः। तदेतदेवं विधमेकवर्षस्थं मलमासत्रयं चिरेण कालेन यदा कदाचिदायाति, न त्वेकाधिमासवत् पुनः पुनः सहसा समायाति। द्विसंक्रान्तियुक्तोऽयं क्षयमास एकमासग्रासित्वात् अंहसः पापस्य पतिरिति व्युत्पत्त्या अंहस्पतिसंज्ञयाऽपि व्यवह्रियते।

ஜ்யோதிஸ் ஸித்தாந்தத்தில்:— ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் அதிக மாஸம் எனப்படும். இரண்டு ஸங்க்ரமணம் உள்ள மாஸம் க்ஷய மாஸம் எனப்படும். இது எப்பொழுதாவது ஏற்படும். அந்த க்ஷய மாஸம் கார்த்திகம் முதலிய 3-மாஸங்களில் தான் வரும். மற்ற மாஸங்களில் ஏற்படாது. அப்பொழுது அந்த வர்ஷத்தின் நடுவில் 2-அதிக மாஸங்கள் ஏற்படும். இதன் பொருள் இது = ''ஸ்புடமானத்தால் ஸங்க்ரமணமில்லாத மாதமெதுவோ அது ஸ்புடாதி மாஸம். அதே மானத்தினலேயே எது 2-ஸங்க்ரமணம் உள்ளதோ அது க்ஷயமாஸம். அது கார்த்திக, மார்கசீர்ஷ, பௌஷ மாஸங்கள் மூன்றிலேயே ஏதாவது ஒரு மாஸத்தில் ஏற்படும், மற்ற மாகம் முதலிய ஒன்பது மாஸங்களில் ஸம்பவிக்காது. இவ்விதமாகிய க்ஷயமாஸத்துடன் கூடிய வர்ஷத்தில் க்ஷயமாஸத்திற்கு முன் 2-3 மாஸங்களின் நடுவில் ஒரு அதிகமாஸம் ஏற்படும். க்ஷய

மாஸத்திற்குப் பிறகும் மூன்று மாஸங்களுள் மற்றொரு அதிமாஸம் ஏற்படும். இவ்விதம் சொல்லப்பட்டது போன்றதாய், ஒரு வர்ஷத்திலுள்ளதாகிய மூன்று மல மாஸம் வெகு காலத்திற்குப் பிறகு எப்பொழுதாவது ஸம்பவிக்கும். ஒரு அதிகமாஸம் போல் அடிக்கடி சீக்ரமாய் ஸம்பவிக்காது. 2-ஸங்க்ரமணம் உள்ள இந்த க்ஷயமாஸமானது ஒரு மாஸத்தை விழுங்கியதால் அம்ஹஸ: = பாபத்திற்குப் பதி என்று வ்யுத்பத்தியினுல் 'அம்ஹஸ்பதி' என்ற பெயராலும் சொல்லப்படுகிறது.

तथा च बार्हस्पत्ये — यस्मिन् मासे न सङ्क्रान्तिः सङ्क्रान्तिद्वयमेव वा। संसर्पांहस्पती मासावधिमासाश्च निन्दिताः इति । तत्र क्षयमासात् प्राचीनो योऽसङ्क्रान्तिः स संसर्पः, असङ्क्रान्तित्वेनेतराधिमासवत् कर्मानिर्हतायां प्राप्तायां तदपवादेन कर्मार्हस्सन् सम्यक् सर्पतीति संसर्पः। मासद्वयेऽब्दमध्ये तु सङ्क्रान्तिर्न यदा भवेत् । प्राकृतस्तत्र पूर्वस्स्यादधिमासस्तथोत्तरः इति स्मरणात् सङ्क्रान्तिरहितयोर्मासयोर्मध्ये यः पूर्वस्स प्राकृतः शुद्धः सर्वकर्मार्ह इत्यर्थः।

பார்ஹஸ்பத்யத்தில்:— எந்த மாஸத்தில் ஸங்க்ரமணம் இல்லையோ, அல்லது 2-ஸங்க்ரமணம் உள்ளதோ, ஸம்ஸர்ப்பம், அம்ஹஸ்பதி, அதிமாஸம் என்ற இவைகள் தூஷிக்கப்பட்டவைகள். அவைகளுள், க்ஷயமாஸத்திற்கு முந்தியதாய் ஸங்க்ரமணம் இல்லாத மாதம் எதுவோ அது ஸம்ஸர்ப்பம். ஸங்க்ரமணம் இல்லாததால் மற்ற அதிமாஸம் போல் கர்மாநர்ஹம் என்று ப்ராப்தமாக, அதற்கு அபவாதமாய்க் கர்மார்ஹமாக இருந்து நன்ருய்ச் செல்லுகிறது என்பதால் ஸம்ஸர்ப்பம். 'ஒரு வர்ஷத்திற்குள் 2-மாஸங்களில் ஸங்க்ரமணம் ஏற்படாவிடில், அவைகளுள் முதல் மாஸம் ப்ராக்ருதம். இரண்டாவது மாஸம் அதிமாஸம், என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஸங்க்ரமணம் இல்லாத 2-மாஸங்களுள் எது முந்தியதோ அது ப்ராக்ருதம் - சுத்தம்,

எல்லாக் காமங்களுக்கும் அர்ஹம் என்பது பொருள்.

अस्मिन्नेवार्थे जाबालिः — एकस्मिन्नपि वर्षे चेद्द्वौ मासावधिमासकौ। प्राकृतस्तत्र पूर्वस्स्यादधिमासस्तथोत्तरः इति। ब्रह्मसिद्धान्तेऽपि — मासत्रये त्रिंशदूर्ध्वं सङ्क्रान्तिर्न यदा भवेत्। प्राकृतस्तत्र पूर्वस्स्यादधिमासस्तथोत्तरः इति। चन्द्रिकायामिदं व्याख्यातम् – त्रिंशन्मासादूर्ध्वं योऽसङ्क्रान्तो मासस्सोऽधिमासः, ततोऽर्वाग्योऽसङ्क्रान्तो मासः स प्राकृतः नाधिमासः इति। अतः संसर्पत्वं तस्योपपन्नम्। असंक्रान्तिमासद्वयमध्यवर्तिनः क्षयमासस्यांहस्पतित्वा त्तदुत्तरभाविनोऽसङ्क्रान्तस्य कालाधिक्येनाधिकमासत्वान्मासद्वय-मेतन्निन्दितम्। त एते त्रयोऽपि ज्योतिःशास्त्रे विवाहादौ क्वचिन्निन्दिताः।

இதே விஷயத்தில், ஜாபாலி:— 'ஒரே வர்ஷத்தில் 2-அதிக மாஸங்கள் நேர்ந்தால், முந்தியது ப்ராக்ருதம். பிந்தியது அதிமாஸம் என்றார். ப்ரம்ஹஸித்தாந்தத்திலும்:— எப்பொழுது 30-மாஸங்களுக்குப் பிறகு 3-மாஸங்களில் ஸங்க்ரமணம் ஸம்பவிக்கவில்லையோ, அப்பொழுது முதலாவது மாஸம் ப்ராக்ருதம் எனப்படும். பிந்திய மாஸம் அதிமாஸம் எனப்படும். சந்த்ரிகையில் இது விவரிக்கப்பட்டுள்ளது:— 'முப்பது மாஸங்களுக்குப் பிறகு ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் எதுவோ அது அதிமாஸம். அதற்கு முன் ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் ஸம்பவித்தால் அது ப்ராக்ருத மாஸம், அதிமாஸமல்ல' என்று. ஆகையால் அதற்கு ஸம்ஸர்ப்பத்வம் உபபன்னமாகிறது. ஸங்க்ரமணம் இல்லாத இரண்டு மாஸங்களுக்கு நடுவிலுள்ள க்ஷயமாஸத்திற்கு அம்ஹஸ்பதித்வம் இருப்பதால், அதற்கு மேல் ஸம்பவிக்கின்ற ஸங்க்ரமணம் இல்லாத மாஸத்திற்குக் காலாதிக்யத்தால் அதிமாஸத் தன்மை ஏற்படுவதால், இந்த இரண்டு மாஸங்களும் நிஷித்தங்கள். அவ்விதமான இந்த

மூன்று மாஸங்களும். ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் விவாஹம் முதலிய சில விஷயங்களில் நிந்திக்கப்பட்டு உள்ளன' என்று.

अत एवोक्तम्—संसर्पांहस्पती मासावधिमासश्च निन्दितः इति। यदा तु सङ्क्रान्तिद्वययुक्तमास एक एव वा असंक्रान्तिरेक एव वाऽधिमासो भवति, तदा तदुभयं वर्ज्यमित्युक्तं केशवीये—यस्मिन् मासि न सङ्क्रान्तिः सङ्क्रान्तिद्वयमेव वा। संसर्पांहस्पती मासौ सर्वकर्मबहिष्कृतौ इति।

ஆகையால் தான் சொல்லப்பட்டுள்ளது:— 'ஸம்ஸர்ப்பம், அம்ஹஸ்பதி, அதிமாஸம் என்ற இவை நிஷித்தங்கள்' என்று. எப்பொழுது இரண்டு ஸங்கிரமணம் உள்ள க்ஷயமாஸம் ஒன்ருவது, ஸங்கரமணமில்லாத ஒரு மாஸமாவது அதிமாஸமாய் வருகின்றதோ, அப்பொழுது அந்த இரண்டு மாஸமும் வர்ஜிக்கத் தகுந்தது என்று சொல்லப்பட்டுள்ளது. கேசவீயத்தில்:— 'எந்த மாஸத்தில் ஸங்க்ரமணம் இல்லேயோ, எந்த மாஸத்தில் இரண்டு ஸங்க்ரமணங்களோ, ஸம்ஸர்ப்பம், அம்ஹஸ்பதி என்ற அந்த இரண்டு மாஸங்களும் ஸகல கர்மங்களுக்கும் அர்ஹமல்லாதவை' என்பார்.

नारदश्च—सङ्क्रान्तिरहितो मासो यो वा सङ्क्रान्तियुग्म युक्। पूर्वः संसर्पमासः स्यादंहस्पतिरथापरः। मलमासाविमौ प्रोक्तौ सर्वकर्मबहिष्कृतौ इति। कालादर्शेऽपि — सङ्क्रान्तिरहितो मासो मलमासः प्रकीर्तितः। मलिम्लुचापराख्यश्च सङ्क्रान्तिद्वययुक् तथा इति। मलिम्लुच इत्यपरा आख्या संज्ञा यस्येति विग्रहः। सङ्क्रान्तिद्वययुगपि मासस्तथा मलिम्लुचो मास इत्यर्थः।

நாரதரும்:— ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் எதுவோ, இரண்டு ஸங்க்ரமணங்களுள்ள மாஸம் எதுவோ இவ்விரண்டுகளுக்குள் முந்தியது ஸம்ஸர்ப்பம் எனப்படும். மற்றது அம்ஹஸ்பதி எனப்படும். இவ்விரண்டும் மலமாஸங்கள் எனச் சொல்லப் பட்டுள்ளன. ஸகல

கர்மங்களிலும் நிஷித்தங்களாம். காலாதர்சத்திலும்:— ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் மலமாஸம் எனப்பட்டுள்ளது. இரண்டு ஸங்க்ரமணம் உள்ள மாஸமும் அப்படியே மலமாஸம் எனப்படுகிறது.

एवं च यस्मिन् वत्सरे सङ्क्रान्तिरहितो मासः केवलो भवेत्, तदाऽधिमासो वर्ज्यस्तदुत्तरो मासः शुद्धः, तत्र यद्विहितं कर्म ह्युत्तरे मासि कारयेत् इत्यादि स्मरणात्। यदा द्विसङ्क्रान्तियुक्तो मासो भवेत् तदा क्षयमासो वर्जनीयः, तत्पूर्वमासः शुद्धः, दर्शद्वयं यदैकस्मिन् सौरे संसर्पको भवेत्। अंहस्पतिर्यदैकस्मिंश्चान्द्रे द्वौ सङ्क्रमौ तथा। संसर्पों हस्पतिश्चेति द्विविधावधिमासकौ । मतौ पूर्वापरौ दुष्टौ परपूर्वौ शुभावहौ इति स्मरणात् । संसर्परूपोऽधिमासाख्यः पूर्वो दुष्टस्तदुत्तरः कर्मार्हः, अंहस्पतिरूपोऽधिमासाख्य उत्तरो दुष्टः तत्पूर्वो मासः शुभावह इत्यर्थः।

இவ்விதமாகியதால், எந்த வர்ஷத்தில் ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் மட்டில் வருகிறதோ, அப்பொழுது அதிக மாஸம் வர்ஜ்யமாகும். அதற்கு அடுத்த மாஸம் சுத்தமாஸம். 'அதில் எந்தக் கர்மம் விதிக்கப்பட்டுள்ளதோ அதை அடுத்த மாஸத்தில் செய்யவும்' என்று ஸ்ம்ருதி உள்ளது. எப்பொழுது இரண்டு ஸங்க்ரமணம் உள்ள மாஸம் வருகின்றதோ, அப்பொழுது க்ஷயமாஸத்தை வர்ஜிக்க வேண்டும். அதற்கு முந்திய மாஸம் சுத்தமாஸம் ஆகும். எப்பொழுது ஒரு ஸௌரமாஸத்தில் இரண்டு தர்சம் வருமோ அந்த மாஸம் ஸம்ஸர்ப்பகம் எனப்படும். எப்பொழுது ஒரு சாந்த்ரமாஸத்தில் இரண்டு ஸங்க்ரமணம் ஏற்படுமோ, அந்த மாஸம் அம்ஹஸ்பதி எனப்படும். இந்த ஸம்ஸர்ப்பம், அம்ஹஸ்பதி என்ற இரண்டு மாஸங்களும் அதி மாஸங்கள். இவைகளுள் ஸம்ஸர்ப்பமென்ற அதிமாஸத்தில் முதல் மாஸம் துஷ்டம். அடுத்த மாஸம் சுத்தம் கர்மார்ஹம். அம்ஹஸ்பதி என்ற அதிமாஸத்தில் இரண்டாவது மாஸம் துஷ்டம், முதல் மாஸம் சுபாவஹம் என்பது பொருள்.

सङ्क्रान्तिद्वययुक्तस्य क्षयमासस्य षष्टिदिनात्मकत्वाभावेन दिनाधिक्याभावेऽपि सङ्क्रान्तेरपि मासव्यपदेशप्रयोजकतया तदाधिक्येनात्राधिमासत्वव्यपदेशः । पितृमेधसारे — चान्द्रात् सौरातिरेकेण संवत्सरः कदाचित् त्रयोदशमासः स्यात् सोऽधिमासः, तत्र द्वौ मासावेकनामानौ षष्टिदिनात्मकौ । तत्राद्यः कर्मसु निन्दितः, उत्तरस्तु शुद्धः । चान्द्रे मास्येकस्मिन् द्वेधा सङ्क्रमितश्चेदंहस्पतिरत्रोत्तरो दुष्टः, सौरे चेद्द्वौ दर्शौ संसर्पो मलिम्लुचश्चाद्यो दुष्टः, तान् मलमासा नाचक्षते, वर्षे चैकस्मिन् यदि द्वौ मलमासौ पूर्वोऽसङ्क्रान्तोऽपि कर्मण्यः परो मलमासः इति ।

இரண்டு ஸங்க்ரமணம் உள்ள க்ஷயமாஸத்திற்கு அறுபது நாட்கள் கொண்டது என்னும் தன்மை இல்லாவிடினும், ஸங்க்ரமணமும் மாஸம் என்று சொல்வதற்கு ஹேதுவாகியதால் அது அதிகமாகியதால் இதில் அதிகமாஸம் என்னும் சொல் ஏற்பட்டுள்ளது. பித்ருமேதஸாரத்தில்:— ''சாந்த்ரவர்ஷத்தைக் காட்டிலும் ஸெளரவர்ஷம் அதிகமானதால் ஒரு காலத்தில் வர்ஷம் பதின்மூன்று மாஸங்களுடையதாய் ஆகக்கூடும். அது அதிமாஸம் எனப்படும். அதில் இரண்டு மாஸங்கள் ஒரு நாமதேயம் உடையவை, அறுபது நாட்கள் உடையவை. அவைகளுள் முதல் மாஸம் சுபகர்மங்களில் நிஷித்தம். அடுத்த மாஸம் சுத்தம். ஒரு சாந்த்ர மாஸத்தில் இரண்டு ஸங்க்ரமணம் ஆனல் அம்ஹஸ்பதி எனப்படும். இதில் மேல் மாஸம் துஷ்டம். ஒரு ஸெளர மாஸத்தில் இரண்டு அமைகள் ஸம்பவித்தால் ஸம்ஸர்ப்பம், மலிம்லுசம் என்று இரண்டு மாஸங்கள். இவைகளுள் முதல் மாஸம் துஷ்டம். இவைகளை மலமாஸங்கள் என்கின்றனர். ஒரே வர்ஷத்தில் இரண்டு மலமாஸங்கள் ஸம்பவித்தால் முந்தியது ஸங்க்ரமணம் இல்லாவிடினும் கர்மானுஷ்டான யோக்யம். இரண்டாவது மலமாஸம்'' என்றுள்ளது.

नन्वेकाधिमासोपेतसंवत्सरस्य त्रयोदशमासात्मकत्वं, यथा तथा अधिमासद्वयोपेतसंवत्सरस्य चतुर्दशमासात्मकत्वं प्राप्तम्, न च तद्युक्तम्, अस्ति त्रयोदशो मास इत्याहुः इति वच्चतुर्दशमासस्याश्रूयमाणत्वात्। नैष दोषः । असङ्क्रान्तत्वेनाधिकत्वप्रसक्तियुक्तयोः द्वयोर्मध्ये पूर्वस्याधिमासत्वनिषेधात्।

ஒரு அதிகமாஸமுள்ள வர்ஷத்திற்குப் பதின்மூன்று மாஸங்களுடைய தன்மை எப்படியோ, அப்படி அதிக மாஸம் இரண்டு உள்ள வர்ஷத்திற்குப் பதினான்கு மாஸங்களையுடைய தன்மை ப்ராப்தமாகிறது. அது யுக்தமல்ல. ''அஸ்தி த்ரயோதசோ மாஸ இத்யாஹு:- பதின்மூன்றாவது மாஸம் இருக்கின்றது என்கின்றனர்'' என்பது போல் பதினான்காவது மாஸம் ச்ருதியில் காணப்படாததால் எனில், இது தோஷமல்ல. ஸங்க்ரமணம் இல்லாததால் 'அதிகத்வம்' ப்ராப்தமாவதற்கு யோக்யங்களான இரண்டு மாஸங்களுள் முதல் மாஸத்திற்கு அதிகமாஸத் தன்மை நிஷேதிக்கப்பட்டு இருப்பதால்.

ज्योतिस्सिद्धान्ते — घटाकन्यागते सूर्ये वृश्चिके वाऽथ धन्वनि। मकरे वाऽथ कुम्भे वा नाधिमासो विधीयते इति । अयमर्थः - वृश्चिकादिषु चतुर्षु यदा मलमासः प्राप्नोति, तदा सूर्ये तुलाकन्ययोर्वर्तमाने सत्यसङ्क्रान्तेऽपि नाधिमास इति। घटाकन्यागत इत्युपलक्षणम्। पूर्वेषु प्रसक्तोऽसङ्क्रान्तो नाधिमासः।

ஜ்யோதிஸ்ஸித்தாந்தத்தில்:— 'ஸூர்யன், துலாம், கன்யா, வ்ருச்சிகம், தனுஸ், மகரம், கும்பம் இவைகளில் ஒன்றில் இருந்தால் அதிகமாஸம் விதிக்கப்படுவதில்லை' என்று. இதன் பொருள்:— 'வ்ருச்சிகம் முதலாகிய நான்கு மாஸங்களில் எப்பொழுது மலமாஸம் வருகிறதோ அப்பொழுது, ஸூர்யன் துலாம், கன்யா, இந்த ராசிகளிலிருக்கும் போது ஸங்க்ரமணம் இல்லாத மாஸம்

வந்தாலும் அது அதிமாஸம் அல்ல என்று. 'துலா, கன்யா' இவைகளில், ஸூர்யன் இருக்கும் பொழுது என்றது உபலக்ஷணம். முன் சொல்லிய மாஸங்களில் வந்தாலும் ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் அதிமாஸம் அல்ல. மற்றவைகளில் வந்தால் அதிமாஸம் ஆகும் என்று.

ब्रह्मसिद्धान्ते — चैत्रादर्वाङ्नाधिमासः परतस्त्वधिको भवेत् इति । चैत्रादारभ्य उपरितनेषु मासेषु यदा यौ कौचित् द्वौ मासावसंक्रान्तौ, तदा तयोरर्वाचीनः पूर्वो नाधिमासः, उत्तरस्तु भवत्यधिमास इत्यर्थः । स्मृत्यन्तरे च — एकत्र मासद्वितयं यदि स्याद्वर्षेऽधिकं तत्र परोऽधिमासः । त्रयोदशं तु श्रुतिराह मासं चतुर्दशः क्वापि नचैव दृष्टः इति ।

ப்ரம்ஹஸித்தாந்தத்தில்:— சைத்ரம் முதற்கொண்டு மேலுள்ள மாஸங்களுள் எப்பொழுது ஏதாவது இரண்டு மாஸங்கள் ஸங்க்ரமணம் இல்லாமல் இருக்கின்றனவோ, அப்பொழுது அவைகளுள் முதலில் வருவது அதிமாஸம் அல்ல. இரண்டாவதாய் வருவது அதிமாஸம் என்பது பொருள். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— ஒரு வர்ஷத்தில் இரண்டு அதிகமாஸம் ஸம்பவித்தால், அவைகளுள் பிந்தியது அதிகமாஸம். முந்தியது அதிகமாஸமல்ல. பதின்மூன்றாவது மாஸத்தையே ச்ருதி சொல்லுகின்றது. பதினான்காவது மாஸம் ச்ருதியில் எங்கும் காணப்படவில்லை.

नन्वेवमपि द्विसङ्क्रान्तियुक्तक्षयमासोपेतसंवत्सरस्य एकादशमासत्वं प्रसज्येत, तच्च, द्वादशमासाः संवत्सरः अस्ति त्रयोदशो मास इत्याहुः इत्यादिश्रुत्या विरुद्धमिति चेन्न, द्विसङ्क्रान्तियुक्तस्य क्षयमासद्वयत्वेन परिगणनात् । तथा च कालनिर्णये — तिथ्यर्धे प्रथमे पूर्वो द्वितीयेऽर्धे तदुत्तरः । मासाविति बुधैश्चिन्त्यौ क्षयमासस्य मध्यगौ इति ।

இவ்விதமானாலும், இரண்டு ஸங்க்ரமணமுள்ள க்ஷயமாஸத்துடன் கூடிய வர்ஷத்திற்குப் பதினொரு மாஸங்களுடன் கூடிய தன்மை வரக்கூடுமே. அது 'பன்னிரண்டு மாஸங்களுடையது வர்ஷம், பதின்மூன்றாவது மாஸம் உள்ளது என்கின்றனர்' என்பது முதலிய ச்ருதியுடன் விரோதம் உள்ளதாகியதே ? எனில், அவ்விதமல்ல. இரண்டு ஸங்க்ரமணம் உள்ள மாஸத்தை க்ஷயமாஸங்கள் இரண்டு என்று எண்ணியிருப்பதால். அவ்விதமே, காலநிர்ணயத்தில்:— க்ஷயமாஸத்தின் திதிகளில் முதல் பாகம் முதல் மாஸத்தியது, இரண்டாவது பாகம் இரண்டாவது மாஸத்தியது. இவ்விதம் க்ஷயமாஸத்தின் நடுவிலேயே இரண்டு மாஸங்கள் உள்ளன என்று அறியவும், என்றுள்ளது.

क्षयमासस्य स्वतन्त्रत्वेऽपि परपूर्वौ शुभावहौ इति वचनात्तन्मासप्रयुक्तं कर्म पूर्वत्र मासे कर्तव्यम् । शुद्धमासवत् स्वतन्त्रत्वात्तत्रैव कर्तव्यमिति केचित्। तदसाधु, संसर्पांहस्पतीमासौ सर्वकर्मबहिष्कृतौ इति वचनात्। असंक्रान्ते रधिमासस्य तु एष षष्टिदिनो मासः पूर्वार्द्धं तु मलिम्लुचः इति स्मरणेनोत्तरशेषत्वा दुत्तरमास एव कर्तव्यमिति चन्द्रिका कालादर्श कालनिर्णय पितृमेधसारादौ निरूपितम्।

க்ஷயமாஸம் ஸ்வதந்த்ரமானாலும் 'பரபூர்வௌ சுபாவஹௌ' என்ற வசனத்தால் அந்த மாஸத்தில் விஹிதமான கர்மத்தை முந்திய மாஸத்தில் செய்யவும். 'சுத்த மாஸம் போல் ஸ்வதந்த்ரமாகியதால் அதிலேயே செய்யவேண்டும்' என்று சிலர். அது ஸாதுவல்ல. 'ஸம்ஸர்ப்ப, அம்ஹஸ்பதி மாஸங்கள் எல்லாக் கர்மங்களுக்கும் நிஷித்தங்கள்' என்று வசனம் இருப்பதால். ஸங்க்ரமணம் இல்லாத அதிமாஸத்திற்கோ வெனில் 'இது அறுபது நாட்களுள்ள மாஸம். இதனது முதற் பாதி மல மாஸம்' என்ற வசனத்தால் மேல் மாஸத்திற்குச் சேஷபூதமானதால் பிந்திய மாஸத்திலேயே செய்ய

வேண்டும் என்று, சந்த்ரிகை, காலாதர்சம், காலநிர்ணயம், பித்ருமேதஸாரம் முதலியதில் சொல்லப்பட்டுள்ளது.

मलमासस्वरूपमभिहितम्ः अत्र परस्परविरुद्धानि वचनानि सन्ति, तान्यप्यत्रैवार्थे कथञ्चिद्योजनीयानि, दुर्योजनानि च त्याज्यानि। ननु, श्रीधरीयादौ पूर्णिमाद्वययोगे तदयोगे च मलमासत्वमुक्तम्, तथा हि — अमा च पूर्णिमा चैव यन्मासि युगलं भवेत्। यस्मिन्न दृश्यते वाऽपि चौलकर्मादि वर्जयेत्। द्वितीयपूर्णिमायुक्तं विषमासं वदन्ति हि। पूर्णिमा च न दृश्येत मलमासः प्रकीर्तितः। एकमासे द्वे च पूर्णे दर्शस्यैकस्य सम्भवे। अग्निज्वालेति विख्याता शुभकर्मविनाशिनी इति। अत्र व्यवस्था विहिता ज्योतिः शास्त्रे - दर्शान्तः पूर्णिमान्तश्च चान्द्रो मासो द्विधा मतः। जातिभेदाद्देशभेदात्तौ च मासौ व्यवस्थितौ। दर्शान्तमासो यद्देशे तत्र दर्शप्रयुक्तितः । मलमासादिदोषस्स्यान्नान्यदेश इति स्पितिः । पौर्णमास्यन्तमासोऽपि यस्मिन्देशे प्रवर्तते। तत्र तन्मलमासादिदोषो नान्यत्र विद्यते। नर्मदादक्षिणे भागे दर्शान्तो मास इष्यते। नर्मदोत्तरभागे तु पूर्णिमान्त इति स्थितिः॥ अमावास्यापरिच्छिन्नो मासः स्यात् ब्राह्मणस्य तु । संक्रान्ति पौर्णमासीभ्यां तथैव नृपवैश्ययोः इति।

மலமாஸ ஸ்வரூபம் சொல்லப்பட்டது. இவ்விஷயத்தில் பரஸ்பரம் விரோதமுள்ள வசனங்கள் இருக்கின்றன. அவைகளையும் இந்த அர்த்தத்திலேயே எப்படியாவது சேர்க்க வேண்டும். சேர்க்க முடியாத வசனங்களைத் தள்ளவும் வேண்டும். ஸ்ரீதரீயம் முதலியதில் இரண்டு பூர்ணிமை சேர்ந்தாலும், பூர்ணிமையே இல்லாவிடினும் மலமாஸத் தன்மை சொல்லப்பட்டுள்ளது:— 'அமையோ, பூர்ணிமையோ எந்த மாஸத்தில் இரண்டு ஸம்பவிக்குமோ, அல்லது காணப்படாமல் இருக்குமோ, அந்த மாஸத்தில் சௌளம் முதலிய கர்மத்தை வர்ஜிக்கவும். இரண்டு பூர்ணிமையுள்ள

மாஸத்தை விஷமாஸம் என்கின்றனர். பூர்ணிமை இல்லாத மாஸம் மலமாஸம் எனப்படுகிறது. 'ஒரு மாஸத்தில் இரண்டு பூர்ணிமைகளும், ஒரு தர்சமும் ஸம்பவித்தால் அது அக்னிஜ்வாலை எனப்படுகிறது. அது சுபகர்மங்களை நாசம் செய்யக் கூடியது' எனில், இவ்விஷயத்தில் வ்யவஸ்தை ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டுள்ளது:— ''தர்சாந்தமாயும், பூர்ணிமாந்தமாயும், சாந்த்ரமாஸம் இரண்டு ப்ரகாரமாய்ச் சொல்லப்பட்டு இருக்கிறது. அந்த இரண்டு மாஸங்களும் ஜாதி பேதத்தாலும், தேச பேதத்தாலும் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளன. எந்தத் தேசத்தில் தர்சாந்த மாஸமோ, அந்தத் தேச்தில் தர்சாந்த மல மாஸம் துஷ்டமாகும். பூர்ணிமாந்தமாஸம் எந்தத் தேசத்திலோ அதில் பூர்ணிமாந்த மலமாஸம் துஷ்டம். மற்றத் தேசத்தில் துஷ்டமல்ல. நர்மதா நதியின் தென்பாகத்தில் தர்சாந்தமாஸம் விதிக்கப்படுகிறது. நர்மதையின் வடக்குப் பாகத்தில் பூர்ணிமாந்த மாஸம் விதிக்கப்படுகிறது. அமாவாஸ்யையால் அளவிடப்பட்ட மாஸம் ப்ராம்ஹணனுக்கு. ஸங்க்ரமணம், பூர்ணிமை இவைகளால் அளவிடப்பட்ட மாஸம் முறையே க்ஷத்ரியனுக்கும், வைச்யனுக்கும்.

यत्तु — अंहस्पतिरवन्तीषु संसर्पः केकयेषु च। अधिमासस्तु पाञ्चाले समदृष्टिस्तु भारते इति। तत् तस्मादाहिताग्निर्नानृतं वदेत् इतिवद्दोषाधिक्यप्रदर्शनपरम्। उक्तं च कालदीपे — सर्वत्र दोषा दोषास्स्युर्देशकालव्यवस्थितिः। तेषां तु तत्र तत्रैषा दोषाधिक्याय केवलम् इति। दर्शान्तचान्द्रमासानुष्ठातॄणामेव श्राद्धादौ मलमासदोषो न तु सौरानुवर्तिनाम्, तत्रैकसंज्ञक मासद्वयाभावात्।

ஆனால், ''அவந்தி தேசத்தில் அம்ஹஸ்பதி மாஸமும், கேகய தேசத்தில் ஸம்ஸர்ப்ப மாஸமும், பாஞ்சாலத்தில் அதிமாஸமும், பாரத தேசத்தில் ஸமத்ருஷ்டியும் துஷ்டமாகும்'' என்ற வசனம் உள்ளதே ? எனில், அது,

'ஆஹிதாக்னி பொய் பேசக்கூடாது' என்பது போல், தோஷத்தின் அதிகத் தன்மையைச் சொல்வதில் தாத்பர்யம் உள்ளது. அவ்விதம் சொல்லப்பட்டுள்ளது. காலதீபத்தில்:— தோஷங்கள் என்று சொல்லப்பட்டவை எங்குமே தோஷங்கள் ஆகும். ஆனால் அவைகளுக்குத் தேசம் காலம் இவைகளை அனுஸரித்து வ்யவஸ்தை சொல்லப்படுவது, அந்தத் தேசத்திலும், அக்காலத்திலும் தோஷம் அதிகமாய் உள்ளது என்பதற்கே. (தோஷமில்லை என்பதற்கல்ல.) தர்சாந்த சாந்த்ரமாஸத்தை அனுஷ்டிப்பவர்க்கே ச்ராத்தம் முதலியதில் மலமாஸ தோஷம். ஸௌரமாஸத்தை அனுஷ்டிப்பவருக்கு இல்லை. அதில் ஒரே பெயருள்ள இரண்டு மாஸங்கள் இல்லாததால்.

## मलमासे कर्तव्यानि

मलमासे कर्तव्यान्याह यमः —— गर्भे वार्द्धुषिके भृत्ये श्राद्धकर्मणि मासिके। सपिण्डीकरणे नित्ये नाधिमासं विवर्जयेत्। तीर्थस्नानं जपो होमो यवव्रीहितिलादिभिः। जातकर्मान्त्य कर्माणि नवश्राद्धं तथैव च। मखात्रयोदशीश्राद्धं श्राद्धान्यपि च षोडश। चन्द्रसूर्यग्रहे स्नानश्राद्धदानजपादिकम्। कार्याणि मलमासेऽपि नित्यं नैमित्तिकं तथा इति। गर्भे - गर्भप्रयुक्ते पुंसवनसीमन्त इति यावत्। वार्द्धुर्षिके - अशीतिभागो वृद्धिस्स्यान्मासि मासि सबन्धके इत्यादि-वचनोक्तवृद्धिग्रहणे, भृत्ये - संवत्सरादि पर्यन्तकालकृते भृत्ये, नित्ये - नित्यदाने। होमोऽत्रौपासनहोमः, अन्त्यकर्माणि - दाहोदकपिण्ड-दानास्थिसञ्चयनादीनि।

### மலமாஸத்தில் செய்யக் கூடியவை.

மலமாஸத்தில் செய்யக்கூடியவற்றை சொல்லுகிறார், யமன் :— 'கர்ப்பத்திலும், வார்த்துஷிகத்திலும், ப்ருத்யத்திலும், ச்ராத்த கர்மத்திலும், மாஸிகத்திலும்,

ஸபிண்டீகரணத்திலும், நித்யத்திலும் அதிமாஸத்தை வர்ஜிக்க வேண்டாம். தீர்த்த ஸ்நானம், ஜபம், ஹோமம், யவம், நெல், திலம் இவை முதலியவைகளால் ஹோமம், ஜாதகர்மம், அந்த்யகர்மங்கள், நவச்ராத்தம், மகாத்ரயோதசீ ச்ராத்தம், ஷோடசச்ராத்தங்கள், சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களில் ஸ்நானம், ச்ராத்தம், ஜபம் முதலியவை, நித்ய கர்மம், நைமித்திககர்மம் இவைகளை மலமாஸத்திலும் செய்ய வேண்டும்' என்று. கர்ப்பே = கர்ப்பத்தைப் பொறுத்த பும்ஸவந ஸீமந்தங்களில் என்று பொருள். வார்த்துஷிகே = 'எண்பதிலொரு பாகம் வட்டியாகும் ஒவ்வொரு மாஸத்திலும், பந்தகத்துடன்கூடிய கடனில்' என்பது முதலிய வசனங்களால் சொல்லப்பட்ட வட்டியை வாங்குவதில். ப்ருத்யே = ஒரு வர்ஷம் முதலிய காலத்தின் அளவால் செய்யப்பட்ட கூலியில். நித்யே = நித்யதானத்தில். ஹோமம் என்பது ஒளபாஸந ஹோமம். அந்த்ய கர்மங்கள் = தஹநம், உதகபிண்டதானம், அஸ்திஸஞ்சயநம் முதலியவை.

गौतमः —— जातकर्मणि यत् श्राद्धं नवश्राद्धं तथैव च । ग्रहणे पुंसवादौ च तत्पूर्वत्र परत्र वा इति । निमित्तवशादिति वाक्यशेषः । कालनिर्णये —— जातकर्म च पुंसूतिसीमन्तोन्नयनं व्रतम् । मलिम्लुचेऽपि कुर्वीत निमित्तं यदि जायते इति । मरीचिः —— रोगे चालभ्ययोगे च सीमन्ते पुंसवेऽपि च । यद्ददाति समुद्दिष्टं पूर्वत्रापि न दुष्यति इति । रोगे - रोगशान्तौ, अलभ्ययोगे - अर्धोदयादिविहित श्राद्धादौ ।

கௌதமர்:— 'ஜாதகர்மத்தில் செய்ய வேண்டிய ச்ராத்தம், நவச்ராத்தம், க்ரஹணத்திலும் பும்ஸவநம் முதலியதிலும் செய்ய வேண்டிய ச்ராத்தம் இவைகளை முந்திய மாஸத்திலாவது பிந்திய மாஸத்திலாவது செய்யலாம்' என்றார். இதில் நிமித்தத்தைப் பொறுத்து என்று சேர்க்க வேண்டும்: நிமித்தம் எந்த மாஸத்தில் வருகிறதோ அப்பொழுது செய்யவும் என்பதாம். காலநிர்ணயத்தில்:— ஜாதகர்மம், பும்ஸவனம், ஸீமந்தோன்னயனம்,

இவைகளை நிமித்தம் நேர்ந்தால் மலமாஸத்திலும் செய்யவும். மரீசி:— ரோகத்திலும், அலப்யயோகத்திலும், ஸீமந்தத்திலும், பும்ஸவனத்திலும், விஹிதமாகிய எதைக் கொடுக்கின்றனே, அது மலமாஸத்தில் ஆனாலும் தோஷாவஹமல்ல. ரோகே - ரோக சாந்தியில். அலப்யயோகே - அர்த்தோதயம் முதலியதில் விதிக்கப்பட்ட ச்ராத்தம் முதலியதில்.

मत्स्यपुराणे — चन्द्रसूर्यग्रहे चैव मरणे पुत्रजन्मनि । मलमासेऽपि देयं स्याद्दत्तमक्षयकारकम् इति । सत्यतपाः — मलिम्लुचाह्वये मासे विपत्तिर्यदि जायते । तस्मिन्नपि च कर्तव्या पिण्डदानोदकक्रिया इति ।

மத்ஸ்யபுராணத்தில்:— சந்த்ர ஸூர்ய க்ரஹணத்திலும், மரணத்திலும், புத்ரஜநநத்திலும், கொடுக்க வேண்டியதை மல மாஸத்திலும் கொடுக்க வேண்டும். கொடுக்கப்பட்டது அக்ஷய பலத்தைக் கொடுப்பது ஆகும். ஸத்யதபஸ்:— மலமாஸத்தில் மரணம் ஏற்பட்டால் அந்த மாஸத்திலும் பிண்டதான உதகதான க்ரியைகளைச் செய்ய வேண்டும்.

चन्द्रिकायाम् — जातकर्मणि यत् श्राद्धं दर्शश्राद्धं तथैव च । प्रतिसंवत्सरं यच्च पूर्वमासे प्रकीर्तितम् इति । तत्रैव — श्राद्धजातकनामानि ये च संस्कारसंव्रताः । मलिम्लुचेऽपि कर्तव्या इष्टीः काम्याश्च वर्जयेत् इति । संस्काराः - अन्नप्राशनादयः । संव्रताः - चातुर्मास्यव्रतादयः ।

சந்த்ரிகையில்:— ஜாதகர்மத்தில் எந்த ச்ராத்தமோ அதுவும், தர்சச்ராத்தமும், ப்ரதிஸாம்வத்ஸரிக ச்ராத்தமும், முதல் மாஸத்தில் விதிக்கப்பட்டுள்ளது. சந்த்ரிகையிலேயே:— ச்ராத்தம், ஜாதகர்மம், நாமகரணம், ஸம்ஸ்காரம், வ்ரதம் முதலியவைகளும், மலமாஸத்திலும் செய்யத் தகுந்தவைகள். காம்யமான இஷ்டிகளைச் செய்யக்

கூடாது. ஸம்ஸ்காரங்கள் - அன்னப்ராசனம் முதலியவை. ஸம்வ்ரதங்கள் - சாதுர்மாஸ்யம் முதலியவை.

कालादर्शे — द्वादशाहसपिण्ड्यन्तं कर्मग्रहणजन्मनोः । सीमन्ते पुंसवे श्राद्धं द्वावेतौ जातकर्म च। रोगशान्तिरलभ्ये च योगे श्राद्धं व्रतानि च। प्रायश्चित्तं निमित्तस्य वशात् पूर्वे परत्र वा इति । द्वादशाहसपिण्ड्यन्तं कर्म द्वादशाहकालीनं यत् सपिण्डीकरणं तदन्तं यस्येति विग्रहे मरणादारभ्य दहननग्नप्रच्छादनतिलोदकपिण्डदाननवश्राद्धदशाहहोमषोडशश्राद्धसपिण्डीकरणात्मकं कर्मेति यावत्। ग्रहणे पुत्रादिजन्मनि सीमन्ते पुंसवे च विहितं श्राद्धम्, एतौ द्वौ पुंसवनसीमन्तौ जातकर्म च आहिताग्नेरिष्टिरनाहिताग्नेर्होमः, प्रायश्चित्तम् - सन्ध्यातिक्रमादौ यत् प्रायश्चित्तम्, तत् निमित्तस्य वशात्, यदा पूर्वमासे निमित्तमुत्पद्यते, तदा पूर्वमासे कुर्यात्, यदा परमासे निमित्तमुत्पद्यते, तदा परत्र, यदा मासद्वये निमित्तमुत्पद्यते, तदोभयत्रेत्यर्थः । अत्र द्वादशाहग्रहणं वत्सरान्तसपिण्डीकरणस्याप्युपलक्षणम्। श्राद्धं सपिण्डनं कुर्यात् कालदोषं न चिन्तयेत्। वर्षान्ते द्वादशाहे वा सपिण्डीकरणं यदि। गुरुभार्गवयोर्मौढ्ये बाल्ये वा वार्द्धकेऽपि वा । मलमासेऽपि कर्तव्याः क्रियाः पूर्वाश्च मध्यमाः इत्यादिस्मरणात्।

காலாதர்சத்தில்:— த்வாதசாஹ ஸபிண்டீகரணம் முடியும் வரையில் உள்ள கர்மமும், க்ரஹணத்திலும், பிறப்பிலும், ஸீமந்தத்திலும், பும்ஸவனத்திலும் செய்ய வேண்டிய ச்ராத்தமும், ஜாதகர்மம், ரோகசாந்தி, அலப்யயோகம், வ்ரதங்கள், ப்ராயச்சித்தம், இவைகளும், நிமித்தத்தின் வசப்படி முதல் மாஸத்திலாவது, மறு மாஸத்திலாவது செய்யப்பட வேண்டும். 'த்வாதசாஹ ஸபிண்ட்யந்தம் கர்ம' என்பதற்கு மரணம் முதல் தஹனம், நக்னப்ரச்சாதனம், திலோதக பிண்டதானம், நவச்ராத்தம்,

தசமதினஹோமம், ஷோடச ச்ராத்தம், ஸபிண்டீகரணம் என்ற இவைகள் என்று பொருள். க்ரஹணத்திலும், புத்ர ஜனனத்திலும், ஸீமந்தத்திலும், பும்ஸவனத்திலும், விஹிதமான ச்ராத்தமும், பும்ஸவனஸீமந்தங்களும், ஜாதகர்மத்தில் ஆஹிதாக்னி செய்யும் இஷ்டியும், அனாஹிதாக்னி செய்யும் ஹோமமும், ப்ராயச்சித்தம் - ஸந்த்யாதிக்ரமம் முதலியதுகளில் எந்தெந்த ப்ராயச்சித்தம் உண்டோ அதுவும், நிமித்த வசத்தால். எப்பொழுது முதல் மாஸத்தில் நிமித்தம் உண்டாகின்றதோ, அப்பொழுது முதல் மாஸத்தில் செய்யவும். எப்பொழுது மறுமாஸத்தில் நிமித்தம் உண்டாகின்றதோ, அப்பொழுது மறுமாஸத்தில் செய்யவும். எப்பொழுது இரண்டு மாஸத்திலும் நிமித்தம் உண்டாகிறதோ, அப்பொழுது இரண்டு மாஸத்திலும் செய்யவும் என்பது பொருள். இதில் த்வாதசாஹம் என்று சொல்லியது வர்ஷாந்தத்தில் செய்யும் ஸபிண்டீகரணத்தையும் சொல்லும். ''வர்ஷாந்தத்திலோ பன்னிரண்டாவது நாளிலோ ஸபிண்டீகரணம் செய்யும் விஷயத்தில் காலதோஷத்தைச் சிந்திக்கக் கூடாது. குரு சுக்ரனின் மௌட்யத்திலோ, பால்யத்திலோ, வார்த்தகத்திலோ, மலமாஸத்திலோ, பூர்வக்ரியைகள், மத்யக்ரியைகள் இவைகளைச் செய்யலாம்'' என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்களால். அப்பொழுதே செய்யலாம்.

अन्ये तु - प्रेतस्य वत्सरादर्वाग्यदा संस्कारमिच्छति । न कालनियमो ज्ञेयो न मौढ्यं गुरुशुक्रयोः इति स्मरणात् त्रिपक्षादि सापिण्ड्येऽपि न कालनियम इत्याहुः । एवं च वत्सरात् पूर्वं यत् कर्तव्यं तत्र नाधिमासादि दोष इति गम्यते । स्मृत्यर्थसारे — सपिण्डीकरणात् प्रागेवोक्तकाले नैमित्तिकवृषोत्सर्गः, तत्र नाधिमासदोषः इति ।

மற்றவரோவெனில்:— இறந்தவனுக்கு ஒரு வர்ஷத்திற்குள் எப்பொழுது ஸம்ஸ்காரம் செய்ய விரும்புகிறானோ அப்பொழுது காலநியமம் இல்லை. குரு சுக்ர

மௌட்ய தோஷமும் இல்லை, என்று ஸ்ம்ருதி இருப்பதால், த்ரிபக்ஷாதி காலத்தில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்திலும் கால நியமம் இல்லை என்கின்றனர். இவ்விதம் இருப்பதால்:— ஒரு வர்ஷத்திற்கு முன் செய்ய வேண்டிய கர்மம் எதுவோ, அதில் அதிகமாஸாதி தோஷம் இல்லை என்று தோன்றுகிறது. ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:— ஸபிண்டீகரணத்திற்கு முன்பே விஹிதகாலத்தில் நைமித்திகமான வ்ருஷபோத்ஸர்ஜனம். அதில் அதிகமாஸதோஷம் இல்லை.

यत्तु वसिष्ठवचनम् —— अग्न्याधेयं प्रतिष्ठां च यज्ञदानव्रतानि च। वेदव्रतं वृषोत्सर्गश्चूडाकरणमेखलाः। मङ्गल्यमभिषेकंच मलमासे विवर्जयेत् इति, तत् काम्यम्, कार्तिक्यां वैशाख्यां ग्रहणे सङ्क्रमे वा इति बोधायनोक्त-काम्यवृषोत्सर्गविषयम्। तथा च तत्र वर्जनीयेषु मध्ये कालादर्शकारेण संगृहीतम् —— आश्रमस्वीकृतिः काम्यवृषोत्सर्गश्च निष्क्रमः इति। तथा आद्यैकोद्दिष्टं मलमासे कुर्यात्, आद्यमेकादशेऽहनि। एकादशेऽह्नि यत् श्राद्धं तत् सामान्यमुदाहृतम्। एकादशेऽहनि श्राद्धं कुर्यादेवाविचारयन् इत्यादिभिर्मृताहादेकादाशाह एवाद्यैकोद्दिष्टविधानात्।

ஆனால் —வஸிஷ்டர், 'அக்ந்யாதானம், ப்ரதிஷ்டை, யாகம், தானம், வ்ரதங்கள், வேதவ்ரதம், வ்ருஷபோத்ஸர்ஜனம், சௌளம், உபநயனம், மங்களகார்யம், அபிஷேகம், இவைகளை மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும்' என்று சொல்லி உள்ளார். எனில், அது காம்யம். 'கார்த்திகை பூர்ணிமா, வைசாகபூர்ணிமா, க்ரஹணம், ஸங்க்ரமணம் இவைகளில் செய்யலாம்' என்று போதாயனர் சொல்லிய காம்யவ்ருஷபோத்ஸர்ஜனத்தைப் பற்றியது. அவ்விதமே, அவ்விஷயத்தில் வர்ஜநீயங்களின் நடுவில், காலாதர்சகாரரால் ஆச்ரம ஸ்வீகாரமும், காம்ய வ்ருஷபோத்ஸர்ஜனமும், யாத்ரையும் கூடாது என்று சொல்லப்பட்டு உள்ளது. அவ்விதமே, ஆத்ய

ஏகோத்திஷ்டத்தை மலமாஸத்தில் செய்ய வேண்டும். 'ஆத்யத்தைப் பதினோராவது நாளில்' 'பதினோராவது நாளில் செய்யப்படும் ச்ராத்தம் ஸாமான்யம் எனப்பட்டுள்ளது' 'பதினோராவது நாளில் ச்ராத்தத்தை ஸந்தேஹமற்றவனாய்ச் செய்ய வேண்டும்' என்பது முதலிய வசனங்களால் இறந்த தினத்திற்குப் பதினோராவது நாளிலேயே ஆத்யைகோத்திஷ்டம் விதிக்கப்பட்டு இருப்பதால்.

तथा जाबालिः — एकराशौ स्थिते सूर्ये यदि मासो द्विधा भवेत्। एकोद्दिष्टं तु पूर्वत्र न परत्र कदाचन इति। कालादर्शकारेणेदं व्याख्यातम् - पूर्वमासस्थ निमित्ताधीनमेकोद्दिष्टं तत्र कृत्वा उत्तरत्र न कुर्यात् इति।

ஜாபாலி:— ஒரு ராசியில் ஸூர்யனிருக்கும் பொழுது மாஸம் இரண்டாக ஆனால், ஏகோத்திஷ்டத்தை முன் மாஸத்தில் செய்யவும். ஒரு காலும் பின் மாஸத்தில் செய்யக் கூடாது. காலாதர்சகாரரால் இதற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது - 'முதல் மாஸத்தில் உள்ள நிமித்தத்திற்கு அதீனமான ஏகோத்திஷ்டத்தைப் பூர்வமாஸத்தில் செய்துவிட்டு, உத்தரமாஸத்தில் செய்யக்கூடாது' என்று.

एवं च सूतकान्ते नरः कुर्यादेकोद्दिष्टद्वयं बुधः। सूतके पतिते चापि स्वतन्त्रं नातिलङ्घयेत् इति व्यासस्मरणात् मध्ये सूतकान्तरापाते स्वतन्त्रं महैकोद्दिष्टं एकादशाहे कृत्वा आशौचापगमानन्तरमावृत्ताद्यं यथा क्रियते तद्वत् मलमासेऽप्येकादशाहे आद्यश्राद्धं कृत्वा शुद्धमासे त्वावृत्ताद्यमूनमासिकात् पूर्वं कुर्यात्।

இவ்விதம் இருப்பதால், 'அறிந்தவன் ஆசௌசத்தின் முடிவில் இரண்டு ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும். ஆசௌசம் வந்தாலும் ஆத்யமஹைகோத்திஷ்டத்தை விடக்கூடாது' என்று வ்யாஸ ஸ்ம்ருதி இருப்பதால், நடுவில் வேறு ஆசௌசம் வந்தாலும், ஸ்வதந்த்ர (ஆத்ய)

மஹைகோத்திஷ்டத்தைப் பதினேராவது நாளில் செய்து, ஆசௌச நிவ்ருத்திக்குப் பிறகு ஆவ்ருத்தாத்யம் எப்படிச் செய்யப்படுகிறதோ, அப்படி மலமாஸத்திலும், பதினேராவது நாளில் ஆத்ய ச்ராத்தத்தைச் செய்து, சுத்த மாஸத்தில் ஆவ்ருத்தாத்யத்தை ஊனமாஸிகத்திற்கு முன்பு செய்ய வேண்டும்.

तथा स्मृत्यर्थसारे — आद्यश्राद्धविघ्ने तु भार्गववारनन्दाचतुर्दशी-त्रिजन्मानि त्यक्त्वा ऊनमासिकात् पूर्वमनुष्ठेयम् इति। तथा च पराशरः — अधिमासमृतानां तु आद्यमेकं समाचरेत्। शुद्धमासे तदन्वाद्यं शुद्धे चैवोनमासिकम् इति।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:— ஆத்ய ச்ராத்தத்திற்கு விக்னம் நேர்ந்தால், சுக்ரவாரம், நந்தா, சதுர்த்தசீ, த்ரிஜன்ம நக்ஷத்ரங்கள் இவைகளைத் தள்ளி ஊனமாஸிகத்திற்கு முன்பு செய்யவும். அவ்விதமே, பராசரர்:— 'அதிகமாஸத்தில் மரித்தவர்களுக்கு ஆத்யம் ஒன்றை அப்பொழுது செய்யவும். சுத்தமாஸத்தில் ஆவ்ருத்தாத்யத்தையும், சுத்தமாஸத்திலேயே ஊனமாஸிகத்தையும் செய்யவும்' என்றார்.

एवं च षष्टिदिनात्मकमृतमासस्थद्वितीयतिथौ द्वितीयमासिकं कर्तव्यम्, तदा मृतमासात् पूर्वमासे प्रथमाब्दिकं भविष्यति, बुधश्चान्द्रमसस्यैव मामले दिवसे सति। आद्याब्दिकं प्रकुर्वीत इति स्मरणात्। स्मृत्यन्तरेऽपि — आवृत्तिरन्यमास्यानां द्वादशाहे सपिण्डने। तथा नावर्तयेदाद्यं मले त्वावृत्तिरिष्यते इति।

இவ்விதம் இருப்பதால், அறுபது நாட்கள் கொண்ட ம்ருத மாஸத்தின் இரண்டாவது திதியில், இரண்டாவது மாஸிகத்தைச் செய்யவும். அப்பொழுது ம்ருதமாஸத்திற்கு முன் மாஸத்தில் ப்ரதமாப்திகம் வரும். 'அறிந்தவன் சாந்த்ர ஸம்வத்ஸரத்தின் முந்நூற்று ஐம்பத்து ஐந்தாவது நாளாகும் போது, ஆத்யாப்திகத்தைச் செய்யவும்' என்று ஸ்ம்ருதி

இருப்பதால். மற்ருேர் ஸ்ம்ருதியில்:— பன்னிரண்டாவது நாளில் ஸபிண்டனம் செய்த விஷயத்தில் மற்ற மாஸிகங்களை ஆவ்ருத்தி (மறுபடி) செய்யவும். ஆத்யத்தை ஆவ்ருத்தி செய்ய வேண்டாம். மலமாஸத்திலோ வெனில் ஆவ்ருத்தி விதிக்கப்படுகிறது.

गभस्तिरपि — एकोद्दिष्टं तु यत् श्राद्धं तन्नैमित्तिक मुच्यते। तत् कार्यं पूर्वमासे च कालाधिक्ये च धर्मतः इति। अस्यार्थश्चन्द्रिकायामुक्तः — एतत् सपिण्डीकरणात् प्राक्तनमासिकविषयम्, चशब्दादुत्तरमासेऽपि कार्यमिति। एवं सपिण्डीकरणानन्तरभावीनि मासिकान्यप्युभयत्र कार्याणि।

கபஸ்தியும்:— 'ஏகோத்திஷ்ட ச்ராத்தம் எதுவோ அது நைமித்திகம் எனப்படுகிறது. அதை, அதிகமாஸம் நேர்ந்தால் முதல் மாஸத்திலும் மறுமாஸத்திலும் சாஸ்திரப்படி செய்யவேண்டும்' என்றுள்ளது. இதற்கு அர்த்தம் சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது:- 'இது ஸபிண்டீகரணத்திற்கு முந்திய மாஸிகத்தைப் பற்றியது. 'ச' என்று இருப்பதால் மறு மாஸத்திலும் செய்ய வேண்டும்' என்று இவ்விதம் ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு வரும் மாஸிகங்களை இரண்டு மாஸத்திலும் செய்ய வேண்டும்.

तथा हारीतः — अधिमासे न कर्तव्यं श्राद्धमाभ्युदयं तथा। तथैव काम्यं यत् कर्म वत्सरात् प्रथमादृते। सपिण्डीकरणादूर्ध्वं यत् किञ्चित् श्राद्धकं भवेत्। इष्टं वाऽप्यथवा पूर्तं तन्न कुर्यान्मलिम्लुचे इति। अस्याप्यर्थश्चन्द्रिकायामुक्तः — सपिण्डीकरणादूर्ध्वं यत् प्रथमवत्सरे प्रतिमासं क्रियमाणं त्रैपुरुषिकं मासिकं श्राद्धं तन्मलिम्लुचेऽपि मासे कार्यमिति वक्तुं वत्सरात् प्रथमादृते इत्युक्तम् इति। अस्मिन्नेव विषये वसिष्ठोऽपि — संवत्सरमध्ये यद्यधिकमासो भवेन्मासिकार्थं दिनमेकं वृद्धिं नयेत् इति।

**ஹாரீதர்:—** அதிகமாஸத்தில் நாந்தீ ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அவ்விதம் காம்ய ச்ராத்தத்தையும் செய்யக்கூடாது, முதல் வர்ஷத்தைத் தவிர்த்து. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு எந்த ச்ராத்தமோ அதையும், யாகம் முதலியதையும், பூர்த்தத்தையும் (குளம் வெட்டுவது முதலியது) மலமாஸத்தில் செய்யக்கூடாது, என்று. இதற்கும் பொருள் சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது:- 'ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு முதல் வர்ஷத்தில் மாஸந்தோறும் செய்யப்படுவதும், மூன்று புருஷர்களை உத்தேசித்துச்செய்யப்படுவதுமான மாஸிகச்ராத்தம் எதுவோ அதை மலமாஸத்திலும் செய்ய வேண்டும், என்று சொல்வதற்காக 'முதல் வர்ஷத்தைத் தவிர்த்து' என்று. சொல்லப்பட்டுள்ளது என்று. இதே விஷயத்தில், **வஸிஷ்டரும்:—** ஒரு வர்ஷத்திற்குள் அதிகமாஸம் ஏற்படுமாகில் மாஸிகத்திற்காக ஒரு தினத்தை அதிகப்படுத்த வேண்டும்.

सत्यव्रतः — आब्दमम्बुघटं दद्यादन्नमाज्येन संयुतम्। संवत्सरे विवृद्धेऽपि प्रतिमासं च मासिकम् इति। गभस्तिः - न कुर्यान्मिलमासे तु कर्म किञ्चित्कथञ्चन। मुक्त्वा नैमित्तिकश्राद्धं तद्धि तत्रैव कीर्तितम् इति। मरीचिरपि — प्रतिमासं मृताहे च यत् श्राद्धं प्रतिवत्सरम्। मन्वादौ च युगादौ च तत् श्राद्धमुभयत्र च इति। सङ्ग्रहेऽपि — यौगादिकं मासिकं च श्राद्धं चापरपक्षिकम्। मन्वादिकं तैर्थिकं च कुर्यान्मासद्वयेऽपि च इति। तैर्थिकमिति पूर्वदृष्टतीर्थविषयम्, अपूर्वदर्शनस्य निषिद्धत्वात्।

**ஸத்யவ்ரதர்:—** ஒரு வர்ஷம் முடியும் வரையில் ப்ரதி தினம் ஜலகும்பத்தையும், நெய்யுடன் கூடிய அன்னத்தையும், வர்ஷம் அதிகமானாலும் கொடுக்க வேண்டும். மாஸந்தோறும் மாஸிகத்தையும் செய்ய வேண்டும். **கபஸ்தி:—** மலமாஸத்தில் எக்கார்யத்தையும் எவ்விதத்திலும் செய்யக்கூடாது. நைமித்திக ச்ராத்தம்

தவிர்த்து. அது மலமாஸத்திலேயே சொல்லப்பட்டுள்ளது. **மரீசியும்:**— மாஸந்தோறும் செய்யப்படும் மாஸிகமும், வர்ஷந்தோறும் செய்யப்படும் ம்ருதாஹ ச்ராத்தமும், மன்வாதி ச்ராத்தமும், யுகாதி ச்ராத்தமும் இரண்டு மாஸங்களிலும் செய்யப்பட வேண்டும். **ஸங்க்ரஹத்திலும் :**— 'யுகாதி ச்ராத்தம், மாஸிக ச்ராத்தம், மாஸி ச்ராத்தம், மன்வாதி ச்ராத்தம், தீர்த்த ச்ராத்தம் என்ற இவைகளை இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும்.' தீர்த்த ச்ராத்தம் என்றது முன் பார்த்ததான தீர்த்தத்தைப் பற்றியது. புதியதாய்த் தீர்த்தத்தைப் பார்ப்பது நிஷேதிக்கப்பட்டு இருப்பதால்.

तथा — मासिके समनुक्रान्ते चान्द्रमाने तिथिद्वयम्। यदि स्यात्तत्र कुर्वीत मासिकद्वितयं क्रमात् इति। एकमेव मासिकं पूर्वत्र परत्र च कुर्यादित्यर्थः। स्मृत्यन्तरे — अन्यमासे प्रमीतानामधिमास-समागमे। एकनाम्ना तु कर्तव्यं मासिकद्वयमीरितम् इति। अन्यमासे - अधिमासव्यतिरिक्तमासे। वृद्धवसिष्ठः — श्राद्धीयेऽहनि सम्प्राप्ते अधिमासो भवेद्यदि। मासद्वयेऽपि कुर्वीत श्राद्धमेवं न दुष्यति इति।

அவ்விதம் 'மாஸிகம் ஆரம்பிக்கப்பட்டு இருக்கும் பொழுது சாந்த்ர மானத்தில் இரண்டு திதிகள் வந்தால், இரண்டு திதிகளிலும் இரண்டு மாஸிகங்களை க்ரமமாய்ச் செய்ய வேண்டும்' என்று. ஒரே மாஸிகத்தை முதல் மாஸத்திலும், மறு மாஸத்திலும் செய்ய வேண்டும் என்பது பொருள். மற்றொரு ஸ்ம்ருதியில்:— சுத்த மாஸத்தில் இறந்தவர்க்கு அதிக மாஸம் வந்தால், இரண்டு மாஸங்களை ஒரே பெயருடன் செய்ய வேண்டும், என்று சொல்லப்பட்டுள்ளது. அந்யமாஸே = அதிக மாஸம் தவிர்த்த மாஸத்தில். வ்ருத்தவஸிஷ்டர்:— ச்ராத்தத்திற்குரிய தினம் நேர்ந்த பொழுது அதிகமாஸம் நேர்ந்தால் இரண்டு மாஸங்களிலும் ச்ராத்தத்தைச் செய்யவும். இவ்விதமானால் தோஷத்தை அடைவதில்லை.

व्यासः — षष्टिभिर्दिवसैर्मासः कथितो बादरायणैः । उत्तरे देवकार्याणि पितृकार्याणि चोभयोः इति । श्लोकगौतमश्च— द्वौ मासावेकनामानावेकस्मिन् वत्सरे इति। उत्तरे देवकार्याणि पितृकार्याणि चोभयोः इति। एषु श्राद्धपितृकार्यशब्दौ मासिकादिश्राद्धपरौ।

**வ்யாஸர்:—** அறுபது நாட்களால் ஒரு மாஸம் என்று பாதராயணர்களால் சொல்லப்பட்டுள்ளது. அவைகளுள் தேவகார்யங்கள் மறுமாஸத்திலும், பித்ரு கார்யங்கள் இரண்டு மாஸங்களிலும் செய்யப்படவேண்டும். **ச்லோககௌதமரும்:—** ஒரு வர்ஷத்தில் ஒரே பெயருள்ள இரண்டு மாஸங்கள் ஸம்பவித்தால், தேவகார்யங்கள் மறுமாஸத்திலும், பித்ருகார்யங்கள் இரண்டு மாஸங்களிலும் செய்யப்பட வேண்டும். இவ்வசனங்களில் ச்ராத்தம், பித்ருகார்யம் என்ற சப்தங்கள் மாஸிகம் முதலிய ச்ராத்தங்களைப் பற்றியவை.

त्रैपक्षिकोनमासिकविषये पितृमेधसारेऽभिहितम् — तत्तन्मासवृद्धौ त्रैपक्षिकमूनानि च पूर्वत्रैव न परत्र पुनः कुर्यात् इति। सुधीविलोचने व्याख्यातमेतत् - द्वितीयमासवृद्धौ मृताहात् त्रिपक्ष एव त्रैपक्षिकं कुर्यात्, न च परत्र मासे, अत्रिपक्षत्वात्, एवं षष्ठमासवृद्धौ ऊनषाण्मासिकं षष्ठमास एव कुर्यात्, न च परमासे, तस्य सप्तमत्वात्, एवं द्वादशमासवृद्धावूनाब्दिकं द्वादश मास एव कुर्यात्, न त्रयोदश मासे, मृतेऽहनि तु कर्तव्यं प्रतिमासं तु मासिकम् इति मृताहविहितमासिकस्यैव प्रतिमासं कर्तव्यत्वविधानात्, त्रैपक्षिकोनषाण्मास्ये ऊनाब्दिकमथाचरेत्। एतेषामेव काले तु न पुनः करणं भवेत् इति ऊनानां पुनः करण निषेधात् इति।

த்ரைபக்ஷிக ஊனமாஸிக விஷயத்தில் சொல்லப்பட்டுள்ளது. பித்ருமேதஸாரத்தில்:— 'அந்தந்த மாஸங்கள் அதிகமானால் த்ரைபக்ஷிகத்தையும்,

ஊனமாஸிகங்களையும் முன் மாஸத்திலேயே செய்ய வேண்டும். பிந்திய மாஸத்தில் செய்யக்கூடாது' என்று. ஸுதீவிலோசனத்தில் இது விவரிக்கப்பட்டுள்ளது:— 'இரண்டாவது மாஸம் அதிகமானால் மரண தினத்தினின்றும் மூன்றாவது பக்ஷத்திலேயே த்ரைபக்ஷிக மாஸிகத்தைச் செய்ய வேண்டும். அடுத்த மாஸத்தில் அல்ல. மூன்றாவது பக்ஷம் அல்லாததலால். இவ்விதம் ஆறாவது மாஸம் அதிகமானால் ஊனஷாண்மாஸிகத்தை ஆறாவது மாஸத்திலேயே செய்ய வேண்டும். மறுமாஸத்தில் அல்ல. அது ஏழாவது மாஸமாவதால். இவ்விதம் பன்னிரண்டாவது மாஸம் அதிகமானால் ஊனாப்திகத்தைப் பன்னிரண்டாவது மாஸத்திலேயே செய்யவும். பதின்மூன்றாவது மாஸத்தில் செய்யக்கூடாது. 'மரண தினத்தில் ஒவ்வொரு மாஸத்திலும் மாஸிகத்தைச் செய்ய வேண்டும்' என்று ம்ருத திதியில் விதிக்கப்பட்ட மாஸிகத்திற்கே ஒவ்வொரு மாஸத்திலும் செய்யப்பட வேண்டும் என்று விதி இருப்பதால். 'த்ரைபக்ஷிகம், ஊனஷாண்மாஸிகம், ஊனாப்திகம் இவைகளை இவைகளின் காலத்திலேயே செய்ய வேண்டும். மறுபடி செய்யக்கூடாது' என்று ஊனங்களுக்கு மறுபடி செய்வது என்பது நிஷேதிக்கப்பட்டு உள்ளது.

अन्ये तु — षष्टिभिर्दिवसैः इति षष्टिदिनानामेक-मासत्वस्मरणेन उत्तरमासानामपि आद्यषष्ठद्वादशमासत्वात् द्वित्रिदिनैरूनेषु तेषूनानां करणसम्भवात्— संवत्सरे प्रवृद्धेऽपि प्रतिमासं तु मासिकम् इति मासिकमात्रस्य प्रतिमासं कर्तव्यत्वविधानात् - मखात्रयोदशीश्राद्धं श्राद्धान्यपि च षोडश । कार्याणि मलमासेऽपि नित्यं नैमित्तिकं तथा इति षोडशानामपि मासिकानामुभयत्र कर्तव्यत्वविधानात्, एकादशेऽह्नि मास्यूने आद्ये षष्ठे तथान्तिमे । प्रतिमासं मृतेऽहन्याब्दं स्युस्त्रिपक्षे च षोडश इति त्रैपक्षिकोनमासिकानामपि षोडशमध्यपातित्वात्, श्राद्धं दर्शेऽप्यहरहः

श्राद्धमूनादिमासिकम्। तर्पणं च निमित्तस्य नित्यत्वादुभयत्र च इति कालादर्शकारेण ऊनादीनामुभयत्र विधानात्, त्रैपक्षिकोनषाण्मास्ये इति पुनःकरण निषेधस्य ऊनानां नापकर्षः स्यात् पुनरप्यपकर्षणे इति वचनेन उत्सवार्थापकर्षविषयत्वप्रतीतेः, पुनःकरणमात्रविषयत्वे, अर्वाक् संवत्सरादस्य सपिण्डीकरणं कृतम्। षोडशानां द्विरावृत्तिं कुर्यादित्याह गौतमः इत्यादिवचनविरोधप्रसङ्गात्। अत आद्य श्राद्धादीनि षोडशमासिकानि मलमासे तदुत्तरमासे चावृत्त्या कार्याणीत्याहुः।

**மற்றவரோவெனில்:—** 'அறுபது நாட்களால் ஒரு மாஸம்' என்று அறுபது நாட்கள் ஒரு மாஸம் என்று இருப்பதால், மறு மாஸங்களுக்கும் முதல், ஆறு, பன்னிரண்டு, என்ற மாஸத் தன்மை இருப்பதால், இரண்டு மூன்று தினங்கள் குறைந்திருக்கும் அம்மாஸங்களில் ஊநங்களைச் செய்யக் கூடுமாதலால். 'வர்ஷம் அதிகமானாலும், மாஸந்தோறும் மாஸிகத்தைச் செய்யவும்' என்று மாஸிகம் எல்லாவற்றையும் மாஸந்தோறும் செய்யும்படி விதி இருப்பதால், 'மகாத்ர யோதசீச்ராத்தம், ஷோடசச்ராத்தங்கள், நித்ய ச்ராத்தங்கள், நைமித்திக ச்ராத்தங்கள் இவைகளை மலமாஸத்திலும் செய்யவேண்டும்' என்று பதினாறு மாஸிகங்களுக்கும் இரண்டு மாஸங்களிலும் விதி இருப்பதால், 'பதினோராவது நாளிலும், முதல் மாஸம் குறைவாய் இருக்கும் பொழுதும், அப்படியே ஆறாவது, பன்னிரண்டாவது மாஸத்திலும், மாஸந்தோறும் ம்ருத திதியிலும், வர்ஷம் முடியும் வரையில் த்ரிபக்ஷத்திலும் பதினாறு ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்' என்று. ஆக, பதினாறு ச்ராத்தம் முதலியவைகளும் பதினாறுக் த்ரைபக்ஷிக ஊநமாஸிகம் முதலியவைகளும் பதினாறுக் குட்பட்டதால், 'தர்சச்ராத்தம், ஸோதகும்பச்ராத்தம், ஊநமாஸிகம் முதலியது, தர்ப்பணம் இவைகளின்

நிமித்தம் நித்யமானதால் இரண்டு மாஸங்களிலும் செய்யப்பட வேண்டும்' என்று காலாதர்சகாரரால் ஊனம் முதலியவைகள் இரண்டு மாஸங்களிலும் விதிக்கப்பட்டு இருப்பதால், 'த்ரைபக்ஷிகோனஷாண்மாஸ்யே' என்று மறுபடி செய்வதை நிஷேதித்து இருப்பதற்கு, 'மறுபடி அபகர்ஷம் செய்தால் ஊனமாஸிகங்களுக்கு அபகர்ஷம் இல்லை' என்ற வசனத்தால் உத்ஸவத்திற்காக அபகர்ஷம் செய்யும் விஷயத்தைப் பற்றியது என்று தோன்றுவதால், மறுபடி செய்வதையே நிஷேதிக்கிறது என்னும் விஷயத்தில் 'ஒரு வர்ஷத்திற்குள் எவனுக்கு ஸபிண்டீகரணம் செய்யப்பட்டதோ அவனுக்கு ஷோடச ச்ராத்தங்களை இரண்டு தடவை செய்ய வேண்டும் என்றார் கௌதமர்' என்பது முதலிய வசனங்களுக்கு விரோதம் நேரிடக்கூடும். ஆகையால் ஆத்ய ச்ராத்தம் முதலிய பதினாறு மாஸிகங்களும் மலமாஸத்திலும், அதற்கடுத்த சுத்தமாஸத்திலும், இருமுறையாகச் செய்யப்பட வேண்டும் என்கின்றனர்.

प्रथमाब्दिकविषये हारीतः —— असङ्क्रान्तेऽह्नि कर्तव्यमाब्दिकं प्रथमं द्विजैः इति। स एव —— असङ्क्रमे तु कर्तव्यमाब्दिकं मासिकं तथा। एवं सपिण्डनान्तं च वत्सरोदघटादिकम् इति।

முதல் ஆப்திகவிஷயத்தில், ஹாரீதர்:— ப்ராம்ஹணர்கள் முதல் ஆப்திகத்தை ஸங்க்ரமணம் இல்லாத தினத்தில் செய்ய வேண்டும். ஹாரீதரே:— ஆப்திகமும், மாஸிகமும் ஸங்க்ரமணம் இல்லாத தினத்தில் செய்யப்பட வேண்டும். இவ்விதம் ஸபிண்டீகரணம் வரையில் ஒரு வர்ஷம் ஸோதகும்பம் முதலிய ச்ராத்தமும் செய்யப்படவேண்டும்.

लघुहारीतोऽपि —— प्रत्यब्दं द्वादशे मासि कार्या पिण्डक्रिया सुतैः। क्वचित् त्रयोदशेऽपि स्यादाद्यं मुक्त्वा तु वत्सरम् इति।

पिण्डक्रिया  मृताहश्राद्धक्रिया, द्वादशे मासि पूर्णे सति, त्रयोदशे मासीति यावत् । क्वचित् - अधिमासयुक्तवत्सरे त्रयोदशे मासि परिपूर्णे सति, चतुर्दशे मासीति यावत् । आद्यमाब्दिकं त्वधिमासवत्यपि संवत्सरे द्वादशे मासि पूर्णे सति कार्यम्, त्रयोदशे मासि कार्यमित्यर्थः ।

லகுஹாரீதரும்:— ப்ரதிவர்ஷமும் பன்னிரண்டாவது மாஸத்தில் புத்ரர்கள் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ஏதாவது ஒரு வர்ஷத்தில் பதின்மூன்றுவது மாஸத்திலும் செய்யவேண்டும். முதல் ஆப்திகத்தைத் தவிர்த்து. பிண்டக்ரியா = ப்ரத்யாப்திக ச்ராத்தம். 'பன்னிரண்டாவது மாஸத்தில்' என்பதற்கு பன்னிரண்டாவது மாஸம் முடிந்த பிறகு பதின்மூன்றுவது மாஸத்தில் என்பது பொருள். 'க்வசித்' என்பதற்கு அதிக மாஸம் உள்ள வர்ஷத்தில் பதின்மூன்றுவது மாஸம் பூர்ணமான பிறகு, பதினான்காவது மாஸத்தில் என்பது பொருள். முதல் ஆப்திகத்தையோ வெனில், அதிக மாஸம் உள்ள வர்ஷத்திலும் பன்னிரண்டாவது மாஸம் முடிந்த பிறகு செய்ய வேண்டும். பதின்மூன்றுவது மாஸத்தில் செய்ய வேண்டும் என்பது பொருள்.

चन्द्रिकायाम् — आब्दिकं प्रथमं यत् स्यात् तत् कुर्वीत मलिम्लुचे । त्रयोदशे च सम्प्राप्ते कुर्वीत पुनराब्दिकम् इति ॥ पुनराब्दिकं - प्रत्याब्दिकम्, उत्तरे मासि सम्प्राप्ते कुर्वीतेत्यर्थः । अतश्शुद्धमासमृतानां प्रथमाब्दिकं मलमासागमे सति तत्र कर्तव्यम्, द्वितीयाद्याब्दिकं तु तदुत्तरे शुद्धमासे कर्तव्यम्, न पूर्वत्र मलमासे । तथा च सत्यव्रतः — वर्षे वर्षे तु यत् श्राद्धं मातापित्रोर्मृतेऽहनि । मलमासे न कर्तव्यं व्याघ्रस्य वचनं यथा इति ।

சந்த்ரிகையில்:— "முதல் ஆப்திகம் எதுவோ அதை மலமாஸத்தில் செய்ய வேண்டும். ப்ரத்யாப்திகத்தைப்

பதின்மூன்றுவது மாஸத்தில் செய்யவேண்டும்.'' 'புனராப்திகம்' என்பதற்கு ப்ரத்யாப்திகம் என்று பொருள். மறுமாஸம் வந்த பிறகு செய்ய வேண்டும் என்பது பொருள். ஆகையால், சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு முதல் ஆப்திகத்தை மலமாஸம் நேர்ந்தால் அதிலேயே செய்ய வேண்டும். ப்ரத்யாப்திகத்தை மலமாஸத்திற்கு அடுத்த சுத்த மாஸத்தில் செய்ய வேண்டும். முந்திய மலமாஸத்தில் செய்யக் கூடாது. அவ்விதமே, ஸத்யவ்ரதர்:— ப்ரதி வர்ஷம் மாதா பிதாக்களின் ம்ருதாஹ ச்ராத்தத்தை மலமாஸத்தில் செய்யக் கூடாது, வ்யாக்ரரின் வசனப்படி.

स्मृत्यन्तरे — मासे संवत्सरे चैव तिथिद्वैधं यदा भवेत्। तत्रोत्तरा तिथिर्ग्राह्या न पूर्वा तु मलिम्लुचा इति। एवं च मलिम्लुचस्तु यो मासस्स मासः पापसंज्ञकः। त्यक्त्वा तमुत्तरे कुर्यात् पित्र्यदैवादिकाः क्रियाः। वर्जितः पितृदेवाभ्यां स मासः पापसंज्ञकः इत्यादीनि वचनानि शुद्धमासमृतानां प्रत्याब्दिकविषयतया योजनीयानि। मलमासमृतानां तु प्रत्याब्दिकं मलमासागमे सति तत्रैव कर्तव्यम्।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— மாஸிக விஷயத்திலும், ப்ரத்யாப்திக விஷயத்திலும் இரண்டு திதி நேர்ந்தால், அவைகளுள் பிந்திய திதியை க்ரஹிக்க வேண்டும். மலமாஸத்திய முந்திய திதியை க்ரஹிக்கக் கூடாது. இவ்விதம் இருப்பதால், ''மலமாஸம் எதுவோ அது பாபமாஸம் எனப்பட்டுள்ளது. அதை விட்டுவிட்டு மறுமாஸத்தில் பித்ருகார்யம், தேவகார்யம் முதலிய க்ரியைகளைச் செய்ய வேண்டும். அந்த மாஸம் பித்ருக்களாலும் தேவர்களாலும் தள்ளப்பட்டதானதால் பாபமென்ற பெயருடையது''. இவை முதலிய வசனங்கள் சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திகத்தைப் பற்றியதாய்ச் சேர்க்கப்பட வேண்டும். மலமாஸத்தில் இறந்தவர்க்கோ வெனில் ப்ரத்யாப்திகம் மலமாஸத்தில் வந்தால் அதிலேயே செய்யப்பட வேண்டும்.

तथा च भृगुः — मलमासे मृतानां तु यत् श्राद्धं प्रतिवत्सरम्। मलमासे तु तत् कार्यं नान्येषां तु कथञ्चन इति । अन्येषाम् - शुद्धमासमृतानाम्, मलमासे न कार्यम्, किं तु शुद्धमास एवेत्यर्थः । सत्यतपाश्च — वर्षे वर्षे तु यत् श्राद्धं मृताहे तु मलिम्लुचे । कुर्यात्तत्र प्रमीतानामन्येषामुत्तरत्र तु इति । पैठीनसिरपि — मलमासे मृतानां तु श्राद्धं यत् प्रतिवत्सरम्। मलमासे तु कर्तव्यं नान्येषां तु कदाचन इति ।

ப்ருகு:— மலமாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தம் எதுவோ அதை மலமாஸத்திலேயே செய்ய வேண்டும். மற்றவரின் ப்ரத்யாப்திகத்தை மலமாஸத்தில் எவ்விதத்தாலும் செய்யக் கூடாது. ''அந்யேஷாம்'' என்பதற்குச் சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு மலமாஸத்தில் செய்யக் கூடாது, ஆனால் சுத்த மாஸத்திலேயே செய்ய வேண்டும் என்பது பொருள். ஸத்யதபஸ்ஸும்:— ப்ரதி வர்ஷமும் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை மலமாஸத்தில் இறந்தவர்களுக்கே செய்ய வேண்டும். சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திகத்தைச் சுத்த மாஸத்திலேயே செய்ய வேண்டும் என்பது பொருள். பைடீநஸியும்:— மலமாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை மலமாஸத்திலேயே செய்ய வேண்டும். மற்றவர்க்குச் செய்யக் கூடாது.

एवं च — गर्भे वार्धुषिके भृत्ये प्रेते नित्येऽनुमासिके। आब्दिके च तथा श्राद्धे नाधिमासं विवर्जयेत्। प्रतिसंवत्सरश्राद्धं मलमासे न वर्जयेत्। नित्यानियानि कर्माणि निमित्तार्थानि यानि च। एकसंज्ञौ यदा मासौ स्यातां संवत्सरे क्वचित्। तत्राद्ये पितृकार्याणि देवकार्याणि चोत्तरे । द्वौ मासावेकनामानौ स्यातां संवत्सरे यदि । पूर्वत्र पितृकार्याणि देवकार्याणि चोत्तरे इति कात्यायन प्रचेतः शातातप पैठीनसिवचनानि

मलमासमृतविषयाणि। यत्तु गालववचनम् — वर्षे वर्षे तु यत् श्राद्धं मातापित्रोर्मृतेऽहनि। मासद्वयेऽपि तत्कुर्याद्व्याघ्रस्य वचनं यथा इति, यदपि मरीचिवचनम् — प्रतिमासं मृताहे यत् श्राद्धं च प्रतिवत्सरम्। मन्वादौ च युगादौ च मासयोरुभयत्र च इति, यदपि कालादर्शवचनम् — मलिम्लुचान्यमासेषु मृतानां श्राद्धमाब्दिकम्। तर्पणं च निमित्तस्य नित्यत्वादुभयत्र च इत्येवमादीन्युभयत्र सांवत्सरिकश्राद्धप्रतिपादकानि वचनानि मलमासमृतानां प्रत्याब्दिकं मलमास एव कर्तव्यं, शुद्धमासेषु मृतानां प्रथमाब्दिकं मलमासे, द्वितीयाद्याब्दिकं तु शुद्धमास इत्येवं पराणि।

இவ்விதம் இருப்பதால், ''பும்ஸவனம் முதலியதிலும், வட்டியிலும், கூலியிலும், ப்ரேத கார்யத்திலும், நித்யச்ராத்தத்திலும், அனுமாஸிகத்திலும், ஆப்திக ச்ராத்தத்திலும் அதிக மாஸத்தைத் தள்ளக் கூடாது'', ''ப்ரத்யாப்திகச்ராத்தத்தை மலமாஸத்தில் விடக்கூடாது. நித்ய கர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் விடக்கூடாது'', 'ஏதாவது ஒரு வர்ஷத்தில் ஒரே பெயருள்ள இரண்டு மாஸங்கள் வருமாகில், அந்த மாஸங்களுள் முதல் மாஸத்தில் பித்ரு கார்யங்களையும், மறுமாஸத்தில் தேவகார்யங்களையும் செய்ய வேண்டும்'. 'ஒரு வர்ஷத்தில் ஒரே பெயருள்ள இரண்டு மாஸங்கள் ஸம்பவித்தால், முதல் மாஸத்தில் பித்ரு கார்யங்களையும், பிந்திய மாஸத்தில் தேவகார்யங்களையும் செய்ய வேண்டும்'' என்ற காத்யாயனர், ப்ரசேதஸ், சாதாதபர், பைடீநஸி வசனங்கள் மலமாஸத்தில் இறந்தவரைப் பற்றியது. ஆனால், ''மாதாபிதாக்களுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும், வ்யாக்ரரின் வசனப்படி'', என்ற காலவரின் வசனம், ''மாஸந்தோறும் செய்யப்படும் மாஸிகமும், வர்ஷந்தோறும் செய்யப்படும் ப்ரத்யாப்திக ச்ராத்தமும், மன்வாதி ச்ராத்தமும், யுகாதி ச்ராத்தமும் இரண்டு மாஸங்களிலும் செய்யப்பட வேண்டும்'' என்ற மரீசி

வசனம், ''சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு ஆப்திக ச்ராத்தத்தையும், தர்ப்பணத்தையும் இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும், நிமித்தம் நித்யமானதால்'' என்ற காலாதர்ச வசனம் முதலிய இவைகள், இரண்டு மாஸங்களிலும் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும் என்று சொல்லுகின்றவைகளாய் உள்ளனவே எனில், அவை, மலமாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திகம் மலமாஸத்திலேயே செய்யப்பட வேண்டும், சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு முதல் ஆப்திகம் மலமாஸத்தில் செய்யப்பட வேண்டும், ப்ரத்யாப்திகம் சுத்த மாஸத்திலேயே செய்யப்பட வேண்டும் என்பதில் தாத்பர்யம் உள்ளவை

तथा च कालनिर्णये — अतो मलमासमृतानां कदाचित् प्रत्याब्दिकं मलमासे कार्यम्, शुद्धमासमृतानां च प्रथमाब्दिकं तत्र कार्यम्, द्वितीयाद्याब्दिकं तु शुद्धमास इत्येतं निर्णयमभिप्रेत्य पितृकार्याणि चोभयोः इत्यादीनि वचनानि प्रवृत्तानि इति। अपरार्के — अधिमासमृतानां तु मृताहस्तत्र नोत्तरे। अन्येषामुत्तरे कुर्यात् प्रथमं त्वधिके चरेत् इति।

காலநிர்ணயத்தில்:— ''ஆகையால், மலமாஸத்தில் இறந்தவர்களுக்கு எப்பொழுதாவது ப்ரத்யாப்திகம் மலமாஸத்திலேயே செய்யப்பட வேண்டும். சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரதமாப்திகம் மலமாஸத்தில் செய்யப்பட வேண்டும். ப்ரத்யாப்திகம் சுத்த மாஸத்தில் செய்யப்பட வேண்டும்'' என்ற இந்த அபிப்ராயத்தை உட்கொண்டு, 'பித்ரு கார்யங்கள் இரண்டு மாஸத்திலும்' என்பது முதலிய வசனங்கள் ப்ரவ்ருத்தித்துள்ளன'' என்றுள்ளது. அபரார்க்கத்தில்:— அதிக மாஸத்தில் இறந்தவர்களுக்கு ப்ரத்யாப்திகம் அதிலேயே, மறுமாஸத்தில் கூடாது. சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்குச் சுத்த மாஸத்தில் செய்ய வேண்டும்.

முதல் ஆப்திகத்தையோ வெனில் அதிகமாஸத்தில் செய்ய வேண்டும்.

अन्यान्यपि वर्ज्यावर्ज्यकार्याणि कालादर्शकारः सङ्गृह्योदाजहार— अब्दोदकुम्भमन्वादिमहालययुगादिषु । श्राद्धं दर्शेऽप्यहरहः श्राद्धमूनादिमासिकम् । मलिम्लुचान्यमासेषु मृतानां श्राद्धमाब्दिकम् । श्राद्धं च पूर्वदृष्टेषु तीर्थेषु च युगादिषु । मन्वादिषु च यत् श्राद्धं दानं दैनंदिनं च यत् । तिलगोभूहिरण्यानां सन्ध्यौपासनयोः क्रिया । पर्वहोमश्चाग्रयणं साग्नेरिष्टिश्च पर्वणोः । नित्याग्निहोत्रहोमश्च देवतातिथिपूजनम् । स्नानं च स्नानविधिना चाभक्ष्यापेयवर्जनम् । तर्पणं च निमित्तस्य नित्यत्वादुभयत्र च । अनित्यमनिमित्तं च दानं च महदादिकम् । अग्न्याधानाध्वरा-पूर्वतीर्थयात्राऽमरेक्षणम् । देवाराम तटाकादिप्रतिष्ठा मौञ्जिबन्धनम् । आश्रमस्वीकृतिः काम्यवृषोत्सर्गश्च निर्गमः । राज्ञोऽभिषेकः प्रथमश्चूडाकर्मव्रतानि च । अन्नप्राशनमारम्भो गृहाणां च प्रवेशनम् । स्नानं विवाहो नामादि वनदेवमहोत्सवः । व्रतारम्भसमाप्ती च काम्यं कर्म च पाप्मनः । प्रायश्चित्तं च सर्वस्य मलमासे विवर्जयेत् । उपाकर्मोत्सर्जने च पवित्रदमनार्पणम् । अवरोहश्च हैमन्तस्सर्पाणां बलिरष्टकाः । ईशानस्य बलिर्विष्णोश्शयनं परिवर्तनम् । दुर्गेन्द्रस्वापनोत्थाने ध्वजोत्थानं च वज्रिणः । पूर्वत्र प्रतिषिद्धानि परत्रान्यच्च दैविकम् इति ।

மற்றவைகளான தள்ளக்கூடியதும் தள்ளக் கூடாததுமான கார்யங்களைக் காலாதர்சகாரர் சுருக்கச் சொல்லியுள்ளார்:— ஸோதகும்ப ச்ராத்தம், மன்வாதி ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம், யுகாதி ச்ராத்தம், தர்ச ச்ராத்தம், நித்ய ச்ராத்தம், ஊநமாஸிகம் முதலியவை; மலமாஸம் தவிர்த்து சுத்த மாஸங்களில் இறந்தவர்களுக்கு ஆப்திக ச்ராத்தமும், முன் பார்க்கப்பட்ட தீர்த்தங்களில் செய்ய வேண்டிய ச்ராத்தமும், யுகாதி ச்ராத்தமும், மன்வாதி

ச்ராத்தமும், ப்ரதி தினம் செய்யப்படும் தானமும், எள்ளு, பசு, பூமி, பொன் இவைகளின் தானமும், ஸந்த்யாவந்தனம், ஔபாஸன ஹோமம், பர்வஹோமம், ஆக்ரயணம், ஆஹிதாக்னிக்கு இரண்டு பர்வங்களிலும் இஷ்டியும், ப்ரதி தினம் அக்னிஹோத்ர ஹோமமும், தேவபூஜையும், அதிதி பூஜையும், விதியுடன் ஸ்நானமும், சாப்பிடக் கூடாததைச் சாப்பிடுதல், குடிக்கக் கூடாததைக் குடித்தல் இவைகளை விடுதலும், நிமித்த வசத்தால் ஏற்படும் தர்ப்பணமும், நித்யங்களானதால் இரண்டு மாஸங்களிலும் செய்யப்பட வேண்டும். நித்யமல்லாததும், நைமித்திகமல்லாததும், மஹாதானம் முதலியதும், அக்ன்யாதானம், யாகம், புதிதான தீர்த்தயாத்ரை, புதிய தேவ ஸேவை, தேவதை, பூந்தோட்டம், குளம் முதலியது இவைகளின் ப்ரதிஷ்டை, உபநயனம் ஸந்யாஸ ஆச்ரமத்தை ஸ்வீகரித்தல், காம்யமான வ்ருஷபோத்ஸர்ஜனம், தீர்த்தயாத்ரை, ராஜாவுக்கு முதல் பட்டாபிஷேகம், சௌளம், வ்ரதங்கள், அன்னப்ராசனம், வீடுகட்ட ஆரம்பித்தல், க்ருஹப்ரவேசம், விவாஹத்துக்கு முன் செய்யும் ஸ்நான கர்மா, விவாஹம், நாமகரணம், வஸ்ந்தோத்ஸவம், தேவோத்ஸவம், வ்ரதத்தின் ஆரம்பம், அதன் ஸமாப்தி, காம்ய கர்மம், எல்லாப் பாபங்களுக்கும் ப்ராயச்சித்தம் என்ற இவைகளை மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும். உபாகர்மம், உத்ஸர்ஜனம், பவித்ரார்ப்பணம், தமனார்ப்பணம், ஹேமந்தருதுவில் செய்யப்படும் பவித்ர அவரோஹணம், ஸர்ப்பபலி, அஷ்டகைகள், ஈசான பலி, விஷ்ணுவின் சயனோத்ஸவம், பரிவர்த்தனோத்ஸவம், துர்க்கை, இந்த்ரன் இவர்களுக்குச் சயன உத்ஸவம், எழுந்திருக்கும் உத்ஸவம், இந்த்ரத்வஜ உத்ஸவம், இவைகளும் தேவர்களைப் பற்றிய மற்ற கார்யங்களும் முன் மாஸத்தில் நிஷேதிக்கப்பட்டுள்ளன.

अत्र नित्यत्वादुभयत्र चेत्यन्तेन ग्रन्थेन कर्तव्य सङ्ग्रहः । अनित्यमनिमित्तं चेत्यारभ्य वर्जयेदित्यन्तेन वर्जनीयसंग्रहः ।

उपाकर्मेत्यारभ्य परत्रान्यच्च दैविकमित्यन्तेन मलमासे विवर्जितानां सतां शुद्धमासेऽवश्यं कर्तव्यत्वेन सङ्ग्रहः । अत्र केषुचित् साक्षिवचनान्युक्तानि। अवशिष्टेष्वप्युच्यते।

இவ்விஷயத்தில் 'நித்யத்வாத் உபயத்ர ச' என்று முடியும் வரையில் உள்ள க்ரந்தத்தால் செய்ய வேண்டியவைகளின் சுருக்கம் சொல்லப்பட்டது. 'அநித்ய மநிமித்தஞ் ச' என்பது முதல் 'வர்ஜயேத்' என்பது வரையில் உள்ள க்ரந்தத்தால் வர்ஜனீயங்கள் சொல்லப்பட்டன. 'உபாகர்ம' என்பது முதல் 'பரத்ராந்யத் ச தைவிகம்' வரையில் உள்ள க்ரந்தத்தால் மலமாஸத்தில் விடப்பட்டவைகளைச் சுத்த மாஸத்தில் அவச்யம் செய்ய வேண்டும் என்பது சொல்லப்பட்டது. இவ்விடத்தில், சில கார்யங்களின் விஷயத்தில் ஸாக்ஷி வசனங்கள் சொல்லப்பட்டு உள்ளன. மீதியுள்ளவைகளின் விஷயத்திலும் வசனங்கள் சொல்லப்படுகின்றன.

ननूदाहृते सङ्ग्रहवचने भाद्रपदापरपक्ष श्राद्धस्याप्युभयत्र कर्तव्यता प्रतीयते महालययुगादिषु इति तत्र पठितत्वात्। अन्यत्रापि — यौगादिकं मासिकं च श्राद्धं चापरपक्षिकम् इति उभयत्र कर्तव्यता प्रतीयते। सा च स्मृतिविरुद्धा। तथा च काठकगृह्ये — महालयाष्टकाश्राद्धोपकर्माद्यपि कर्म यत्। स्पष्टमासविशेषाख्यविहितं वर्जयेन्मले इति।

சொல்லப்பட்ட ஸங்க்ரஹ வசனத்தில் மஹாளய ச்ராத்தமும் இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும் என்பது அவ்வசனத்தில் 'மஹாளயயுகாதிஷு' என்று படிக்கப்பட்டு இருப்பதால் தோன்றுகிறது. மற்றோர் ஸ்ம்ருதியிலும் 'யுகாதி ச்ராத்தம் மாஸிக ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம்' என்று இரண்டு மாஸங்களிலும் செய்ய வேண்டும் என்பது தோன்றுகிறது. அது ஸ்ம்ருதிக்கு விரோதமானது. அவ்விதமே, காடகக்ருஹ்யத்தில்:— 'மஹாளய ச்ராத்தம், அஷ்டகா ச்ராத்தம், உபாகர்மம் முதலிய கர்மம் எதுவோ, சுத்த மாஸத்தில் விதிக்கப்பட்ட

அந்தக் கர்மத்தை மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும்' என்றுள்ளது.

भृगुरपि — वृद्धिश्राद्धं तथा सोममग्न्याधेयं महालयम् राजाभिषेकं काम्यं च न कुर्याद्भानुलङ्घिते इति । पराशरः — यातुधानप्रियो मासः कन्यार्के जायते यदि । पित्र्यं दैवं तदा कर्म ह्युत्तरे मासि युज्यते इति । यातुधानप्रियः - अधिमास इत्यर्थः । पितामहश्च — सोमयागादिकर्माणि षष्ठीष्ट्याग्रयणं तथा । महालयाष्टकाश्राद्धे मलमासे विवर्जयेत् इति । षष्ठीष्टिः - काठकशाखादौ प्रसिद्धा । ज्योतिःपराशरः — सिनीवालीमतिक्रम्य यदा कन्यां व्रजेद्रविः । तदा कालस्य वृद्धत्वादतीतैव पितृक्रिया इति । अतीतैव पञ्चमपक्षातिक्रान्तैवेत्यर्थः ।

ப்ருகுவும்:— 'நாந்தீ ச்ராத்தம், ஸோமயாகம், அக்ன்யாதானம், மஹாளயம், பட்டாபிஷேகம், காம்யகர்மம் இவைகளை மலமாஸத்தில் செய்யக்கூடாது' என்றார். பராசரர்:— 'கன்யாமாஸத்தில் மலமாஸம் வருமானால், பித்ர்யகர்மம், தைவகர்மம், இவைகளை மறுமாஸத்தில் செய்ய வேண்டும்' என்றார். பிதாமஹரும்:— 'ஸோமயாகம் முதலிய கர்மங்கள், ஷஷ்டீஷ்டி, ஆக்ரயணம் மஹாளய ச்ராத்தம், அஷ்டகா ச்ராத்தம் இவைகளை மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும்' என்றார். ஷஷ்டீஷ்டி காடக சாகை முதலியதில் ப்ரஸித்தமாய் உள்ளது. ஜ்யோதிபராசரர்:— 'ஸூர்யன் எப்பொழுது அமாவாஸ்யையைத் தாண்டி, கன்யா ராசியை அடைகின்றானோ, அப்பொழுது காலம் அதிகமானதால் (அதிக மாஸமானதால்) பித்ரு கார்யம் தாண்டிச் செல்லுகிறது' என்றார். 'அதீதைவ' என்பதற்கு ஐந்தாவது பக்ஷத்தைத் தாண்டியுள்ளது, என்பது பொருள்.

नागरखण्डेऽपि — नभो वाऽथ नभस्यो वा मलमासो यदा भवेत् । सप्तमः पितृपक्षः स्यादन्यत्रैव तु पञ्चमः इति । एवं चोभयत्रानुष्ठानम-युक्तम् । कालनिर्णयादौ परिहृतमेतत्, सङ्ग्रहवाक्ये महालयापरपक्ष-

शब्देन मघात्रयोदश्या विवक्षितत्वात् न दोषः इति। मघात्रयोदशीश्राद्धं श्राद्धान्यपि च षोडश इति तस्योभयत्रानुष्ठान-मभिहितम्।

நாகர கண்டத்திலும்:— 'ச்ராவண மாஸமாவது, பாத்ரபத மாஸமாவது மலமாஸமானால் அப்பொழுது ஏழாவது பக்ஷந்தான் மஹாளய பக்ஷமாகும். மற்றக் காலத்தில் தான் ஐந்தாவது பக்ஷம் மஹாளயபக்ஷம்' என்றுள்ளது. இவ்விதம் இருப்பதால் இரண்டு மாஸத்திலும் அனுஷ்டிப்பது யுக்தமல்ல. இந்த விஷயத்திற்குப் பரிஹாரம் கால நிர்ணயத்தில் ''ஸங்க்ரஹ வாக்யத்தில் 'மஹாளயாபரபக்ஷ' என்ற சப்தத்தினால் மகாத்ரயோதசீ ச்ராத்தத்தைச் சொல்லியிருப்பதால் தோஷமில்லை'' என்று சொல்லப்பட்டுள்ளது. 'மகாத்ரயோதசீ ச்ராத்தம், ஷோடச ச்ராத்தங்கள்' என்று அதற்கு இரண்டு பக்ஷத்திலும் அனுஷ்டானம் சொல்லப்பட்டுள்ளது.

यत्तु पराशरवचनम् — मासः कन्यागते भानावसङ्क्रान्तो यदा भवेत् । पित्र्यं दैवं तदा कर्म तुलार्के कर्तुरक्षयम् इति, तत्पूर्वोक्तकाले श्राद्धानुष्ठानासम्भवे द्रष्टव्यम् तस्य गौणकालत्वात्। दर्शश्राद्धमधिमासेऽपि कर्तव्यम् — जातकर्मणि यत् श्राद्धं दर्शश्राद्धं तथैव च। प्रतिसंवत्सरं यच्च पूर्वमासे प्रकीर्तितम् इति स्मरणात्।

ஆனால் பராசரவசனம்: 'ஸூர்யன் கன்யா ராசியில் இருக்கும் பொழுது ஸங்க்ரமணம் இல்லாத மாஸம் (மலமாஸம்) நேர்ந்தால், அப்பொழுது பித்ர்ய கர்மம், தைவ கர்மம் இவைகளைத் துலா மாஸத்தில் செய்யவும். அது கர்த்தாவுக்கு அக்ஷய பலமாகும்.' என்றுள்ளதே ? எனில், அது முன் சொல்லிய காலத்தில் அனுஷ்டானம் ஸம்பவிக்காவிடில் செய்ய வேண்டும். அது கௌண காலம். தர்ச ச்ராத்தம் அதிக மாஸத்திலும் செய்யப்பட வேண்டும். 'ஜாதகர்மத்தில் செய்யப்படும் ச்ராத்தமும், தர்சச்ராத்தமும், ப்ரதி ஸாம்வத்ஸரிக ச்ராத்தமும், முன் மாஸத்தில் என்று சொல்லப்பட்டுள்ளது' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

यत्तु ऋश्यशृङ्गवचनम् — संवत्सरातिरेकेण मासो यस्स्यान्मलिम्लुचः। तस्मिंस्त्रयोदशे श्राद्धं न कुर्यादिन्दुसंक्षये इति, अत्र विरोधः परिहृतः कालादर्शे - नास्ति विरोधः काम्य श्राद्धविषयत्वादस्य निषेधस्य। सम्भवति हि दर्शे काम्य श्राद्धम्, कन्यां कन्यादिने इत्यादिना तिथिवारनक्षत्र विहितं तेन काम्यश्राद्धषियोऽयमृश्यशृङ्गनिषेधः इति। चन्द्रिकायां तु ऋश्यशृङ्गवचनमन्यथा पठितम्—तस्मिंस्त्रयोदशे श्राद्धं न कुर्यान्नोपतिष्ठते इति। मत्स्यपुराणे — दर्शे चाहरहः श्राद्धं दानं च प्रतिवत्सरम्। गोभूतिलहिरण्यानां मासे च स्यान्मलिम्लुचे इति।

ஆனால் ருச்யச்ருங்கரின் வசனம், 'வர்ஷம் வ்ருத்தியானதால் எந்த மாஸம் மலமாஸம் ஆகுமோ அந்த வர்ஷத்தில் பதின்மூன்றுவது மாஸத்தில் தர்சத்தில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது' என்று உள்ளதே எனில், இவ்விஷயத்தில் விரோத பரிஹாரம் காலாதர்சத்தில் சொல்லப்பட்டுள்ளது. ''விரோதமில்லை, இந்த நிஷேதம் காம்ய ச்ராத்தத்தைப் பற்றியதால், தர்சத்தில் காம்ய ச்ராத்தம் ஸம்பவிக்கின்றதல்லவா. 'கன்யாம் கன்யாதினே' என்பது முதலியதால் திதி, வாரம், நக்ஷத்ரம் இவைகளில் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்த நிஷேதம் காம்ய ச்ராத்தத்தைப் பற்றியது'' சந்த்ரிகையிலோ வெனில் ருச்யச்ருங்கரின் வசனம் வேறு விதமாகப் படிக்கப்பட்டுள்ளது:— அவ்வர்ஷத்தில் பதின்மூன்றுவது மாஸத்தில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அது பித்ருக்களைச் சேருவதில்லை. மத்ஸ்யபுராணத்தில்:— தர்ச ச்ராத்தமும், ப்ரதி தினம் செய்யும் ச்ராத்தமும், வர்ஷந்தோறும் செய்யப்படும் கோதானம், பூதானம், திலதானம், ஹிரண்யதானம், இவைகளும் மலமாஸத்திலும் செய்யப்பட வேண்டும்.

मैत्रेयसूत्रेऽपि — मासद्वये यद्येकराशिं सङ्क्रमेता-दित्यस्तत्राद्यो मलिम्लुचः शुद्धोऽन्यः पार्वणेष्टिरग्निहोत्रहोमोऽग्नि-

होत्राग्रयणं सन्ध्योपासनं पर्वस्थालीपाकश्च यान्यन्यानि नित्यानीहापि यत्नेन क्रियन्ते इति। यत्तु पैठीनसिवचनम्— श्रौतस्मार्तक्रियास्सर्वा द्वादशे मासि कीर्तिताः। त्रयोदशे तु सर्वास्ता निष्फला इति कीर्तिताः। तस्मात् त्रयोदशे मासि न कुर्यात्ताः कथञ्चन। कुर्वन्ननर्थमेवाशु कुर्यादात्मविनाशनम् इति। अत्र निष्फला इत्यभिधानात् सर्वं फलकामनया प्रवृत्तं कर्म निषिध्यत इति गम्यते ।

**மைத்ரேயஸூத்ரத்திலும்:—** இரண்டு மாஸத்தில் ஒரு ராசியை ஸூர்யன் அடைந்தால் அவைகளுள் முதல் மாஸம் மலமாஸம். பிந்தியது சுத்தமாஸம். பர்வ இஷ்டிகள், அக்னிஹோத்ரம், அக்னி ஹோத்ரியின் ஆக்ரயணம், ஸந்த்யாவந்தனம், பர்வஸ்தாலீபாகம், மற்ற நித்யகர்மங்கள், இவைகள் மலமாஸத்திலும் அவச்யம் செய்யப்பட வேண்டும். ஆனால், பைடீநஸி:— ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்கள் எல்லாம் பன்னிரண்டவது மாஸத்தில் சொல்லப்பட்டுள்ளன. பதின்மூன்றுவது மாஸத்தில் செய்தால் அவைகள் எல்லாம் பலன் அற்றவைகளாகும், என்று சொல்லப்பட்டுள்ளன. ஆகையால், அவைகளைப் பதின்மூன்றுவது மாஸத்தில் எவ்விதத்தாலும் செய்யக் கூடாது. செய்பவன் தன்னைச் சீக்கிரம் அழிக்கக் கூடிய அநர்த்தத்தையே செய்பவன் ஆகிறான். இவ்வசனத்தில், 'நிஷ்பலா:' என்று இருப்பதால், பலனை விரும்பிச் செய்யக் கூடிய எல்லாக் கர்மமும் நிஷேதிக்கப்படுகிறது, என்று தோன்றுகிறது.

तथा च स्मृत्यन्तरम् — इष्ट्यादि सर्वकाम्यं तु मलमासे विवर्जयेदिति। न च सर्वास्ताः इत्यभिधानान्नित्य-नैमित्तिकयोरपि निषेधः शङ्कनीयः, नित्यनैमित्तिके कुर्यात् प्रयतस्तु मलिम्लुचे इति बृहस्पतिवचनात्। जाबालिनापि तथैवोक्तम्— नित्यं नैमित्तिकं चैव श्राद्धं कुर्यान्मलिम्लुचे। तिथिनक्षत्रवारोक्तं काम्यं नैव कदाचन इति। योऽयं मलमासे काम्यनिषेधोऽसावारम्भसमाप्तिविषयः। असूर्या नाम

ये मासा न तेषु मम सम्मताः। व्रतानां चैव यज्ञानामारम्भाश्च समाप्तयः इत्यारम्भसमाप्त्योरेवाधिमासे प्रतिषेधादारम्भ-समाप्त्योर्मध्यपातिन्यधिमासेऽपि तदारब्धं काम्यमनुष्ठेयम्, अधिमासे निपतितेऽप्येष एव विधिक्रमः इति स्मरणात्।

**மற்றோர் ஸ்ம்ருதி:**— இஷ்டி முதலிய காம்ய கர்மம் எல்லாவற்றையும் மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும். 'ஸர்வாஸ்தா:' என்று இருப்பதால் நித்ய நைமித்திக கர்மங்களும் நிஷேதிக்கப்படுகின்றன என்று சங்கிக்கக் கூடாது, ''நித்ய நைமித்திக கர்மங்களை மலமாஸத்திலும் சுத்தனாய்ச் செய்ய வேண்டும்'' என்று ப்ருஹஸ்பதி வசனம் இருப்பதால். அவ்விதமே, ஜாபாலியினாலும் சொல்லப்பட்டுள்ளது:— 'மலமாஸத்திலும் நித்யமும் நைமித்திகமுமான ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளில் சொல்லப்பட்டுள்ள காம்ய கர்மத்தை ஒரு காலும் செய்யக்கூடாது' என்று. மலமாஸத்தில் காம்யகர்ம நிஷேதம் சொல்லப்பட்டது எதுவோ, இது ஆரம்பம் ஸமாப்தி இவைகளைப் பற்றியது. 'ஸூர்யன் இல்லாதவை என்ற மாஸங்கள் எவையோ, அவைகளில் வ்ரதங்கள் யாகங்கள் இவைகளின் ஆரம்பங்களும் ஸமாப்திகளும் செய்யக் கூடாது என்பது என்னுடைய மதம்' என்று, ஆரம்பம் ஸமாப்தி இவைகளுக்கே அதிக மாஸத்தில் நிஷேதம் இருப்பதால், ஆரம்பத்துக்கும் ஸமாப்திக்கும் நடுவில் வரும் அதிக மாஸத்திலும் முன் ஆரம்பிக்கப்பட்ட காம்ய கர்மம் அனுஷ்டிக்கப்பட வேண்டும். 'அதிகமாஸம் வந்தாலும் விதியின் க்ரமம் இவ்விதந்தான்' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

यत्तु काठकगृह्ये समाप्तिप्रतिपादकवचनम् - प्रवृत्तं मलमासात् प्राक् काम्यं कर्मासमापितम्। आगते मलमासेऽपि तत् समाप्यं न संशयः इति, तत् सावनमास प्रवृत्तकृच्छ्रचान्द्रायणादि विषयम्। तत्रावश्यकं तु यत् काम्यकर्म तन्मलमासेऽप्यनुष्ठेयम्। तद्यथा - प्रक्रान्ते मलमासे यदि

कश्चिद्बालग्रहब्रह्मराक्षसादिना गृह्यते, तदा अग्नये रक्षोघ्ने पुरोडाशमष्टाकपालं निर्वपेत् इति विहिता रक्षोघ्नेष्टिस्तदैव कर्तव्या, मलमाससमाप्तिप्रतीक्षायां बालादिमरणप्रसङ्गात्। यदा वृष्ट्यभावात् सस्यानि शुष्यन्ति मलमासश्चागतः, तदा कारीर्या वृष्टिकामो यजेत इति विहितेष्टिर्न कालविलम्बं सहते । एवमन्या इष्टयः स्मार्तान्यप्यावश्यकान्युदाहरणीयानि । नित्यनैमित्तिकयोरपि यदनन्यगतिकं यस्यातिक्रमे प्रायश्चित्तप्राप्तिर्यस्य च मासान्तरे विहित कालालाभस्तदेव मलमासे कार्यम्। अनन्यगतिकं नित्यं कुर्यान्नैमित्तिकं तथा इति स्मरणात्।

ஆனால், காடகக்ருஹ்யத்தில்:— ஸமாப்தியைச் சொல்லும் வசனம் ''மலமாஸத்திற்கு முன் ஆரம்பிக்கப்பட்ட காம்ய கர்மமானது முடிக்கப்படாமல் இருந்தால், மலமாஸம் வந்தாலும் அதில் அக்கர்மத்தை முடித்து விட வேண்டும், ஸம்சயம் இல்லை'' என்று உள்ளதே எனில், அது ஸாவன மாஸத்தில் ஆரம்பிக்கப்பட்ட க்ருச்ரம் சாந்த்ராயணம் முதலியதைப் பற்றியது. அதில் ஆவச்யகமான எந்தக் காம்ய கர்மமோ அது மலமாஸத்திலும் அனுஷ்டிக்கத் தகுந்தது. அது எவ்விதம் எனில், 'மலமாஸம் ஆரம்பித்து இருக்கும் பொழுது ஒருவன் பாலக்ரஹம், ப்ரம்ஹராக்ஷஸம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டால், அப்பொழுது, 'ரக்ஷோக்னனுன அக்னிக்கு அஷ்டகபால புரோடாசத்தைக் கொடுக்க வேண்டும்' என்று விதிக்கப்பட்ட ரக்ஷோக்நேஷ்டியனது அப்பொழுதே செய்யப்பட வேண்டும். மலமாஸம் முடிவை ப்ரதீக்ஷித்தால் பாலன் முதலியவரின் மரணம் நேரக்கூடும். எப்பொழுது மழையின்மையால் பயிர்கள் காய்கின்றனவோ, மலமாஸமும் வந்திருக்கின்றதோ, அப்பொழுது ''மழையை விரும்புகிறவன் 'காரீரி' என்ற இஷ்டியைச் செய்யவும்'' என்று விதிக்கப்பட்டுள்ள இஷ்டியானது கால

தாமதத்தைப் பொறுக்காது. இவ்விதம் மற்ற இஷ்டிகளும் ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்டுள்ள கர்மங்களும் உதாஹரிக்கத் தகுந்தவைகள். நித்ய நைமித்திக கர்மங்களிலும் எக்கர்மம் வேறு கதியில்லாததோ, எக்கர்மத்தைச் செய்யாவிடில் ப்ராயச்சித்தம் வரக்கூடுமோ, எக்கர்மத்திற்கு வேறு மாஸத்தில் விதிக்கப்பட்ட காலம் கிடைக்காதோ, அக்கர்மமே மலமாஸத்தில் செய்யப்பட வேண்டும். வேறு கதியில்லாத நித்யம் நைமித்திகம் இவைகளைச் செய்ய வேண்டும்'', என்று ஸ்ம்ருதி உள்ளது.

काठकगृह्येऽपि — मलेऽनन्यगतिं नित्यां कुर्यान्नैमित्तिकं क्रियाम् इति। चन्द्रिकायाम् — मलं वदन्ति कालस्य कालं कालविदोऽधिकम्। नेह कुर्यादशेषेज्यामन्यत्रावश्यकाद्विधेः इति।

காடக க்ருஹ்யத்திலும்:— மலமாஸத்தில் வேறு கதியில்லாத நித்ய கர்மம் நைமித்திக கர்மம் இவைகளைச் செய்ய வேண்டும். சந்த்ரிகையில்:— அதிக மாஸத்தைக் காலத்தின் மலம் என்று காலம் அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். இந்த மாஸத்தில் ஸகல யாகங்களையும் செய்யக்கூடாது.

अनन्यगतिकानि च नित्यानि गृह्यपरिशिष्टे उदाहृतानि — अवषट्कारहोमाश्च पर्व चाग्रयणं तथा। मलमासे तु कर्तव्यं काम्या इष्टीस्तु वर्जयेत् इति। अवषट्कारहोमाः - अग्निहोत्रौपासन-वैश्वदेवादयः। पर्व-दर्शपूर्णमासौ पार्वणस्थाली-पाकश्च, दर्शादीनां नित्यत्वमकरणे प्रत्यवायस्मरणात् कालान्तर-निमित्तप्रायश्चित्ता-म्नानादवगन्तव्यम्।

ஆவச்யகமான கர்மத்தைத் தவிர்த்து வேறு கதியில்லாத நித்ய கர்மங்கள் க்ருஹ்யபரிசிஷ்டத்தில் சொல்லப் பட்டுள்ளன:— ''வஷ்டகாரமில்லாத ஹோமங்களும், பர்வங்களும், ஆக்ரயணமும் மல மாஸத்திலும்

செய்யப்பட வேண்டும். காம்யங்களான இஷ்டிகளைச் செய்யக் கூடாது. வஷட்காரம் இல்லாத ஹோமங்கள் - அக்னி ஹோத்ரம், ஔபாஸனம், வைச்வதேவம் முதலியவை. பர்வ - தர்ச பூர்ண மாஸங்களும், பார்வண ஸ்தாலீபாகங்களும். தர்சம் முதலியவைகளுக்கு நித்யத் தன்மை செய்யாவிடில் ப்ரத்யவாயம் சொல்லப்பட்டு இருப்பதால், காலாந்தரத்தில் செய்வதற்காக ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டு இருப்பதால் அறியத்தக்கது.

तथा च आथर्वणिका आमनन्ति — यस्याग्निहोत्रमदर्शमपौर्णमास मनाग्रयणमतिथिवर्जितं चाहुतमवैश्वदेवमविधिना हुतमासप्तमांस्तस्य लोकान् हिनस्ति इति। तैत्तिरीयकेऽपि — अग्नये पथिकृते पुरोडाशमष्टाकपालं निर्वपेद्यो दर्शपूर्णमासयाजी सन्नमावास्यां वा पौर्णमासीं वाऽतिपादयेत् इति । गत्यन्तरयुक्तानि तु नित्यानि तत्र वर्ज्यानि ।

ஆதர்வணிகர்கள் சொல்லுகின்றனர்:— எவனது அக்னி ஹோத்ரமானது தர்சமில்லாததும், பௌர்ண மாஸமில்லாமலும், ஆக்ரயண மில்லாமலும், அதிதி பூஜையில்லாமலும், ஹோமம் செய்யப்படாமலும், வைச்வதேவமில்லாமலும், விதியில்லாமல் ஹோமம் செய்யப்பட்டதாயும் உள்ளதோ, அது அவனது ஏழு உலகங்களைக் கெடுக்கின்றது. தைத்திரீயகத்திலும்:— ''பதிக்ருத்'' அக்னியின் பொருட்டு அஷ்டாகபால புரோடாசத்தைக் கொடுக்க வேண்டும். எவன் தர்ச பூர்ண மாஸங்களைச் செய்பவனுயிருந்து அமாவாஸ்யையை யாவது பௌர்ணமாஸ்யையயாவது அதிக்ரமிப்பானோ'' (இஷ்டிகளைச் செய்யாமல் இருப்பானோ) என்றுள்ளது. வேறு கதியுள்ள நித்யங்களோ வெனில் மல மாஸத்தில் வர்ஜிக்கத்தகுந்தவை. அது சொல்லப்பட்டுள்ளது.

तदुक्तं काठकगृह्यपरिशिष्टे — सोमयागादिकर्माणि नित्यान्यपि मलिम्लुचे। षष्टीष्ट्याग्रयणाधानचातुर्मास्यादिकान्यपि। महालयाष्टका-श्राद्धोपाकर्माद्यपि कर्म यत्। स्पष्टमासविशेषाख्य-विहितं वर्जयेन्मले इति। न चाग्रयणस्य सगतिकागतिकयोरुदाहरणं विरुद्धमिति शङ्कनीयम्, तस्य मलमासे विकल्पितत्वात्।

காடக க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:— 'ஸோம யாகம் முதலிய கர்மங்கள், நித்ய கர்மங்கள், இஷ்டிகள், ஆக்ரயணம், ஆதானம், சாதுர்மாஸ்யம் முதலியவை, மஹாளயங்கள், அஷ்டகைகள், உபாகர்மம் முதலிய கர்மம், சுத்த மாஸத்தில் விதிக்கப்பட்டுள்ள கர்மம் இவைகளை மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும்' ஆக்ரயணத்தைக்கதியுள்ளவைகளிலும், கதியில்லாதவைகளிலும் சொல்லியிருப்பது விருத்தம் என்று சங்கிக்கக்கூடாது. அது மலமாஸத்தில் விகல்ப்பிக்கப்பட்டு இருப்பதால்.

तदाह पैठीनसिः — सङ्क्रान्तिरहिते मासि कुर्यादाग्रयणं न वा इति। यान्यनन्यगतिकानि नैमित्तिकानि ग्रहणस्नानादीनि, तेषां मलमासेऽपि कर्तव्यतामाह यमः— चन्द्रसूर्यग्रहे स्नानं श्राद्धं दानजपादिकम्। कार्याणि मलमासेऽपि नित्यं नैमित्तिकं तथा इति। सगतिकानि तु नैमित्तिकानि जातेष्ट्यादीनि। वैश्वानरं द्वादशकपालं निर्वपेत् पुत्रे जाते इति विहिताया इष्टेराशौचेऽवसिते यथानुष्ठानम्, तद्वन्मलमासेऽप्यवसितेऽनुष्ठातुं शक्यत्वात् सगतिकत्वम्।

அதைச் சொல்லுகிறார், பைடீநஸி:— ''ஸங்க்ரமணமில்லாத மாஸத்தில் ஆக்ரயணத்தைச் செய்தாலும் செய்யலாம். செய்யாமலுமிருக்கலாம்'' என்று. வேறு அகதிகமானவைகள் எவைகளோ, நைமித்திகங்களாகிய க்ரஹண ஸ்நாநம் முதலியவைகள், அவைகளை மலமாஸத்திலும் செய்ய வேண்டும் என்பதைச் சொல்லுகிறார் யமன்:— சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களில்

ஸ்நானம், ச்ராத்தம், தானம், ஜபம் முதலியவை, நித்யம், நைமித்திகம் இவைகளை மலமாஸத்திலும் செய்ய வேண்டும். கதியுள்ள நைமித்திகங்கள் = ஜாதேஷ்டி முதலியவைகள். ''புத்ரன் பிறந்தவுடன் வைச்வாநர தேவதாகமான த்வாதசகபால புரோடாசத்தைச் செய்ய வேண்டும்,'' என்று விதிக்கப்பட்ட இஷ்டிக்கு ஆசௌசம் முடிந்த பிறகு அனுஷ்டானம் எப்படியோ, அது போல், மலமாஸமும் முடிந்த பிறகு செய்ய முடியும் ஆகையால் கதியுள்ள தன்மை.

शङ्खोऽपि — सावकाशं तु यत् कार्यं न कुर्यान्मासि दूषिते। कुर्यान्निरवकाशं तु नित्यं नैमित्तिकं तथा इति। वर्ज्यान्याह वृद्धशातातपः — अस्तगे च गुरौ शुक्रे वृद्धे बाले मलिम्लुचे। व्रतारम्भापवर्गौ च न कुर्यान्मौञ्जिबन्धनम् इति। वृद्धगार्ग्योऽपि — नामान्नप्राशनं चौलं विवाहो मौञ्जिबन्धनम्। निष्क्रमं जातकर्मापि काम्यं व्रतविसर्जनम्। अस्तगे च गुरौ शुक्रे वृद्धे बाले मलिम्लुचे। उद्यापनमुपारम्भं व्रतानां नैव कारयेत् इति। जातकर्मादीनां चौलात् पूर्वभाविनां निषेधः स्वकालातिपत्तिविषयः।

சங்கரும்:— எந்தக் கார்யம் வேறு காலம் உள்ளதோ, அதை மல மாஸத்தில் செய்யக் கூடாது. வேறு காலம் இல்லாத நித்யம் நைமித்திகம் இவைகளைச் செய்ய வேண்டும். வர்ஜ்ய கர்மங்களைச் சொல்லுகிறார், வ்ருத்தசாதாதபர்:— குரு சுக்ரர்களின் அஸ்தமயத்திலும், வார்த்தகத்திலும், பால்யத்திலும், மலமாஸத்திலும், வ்ரதங்களின் ஆரம்பம், ஸமாப்தி இவைகள், உபநயனம் இவைகளைச் செய்யக் கூடாது. வ்ருத்தகார்க்யரும்:— ''நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், விவாஹம், உபநயனம், உபநிஷ்க்ரமணம், ஜாதகர்மம், காம்ய கர்மம், வ்ரத விஸர்ஜனம், இவைகளைக் குரு சுக்ரர்களின் அஸ்தமனத்திலும், வார்த்தகத்திலும், பால்யத்திலும்,

மலமாஸத்திலும் செய்யக் கூடாது. வ்ரதங்களின் உத்யாபனம் ஆரம்பம் இவைகளையும் செய்யக் கூடாது''. சௌளத்துக்கு முந்தியுள்ள ஜாதகர்மம் முதலியவைக்கு நிஷேதம் ஸ்வகாலம் தாண்டியதைப் பற்றியது.

तथा गार्ग्यः — नामकर्म च जातेष्टिं यथाकालं समाचरेत् । अतिपाते तु कुर्वीत प्रशस्ते मासि पुण्यभे इति । अत्रिः — मासप्रोक्तेषु कार्येषु मूढत्वं जीवशुक्रयोः । अधिमासादिदोषाश्च न स्युः कालविधेर्बलात् । गर्भादिप्राशनान्तानि प्राप्तकालं न लङ्घयेत् इति । बृहस्पतिः — बाले वा यदि वा वृद्धे शुक्रे चास्तं गते गुरौ । मलमासे इवैतानि वर्जयेद्देवदर्शनम् इति ।

அவ்விதமே, கார்க்யர்:— நாமகரணம், ஜாதேஷ்டி இவைகளை ஸ்வகாலத்தில் செய்ய வேண்டும். செய்யப்படாமல் காலம் அதிக்ரமித்தால் சுத்தமான மாஸத்தில் புண்யமான நக்ஷத்ரத்தில் செய்ய வேண்டும். அத்ரி:— மாஸங்களில் விதிக்கப்பட்ட கார்யங்களில் குரு சுக்ரர்களின் மௌட்யமும், அதிக மாஸம் முதலிய தோஷங்களும் கிடையாது. காலவிதி பலமானதால். பும்ஸவனம் முதல் அன்ன ப்ராசனம் வரையில் உள்ள கர்மங்களை அந்தந்தக் காலத்தில் செய்ய வேண்டும். தாண்டக்கூடாது. ப்ருஹஸ்பதி:— குரு சுக்ரன் இவர்களின் பால்யத்திலும், வார்த்தகத்திலும், அஸ்தமயத்திலும், மலமாஸத்தில் போல், முன் சொல்லியவைகளையும் தேவதா தர்சனத்தையும் வர்ஜிக்க வேண்டும்.

गार्ग्यः — अनादिदेवतां दृष्ट्वाऽशुचिस्स्यान्नष्टभार्गवे । मलमासेऽप्यनावृत्ततीर्थयात्रां विवर्जयेत् इति । मत्स्योऽपि — आधानं यज्ञकर्मापि प्रायश्चित्तं व्रतानि च । न कुर्यान्मलमासेऽपि शुक्रगुर्वोरुपप्लवे इति । दर्शपूर्णमाग्निहोत्राणां यज्ञत्वेऽपि प्रथमानुष्ठानमेव तेषां निषिद्धम् । तथा च स्मृत्यन्तरे — आरंभं दर्शपूर्णेष्ट्योरग्निहोत्रस्य चादिमम् । प्रतिष्ठापनकर्माद्या मलमासे विवर्जयेत् इति ।

**கார்க்யர்:—** சுக்ரமௌட்யத்திலும், மலமாஸத்திலும் புதிதாகத் தேவதர்சனம் செய்தால் அசுத்தனுவான். புதிதாகிய தீர்த்த யாத்ரையையும் வர்ஜிக்க வேண்டும். **மத்ஸ்யரும்:—** குரு சுக்ர மௌட்யத்திலும், அதிக மாஸத்திலும் ஆதானம், யாகம், ப்ராயச்சித்தம், வ்ரதங்கள் இவைகளைச் செய்யக்கூடாது. தர்சபூர்ண மாஸங்கள், அக்னிஹோத்ரம் இவைகள் யஜ்ஞங்கள் ஆனாலும் அவைகளின் முதல் ஆரம்பம் தான் நிஷித்தமாகிறது. அவ்விதமே, மற்றோர் **ஸ்ம்ருதியில்:—** தர்சபூர்ண மாஸங்கள், அக்னி ஹோத்ரம் இவைகளின் முதல் ஆரம்பமும், தேவதா ப்ரதிஷ்டை முதலியதையும் மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும்.

ज्योतिश्शास्त्रेऽपि — तत्र दत्तमदत्तं स्याद्धुतं न हुतमेव च। सुजप्तमप्यजप्तं स्यान्नोपवासः कृतो भवेत्। न यात्रा न विवाहश्च न च वास्तुनिवेशनम्। न प्रतिष्ठा च देवानां प्रासादग्रामभूरुहाम्। न हिरण्यं सुवासांसि धारयेदिति निश्चयः इति। वृद्धवसिष्ठः — वापी कूपतटाकानां प्रतिष्ठां यज्ञकर्म च। न कुर्यान्मलमासे तु महादानव्रतानि च इति। महादानानि तुलापुरुषादीनि षोडश कनकादीनि दश। एतच्च पूर्वं निरूपितम्।

**ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும்:—** 'அதில் (மலமாஸத்தில்) தானம் செய்வது தானமாகாது. ஹோமம் செய்வது செய்ததாக ஆகாது. ஜபம் செய்தாலும் செய்ததாக ஆகாது. உபவாஸம் செய்தாலும் செய்ததாக ஆகாது. யாத்ரை, விவாஹம், க்ருஹ ஆரம்பம், தேவதாப்ரதிஷ்டை, தேவாலயம், க்ராமம் வ்ருக்ஷம் இவைகளின் ப்ரதிஷ்டை, ஹிரண்யதாரணம், வஸ்த்ரதாரணம், இவைகளைச் செய்யக் கூடாது' என்று நிர்ணயம். **வ்ருத்தவஸிஷ்டர்:—** நடைவாபீ, கிணறு, தடாகம் இவைகளின் ப்ரதிஷ்டை, யாக கார்யம், மஹாதானங்கள், வ்ரதங்கள் இவைகளை மலமாஸத்தில் செய்யக்கூடாது. மஹாதானங்கள்

துலாபாரங்கள் முதலிய ஷோடச மஹாதானங்களும், ஸ்வர்ணம் முதலிய பத்துத் தானங்களும். இது முன்பே சொல்லப்பட்டுள்ளது. (வர்ணாச்ரம தர்மத்தில்)

हारीतः — उपक्रममथोत्सर्गं काम्यमुत्सवमष्टकाः। मासवृद्धौ पराः कार्या वर्जयित्वा तु पैतृकम् इति। मरीचिः — गृहप्रवेशगोदानस्नानाश्रममहोत्सवान्। न कुर्यान्मलमासे तु गुरौ शुक्रे तथाऽस्तगे इति।

ஹாரீதர்:— உபாகர்மம், உத்ஸர்ஜனம், காம்யமான உத்ஸவம், அஷ்டகைகள் இவைகளை மலமாஸம் வந்தால், பித்ரு கர்மத்தைத் தவிர்த்து, பின் மாஸத்தில் செய்ய வேண்டும். மரீசி:— க்ருஹப்ரவேசம், கோதானம், ஸ்நாநம், ஆச்ரம ஸ்வீகாரம், மஹோத்ஸவம் இவைகளை மலமாஸத்திலும், குரு சுக்ர மௌட்யத்திலும் செய்யக் கூடாது.

शुक्रबृहस्पत्योर्मौढ्यादिप्रतिपादनपूर्वकं मलमासवर्ज्यान्यतिदिशति तत्र कालादर्शकारः— मिहिरेण सहात्यन्तं सन्निकर्षाद्बृहस्पतेः। कवेश्चादर्शनं यत्तन्मौढ्यमाहुर्महर्षयः। ततोऽर्वाग्वार्धकं मौढ्यादूर्ध्वं बाल्यं प्रकीर्तितम्। पक्षः प्राग्दिशि वृद्धत्वं पश्चात् पञ्चदिनं कवेः। शैशवं प्राक्तु पञ्चाहं पश्चात् दशदिनं स्मृतम्। शैशवं वार्धकं पक्षः प्राक् पश्चाच्च बृहस्पतेः। मलिम्लुचे निषिद्धानि कर्माण्यत्रापि वर्जयेदिति। मिहिरः - सूर्यः, कवेः - शुक्रस्य प्राग्दिशि वृद्धत्वम्, पक्षः - पञ्चदिश दिनानि, पश्चात् - प्रतीच्यां दशि पञ्चदिनं वृद्धत्वं स्मृतम्, शैशवं - बाल्यम्, प्राच्यां दिशि पञ्चदिनं स्मृतम्। पश्चात् - प्रतीच्यां दिशि दश दिनं स्मृतम्। प्राच्यां प्रतीच्यां दिशि च वार्धकं शैशवं च बृहस्पतेः पक्षः, मलिम्लुचे निषिद्धानि कर्माणि सर्वाणि गुरुशुक्रयोर्मौढ्ये वार्धकशैशवयोरपि वर्जयेदित्यर्थः।

குரு சுக்ரர்களின் மௌட்யம் முதலியதை ஆரம்பித்துச் சொல்வதை முன்னிட்டு மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டியவைகளை அதிதேசம் செய்கிறார். காலாதர்சகாரர்:— குருவுக்கும் சுக்ரனுக்கும் ஸூர்யனோடு அதிக ஸாமீப்யம் ஏற்படுவதால் காணப்படாமை என்பது எதுவோ, அதை மௌட்யம் என்கின்றனர் மஹர்ஷிகள். அஸ்தமயத்திற்கு முன்பு வார்த்தகம், மௌட்யத்திற்குப் பிறகு பால்யம் என்று சொல்லப்பட்டு உள்ளது. சுக்ரனுக்குக் கிழக்குத் திக்கில் வார்த்தகம் பதினைந்து நாள். மேற்குத் திக்கில் ஐந்து நாள். கிழக்குத் திக்கில் பால்யம் ஐந்து நாள். மேற்குத் திக்கில் பத்து நாள் என்று சொல்லப்பட்டுள்ளது. குருவுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் பால்யம், வார்த்தகம் இவைகள் பதினைந்து நாள். மலமாஸத்தில் நிஷேதிக்கப்பட்ட கர்மங்களை இக்காலங்களிலும் வர்ஜிக்க வேண்டும். மிஹிர: - ஸூர்யன். கவே: - சுக்ரனுக்கு, கிழக்குத் திக்கில் வார்த்தகம். பக்ஷ - பதினைந்து தினங்கள். பச்சாத் - மேற்குத் திக்கில் ஐந்து நாள் வார்த்தகம் சொல்லப்பட்டு உள்ளது. சைசவம் - பால்யம். ப்ராக் - கிழக்குத் திக்கில் ஐந்து நாள் என்று சொல்லப்பட்டு உள்ளது. பச்சாத் - மேற்குத் திக்கில் பத்து நாள் என்று சொல்லப்பட்டு உள்ளது. கிழக்குத் திக்கிலும், மேற்குத் திக்கிலும் பால்யமும், வார்த்தகமும் குருவுக்குப் பதினைந்து நாள். மலமாஸத்தில் நிஷித்தமான கர்மங்கள் எல்லாம் குரு சுக்ரர்களின் மௌட்யம், பால்யம், வார்த்தகம் இவைகளிலும் நிஷித்தங்கள் என்பது பொருள்.

मलमासस्यैव द्विराषाढसंज्ञकं विशेषमाह वृद्धमिहिरः— माधवाद्येषु षट्स्वेकमासि दर्शद्वयं यदा । द्विराषाढः स विज्ञेयश्शेते कर्कटकेऽच्युतः । मेषादिमिथुनान्तेषु यदा दर्शद्वयं भवेत् । अब्दान्तरे तदाऽवश्यं मिथुनार्के हरिः स्वपेत् । कर्कटादित्रिके वाऽपि यदा दर्शद्वयं भवेत् । अब्दान्तरे तदाऽवश्यं कर्कटार्के हरिः स्वपेत् इति ।

மலமாஸத்திற்கே 'த்விராஷாடம்' என்கிற விசேஷத்தைச் சொல்லுகிறார், வ்ருத்தமிஹிரர்:— வைசாகம் முதலிய ஆறு மாஸங்களில் ஒரு மாஸத்தில் இரண்டு அமைகள் வந்தால் அது 'த்விராஷாடம்' எனப்படும். அப்பொழுது ஆடிமாஸத்தில் விஷ்ணுவின் சயனம் ஏற்படும். சித்திரை மாஸம் முதல் ஆனி மாஸம் வரையில் ஏதாவது ஒரு மாஸத்தில் இரண்டு அமைகள் வந்தால் அப்பொழுது அடுத்த வர்ஷத்தில் ஆனி மாஸத்தில் விஷ்ணுவின் சயனம் ஏற்படும். ஆடி மாஸம் முதல் மூன்று மாஸங்களுள் ஒரு மாஸத்தில் இரண்டு அமைகள் வந்தால் அப்பொழுது அடுத்த வர்ஷத்தில் ஆடி மாஸத்தில் விஷ்ணுவின் சயனம் ஏற்படும்.

अधिमासे क्षयमासेऽपि वर्ज्यावर्ज्यविवेकस्समान इत्युक्तं काठकगृह्ये— रविसङ्क्रमहीने यो वर्ज्यावर्ज्यविधिः स्मृतः। स एव तत् द्विसङ्क्रान्तौ मलमासेऽप्युदीरितः इति। कालादर्शेऽपि — मलमासे द्विसङ्क्रान्तौ सङ्क्रान्तिरहिते तथा। कार्यवर्ज्यविवेकस्स्यादिति शास्त्रविदो विदुः इति।

அதிக மாஸத்திலும், க்ஷயமாஸத்திலும் வர்ஜ்யங்கள், அவர்ஜ்யங்கள் இவைகளின் விவேகம் ஸமானம் என்று சொல்லப்பட்டுள்ளது. காடகக்ருஹ்யத்தில்:— ஸூர்ய ஸங்க்ரமணம் இல்லாத மாஸத்தில் வர்ஜ்யாவர்ஜ்ய விதி எது சொல்லப்பட்டு உள்ளதோ, அதுவே இரண்டு ஸங்க்ரமணமுள்ள மலமாஸத்திலும் சொல்லப்பட்டு உள்ளது. காலாதர்சத்திலும்:— இரண்டு ஸங்க்ரமணமுள்ள மலமாஸத்திலும், ஸங்க்ரமணம் இல்லாத மலமாஸத்திலும் வர்ஜ்யாவர்ஜ்ய விதி ஸமானம் என்று .சாஸ்த்ரம் அறிந்தவர்கள் சொல்லுகின்றனர்.

तदेवं कार्याकार्यविवेकः पञ्चधा संपन्नः। तत्र किञ्चिन्मलमास एव कर्तव्यम्, तद्यथा — मलमासमृतानां यदाकदाचित् प्रत्याब्दिकमन्यमासमृतानां प्रथमाब्दिकं च। किञ्चित्तु शुद्धमास एव

कर्तव्यम्, तद्यथा - उपाकर्मादि। किञ्चिदुभयत्रापि कर्तव्यम्, तद्यथा - अब्दोदकुम्भादि। किञ्चिदुभयोरन्यतरस्मिन्निमित्तवशात् कर्तव्यम्, तद्यथा - द्वादशाहसपिण्ड्यादि । किञ्चिन्मलमासे वर्ज्यम्, तद्यथा अनित्यमनिमित्तं चेत्यादि। इति मलमासनिर्णयः।

ஆகையால், இவ்விதம் இருப்பதால் கார்யாகார்யங்களின் பிரிவானது ஐந்து விதமாக ஏற்பட்டுள்ளது. அதில் சில மலமாஸத்திலேயே செய்யப்பட வேண்டும். அது எவ்விதம் எனில், மல மாஸத்தில் இறந்தவர்களுக்கு, பிறகு எக்காலத்திலாவது ப்ரத்யாப்திகமும், சுத்த மாஸத்தில் இறந்தவர்களுக்கு முதல் ஆப்திகமும். சில சுத்தமாஸத்திலேயே செய்யத் தகுந்தவை. அது எவ்விதம் ? உபாகர்மம் முதலியன. சில இரண்டு மாஸங்களிலும் செய்யத் தகுந்தவை. அது எவ்விதம் ? ஒரு வர்ஷம் செய்யப்படும் ஸோதகும்ப ச்ராத்தம் முதலியவை. சில இரண்டு மாஸங்களுள் ஏதாவது ஒரு மாஸத்தில் காரணம் ஏற்படுவதற்குத் தகுந்தபடி செய்யத் தகுந்தவை. அது எப்படி என்றால், பன்னிரண்டாவது நாளில் செய்யப்படும் ஸபிண்டீகரணம் முதலியவை. சில மலமாஸத்தில் வர்ஜிக்கத் தகுந்தவை. அது எவ்விதம் என்றால், நித்யம் அல்லாததும், நிமித்தம் அல்லாததும் முதலியவை.

மலமாஸ நிர்ணயம் முற்றிற்று.

## दर्शश्राद्धनिर्णयः

अथ दर्शश्राद्धम् - तत्र लोकाक्षिः — श्राद्धं कुर्यादवश्यं तु प्रमीतपितृको द्विजः। इन्दुक्षये मासि मासि वृद्धौ प्रत्यब्दमेव च इति। मनुः —प्रथिता प्रेतकृत्यैषा पित्र्यं नाम विधुक्षये। तस्मिन् युक्तस्यैति नित्यं प्रेतकृत्या हि लौकिकी इति। विधुक्षये - अमावास्यायां यत् पित्र्यं नाम

कर्म क्रियते, सैषा प्रेतकृत्येति प्रथिता लोके । प्रेताः - पितृपितामहादयः, तदर्था क्रिया प्रेतकृत्या, लौकिकी - लोकविदिता प्रेतकृत्या, तस्मिन् - विधुक्षये, युक्तस्य श्रद्धधानस्य, नित्यं - प्रतिमासम्, इति - आगच्छति, कर्तव्यत्वेनोपतिष्ठत इत्यर्थः ।

### தர்ச ச்ராத்த நிர்ணயம்.

இனி தர்ச ச்ராத்தம் சொல்லப்படும். அதில், **லோகாக்ஷி:—** இறந்த பிதாவையுடைய ப்ராம்ஹணன் ப்ரதி மாஸம் அமாவாஸ்யையில் அவச்யம் ச்ராத்தம் செய்ய வேண்டும், வ்ருத்தி ச்ராத்தத்தையும், ப்ரத்யாப்திக ச்ராத்தத்தையும் (அதன் காலத்தில்) செய்ய வேண்டும். **மனு:—** 'ப்ரதிதா....லௌகிகீ' என்று. இதன் பொருள்:— விதுக்ஷயே = அமாவாஸ்யையில் எந்த 'பித்ர்யம்' என்கிற கர்மம் செய்யப்படுகிறதோ, அந்தக் கர்மம் ப்ரேதக்ருத்யம் என்று உலகத்தில் ப்ரஸித்தமாய் உள்ளது. ப்ரேதா: = பித்ரு பிதாமஹாதிகள். அவர்களின் பொருட்டுச் செய்யப்படும் க்ரியை ப்ரேத க்ருத்யை எனப்படுகிறது. லௌகிகீ = லோகத்தில் ப்ரஸித்தமாய் உள்ள ப்ரேத க்ருத்யை. தஸ்மின் = தர்சத்தில், யுக்தஸ்ய = ச்ரத்தையுடையவனுக்கு, நித்யம் = ஒவ்வொரு மாஸத்திலும், ஏதி = வருகிறது. செய்யத் தகுந்ததாய் வந்தடைகிறது என்பது பொருள்.

गौतमोऽपि — अथ श्राद्धममावास्यायां पितृभ्यो दद्यात् इति । हारीतोऽपि — यथाकथंचिन्नित्यानि कुर्यादिन्दुक्षयादिषु इति । विष्णुपुराणे — श्राद्धं श्रद्धान्वितः कुर्वन् प्रीणयत्यखिलं जगत् । मासि मास्यसिते पक्षे पञ्चदश्यां नरेश्वर इति । स्मृत्यन्तरे — प्रमीतपितृकः पुर्याद्दर्शाब्दिकमहालयान् । जनन्यामपि जीवन्त्यामेष धर्मस्सनातनः इति । व्याघ्रोऽपि — न निर्वपति यः श्राद्धं प्रमीतपितृको द्विजः । इन्दुक्षये मासि मासि प्रायश्चित्तीयते हि सः इति ।

கௌதமரும்:— அமாவாஸ்யையில் பித்ருக்களின் பொருட்டு ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ஹாரீதரும்:— அமாவாஸ்யை முதலியவைகளில் நித்ய கர்மங்களை எவ்விதத்தாலாவது செய்ய வேண்டும். விஷ்ணுபுராணத்தில்:— ஓ அரசனே ! ஒவ்வொரு மாஸத்திலும் க்ருஷ்ண பக்ஷத்தில் அமாவாஸ்யையில் ச்ரத்தையுடன் கூடியவனாக ச்ராத்தத்தைச் செய்பவன் உலகம் முழுவதையும் த்ருப்தி செய்விக்கிறான். மற்றோர் ஸ்ம்ருதியில்:— இறந்த பிதாவையுடையவன் தர்சச்ராத்தம், ஆப்திக ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம் இவைகளைத் தாயார் ஜீவித்து இருக்கும் பொழுதும் செய்ய வேண்டும். இது ஸனாதனமான தர்மமாம். வ்யாக்ரரும்:— இறந்த பிதாவையுடைய எந்த ப்ராம்ஹணன் ப்ரதி மாஸம் அமாவாஸ்யையில் ச்ராத்தத்தைச் செய்யவில்லையோ அவன் ப்ராயச்சித்தத்துக்கு அர்ஹனாகிறான்.

कार्ष्णाजिनिः — दर्शे स्नात्वा पितृभ्यस्तु दद्यात् कृष्णतिलोदकम्। अन्नं च विधिवद्दद्यात् सन्ततिस्तेन वर्धते। दर्शश्राद्धमतिक्रम्य यो भुङ्क्ते तु नराधमः । चण्डालत्वमवाप्नोति जन्मानि नव पञ्च च इति । पितामहोऽपि — अमावास्याव्यतीपातपौर्णमास्यष्टकासु च। विद्वान् श्राद्धमकुर्वाणः प्रायश्चित्तीयते हि सः इति।

கார்ஷ்ணாஜிநி:— அமாவாஸ்யையில் ஸ்நானம் செய்து, பித்ருக்களின் பொருட்டு கறுப்பு எள்ளுடன் கூடிய ஜலத்தைக் கொடுக்க வேண்டும். அன்னத்தையும் விதிப்படி கொடுக்க வேண்டும். அதனால் குலம் வ்ருத்தியை அடைகிறது. எந்த அதம மனிதன் தர்சச்ராத்தம் செய்யாமல் புஜிக்கின்றானோ, அவன் பதினான்கு ஜன்மங்களில் சண்டாளத் தன்மையை அடைகிறான். பிதாமஹரும்:— அமாவாஸ்யை, வ்யதீபாதம், பூர்ணிமை, அஷ்டகை, இவைகளில் அறிந்த எவன் ச்ராத்தம் செய்வது இல்லையோ, அவன் ப்ராயச்சித்தத்துக்கு அர்ஹனாகிறான்.

व्यतीपातलक्षणमुक्तं माधवीये — श्रवणाश्विध निष्ठार्द्रानागदैवतमस्तकैः । यद्यमा रविवारेण व्यतीपातः स उच्यते इति । नागदैवतं - आश्लेषानक्षत्रम्, मस्तकं - मृगशिरः, यद्यमावास्या श्रवणादीनामन्यतमेन नक्षत्रेण रविवारेण च युक्ता स व्यतीपात इत्यर्थः । एतेषु वचनेषु नित्यत्वसाधकनित्यादिपदश्रवणाद्दर्शाष्टकादिश्राद्धं नित्यम्।

வ்யதீபாதத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது, மாதவீயத்தில்:— ச்ரவணம், அச்வினீ, அவிட்டம், திருவாதிரை, ஆயில்யம், ம்ருகசீர்ஷம் இவைகளுடனும் ஞாயிற்றுக் கிழமையுடனும் அமாவாஸ்யை சேர்ந்தால் அது 'வ்யதீபாதம்' என்று சொல்லப்படுகிறது. நாகதைவதம் = ஆயில்யம். மஸ்தகம் = ம்ருகசீர்ஷம். அமாவாஸ்யை, ச்ரவணம் முதலிய நக்ஷத்ரங்களுள் ஒரு நக்ஷத்ரத்துடனும், ஞாயிற்றுக் கிழமையுடனும் சேர்ந்தால் அது 'வ்யதீபாதம்' என்பது பொருள். இந்த வசனங்களால் நித்யத் தன்மையை ஸாதிக்கின்ற ''நித்யம்'' முதலிய பதங்கள் கேட்கப்படுவதால் தர்சம், அஷ்டகை முதலிய ச்ராத்தம் நித்யமாகும்.

नित्यत्वसाधकानि च कालनिर्णये दर्शितानि — नित्यं सदा यावदायुर्न कदाचिदतिक्रमेत्। इत्युक्तातिक्रमे दोषश्रुतेरत्यागचोदनात्। फलाश्रुतेर्वीप्सया च तन्नित्यमिति कीर्तितम् इति।

நித்யத் தன்மையை ஸாதிப்பவைகள் சொல்லப்பட்டுள்ளன, கால நிர்ணயத்தில்:— நித்யம் ஸதா யாவதாயு: (ஆயுளுள்ள வரையில்), ஒரு காலும் செய்யாமல் இருக்கக் கூடாது, என்றும், செய்யாவிடில் தோஷத்தைச் சொல்லியிருப்பது, விடக்கூடாது என்று சொல்லுவது, பலனைச் சொல்லாதது, இருமுறை சொல்வது, இவை உள்ளது ''நித்யம்'' என்று சொல்லப்படுகிறது.

९. अत्र चोद्देश्यदेवताः पितृपितामहप्रपितामहाः मातामह मातृपितामहमातृप्रपितामहाश्च। दर्शश्राद्धं तु यत् प्रोक्तं पार्वणं तत् प्रकीर्तितम्। सपिण्डीकरणं कृत्वा कुर्यात् पार्वणवत् सदा इति शातातपस्मरणात्, त्रीनुद्दिश्य तु यत्तद्धि पार्वणं मुनयो विदुः इति कण्वस्मरणाच्च। दर्शश्राद्धस्य पार्वणत्वेन तत्र पित्रादीनां त्रयाणामुद्देश्यत्वम् — पितॄन् मातामहांश्चैव द्विजः श्राद्धेन तर्पयेत्। अनृणस्स्यात् पितॄणां तु ब्रह्मलोकं स गच्छति। कृत्वा तु पैतृकं श्राद्धं पितृप्रभृतिषु त्रिषु। कुर्यान्मातामहानां च तथैवानृण्यकारणात्। पितरो यत्र पूज्यन्ते तत्र मातामहा अपि। अविशेषेण पूज्यास्स्युर्विशेषान्नरकं व्रजेत्। पार्वणं कुरुते यस्तु केवलं पितृहेतुतः। मातामहान्न कुरुते पितृहा स प्रजायते। याज्ञवल्क्येन कालस्तु अमावास्यादिनोदितः। अविशेषेण पित्र्यस्य तथा मातामहस्य च। अमावास्यादि कालेषु तत् ज्ञेयं न मृतेऽहनि। अमावास्यादिकालेषु कालैकत्वात् सहक्रिया। मृतेऽहनि तु तद्भेदान्न युज्येत सहक्रिया। कर्षूसमन्वितं मुक्त्वा तथाद्यश्राद्धषोडश। प्रत्याब्दिकं च शेषेषु पिण्डयास्स्युष्षडिति स्थितिः इत्यादिस्मरणाद्दर्शमहालयादिषु मातामहादीनां त्रयाणामप्युद्देश्यत्वं सिद्धम्।

இந்தத் தர்ச ச்ராத்தத்தில் உத்தேச்ய தேவதைகள், பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களும், மாதாமஹ, மாத்ரு பிதாமஹ, மாத்ருப்ரபிதாமஹர்களும். "தர்ச ச்ராத்தம் எதுவோ அது பார்வணம் (மூன்று பேர்களை உத்தேசித்துச் செய்யப்படுவது) என்று சொல்லப்பட்டுள்ளது. ஸபிண்டீகரணத்தைச் செய்த பிறகு எப்பொழுதும் பார்வணமாகவே செய்ய வேண்டும்" என்று சாதாதபரின் ஸ்ம்ருதியாலும், "மூன்று பேர்களை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம் பார்வணம் என்கின்றனர் முனிவர்கள்" என்று கண்வர் ஸ்ம்ருதியாலும். தர்ச ச்ராத்தம் பார்வணம் ஆகியதால் அதில் பிதா முதலிய மூவர்க்கு உத்தேச்யத் தன்மை. "ப்ராம்ஹணன் பித்ருக்களையும், மாதாமஹர்களையும் ச்ராத்தத்தினால் த்ருப்தி செய்ய

வேண்டும். அப்படிச் செய்பவன் பித்ருக்களுக்குக் கடனற்றவனாக ஆகிறான். ப்ரம்ஹலோகத்தை அடைகிறான். பிதா மூன்று பேர்கள் விஷயத்தில் ச்ராத்தத்தைச் செய்து, மாதாமஹன் முதலியவர்க்கும் செய்ய வேண்டும். கடன் இல்லாமல் இருப்பதற்காக. பித்ருக்கள் எந்தச் ச்ராத்தத்தில் பூஜிக்கப்படுகின்றனரோ, அந்த ச்ராத்தத்தில் மாதாமஹர்களும் பேதம் இன்றி பூஜிக்கப்பட வேண்டும். பேதத்தைச் செய்தால் நரகத்தை அடைவான். எவன் பித்ருக்களுக்கு மட்டில் பார்வண ச்ராத்தத்தைச் செய்கின்றானோ, மாதாமஹர்களை உத்தேசித்துச் செய்யவில்லையோ, அவன் பித்ருக்களை ஹிம்ஸித்தவனாகிறான். யாஜ்வல்க்யரால் 'அமாவாஸ்யா' என்ற வசனத்தால் பித்ருக்களை உத்தேசித்த கர்மத்திற்கும், மாதாமஹர்களை உத்தேசித்த கர்மத்திற்கும் காலம் பொதுவாய் சொல்லப்பட்டுள்ளது. அது அமாவாஸ்யை முதலிய காலங்களில் என்று அறியவும். பிதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் அல்ல. அமாவாஸ்யை முதலிய காலங்களில் காலம் ஒன்றாகியதால் சேர்ந்து அனுஷ்டானம். ம்ருத தினத்திலோவெனில், காலபேதம் இருப்பதால் சேர்த்துச் செய்வது யுக்தம் அல்ல. ஸபிண்டீகரணம், ஆத்யச்ராத்தம், ஷோடச ச்ராத்தம், ப்ரத்யாப்திக ச்ராத்தம் இவைகளைத் தவிர்த்து மற்ற ச்ராத்தங்களில் ஆறு பிண்டங்கள் என்பது நிர்ணயம்'' என்பது முதலிய ஸ்ம்ருதிகளால் தர்சம், மஹாளயம் முதலியவைகளில் மாதாமஹன் முதலிய மூவர்க்கும் உத்தேச்யத் தன்மை ஸித்தித்து உள்ளது.

न चात्र मात्रादीनां मातामह्यादीनां च पृथगुद्देश्यत्वमस्ति, अष्टकासु च वृद्धौ च इत्यादिना अष्टकादिभ्योऽन्यत्र दर्शादिश्राद्धे तन्निषेधस्योक्तत्वात्। न च अन्यत्र पतिना सह इति वचनात् सपत्नीकत्वेन वरणं कार्यमिति वाच्यम्, तासां उद्देश्यत्वाभावेऽपि पतिभोजनेन सह तासामपि तृप्तिर्भवति इति चन्द्रिकादौ तस्य

व्याख्यातत्वात् । अतोऽष्टकादिभ्योऽन्यत्र दर्शादौ पृथगुद्देश्यत्वं सपत्नीकत्वेनोद्देश्यत्वं च नास्तीति निबन्धनेषु निर्णीतम्।

இந்தத் தர்ச ச்ராத்தத்தில் மாதா முதலியவர்க்கும், மாதாமஹீ முதலியவர்க்கும், தனியாக உத்தேச்யத் தன்மை இல்லை. 'அஷ்டகாஸு ச வ்ருத்தௌ ச' என்பது முதலிய வசனத்தால் அஷ்டகாதிகளைத் தவிர்த்த தர்சம் முதலிய ச்ராத்தத்தில் அற்கு நிஷேதம் சொல்லப்பட்டு இருப்பதால். 'அந்யத்ர பதிநா ஸஹ' என்ற வசனத்தால் பத்னிகளுடன் சேர்த்து, பித்ராதிகளுக்கு வரணம் என்று சொல்லக்கூடாது. 'அவர்களுக்கு உத்தேசம் இல்லாவிடினும் பர்த்தாக்களின் போஜனத்தினால் கூடவே அவர்களுக்கும் த்ருப்தி உண்டாகின்றது' என்று சந்த்ரிகை முதலியதில் அதற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டு இருப்பதால். ஆகையால், அஷ்டகை முதலியதைத் தவிர்த்து தர்சச்ராத்தம் முதலியதில் தனியாக உத்தேசமும், பத்னிகளுடன் சேர்த்து வரணமும் இல்லை, என்று நிபந்தனங்களில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

यत्तु — सपत्नीकत्वहानेऽपि पितुर्दर्शं समाचरेत्। पितामहादिषु तथा सपत्नीकत्वसम्भवात् इति, तन्मातरि जीन्त्यामपि पित्रादीनां पितामह्यादीनां तिसृणां च दर्शे पिण्डतिलोदकदानं कार्यमित्येवंपरम्। तदुक्तं चन्द्रिकायाम् — न मातृषु पृथक् श्राद्धं मुनिभिर्यत्र कीर्तितम्। पत्युः पिण्डोदकं साध्वी भुङ्क्ते याऽनपकारिणी इति।

ஆனால் 'பிதாவுக்கு ஸபத்னீகத்வம் இல்லாவிடினும் தர்ச ச்ராத்தம் செய்ய வேண்டும். பிதாமஹர் முதலியவர் இடத்தில் பத்னியுடன் கூடிய தன்மை ஸம்பவிப்பதால்' என்று உள்ளதே எனில், அது மாதா ஜீவித்து இருந்தாலும், பிதா முதலியவர்களுக்கும், பிதாமஹீ முதலிய மூவர்க்கும் தர்சத்தில் பிண்டம், திலோதகம் இவைகளைக் கொடுக்க வேண்டும் என்பதில் தாத்பர்யம் உள்ளது. அது சொல்லப்பட்டு உள்ளது. சந்த்ரிகையில்:— எந்த

ச்ராத்தத்தில் மாதாக்களுக்குத் தனி ச்ராத்தம் முனிவர்களால் சொல்லப்படவில்லையோ, அந்த ச்ராத்தத்தில் பதிவ்ரதையாயும், பதிக்கு அபகாரம் செய்யாதவளுமான மாதா எவளோ, அவள் பதியினுடைய பிண்டம் திலோதகம் இவைகளைப் புஜிக்கிருள்.

यत्तु विष्णुवचनम्— यानुद्दिश्य भवेत् श्राद्धं तेभ्यस्तर्पयति द्विजः इति, तत् प्रत्याब्दिकविषयम्, प्रत्यब्दाङ्गं तिलं दद्यान्निषिद्धेऽपि परेऽहनि। वर्गैकस्य वचो येषामन्येषां तु विवर्जयेत् इति स्मरणात्। येषां वचः - उद्देश्यत्वोक्तिरित्यर्थः। एवं चामावास्यायां मात्रादीनामुद्देश्यत्वं नास्ति, पित्रादीनां भोजने सपत्नीकत्वेन वरणमपि नास्ति, तिलोदकं पिण्डदानं चास्ति मात्रादीनां मातामह्यादीनां च। शिष्टाचारोऽपि तथैवेत्याहुः।

ஆனல், விஷ்ணு வசனம்:— 'எவர்களை உத்தேசித்து ச்ராத்தம் செய்யப்படுமோ, அவர்களைக் குறித்து ப்ராம்ஹணன் தர்ப்பணம் செய்யவேண்டும்' என்று உள்ளதே எனில், அது ப்ரத்யாப்திக ச்ராத்த விஷயம். 'ப்ரத்யாப்திக ச்ராத்தத்திற்கு அங்கமாகிய திலோதகத்தை நிஷித்தம் ஆகியதாயினும் மறுநாளில் கொடுக்க வேண்டும். ஒரு வர்க்கத்தில் எவர்களுக்கு உத்தேசமோ அவர்களுக்கு. மற்றவர்க்கோ வெனில் திலோதகதானம் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால். யேஷாம் வச: = எவர்களுக்கு உத்தேசம் சொல்லப்பட்டு இருக்கிறதோ என்பது பொருள். இவ்விதம் இருப்பதால், மாதா முதலியவர்க்கு அமாவாஸ்யையில் உத்தேசமில்லை. பிதா முதலியவர்க்குப் போஜனத்தில் பத்னிகளுடன் சேர்த்து வரணமும் இல்லை. திலோதகதானமும் பிண்ட தானமும் உண்டு, மாதா முதலியவர்க்கும் மாதாமஹீ முதலியவர்க்கும். சிஷ்டாசாரமும் அவ்விதமே உள்ளது, என்கின்றனர்.

स्मृत्यन्तरे — स्वभर्तृप्रभृतित्रिभ्यः स्वपित्रादिभ्य एव च। विधवा कारयेत् श्राद्धं नित्यं नैमित्तिकं तथा इति। तिलोदकं दर्शे श्राद्धात्

पूर्वं कार्यम् — अमाष्टकासु सङ्क्रान्तौ पातादौ ग्रहणेषु च । स्नात्वा तिलोदकं दत्वा ततः श्राद्धं समाचरेत् । दर्शे तिलोदकं पूर्वं पश्चाद्दद्यान्महालये । प्रत्यब्दे तु कृते श्राद्धे परेऽहनि तिलोदकम् इत्यादिस्मरणात् ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— தன் பர்த்தா முதலிய மூவர்க்கும், தன் பிதா முதலிய மூவர்க்கும் நித்ய ச்ராத்தம் நைமித்திக ச்ராத்தம் இவைகளை விதவையான ஸ்த்ரீ செய்ய வேண்டும். 'தர்சம், அஷ்டகை, ஸங்க்ரமணம், வ்யதீபாதம் முதலியது, க்ரஹணங்கள் இவைகளில் ஸ்நானம் செய்து, திலோதகதானம் செய்து, பிறகு ச்ராத்தத்தைச் செய்யவும்', 'தர்ச ச்ராத்தத்தில் திலோதகதானத்தை முன்பு செய்ய வேண்டும். மஹாளய ச்ராத்தத்தில் பின்பு செய்ய வேண்டும். ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்தால் மறுநாளில் திலோதகதானம் செய்ய வேண்டும்'' என்பது முதலிய ஸ்ம்ருதிகள் இருப்பதால்.

दर्शे प्रत्याब्दिके सति विशेष उक्तः स्मृत्यन्तरे — आब्दिके समनुप्राप्ते दर्शश्चेत्तर्पणं न हि । ब्राह्मणान् भोजयेत् पूर्वं पिण्डात् पूर्वं तु तर्पणम् इति । हारीतः — वसित्वा वसनं शुष्कं स्थल आस्तीर्णबर्हिषि । विधिज्ञस्तर्पणं कुर्यात्सर्वान् पितृगणांस्तथा इति । स्मृत्यन्तरे — दर्शे तिलोदकं दद्याच्छुष्कवासा जलाद् बहिः । तर्पयेदार्द्रवासाश्चेत्त्रिरात्रमशुचिर्भवेत् इति । मरीचिः — उपरागे पितृश्राद्धे तीर्थेऽमायां च सङ्क्रमे । निषिद्धेऽपि हि सर्वत्र साक्षतैस्तर्पयेत्तिलैः इति । कात्यायनः — सव्यान्वारब्धेन पाणिना तर्पयेत्तिलाभावे सुवर्णेन दर्भैर्वा यत्राशुचिस्थलं वा दर्भहीनं वा काममप्सु तर्पयेत्, तिलग्रहणे तर्जन्यङ्गुष्ठयोगं वर्जयेत्, सा राक्षसी मुद्रा, दक्षिणाङ्गुष्ठेनैवाञ्जलौ तिलान् प्रक्षिपेत् इति ।

அமாவாஸ்யையில் ப்ரத்யாப்திக ச்ராத்தம் நேர்ந்தால், விசேஷம் சொல்லப்பட்டு உள்ளது, மற்றோர் ஸ்ம்ருதியில்:— ப்ரத்யாப்திகம் வந்திருக்கும் பொழுது தர்சம் சேர்ந்தால் தர்ப்பணம் இல்லை. ப்ராம்ஹணர்களை முன்பு புஜிப்பிக்கவும். பிண்டத்துக்கு முன் தர்ப்பணம். (ப்ரத்யாப்திக ச்ராத்தத்தைச் செய்த பிறகு தர்ச ச்ராத்தத்தை ஆரம்பித்துச் செய்து, அந்தப் போஜனத்தின் முடிவில் பிண்டதானத்துக்கு முன் தர்ச ச்ராத்தத்தினுடைய தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும் என்று பொருள்.) ஹாரீதர்:— உலர்ந்த வஸ்த்ரத்தைத் தரித்துத் தர்ப்பங்களால் பரப்பப்பட்ட ஸ்தலத்தில் விதியை அறிந்தவன் பித்ருகணங்கள் எல்லோரையும் உத்தேசித்துத் தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— அமாவாஸ்யையில் உலர்ந்த வஸ்த்ரம் தரித்தவனாய் ஜலத்துக்கு வெளியில் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஈர வஸ்த்ரம் உடையவனாய்த் தர்ப்பணம் செய்தால் மூன்று நாள் ஆசௌசம் உள்ளவனாவான். மரீசி:— க்ரஹணம், பித்ரு ச்ராத்தம், புண்ய தீர்த்தம், அமாவாஸ்யை, ஸங்க்ரமணம் இவைகளில் திலத்துக்கு நிஷித்த தினமாயின் அக்ஷதையுடன் கூடிய திலங்களால் தர்ப்பணம் செய்ய வேண்டும். காத்யாயனர்:— இடது கையினால் தொடப்பட்ட வலது கையினால் தர்ப்பணம் செய்ய வேண்டும். எள் இல்லாவிடில் ஸ்வர்ணத்தால் தர்ப்பிக்கவும். தர்ப்பங்களினாலாவது. எந்த இடத்தில் அசுத்தமான ஸ்தலமோ தர்ப்பம் இல்லையோ, அவ்விடத்தில் ஜலத்தில் இஷ்டப்படி தர்ப்பிக்கவும். திலத்தை எடுக்கும் பொழுது தர்ஜனீ (ஆள்காட்டி) விரல், பெருவிரல் இவைகளின் சேர்க்கை கூடாது. அது ராக்ஷஸமுத்ரை எனப்படுகிறது. வலது பெருவிரலாலேயே கையில் உள்ள ஜலத்தில் எள்ளைப் போட வேண்டும்.

योगयाज्ञवल्क्यः — आवाह्य पूर्वं तन्मन्त्रैरास्तीर्य च कुशान् शुभान्। गोत्रनामस्वधाकारैस्तर्पयेदनुपूर्वशः इति। आयात पितरः इति पितॄनावाह्य, सकृदाच्छिन्नम् इति दर्भानास्तीर्य तेषु वत्सगोत्रान् यज्ञशर्मणः पितॄन् स्वधा नमस्तर्पयामीति तर्पयेदित्यर्थः ।

யோகயாஜ்ஞவல்க்யர்:— பித்ருக்களை அவர்களின் மந்த்ரங்களால் முதலில் ஆவாஹனம் செய்து, நல்ல தர்ப்பங்களைப் பரப்பி, கோத்ரம், பெயர், ஸ்வதா இவைகளைச் சொல்லி க்ரமமாய்த் தர்ப்பிக்க வேண்டும். "ஆயாத பிதர:" என்ற மந்த்ரத்தால் பித்ருக்களை ஆவாஹனம் செய்து, "ஸக்ருதாச்சிந்நம்" என்ற மந்த்ரத்தால் தர்ப்பங்களைப் பரப்பி, அவைகளில் வத்ஸ கோத்ரான், யஜ்ஞ சர்மண: பித்ரூன் ஸ்வதா நம: தர்ப்பயாமி என்று தர்ப்பிக்க வேண்டும், என்பது பொருள்.

चन्द्रिकायाम् — सव्यं जानु ततोऽन्वाच्य पाणिभ्यां दक्षिणामुखः । तल्लिङ्गैस्तर्पयेन्मन्त्रैः सर्वान् पितृगणांस्तथा । उदीरतामङ्गिरस आयन्त्वित्यूर्जमित्यपि। पितृभ्य इति ये चेह मधुवाता इति त्यृचम्। पितॄन् ध्यायन् प्रसिञ्चेद्वै जपेन्मन्त्रान् यथाक्रमम्। तृप्यध्वमिति च पठेत्ततः प्राञ्जलिरानतः। नमो व इति जप्त्वा च ततो मातामहानपि । तर्पयेदानृशंस्यार्थं परमं धर्ममास्थितः । गोत्रनामस्वधाकारैस्तर्पयेदनुपूर्वशः इति।

சந்த்ரிகையில்:— பிறகு இடது முழங்காலைக் கவிழ்த்து, தெற்கு நோக்கியவனாய், இரு கைகளாலும், பித்ருக்களைக் குறிக்கும் மந்த்ரங்களால் பித்ருக்கள் எல்லோரையும் தர்ப்பிக்க வேண்டும். உதீரதாம், அங்கிரஸ:, ஆயந்துந:, ஊர்ஜம், பித்ருப்ய:, யேசேஹ, மதுவாதா: என்ற மூன்று ருக்குகள் இந்த மந்த்ரங்களைச் சொல்லி, பித்ருக்களை த்யானித்துக் கொண்டு தர்ப்பிக்க வேண்டும். இந்த மந்த்ரங்களை முறையே சொல்ல வேண்டும். பிறகு அஞ்சலியுடன்

வணங்கியவனாய் த்ருப்யத்வம் என்று சொல்ல வேண்டும். 'நமோவ: பிதர:' என்றும் ஜபித்து, பிறகு மாதாமஹர்களுக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும், தர்மத்தை அனுஷ்டிப்பவன். கோத்ரம், நாமம், ஸ்வதாசப்தம் இவைகளைச் சொல்லி க்ரமப்படி தர்ப்பிக்க வேண்டும்.

स्मृत्यन्तरे — तर्पणं तिलसंमिश्रं पितॄनुद्दिश्य वाग्यतः। आसीनः प्राङ्मुखः कुर्याद्दक्षिणाभिखोऽञ्जलिम् इति । अत्र प्राङ्मुखत्वदक्षिणामुखत्वयोर्विकल्पः। सर्वमेतन्निरूपित मधस्तात्। जीवत्पितृको मातरि मृतायामपि दर्शादिश्राद्धं तर्पणं च न कुर्यात्। प्रमीतपितृकस्तु जीवन्त्यामपि मातरि कुर्यात्।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— மௌனமுள்ளவனாய், திலத்துடன் கூடிய தர்ப்பணத்தைப் பித்ருக்களைக் குறித்து, உட்கார்ந்தவனாய், கிழக்கு அல்லது தெற்கு நோக்கியவனாய் அஞ்ஜலியைக் கொடுக்க வேண்டும். இவ்விஷயத்தில் கிழக்கு நோக்குவது, தெற்கு நோக்குவது என்பதில் விகல்ப்பம். இவையெல்லாம் கீழே (ஆஹ்னிககாண்டத்தில்) சொல்லப்பட்டுள்ளன. ஜீவித்துள்ள பிதாவை உடையவன், மாதா இல்லா விடினும், தர்சம் முதலிய ச்ராத்தத்தையும் தர்ப்பணத்தையும் செய்யக் கூடாது. இறந்த பிதாவை உடையவனேவெனில், மாதா ஜீவித்து இருந்தாலும் அவைகளைச் செய்ய வேண்டும்.

तत्र लोकाक्षिः— अमाश्राद्धं गयाश्राद्धं श्राद्धं चापरपक्षिकम्। न जीवत्पितृकः कुर्यात्तिलैः कृष्णैश्च तर्पणम् । प्रमीतपितृकः कुर्याद्दर्शाब्दिकमहालयान्। जनन्यामपि जीवन्त्यामेष धर्मस्सनातनः इति । क्रतुश्च — अमाष्टकासु सङ्क्रान्तौ मन्वादिषु युगादिषु । चन्द्रसूर्यग्रहे पाते स्वेच्छया (अलभ्य) पूज्ययोगतः। जीवत्पिता नैव कुर्यात् श्राद्धं काम्यं तथाखिलम् इति।

**லோகாக்ஷி:—** தர்ச ச்ராத்தம், கயா ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம் கறுப்பு எள்ளுடன் தர்ப்பணம் இவைகளை ஜீவித்து இருக்கும் பிதாவை உடையவன் செய்யக் கூடாது. பிதா இல்லாதவன் தர்ச ச்ராத்தம், ப்ரத்யாப்திக ச்ராத்தம், மஹாளயம், இவைகளைத் தாயார் ஜீவித்து இருந்தாலும் செய்ய வேண்டும். இது ஸநாதனமான தர்மம். க்ரதுவும்:— அமை, அஷ்டகை, ஸங்க்ரமணம், மன்வாதி, யுகாதி, சந்த்ர ஸூர்ய க்ரஹணம், வ்யதீபாதம், இஷ்டமான காலம், துர்லபமான யோகம் (அர்த்தோதயம் முதலியது) இவைகளில் ஜீவனுள்ள பிதாவை உடையவன் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அவ்விதம் காம்ய ச்ராத்தம் எதையும் செய்யக் கூடாது.

कात्यायनः — सपितुः पितृकृत्येषु ह्यधिकारो न विद्यते । न जीवन्तमतिक्रम्य किञ्चिद्दद्यादिति श्रुतिः इति । कालादर्शेऽपि— न जीवपितृकः कुर्यात् श्राद्धं दर्शादिचोदितमिति । अस्यापवाद उक्तस्तत्रैव — पित्र्येष्ट्यां पितृयज्ञे च वृद्धौ मातुर्मृतेऽहनि । विप्रसम्पदि तीर्थेषु सोऽपि श्राद्धं समाचरेत् । पितुर्या देवताः प्रोक्तास्ता एवात्र च देवताः । मृताहे मातरश्शेषे सर्वा एव प्रकीर्तिताः इति । पित्र्येष्ट्यां - चातुर्मास्ये पित्र्येष्टिर्नामास्ति तस्याम्, पितृयज्ञे - पिण्डपितृयज्ञे, वृद्धौ - विवाहादि-निमित्तायाम्, मातृमृताहे, विप्रसम्पदि त्रिमधुत्रिसुपर्णमित्यादि गुणयुक्तविप्रसम्भवे । तीर्थेषु - महानदीषु स्थानेषु च । गयास्थानस्य तीर्थत्वेऽपि निषेधान्नात्र कुर्यात् । सोऽपि - जीवत्पितापि पितृश्राद्धं कुर्यात् । पितृकर्तृकश्राद्धे या देवताः प्रोक्तास्ता एवात्र पुत्रकर्तृकेऽपि श्राद्धे देवताः, मातुर्मृताहे मातरो देवताः, शेषे - पित्र्येष्ट्यादि श्राद्धकर्मणि, सर्वा एव देवता इत्यर्थः ।

**காத்யாயனர் :—** பிதாவுடன் கூடியவனுக்குப் பித்ரு கார்யங்களில் அதிகாரம் கிடையாது. ஜீவித்திருக்கும் பிதாவை அதிக்ரமித்து (மற்றவர்க்கு) ஒன்றையும்

கொடுக்கக் கூடாது, என்கிறது வேதம். காலாதர்சத்திலும் :- ஜீவ பித்ருகன் விதிக்கப்பட்டுள்ள தர்சம் முதலிய ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. இதற்கு அபவாதம் சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்திலேயே :- பித்ருக்களை உத்தேசித்த இஷ்டியிலும், பித்ரு யஜ்ஞத்திலும், நாந்தியிலும், மாதாவின் ம்ருத தினத்திலும், சிஷ்ட ப்ராஹ்மணனின் லாபத்திலும், புண்ய தீர்த்தங்களிலும் ஜீவ பித்ருகனும் ச்ராத்தம் செய்ய வேண்டும். பிதாவுக்கு ச்ராத்த தேவதைகள் எவரோ அவரே இவனது ச்ராத்தத்திலும் தேவதைகளாவர். ப்ரத்யாப்திக ச்ராத்தத்தில் மாதா முதலியவர் தேவதைகள். மற்றவைகளில் எல்லோருமே தேவதைகள். பித்ர்யேஷ்ட்யாம் - சாதுர்மாஸ்ய யாகத்தில் செய்யப்படும் இஷ்டி. பித்ருயஜ்ஞே - பிண்ட பித்ருயஜ்ஞம். வ்ருத்தௌ - விவாஹம் முதலியதில் செய்யும் நாந்தீ ச்ராத்தம். மாத்ரு ம்ருதாஹம் - மாதாவின் ப்ரத்யாப்திக ச்ராத்தம். விப்ரஸம்பதி - நல்ல ப்ராம்ஹணர்கள் கூடிய ஸமயம். 'மதுவாதா' என்ற மூன்று ருக்குகளை அறிந்தவன், 'த்ரிஸுபர்ண' மந்த்ரங்களை அறிந்தவன் முதலிய ப்ராஹ்மணர்கள் நேர்ந்த ஸமயம். தீர்த்தேஷு - மஹாநதிகள், புண்ய க்ஷேத்ரங்கள், இவைகளில், கயா க்ஷேத்ரம் தீர்த்தமாயிருந்தாலும் நிஷேத மிருப்பதால் அதில் செய்யக் கூடாது. ஸ: அபி - பிதா ஜீவித்திருப்பவனாயிருந்தாலும் பித்ரு ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பிதா செய்யும் ச்ராத்தத்தில் எவர்கள் உத்தேச்யர்களோ, அவர்களே ஜீவ பித்ருகனின் ச்ராத்தத்தில் உத்தேச்யர்கள். மாதாவின் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தில் மாத்ரு பிதாமஹீ ப்ரபிதாமஹிகள் தேவதைகள். சேஷே - பித்ர்யேஷ்டி முதலிய ச்ராத்தத்தில் எல்லோருமே தேவதைகள் என்பது பொருள். அது சொல்லப்பட்டுள்ளது.

तदुक्तं मैत्रेयगृह्यपरिशिष्टे — उद्वाहे पुत्रजनने पित्र्येष्ट्यां सौमिके मखे। तीर्थे ब्राह्मण आयाते षडेते जीवतः पितुः। महानदीषु

सर्वासु तीर्थेषु च गयामृते। जीवत्पिताऽपि कुर्वीत श्राद्धं पार्वणधर्मवत् इति। हारीतः — येभ्य एव पिता दद्यात्तेभ्यः कुर्वीत साग्निकः। अनग्निकोऽपि कुर्वीत जन्मादौ वृद्धिकर्मणि इति।

மைத்ரேயக்ருஹ்யபரிசிஷ்டத்தில் :- விவாஹம், புத்ர ஜனனம், பித்ர்யேஷ்டி, ஸோம யாகம், புண்ய தீர்த்தம், நல்ல ப்ராஹ்மணனின் வரவு, இவைகளில் ஜீவ பிதாவும் ச்ராத்தம் செய்ய வேண்டும். மஹாநதிகள் எல்லாவற்றிலும், கயையைத் தவிர்த்த மற்ற புண்ய தீர்த்தங்களிலும், ஜீவ பிதாவும் பார்வண விதியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ஹாரீதர் :- ஆஹிதாக்னியான ஜீவ பித்ருகன் பிதா எவர்களுக்குச் செய்வானோ அவர்களுக்கே செய்ய வேண்டும். ஆஹிதாக்னியல்லாதவனும் புத்ரஜனனம் முதலிய நாந்தியில் ச்ராத்தத்தை முன்போல் செய்ய வேண்டும்.

व्याध्यादिनिमित्ताशक्त्या सर्वाङ्गयुक्तं श्राद्धं कर्तुमक्षमो दर्शादौ सङ्कल्पश्राद्धं कुर्यात्। तदुक्तं कालादर्शे — अशक्त्या पार्वण श्राद्धं यथावत् कर्तुमक्षमः। पिण्डार्घ्यादिविहीनं तु सङ्कल्पश्राद्धमाचरेत् इति। स्मृत्यन्तरेऽपि — अङ्गानि यस्तु दर्शादेर्यदा कर्तुं न शक्नुयात्। सङ्कल्पश्राद्धमेवासौ कुर्यादर्घ्यादिवर्जितम् इति। आपस्तम्बोऽपि — सङ्कल्पश्राद्धे अर्घ्यावहनाग्निकरणपिण्डदानानि वर्जयेत् इति।

வ்யாதி முதலியதால் உண்டாகிய அசக்தியினால் எல்லா அங்கங்களுடன் கூடிய சிராத்தத்தைச் செய்யச் சக்தியற்றவன் தர்சம் முதலியதில் ஸங்கல்ப விதியாய் சிராத்தம் செய்ய வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்தில்:— சக்தி இல்லாததால் பார்வண சிராத்தத்தை விதிப்படி செய்ய சக்தியற்றவன் பிண்டம் அர்க்யம் முதலியவைகள் இல்லாமல் ஸங்கல்ப ச்ராத்தத்தைச் செய்யவும். மற்றோர் ஸ்ம்ருதியிலும் :- எவன் தர்சாதி ச்ராத்தங்களின்

அங்கங்களை விதிப்படி செய்யச் சக்தியற்றவனே, அவன் ஸங்கல்ப ச்ராத்தத்தையே அர்க்யம் முதலியவை இல்லாததாய்ச் செய்ய வேண்டும். ஆபஸ்தம்பரும் :– ஸங்கல்ப ச்ராத்தத்தில் அர்க்யம், ஆவாஹனம், அக்னியில் ஹோமம், பிண்ட தானம் இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

सङ्ग्रहे — सङ्कल्पं तु यदा कुर्यान्न कुर्यात् पात्रपूरणम्। विकिरश्च न दातव्यः पिण्डांश्चैव न निर्वपेदिति । शातातपः — पिण्डनिर्वापरहितं यत्तु श्राद्धं विधीयते। स्वधानयनलोपोऽत्र विकिरश्च विलुप्यते । अक्षय्यदक्षिणास्वस्ति सौमनस्यं यथा स्थितम् इति । स्मृत्यन्तरे — आवाहनाग्नौकरणे स्वधानिनयनं तथा । विकिरं पिण्डदानं च सङ्कल्पे पञ्च वर्जयेत् इति।

ஸங்க்ரஹத்தில் :– ஸங்கல்ப ச்ராத்தத்தைச் செய்தால் அர்க்யத்தை க்ரஹிக்கக் கூடாது. விகிரம் கொடுக்க வேண்டாம். பிண்டதானமும் வேண்டாம். சாதாதபர் :- பிண்டதானமில்லாமல் எந்த ச்ராத்தம் விதிக்கப்படுகிறதோ, அதில் ஸ்வதாநிநயநம் இல்லை. விகிரதானமும் இல்லை. அக்ஷய்யம், தக்ஷிணாதானம், ஸ்வஸ்தி வாசனம, ஸௌமனஸ்யம் இவைகள் உண்டு. மற்றோர் ஸ்ம்ருதியில் :- ஆவாஹனம், அக்னியில் ஹோமம், ஸ்வதாநிநயனம், விகிரம், பிண்டதானம், இந்த ஐந்துகளையும் ஸங்கல்ப ச்ராத்தத்தில் வர்ஜிக்கவும்.

आवाहन शब्देन मन्त्रावाहनमुच्यते । मानसावाहनस्य न निषेधः । (अमन्त्रश्चाप्यवेलायामापदि ब्रह्मवित्तमः । सङ्कल्पेन विधानेन कुर्यात् श्राद्धं न पार्वणम्) इति।

ஆவாஹன சப்தத்தால் மந்த்ராவாஹனம் சொல்லப்படுகிறது. மனஸினால் ஆவாஹனம் செய்வதற்கு நிஷேதமில்லை. (மந்த்ரமில்லாதவனும், அஸமயத்திலும்,, ஆபத்திலும், வேதமறிந்தவன் ஸங்கல்ப விதியாய்

ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பார்வண விதியாய்ச் செய்ய வேண்டாம்).

## दर्शश्राद्धकालनिर्णयः

अथ दर्शश्राद्धकालः - पार्वणत्वात्तस्य कर्मकालत्वमपराह्णस्य, कुतपस्य प्रारम्भकालत्वमित्येतदाब्दिकनिर्णये प्रपञ्चितम्, तथा सत्यपराह्णस्य मुख्यकालत्वात् पूर्वेद्युरेव वा अपरेद्युरेव वाऽपराह्णव्यापिन्यमावास्या ग्रहीतव्या। पूर्वेद्युरेवापराह्णव्याप्तौ जाबालिः — पूर्वाह्णे चेदमावास्या नापराह्णे भवेद्यदि। भूतविद्धैव सा ग्राह्या पितृकार्येषु सर्वदा इति। प्रतिपदि पूर्वाह्णे भवेच्चेदपराह्णे यदि न भवेदित्यर्थः। तथा - प्रतिपद्यप्यमावास्या पूर्वाह्णव्यापिनी यदि। भूतविद्धैव सा ग्राह्या पित्र्ये कर्मणि सर्वदा इति।

### தர்ச ச்ராத்த கால நிர்ணயம்.

இனி தர்ச ச்ராத்த காலம் சொல்லப்படும். தர்ச ச்ராத்தம் பார்வணமாகியதால் அதற்குக் கர்மகாலம் அபராஹ்ணம், ஆரம்ப காலம் குதபம் என்பது ஆப்திக நிர்ணயத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டுள்ளது. அப்படியிருக்கும் பொழுது, அபராஹ்ணம் முக்கிய காலமாகியதால் முதல் நாளிலோ, மறுநாளிலோ அபராஹ்ண வ்யாப்தியுள்ள அமாவாஸ்யை க்ரஹிக்கத்தகுந்ததாகிறது. முதல் நாளிலேயே அபராஹ்ண வ்யாப்தியிருக்கம் பக்ஷத்தில், ஜாபாலி: — ''பூர்வாஹ்ணத்திலேயே அமாவாஸ்யை இருந்து, அபராஹ்ணத்தில் இல்லாமலிருந்தால், சதுர்த்தசி வித்தமான (கூடிய) அமையே பித்ரு கார்யங்களில் எப்பொழுதும் க்ரஹிக்கத் தக்கது''. ப்ரதமையில் பூர்வாஹ்ணத்தில் அமையிருந்தால் அபராஹ்ணத்தில் இல்லாவிடில், என்பது பொருள். அவ்விதமே, 'ப்ரதமா திதியிலும் பூர்வாஹ்ண வ்யாபினியாய் அமையிருந்தால்,

அப்பொழுது சதுர்த்தசி வித்தமான அமையையே பித்ருகார்யங்களில் எப்பொழுதும் க்ரஹிக்கத் தக்கது'' என்றுள்ளது.

हारीतोऽपि — यस्यां सन्ध्यागतस्सोमो मृणाल इव दृश्यते। अपराह्ने तदा तस्यां पिण्डानां करणं ध्रुवम् इति। याज्ञवल्क्यः — यो यस्य विहितः कालस्तत्कालव्यापिनी तिथिः इति। यत्तु कार्ष्णाजिनिनोक्तम् — भूतविद्धाममावास्यां मोहादज्ञानतोऽपि वा। श्राद्धकर्मणि ये कुर्युस्तेषामायुः प्रहीयते इति, तदपराह्णव्याप्त्यभावविषयं द्रष्टव्यम्।

ஹாரீதர் :— எந்த அமையில் ஸந்த்யா காலத்தில் சந்த்ரன் தாமரைத் தண்டுபோல் (ஸூக்ஷ்மமாக) காணப்படுகிருனோ அன்று அபராஹ்ண காலத்தில் பிண்ட பித்ரு யஜ்ஞம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. யாஜ்ஞவல்க்யர் :- எந்தக் கர்மத்திற்கு எந்தக் காலம் விதிக்கப்பட்டுள்ளதோ, அந்தக் காலத்தை வ்யாபித்துள்ளதாய், திதி இருக்க வேண்டும். ஆனல், கார்ஷ்ணாஜினி :- எவர்கள் சதுர்த்தசீ வித்தமான அமாவாஸ்யையை மோஹத்தாலோ அஜ்ஞாநத்தாலோ க்ரஹிக்கின்றனரோ, அவர்களுக்கு ஆயுள் குறையும்'' என்று சொல்லியுள்ளார் எனில், அது அபராஹ்ண வ்யாப்தி இல்லாததைப் பற்றியது, என்றறியத் தக்கது.

अपराह्णव्यापिन्या उत्तरतिथेर्ग्राह्यतामाह हारीतः - अपराह्णः पितॄणां तु याऽपराह्णानुयायिनी। सा ग्राह्या पितृकार्ये तु न पूर्वाऽस्तानुयायिनी इति। अस्तमयकालव्यापिनी पूर्वा न ग्राह्येत्यर्थः।

அபராஹ்ண வ்யாப்தியுள்ள மறு திதி க்ராஹ்ய மென்பதைச் சொல்லியுள்ளார் ஹாரீதர் :- பித்ருக்களுடையது அபராஹ்ண காலம். எந்தத் திதி அபராஹ்ண வ்யாப்தியுள்ளதாயிருக்கிறதோ, அந்தத் திதி பித்ரு கார்யங்களில் க்ரஹிக்கத் தக்கது. அஸ்தமய

வ்யாப்தியுள்ள பூர்வ திதி க்ரஹிக்கத் தகுந்ததல்ல. அஸ்தமய வ்யாபியான முதல் நாள் திதி க்ரஹிக்கத் தகுந்ததல்ல என்பது பொருள்.

उभयत्रापराह्णव्यापित्वं द्वेधा भिद्यते, एकदेशेन कार्त्स्न्येन चेति। एकदेशव्याप्तिश्चि द्वेधा भिद्यते। वैषम्येण साम्येन चेति। तत्र वैषम्येणैकदेशव्याप्तौ महत्त्वेन निर्णयः अपराह्णद्वय-व्यापिन्यमावास्या यदा भवेत्। तत्राल्पत्वमहत्त्वाभ्यां निर्णयः पितृकर्मणि इति स्मरणान्महत्येव ग्राह्येत्यभिप्रायः।

இரண்டு நாளிலும் அபராஹ்ண வ்யாப்தியுள்ள தென்பது இரண்டு விதமாகிறது. ஏகதேசவ்யாப்தி யென்றும், முழுவதிலும் வ்யாப்தியென்றும். ஏகதேச வ்யாப்தியென்பதும் இரண்டாகப் பிரிகிறது. பேதமுள்ளதாயும் ஸமமாயும் என்று. ஏகதேச வ்யாப்தி விஷயத்தில் அதிகமுள்ளதை க்ரஹிக்கவும். "அமாவாஸ்யை எப்பொழுது இரண்டு அபராஹ்ணங்களிலும் வ்யாப்தி யுள்ளதாயிருக்கின்றதோ, அப்பொழுது அல்பம், அதிகம் என்பதைக் கொண்டு பித்ரு கர்மத்தில் நிர்ணயம்" என்று ஸ்ம்ருதியிருப்பதால், அதிக வ்யாப்தியுள்ளதே க்ரஹிக்கத் தகுந்தது, என்பது ஸித்தாந்தம். அவ்விதமே,

तथा च शिवराघवसंवादे — अल्पापराह्णे त्याज्याऽमा ग्राह्या स्यादाधिकाभवेत् इति। साम्येनोभयत्रैकदेशव्याप्तिस्तत्तिथिगतैर्वृद्धि-क्षयसाम्यैस्त्रिधा भिद्यते, तत्र खर्वादिशास्त्रेण निर्णयः। खर्वादिवाक्यं च पूर्वमुक्तम्। तच्च सर्वतिथिसाधारण्येन प्रवृत्तत्वादमावास्यायामपि वर्तते।

சிவராகவ ஸம்வாதத்தில் :— அபராஹ்ணத்தில் அல்ப வ்யாப்தியுள்ள அமையானது வர்ஜிக்கத் தகுந்தது. அதிக வ்யாப்தியுள்ளது க்ரஹிக்கத் தகுந்தது. இரண்டு

நாளிலும் ஸமமாக ஏகதேச வ்யாப்தியென்பது அந்தத் திதியை யடைந்துள்ள வ்ருத்தி, க்ஷயம், ஸாம்யம், இவைகளால் மூன்றுவிதமாகப் பிரிகின்றது. அவைகளில், கர்வாதி சாஸ்த்ரத்தால் நிர்ணயம் அறியத் தகுந்தது. கர்வாதி வாக்யம் முன்பே சொல்லப்பட்டுள்ளது. அந்தச் சாஸ்த்ரம் எல்லாத் திதிகளுக்கும் பொதுவாகவே ப்ரவர்த்தித்திருப்பதால் அமாவாஸ்யையிலும் இருக்கிறது.

तथाऽमावास्यायामेव विशेषेण शिवराघवसंवादे स एवार्थो दर्शितः — अमावास्या तु या हि स्यादपराह्णद्वये समा। क्षये पूर्वा परा वृद्धौ साम्येऽपि च परा स्मृता इति। स्मृत्यन्तरेऽपि — तिथिक्षये सिनीवाली तिथिवृद्धौ कुहूर्मता। साम्येऽपि च कुहूर्ज्ञेया वेदवेदाङ्गवेदिभिः इति। चतुर्दशीमिश्रा सिनीवाली, प्रतिपन्मिश्रा कुहूः ।। तथा च व्यासः — दृष्टचन्द्रा सिनीवाली नष्टचन्द्रा कुहूर्मता इति।

அவ்விதம் அமாவாஸ்யா விஷயத்திலேயே சிவராகவ ஸம்வாதத்திலேயே அதே விஷயம் தெரிவிக்கப்பட்டுள்ளது :- எந்த அமாவாஸ்யை இரண்டு அபராஹ்ணங்களிலும் ஸமமாகவிருக்கின்றதோ, க்ஷய விஷயத்தில் முந்தியதை க்ரஹிக்கவும், வ்ருத்தியில் மறு திதியை க்ரஹிக்கவும், ஸாம்யத்திலும் மறு திதியைக் க்ரஹிக்கவும் என்று. மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- திதி க்ஷய விஷயத்தில் சதுர்த்தசி வித்தமான அமாவாஸ்யை க்ரஹிக்கத் தகுந்தது. திதி வ்ருத்தியில் ப்ரதமையுடன் கூடிய அமாவாஸ்யை க்ரஹிக்கத் தகுந்தது. ஸாம்ய பக்ஷத்திலும் ப்ரதமையுடன் கூடிய அமையே வேத வேதாந்த மறிந்தவர்களால் க்ரஹிக்கத் தக்கது. அவ்விதமே, வ்யாஸர் :- சந்த்ர தர்சனமுள்ள அமை 'ஸிநீவாலீ', சந்த்ரன் காணப்படாத அமை 'குஹூ' எனப்படுகிறது.

नारदोऽपि — अपराह्णद्वयव्यापिन्यमावास्या यदा भवेत्। क्षये पूर्वा तु कर्तव्या वृद्धौ साम्ये तथोत्तरा इति। कार्त्स्न्येनोभयत्रापराह्णव्याप्तावपि तिथिवृद्धित्वात् कुहूरेव ग्राह्या। यदा दिनद्वयेऽप्यपराह्णं न स्पृशति, तदा साग्न्यनग्निभेदेन व्यवस्था द्रष्टव्या। तथा जाबालिः — अपराह्णद्वयाव्यापी यदि दर्शस्तिथिक्षये। आहिताग्नेस्सिनीवाली निरग्न्यादेः कुहूर्मता इति। आदिशब्दाद् स्त्रीशूद्रयोर्ग्रहणम्।

நாரதரும் :- எப்பொழுது அமாவாஸ்யை இரண்டு அபராஹ்ணங்களிலும் வ்யாபித்ததாயுள்ளதோ, அப்பொழுது க்ஷய விஷயத்தில் பூர்வ திதியை க்ரஹிக்கவும். வ்ருத்தியிலும் ஸாம்யத்திலும் மறு திதி க்ரஹிக்கவும். அபராஹ்ண வ்யாப்தி இரண்டு நாளிலும் முழுவதும் இருந்தால்,திதி வ்ருத்தியானதால் மறு திதியே க்ரஹிக்கத் தகுந்தது. எப்பொழுது இரண்டு நாளிலும் அபராஹ்ணத்தை அமை தொடுவதில்லையோ, அப்பொழுது ஆஹிதாக்னி, அநாஹிதாக்னி என்ற பேதத்தைக் கொண்டு வ்யவஸ்தை அறியத் தக்கது. அவ்விதமே, ஜாபாலி: - திதிக்ஷயம் வந்து, அமாவாஸ்யையானது இரண்டு அபராஹ்ணத்தையும் வ்யாபிக்காமலிருந்தால் ஆஹிதாக்னி முதல் நாளிலும்,, அநாஹிதாக்னி முதலியவர் மறுநாளிலும் அமையை க்ரஹிக்க வேண்டும். ஆதி சப்தத்தால் ஸ்த்ரீ சூத்ரர்கள் சொல்லப்படுகின்றனர்.

तथा च लोकाक्षिः — सिनीवाली द्विजैः कार्या साग्निकैः पितृकर्मणि। स्त्रीशूद्रैश्च कुहूर्ज्ञेया तथा चानग्निकैर्द्विजैः इति। एवं शास्त्रार्थे व्यवस्थिते सत्यन्यानि बहुविधानि सर्वाणि वचनानि प्रोक्तेष्वमावास्याभेदेष्वन्यतमविषयत्वेन यथायोग्यं योजनीयानि। तथा हि तत्र तावत् बोधायन आह — मध्याह्नात् परतो यत्र चतुर्दश्यनुवर्तते। सिनीवाली तु सा ज्ञेया पितृकार्येषु निष्फला इति।

லோகாக்ஷி :— ஆஹிதாக்னியான ப்ராஹ்மணர்கள் ச்ராத்தத்தில் சதுர்த்தசி வித்தமான அமையை க்ரஹிக்கவும். ஸ்த்ரீ, சூத்ரர்கள், அநாஹிதாக்னிகளான ப்ராஹ்மணர்கள் இவர்களால் ப்ரதமையுடன் கூடிய அமை க்ரஹிக்கத் தகுந்தது. இவ்விதம் சாஸ்த்ரார்த்தமானது வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கும்பொழுது, மற்ற வெகு விதமான எல்லா வசனங்களும் முன் சொல்லப்பட்ட அமாவாஸ்யையின் பேதங்களில் ஏதாவது ஒன்றைப் பற்றியதாய் யோக்யதைக்குத் தகுந்தபடி சேர்க்கப்பட வேண்டும். அவ்விதமே அமாவாஸ்யை விஷயத்தில், போதாயனர் :- சொல்லுகிறார் - எந்த தினத்தில் மத்யாஹ்னத்திற்குப் பிறகு சதுர்த்தசீ இருக்கின்றதோ, அந்த அமை 'ஸிநீவாலீ' எனப்படுகிறது. அது ச்ராத்தத்தில் நிஷ்பலமாகும்.

बृहस्पतिरपि — मध्याह्नाद्या त्वमावास्या परस्तात् संप्रवर्तते। भूतविद्धा तु सा ज्ञेया न सा पञ्चदशी भवेत् इति । अत्र मध्याह्नादूर्ध्वमपराह्णमतिक्रम्य परस्तादमावास्या प्रवर्तत इति व्याख्येयम्। तदेतद्वचनद्वयमपरेद्युरेवापराह्णव्याप्तौ योजनीयम्।

ப்ருஹஸ்பதியும் :— எந்த அமாவாஸ்யை மத்யாஹ்னத்திற்குப் பிறகு வருகின்றதோ, அது 'பூதவித்தை' எனப்படுகிறது. அது அமையாகாது. இவ்விடத்தில் மத்யாஹ்னத்திற்குப் பிறகு அபராஹ்ணத்தை யதிக்ரமித்து எந்த அமாவாஸ்யை வருகிறதோ, அது என்று வ்யாக்யானம் செய்ய வேண்டும். இந்த இரண்டு வசனமும் மறு நாளில் மட்டில் அபராஹ்ண வ்யாப்தியுள்ள விஷயத்தில் சேர்க்கப்பட வேண்டும்.

यत्तु बोधायनवचनम् — घटिकैकाप्यमावास्या प्रतिपत्सु न चेत्तदा । भूतविद्धैव सा ग्राह्या दैवे पित्र्ये च कर्मणि इति । प्रतिपत्सु घटिकैकापि कर्मकालसम्बन्धिनी यदि न स्यादित्यर्थः । तदेतद्वचनं

पक्षे कन्यासंस्थे दिवाकरे। यो वै श्राद्धं नरः कुर्यादेकस्मिन्नपि वासरे। तस्य संवत्सरं यावत् तृप्तास्स्युः पितरो ध्रुवम् इति

கௌதமர்:— எல்லாத் திதியிலும் செய்யலாம், த்ரவ்யம் முதலியது கிடைத்தால். காலத்தை நியமம் செய்தது சக்தியை அனுஸரித்தது. நாகரகண்டத்திலும்:— ஆஷாட பூர்ணிமையிலிருந்து ஐந்தாவது பக்ஷத்தில் ஸூர்யன் கன்யாராசியில் இருக்கும் பொழுது, எந்த மனிதன் ஒரு தினத்திலாவது ச்ராத்தத்தைச் செய்வானோ, அவனது பித்ருக்கள் ஒரு வர்ஷம் முடியும் வரையில் த்ருப்தியை அடைந்தவர்களாக ஆகின்றனர்.

वसिष्ठः — ऊर्ध्वं चतुर्थ्याः पितृभ्यो दद्यात् इति। मनुरपि — कृष्णपक्षे दशम्यादौ वर्जयित्वा चतुर्दशीम्। श्राद्धे प्रशस्तास्तिथयो यथैता न तथेतराः इति। पक्षमहालये नैव चतुर्दश्यादिवर्ज्यम्। नभस्य कृष्णपक्षे तु श्राद्धं कुर्याद्दिने दिने। नैव नन्दादि वर्ज्यं स्यान्नैव वर्ज्या चतुर्दशी इति कार्ष्णाजिनि स्मरणात्।

வஸிஷ்டர்:— சதுர்த்திக்கு மேல் பித்ருக்களுக்குக் கொடுக்க வேண்டும். மனுவும்:— மஹாளய பக்ஷத்தில் தசமி முதல் ஒரு திதியில். சதுர்தசியைத் தள்ளி, இந்தத் திதிகள் ச்ராத்தத்தில் எப்படி ப்ரசஸ்தங்களோ, அப்படி மற்றத் திதிகள் அவ்விதம் ப்ரசஸ்தங்கள் அல்ல. மஹாளயபக்ஷம் முழுவதிலும் ச்ராத்தம் செய்யும் விஷயத்தில் சதுர்த்தசி முதலியதை வர்ஜிக்க வேண்டியதில்லை. ''மஹாளய பக்ஷத்தில் ப்ரதி தினமும் ச்ராத்தம் செய்ய வேண்டும். நந்தை முதலியது வர்ஜிக்கத் தகுந்ததல்ல. சதுர்த்தசியும் வர்ஜிக்கத் தகுந்ததல்ல'' என்று கார்ஷ்ணஜினி ஸ்ம்ருதி இருப்பதால். ஆகையாற்றான் சொல்லப்பட்டுள்ளது.

अत एव माधवीयेऽभिहितम् — प्रतिपत् प्रभृतिष्वेकां वर्जयित्वा चतुर्दशीम्। शस्त्रेण तु हता ये वै तेभ्यस्तत्र प्रदीयते इति

याज्ञवल्क्यवचनं पञ्चम्यादिपक्षविषयम्, अन्यथा कार्ष्णाजिनिवचनस्यानर्थकत्वं प्रसज्येत इति। तथा कालादर्शे — मुक्त्वाद्यपक्षन्नन्दादि वर्ज्यमाहुर्महर्षय इति। प्रतिपदादिदर्शान्तपक्ष आद्यः, तं मुक्त्वा अन्येषु पक्षेषु नन्दाशुक्रवारचतुर्दश्यादि वर्जनीय माहुरित्यर्थः।

மாதவீயத்தில்:— ''ப்ரதமை முதல், சதுர்த்தசி ஒன்றை வர்ஜித்து, ச்ராத்தம் செய்யவும். எவர்கள் ஆயுதத்தால் கொல்லப்பட்டனரோ, அவர்களுக்கு சதுர்த்தசியில் ச்ராத்தம் கொடுக்கப்படுகிறது'' என்ற யாஜ்ஞவல்க்யரின் வசனம் பஞ்சம்யாதி பக்ஷத்தைச் சேர்ந்தது. இல்லாவிடில், கார்ஷ்ணாஜினியின் வசனத்திற்குப் பயனில்லாத் தன்மை வரக்கூடும். அவ்விதம், காலாதர்சத்தில்:— ப்ரதமை முதல் அமை வரையில் என்ற பக்ஷத்தைத் தவிர்த்து மற்றப் பக்ஷங்களில் நந்தை முதலியதை வர்ஜிக்க வேண்டும் என்கின்றனர், மஹர்ஷிகள். ப்ரதமை முதல் அமை வரையில் என்பது முதல் பக்ஷம். அதைத் தவிர்த்து, மற்றப் பக்ஷங்களில் நந்தை, வெள்ளிக் கிழமை, சதுர்த்தசீ முதலியது வர்ஜிக்கத் தகுந்தது என்கின்றனர், என்பது பொருள்.

अपरपक्षे यदहस्संपद्येतामावास्यायां विशेषेण इति वचनाद्यदाऽमावास्यायां सकृन्महालयः क्रियते, यदा च पक्षमहालयादि क्रियते, तदा त्वमावास्या श्राद्धं पृथगेव कार्यम्, आब्दिकं प्रथमं कुर्यान्मासिकं तु ततः परम्। दर्शश्राद्धं तृतीयं स्याच्चतुर्थस्तु महालयः इत्येकस्मिन् दिने दर्शमहालयश्राद्धयोः पौर्वापर्यदैवताभेदाच्च। तच्च वक्ष्यते।

''மஹாளய பக்ஷத்தில் எந்தத் தினம் உசிதமாக உள்ளதோ அந்தத் தினத்திலாவது, அமையிலாவது அவச்யம் செய்ய வேண்டும்'' என்ற வசனத்தினால்,

எப்பொழுது அமாவாஸ்யையில் ஸக்ருன்மஹாளயம் செய்யப்படுகிறதோ, எப்பொழுது பக்ஷமஹாளயம் முதலியது செய்யப்படுகிறதோ, அப்பொழுது அமாவாஸ்யை ச்ராத்தமானது தனியாகவே செய்யப்பட வேண்டும். "ஆப்திகத்தை முதலில் செய்யவும். பிறகு மாஸிகத்தைச் செய்யவும். தர்சச்ராத்தம் மூன்றாவதாக ஆகும். மஹாளய ச்ராத்தம் நான்காவதாக ஆகும்", என்று ஒரே தினத்தில் செய்யப்படும் தர்ச மஹாளய ச்ராத்தங்களுக்கு முன் பின் தன்மை இருப்பதாலும் தேவதா பேதம் இருப்பதாலும். அது இனி சொல்லப்படும்.

चन्द्रिकायाम् — यदैकस्मिन्नहनि तदा पृथगेवामावास्याश्राद्धं कार्यम्। अमावास्याष्टकावृद्धिः कृष्णपक्षोऽयनद्वयम् इति पृथगुपादानात्। अतो यत् कैश्चिदुक्तममावास्याश्राद्धमापरपक्षिकेण श्राद्धेन विकल्प्येत इति तदपास्तम् इति। तदेवम्, कृत्स्नः पञ्चमः पक्षः, पञ्चम्यादिदर्शान्तः, अष्टम्यादिदर्शान्तः, दशम्यादिदर्शान्तः, पञ्चमीदर्शयोर्मध्ये अनिषिद्धमेकं वा दिनं महालयश्राद्धकालः। अत्राप्यसामर्थ्ये पञ्चमपक्षस्य पञ्चमीमारभ्यानन्तरपक्षपञ्चमी पर्यन्तासु तिथिष्वनिषिद्धायामेकस्यां तिथौ यथासम्भवं गृही कुर्यात्।

சந்த்ரிகையில்:— எப்பொழுது ஒரே நாளிலோ, அப்பொழுது தனியாகவே தர்ச ச்ராத்தம் செய்யப்பட வேண்டும், "அமாவாஸ்யை, அஷ்டகை, நாந்தீ, மஹாளய பக்ஷம், இரண்டு அயனங்கள்" என்று தனியாகச் சொல்லப்பட்டு இருப்பதால். ஆகையால் சிலரால் "தர்ச ச்ராத்தமானது மஹாளய பக்ஷ ச்ராத்தத்தினல் விகல்பிக்கப்படுகிறது" என்று சொல்லப்பட்டது எதுவோ, அது தள்ளப்பட்டது. ஆகையால், இவ்விதம் இருப்பதால் மஹாளய பக்ஷம் முழுவதும், அல்லது பஞ்சமி முதல் அமை முடியும் வரையில், அஷ்டமி முதல் அமை முடியும் வரையில், தசமி முதல் அமை முடியும் வரையில், அல்லது

பஞ்சமிக்கும் அமைக்கும் நடுவில் நிஷேதம் இல்லாத ஒரு தினமாவது மஹாளய ச்ராத்தத்துக்குக் காலமாம். இவைகளிலும் செய்ய முடியாவிடில் மஹாளய பக்ஷத்தின் பஞ்சமீ முதல் அடுத்த பக்ஷத்தின் பஞ்சமீ வரையில் உள்ள திதிகளுள் நிஷேதிக்கப்படாத ஒரு திதியில் எப்பொழுது செய்ய முடியுமோ, அப்பொழுது க்ருஹஸ்தன் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

तदाह यमः — हंसे वर्षासु कन्यास्थे शाकेनापि गृहे वसन्। पञ्चम्योरन्तरे दद्यादुभयोरपि पक्षयोः इति। अत्राप्यशक्त्या श्राद्धाकरणे यावत् कन्याराशौ सूर्यः तिष्ठति तावत्, श्राद्धं दद्यात्, तत्राप्यकरणे यावद्वृश्चिकदर्शनमिति । तदाह सुमन्तुः — कन्याराशौ महाराज यावत्तिष्ठेद्विभावसुः। तस्मात् कालात् भवेद्देयं वृश्चिकं यावदागतम्। येयं दीपावली राजन् ख्याता पञ्चदशी भुवि। तस्यां दद्यान्न चेद्दत्तं पितॄणां वै महालये इति।

அதைச் சொல்லுகிறார், யமன்:— ஸூர்யன் வர்ஷருதுவில் கன்யாராசியில் இருக்கும் பொழுது க்ருஹஸ்தன் இரண்டு பக்ஷங்களின் பஞ்சமிகளுக்கும் நடுவில் சாகத்தினுலாவது (கறிகாய்) ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இக்காலத்திலும் சக்தி இல்லாமையால் ச்ராத்தம் செய்ய முடியாவிடில், ஸூர்யன் கன்யா ராசியில் இருக்கும் வரையில் ஒரு நாளில் ச்ராத்தத்தைச் செய்யவும். அக்காலத்திலும் செய்ய முடியாவிடில், வ்ருச்சிக மாஸம் வரையில் (செய்ய வேண்டும்). அதைச் சொல்லுகிறார், ஸுமந்து:— ஓ மஹாராஜனே! ஸூர்யன் எது வரையில் கன்யா ராசியில் இருக்கின்றானோ, அக்காலத்தில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும், வ்ருச்சிக மாஸம் வருவதற்குள், ஓ அரசனே! தீபாவளீ என்ற எந்த அமை உலகில் ப்ரஸித்தமாய் உள்ளதோ, அதில் பித்ருக்களுக்கு ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், மஹாளய பக்ஷத்தில் செய்யாவிடில்.

पुराणेऽपि — प्रेतपक्षं प्रतीक्षन्ते गुरुवांछासमन्विताः। प्रेतपक्षे व्यतिक्रान्ते यावत् कन्यागतो रविः। ततस्तुलागतेऽप्येते सूर्ये वांछन्ति पार्थिव। तस्मिन्नपि व्यतिक्रान्ते काले वृश्चिकगे रवौ। निराशाः पितरो दीनास्ततो यान्ति निजालयम् इति। माधवीये — कन्यागते सवितरि पितरो यान्ति वै सुतान्। शून्या प्रेतपुरी सर्वा यावद्वृश्चिकदर्शनम्॥ ततो वृश्चिकसम्प्राप्तौ निराशाः पितरो गताः। पुनः स्वभवनं यान्ति शापं दत्वा सुदारुणम् इति।

புராணத்திலும்:— பித்ருக்கள் அதிக ஆசை உடையவர்களாய் மஹாளய பக்ஷத்தை எதிர்பார்க்கின்றனர். மஹாளயபக்ஷம் தாண்டிய பிறகு ஸூர்யன் கன்யாராசியில் இருக்கும் வரையில் எதிர் பார்க்கின்றனர். பிறகு ஸூர்யன் துலா ராசியில் இருக்கும் வரையில் எதிர் பார்க்கின்றனர். ஓ அரசனே! அந்தக் காலமும் தாண்டிய பிறகு ஸூர்யன் வ்ருச்சிக ராசியை அடைந்தவுடன் அவர்கள் ஆசையற்றவர்களாய், தீனர்களாய், தங்கள் உலகத்தை அடைகின்றனர். மாதவீயத்தில்:— ஸூர்யன் கன்யா ராசியில் இருக்கும் பொழுது பித்ருக்கள் புத்ரர்களை அடைகின்றனர். யமனுடைய பட்டணம் முழுவதும் வ்ருச்சிக மாஸம் வரும் வரையில் சூன்யமாய் இருக்கின்றது. பிறகு வ்ருச்சிக மாஸம் வந்த பொழுது (ச்ராத்தம் செய்யப்படாவிடில்) அவர்கள் ஆசையற்றவர்களாய்ப் பயங்கரமான சாபத்தைக் கொடுத்து விட்டுத் தமது உலகத்தை அடைகின்றனர்.

कार्ष्णाजिनिः — प्रेस्तर्क्षस्थे दिनकरे प्रेतराजस्य शासनात्। तावत् प्रेतपुरी शून्या यावद्वृश्चिकदर्शनम्। वृश्चिके समनुप्राप्ते पितरो दैवतैस्सह। निश्वस्य प्रतिगच्छन्ति शापं दत्वा सुदारुणम् इति। गार्ग्यः — सूर्ये कन्यागते श्राद्धं यो न कुर्यात् गृहाश्रमी। धनं पुत्राः कुतस्तस्य पितृनिश्वासपीडनादिति।

**கார்ஷ்ணாஜினி:—** ஸூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் இருக்கும் பொழுது தர்மராஜன் ஆஜ்ஞையினால் வ்ருச்சிக மாஸம் வரும் வரையில் யமபட்டணம் சூன்யமாக ஆகிறது. வ்ருச்சிக மாஸம் வந்த பொழுது பித்ருக்கள் தேவதைகளுடன் பெருமூச்செறிந்து கோரமான சாபத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பிச் செல்கின்றனர். **கார்க்யர்:—** எந்த க்ருஹஸ்தன் ஸூர்யன் கன்யா ராசியில் இருக்கும் பொழுது ச்ராத்தம் செய்வது இல்லையோ, அவனுக்குத் தனம், புத்ரர்கள் இவை எவ்விதம் உண்டாகும் ? பித்ருக்களின் பெருமூச்சினால் பீடிக்கப்படுவதால்.

आदित्यपुराणेऽपि —प्रावृष्यृतौ यमः प्रेतान् पितॄंश्चाथ यमालयात्। विसर्जयित्वा मानुष्ये कृत्वा शून्यं स्वकं पुरम्। क्षुधार्ताः संस्मरन्तश्च दुष्कृतं तु स्वयं कृतम्। काङ्क्षन्तः पुत्रपौत्रेभ्यः पायसं मधुसंयुतम्। तस्मात्तांस्तत्र विधिना तर्पयेत् पायसेन तु। मध्वाज्यतिलमिश्रेण तथा शीतेन चांभसा। ग्रासमात्रं परगृहादन्नं यः प्राप्नुयान्नरः । भैक्षमात्रेण यः प्राणान् सन्धारयति वा स्वयम्। यो वा संवर्द्धयेद्देहं प्रत्यहं स्वात्मविक्रयात्। श्राद्धं तेनापि कर्तव्यं तैस्तैर्द्रव्यैः सुसञ्चितैः इति । यमालयाद्विसर्जयित्वा स्वकं पुरं शून्यं कृत्वा मनुष्यलोके पितॄन् वासयतीत्यध्याहृत्य योजना, पायसं काङ्क्षन्तः पितरस्तिष्ठन्तीत्यध्याहारः।

**ஆதித்யபுராணத்திலும்:—** வர்ஷ ருதுவில் யமன் ப்ரேதர்களையும் பித்ருக்களையும் யமக்ருஹத்தினின்றும் வெளியேற்றி தனது பட்டணத்தைச் சூன்யமாகச் செய்து மனுஷ்யலோகத்தில் வசிக்கும் படி செய்கிறான். அந்தப் பித்ருக்கள் பசியினால் வருந்தியவர்களாய், தங்களால் செய்யப்பட்ட பாபத்தை நினைத்தவர்களாய், புத்ரர்கள் பௌத்ரர்கள் இவர்கள் இடமிருந்து தேனுடன் கூடிய பாயஸத்தை விரும்பியவர்களாய் இருக்கின்றனர்.

ஆகையால் அந்தக் காலத்தில், விதியுடன் பாயஸான்னத்தால் த்ருப்தி செய்விக்க வேண்டும். தேன், நெய், எள் இவைகளுடன் கூடியதாகிய பாயஸான்னத்தாலும், குளிர்ந்த ஜலத்தாலும் (த்ருப்தி செய்விக்க) வேண்டும். எந்த மனிதன் பிறனின் க்ருஹத்தினின்றும் ஒரு கபளம் அன்னத்தை அடைவானோ, எவன் பிக்ஷான்னத்தினாலேயே ப்ராணன்களைத் தரிக்கின்றானோ, எவன் ப்ரதி தினம் தன் தேஹத்தை விற்றுத் தேஹத்தை வளர்க்கின்றானோ, அவர்களாலும் ப்ரயத்தனத்துடன் சேர்த்து வைக்கப்பட்ட அந்தந்த வஸ்துக்களைக் கொண்டு ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்.

विशेषमाह कालादर्शकारः — अस्मिन् या भरणी सा तु महाभरणिरुच्यते। त्रयोदशी गजच्छाया गया मध्याष्टमीति च। आसु श्राद्धं गयाश्राद्धसममाहुर्महर्षयः इति। अस्मिन् - महालयपक्ष इत्यर्थः। तथा च मत्स्यपुराणे — भरणी पितृपक्षे तु महती परिकीर्तिता। अस्यां श्राद्धं कृतं येन स गयाश्राद्धकृद्भवेत् इति। ब्रह्माण्डपुराणे — आषाढ्याः पञ्चमे पक्षे गया मध्याष्टमी स्मृता। त्रयोदशी गजच्छाया गयातुल्या तु पैतृके इति।

விசேஷத்தைச் சொல்லுகிறார், காலாதர்சகாரர்:— மஹாளயபக்ஷத்தில் எந்தப் பரணி நக்ஷத்ரமோ அது மஹாபரணி எனப்படுகிறது. த்ரயோதசியானது கஜச்சாயா எனப்படுகிறது. மத்யாஷ்டமியனது கயா எனப்படுகிறது. இவைகளில் செய்யப்படும் ச்ராத்தத்தைக் கயா ச்ராத்தத்துக்கு ஸமமாகச் சொல்லுகின்றனர், மஹர்ஷிகள். அவ்விதமே, மத்ஸ்ய புராணத்தில்:— மஹாளய பக்ஷத்தில் உள்ள பரணியானது மஹாபரணீ எனப்படுகிறது. இதில் எவன் ச்ராத்தம் செய்கின்றானோ அவன் கயா ச்ராத்தம் செய்தவன் ஆவான். ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— ஆஷாட பூர்ணிமையினின்றும் ஐந்தாவது பக்ஷத்தில் அஷ்டமியானது கயா எனப்படுகிறது. த்ரயோதசியானது

கஜச்சாயா எனப்படுகிறது. இது ச்ராத்த விஷயத்தில் கயைக்கு ஸமானமாகும்.

हेमाद्रौ — अमापाते भरण्यां च द्वादश्यां पक्षमध्यगे। तथा तिथिं च नक्षत्रं वारं च न विशोधयेत् इति। तत्र वर्ज्यानाह गार्ग्यः — नन्दायां भार्गवदिने त्रयोदश्यां त्रिजन्मनि । एषु श्राद्धं न कुर्वीत गृही पुत्रधनक्षयात् इति। त्रयाणां जन्मनि श्राद्धकर्तुस्तत्पत्न्याः ज्येष्ठपुत्रस्य च जन्मनक्षत्रे न कुर्यादिति कैश्चिद्व्याख्यातम्। तथा स्मृत्यन्तरे — कर्तुश्च पुत्रदाराणां जन्मर्क्षाणि च वर्जयेत्। विपदि प्रत्यरे चैव वधे चन्द्राष्टमे तथा। वैनाशिके तदंशे च श्राद्धकर्म प्रशस्यते इति।

**ஹேமாத்ரியில்:—** அமை, வ்யதீபாதம், பரணீ, த்வாதசீ, அஷ்டமீ இவைகளில் (ச்ராத்தம் செய்வதானல் அப்பொழுது) திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளைப் பற்றிச் சோதிக்கக் கூடாது. (நிஷித்த திதி வார நக்ஷத்ரங்களிலும் செய்யலாம்.) அந்தப் பக்ஷத்தில் வர்ஜிக்கத் தகுந்தவைகளைச் சொல்லுகிறார், **கார்க்யர்:—** நந்தை, வெள்ளிக்கிழமை, த்ரயோதசீ, த்ரிஜன்ம நக்ஷத்ரங்கள், இவைகளில் க்ருஹஸ்தன் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது, புத்ரர்களும் தனமும் குறையும். மூவர்களின் ஜன்ம நக்ஷத்ரத்தில், அதாவது ச்ராத்தம் செய்பவன், அவனது பத்னீ, அவனது மூத்த புத்ரன் இவர்களின் ஜன்மநக்ஷத்ரத்தில் செய்யக் கூடாது என்று சிலரால் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. அவ்விதம், **மற்ருேர் ஸ்ம்ருதியில்:—** ச்ராத்த கர்த்தா, அவனது புத்ரன், அவனது பத்னீ இவர்களின் ஜன்ம நக்ஷத்ரங்களையும் வர்ஜிக்க வேண்டும். விபத் (மூன்ருவது), ப்ரத்யரம் (ஐந்தாவது), வதம் (ஏழாவது), சந்த்ராஷ்டமம் இவைகளிலும் வைநாசிகம் (இருபத்தேழாவது) அதனது அம்சத்திலும் ச்ராத்தம் செய்வது ப்ரசஸ்தம் ஆகும்.

सङ्ग्रहेऽपि — वर्ज्यं पौष्णमथाङ्गनातनययोर्जन्मत्रयं चात्मनः इति। वृद्धगार्ग्योऽपि — प्राजापत्ये च पौष्णे च पित्र्यर्क्षे भार्गवे तथा।

यस्तु श्राद्धं प्रकुर्वीत तस्य पुत्रो विनश्यति इति। प्राजापत्यं - रोहिणी, पौष्णं - रेवती, पित्र्यर्क्षम् - मघानक्षत्रम्। यत्तु बृहन्मनुवचनम् — रेवत्यादिषु ऋक्षेषु स्वात्यन्तेषु यदा शशी। अर्के नभस्यकन्यास्थे श्राद्धकर्म प्रकीर्तितम् इति, तद्विशेषवचनेन बाधितत्वाद्रेवतीरोहिणीमघाव्यतिरिक्त विषयम्। कालादर्शे — न नन्दासु भृगोर्वारे रोहिण्यां च त्रिजन्मसु। रेवत्यां च मघायां च कुर्यादापरपक्षिकम् इति।

ஸங்க்ரஹத்திலும்:— ரேவதீ நக்ஷத்ரம், தனது பத்னீ, புத்ரன் இவர்களின் ஜன்ம நக்ஷத்ரம், தனது ஜன்ம நக்ஷத்ரம் இவைகள் வர்ஜ்யங்களாகும். வ்ருத்த கார்க்யரும்:— ப்ராஜாபத்யம் (ரோஹிணீ), ரேவதீ, மகம், வெள்ளிக்கிழமை இவைகளில் எவன் ச்ராத்தம் செய்வானோ அவனது புத்ரன் நசிப்பான். ஆனால், ப்ருஹந்மனு:— ரேவதீ முதல் ஸ்வாதீ வரையில் உள்ள நக்ஷத்ரங்களில் சந்த்ரன் இருக்கும் பொழுது, ஸூர்யன் பாத்ரபத மாஸத்தில் கன்யாராசியில் இருக்கும் பொழுது ச்ராத்தம் விதிக்கப்பட்டுள்ளது, என்று சொல்லி இருக்கின்றாரே எனில், அந்த வசனம் விசேஷ வசனத்தால் பாதிக்கப்பட்டு இருப்பதால் ரேவதீ, ரோஹிணீ, மகம் இவைகளைத் தவிர்த்த நக்ஷத்ரங்களைப் பற்றியது, காலாதர்சத்தில்:— நந்தைகள், வெள்ளிக்கிழமை, ரோஹிணீ, த்ரிஜன்ம நக்ஷத்ரங்கள், ரேவதீ, மகம் இந்த நக்ஷத்ரங்களில் மஹாளய ச்ராத்தத்தைச் செய்யக்கூடாது.

स्मृत्यन्तरे — अपुत्रोऽनग्निकश्चैव विधवाब्रह्मचारिणः। दर्शे महालयं कुर्युः पुत्रवान् वर्जयेद्गृही इति। गार्ग्यः — मघासु कुर्वतः श्राद्धं ज्येष्ठपुत्रो विनश्यति इति। कार्ष्णाजिनिस्तु — ऋते नैमित्तिकं श्राद्धं काम्यं यत्तु मघादिने। कुर्यात्तज्ज्येष्ठपुत्रस्य नाशस्स्यादिति निश्चितम् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— புத்ரனில்லாதவன், அக்னியில்லாதவன் (விதுரன்), விதவை, ப்ரம்ஹசாரீ இவர்கள் அமையில் மஹாளயத்தைச் செய்ய வேண்டும். புத்ரனுள்ள க்ருஹஸ்தன் செய்யக் கூடாது. கார்க்யர்:— மகா நக்ஷத்ரத்தில் மஹாளயம் செய்பவனின் ஜ்யேஷ்ட புத்ரன் நசிப்பான். கார்ஷ்ணாஜினியோவெனில், ''நைமித்திக ச்ராத்தம் தவிர்த்து காம்ய ச்ராத்தம் எதுவோ, அதை மகாநக்ஷத்ரத்தில் செய்வானாகில் அவனது ஜ்யேஷ்ட புத்ரனுக்கு நிச்சயமாக நாசம் உண்டாகும், என்றார்.

अङ्गिरा अपि — त्रयोदश्यां कृष्णपक्षे यः श्राद्धं कुरुते नरः । पञ्चत्वं तस्य जानीयाज्ज्येष्ठपुत्रस्य निश्चितम् इति । अत्र त्रयोदश्यां निषेधः केवलपितृवर्गश्राद्धविषयः ।

அங்கிரஸ்ஸும்:— மஹாளய பக்ஷத்தில் த்ரயோதசியில் எவன் ச்ராத்தம் செய்கின்றானோ; அவனது ஜ்யேஷ்ட புத்ரனுக்கு நாசம் நிச்சயமாய் உண்டாகும், என்று அறியவும். இவ்வசனத்தில் த்ரயோதசியில் ச்ராத்த நிஷேதம் என்பது பித்ருவர்க்கத்துக்கு மட்டில் செய்யப்படும் ச்ராத்தத்தைப் பற்றியது. அவ்விதமே,

तथा च कार्ष्णाजिनिः — श्राद्धं तु नैकवर्गस्य त्रयोदश्यामुपक्रमेत् । अतृप्तास्तत्र ये च स्युः प्रजां हिंसन्ति तेऽग्रजमिति । स्मृत्यन्तरेऽपि— इच्छेत्त्रयोदशी श्राद्धं पुत्रवान् यः सुतायुषोः । एकस्यैवतु नो दद्यात् पार्वणं स समाचरेत् इति । यः पुत्रवान् सुतायुषोरभिवृद्धिमिच्छेत्, सः एकस्य - एकवर्गस्य श्राद्धं नो दद्यात्, अपि तु मातामहवर्गोद्देशेनापि पार्वणं समाचरेदित्यर्थः ।

கார்ஷ்ணாஜினி:— த்ரயோதசியில் ஒரு வர்க்கத்துக்கு மட்டில் ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. அந்த ச்ராத்தத்தில் த்ருப்தி அடையாத பித்ருக்கள் எவர்களோ (மாதாமஹாதிகள்), அவர்கள் கர்த்தாவின் முதல் புத்ரனை ஹிம்ஸிக்கின்றனர்.

**மற்றோர் ஸ்ம்ருதியிலும்:—** புத்ரனுள்ள எவன் பிள்ளைக்கும் தனக்கும் ஆயுஸ்ஸை விரும்புகிறானோ, அவன் த்ரயோதசீ ச்ராத்தத்தை ஒரு வர்க்கத்துக்கு மட்டில் செய்யக் கூடாது. மாதாமஹ வர்க்கத்துக்கும் செய்ய வேண்டும், என்று. புத்ரவானாகிய எவன் புத்ரனுக்கும் தனக்கும் வ்ருத்தியை இச்சிப்பானோ, அவன் ஒரு வர்க்கத்துக்கு ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. ஆனால், மாதாமஹ வர்க்கத்தையும் உத்தேசித்துப் பார்வணத்தைச் செய்ய வேண்டும், என்பது பொருள்.

अत्राक्षिप्य समाहितं माधवीये— ननु केवलपितृवर्गोद्देशेन श्राद्धप्राप्तौ सत्यां तन्निषेधो युक्तः, पितरो यत्र पूज्यन्ते तत्र मातामहा अपि इति धौम्यवचनेन केवलैकपितृवर्गोद्देशेन श्राद्धनिषेधात् प्राप्तिरेव नास्ति, अतो नैवं व्यवस्था युक्ता। मैवं, सत्यामपि धौम्यस्मृतौ व्यामोहादिना प्राप्तस्यैकवर्गश्राद्धस्य निषेधात्, यथा रागप्राप्तस्य कलञ्जभक्षणस्य न कलञ्जं भक्षयेत् इति निषेधः इति । तस्मादेकवर्गोद्देशेन मघात्रयोदश्यां श्राद्धनिषेधः । न तु श्राद्धस्यैव। तत्र श्राद्धस्य प्रशस्तत्वात्।

இவ்விஷயத்தில் ஆக்ஷேபம் செய்து ஸமாதானம் சொல்லப்பட்டுள்ளது மாதவீயத்தில்:— ஓய் ! பித்ரு வர்க்கத்தை மட்டில் உத்தேசித்து ச்ராத்தம் ப்ராப்தமாகில் அதை நிஷேதிப்பது யுக்தமாகும். ''பித்ருக்கள் எந்த ச்ராத்தத்தில் பூஜிக்கப்படுகின்றனரோ அந்த ச்ராத்தத்தில் மாதாமஹர்களும் பூஜிக்கப்படவேண்டும்'' என்று தௌம்ய வசனத்தால் பித்ருவர்க்கம் ஒன்றை மட்டில் உத்தேசித்து ச்ராத்தம் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால் ப்ராப்தியே இல்லை. ஆகையால் இவ்விதம் வ்யவஸ்தை யுக்தமல்ல எனில், இவ்விதம் சொல்லக் கூடாது. தௌம்ய ஸ்ம்ருதி இருந்தாலும், வ்யாமோஹம் (மறதி) முதலியதால் ஏற்படும் ஒரு வர்க்கத்தை உத்தேசித்த ச்ராத்தத்தை நிஷேதிப்பதால். எவ்விதம் ஆசையால் ப்ராப்தமான

கலஞ்சத்தைப் புஜிப்பதற்கு "கலஞ்சத்தைப் பக்ஷிக்கக் கூடாது" என்ற நிஷேதமோ. ஆகையால் ஒரு வர்க்கத்தை மட்டில் உத்தேசித்து மகா நக்ஷத்ரத்துடன் கூடிய த்ரயோதசியில் ச்ராத்தத்துக்கு நிஷேதம். ச்ராத்தத்துக்கே நிஷேதம் என்பது இல்லை. அதில் ச்ராத்தம் ப்ரசம்ஸிக்கப்படுவதால்.

मघायुक्तत्रयोदश्यामेकवर्गोद्देशेन श्राद्धं न कर्तव्यं वर्गद्वयोद्देशेन तु श्राद्धं तत्र प्रशस्तं वर्गद्वयोद्देशेनापि केवलत्रयोदश्यां केवलमघायां वा श्राद्धं न कर्तव्यमिति चन्द्रिकामाधवीयादौ निर्णीतम्, कालादर्श-पितृमेधसारयोस्तु केवलत्रयोदश्यामपि वर्गद्वयोद्देशेन श्राद्धं प्रशस्त मित्युक्तम्।

மகா நக்ஷத்ரத்துடன் கூடிய த்ரயோதசியில் ஒரு வர்க்கத்தை மட்டில் உத்தேசித்து ச்ராத்தம் செய்யக் கூடாது. இரண்டு வர்க்கத்தையும் உத்தேசித்து ச்ராத்தம் செய்வது அதில் ச்லாக்யமானது. இரண்டு வர்க்கங்களையும் உத்தேசித்தும் தனியான த்ரயோதசியிலும், தனியான மகாநக்ஷத்ரத்திலும் ச்ராத்தம் செய்யக்கூடாது, என்று சந்த்ரிகா, மாதவீயம் முதலியதில் நிர்ணயிக்கப்பட்டு உள்ளது. காலாதர்சம், பித்ருமேதஸாரம் இவைகளோ வெனில் தனியான த்ரயோதசியிலும் இரண்டு வர்க்கங்களையும் உத்தேசித்து ச்ராத்தம் ச்லாக்யம் என்று சொல்லப்பட்டுள்ளது.

तथा च वृद्धगार्ग्यः — नभस्यापरपक्षे या तिथिस्स्यात्तु त्रयोदशी। गजच्छायेति सा प्रोक्ता पितॄणां तृप्तिकारिणी इति। महाभारतेऽपि — ज्ञातीनां तु भवेत् श्रेष्ठः कुर्वन् श्राद्धं त्रयोदशीम्। नावश्यं तु युवानोऽस्य प्रमीयन्ते नरा गृहे इति। शङ्खः — प्रौष्ठपद्यामतीतायां मघायुक्तां त्रयोदशीम्। प्राप्य श्राद्धं तु कर्तव्यं मधुना पायसेन च। प्रजामिष्टां यशस्स्वर्गमारोग्यं च धनं तथा। नृणां श्राद्धे सदा प्रीताः प्रयच्छन्ति पितामहाः इति॥

அவ்விதமே, வ்ருத்த கார்க்யர்:— பாத்ரபத மாஸத்தின் க்ருஷ்ண பக்ஷத்தில் த்ரயோதசீ திதி எதுவோ அது கஜச்சாயா எனப்பட்டது. பித்ருக்களுக்கு த்ருப்தியைச் செய்யக் கூடியது. மஹாபாரதத்திலும்:— த்ரயோதசீ திதியில் ச்ராத்தம் செய்பவன் பந்துக்களுள் சிறந்தவனாவான். இவனுடைய க்ருஹத்தில் யௌவனம் உள்ள மனிதர்கள் மரிக்கவே மாட்டார்கள். சங்கர்:— பாத்ரபத பூர்ணிமை சென்ற பிறகு மகாநக்ஷத்ரத்துடன் கூடிய த்ரயோதசியில் தேன், பாயஸம் இவைகளுடன் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இஷ்டமான ப்ரஜை, கீர்த்தி, ஸ்வர்க்கம், ஆரோக்யம், தனம் இவைகளை ச்ராத்தத்தில் த்ருப்தி அடைந்த பித்ருக்கள் மனிதர்களுக்குக் கொடுக்கின்றனர்.

याज्ञवल्क्योऽपि — यद्ददाति गयास्थश्च सर्वमानन्त्यमश्नुते। तथा वर्षात्रयोदश्यां मघासु च विशेषतः इति। अत्र विज्ञानेश्वरः — तथा वर्षात्रयोदश्यां - भाद्रपदकृष्णपक्षत्रयोदश्यां विशेषतो मघायुक्तायां यत्किञ्चिद्दीयते तत् सर्वमानन्त्यमश्नुत इति गतेन संबन्धः इति। मनुरपि — अपि नः स कुले भूयाद्यो नो दद्यात् त्रयोदशीम्। पायसं मधुसर्पिर्भ्यां छायायां कुञ्जरस्य च इति।

யாஜ்ஞவல்க்யரும்:— கயையிலிருந்து எந்த ச்ராத்தத்தைக் கொடுக்கின்றானோ, அது எல்லாம் அழிவற்ற பலனுள்ளதாக ஆகிறது. அவ்விதம் மஹாளயபக்ஷ த்ரயோதசி, மகாநக்ஷத்ரம் இவைகளில் கொடுக்கப் பட்டதும் அக்ஷயமாக ஆகிறது. இவ்விஷயத்தில், விஜ்ஞானேச்வரர்:— அப்படியே 'வர்ஷாத்ரயோதச்யாம்' = பாத்ரபத க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசியில், விசேஷமாய் மகா நக்ஷத்ரத்துடன் கூடியதில் ஸ்வல்பமாகவாவது எது கொடுக்கப்படுகிறதோ, அதெல்லாம் முடிவில்லாத் தன்மையை அடைகிறது என்று முன் சொல்லியதோடு

ஸம்பந்தம், என்று. மனுவும்:— "த்ரயோதசியிலும், கஜச்சாயையிலும் எவன் நமக்குத் தேன், நெய் இவைகளுடன் பாயஸத்தைக் கொடுப்பானோ, அவன் நமது குலத்தில் பிறப்பானோ" என்று.

स्मृत्यन्तरे — यदेन्दुः पितृदेवत्ये हंसश्चैव करे स्थितः। याम्या तिथिर्भवेत् सा हि गजच्छाया प्रकीर्तिता इति। पितृदेवत्यं - मघा, हंसः - सूर्यः, करः - हस्तनक्षत्रम्, याम्या - त्रयोदशी। चन्द्रिकायामपि — हंसे हस्तस्थिते या तु मघायुक्ता त्रयोदशी। तिथिर्वैवस्वती नाम सा छाया कुञ्जरस्य तु इति। तत्रैव — त्रयोदशी भाद्रपदी कृष्णा मुख्या पितृप्रिया। तृप्यन्ति पितरस्तस्यां स्वदन्ते च शतं समाः। मघायुतायां तस्यां तु जलाद्यैरपि तोषिताः। कृष्णायां पितरस्तद्वद्वर्षाणामयुतायुतम् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— எப்பொழுது சந்த்ரன் மகாநக்ஷத்ரத்தில் இருக்கின்றானோ, ஸூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் இருக்கின்றானோ, அப்பொழுது உள்ள த்ரயோதசி திதியானது கஜச்சாயா என்று சொல்லப்பட்டதாகும். சந்த்ரிகையிலும்:— ஸூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் இருக்கும் பொழுது, மகா நக்ஷத்ரத்துடன் கூடிய ஏகாதசீ எதுவோ அது வைவஸ்வதீ என்றும், கஜச்சாயா என்றும் சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையிலேயே:— பாத்ரபத க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசியானது பித்ருக்களுக்கு ப்ரியமானது. அதில் பித்ருக்கள் த்ருப்தி அடைகின்றனர். நூறு (அநேக) வர்ஷங்கள் த்ருப்தி உள்ளவர்களாக இருக்கின்றனர். மகாநக்ஷத்ரத்துடன் கூடிய அந்த க்ருஷ்ண த்ரயோதசியில் ஜலம் முதலியவைகளால் த்ருப்தி செய்யப்பட்டாலும் பத்துக் கோடி வர்ஷங்கள் த்ருப்தி அடைகின்றனர்.

हेमाद्रौ — अविभक्ता विभक्ता वा कुर्युः श्राद्धं पृथक् सुताः। मघायुक्तत्रयोदश्यां विभक्ता एव चान्यदा इति। अत्र मघात्रयोदश्यां

श्राद्धे पिण्डनिर्वापणं न कुर्यात्, तस्या युगादित्वेन पिण्डदाननिषेधात्। तथा च पुलस्त्यः —— अयनद्वितये श्राद्धं विषुवद्वितये तथा। युगादिषु च सर्वासु पिण्डनिर्वापणादृते इति । कर्तव्यमित्यध्याहारः । मघान्वितत्वेनापि पिण्डनिर्वापणं नास्ति।

ஹேமாத்ரியில்:— புத்ரர்கள் விபக்தர்களாயினும், அவிபக்தர்களாயினும் மகாநக்ஷத்ரத்துடன் கூடிய த்ரயோதசியில் தனியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். மற்றக் காலங்களில் விபக்தர்களே தனியாய் ச்ராத்தம் செய்ய வேண்டும். இந்த மகாத்ரயோதசியில் ச்ராத்தத்தில் பிண்டதானம் செய்யக் கூடாது. அது யுகாதியாகியதால், பிண்டதானம் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால். அவ்விதமே, புலஸ்த்யர்:— "இரண்டு அயனங்கள், இரண்டு விஷுவங்கள், எல்லா யுகாதிகள் இவைகளில் செய்யப்படும் ச்ராத்தம் பிண்டதானம் இல்லாமல் செய்யப்பட வேண்டும்" என்று. மகாநக்ஷத்ரத்துடன் சேர்ந்து இருப்பதாலும் பிண்டதானம் இல்லை.

तथा चादित्यपुराणे —— सङ्क्रान्तावुपवासेन पारणेन च भारत। मघायां पिण्डदानेन ज्येष्ठः पुत्रो विनश्यति इति। स्मृतिरत्ने —— अत्र मघात्रयोदश्यां त्रयोदशी निबन्धन एकवर्ग श्राद्धनिषेधः मघानिबन्धनः पिण्डदाननिषेधश्च द्रष्टव्यः इति।

ஆதித்யபுராணத்தில்:— ஓ பாரத! ஸங்க்ரமணத்தன்று உபவாஸத்தாலும், பாரணத்தாலும், மகாத்ரயோதசியில் பிண்டதானத்தாலும் ஜ்யேஷ்ட புத்ரன் நசிப்பான். ஸ்ம்ருதிரத்னத்தில்:— இந்த மகாத்ரயோதசியில் த்ரயோதசியைப் பற்றியது ஒரு வர்க்கத்துக்குச் செய்யப்படும் ச்ராத்தத்தின் நிஷேதம். பிண்டதான நிஷேதமானது மகாநக்ஷத்ரத்தைப் பற்றியது, என்று அறியவும்.

एतन्मघात्रयोदशीश्राद्धं मलमासेऽपि कर्तव्यम्, महालयश्राद्धं तु मलमासे न कर्तव्यमिति प्रतिपादितमधस्तात् । चतुर्दश्यां महालयनिषेधोऽप्यशस्त्रहतविषयः, अपमृत्युहतानां तु चतुर्दश्यामेव महालयश्राद्धमेकोद्दिष्टं कार्यम्। यदाह सुमन्तुः — समत्वमागतस्यापि पितुः शस्त्रहतस्य तु। एकोद्दिष्टं सुतैः कार्यं चतुर्दश्यां महालये इति। समत्वमागतस्य - सपिण्डीकृतस्य । उभयतो नियमोऽत्राभिप्रेतः, शस्त्रादिहतस्यैव चतुर्दश्याम्, चतुर्दश्यामेव शस्त्रादिहतस्येति च । महालयग्रहणात् महालयविषये एवायं नियमः। अतः शस्त्रहतस्य मृताहादौ यथातिथि पार्वणमेव कार्यम् । शस्त्रहतस्येति दुर्मरणोपलक्षणम् - विषशस्त्रश्वापदादि तिर्यग्ब्राह्मणघातिनाम्। चतुर्दश्यां क्रिया कार्या ह्यन्येषां तु विगर्हिता इति मरीचिस्मरणात्।

இந்த மகாத்ரயோதசீச்ராத்தம் மலமாஸத்திலும் செய்யத் தகுந்தது. மஹாளய ச்ராத்தமோ வெனில் மலமாஸத்தில் செய்யக் கூடாது, என்று கீழே சொல்லப்பட்டது. சதுர்த்தசியில் மஹாளயத்துக்கு நிஷேதம் ஆயுதத்தால் கொல்லப்படாதவரைப் பற்றியது. அபம்ருத்யுவினுல் கொல்லப்பட்டவர்க்கு சதுர்த்தசியிலேயே மஹாளய ச்ராத்தம், ஏகோத்திஷ்ட விதானத்தால் செய்யப்பட வேண்டும். அதைச் சொல்லுகிறூர், ஸுமந்து:— "ஸபிண்டீகரணம் செய்யப்பட்டவனுயினும் ஆயுதத்தால் கொல்லப்பட்ட பிதாவுக்குப் புத்ரர்கள் மஹாளயபக்ஷத்தில் சதுர்த்தசியில் ஏகோத்திஷ்டமாய் ச்ராத்தம் செய்ய வேண்டும்." என்று, இவ்விஷயத்தில், இரண்டிலும் நியமம் இஷ்டமாகியது. ஆயுதம் முதலியதால் கொல்லப்பட்டவனுக்கே சதுர்த்தசியில் செய்யப்பட வேண்டும். "மஹாளய" என்று சொல்லியதால் மஹாளய ச்ராத்த விஷயத்தில் தான் இந்த நியமம். ஆகையால், ஆயுதத்தால் கொல்லப்பட்டவனுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தம் முதலியதில் திதிப்படியே பார்வண ச்ராத்தமே செய்யப்பட

வேண்டும். 'சஸ்த்ரஹதஸ்ய' என்றது துர்மரணத்தையும் சொல்லும், 'விஷம், ஆயுதம், துஷ்டப்ராணி முதலியவை, பறவைகள், ப்ராம்ஹணன் இவர்களால் கொல்லப்பட்டவர்களுக்கு சதுர்த்தசியில் (மஹாளய) ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். மற்றவர்க்குச் செய்யக் கூடாது' என்று மரீசியின் ஸ்ம்ருதி இருப்பதால்.

यत्तु गर्गवचनम् — चतुर्दश्यां तु यत् श्राद्धं सपिण्डीकरणात्परम्। एकोद्दिष्टविधानेन तत् कार्यं शस्त्रघातिने इति । अस्यार्थश्चन्द्रिकायामुक्तः - शस्त्रघातिने यदापरपक्षिकश्राद्धं चतुर्दश्यां क्रियते, तदैवैकोद्दिष्टविधानेन, नान्यदेत्यर्थः इति। अत एव सुमन्तुः — एकपिण्डीकृतानां तु पृथक्त्वं नोपपद्यते। सपिण्डीकरणा दूर्ध्वं मृते कृष्णचतुर्दशीम् इति। एतच्च सदैवतं कार्यम् — प्रेतपक्षे चतुर्दश्यामेकोद्दिष्टं सदैवतम्। तत् श्राद्धं दैवहीनं चेत् कुलक्षयकरं भवेत् इति स्मरणात्।

ஆனால், கர்க்கரின் வசனம்:— ''ஸபிண்டீகரணத்துக்குப் பிறகு எந்த ச்ராத்தமோ அந்த ச்ராத்தம் சதுர்த்தசியில் ஏகோத்திஷ்டவிதானமாய்ச் சஸ்த்ரத்தால் அடிப்பட்டவனுக்குச் செய்யப்பட வேண்டும்'' என்று உள்ளதே எனில், இந்த வசனத்திற்குப் பொருள் சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது:— ''ஆயுதத்தால் கொல்லப்பட்டவனுக்கு எப்பொழுது மஹாளய ச்ராத்தம் சதுர்த்தசியில் செய்யப்படுகிறதோ, அப்பொழுது தான் ஏகோத்திஷ்ட விதானமாய் செய்யப்பட வேண்டும். மற்றக் காலத்தில் கூடாது என்பது பொருள்.'' ஆகையால் தான், ஸுமந்து:— ஸபிண்டீகரணம் செய்யப்பட்டவர்களுக்கு, ஸபிண்டீகரணத்துக்குப் பிறகு தனியாய் ச்ராத்தம் செய்வது என்பது யுக்தம் ஆகாது. மஹாளயபக்ஷ சதுர்த்தசியைத் தவிர்த்து. இந்த மஹாளய ச்ராத்தம் தேவ வரணத்துடன் சேர்த்துச் செய்யப்பட வேண்டும். ''மஹாளய பக்ஷத்தில் சதுர்த்தசியில்

ஏகோத்திஷ்ட ச்ராத்தமானது தேவ வரணத்துடன் செய்யப்பட வேண்டும். அவ்விதம் இல்லாமல் செய்யப்படுமாகில் குல க்ஷயத்தைச் செய்வதாகும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்

माधवीये — दिनान्तरेऽपि पितामहादितृप्त्यर्थं महालयश्राद्धं कार्यम्, चतुर्दश्यां महालयश्राद्धस्यैकोद्दिष्टत्वेन विहितत्वात् तेन तत्र पितामहादितृप्तेरभावात् इति। यस्य पितृपितामहप्रपितामहास्त्रयोऽपि शस्त्रादिना हताः, तेषां मध्ये द्वौ वा शस्त्रादिना हतौ, तेषां चतुर्दश्यां प्रत्येकमेकोद्दिष्टं श्राद्धं कार्यमिति पूर्वं प्रतिपादितम्। त्रिदण्डिन एकदण्डिनो वा यतेर्महालयश्राद्धं द्वादश्यामेव पार्वणविधानेन कुर्यान्न तिथ्यन्तरे। तदुक्तं वाराहे — सन्न्यासिनोऽप्याब्दिकादि पुत्रः कुर्याद्यथाविधि। महालये तु यत् श्राद्धं द्वादश्यां पार्वणेन तु इति। सङ्ग्रहेऽपि — द्वादश्यां पार्वणेनैव श्राद्धं कुर्यान्महालये। सुतस्सन्न्यासिनोऽन्यत्र यथातिथि समाचरेत् इति। सन्न्यासिनो द्वादश्यामेव महालयश्राद्धमित्येव नियमो न तु द्वादश्यां सन्न्यासिन एवेति, तेन द्वादश्यामन्येषामपि महालयश्राद्धं भवति। तथा च अमापाते भरण्यां च द्वादश्यां पक्षमध्यगे इति वचनं पूर्वमुदाहृतम्।

**மாதவீயத்தில்:**— மற்றொரு தினத்திலும் பிதாமஹன் முதலியவரின் த்ருப்திக்காக மஹாளய ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். சதுர்த்தசியில் செய்யப்பட மஹாளய ச்ராத்தம் ஒருவனை உத்தேசித்து விதிக்கப்பட்டு இருப்பதால், அந்த ச்ராத்தத்தில் பிதாமஹாதிகளுக்குத் த்ருப்தி இல்லாததால். எவனுடைய பிதா, பிதாமஹன், ப்ரபிதாமஹன் என்ற மூவரும் ஆயுதம் முதலியதால் கொல்லப்பட்டனரோ, அல்லது அவர்களுள் இருவராவது ஆயுதம் முதலியதால் கொல்லப்பட்டனரோ, அவர்களுக்கு சதுர்த்தசியில் தனித்தனியே ஏகோத்திஷ்ட ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்,

என்பது முன்பு சொல்லப்பட்டுள்ளது. த்ரிதண்டி அல்லது ஏகதண்டி என்ற ஸந்யாஸிக்கு மஹாளய ச்ராத்தத்தை த்வாதசியிலேயே பார்வண விதியாய் செய்ய வேண்டும். வேறு திதியில் செய்யக் கூடாது. அது சொல்லப்பட்டுள்ளது. வாராஹத்தில்:— ஸந்யாஸிக்கும் ஆப்திகம் முதலியதை விதிப்படி புத்ரன் செய்ய வேண்டும். மஹாளய பக்ஷத்திலோ வெனில் ச்ராத்தத்தை த்வாதசியில் பார்வண விதானமாகச் செய்ய வேண்டும். ஸங்கிரஹத்திலும் : புத்ரன் ஸன்யாஸிக்கு மஹாளய பக்ஷத்தில் பார்வண விதியாக த்வாதசியிலேயே சிராத்தத்தைச் செய்ய வேண்டும். ஸன்யாஸிக்கு த்வாதசியிலேயே மஹாளய சிராத்தம் என்றே நியமம். அதனுல் த்வாதசியில் ஸன்யாஸிக்கு மட்டில் மஹாளய சிராத்தம் என்ற நியமமில்லை. ஆதலால் த்வாதசியில் மற்றவர்க்கும் மஹாளய சிராத்தம் செய்யப்படலாம். அவ்விதமே அமாவாஸ்யை வியதீபாதம், பரணீ, துவாதசி, அஷ்டமி என்ற வசனம் முன்பே சொல்லப்பட்டுள்ளது.

इममवार्थमभिप्रेत्य कालादर्शकारः — श्राद्धं शस्त्रहतस्यैव चतुर्दश्यां महालये । द्वादश्यामेव कुर्वीत यतेरिति विनिश्चयः इति । तिथिविशेषात् फलविशेमाह याज्ञवल्क्यः — कन्यां कन्यावेदिनश्च पशून् वै सत्सुतानपि । स्यूतं कृषिं वणिज्यां च द्विशफैकशफांस्तथा । ब्रह्मवर्चस्विनः पुत्रान् स्वर्णरूप्ये सकुप्यके । ज्ञातिश्रैष्ठ्यं सर्वकामानाप्नोति श्राद्धदस्सदा । प्रतिपत् प्रभृतिष्वेकां वर्जयित्वा चतुर्दशीम् । शस्त्रेण तु हता ये वै तेभ्यस्तत्र प्रदीयते इति । कन्यावेदिनः - जामातरः, कुप्यम् - त्रपुसीसादि ।

இதனைக் கருத்தில் கொண்டே காலாதர்சகாரர்:— "மஹாளய பக்ஷத்தில் சதுர்த்தசியில் ஆயுதத்தால் கொல்லப்பட்டவனுக்கே ச்ராத்தம் (செய்யத்தகுந்தது). ஸந்யாஸிக்கு த்வாதசியிலேயே ச்ராத்தத்தைச்

செய்யவேண்டும், என்பது நிர்ணயம்'' என்றார். திதியின் விசேஷத்தைக் கொண்டு பயனின் பேதத்தைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— பெண், மாப்பிள்ளைகள், பசுக்கள், நல்ல புத்ரர்கள், சூதாட்டம், பயிரிடுதல், வ்யாபாரம், இரண்டு குளம்புள்ள ம்ருகங்கள், ஒரு குளம்புள்ள ம்ருகங்கள், ப்ரம்ஹவர்ச்சஸமுள்ள புத்ரர்கள், ஸ்வர்ணம், வெள்ளி, பித்தளை, ஈயம் முதலியது, பந்துக்களின் நடுவில் சிறப்பு, விரும்பிய எல்லாக் காமங்கள், இவைகளை ச்ராத்தத்தைச் செய்பவன் அடைகிறான். ப்ரதமை முதல் சதுர்த்தசி ஒன்றைத் தவிர்த்து (மற்றத் திதிகளில் ச்ராத்தம் செய்பவன்.) ஆயுதத்தால் கொல்லப்பட்டவர்கள் எவர்களோ அவர்களுக்கு சதுர்த்தசியில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்.

एतच्च नित्यत्वनिराकरणार्थम्, किंतु कालविशेषात् फलविशेषा भवन्तीत्येवंपरम्। अयं कृष्णप्रतिपदादि तिथिषु श्राद्धविधिः सर्वेषु एवापरपक्षेषु न भाद्रपदापरपक्ष एव। अत एव शौनकः - प्रौष्ठपद्यपरपक्षे मासि मासि चैवम् इति। मासि मासीति वीप्सया मासिश्राद्धस्य नित्यत्वमवगम्यते इति।

இவ்விதம் சொல்லியது நித்யத் தன்மையை நிராகரிப்பதற்கல்ல. ஆனால், கால விசேஷத்துக்குத் தகுந்தபடி பல விசேஷம் உண்டாகிறது, என்பதைச் சொல்லுவதற்காக. இந்த க்ருஷ்ண பக்ஷ ப்ரதமை முதலிய திதிகளில் ச்ராத்த விதியானது எல்லா க்ருஷ்ண பக்ஷங்களிலுமே, பாத்ரபத அபர பக்ஷத்தில் மட்டில் என்பது இல்லை. ஆகையால் தான் சௌனகர்:— ''பாத்ரபதமாஸ க்ருஷ்ண பக்ஷத்தில், ஒவ்வொரு மாஸத்தில் க்ருஷ்ண பக்ஷத்தில் இவ்விதம் (செய்யலாம்),'' என்றார். ''மாஸி மாஸி'' என்று இருமுறை சொல்லியதால், மாஸி ச்ராத்தம் நித்யம் என்பது தெரிவிக்கப்படுகிறது.

आपस्तम्बः — मासि मासि कार्यमपरपक्षस्यापराह्णः श्रेयांस्तथाऽपरपक्षस्य जघन्यान्यहानि सर्वेष्वेवापरपक्षस्याहस्सु क्रियमाणे पितॄन् प्रीणाति कर्तुस्तु कालाभिनियमात् फलविशेषः प्रथमेऽहनि क्रियमाणे स्त्रीप्रायमपत्यं जायते द्वितीये स्तेनास्तृतीये ब्रह्मवर्चसिनश्चतुर्थे क्षुद्रपशुमान् पञ्चमे पुमांसो बह्वपत्यो न चानपत्यः प्रमीयते षष्ठेऽध्वशीलोऽक्षशीलश्च सप्तमे कर्षेराद्धिरष्टमे पुष्टिर्नवम एकखुरा दशमे व्यवहारे राद्धिरेकादशे कृष्णायसं त्रपुसीसं द्वादशे पशुमांस्त्रयोदशे बहुपुत्रो बहुमित्रोदर्शनीयापत्यो युवमारिणस्तु भवन्ति चतुर्दश आयुधेराद्धिः पञ्चदशे पुष्टिः इति । अमावास्याष्टकावृद्धिः कृष्णपक्षोऽयनद्वयम् इति स्मृतिश्च ।।

ஆபஸ்தம்பர்:— ஒவ்வொரு மாஸத்திலும் செய்ய வேண்டும். க்ருஷ்ண பக்ஷத்தினுடைய பிற்பகல் சிறந்தது. அவ்விதம் க்ருஷ்ண பக்ஷத்தின் பிந்திய திதிகள் சிறந்தவை. க்ருஷ்ண பக்ஷத்தின் எல்லாத் திதிகளிலும் ச்ராத்தம் செய்தால் பித்ருக்களுக்கு த்ருப்தியைச் செய்கிறான். ச்ராத்தம் செய்பவனுக்குக் கால விசேஷத்தால் பலனில் விசேஷம் உண்டாகிறது. முதல் திதியில் (ப்ரதமையில்) செய்தால், பெண்கள் அதிகமாக உள்ள குழந்தைகள் உண்டாகும். இரண்டாவது திதியில், திருடரான பிள்ளைகள் (உண்டாகும்). மூன்றாவது திதியில், ப்ரம்ஹவர்ச்சஸமுள்ள பிள்ளைகள். நான்காவது திதியில், சிறிய பசுக்களை உடையவனாவான். ஐந்தாவது திதியில், பிள்ளைகள் பிறப்பார்கள்; அநேக பிள்ளைகள் உடையவனாவான்; பிள்ளை ஸமீபத்தில் இல்லாதவனாய் மரிக்கமாட்டான். ஆறாவது திதியில், வழி நடப்பவனாவான், சூதாடுவான். ஏழாவது திதியில் பயிரிடுவதில் ஜயம். எட்டாவது திதியில், புஷ்டி. ஒன்பதாவது திதியில், ஒற்றைக் குளம்புள்ள பசுக்கள். பத்தாவது திதியில், வ்யாபாரத்தில் வ்ருத்தி. பதினொன்றாவது திதியில், இரும்புப் பாண்டங்கள், அரக்கு, ஈயம்

முதலியவை. பன்னிரண்டாவது திதியில், நல்ல பசுக்கள் உடையவனுவான். பதின்மூன்ருவது திதியில், அநேகம் புத்ரர்களுடையவனுய், அநேக மித்ரர்களுடையனுய், அழகிய குழந்தைகள் உடையவனுய் இருப்பான்; ஆனல் குழந்தைகள் பால்யத்திலேயே மரிக்கும். பதினன்காவது திதியில், யுத்த கார்யத்தில் ஸித்தி. பதினைந்தாவது திதியில், புஷ்டி'' என்றூர். அமாவாஸ்யை, அஷ்டகை, விருத்தி (நாந்தீ), க்ருஷ்ண பக்ஷம், இரண்டு அயனங்கள் என்று ஸ்ம்ருதியும் உள்ளது.

अत्र मासिश्राद्धे पितृपितामहप्रपितामहा उद्देश्याः । महालये तु पित्रादयस्त्रयो मात्रादयस्तिस्रः अशक्तौ सपत्नीकाः पित्रादयस्त्रयो मातामहादयश्च त्रय उद्देश्याः । तथा कालादर्शे — वर्गद्वयं समुद्दिश्य श्राद्धमाद्यन्तदैविकम् । कुर्यात् पार्वणमार्गेण नोचेद्दोषो महान् भवेत् इति । वर्गद्वयम् - पितृवर्गं मातामहवर्गं च समुद्दिश्य, आद्यन्तदैविकम् - आदौ वैश्वदैविकमन्ते वैष्णवं यस्येत्यर्थः । तदाह देवलः — दैवाद्यं नैव कुर्वीत दैवान्तं नैव कुत्रचित् । दैवाद्यन्तं हि कुर्वीत श्राद्धरक्षणहेतुना इति ।

இந்த மாஸி ச்ராத்தத்தில் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்கள் வரிக்கத் தகுந்தவர்கள். மஹாளயத்திலோவெனில், பிதா முதலிய மூவரும், மாதா முதலிய மூவரும், சக்தி இல்லாவிடில் பத்னிகளுடன் கூடிய பிதா முதலிய மூவர், ஸபத்னீக மாதா மஹாதிகள் மூவரும், உத்தேச்யர்கள். அவ்விதம், காலாதர்சத்தில்:— இரண்டு வர்க்கத்தையும் உத்தேசித்து ஆதியிலும் அந்தத்திலும் தேவ வரணமுள்ள ச்ராத்தத்தை பார்வண விதியாய்ச் செய்ய வேண்டும். அவ்விதம் செய்யாவிடில் தோஷம் மிகவும் உண்டாகும். இரண்டு வர்க்கம் பித்ரு வர்க்கம், மாதாமஹ வர்க்கம். ஆதியில் விச்வேதேவ வரணமும், அந்தத்தில் விஷ்ணு வரணமுமுள்ளது, என்பது பொருள். அதைச்

சொல்லுகிறூர், தேவலர்:— தேவ வரணத்தை ஆதியில் மட்டில் உள்ளதாய்ச் செய்யக் கூடாது. தேவ வரணத்தை அந்தத்தில் மட்டில் உள்ளதாய்ச் செய்யக் கூடாது. ஆனுல், (ச்ராத்தத்தை ரக்ஷிப்பதற்காக.) ஆதியிலும், அந்தத்திலும் தேவ வரணத்துடன் கூடியதாய் செய்யவேண்டும்.

पितरो यत्र पूज्यन्ते तत्र मातामहा अपि इति वचनेन मातामहादीनामप्यत्रोद्देश्यता। अन्वष्टकासु वृद्धौ च प्रतिसंवत्सरे तथा। महालये गयायां च सपिण्डीकरणात् पुरा। एष मातुः पृथक्कुर्यादन्यत्र पतिना सह इति वचनान्मात्रादीनामप्युद्देश्यत्वमिति प्रतिपादितमधस्तात्। पितरि मृते मातरि जीवन्त्यां पितामह्यादीनामत्र वरणं नास्ति। जीवेद्यदि तु वर्गादिस्तद्वर्गं परिवर्जयेत् इति स्मरणात्। पिण्डदानं तु कर्तव्यं तत्सद्भावात् तिलोदकमपि कार्यमित्याहुः।

''பித்ருக்கள் எந்த ச்ராத்தத்தில் பூஜிக்கப்படுகின்றனரோ அந்த ச்ராத்தத்தில் மாதாமஹர்களும் பூஜிக்கப்படவேண்டும்'' என்ற வசனத்தால் மாதாமஹன் முதலியவர்க்கும் இதில் உத்தேச்யத் தன்மை உண்டு. ''அன்வஷ்டகை, நாந்தீ, ப்ரத்யாப்திகம், மஹாளயம், கயை, ஸபிண்டீகரணத்துக்குப் பிறகு செய்யப்படும் ச்ராத்தம் இவைகளில் மாதாவுக்குத் தனியே வரணம். மற்றவைகளில் பதியுடன்'' என்ற வசனத்தால் மாதா முதலியவர்க்கும் உத்தேச்யத் தன்மை உண்டு என்பது கீழே சொல்லப்பட்டுள்ளது. பிதா இறந்திருக்க மாதா ஜீவித்து இருந்தால், பிதாமஹீ முதலியவர்க்கு இந்த ச்ராத்தத்தில் வரணம் இல்லை. ''வர்க்கத்தில் முந்தியவன் ஜீவித்து இருந்தால் அந்த வர்க்கத்தை வர்ஜிக்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். பிண்டதானம் மட்டில் செய்யப்பட வேண்டும். பிண்டதானம் இருப்பதால் திலோதகதானமும் செய்யப்பட வேண்டும் என்கின்றனர்.

तथा च स्मृत्यन्तरे — जीवन्त्यां मातरि श्राद्धं तद्वर्गस्य न कारयेत् । सपत्नीमातरि तथा जीवेन्मातामहोऽपि च इत्युभयविधमात्रोरपि जीवन्त्योरयं निषेध इत्यर्थः । तथा दर्पणसङ्ग्रहे — महालयादिषु सपत्नीमारभ्य वरणं कर्तव्यम् इति । कारुणिकसंज्ञानां पितृव्यादी-नामप्यत्रोद्देश्यत्वमुक्तं स्मृत्यन्तरे— दैवं पिता ततो माता सपत्नी जननी तथा । मातामहास्सपत्नीकाः पितृव्या भ्रातरस्सुताः । पितृष्वसा मातुलाश्च तद्भगिन्यश्च जामयः । स्यालको गुरुराचार्यस्वामिसख्यादयः क्रमात् । भोज्या महालयश्राद्धे एते कारुणिकाह्वयाः इति ।

அவ்விதமே, மற்றோர் ஸ்ம்ருதியில்:— தாயார் ஜீவித்து இருக்கும் பொழுது அந்த வர்க்கத்திற்கு ச்ராத்தம் செய்யக் கூடாது. ஸபத்னீ மாதா ஜீவித்து இருந்தாலும் அப்படியே. மாதாமஹன் ஜீவித்து இருந்தாலும் அப்படியே, என்று. இரண்டு வித மாதாக்களும் ஜீவித்து இருந்தால் இந்த நிஷேதம் என்பது பொருள். அவ்விதம், தர்ப்பண ஸங்க்ரஹத்தில்:— மஹாளயம் முதலியவைகளில் ஸபத்னீ மாதாவை முதற்கொண்டு வரணம் செய்யப்பட வேண்டும். காருணிகர் என்று பெயருள்ள பித்ருவ்யன் முதலியவர்களுக்கும் (பிதாவின் ஜ்யேஷ்ட கனிஷ்டர்கள்) மஹாளய ச்ராத்தத்தில் உத்தேச்யத் தன்மை சொல்லப்பட்டுள்ளது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— விச்வேதேவர், பிதா, பிறகு மாதா, ஸபத்னீமாதா, பத்னிகளுடன் கூடிய மாதாமஹர்கள், பித்ருவ்யர்கள், ஸஹோதரர்கள், புத்ரர்கள், பித்ருபகினி (அத்தை), அம்மான்கள், அவர்களுடைய பகினிகள் (சிறிய தாயார், பெரிய தாயார்), ஜாமிகள், பகினிகள் (ஸஹோதரிகள்), பெண், பார்யை, மாமனார், பாவுகன் (பகினீபதி), நாட்டுப்பெண், மைத்துனன், குரு, ஆசார்யன், ஸ்வாமி, தோழன் முதலியவர்கள் என்ற இவர்கள் காருணிகர் என்று

பெயருள்ளவர்கள். இவர்கள் மஹாளய ச்ராத்தத்தில் புஜிப்பிக்கத் தகுந்தவர்கள்.

मनुः — अपुत्राः स्वकुले ये च स्त्रियो वा पुरुषा मृताः । एकोद्दिष्टेन तेभ्योऽपि दद्यादापरपक्षिकमिति । अन्यच्च — श्राद्धं कुर्यादपुत्रस्य पितृव्यस्य महालये। एकोद्दिष्टेन विधिना न कुर्यात् पुत्रिणे क्वचित् इति । चतुर्विंशतिमतेऽपि — आचार्यगुरुशिष्येभ्यः सखिज्ञातिभ्य एव च। तत्पत्नीभ्यश्च सर्वाभ्यस्तथैव च जलाञ्जलीन्। एतेभ्यस्तु सदा पिण्डान् दद्याद् भाद्रपदे नरः । एकस्मिन् ब्राह्मणे सर्वानाचार्यादीन् प्रपूजयेत् इति।

மனு:— தனது குலத்தில் புத்ரர்கள் இல்லாமல் எந்தப் புருஷர்களாவது ஸ்த்ரீகளாவது இறந்தவர்களோ அவர்களுக்கும் ஏகோத்திஷ்ட விதானமாய் மஹாளய ச்ராத்தத்தைக் கொடுக்க வேண்டும். மற்றோர் வசனமும்:— மஹாளய பக்ஷத்தில் புத்ரனில்லாத பித்ருவ்யனுக்கு ஏகோத்திஷ்ட விதியாய், ச்ராத்தம் செய்ய வேண்டும். புத்ரனுள்ளவனுக்கு ஒரு காலும் செய்யக் கூடாது. சதுர்விம்சதி மதத்திலும்:— ஆசார்யன், குரு, சிஷ்யன், மித்ரன், ஜ்ஞாதி, இவர்களின் பத்னிகள், என்ற எல்லோருக்கும் திலோதகங்களையும், பிண்டங்களையும் பாத்ரபத மாஸத்தில் மனிதன் கொடுக்க வேண்டும். ஒரு ப்ராம்ஹணனிடத்தில் ஆசார்யன் முதலிய எல்லோரையும் பூஜிக்க வேண்டும்.

स्मृत्यन्तरे — पित्रोर्मृतदिनात् पूर्वं न तन्मासि महालयम्। पित्रोः श्राद्धं तु निर्वर्त्य पश्चात् कुर्यान्महालयम् इति। तथा स्वयमकृत्वा महालयं परमहालये नाश्नीयात्, अकृत्वाऽन्यत्र नाश्नीयात् श्राद्धं चापरपक्षिकम्। पश्चात् कृतेऽपि श्राद्धेऽस्मिन् तच्छ्राद्धं निष्फलं भवेत् इति स्मृतेः। एतच्च महालयश्राद्धं नित्यम्। शाकेनाप्यपरपक्षं नातिक्रमेत्

सूर्ये कन्यागते श्राद्धं यो न कुर्यात् गृहाश्रमी। धनं पुत्राः कुतस्तस्य पितृनिश्वासपीडनात् इत्यादिस्मृतेः।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— மாதா பிதாக்களின் ச்ராத்த தினத்திற்கு முன்பு அந்த மாஸத்தில் மஹாளயத்தைச் செய்யக் கூடாது. மாதா பிதாக்களின் ச்ராத்தத்தைச் செய்து முடித்துப் பிறகு மஹாளயத்தைச் செய்ய வேண்டும். அப்படியே, தான் மஹாளயம் செய்யாமல் பிறர் செய்யும் மஹாளயத்தில் புஜிக்கக் கூடாது. "தான் செய்யாமல் வேறு இடத்தில் மஹாளய ச்ராத்தத்தைப் புஜிக்கலாகாது. பிறகு ச்ராத்தம் செய்தாலும் அந்த ச்ராத்தம் நிஷ்பலமாகும்", என்று ஸ்ம்ருதி இருப்பதால், இந்த மஹாளய ச்ராத்தம் நித்யம் எனப்படுகிறது. "சாகத்தினுலாவது மஹாளய ச்ராத்தத்தைச் செய்யாமல் இருக்கக் கூடாது", "ஸூர்யன் கன்யாராசியில் இருக்கும் பொழுது எந்த க்ருஹஸ்தன் மஹாளய ச்ராத்தத்தைச் செய்யவில்லையோ, அவனுக்குத் தனமும், புத்ரர்களும், எப்படித் தரிக்கும் ? பித்ருக்களின் பெருமூச்சினுல் பீடிக்கப்படுவதால்." என்பது முதலிய ஸ்ம்ருதிகளால்.

तथा च कार्ष्णाजिनिः — मृताहेऽहरहर्दर्शे श्राद्धं यच्च महालये। तन्नित्यमुदितं सद्भिर्नित्यवत्तद्विधानतः इति। अहरहः - अहन्यहनि यत् श्राद्धं तदपि नित्यमित्यर्थः। तत्र पारस्करः — अहन्यहनि यत् श्राद्धं तन्नित्यमिति कीर्तितम्। वैश्वदेवविहीनं तु ह्यशक्तावुदकेन तु इति।

அவ்விதமே, கார்ஷ்ணாஜினி:— ப்ரத்யாப்திக ச்ராத்தம், ப்ரதிதினம் செய்யப்படும் ச்ராத்தம், தர்ச ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம் இவைகள் ஸாதுக்களால் நித்யம் எனச் சொல்லப்பட்டுள்ளன. அதற்கு நித்யத்திற்குப் போல் விதி இருப்பதால். அவ்விஷயத்தில், பாரஸ்கரர்:— ஒவ்வொரு தினத்திலும் செய்யப்படும் ச்ராத்தம் எதுவோ, அது நித்யம் எனச் சொல்லப்பட்டு உள்ளது. அது வைச்வதேவம் இல்லாதது (விச்வேதேவ வரணம் இல்லாதது.) சக்தி

இல்லாத விஷயத்தில் ஜலத்தாலாவது செய்யப்பட வேண்டும்.

अस्य पार्वणत्वेन प्राप्तं वैश्वदेवं निरस्यति वैश्वदेवविहीनमिति। अहन्यहनीत्येतदत्यन्तश्रद्धालुविषयं सुसमृद्धविषयं वा। यदाह देवलः — एतेन विधिना श्राद्धं कुर्यात् संवत्सरं सकृत्। त्रिश्चतुर्वा यथा श्राद्धं मासे मासे दिने दिने इति। एतेन विधिना - पार्वणविधिना। प्रतिसंवत्सरमेकवारं विशिष्टेऽह्नि, प्रतिसंवत्सरं त्रिवारं वा चतुर्षु चतुर्षु मासेषु विशिष्टेऽह्नि, प्रतिसंवत्सरं चतुर्वारं वा त्रिषु त्रिषु मासेषु विशिष्टेऽह्नि, मासे मासे वा विशिष्टेऽह्नि, दिने दिने वा यथाश्रद्धं - श्रद्धानुसारेण शक्त्यनुसारेण च नित्यश्राद्धं कुर्यादित्यर्थः। अस्य च नित्यश्राद्धस्य कल्पः सम्यगाह्निकेअस्याभिः प्रपञ्चितः।

இது பார்வணமாகியதால் ப்ராப்தமாகிய விச்வேதேவ வரணத்தை நிஷேதிக்கிறார் ''வைச்வதேவ விஹீனம்'' என்பதால். ஒவ்வொரு தினத்திலும் என்றது அதிக ச்ரத்தை உள்ளவனைப் பற்றியது அல்லது அதிக ஸம்பத்து உள்ளவனைப் பற்றியது. அதைச் சொல்லுகிறார், தேவலர்:— இவ்விதம் பார்வண விதியாய் வர்ஷத்துக்கு ஒரு முறை ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும் அல்லது வர்ஷத்துக்கு மூன்று முறை, நான்கு முறையாவது, மாஸத்துக்கு ஒரு முறையாவது, ஒவ்வொரு தினத்திலுமாவது ச்ரத்தைக்கு அனுகுணமாய் (செய்யவேண்டும்). ஒவ்வொரு வர்ஷத்திலும் ஒரு தடவை சிறந்த தினத்தில், அல்லது வர்ஷந்தோறும் மூன்று முறை, அதாவது நான்கு மாதங்களில் சிறந்த ஒரு தினத்தில், ஒவ்வொரு வர்ஷத்திலும் நான்கு தடவை அதாவது மூன்று மாஸங்களில் சிறந்த ஒரு தினத்தில், ஒவ்வொரு மாஸத்திலும் சிறந்த ஒரு தினத்தில், ப்ரதி தினமும், ச்ரத்தையையும் சக்தியையும் அனுஸரித்து நித்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்பது பொருள். இந்த

நித்ய ச்ராத்தத்தின் ப்ரகாரம் ஆஹ்னிக காண்டத்தில் நன்றாக நம்மால் விவரிக்கப்பட்டுள்ளது.

## वृद्धिश्राद्धनिरूपणम्।

अथ वृद्धिश्राद्धम्, तच्च नैमित्तिकम्। प्रेतश्राद्धं सपिण्ड्यन्तं सङ्क्रान्ति ग्रहणेषु च। संवत्सरोदकुम्भं च वृद्धिश्राद्धं निमित्ततः इति गालवस्मरणात्। कात्यायनः — स्वपितृभ्यः पिता दद्यात् सुतसंस्कारकर्मसु। पिण्डानोद्वाहनात्तेषां तदभावे तु तत् क्रमात् इति। अयमर्थः —सुतसंस्कारकर्मसु - जातकर्मादिषु, तेषां - सुतानाम्, ओद्वाहनात् - विवाहपर्यन्तेषु, पिता स्वपितृभ्यः पिण्डान् दद्यात् वृद्धिश्राद्धं कुर्यात्, तदभावे तु तत्क्रमात् - असंस्कृतास्तु संस्कार्या भ्रातृभिः पूर्वसंस्कृतैः इत्यादिवचनान्तेषु जातकर्मादिषु यो गम्यमानः कर्तुः क्रमः तेन क्रमेण ज्येष्ठभ्रात्रादिः कुर्यात्। पूर्वसंस्कृतभ्रात्राद्यसम्भवे व्रतसमावर्तनादौ स्वयं कुर्यादिति - असगोत्रस्सगोत्रो वा य आचार्य उपायने। तदोपनेय पित्रादीनुद्दिश्याभ्युदयं चरेत्। कन्यकायामयं मार्गो मुनिभिः परिकीर्तितः। उपनीतस्तु पित्रादेरभावेऽन्यं नियोजयेत्। आचार्यपितरस्तत्र वृद्धिश्राद्धे तु देवताः सति।

## வ்ருத்தி ச்ராத்த நிரூபணம்.

இனி வ்ருத்தி ச்ராத்தம் சொல்லப்படும். அது நைமித்திகம் எனப்படும். "ஸபிண்டீகரணம் வரையில் உள்ள ப்ரேத ச்ராத்தம், ஸங்க்ரமண ச்ராத்தம், க்ரஹண ச்ராத்தம், ஒரு வர்ஷம் முழுவதும் செய்யப்படும் ஸோதகும்ப ச்ராத்தம், வ்ருத்தி (நாந்தீ) ச்ராத்தம் இவைகள் நைமித்திக ச்ராத்தங்கள் எனப்படும்" என்று காலவ ஸ்ம்ருதி இருப்பதால். காத்யாயனர்:— தனது பிள்ளையின் ஸம்ஸ்கார கார்யங்களில் பிதா தனது பித்ருக்களுக்கு ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். அந்தப் பிள்ளைகளின் விவாஹம் முடியும் வரையில் பிதா இல்லாவிடில் ப்ராதா

முதலியவர் செய்ய வேண்டும். இதன் பொருள்:— பிள்ளைகளின் ஜாதகர்மாதி ஸம்ஸ்காரங்களில் அந்தப் பிள்ளைகளின் விவாஹம் முடியும் வரையில் பிதாவானவன் தனது பித்ருக்களுக்குப் பிண்டங்களைக் கொடுக்க வேண்டும், அதாவது நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பிதா இல்லாவிடில், 'தத்க்ரமாத்' = அந்த ஜாதகர்மம் முதலியதில் எவன் ஸம்ஸ்கார கர்த்தாவோ அந்த க்ரமமாய் ''ஸம்ஸ்காரமில்லாத ப்ராதாக்கள் முன் பிறந்தவர்களும், ஸம்ஸ்காரம் பண்ணப்பட்டவர்களுமான ப்ராதாக்களால் ஸம்ஸ்காரம் செய்யப்பட வேண்டும்'' என்பது முதலிய வசனங்களால், 'தேஷு' அந்த ஜாதகர்மம் முதலியவைகளில் கர்த்ருக்ரமம் எதுவோ அந்தப்படி ஜ்யேஷ்ட ப்ராதா முதலியவன் செய்ய வேண்டும். முந்திய ப்ராதா முதலியவன் இல்லாவிடில் வ்ரதம் ஸமாவர்த்தனம் முதலியவைகளில் தானே செய்ய வேண்டும். ''எப்பொழுது ஸகோத்ரனுயினும், அன்யகோத்ரனுயினும், உபநயனத்தில் எவன் ஆசார்யனே, அப்பொழுது உபநயனம் செய்யப்படுபவனின் பிதா முதலியவரை உத்தேசித்து நாந்தியைச் செய்ய வேண்டும். பெண்ணின் ஜாதகர்மம் முதலியதிலும் இதே வழி முனிகளால் சொல்லப்பட்டுள்ளது. உபநயனமாகியவன் பிதா முதலியவர் இல்லாவிடில் வேறொருவனை வரிக்க வேண்டும். அந்த நாந்தீ ச்ராத்தத்தில் ஆசார்யனின் பிதா முதலியவர் உத்தேச்யர்கள் ஆவார்கள்.''

विष्णुपुराणेऽपि — जातस्य जातकर्मादिक्रियाकाण्डमशेषतः। पुत्रस्य कुर्वीत पिता श्राद्धं चाभ्युदयात्मकम् इति। वसिष्ठोऽपि — जन्मन्यथोपनयने विवाहे पुत्रकस्य च। पितॄन्नान्दीमुखान्नाम तर्पयेद्विधिपूर्वकम् इति। सायणीयोऽपि — नान्दीश्राद्धं पिता कुर्यादाद्यपाणिग्रहावधि। अत ऊर्ध्वं प्रकुर्वीत स्वयमेव तु नान्दिकम् इति। आद्यपाणिग्रहावधि - प्रथमविवाहपर्यन्तमित्यर्थः। (नान्दी श्राद्धं

पिता कुर्यात् पुत्रीपुत्रविवाहयोः । उत्तरेषु विवाहेषु स्वयं कुर्यात्तु नान्दिकम् इति।)

**விஷ்ணு புராணத்திலும்:—** தகப்பன், பிறந்த பிள்ளைக்கு ஜாதகர்மம் முதலிய க்ரியைகள் எல்லாவற்றையும் தானே செய்ய வேண்டும். நாந்தீ ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். **வஸிஷ்டரும்:—** புத்ரனின் பிறப்பிலும், உபநயனத்திலும், விவாஹத்திலும் நாந்தீமுகர்கள் என்கிற பித்ருக்களை விதிப்படி பூஜிக்க வேண்டும். **ஸாயணீயத்திலும்:—** புத்ரனின் முதல் விவாஹம் முடியும் வரையில் நாந்தீ ச்ராத்தத்தைப் பிதா செய்ய வேண்டும். இதற்கு மேல் நாந்தீ ச்ராத்தத்தைத் தானாகவே செய்ய வேண்டும். ("பெண்ணின் விவாஹத்திலும் புத்ரன் விவாஹத்திலும் பிதா நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இரண்டாவது முதலிய விவாஹங்களில் நாந்தீயைத் தானே செய்யவேண்டும்.")

द्वितीयादिविवाहेषु जीवत्पिताऽपि स्वयमेव कुर्यात्, उद्वाहे पुत्रजनने पित्र्येष्ट्यां सौमिके मखे। तीर्थे ब्राह्मण आयाते षडेते जीवतः पितुः इति स्मरणात्। नान्दीमुखश्राद्धस्यानुष्ठानं क्वचिद्विषये तन्त्रेण कार्यम्, न त्वावृत्त्येत्याह कात्यायनः — गणशः क्रियमाणेषु मातृभ्यः पूजनं सकृत्। सकृदेव भवेत् श्राद्धमादौ न पृथगादिषु ।। अस्यार्थः - उपनयनात् प्राक् स्वकाले कथञ्चिदकृतचौलपर्यन्तसंस्कारस्य यानि जातकर्मादीन्युपनयनात् पूर्वं संभूय क्रियन्ते, तथा व्रतानि यदा सम्भूय क्रियन्ते, तथा देशान्तरगतस्य मृत इति बुद्ध्या कृतप्रेतकार्यस्य कालान्तर आगतस्य यानि जातकर्मादीनि पुनः संभूय क्रियन्ते, तथा पतितस्य कृतप्रायश्चित्तस्य यानि जातकर्मादीनि पुनस्सम्भूय क्रियन्ते, तेषु गणशः - संभूय क्रियमाणेषु जातकर्मादिषु संस्कारेषु प्रथमं क्रियमाणस्य संस्कारकर्मण आदौ मातृपूजायाः नान्दीश्राद्धस्य च

सकृत्तन्त्रेणानुष्ठानम्, न पृथगादिषु - संस्कारकर्मणामादिषु न पृथगनुष्ठानमिति।

இரண்டாவது முதலிய விவாஹத்தில் பிதா ஜீவித்து இருந்தாலும் தானே செய்ய வேண்டும். ''விவாஹம், புத்ரஜனனம், பித்ரு இஷ்டியிலும், ஸோமயாகத்திலும், புண்யதீர்த்தத்திலும், நல்ல ப்ராம்ஹணன் வரவிலும் இந்த ஆறு காலங்களிலும் ஜீவ பிதாவும் ச்ராத்தம் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். நாந்தீ ச்ராத்தத்தை சில விஷயத்தில் சேர்த்தே அனுஷ்டிக்க வேண்டும். ஆவ்ருத்தி செய்ய வேண்டாம் என்று சொல்லுகிறார், காத்யாயனர்:— உபநயனத்திற்கு முன் அதனதன் காலத்தில் எவ்விதத்தாலும் செய்யப்படாத சௌள பர்யந்தமுள்ள ஸம்ஸ்காரங்கள் உடையவனுக்கு ஜாதகர்மம் முதலிய எவைகள் சேர்த்துச் செய்யப்படுகின்றனவோ, அவ்விதம் வ்ரதங்கள் எப்பொழுது சேர்த்துச் செய்யப்படுகின்றனவோ, அவ்விதம் தேசாந்தரம் சென்று இறந்து விட்டான் என்று நினைத்து ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்ட பிறகு வந்தவனுக்கு ஜாதகர்மம் முதலியவை மறுபடி சேர்த்துச் செய்யப்படுகின்றனவோ, அவ்விதம் பதிதனுக்கு ப்ராயச்சித்தம் செய்து கொள்ளப்பட்ட பிறகு எந்த ஜாதகர்மம் முதலியவை சேர்த்துச் செய்யப்படுகின்றனவோ இவ்விதம் சேர்த்துச் செய்யப்படும் அவைகளில் முதலில் செய்யப்படும் ஸம்ஸ்கார கர்மத்தின் ஆரம்பத்தில் மாத்ரு பூஜை, நாந்தீ ச்ராத்தம் இவைகளுக்கு ஒரு தடவை சேர்த்தே அனுஷ்டானம். ஸம்ஸ்கார கர்மங்களின் ஒவ்வொன்றின் ஆரம்பத்திலும் தனியே அனுஷ்டானம் இல்லை.

स्मृत्यन्तरे — एकदा क्रियमाणानामनेकशुभकर्मणाम् । वृद्ध्यङ्कुरप्रतिसरान् सकृदेव समाचरेत् इति । आश्वलायनः — सहैवाभ्युदयश्राद्धं स्वस्तिवाचनमेव च। सह कर्माणि कुर्याद्वा पृथग्वा

क्रमतश्चरेत् । नामनिष्क्रमणौ कार्यौ सहापदि विजानता । तथा पुंसवसीमन्तौ बलिसीमन्तकौ च वा । जातकृत्ये त्वतीते तु नाम्ना वा सह संचरेत् । अकृतानामतीतानां निष्कृतिः स्याद्धि कर्मणाम् । चौलोपनयने चैव समावर्त विवाहकौ । सह कर्मत्रयं जातु सापत्स्वपि समाचरेत् । एतेभ्योऽन्यानि कर्माणि द्वावकार्यौ सहैव तु इति ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஒரே ஸமயத்தில் செய்யப்படும் அநேக சுப கர்மங்களுக்கு நாந்தீ, அங்குரார்ப்பணம், ப்ரதிஸரம் இவைகளை ஒரு தடவையே செய்ய வேண்டும். ஆச்வலாயனர்:— நாந்தீ ச்ராத்தம், புண்யாஹ வாசனம் இவைகளைச் சேர்த்தே செய்யவும். ஜாதகர்மம் முதலியவைகளைச் சேர்த்தும் செய்யலாம், அல்லது தனியாகவும் க்ரமமாய்ச் செய்யலாம். அறிந்தவன் நாமகரணம், நிஷ்க்ரமணம், இவைகளைச் சேர்த்துச் ஆபத்காலமானால் செய்யலாம். அப்படியே பும்ஸவனம், ஸீமந்தம் இவைகளையும் சேர்த்துச் செய்யலாம். விஷ்ணு பலி, ஸீமந்தம் இவைகளைச் சேர்த்தும் செய்யலாம். ஜாதகர்மம் அதீதமானால் நாமகரணத்துடன் சேர்த்துச் செய்யலாம். ஸ்வகாலத்தில் செய்யப்படாத காலாதீதமான கர்மங்களுக்கு ப்ராயச்சித்தம் செய்ய வேண்டும். சௌளம், உபநயனம், இவைகளையும் ஸமாவர்த்தனம், விவாஹம் இவைகளையும் சேர்த்துச் செய்யலாம். மூன்று கர்மங்களைச் சேர்த்து ஒரு காலும் ஆபத்காலத்திலும் செய்யக் கூடாது. இவைகளைத் தவிர்த்து மற்றக் கர்மங்களில் இரண்டு கர்மங்களைச் சேர்த்துச் செய்யக் கூடாது.

यत्तु कात्यायनेनोक्तम् — मातृयागक्रियापूर्वं कार्यं श्राद्धं तु मङ्गले । ऋतुत्रये तु कर्तव्यं नचान्यल्लघुमङ्गलम् इति । तद्यथा कालं क्रियमाणसंस्कारकर्मविषयम् । मातृपूजाऽपि तेनैवोक्ता — कर्मादिषु च सर्वेषु मातरस्सगणाधिपाः । पूजनीयाः प्रयत्नेन पूजिताः पूजयन्ति ताः । प्रतिमासु च शुद्धासु लिखिता वा पटादिषु । गन्धपुष्पाक्षतैश्चैव

नैवेद्यैश्च पृथग्विधैः । गौरी पद्मा शची मेधा सावित्री विजया जया । देवसेना स्वधा स्वाहा मातरो लोकमातरः । धृतिः पुष्टिस्तथा तुष्टिरात्म देवतया सह । आभ्योऽर्घ्यं गन्धपुष्पं च धूपदीपं निवेदयेत् । आयुष्याणि च शान्त्यर्थं जप्त्वा तत्र समाहितः । षड्भ्यः पितृभ्यस्तदनु श्राद्धदानमुपक्रमेत् इति । आत्मदेवता - आत्मनोऽभीष्टदेवता, आयुष्याणि - आनोभद्राः क्रतवः इत्यादीनि सूक्तानि, षड्भ्यः पितृभ्यः - पित्रादिभ्यो मातामहादिभ्यश्च मातृश्राद्धपूर्वकं श्राद्धदानमुपक्रमेदित्यर्थः ।

ஆனால், காத்யாயனர்:— "மங்கள கார்யங்களில் மாத்ருபூஜையை முன்னிட்டு நாந்தீச்ராத்தம் செய்யப்பட வேண்டும். மூன்று ருதுக்களுக்குள் (ஆறு மாஸங்களுக்குள்) வேறு சிறிதான மங்கள கார்யத்தைச் செய்யக் கூடாது," என்றாரே எனில், அது அந்தந்தக் காலத்தில் செய்யப்படும் ஸம்ஸ்காரங்களைப் பற்றியது. மாத்ரு பூஜையும் அவராலேயே சொல்லப்பட்டுள்ளது:— "எல்லாக் கர்மங்களின் ஆரம்பத்திலும் மாத்ரு தேவதைகள் கணாதிபர்களுடன் அவச்யம் பூஜிக்கப்பட வேண்டும். பூஜிக்கப்பட்ட அந்தத் தேவதைகள் பூஜிப்பவர்களைச் சிறப்பிக்கின்றனர். சுத்தமான பிம்பங்களிலாவது, எழுதிய படம் முதலியவைகளிலாவது கந்தம், புஷ்பம், அக்ஷதங்கள், பலவித நைவேத்யங்கள் இவைகளால் பூஜிக்கப்பட வேண்டும். கௌரீ, பத்மா, சசீ, மேதா, ஸாவித்ரீ, விஜயா, ஜயா, தேவஸேநா, ஸ்வதா, ஸ்வாஹா இந்த மாதாக்கள் உலகத்திற்குத் தாயாவார்கள். த்ருதி, புஷ்டி, துஷ்டி இவர்கள் ஆத்ம தேவதையுடன் பூஜிக்கப்பட வேண்டும். இவர்களுக்கு அர்க்யம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் இவைகளைக் கொடுக்க வேண்டும். ஆயுஷ்ய ஸூக்தங்களைக் கவனம் உடையவனாய் அப்பொழுது சாந்திக்காக ஜபித்துப் பிறகு ஆறு பித்ருக்களை உத்தேசித்து ச்ராத்தத்தை ஆரம்பிக்கவும்.

ஆத்மதேவதா = தனக்கு இஷ்டமான தேவதை. ஆயுஷ்ய ஸூக்தங்கள் 'ஆநோ பத்ரா:' என்பது முதலிய ஸூக்தங்கள். ஆறு பித்ருக்கள் பிதா முதலியவர்கள், மாதாமஹன் முதலியவர்கள், மாத்ரு ச்ராத்தத்தை முன்னிட்டு ச்ராத்தம் செய்ய வேண்டும் என்பது பொருள்.

तत्र शातातपः — मातुः श्राद्धं तु पूर्वं स्यात् पितॄणां तदनन्तरम्। ततो मातामहानां च वृद्धौ श्राद्धत्रयं स्मृतम्। नानिष्ट्वा तु पितॄन् श्राद्धे कर्म वैदिकमाचरेत् इति। मातुः - मातृपितामहीप्रपितामहीनाम्, पितॄणां - पितृपितामह-प्रपितामहानाम्, मातामहानां - मातामहमातृपितामह-मातृप्रपितामहानाम्। क्रमेण पार्वणविधिना श्राद्धत्रयं कुर्यादित्यर्थः। तथा च चन्द्रिकायाम् — वृद्धौ समर्चयेद्विद्वान्नित्यं नान्दीमुखान् पितॄन्। संपादितो विशेषस्तु शेषं पार्वणवद्भवेत् इति। वृद्धिश्राद्धे नान्दीमुखसंज्ञान् पितॄन् समर्चयेत्, विशेषः - नान्दीमुखसंज्ञारूपो वैशेषिको धर्मः, संपादितः - प्रतिपादितः, शेषम् - वैशेषिकधर्मादन्यद्धर्मजातम्, पार्वणवदित्यर्थः।

அதில், சாதாதபர்:— "மாத்ரு பிதாமஹி ப்ரபிதாமஹிகளுக்கு முதலில் ச்ராத்தம் செய்ய வேண்டும். பிறகு பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்கும். பிறகு மாதாமஹ, மாது:பிதாமஹ, மாது:ப்ரபிதாமஹர்களுக்கும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இவ்விதம் வ்ருத்தியில் (மங்கள கார்யத்தில்) மூன்று ச்ராத்தம் விதிக்கப்பட்டுள்ளது. பித்ருக்களை ச்ராத்தத்தில் ஸந்தோஷிப்பிக்காமல் வைதிக கர்மத்தைச் செய்யக்கூடாது." முறையே மூன்று ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்று பொருள், அவ்விதமே, சந்த்ரிகையில்:— நாந்தீ ச்ராத்தத்தில் பித்ருக்களை நாந்தீ முகர்கள் என்ற விசேஷத்தால் எப்பொழுதும் அர்ச்சிக்க வேண்டும். இந்த விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. மற்றது பார்வண ச்ராத்தத்தில் போல் சொல்லப்பட்டுள்ளது.

उक्तश्राद्धत्रयस्य कालभेदमाह गार्ग्यः — मातृश्राद्धं तु पूर्वेद्युः कर्माह्न्येव पैतृकम्। मातामह्यं चोत्तरेद्युर्वृद्धौ श्राद्धत्रयं स्मृतम् इति। अत्र विशेमाह शातातपः — पूर्वाह्णे मातृकं श्राद्धं मध्याह्ने पैतृकं तथा। ततो मातामहानां तु वृद्धौ श्राद्धत्रयं स्मृतम् इति।

சொல்லப்பட்ட மூன்று ச்ராத்தத்திற்கும் வெவ்வேறு காலத்தைச் சொல்லுகிறுர், கார்க்யர்:— மாத்ரு ச்ராத்தத்தை முதல் நாளில் செய்ய வேண்டும். பித்ரு ச்ராத்தத்தை அன்றே (மங்கள தினத்திலேயே) செய்யவேண்டும். மாதாமஹ ச்ராத்தத்தை மறுநாளில் செய்ய வேண்டும். இவ்விதம் நாந்தீ ச்ராத்தம் மூன்று விதமாய் விதிக்கப்பட்டுள்ளது. இதில் விசேஷத்தைச் சொல்லுகிறுர், சாதாதபர்:— மாத்ரு ச்ராத்தத்தைப் பூர்வாஹ்ணத்திலும், பித்ரு ச்ராத்தத்தை மத்யாஹ்னத்திலும், மாதாமஹ ச்ராத்தத்தைப் பிறகும் செய்ய வேண்டும். இவ்விதம் மூன்று ச்ராத்தமும் விதிக்கப்பட்டுள்ளது.

एवं दिनत्रयपक्षो यदा दुष्करस्तदा त्वाह वृद्ध शातातपः— पृथग्दिने त्वशक्तश्चेदेकस्मिन् पूर्ववासरे। श्राद्धत्रयं तु कुर्वीत वैश्वदेवं तु तान्त्रिकम् इति। फलदेशकालद्रव्य-देवतासाधारण्यादत्र वैश्वदैविकं तन्त्रेणैव कार्यमित्यर्थः। एतच्च पूर्वाह्णे कर्तव्यम्। पूर्वाह्णे दैविकं कार्यमपराह्णे तु पैतृकम्। एकोद्दिष्टं तु मध्याह्ने प्रातर्वृद्धिनिमित्तकम् इति प्रचेतः स्मृतेः। प्रातः शब्देनात्र पूर्वाह्ण उच्यते — पूर्वाह्णे वै भवेद्वृद्धिर्विना जन्मनिमित्तकम् इति स्मरणात्।

இவ்விதம் மூன்று நாளில் செய்ய முடியாவிடில் அப்பொழுது சொல்லுகிறுர், வ்ருத்த சாதாதபர்:— "தனித்தனி தினங்களில் செய்யச் சக்தி இல்லாதவனுகில், முதல் நாள் ஒன்றிலேயே மூன்று ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். விச்வேதேவ வரணம் ஒன்றே." பலன், தேசம்,

காலம், த்ரவ்யம், தேவதை இவைகள் ஸமானமாகியதால், இந்த ச்ராத்தங்களில் விச்வேதேவ வரணம் ஒன்றாகவே செய்யப்பட வேண்டும் என்பது பொருள். இந்த ச்ராத்தம் பூர்வாஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும். ''பூர்வாஹ்ணத்தில் தேவகார்யத்தையும், அபராஹ்ணத்தில் பித்ரு கார்யத்தையும், மத்யாஹ்னத்தில் ஏகோத்திஷ்டத்தையும், நாந்தீ ச்ராத்தத்தை ப்ராத:காலத்திலும் செய்ய வேண்டும்'', என்று ப்ரசேதஸ் ஸ்ம்ருதி இருப்பதால். இந்த வசனத்தில் 'ப்ராத:' என்ற சப்தத்தால் பூர்வாஹ்ணம் சொல்லப்படுகிறது. ''நாந்தீ ச்ராத்தம் பூர்வாஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும். புத்ரஜனன நிமித்தமான நாந்தீ ச்ராத்தத்தைத் தவிர்த்து'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்,

तथा च गार्ग्यः — ललाटसंमिते भानौ प्रथमः प्रहरः स्मृतः । स एवाध्यर्धसंयुक्तः प्रातरित्यभिधीयते इति । भरद्वाजोऽपि — पूर्वाह्ण एव नान्दी स्यादपराह्णे तु पैतृकम् इति । अग्न्याधाननिमित्तं त्वपराह्णे कार्यम् — आमश्राद्धं तु पूर्वाह्णे सिद्धान्नेन तु मध्यतः । पार्वणं चापराह्णे तु वृद्धिश्राद्धं तथाऽऽग्निकम् इति गालवस्मरणात् ।

அவ்விதமே, கார்க்யர்:— ஸூர்யன் நெற்றியளவு உயரத்தில் இருக்கும் பொழுது முதல் யாமம் எனப்படுகிறது. அக்காலமே அரை யாமத்துடன் கூடியதானால் ப்ராதக்காலம் எனப்படுகிறது. பரத்வாஜரும்:— பூர்வாஹ்ணத்திலேயே நாந்தீ ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். பித்ரு ச்ராத்தம் அபராஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும். அக்ந்யாதானத்தைக் குறித்த நாந்தீ ச்ராத்தம் அபராஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும். ''ஆமச்ராத்தத்தைப் பூர்வாஹ்ணத்திலும், அன்ன ச்ராத்தத்தை மத்யாஹ்னத்திலும், பார்வண ச்ராத்தத்தை அபராஹ்ணத்திலும், ஆதான நிமித்தமான நாந்தீ ச்ராத்தத்தை அபராஹ்ணத்திலும் செய்ய வேண்டும்'' என்று காலவ ஸ்ம்ருதி உள்ளது.

तत्र नियतकालसीमन्तान्नप्राशनचौलोपनयनादि निमित्तकम्, ब्राह्मणानां भोजनमुपायनवत्, ब्राह्मणान् भोजयित्वा इत्यादिना कर्मादिषु विहितं श्राद्धं तस्मिन्नेव दिने पूर्वाह्णेऽनुष्ठेयम्, विवाहादावन्ते विहितमभ्युदयश्राद्धं पूर्वाह्णे विवाहादौ सति तस्मिन्नेव दिने पूर्वाह्णे कर्तव्यम्, रात्रौ विवाहादौ सति श्वः प्रभाते कर्तव्यम्। अनियतनिमित्तकं पुत्रजन्मग्रहणादि श्राद्धं निमित्तानन्तरं कुर्यात्।

அவைகளுள், நிச்சயமுள்ள காலத்தையுடைய ஸீமந்தம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம் முதலியவைகளைப் பற்றிய "ப்ராம்ஹணாநாம் போஜநம் உபாயநவத்", "ப்ராம்ஹணாந் போஜயித்வா" என்பது முதலிய வசனங்களால் சுபகர்மங்களின் ஆதியில் விதிக்கப்பட்டுள்ள ச்ராத்தத்தை அதே தினத்தில் பூர்வாஹ்ணத்தில் செய்ய வேண்டும். விவாஹம் முதலியதில் முடிவில் விதிக்கப்பட்ட நாந்தீ ச்ராத்தத்தை, பூர்வாஹ்ணத்தில் விவாஹம் முதலியது செய்யப்பட்டால் அதே தினத்தில் பூர்வாஹ்ணத்தில் செய்ய வேண்டும். ராத்ரியில் விவாஹம் முதலியது செய்யப்பட்டால் மறுநாள் காலையில் செய்ய வேண்டும். நிச்சயம் இல்லாத நிமித்தத்தை உடைய புத்ரஜனனம், க்ரஹணம் முதலியதைப் பற்றிய ச்ராத்தத்தையோவெனில், அந்த நிமித்தத்துக்குப் பிறகு செய்ய வேண்டும்.

यदाह लोकाक्षिः- नियतेषु निमित्तेषु प्रातर्वृद्धिनिमित्तकम्। पुत्रजन्मनि कुर्वीत श्राद्धं तात्कालिकं बुधः इति। तथा कार्ष्णाजिनिः — प्रादुर्भावे पुत्रपुत्र्योर्ग्रहणे चन्द्रसूर्ययोः। स्नात्वाऽनन्तरमात्मीयान् पितॄश्राद्धेन तर्पयेत् इति। उक्तमर्थमभिप्रेत्य कालादर्शकारः — नैमित्तिकं तु यत् श्राद्धं निमित्तानन्तरं भवेत्। नान्दीमुखाह्वयं प्रातराग्निकं त्वपराह्णतः इति। नान्दीमुखनिमित्तान्याह स एव — सीमन्त व्रत चौल नामकरणान्नप्राशनोपायनस्नानाधान विवाह यज्ञ तनयोत्पत्ति प्रतिष्ठासु

च । पुंसूत्यावसथप्रवेशन सुताद्यास्यावलोकाश्रमस्वीकार क्षितिपाभिषक दयिताद्यर्तौ च नान्दीमुखम् इति । व्रतानि - प्राजापत्यादीनि, उपायनम् - उपनयनम्, स्नानम् - समावर्तनम्, प्रतिष्ठा - देवताप्रतिष्ठा, वापी कूपतटाकादिप्रतिष्ठा च, पुंसूतिः - पुंसवनम्, आवसथप्रवेशनम् - गृहप्रवेशः, सुताद्यास्यावलोकः - सुतस्य सुतायाश्च आद्यः - प्रथमः, आस्यावलोकः - मुखप्रेक्षणम्, दयितायाः - भार्यायाः, आद्यर्तुः - प्रथमरजः प्रादुर्भावः, एतेषु निमित्ते नान्दीमुखं कार्यमित्यर्थः ।

அதைச் சொல்லுகிறார், லோகாக்ஷி:— "நிச்சிதமான நிமித்தங்களில் நாந்தீ ச்ராத்தத்தை ப்ராதக் காலத்தில் செய்ய வேண்டும். புத்ர ஜனனத்தில் நாந்தீ ச்ராத்தத்தை அந்தக் காலத்தில் அறிந்தவன் செய்ய வேண்டும்." அவ்விதம் கார்ஷ்ணாஜினி:— "பிள்ளை, பெண் இவர்களின் ஜனனத்திலும், சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களிலும் ஸ்நானம் செய்து, பிறகு தனது பித்ருக்களை ச்ராத்தத்தால் தர்ப்பிக்க வேண்டும்." இவ்விதம் சொல்லப்பட்டுள்ள விஷயத்தை அபிப்ராயத்தில் வைத்துச் சொல்லுகிறார், காலாதர்சகாரர்:— நைமித்திகமான ச்ராத்தம் எதுவோ, அது நிமித்தத்திற்குப் பிறகு செய்யப்பட வேண்டும். நாந்தீ ச்ராத்தம், ப்ராதக்காலத்தில் செய்யப்பட வேண்டும். அக்ந்யாதான நிமித்தமான ச்ராத்தம் அபராஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும், என்று. நாந்தீ ச்ராத்தத்திற்கு நிமித்தங்களை (காரணங்களை)ச் சொல்லுகிறார் காலாதர்சகாரரே:— ஸீமந்தம், ப்ராஜாபத்யாதி வ்ரதங்கள், சௌளம், நாமகரணம், அன்னப்ராசனம், உபநயனம், ஸமாவர்த்தனம், அக்ந்யாதானம், விவாஹம், யாகம், புத்ரஜனனம், தேவதாப்ரதிஷ்டை, வாபீ கூப தடாகாதி ப்ரதிஷ்டை, பும்ஸவனம், க்ருஹப்ரவேசம், புத்ரன் புத்ரி இவர்களின் முகத்தை முதல் தடவையாய்ப் பார்ப்பது,

ஸன்யாஸ ஆச்ரம ஸ்வீகாரம், ராஜ்யாபிஷேகம், பார்யையின் முதல் ரஜோதர்சனம் என்ற இந்த நிமித்தங்களில் நாந்தீ ச்ராத்தம் செய்யப்பட வேண்டும், என்று.

तत्र लोकाक्षिः — नामान्नचौलगोदान सोमोपनयपुंसवे । स्नानाधानविवाहेषु नान्दीश्राद्धं विधीयते इति । कार्ष्णाजिनिः — कन्यापुत्रविवाहेषु प्रवेशे नववेश्मनः । नामकर्माणि बालानां चूडाकर्मादिके तथा । सीमन्तोन्नयने चैव पुत्रादिमुखदर्शने । नान्दीमुखान् पितृगणान् पूजयेत् प्रयतो गृही इति । कात्यायनः - पुत्रोत्पत्तौ प्रतिष्ठासु तन्मौञ्जी-त्यागबन्धयोः । चूडायां च विवाहे च वृद्धिश्राद्धं समाचरेत् इति ।

' அதில், லோகாக்ஷி:— நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், கோதானம், ஸோமயாகம், உபநயனம், பும்ஸவனம், ஸ்நானகர்மா, அக்ந்யாதானம், விவாஹம் இவைகளில் நாந்தீ ச்ராத்தம் விதிக்கப்படுகிறது. கார்ஷ்ணாஜினி:— பெண், பிள்ளை இவர்களின் விவாஹம், நூதன க்ருஹப்ரவேசம், குழந்தைகளின் நாமகரணம், சௌளம் முதலியவை, ஸீமந்தம், புத்ரனின் முகத்தை முதல் தடவையாகப் பார்ப்பது, இவைகளில் நாந்தீமுகர்களான பித்ருகணங்களை க்ருஹஸ்தன் சுத்தனாய்ப் பூஜிக்க வேண்டும். காத்யாயனர்:— புத்ரஜனனம், தேவதா ப்ரதிஷ்டை, உபநயனம், ஸ்நானகர்மா, சௌளம், விவாஹம் இவைகளில் நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

वृद्धगार्ग्यः — अग्न्याधानाभिषेकादाविष्टापूर्ते स्त्रिया ऋतौ । वृद्धिश्राद्धं प्रकुर्वीत ह्याश्रमग्रहणे तथा इति । पारस्करः — निषेककाले सोमे च सीमन्तोन्नयने तथा । ज्ञेयं पुंसवने श्राद्धं कर्माङ्गं विधिवत्कृतम् इति । निषेककाले - गर्भाधानकाले । सोमशब्दोऽत्र आधानाग्निहोत्रादि कर्मणामुपलक्षणार्थः ।

வ்ருத்தகார்க்யர்:— அக்ந்யாதானம், பட்டாபிஷேகம் முதலியது, யாகம், பூர்த்தம் (குளம் வெட்டுவது முதலியது), பார்யையின் ப்ரதம ரஜோதர்சனம், ஆச்ரம ஸ்வீகாரம் இவைகளில் நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பாரஸ்கரர்:— கர்ப்பாதானம், ஸோமயாகம், ஆதானம், அக்நி ஹோத்ரம் முதலியவை, ஸீமந்தம், பும்ஸவனம், இவைகளில் கர்மத்துக்கு அங்கமாய் விதிப்படி நாந்தீ ச்ராத்தம் செய்யப்பட வேண்டும்.

स्मृत्यन्तरे — गर्भाधाने विवाहे च सुवने जातकर्मणि । नामोपकर्मस्नानेषु व्रतेषु च समापने। ब्राह्मणान् भोजयेदादौ इति। तत्रैव — सीमन्तोन्नयने चैव अन्नप्राशनचौलयोः । उपायने च गोदाने चादावेव समाचरेत् इति । एतच्च कर्माङ्गश्राद्धमसकृत् क्रियमाणाग्निहोत्रादि कर्मसु प्रथमप्रयोग एव कर्तव्यम्।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— கர்ப்பாதானம், விவாஹம், பும்ஸவனம், ஜாதகர்மம், நாமகரணம், உபாகர்மா, ஸ்நானகர்மா, வ்ரதங்களின் ஆரம்பம், அவைகளின் ஸமாபனம், இவைகளில் கர்மத்தின் ஆதியில் நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஸீமந்தம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம், கோதானம், இவைகளில் கர்மத்தின் ஆரம்பத்திலேயே நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இந்தக் கர்மாங்கமான நாந்தீ ச்ராத்தம் அடிக்கடி செய்யப்படும் அக்நிஹோத்ரம் முதலிய கர்மங்களில் ஆரம்பத்தில் மட்டில் செய்யப்பட வேண்டும்.

यत आह कात्यायनः — नानिष्ट्वा तु पितॄन् श्राद्धे कर्म वैदिकमाचरेत् । असकृद्यानि कर्माणि क्रियेरन् कर्मकारिभिः । प्रतिप्रयोगं नैतास्स्युर्मातरः श्राद्धमेव इति । स एव — आधाने होमयोश्चैव वैश्वदेवे तथैव च। बलिकर्मणि दर्शे च पौर्णमासे तथैव च। नव यज्ञे च यज्ञज्ञा (श्राद्धमाहुः) वदन्त्येवं मनीषिणः । एकमेव भवेत्

श्राद्धमेतेषु न पृथक् पृथक् इति। होमयो रित्यनेनाधानसमभिव्याहारात् द्विवचनाच्च सायंप्रातरग्निहोत्र होमावुक्तौ ॥ अष्टकादिश्राद्धेषु प्रथमप्रयोगेऽपि कर्माङ्गश्राद्धं न कर्तव्यम्।

அதைச் சொல்லுகிறார், காத்யாயனர்:— நாந்தீ ச்ராத்தத்தால் பித்ருக்களைப் பூஜிக்காமல் வைதிக கர்மத்தைச் செய்யக் கூடாது. கர்மானுஷ்டானம் செய்பவர்களால் எந்தக் கர்மங்கள் அடிக்கடி செய்யப்படுகின்றனவோ, அக்கர்மங்களில் ஒவ்வொரு தடவையிலும் மாத்ரு பூஜனமும் நாந்தீ ச்ராத்தமும் செய்யப்பட வேண்டியதில்லை. காத்யாயனரே:— அக்ந்யாதானம், காலை மாலைகளில் அக்னி ஹோத்ர ஹோமங்கள், வைச்வதேவம், பலிகர்மம், தர்சம், பூர்ணமாஸம், நவயஜ்ஞம் இவைகளில் யஜ்ஞத்தையறிந்த புத்திமான்கள் நாந்தீ ச்ராத்தத்தை விதிக்கின்றனர். இவைகளில் ச்ராத்தம் ஒன்றே. தனித்தனி இல்லை. அஷ்டகா ச்ராத்தம் முதலியவைகளின் ஆரம்பத்திலும் அந்தக் கர்மத்துக்கு அங்கமாக நாந்தீ ச்ராத்தம் செய்யப்பட வேண்டியதில்லை.

यतोऽनन्तरमाह स एव — नाष्टकादौ भवेत् श्राद्धं न श्राद्धे श्राद्धमिष्यते इति । वृद्धशातातपोऽत्र विशेषमाह — त्रिष्वप्येतेषु युग्मांस्तु ब्राह्मणान्नियतः शुचिः । प्रदक्षिणं तु सव्येन भोजयेद्देवपूर्वकम् इति । अयमर्थः — दैवे द्वौ ब्राह्मणौ मातृश्राद्धे द्वौ पितृश्राद्धे द्वौ सपत्नीकमातामहश्राद्धे द्वौ एवमष्टावरान् ब्राह्मणान् निमन्त्रणादिविसर्जनान्तं सर्वमुपचारजातं प्रदक्षिणं यथा भवति, तथा कुर्वन् सव्येन - सव्यांसगतेनैव यज्ञसूत्रेणोत्तरवाससा चान्वितः श्राद्धकर्ता भोजयेत् इति।

ஏனெனில் அடுத்துச் சொல்லுகின்றார், காத்யாயனர்:— அஷ்டகை முதலிய ச்ராத்தத்தின் ஆரம்பத்தில் நாந்தீ ச்ராத்தம் இல்லை. ச்ராத்தத்துக்கு

அங்கமான ச்ராத்தம் கிடையாது, என்று. இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், வ்ருத்த சாதாதபர்:— "இந்த மூன்று ச்ராத்தங்களிலும் இரட்டைப் படையான ப்ராம்ஹணர்களை, சுத்தனாய், ப்ரதக்ஷிணமாய், உபவீதியாய், விச்வேதேவர்களை முன்னிட்டு புஜிப்பிக்க வேண்டும்", என்று. இது பொருள்:— விச்வேதேவ ஸ்தானத்தில் இருவர், மாத்ரு ஸ்தானத்தில் இருவர், பித்ரு ஸ்தானத்தில் இருவர், ஸபத்னீக மாதாமஹர்களின் ஸ்தானத்தில் இருவர், இவ்விதம் எட்டுப் பேர்களுக்குக் குறையாத ப்ராம்ஹணர்களை வரிப்பது முதல் அனுப்புவது வரையில் எல்லா உபசாரங்களையும் ப்ரதக்ஷிணமாய்ச் செய்பவனாய், உபவீதியாய் = இடது தோளில் உபவீதம் உத்தரீயம் இவைகளைத் தரித்தவனாய், ச்ராத்தம் செய்பவன் புஜிப்பிக்க வேண்டும்.

याज्ञवल्क्यः — एवं प्रदक्षिणावृत्को वृद्धौ नान्दीमुखान् पितॄन् । यजेत दधिकर्कन्धूमिश्रान् पिण्डान् यवैः क्रियाः इति । कर्कन्धूः - बदरीफलम् । प्रचेताः — न जपेत् पैतृकं जप्यं न मांसं तत्र दापयेत् । प्राङ्मुखो देवतीर्थेन क्षिप्रं देशविमार्जनम् इति । आश्वलायनः — अथाभ्युदयिके युग्मा ब्राह्मणा अमूला दर्भाः प्राङ्मुखो यज्ञोपवीती स्यात् प्रदक्षिण मुपचारो यवास्तिलार्था गन्धादिदानं च द्विः ऋजू दर्भावासने दद्यात्, यवोऽसि सोमदेवत्यो गोसवे देवनिर्मितः । प्रत्नवद्भिः प्रत्तः पुनर्नान्दीमुखानिमान् लोकान् प्रीणयाहि नः स्वाहा इति यवावापनम् इति ।

யாஜ்ஞவல்க்யர்:— இவ்விதம் ப்ரதக்ஷிணமாய் நாந்தீ ச்ராத்தத்தில் நாந்தீ முகர்கள் என்ற பித்ருக்களைக் குறித்து தயிர், இலந்தைப் பழம், இவைகளுடன் கூடிய பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். யவங்களால் பூஜை முதலிய கார்யங்களைச் செய்ய வேண்டும். ப்ரசேதஸ்:— பைத்ருக ஜபம் (அபிச்ரவண ஜபம்) கூடாது. மாம்ஸத்தைக்

கொடுக்கக் கூடாது. கிழக்கு நோக்கியவனுய்த் தேவ தீர்த்தத்தால் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். போஜன ஸ்தல சுத்தியை உடனே செய்ய வேண்டும். **ஆச்வலாயனர்:—** நாந்தீ ச்ராத்தத்தில் இரட்டைப் படையான ப்ராம்ஹணர்கள், வேர் இல்லாத தர்ப்பைகள். கிழக்கு நோக்கியவனுய், யஜ்ஞோபவீதியாய் இருக்க வேண்டும். உபசாரத்தை வலமாய்ச் செய்ய வேண்டும். எள்ளின் ஸ்தானத்தில் யவங்கள். சந்தனம் முதலியதைக் கொடுப்பதும் இருமுறை. ஆஸனத்தில் மடிக்காத இரண்டு தர்ப்பைகளைக் கொடுக்க வேண்டும். ''யவோZஸி + ஸ்வாஹா'' என்று யவங்களைப் போடவும்.

मुद्गलः — देवे द्वावेको वा पितृष्वेको द्वौ वा ब्राह्मणान् श्राद्धे कल्पयेत् इति। कात्यायनः — यवैस्तिलार्थस्तत्र यवोसीत्यूहो न स्वधां प्रयुञ्जीत। सदा परिचरेत् भक्त्या पितॄनप्यत्र देववत्। निपातो हि न सव्यस्य जानुनो विद्यते क्वचिदिति। स एव — नान्दीमुखान् पितॄनावाहयिष्य इति पृच्छति अस्तु स्वधेत्यस्य स्थाने नान्दीमुखाः पितरः प्रीयन्तामिति संपन्नमिति तृप्तिप्रश्ने दधिबदराक्षतमिश्राः पिण्डाः इति।

**முத்கலர்:—** விச்வேதேவ ஸ்தானத்தில் இருவர்கள் அல்லது ஒருவர். பித்ரு ஸ்தானத்தில் ஒருவர் அல்லது இருவர். இவ்விதம் ப்ராம்ஹணர்களை ச்ராத்தத்தில் வரிக்கவும். **காத்யாயனர்:—** யவங்களைக் கொண்டு எள்ளின் கார்யத்தைச் செய்யவும். அதில் 'யவோSஸி' என்ற மந்த்ரத்தில் ஊஹம் செய்ய வேண்டும். ஸ்வதா சப்தத்தை உச்சரிக்கக் கூடாது. எப்பொழுதும் பக்தியுடன் பித்ருக்களையும் தேவர்களைப் போல் உபசரிக்க வேண்டும். இடது முழங்காலை மடித்துக் கொள்வது என்பது ஒரு காலும் இவ்விடத்தில் இல்லை. **காத்யாயனரே:—** ''நாந்தீ முகாந் பித்ரூந் ஆவாஹயிஷ்யே'' என்று கேட்க வேண்டும். ''அஸ்து ஸ்வதா'' என்ற இடத்தில் ''நாந்தீமுகா: பிதர: ப்ரீயந்தாம்'' என்று கேட்க வேண்டும். த்ருப்தி ப்ரச்னத்தில் ''ஸம்பந்நம்'' என்று கேட்க வேண்டும்.

தயிர், இலந்தைப் பழம், அக்ஷதை இவைகளுடன் கூடிய பிண்டங்கள்.

वृद्धवसिष्ठोऽपि-दधिकर्कन्धुसंमिश्राः पिण्डाः कार्या यथाक्रमम्। प्राङ्मुखो देवतीर्थेन प्राक्कूलेषु कुशेषु च। दत्वा पिण्डान् न कुर्वीत पिण्डपात्रमधोमुखम् इति। पिण्डदानमत्र भोजनशालाया बहिः कार्यम्, यदाह प्रचेताः— बहिस्तु प्राक्कूलेषु च दध्यक्षतकर्कन्धूमिश्रान् पिण्डान्निवापयेत् इति। पिण्डदानमत्र भोजनशालया बहिः कार्यम्, यदाह प्रचेताः — बहिस्तु प्राक्कूलेषु च दध्यक्षतकर्कन्धूमिश्रान् पिण्डान्निवापयेत् इति।

வ்ருத்தவஸிஷ்டரும்:— தயிர், இலந்தைப் பழம் இவைகளுடன் கூடிய பிண்டங்களை க்ரமப்படி கொடுக்க வேண்டும். கிழக்கு நோக்கியவனாய், தேவதீர்த்தத்தால், கிழக்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில் கொடுக்க வேண்டும். பிண்டங்களைக் கொடுத்த பிறகு பிண்ட பாத்ரத்தைக் கவிழ்க்கக் கூடாது. நாந்தீ ச்ராத்தத்தில் பிண்ட தானத்தைப் போஜன சாலைக்கு வெளியில் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார், ப்ரசேதஸ்:— (போஜனசாலைக்கு) வெளியில் கிழக்கு நுனியாயுள்ள (தர்ப்பங்களில்.) தயிர், அக்ஷதை, இலந்தைப் பழம் இவைகளுடன் கூடிய பிண்டங்களைக் கொடுக்க வேண்டும்.

चतुर्विंशतिमते — एकं नाम्नाऽपरं तूष्णीं दद्यात् पिण्डान् पृथक् पृथक् इति। पृथक् पृथक् - एकैकस्मिन् द्वौ द्वौ पिण्डौ दद्यात्, तत्र प्रथमपिण्डं नाम्ना गोत्रसहितेन दद्यात् द्वितीयं तूष्णीं दद्यादित्यर्थः। आश्वलायनोऽपि — प्राचीनाग्रान् दर्भान् संस्तीर्य तेषु पृषदाज्यमिश्रेण भुक्तशेषेणैकैकस्य द्वौ द्वौ पिण्डौ दद्यात् इति।

சதுர்விம்சதிமதத்தில்:— "ஒரு பிண்டத்தைப் பெயரை உச்சரித்தும், மற்றொன்றை மந்த்ரமில்லாமலும்

தனித்தனியாய் பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். ஒவ்வொருவருக்கு இரண்டிரண்டு பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். அவைகளுள் முதல் பிண்டத்தைக் கோத்ரத்துடன் கூடிய பெயரைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். இரண்டாவது பிண்டத்தை மந்த்ரமில்லாமல் கொடுக்க வேண்டும், என்று பொருள். **ஆச்வலாயனரும்:—** கிழக்கு நுனியாய்த் தர்ப்பங்களைப் பரப்பி, அவைகளில் தயிர் நெய்யுடன் கூடிய போஜன சேஷ அன்னத்தால் ஒவ்வொருவர்க்கு இரண்டிரண்டு பிண்டங்களைக் கொடுக்க வேண்டும்.

पिण्डदानं वैकल्पिकमित्युक्तं भविष्यत्पुराणे — पिण्डनिर्वापणं कुर्यान्न वा कुर्यान्नराधिप । वृद्धिश्राद्धे महाबाहो कुलधर्मानवेक्ष्य तु इति । एतच्चाभ्युदयश्राद्धमापदादिनिमित्तेषु आमेन हेम्ना वा कुर्यात् । तत्र मरीचिः — अनग्निश्च प्रवासी च यस्य भार्या रजस्वला । आमश्राद्धं प्रकुर्वीत मातापित्रोः क्षयादृते इति । व्याघ्रपादः — आर्तवेऽन्नद्विजाभावे ग्रहणे देशविप्लवे । आमश्राद्धं द्विजः कुर्यात् शूद्रः कुर्यात् सदैव हि इति ।

பிண்டதானம் வைகல்பிகம் (செய்தாலும் செய்யலாம் செய்யாமலும் இருக்கலாம்) என்று சொல்லப்பட்டுள்ளது. **பவிஷ்யத் புராணத்தில்:—** ஓ அரசனே! பிண்ட தானத்தைச் நாந்தீ ச்ராத்தத்தில் அவரவர் குலாசாரத்தை நோக்கி செய்யலாம், செய்யாமலும் இருக்கலாம். இந்த நாந்தீ ச்ராத்தத்தைச் செய்ய முடியாமல் ஆபத்து முதலிய காரணங்கள் நேர்ந்தால் ஆமத்தாலாவது, ஹிரண்யத்தாலாவது செய்ய வேண்டும். அதில், **மரீசி:—** அக்னி இல்லாதவனும், தேசாந்தரத்தில் இருப்பவனும், ரஜஸ்வலாபதியும், மாதா பிதாக்களின் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தைத் தவிர்த்து ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். **வ்யாக்ரபாதர்:—** ரஜ:காலத்திலும், அன்னம், ப்ராம்ஹணன் இவைகள்

கிடைக்காவிடினும், க்ரஹணத்திலும் தேசத்தின் தொந்தரவிலும் ப்ராம்ஹணன் ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். சூத்ரன் எப்பொழுதுமே ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

गालवः —तीर्थेऽनग्न्यावापदि च देशभ्रंशे रजस्यपि। हेमश्राद्धं द्विजैः कार्यं शूद्रैः कार्यं सदैव हि इति। पराशरः — असमर्थोऽन्नदानस्य धान्यमामं स्वशक्तितः। प्रदास्यति द्विजाग्रेभ्यः स्वल्पामपि च दक्षिणाम् इति। पुराणेऽपि — आमं ददानः कौन्तेय दद्यादन्नाच्चतुर्गुणम्। सिद्धान्ने तु विधिर्यः स्यादामश्राद्धेऽप्ययं विधिः इति।

காலவர்:— புண்ய தீர்த்தம், அக்னி இல்லாமை, ஆபத்து, தேச ப்ரம்சம், ரஜ:காலம் இந்த நிமித்தங்களில் ப்ராம்ஹணர்கள் ஹிரண்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். சூத்ரர்கள் எப்பொழுதுமே ஹிரண்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பராசரர்:— அன்னதானம் செய்வதற்குச் சக்தி இல்லாதவன் தன் சக்தியை அனுஸரித்துத் தான்யத்தையாவது ஆமத்தையாவது ப்ராம்ஹணர்களின் பொருட்டு அல்பமாகவாவது தக்ஷிணையையும் கொடுக்க வேண்டும். புராணத்திலும்:— ஓ கௌந்தேய! ஆமத்தைக் கொடுப்பவன் அன்னத்தைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகமாகக் கொடுக்க வேண்டும். அன்ன ச்ராத்தத்தில் எந்த விதியோ அதே ப்ரகாரம் ஆமச்ராத்தத்திலும் விதிக்கப்படுகிறது.

अत्र विज्ञानेश्वरः —यद्यद्ददाति विप्रेभ्यः शृतं वा यदि वाऽशृतम्। तेनाऽग्नौ करणं कुर्यात् पिण्डांस्तेनैव निर्वपेत् इति। चतुर्विंशतिमते तु — आमश्राद्धं यदा कुर्यात् पिण्डदानं कथं भवेत्। गृहादाहृत्य पक्वान्नं पिण्डं दद्यात्तिलैस्सह। येनाग्नौकरणं कुर्यात् पिण्डांस्तेनैव निर्वपेत् इति। होमपिण्डदानयोः सन्नियोगशिष्टत्वादवधारणाच्च सङ्कल्पविधाने त्वग्नौ होमाभावे पिण्डदानं नास्तीति गम्यते।

இவ்விஷயத்தில், விஜ்ஞானேச்வரர்:— ப்ராம்ஹணர்களின் பொருட்டுப் பக்குவமாகியதோ, பக்குவமாகாததோ எதைதைக் கொடுக்கின்றுனோ அதனாலேயே அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். அதனாலேயே பிண்டங்களையும் கொடுக்க வேண்டும். சதுர்விம்சதிமதத்திலோ வெனில்:— எப்பொழுது ஆமச்ராத்தத்தைச் செய்கின்றுனோ, அப்பொழுது பிண்ட தானத்தை எப்படிச் செய்வது ? க்ருஹத்தினின்றும் பக்குவமான அன்னத்தை அடுத்து எள்ளுடன் சேர்த்துப் பிண்டங்களைக் கொடுக்கவும். அதனாலேயே அக்னியில் ஹோமம் செய்யவும். அதனாலேயே பிண்டங்களைக் கொடுக்கவும். ஹோம பிண்டதானங்கள் ஸந்நியோக சிஷ்டங்களானதாலும், 'ஏவ' என்று இருப்பதாலும், ஸங்கல்ப விதானமாக ச்ராத்தம் செய்யும் விஷயத்தில், அக்னியில் ஹோமம் செய்யாத விஷயத்தில் பிண்டதானம் இல்லை என்று அறியப்படுகிறது. ஸந்நியோக சிஷ்டங்கள் = சேர்த்து விதிக்கப்பட்ட பல கார்யங்கள். அவைகளுள் ஒன்றை நிஷேதித்தால் அதைச் சேர்ந்த மற்றவைகளுக்கும் நிஷேதம்.

तथा पितृमेधसारे — यद्यद्विप्रेभ्यो दद्यात् तेनैव होमः, तेन वा गृहादाहृतान्नेन वा पिण्डं दद्यात्, यदा होमः तदा पिण्डदानम् होमाभावे पिण्डदानाभावः, आमश्राद्धे चरोरभावात् तद्धर्माणामभावः, भोजनाभावात् तत्सम्बन्धिनां चाभावः। सङ्कल्पो वरणं पादप्रक्षालनं गन्धपुष्पादिदानं तण्डुलादिप्रदानं दक्षिणेत्यामश्राद्धं कार्यम् इति। तद्धर्माणाम् - उपस्तरणावदानादीनाम्, तत्सम्बन्धिनाम् - पात्राभिमन्त्रणादीनामित्यर्थः। हिरण्ये तूदकं पश्चान्मृतेऽहनि परेऽहनि इति वचनात्तर्पणं तदैव कार्यम्।

அவ்விதம், பித்ருமேதஸாரத்தில்:— "ப்ராம்ஹணர்களுக்கு எதைதைக் கொடுக்கின்றுனோ அதனாலேயே ஹோமம். அதனாலாவது வீட்டினின்று

கொண்டு வரப்பட்ட அன்னத்தினுலாவது பிண்டத்தைக் கொடுக்க வேண்டும். எப்பொழுது ஹோமம் உண்டோ அப்பொழுது பிண்டதானம் உண்டு. ஹோமம் செய்யாவிடில் பிண்டதானம் இல்லை. ஆமச்ராத்தத்தில் அன்னம் இல்லாததால் அதைச் சேர்ந்த தர்மங்களும் இல்லை. போஜனம் இல்லாததால் அதைச் சேர்ந்தவைகளும் இல்லை. ஸங்கல்பம், வரணம், பாதப்ரக்ஷாளனம், கந்தம், புஷ்பம் முதலியவைகளைக் கொடுப்பது, அரிசி முதலியவைகளைக் கொடுப்பது, தக்ஷிணுதானம் என்ற இவைகளுடன் ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்'' என்று உள்ளது. இதில் தத்தர்மாணும் = உபஸ்தானம், அவதானம் முதலியவைகளுக்கு, தத்ஸம்பந்திநாம் = இலையைத் தொட்டு அபிமந்த்ரணம் செய்வது முதலியவைகளுக்கு என்பது பொருள். ஹிரண்ய ச்ராத்தத்தில் தர்ப்பணத்தைப் பிறகு செய்ய வேண்டும். ப்ரத்யாப்திக ச்ராத்தத்தில் மறுநாளில் செய்ய வேண்டும்'' என்ற வசனத்தால் தர்ப்பணத்தை அப்பொழுதே செய்ய வேண்டும்.

## श्राद्धभेदाः ।

अथ श्राद्धभेदाः - प्रेतोद्देशेन पित्रुद्देशेन वा द्रव्यत्यागः श्राद्धम्, तदाह मरीचिः — प्रेतं पितॄंश्च निर्दिश्य भोज्यं यत्प्रियमात्मनः । श्रद्धया क्रियते यत्तु तत् श्राद्धं परिकीर्तितम् इति । ब्रह्माण्डपुराणेऽपि — देशे काले च पात्रे च श्रद्धया विधिना च यत् । पितॄनुद्दिश्य विप्रेभ्यो दत्तं श्राद्धमुदाहृतम् । तच्च पुनः पार्वणैकोद्दिष्टभेदेन द्विविधम्, त्रिपुरुषोद्देशेन यत् क्रियते तत्पार्वणम् । एकपुरुषोद्देशेन क्रियमाणमेकोद्दिष्टम् ।

## ச்ராத்த பேதங்கள்.

இனி ச்ராத்த பேதங்கள் சொல்லப்படும். ப்ரேதனை உத்தேசித்தாவது, பித்ருக்களை உத்தேசித்தாவது த்ரவ்யங்களைக் கொடுப்பது ச்ராத்தம் எனப்படும். அதைச் சொல்லுகிருர், மரீசி:— ப்ரேதனையும், பித்ருக்களையும்

உத்தேசித்துத் தனக்கு ப்ரியமான வஸ்துவை ச்ரத்தையுடன் கொடுப்பது எதுவோ அது ச்ராத்தம் எனப்படும். ப்ரம்ஹாண்ட புராணத்திலும்:— நல்ல தேசத்திலும், யோக்யமான ப்ராம்ஹணனிடத்திலும், ச்ரத்தையுடனும், விதியுடனும் பித்ருக்களை உத்தேசித்து எது ப்ராம்ஹணர்களின் பொருட்டுக் கொடுக்கப்படுகிறதோ அது ச்ராத்தம் எனப்படும். அந்த ச்ராத்தம் பார்வணம், ஏகோத்திஷ்டம் என்று இரண்டு விதமாயுள்ளது. மூன்று புருஷர்களை உத்தேசித்துச் செய்யப்படுவது பார்வணம். ஒருவனை உத்தேசித்துச் செய்யப்படுவது ஏகோத்திஷ்டம்.

तदाह कण्वः —— एकमुद्दिश्य यत् श्राद्धमेकोद्दिष्टं प्रकीर्तितम्। त्रीनुद्दिश्य तु यत्तद्धि पार्वणं मुनयो विदुः इति। एतत् द्विविधमपि श्राद्धं नित्यनैमित्तिककाम्यभेदेन त्रिधा भिद्यते। तदुक्तं कालादर्शे —— श्राद्धद्वयं तथोद्दिष्टमेकोद्दिष्टं च पार्वणम्। नित्यं नैमित्तिकं काम्यमिति तच्च पुनस्त्रिधा इति।

அதைச் சொல்லுகிறார், கண்வர்:— ஒருவனை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம் ஏகோத்திஷ்டம் எனப்பட்டுள்ளது. மூன்று பேர்களை உத்தேசித்துச் செய்யப்படுவது எதுவோ அது பார்வணம் என்றனர் முனிவர்கள். இந்த இரண்டு விதமான ச்ராத்தமும் நித்யம், நைமித்திகம், காம்யம் என்ற பேதத்தால் மூன்று விதமாய்ப் பிரிகிறது. அது சொல்லப்பட்டுள்ளது, காலாதர்சத்தில்:— ஏகோத்திஷ்டம் என்றும், பார்வணம் என்றும் இரண்டு விதமாய் ச்ராத்தம் சொல்லப்பட்டுள்ளது. நித்யம், நைமித்திகம், காம்யம் என்ற பேதத்தால் அந்த ச்ராத்தம் மறுபடி மூன்று விதமாகும்.

तत्र नियतोपाधौ चोदितं नित्यम्, यथा अमावास्यादौ विहितं श्राद्धम्। अनियतनिमित्तं हि नैमित्तिकम्, यथा उपरागादौ। कामनोपाधिकं काम्यम्, यथा तिथिनक्षत्रवारादिषु। तदुदाहरति

काष्र्णाजिनिः — मृताहेऽहरहर्दर्शे श्राद्धं यच्च महालये। तन्नित्यमुदितं सद्भिर्नित्यवत्तद्विधानतः। प्रेतश्राद्धं सपिण्डत्वं सङ्क्रान्तिग्रहणेषु च। संवत्सरोदकुम्भं च वृद्धिश्राद्धं निमित्ततः। तिथ्यादिषु च यत् श्राद्धं मन्वादिषु युगादिषु। अलभ्येषु च योगेषु तत्काम्यं समुदाहृतम् इति।

அவைகளுள், நியதமான காரணத்தில் விதிக்கப்பட்டுள்ளது நித்தியம் எனப்படும். அமாவாஸ்யை முதலிய காலத்தில் விதிக்கப்பட்டுள்ள ச்ராத்தம் முதலியது. நியதமில்லாத நிமித்தத்தை உடையது நைமித்திகம். க்ரஹணம் முதலிய நிமித்தத்தில் விதிக்கப்பட்டது போன்றது. பலனில் இச்சையைக் காரணமாக உடையது காம்யம். திதி, நக்ஷத்ரம், வாரம் முதலியவைகளில் சொல்லப்பட்டுள்ளது போன்றது. அதைச் சொல்லுகிருர், கார்ஷ்ணாஜினி:— ம்ருத தினத்திலும், ப்ரதி தினமும், அமாவாஸ்யையிலும், மஹாளயபக்ஷத்திலும் விதிக்கப்பட்ட ச்ராத்தம் எதுவோ, அது நித்யம் என்று ஸாதுக்களால் சொல்லப்பட்டு உள்ளது. நித்யத்தைப் போல் அவைகளை விதித்து இருப்பதால். ப்ரேத ச்ராத்தமும், ஸபிண்டீகரணமும், ஸங்க்ரமண ச்ராத்தமும், க்ரஹண ச்ராத்தமும், ஒரு வர்ஷம் வரையில் செய்யும் ஸோதகும்ப ச்ராத்தமும், நாந்தீ ச்ராத்தமும் நிமித்தத்தைப் பற்றி வருவதால் நைமித்திகம் எனப்படும். திதி முதலியவைகளிலும், மன்வாதிகளிலும், யுகாதிகளிலும், அலப்யமான யோகங்களிலும் விதிக்கப்பட்ட ச்ராத்தம் எதுவோ அது காம்யம் எனப்பட்டுள்ளது.

यत्तु विश्वामित्रेण द्वादशविधत्वमुक्तम् — नित्यं नैमित्तिकं काम्यं वृद्धिश्राद्धं सपिण्डनम्। पार्वणं चेति विज्ञेयं गौष्ठं शुद्ध्यर्थमष्टमम्। कर्माङ्गं नवमं प्रोक्तं दैविकं दशमं स्मृतम्। यात्रास्वेकादशं प्रोक्तं पुष्ट्यर्थं द्वादशं स्मृतम् इति, तत् नित्यनैमित्तिककाम्यावान्तर-विवक्षयैव, नतु ततः पार्थक्यविवक्षया।

ஆனால், விச்வாமித்ரரால்:— பன்னிரண்டு விதம் ச்ராத்தம் என்று எது சொல்லப்பட்டுள்ளதோ — "நித்யம், நைமித்திகம், காம்யம், நாந்தீ ச்ராத்தம், ஸபிண்டீகரணம், பார்வணம், கௌஷ்டம், சுத்யர்த்தம், கர்மாங்கம், தைவிகம், யாத்ரா ச்ராத்தம்; புஷ்டி ச்ராத்தம் என்று பன்னிரண்டு" என்ற வசனத்தால்; அது நித்யம், நைமித்திகம், காம்யம் இவைகளின் அவாந்தர பேதத்தைச் சொல்ல வேண்டிய விருப்பத்தால் தான். அவைகளைத் தவிர்த்துத் தனியானது என்று சொல்வதற்கல்ல.

तथा हि वृद्धवसिष्ठः —— अहन्यहनि यत् श्राद्धं तन्नित्यमिति कीर्तितम्। एकोद्दिष्टं तु यत् श्राद्धं तन्नैमित्तिकमुच्यते। अभिप्रेतार्थसिद्ध्यर्थं काम्यं पार्वणवत् स्मृतम्। पुत्रजन्मविवाहादौ वृद्धिश्राद्धमुदाहृतम्। नवानीतार्घ्यपात्रं च पिण्डश्च परिकीर्त्यते । पितृपात्रेषु पिण्डेषु सपिण्डीकरणं तु तत्। प्रतिपर्व भवेद्यस्मात् प्रोच्यते पार्वणं तु तत् ।। गोष्ठ्यां यत् क्रियते श्राद्धं गोष्ठीश्राद्धं तदुच्यते। बहूनां विदुषां प्राप्तौ सुखार्थं पितृतृप्तये । क्रियते शुद्धये यत्तु ब्राह्मणानां तु भोजनम् । शुद्ध्यर्थमिति तत् प्रोक्तं श्राद्धं पार्वणवत् कृतम्। निषेककाले सोमे च सीमन्तोन्नयने तथा । ज्ञेयं पुंसवने श्राद्धं कर्माङ्गं विधिवत् कृतम् । (गर्भाधाने विवाहे च सुवने जातकर्मणि। नामोपाकर्मणि स्नाने व्रतेषु च समापने। सीमन्तोन्नयने चैव ह्यन्नप्राशनचौलयोः। उपायने च गोदाने त्वादावेव समाचरेत् । देवानुदिश्य क्रियते यत्तद्दैविकमुच्यते । तन्नित्यश्राद्धवत् कुर्यात् द्वादश्यादिषु यत्नतः। गच्छन् देशान्तरं यद्धि श्राद्धं कुर्यात्तु सर्पिषा। तद्यात्रार्थमिति प्रोक्तं प्रवेशे च न संशयः इति।

அவ்விதமே, வ்ருத்த வஸிஷ்டர்:— ப்ரதி தினமும் செய்யப்படும் ச்ராத்தம் எதுவோ அது நித்யம் எனப்படும். ஒருவனை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம் எதுவோ அது நைமித்திகம் எனப்படும். இஷ்டம் ஸித்திப்பதற்காகச்

செய்யப்படும் ச்ராத்தம் காம்யம் எனப்படும். அது பார்வண தர்மங்களை உடையது. புத்ர ஜனனம், விவாஹம் முதலியதில் செய்யப்படும் ச்ராத்தம் நாந்தீ ச்ராத்தம் எனப்படுகிறது. புதிதான அர்க்ய பாத்ரமும் பிண்டதானமும் விதிக்கப்படுகிறது. பித்ருக்களுடைய அர்க்ய பாத்ரங்களிலும், பித்ருக்களின் பிண்டங்களிலும் அர்க்யத்தையும் பிண்டத்தையும் சேர்ப்பது ஸபிண்டீகரணம். ஒவ்வொரு பர்வத்திலும் செய்யப்படுவதால் அது பார்வணம் எனப்படுகிறது. ப்ராம்ஹண கோஷ்டியில் எந்த ச்ராத்தம் செய்யப்படுமோ, அது கோஷ்டீ ச்ராத்தம் எனப்படுகிறது. வித்வான்களான அநேக ப்ராம்ஹணர்களின் வரவில் ஸுகத்திற்காக பித்ருக்களின் த்ருப்தியின் பொருட்டு. சுத்திக்காக எந்த ப்ராம்ஹண போஜனம் செய்விக்கப்படுகிறதோ, அது சுத்யர்த்தம் எனப்படுகிறது. அது பார்வண தர்மமாயுள்ளது. கர்ப்பாதானம், ஸோம யாகம், ஸீமந்தோன்னயனம், பும்ஸவனம் இவைகளில் விதிப்படி செய்யப்படும் ச்ராத்தம் கர்மாங்கம் எனப்படும். (கர்ப்பாதானம், விவாஹம், பும்ஸவனம், ஜாதகர்மம், நாமகரணம், உபாகர்மம், ஸ்நானம், வ்ரதங்களின் ஆரம்பம், அவைகளின் ஸமாப்தி, ஸீமந்தம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம், கோதானம் இவைகளில் ச்ராத்தத்தை ஆதியிலேயே செய்யவேண்டும்.) தேவர்களை உத்தேசித்துச் செய்யப்படுவது எதுவோ அது தைவிகம் எனப்படுகிறது. அதை நித்ய ச்ராத்தத்தைப் போல் த்வாதசீ முதலிய காலங்களில் அவச்யம் செய்ய வேண்டும். தேசாந்தரம் செல்லுகிறவன் எந்த ச்ராத்தத்தை நெய்யுடன் செய்கிறானோ, அது யாத்ரார்த்தம் என்று சொல்லப்பட்டுள்ளது. யாத்ரை செய்த பிறகு வீட்டில் ப்ரவேசிக்கும் காலத்திலும் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். ஸந்தேஹமில்லை.

## अथ श्राद्धदेशाः

रत्नावल्यां - देशः कालस्तथा पात्रं द्रव्यं कर्ता पितामहाः। निष्पत्तिकारणान्याहुः कर्मणोऽस्य विपश्चितः इति। विष्णुः — दक्षिणाप्रवणे देशे तीर्थादौ वा गृहेऽपि वा। भूसंस्कारादिसंयुक्ते श्राद्धं कुर्यात् प्रयत्नतः इति। तीर्थं - देवर्षिसेवितं जलम्, आदिशब्देन पुण्याश्रमादि गृह्यते, भूसंस्कारः - गोमयादिनोपलेपः। आदिशब्देन अशुचिद्रव्यापसारणम्। स एव — गोमयेनोपलिप्तेषु विविक्तेषु गृहेषु च। कुर्यात् श्राद्धमथैतेषु नित्यमेव यथाविधि इति।

### ச்ராத்த தேசங்கள்.

இனி ச்ராத்த தேசங்கள் சொல்லப்படும். ரத்னுவளியில்:— தேசம், காலம், யோக்ய ப்ராம்ஹணன், த்ரவ்யம், கர்த்தா, பித்ருக்கள், இவைகள் ச்ராத்த பூர்த்திக்குக் காரணங்களாகும். விஷ்ணு:— தெற்குச் சரிவாயுள்ள தேசம், புண்யதீர்த்தம் முதலியது, அல்லது க்ருஹம், இவைகளில் பூமியின் ஸம்ஸ்காரம் முதலியதுள்ள ப்ரதேசத்தில் ச்ராத்தத்தை முயற்சியுடன் செய்ய வேண்டும். தீர்த்தம் = தேவர்களாலாவது ருஷிகளாலாவது ஸேவிக்கப்பட்ட ஜலம். ஆதி சப்தத்தால் புண்யமான ருஷிகளின் ஆச்ரமம் முதலியது சொல்லப்படுகிறது. பூஸம்ஸ்கார: = கோமயம் முதலியதால் மெழுகுவது முதலியது. ஆதிசப்தத்தால் அசுத்தமான வஸ்துக்களை அப்புறப்படுத்துவது சொல்லப்படுகிறது. விஷ்ணுவே:— கோமயத்தால் மெழுகப்பட்டதும் சுத்தமுமான க்ருஹங்களில் ச்ராத்தத்தை எப்பொழுதுமே விதிப்படி செய்ய வேண்டும்.

याज्ञवल्क्योऽपि — परिश्रिते शुचौ देशे दक्षिणाप्रवणे तथा इति। परिश्रिते - परितः प्रच्छादिते, दक्षिणावनते देशे श्राद्धं कुर्यादित्यर्थः। स्वतो दक्षिणाप्रवणत्वासंभवे देशस्य यत्नतो दक्षिणाप्रवणत्वं कार्यम्। तथा च मनुः — शुचिदेशं विविक्तं तु

गोमयेनोपलिप्य च । दक्षिणाप्रवणं चैव प्रयत्नेनोपपादयेत् इति । विष्णुधर्मोत्तरे — तस्माच्छ्राद्धानि देयानि पुण्येष्वायतनेषु च । नदीतीरेषु तीर्थेषु स्वभूमौ च प्रयत्नतः इति ।

**யாஜ்ஞவல்க்யரும்:—** நான்கு புறத்திலும் மறைக்கப்பட்டு உள்ளதும் சுத்தமாகியதும், தெற்கில் தாழ்ந்ததாயும் உள்ள ஸ்தலத்தில் (ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.) இயற்கையாகவே தெற்கில் தாழ்ந்தில்லாத விஷயத்தில் ப்ரயத்னத்துடன் தெற்கில் தாழ்வைச் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார், **மனு:—** சுத்தமாயும் ஜனங்களில்லாததாயும் உள்ள ஸ்தலத்தைக் கோமயத்தால் மெழுகி, தெற்கில் தாழ்ந்து உள்ளதாய் முயற்சியுடன் செய்ய வேண்டும். **விஷ்ணுதர்மோத்தரத்தில்:—** ஆகையால் ச்ராத்தங்களைப் புண்யமானஸ்தலங்களிலும், நதீதீரங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும், தன்னுடைய க்ருஹத்திலும் ப்ரயத்தனப்பட்டாவது செய்ய வேண்டும்.

देवलः — स्थलीषु गिरिपृष्ठेषु तीर्थेष्वायतनेषु च । विविक्तेषु च तुष्यन्ति श्राद्धेषु पितरस्सदा इति । स्थलीषु - अकृत्रिमभूमिष्वित्यर्थः । तथा च शङ्खः - गोगजाश्वादिपृष्ठेषु कृत्रिमायां तथा भुवि । न कुर्याच्छ्राद्धमेतेषु पारक्यासु च भूमिषु इति । कृत्रिमायां भुवि - वेदिकादावित्यर्थः । यमः — परकीयप्रदेशेषु पितॄणां निर्वपेत्तु यः । तद्भूमिस्वामिपितृभिः श्राद्धकर्म विहन्यते इति ।

**தேவலர்:—** செப்பனிடாமல் இயற்கையாகவே ஸமமாயுள்ள பூமிகளிலும், மலை ப்ரதேசங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும், புண்ய ஸ்தலங்களிலும், சுத்தமான ஸ்தலங்களிலும் ச்ராத்தங்கள் செய்யப்பட்டால் பித்ருக்கள் த்ருப்தியை அடைகின்றனர். அவ்விதமே, **சங்கர்:—** பசு, யானை, குதிரை முதலியதின் முதுகிலும், தன்னால் கட்டப்பட்ட திண்ணை முதலியதிலும், பிறர்களின் பூமிகளிலும், ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது. **யமன்:—** பிறனுடைய

தாகிய ப்ரதேசங்களில் எந்த ச்ராத்தம் செய்யப்படுகிறதோ, அந்த ச்ராத்தம் அந்த ப்ரதேசத்துக்குடையவனின் பித்ருக்களால் கெடுக்கப்படுகிறது.

(भारते च — पारक्ये भूमिदेशे च पितॄणां निर्वपेत्तु यः । तद्भूमिस्वामिपितृभिः श्राद्धकर्म विहन्यते । तस्मात् क्रीत्वा महीं दत्वा स्वल्पामपि विचक्षणः । पिण्डः पितृभ्यो दत्तो वै तस्यां भवति शाश्वतः इति । परकीयप्रदेशाः - परपरिगृहीतगृहगोष्ठारामादयः न पुनः तीर्थादीनि ।

(பாரதத்திலும்:— பிறனுடைய பூமியில் பித்ருக்களுக்கு ச்ராத்தத்தை எவன் செய்கின்றானோ, அவனுடைய அந்த ச்ராத்தமானது அந்தப் பூமிக்குடையவனின் பித்ருக்களால் கெடுக்கப்படுகிறது. ஆகையால் அந்தப் பூமியை உடையவனுக்கு ஸ்வல்பமாவது தனத்தைக் கொடுத்து விலைக்கு வாங்கி அந்த இடத்தில் பித்ருக்களுக்குப் பிண்டம் கொடுக்கப்பட்டால் அது அக்ஷயம் ஆகும். பிறனின் ஸ்தலம் என்பது பிறனால் க்ரஹிக்கப்பட்ட கொட்டில் தோட்டம் முதலியது. புண்ய தீர்த்தம் முதலியவைகள் அல்ல.)

तथा चादित्यपुराणे — अटवी पर्वताः पुण्या नदीतीराणि यानि च । सर्वाण्यस्वामिकान्याहुर्न हि तेषु परग्रहः । वनानि गिरयो नद्यः तीर्थान्यायतनानि च । देवखाताश्च गर्ताश्च न स्वामी तेषु विद्यते इति । कृमिकीटाद्युपहतं देशं श्राद्धे वर्जयेत् । तदाह यमः — रूक्षं कृमिहतं क्लिन्नं सङ्कीर्णानिष्टगन्धकम् । देशं त्वनिष्टशब्दं च वर्जयेत् श्राद्धकर्मणि इति । क्लिन्नं सकर्दमम्, सङ्कीर्णं - अन्येनाकीर्णम् ।

அவ்விதமே, ஆதித்யபுராணத்தில்:— புண்யங்களான காடு, பர்வதங்கள், நதியின் கரைகள், இவைகளைப் பொதுவானவை என்று சொல்லுகிறார்கள். அவைகளில் பிறனுக்கு ஸ்வாம்யம் இல்லை. காடுகள், மலைகள், நதிகள்,

புண்ய தீர்த்தங்கள், புண்ய ஸ்தலங்கள், தேவர்களால் வெட்டப்பட்ட குளங்கள், சிறிய குளங்கள் இவைகள் விஷயத்தில் அதிபதி ஒருவன் இல்லை. புழு, பூச்சி முதலியவைகளால் துஷ்டமான தேசத்தை ச்ராத்தங்களில் வர்ஜிக்க வேண்டும். அதைச் சொல்லுகிறார், யமன்:— கோரமாயும், புழுக்களால் கெடுக்கப்பட்டதும், சேறுள்ளதும், இதரனால் வ்யாபிக்கப்பட்டதும், கெட்ட வாஸனை உள்ளதும், கெட்ட சப்த முள்ளதுமான தேசத்தை ச்ராத்த கர்மத்தில் வர்ஜிக்க வேண்டும்.

मार्कण्डेयः-वर्ज्या जन्तुमयी रूक्षा क्षितिः प्लुष्टा तथाऽग्निना। अनिष्टदुष्टशब्दोग्रा दुर्गन्धा श्राद्धकर्मणि इति। तीर्थक्षेत्रविशेषेषु कृतं श्राद्धं फलातिशयप्रदं भवति। तदाह देवलः —श्राद्धस्य पूजितो देशो गया गङ्गा सरस्वती। कुरुक्षेत्रं प्रयागश्च नैमिशं पुष्कराणि च। नदीनदेषु तीर्थेषु शैलेषु पुलिनेषु च। विविधेष्वेव तुष्यन्ति दत्तेनेह पितामहाः इति।

மார்க்கண்டேயர்:— ஜந்துக்கள் நிறைந்ததும், கோரமானதும், நெருப்பால் பொசுங்கியதும், இஷ்டமில்லாததும் கெட்டதாயுமுள்ள சப்தத்தை உடையதும், பயங்கரமாகியதும், துர்க்கந்தம் உடையதுமாகிய பூமியானது ச்ராத்த கர்மத்தில் வர்ஜிக்கத் தகுந்தது. சிறந்த தீர்த்தங்களிலும், க்ஷேத்ரங்களிலும் செய்யப்பட்ட ச்ராத்தம் அதிக பலத்தைக் கொடுக்கக் கூடியது. அதைச் சொல்லுகிறார், தேவலர்:— கயை, கங்கை, ஸரஸ்வதி, குருக்ஷேத்ரம், ப்ரயாகம், நைமிசம், புஷ்கரம், நதிகள், நதங்கள், புண்யதீர்த்தங்கள், பர்வதங்கள், பலவித மணல் ப்ரதேசங்கள், இவைகள் ச்ராத்தத்திற்கு பூஜ்யமான ப்ரதேசங்கள் ஆகும். இவைகளில் கொடுக்கப்பட்ட ச்ராத்தத்தினால் பித்ருக்கள் த்ருப்தர்கள் ஆகின்றனர்.

आश्वलायनस्तु — गङ्गा गोदावरी (भे)पेण्णा गौतमी कौशिकी शुभा। नर्मदा सरयूश्चैव कावेरी च सरस्वती। गया प्रयागः श्रीशैलो गोकर्णं पुष्करं शुभम्। नैमिशं च कुरुक्षेत्रं केदारं सेतुबन्धनम्। द्वारका बदरी कौब्जं मुख्या वाराणसी तथा। पुरुषोत्तमस्वामिवेश्म सर्वोत्कृष्टो महोदधिः। एतेषु तीर्थमुख्येषु क्षेत्रेषु च शुभाशुभम्। कृतमक्षयमाप्नोति मनुष्याणां न संशयः इति। व्यासः — पुष्करेष्वक्षयं श्राद्धं जपहोमतपांसि च। महोदधौ प्रयागे च काश्यां च कुरुजाङ्गले इति।

ஆச்வலாயனரோவெனில்:— கங்கை, கோதாவரீ, பெண்ணை, கௌதமீ, கௌசிகீ, நர்மதா, ஸரயூ, காவேரீ, ஸரஸ்வதீ, கயா, ப்ரயாகம், ஸ்ரீசைலம், கோகர்ணம், புஷ்கரம், நைமிசம், குருக்ஷேத்ரம், கேதாரம், ஸேதுபந்தனம், த்வாரகா, பதரீ, கௌப்ஜம், வாராணஸீ, புருஷோத்தமம், ஸ்வாமிசைலம், எல்லாவற்றிலும் சிறந்ததான மஹோததி, என்ற இந்த முக்ய தீர்த்தங்களிலும் க்ஷேத்ரங்களிலும் மனுஷ்யர்களால் செய்யப்படும் சுபகர்மமும், பித்ருகர்மமும் அக்ஷயம் ஆகும். ஸம்சயம் இல்லை. வ்யாஸர்:— புஷ்கரம், மஹோததி, ப்ரயாகம், காசி, குரு ஜாங்கலம் இவைகளில் செய்யப்பட்ட ச்ராத்தம், ஜபம், ஹோமம், தபஸ் இவைகள் அக்ஷயம் ஆகும்.

शङ्खोऽपि — वाराणस्यां कुरुक्षेत्रे भृगुतुन्दे(ङ्गे)हिमालये। गङ्गाद्वारे प्रयागे च नैमिशे पुष्करे तथा। सन्निहत्यां गयायां च दत्तमक्षयतां व्रजेत्। नदीसमुद्रतीरे वा ह्रदे गोष्ठेऽथ पर्वते। समुद्रगानदीतीरे सिन्धुसागरसङ्गमे। नद्योर्वा सङ्गमे राजन् सालिग्रामे शिलान्तिके। सालिग्रामे च गोकर्णे गयायां च विशेषतः। क्षेत्रेष्वेतेषु यः श्राद्धं पितृभक्तिसमन्वितः। करोति विधिवन्मर्त्यः कृतकृत्योऽभिधीयते इति।

சங்கரும்:— வாராணஸீ, குருக்ஷேத்ரம், ப்ருகுதுந்தம், ஹிமாலயம், கங்காத்வாரம், ப்ரயாகம், நைமிசம்,

புஷ்கரம், ஸன்னிஹதி, கயா இவைகளில் கொடுக்கப்பட்டது அக்ஷயம் ஆகும். நதீ, ஸமுத்ரம் இவைகளின் கரை, மடுக்கள், பசுக்கொட்டில், மலை, ஸமுத்ரைத்தையடையும் நதியின் கரை, நதீ ஸமுத்ரஸங்கமம், இரண்டு நதிகளின் ஸங்கமம், ஸாலிக்ராம சிலையின் ஸமீபம், ஸாலிக்ராமம், கோகர்ணம், கயை, இந்த க்ஷேத்ரங்களில் எந்த ச்ராத்தத்தைப் பித்ருக்களிடம் பக்தியுடன் கூடியவனாய் விதியுடன் எந்த மனிதன் செய்கின்றானோ அவன் க்ருதார்த்தன் என்று சொல்லப்படுகிறான்.

स एव — यत्र क्वचन नर्मदातीरे यमुनातीरे गङ्गायां विशेषतो गङ्गाद्वारे प्रयागे गङ्गासागरसङ्गमे कुलावर्ते बिल्वके नीलपर्वते कुब्जाहे भृगुतुन्दे(ङ्गे) केदारे लिङ्गायां सुगन्धायां फल्गुतीर्थे महागङ्गायां तण्डुलिकाश्रमे कुमारधारायां प्रभासे यत्र क्वचन सरस्वत्यां विशेषतो नैमिशारण्ये वाराणस्यां अगस्त्याश्रमे कण्वाश्रमे कौशिक्यां सरयूतीरे शोणाया भागीरथ्याश्च सङ्गमे श्रीपर्वते कल्पोदके उत्तरमानसे बडबायां सप्तर्चे विष्णुपादे स्वर्गप्रदेशे गोदावर्यां गोमत्यां वेत्रवत्यां विपाशायां वितस्तायां मरुद्वृधायां शतद्रुति चन्द्रभागायां ऐरावत्यां सिन्धोस्तीरे दक्षिणे पञ्चनदे औजसे चैवमादिष्वन्येषु तीर्थेषु सरिद्वरासु पुलिनेषु प्रस्रवणेषु पर्वतेषु निकुञ्जेषु वनेषूपवनेषु च गोमयेनोपलिप्तेषु मनोज्ञेषु च इति।

சங்கரே:— நர்மதா தீரத்தில் ஏதாவது ஒரு இடத்தில், யமுனா தீரம், கங்கை, விசேஷித்து கங்காத்வாரம், ப்ரயாகம், கங்காஸாகர ஸங்கமம், குலாவர்த்தம், பில்வகம், நீலபர்வதம், குப்ஜாஹம், ப்ருகுதுந்தகம், கேதாரம், லிங்கை, ஸுகந்தை, பல்குதீர்த்தம், மஹாகங்கை, தண்டுலிகாச்ரமம், குமாரதாரை, ப்ரபாஸம், ஸரஸ்வதீநதி தீரத்தில் ஏதாவது ஒரு ப்ரதேசம், விசேஷமாய் நைமிசாரண்யம், வாராணஸீ, அகஸ்த்யாச்ரமம், கண்வாச்ரமம், கௌசிகீ, ஸரயூதீரம், சோணாபாகிரதீ

ஸங்கமம், ஸ்ரீபர்வதம், கல்போதகம், உத்தரமானஸம், படபை, ஸப்தர்ச்சம், விஷ்ணுபாதம், ஸ்வர்க்கப்ரதேசம், கோதாவரீ, கோமதீ, வேத்ரவதீ, விபாசா, விதஸ்தா, மருத்வ்ருதா, சதத்ருதி, சந்த்ரபாகா, ஐராவதீ, ஸிந்துதீரம், தெற்கில் உள்ள பஞ்சநதம், ஔஜஸம், இது முதலிய மற்றத் தீர்த்தங்கள், சிறந்த நதிகள், மணல் ப்ரதேசங்கள், மலை அருவிகள், மலைகள், புதர்கள், காடுகள், பூந்தோட்டங்கள், இந்த ப்ரதேசங்களில் கோமயத்தால் மெழுகப்பட்டவை களும், மனதுக்கு இன்பமானதாயுமுள்ள ப்ரதேசங்களில் (செய்ய வேண்டும்.)

अत्र पितृगाधा — कुलेऽस्माकं स जन्तुः स्याद्यो नो दद्याज्जलाञ्जलिम्। नदीषु बहुतोयासु शीतलासु विशेषतः ।। अपि जायेत सोऽस्माकं कुले कश्चिन्नरोत्तमः। गयाशीर्षे वटे श्राद्धं यो नो दद्यात् समाहितः। एष्टव्या बहवः पुत्रा यद्येकोऽपि गयां व्रजेत्। यजेत वाऽश्वमेधेन नीलं वा वृषमुत्सृजेत् इति।

இவ்விஷயத்தில், பித்ருக்களின் ஸம்வாதம் உள்ளது:— "நமது குலத்தில் அந்த மனிதன் உண்டாக வேண்டும். எவன் அதிக ஜலம் உள்ளதும் விசேஷமாய்க் குளிர்ந்ததுமான நதிகளில் ஜலாஞ்ஜலிகளை நமக்குக் கொடுப்பானோ. நமது குலத்தில் அந்த ஒரு சிறந்த மனிதன் பிறப்பானோ! எவன் கயாசீர்ஷத்திலும், அக்ஷயவடத்திலும் அவன் ச்ராத்தத்தைக் கொடுப்பானோ! அநேக புத்ரர்கள் வேண்டத் தகுந்தவர்கள். அவ்விதமானால்! அவர்களில் ஒருவனாவது கயைக்குச் செல்வான். அச்வமேத யாகத்தையாவது செய்வான். நீல வ்ருஷபத்தையாவது விடுவான்," என்று.

ब्रह्मकैवर्ते — गयाशीर्षे यदा पिण्डं नाम्ना येषां प्रकुर्वते। नरकस्था दिवं यान्ति स्वर्गस्था मोक्षमाप्नुयुः। तत्राक्षयवटो नाम त्रिषु लोकेषु विश्रुतः। पितॄणां तत्र वै दत्तमक्षय्यं भवति प्रभो। वटवृक्षं

समासाद्य शाकेनाप्युदकेन वा । एकस्मिन् भोजिते विप्रे कोटिर्भवति भोजिता । आत्मनस्तु महाबुद्धे गयायां तु तिलैर्विना । पिण्डनिर्वापणं कार्यं मृतानां तु तिलैस्सह इति ।

ப்ரம்ஹகைவர்த்தத்தில்:— கயாசீர்ஷத்தில் பிண்டத்தை எவர்களுக்கு நாமத்தை உச்சரித்துக் கொடுக்கின்றனரோ அந்தப் பித்ருக்கள் நரகத்தில் இருந்தாலும் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். ஸ்வர்க்கத்தில் இருப்பவர்களானுல் மோக்ஷத்தை அடைவார்கள். அவ்விடத்தில் அக்ஷயவடம் என்பது மூன்று உலகங்களிலும் ப்ரஸித்தமானது. அவ்விடத்தில் பித்ருக்களுக்காகக் கொடுக்கப்பட்டது அக்ஷயமாக ஆகும். வடவ்ருக்ஷத்தை அடைந்தால் சாகத்தினுலாவது, ஜலத்தினுலாவது ஒரு ப்ராம்ஹணன் புஜிப்பிக்கப்பட்டாலும் கோடி ப்ராம்ஹணர்கள் புஜிக்கப்பட்டவர்கள் ஆகின்றனர். தனக்காகக் கயையில் எள் இல்லாமல் பிண்டத்தைக் கொடுக்க வேண்டும். (ஆத்மபிண்டம்) இறந்தவர்களுக்கோ வெனில் எள்ளுடன் பிண்ட தானம் செய்ய வேண்டும்.

नद्यादिषु तीर्थश्राद्धमुक्तं मत्स्यपुराणे — स्नात्वा नदीषु सर्वासु पितृदेवांश्च तर्पयेत् । तत्र तत्र यथावित्तं कुर्यात् श्राद्धादिकं तथा । अकालेऽप्यथ काले वा तीर्थश्राद्धं तथा नरः । श्राद्धं कृत्वा तथा तीर्थे कर्तव्यं पितृतर्पणम् इति ।

நதீ முதலியவைகளில் தீர்த்த ச்ராத்தம் சொல்லப்பட்டுள்ளது, மத்ஸ்யபுராணத்தில்:— நதிகள் எல்லாவற்றிலும் ஸ்நானம் செய்து, பித்ருக்களேயும் தேவர்களேயும் தர்ப்பிக்க வேண்டும். அந்தந்த இடங்களில் தனது சக்திக்கு இயன்றபடி ச்ராத்தம் முதலியதையும் செய்ய வேண்டும். அகாலத்திலோ, காலத்திலோ தீர்த்த ச்ராத்தத்தை மனிதன் செய்ய வேண்டும். புண்ய தீர்த்தத்தில்

ச்ராத்தம் செய்த பிறகு, பித்ரு தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும்.

पाद्मेऽपि — तीर्थे तु ब्राह्मणं नैव परीक्षेत कथञ्चन । अन्नार्थिनामनुप्राप्तं भोजयेन्मनुशासनात् । सक्तुभिः पिण्डदानं स्यात् संयावैः पायसेन वा । कर्तव्यमृषिभिर्दृष्टं पिण्याकेनैङ्गुदेन वा । पिण्याकेन तिलानां वा भक्तिमद्भिर्नरैस्सदा । श्राद्धं तत्रतु कर्तव्यमर्घ्यावाहनवर्जितम् इति । तीर्थेऽनग्नावपदि च इति पूर्वोक्तं हिरण्यश्राद्धं वा कर्तव्यम्, क्षेत्रे स्नात्वा शुष्कवासाः प्रदाय तिलवार्यथ । कृत्वा सूत्रविधानेन पिण्डान्ते क्षेत्रपिण्डकान् । अन्नेनामेन मांसेन सक्तुभिर्द्विज आचरेत् इति स्मृतेश्च। गयाव्यतिरिक्तस्थानेषु जीवपितृकेनापि तीर्थश्राद्धं कर्तव्यमित्यधस्तात् प्रतिपादितम् ।

**பாத்மபுராணத்திலும்:—** புண்ய தீர்த்தத்தில் ப்ராம்ஹணனை ஒரு காலும் பரீக்ஷிக்கக் கூடாது. அன்னத்தை விரும்பி வந்தவனைப் புஜிப்பிக்க வேண்டும், மனுவின் சாஸனத்தால். மாவுகளால், அல்லது ஸம்யாவங்களால், அல்லது பாயஸத்தால் பிண்ட தானத்தைச் செய்யவும். அல்லது இங்குத மரத்தின் பிண்ணாக்கு, எள்ளுப் பிண்ணாக்கு இவைகளால் பிண்ட தானத்தைப் பக்தி உள்ளவர்களாய் எப்பொழுதுமே செய்ய வேண்டும். அவ்விடத்தில் அர்க்யம் ஆவாஹனம் இல்லாமல் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ''தீர்த்தோ அநக்நா வாபதி ச'' என்ற வசனத்தால் முன் சொல்லப்பட்ட ஹிரண்ய ச்ராத்தத்தையாவது செய்ய வேண்டும். ''புண்ய க்ஷேத்ரத்தில் ஸ்நானம் செய்து, உலர்ந்த வஸ்த்ரமுடையவனாய், திலோதகத்தைக் கொடுத்து, பிறகு ச்ராத்தத்தில் ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும், அல்லது ஹிரண்ய ச்ராத்தத்தையாவது செய்யவும். தனது ஸூத்ரவிதிப்படி செய்து, பிண்டத்திற்குப் பிறகு க்ஷேத்ர பிண்டங்களை அன்னத்தினாலாவது, ஆமத்தினாலாவது, மாம்ஸத்தினாலாவது, மாவினாலாவது ப்ராம்ஹணன்

கொடுக்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதியினாலும். கயையைத் தவிர்த்த ஸ்தானங்களில் ஜீவபித்ருகனும் தீர்த்த ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்பது அடியில் சொல்லப்பட்டுள்ளது.

## श्राद्धकालाः

अथ श्राद्धकालाः । तत्र याज्ञवल्क्यः - अमावास्याऽष्टका वृद्धिः कृष्णपक्षोऽयनद्वयम् । द्रव्यब्राह्मणसंपत्तिर्विषुवत्सूर्यसङ्क्रमः । व्यतीपातो गजच्छाया ग्रहणं चन्द्रसूर्ययोः । श्राद्धं प्रति रुचिश्चैव श्राद्धकालाः प्रकीर्तिताः इति । द्रव्यं - कृसरमांसादि । ब्राह्मणः - श्रुताद्ध्ययनसंपन्नः । तयोः संपत्तिर्लाभो यस्मिन् काले स तथोक्तः ।

### ச்ராத்த காலங்கள்.

இனி ச்ராத்த காலங்கள் சொல்லப்படுகின்றன. அதில், யாஜ்ஞவல்க்யர்:— அமாவாஸ்யை, அஷ்டகை, சுபகார்யம், க்ருஷ்ணபக்ஷம், இரண்டு அயனங்கள், த்ரவ்யம், ப்ராம்ஹணர் இவைகளின் லாபம், விஷுவம், ஸங்க்ரமணம், வ்யதீபாதம், கஜச்சாயை, ஸூர்ய சந்த்ர க்ரஹணங்கள், ச்ராத்தம் செய்வதற்கு உத்ஸாகம், இவை ச்ராத்த காலங்களாகச் சொல்லப்பட்டுள்ளன. த்ரவ்யம் என்பது க்ருஸரம் மாம்ஸம் முதலியது. ப்ராம்ஹணன் = சாஸ்த்ரம் அத்யயனம் இவைகளுடன் கூடியவன். அவைகளின் ஸம்பத்தி - லாபம் எக்காலத்திலோ அது த்ரவ்ய ப்ராம்ஹண ஸம்பத்தி எனப்படும்.

अत्र हारीतः — तीर्थे द्रव्योपपत्तौ तु न कालमवधारयेत् । पात्रं च ब्राह्मणं प्राप्य सद्यः श्राद्धं विधीयते इति । तीर्थं - गङ्गादि, विषुवत् - मेषतुलासङ्क्रान्ती, अयनविषुवयोः सङ्क्रान्तित्वे सिद्धेऽपि पृथगुपादानं फलातिशयज्ञापनार्थम्, गजच्छायालक्षणम् - यदेन्दुः पितृदैवत्ये इत्यादिना पूर्वमुक्तम् । ग्रहणं - उपरागः ।

இவ்விஷயத்தில், ஹாரீதர்:— தீர்த்தத்திலும், த்ரவ்ய லாபத்திலும் காலத்தைக் கவனிக்க வேண்டும். யோக்யனை ப்ராம்ஹணனை அடைந்தால் அப்பொழுதே ச்ராத்தம் விதிக்கப்படுகிறது. தீர்த்தம் கங்கை முதலியது. விஷுவத் = மேஷதுலாஸங்க்ரமணங்கள். அயநவிஷுவங்கள் ஸங்க்ரமணமானாலும் அவைகளைத் தனியாய்ச் சொல்லியது அதிக பலன் உண்டு என்பதைத் தெரிவிப்பதற்காக. கஜச்சாயையின் லக்ஷணம் ''யதேந்து: பித்ரு தேவத்யே'' என்ற ச்லோகத்தால் முன்பே சொல்லப்பட்டது. க்ரஹணம் உபராகம்.

अत्र विशेषमाह वृद्धवसिष्ठः —— त्रिदशाःस्पर्शसमये तृप्यन्ति पितरस्तथा। मनुष्या मध्यकाले तु मोक्षकाले तु राक्षसाः इति। श्राद्धं प्रतिरुचिः - यदा श्राद्धं प्रतीच्छा, तदैव कर्तव्यमिति, चकारेणान्येऽपि श्राद्धकालाः सङ्गृह्यन्ते। अत एव यमः —— आषाढ्यामथ कार्तिक्यां माघ्यां त्रीन् पञ्च वा द्विजान्। तर्पयेत् पितृपूर्वं तु तदस्याक्षयमुच्यते इति।

இதில் விசேஷத்தைச் சொல்லுகிறார், வ்ருத்தவஸிஷ்டர்:— க்ரஹணத்தின் ஆரம்ப காலத்தில் தேவர்களும் பித்ருக்களும் த்ருப்தர்கள் ஆகின்றனர். நடுச்சமயத்தில் மனுஷ்யர்களும், மோக்ஷ காலத்தில் ராக்ஷஸர்களும் த்ருப்தர்கள் ஆகின்றனர். ச்ராத்தம் ப்ரதிருசி: = எப்பொழுது ச்ராத்தத்தைக் குறித்து இச்சையோ, அப்பொழுதே செய்ய வேண்டும் என்று. 'ச' காரத்தால் மற்றும் சில ச்ராத்த காலங்கள் குறிக்கப்படுகின்றன. ஆகையால் தான், யமன்:— ஆஷாட பூர்ணிமா, கார்த்திகை பூர்ணிமா, மாக பூர்ணிமா, இவைகளில் மூன்று அல்லது ஐந்து ப்ராம்ஹணர்களைப் பித்ருக்களை முன்னிட்டு புஜிப்பிக்க வேண்டும். அந்த ச்ராத்தம் அக்ஷயம் எனப்படுகிறது.

जातुकर्णिः —— ग्रहोपरागे विषुवे च जाते कृष्णे मघायामयनद्वये च। नित्यं च दानं च तथैव पञ्च दत्तं भवेन्निष्कसहस्रतुल्यमिति।

शङ्खादिस्वरूपमपि तेनैवोक्तम् — शङ्खं प्राहुरमावास्यां क्षीणसोमां द्विजोत्तमाः । अष्टका तु भवेत् पद्मं तत्र दत्तं तथाऽक्षयम् इति । यदा विष्टिर्व्यतीपातो भानुवारस्तथैव च । पद्मकं नाम तत् प्रोक्तमयनाच्च चतुर्गुणम् इति शङ्खोक्तमपि पद्मं ग्राह्यम् ।

ஜாதுகர்ணி:— க்ரஹணத்திலும், விஷுவத்திலும், மஹாளய பக்ஷத்திலும், மகாநக்ஷத்ரத்திலும், இரண்டு அயனங்களிலும் சங்கத்திலும், பத்மத்திலும் கொடுக்கப் பட்ட ச்ராத்தம் ஆயிரம் நிஷ்கங்கள் கொடுக்கப்பட்டதற்கு ஸமமான பலனாகும். சங்கம் முதலியதின் ஸ்வரூபமும் அவராலேயே சொல்லப்பட்டுள்ளது:— சந்த்ரனில்லாத அமாவாஸ்யையைச் சங்கம் என்கின்றனர் உத்தம ப்ராம்ஹணர்கள். அஷ்டகையானது பத்மம் எனப்படும். அவைகளில் கொடுக்கப்பட்ட ச்ராத்தம் அக்ஷயம் ஆகும். எப்பொழுது விஷ்டியும், வ்யதீபாதமும், ஞாயிற்றுக் கிழமையும் சேருகின்றனவோ அப்பொழுது பத்மகம் எனப்படுகிறது. அது அயனத்தை விட நான்கு மடங்கு புண்யமானது, என்று சங்கரால் சொல்லப்பட்ட பத்மமும் க்ரஹிக்கத் தக்கது.

काठकी श्रुतिः — एतद्धि देवपितॄणामयनं यत् हस्तिच्छायायां श्राद्धं दद्यात् इति । शङ्खोऽपि — हस्तिच्छायासु यद्दत्तं यद्दत्तं राहुदर्शने । विषुवत्ययने चैव सर्वमानन्त्यमश्नुते इति । अनेकविधा गजच्छायाः स्मृतिषु प्रतिपाद्यन्ते – हंसे हस्तस्थिते या तु मघायुक्ता त्रयोदशी । तिथिर्वैवस्वती नाम साच्छाया कुञ्जरस्य तु इति । हंसे करस्थिते या तु अमावास्या करान्विता । सा ज्ञेया कुञ्जरच्छाया इति बोधायनोऽब्रवीत् । करः - हस्तनक्षत्रम् । वनस्पतिगते सोमे याच्छाया प्राङ्मुखी भवेत् । गजच्छाया तु सा प्रोक्ता तस्यां श्राद्धं प्रकल्पयेत् । अमावास्यायामपराह्ण इत्यर्थः । सैंहिकेयो यदा सूर्यं ग्रसते पर्वसन्धिषु । गजच्छाया तु सा प्रोक्ता तस्यां श्राद्धं प्रकल्पयेत् । सैंहिकेयः - राहुः ।

घृतेन भोजयेद्विप्रान् घृतं भूमौ समुत्सृजेत्। ग्रहणाख्यगजच्छायाश्राद्धं दत्वा न शोचतीति।

காடகச்ருதி:— இது தேவர்கள், பித்ருக்கள் இவர்களின் ஸ்தானம். கஜச்சாயையில் ச்ராத்தத்தைக் கொடுப்பது என்பது. சங்கரும்:— கஜச்சாயைகளில் எது கொடுக்கப்பட்டதோ, க்ரஹணத்தில் எது கொடுக்கப்பட்டதோ, விஷுவத்திலும், அயநத்திலும் எது கொடுக்கப்பட்டதோ அதெல்லாம் அக்ஷயம் ஆகின்றது. பலவிதங்களாகக் கஜச்சாயைகள் ஸ்ம்ருதிகளில் சொல்லப்படுகின்றன. ''ஸூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் இருக்கும் பொழுது மகாநக்ஷத்ரத்துடன் கூடிய த்ரயோதசீ எதுவோ அது வைவஸ்வதீ திதி யென்றும் கஜச்சாயை யென்றும் சொல்லப்படுகிறது.'' ''ஸூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் இருக்கும் பொழுது ஹஸ்த நக்ஷத்ரத்துடன் கூடிய அமாவாஸ்யை எதுவோ அது கஜச்சாயை யென்றறியவும், என்றார் போதாயனர்.'' ''சந்த்ரன் வனஸ்பதிகளில் இருக்கும் பொழுது (அதாவது அமாவாஸ்யையில்) எந்த நிழல் கிழக்கு நோக்கியதாய் இருக்குமோ அது கஜச்சாயை எனப்பட்டுள்ளது. அதில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.'' அமாவாஸ்யையில் அபராஹ்ணத்தில் என்பது பொருள். ''ராஹுவானவன் சந்த்ர ஸூர்யர்களைப் பர்வஸந்திகளில் (பர்வத்திற்கும் ப்ரதமைக்கும் நடுவிலுள்ள காலம்) விழுங்குகின்றானே அது கஜச்சாயை எனப்படுகிறது. அதில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.'' ''நெய்யுடன் ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும். பூமியில் நெய்யை விட வேண்டும். க்ரஹணம் என்று பெயருடைய கஜச்சாயையில் ச்ராத்தத்தைக் கொடுத்தால் வருத்தமடைய மாட்டான்.''

भोक्तुरपि दोषः तत्रैव दर्शितः - कृष्णाजिनप्रतिग्राही विक्रयी वा हरेत यः। गजच्छाया शृतं भुक्त्वा न भूयः पुरुषो भवेत् इति। देवलः — तृतीया रोहिणीयुक्ता वैशाखस्य सिता तु या। मघाभिस्सहिता कृष्णा

नभस्ये तु त्रयोदशी। तथा शतभिषग्युक्ता कार्तिके नवमी तथा। इन्दुक्षये गजच्छाया वैधृतेषु युगादिषु । एते कालास्समुद्दिष्टाः पितॄणां प्रीतिवर्द्धनाः इति।

புஜிப்பவனுக்கும் தோஷம் அதிலேயே சொல்லப்பட்டுள்ளது. "க்ருஷ்ணாஜினத்தை (மான் தோலை) ப்ரதிக்ரஹிப்பவனும், அதை விற்பவனும், அதைத் திருடுகிறவனும், கஜச்சாயையில் அன்னத்தைப் புஜிப்பவனும், மறுபடி புருஷனாகப் பிறக்கமாட்டான்." தேவலர்:— வைசாக மாஸத்தில், சுக்ல பக்ஷத்தில், ரோஹிணியுடன் கூடிய த்ருதீயை, பாத்ரபத மாஸத்தில் மகாநக்ஷத்ரத்துடன் கூடிய க்ருஷ்ண பக்ஷ த்ரயோதசீ, அப்படியே கார்த்திகை மாஸத்தில் சதய நக்ஷத்ரத்துடன் கூடிய நவமீ, அமாவாஸ்யை, கஜச்சாயை, வைத்ருதி, யுகாதிகள், இவைகள் பித்ருக்களுக்கு ப்ரீதியை வ்ருத்தி செய்யக் கூடிய (ச்ராத்த) காலங்களாகச் சொல்லப்பட்டுள்ளன.

## युगादि श्राद्धनिरूपणम्

युगादिकालं सूचयति सङ्ग्रहकारः- वैशाखे कार्तिके माघे शुद्धाग्निग्रहपूर्णिमाः। नभस्य कृष्णपादूरो मामावा तु युगादयः इति। अग्निः - तृतीया, ग्रहाः - नवमी, पादूरः - त्रयोदशी, मामा वा - माघामावास्या वा। युगादयो मत्स्यपुराणे दर्शिताः — वैशाखस्य तृतीया तु नवमी कार्तिकस्य तु। माघे पञ्चदशी चैव नभस्ये च त्रयोदशी। युगादयः स्मृता ह्येते दत्तस्याक्षयकारकाः इति।

## யுகாதி ச்ராத்த நிருபணம்.

யுகாதிகளின் காலத்தைத் தெரிவிக்கிறார், ஸங்க்ரஹகாரர்:— வைசாகம், கார்த்திகம், மாகம் இந்த மாஸங்களில் சுக்ல பக்ஷத்தில் த்ருதீயை, நவமீ, பூர்ணிமை இந்தத் திதிகளும், பாத்ரபத மாஸ க்ருஷ்ண பக்ஷத்தில் த்ரயோதசீ, மாகமாஸத்தில் அமாவாஸ்யையாவது

இவைகள் யுகாதிகள் எனப்படும். யுகாதிகள் மத்ஸ்ய புராணத்தில் சொல்லப்பட்டுள்ளன:— வைசாக மாஸத்தின் த்ருதீயை, கார்த்திகை மாஸத்தின் நவமீ, மாக மாஸத்தின் அமாவாஸ்யை, பாத்ரபத மாஸத்தின் த்ரயோதசீ இவைகள் யுகாதிகள் எனப்படும். இவைகள் ச்ராத்தத்திற்கு அழிவற்ற பலனைச் செய்யக் கூடியவை.

विष्णुपुराणेऽपि — वैशाखमासस्य च या तृतीया नवम्यसौ कार्तिक शुक्लपक्षे। नभस्यमासस्य च कृष्णपक्षे त्रयोदशी पञ्चदशी च माघे। पानीयमप्यत्र तिलैर्विमिश्रं दद्यात् पितृभ्यः प्रयतो मनुष्यः। श्राद्धं कृतं तेन समासहस्रं रहस्यमेतत् पितरो वदन्ति इति। अत्र शुक्लपक्षे या तृतीया। पञ्चदशी कृष्णपक्ष इत्यन्वयः। अत एव नारदीयपुराणे — द्वे तु शुक्ले द्वे तु कृष्णे युगाद्याः कवयो विदुः इति।

**விஷ்ணுபுராணத்திலும்:**— வைசாக மாஸத்தின் த்ருதீயை, கார்த்திக சுக்லபக்ஷ நவமீ, பாத்ரபத க்ருஷ்ண பக்ஷ த்ரயோதசீ, மாக அமாவாஸ்யை, (இவைகள் யுகாதிகள்). இவைகளில் எள்ளுடன் கூடிய தீர்த்தத்தையாவது மனிதன் சுத்தனாய் இருந்து பித்ருக்களுக்குக் கொடுக்க வேண்டும். அந்த மனிதனால் ஆயிரம் வர்ஷம் ச்ராத்தம் செய்யப்பட்டதாகிறது. இது ரஹஸ்யம் எனப் பித்ருக்கள் சொல்லுகின்றனர். இதில் சுக்ல பக்ஷத்தில் எந்த த்ருதீயையோ என்றும், க்ருஷ்ண பக்ஷத்தில் உள்ள பஞ்சதசீ என்றும் சேர்க்கவும். ஆகையால் தான். **நாரதீய புராணத்தில்:**— சுக்ல பக்ஷத்தில் இரண்டு திதிகள், க்ருஷ்ண பக்ஷத்தில் இரண்டு திதிகள், இவைகளை யுகாதிகள் என்று அறிந்தவர்கள் சொல்லுகின்றனர்.

ब्राह्मपुराणे तु — माघस्य पौर्णमासी युगादिरित्युक्तम्। वैशाख शुक्लपक्षस्य तृतीयायां कृतं युगम्। कार्तिके शुक्लपक्षे च त्रेता तु नवमेऽहनि। अथ भाद्रपक्षे कृष्णे त्रयोदश्यां द्वापरं युगम्। माघे तु पौर्णमास्यां तु घोरं

कलियुगं तथा। युगारम्भास्तु तिथयो युगाद्यास्तेन विश्रुताः इति। अत्र कल्पभेदेन व्यवस्थेति चन्द्रिकायाम्।

ப்ராம்ஹ புராணத்திலோவெனில்:— மாக பூர்ணிமை யுகாதி என்று சொல்லப்பட்டுள்ளது. வைசாக சுக்ல த்ருதீயையில் க்ருதயுகம், கார்த்திக சுக்ல நவமியில் த்ரேதாயுகம், பாத்ரபத க்ருஷ்ண த்ரயோதசியில் த்வாபரயுகம், மாக பூர்ணிமையில் கோரமான கலியுகம். இந்தத் திதிகள் அந்தந்த யுகத்தின் ஆரம்பத் திதிகள். ஆகையால் யுகாதிகள் எனப்படுகின்றன. இவ்விஷயத்தில் கல்பபேதத்தைக் கொண்டு வ்யவஸ்தை காணப்பட வேண்டும் என்று சந்த்ரிகையில் உள்ளது.

पुलस्त्योऽत्र विशेषमाह — अयनद्वितये श्राद्धं विषुवद्वितये तथा। युगादिषु च सर्वासु पिण्डनिर्वापणादृते इति। युगान्तेऽप्येवं श्राद्धमुक्तं स्मृत्यन्तरे — सूर्यस्य सिंहसङ्क्रान्त्या मन्तःकृतयुगस्य तु। तथा वृश्चिकसङ्क्रान्त्यामन्तस्त्रेतायुगस्य तु। ज्ञेयस्तु वृषसङ्क्रान्त्यां द्वापरान्तश्च सङ्ख्यया। तथा च कुम्भसङ्क्रान्त्यामन्तः कलियुगस्य च। युगादिषु युगान्तेषु श्राद्धमक्षय्यमुच्यते इति।

இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், புலஸ்த்யர்:— இரண்டு அயநங்கள், இரண்டு விஷுவங்கள், எல்லா யுகாதிகள் இவைகளில் செய்யப்படும் ச்ராத்தம் பிண்டதானம் இல்லாமல் செய்யப்பட வேண்டும். யுகாந்தங்களிலும் இவ்விதம் ச்ராத்தம் சொல்லப்பட்டு உள்ளது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஸூர்யனுடைய ஸிம்ஹ ஸங்க்ரமணத்தில் க்ருதயுகத்தினுடைய முடிவு. வ்ருச்சிக ஸங்க்ரமணத்தில் த்ரேதாயுகத்தின் முடிவு. வ்ருஷப ஸங்க்ரமணத்தில் த்வாபர யுகத்தின் முடிவு. கும்ப ஸங்க்ரமணத்தில் த்வாபர யுகத்தின் முடிவு. யுகாதிகளிலும், யுகாந்தங்களிலும் செய்யப்படும் ச்ராத்தம் அக்ஷயம் எனப்படுகிறது.

## मन्वादिश्राद्धनिरूपणम्।

मन्वादयोऽपि श्राद्धकालाः, तथा मन्वन्तरादौ च देयं श्राद्धं विजानता इति स्मरणात्। मन्वन्तरादयो मत्स्यपुराणे दर्शिताः — आश्वयुक्छुक्लनवमी कार्तिकी द्वादशी सिता। तृतीया चैत्रमासस्य सिता भाद्रपदस्य च । फाल्गुनस्याप्यमावास्या पुष्यस्यैकादशी सिता । आषाढस्यापि दशमी माघमासस्य सप्तमी । श्रावणस्याष्टमी कृष्णा तथाऽऽषाढी च पूर्णिमा। कार्तिकी फाल्गुनी चैत्री ज्यैष्ठी पञ्चदशी सिता । मन्वन्तरादयश्चैते दत्तस्याक्षयकारकाः इति।

### மன்வாதி ச்ராத்த நிரூபணம்.

மன்வாதிகளும் ச்ராத்த காலங்களாம். ''அவ்விதமே மன்வந்தரங்களின் ஆதியிலும் அறிந்தவன் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். மன்வந்தரங்களின் ஆதிகள் சொல்லப்பட்டுள்ளன. மத்ஸ்ய புராணத்தில்:— ஆச்வயுஜ சுக்ல நவமீ, கார்த்திக சுக்ல த்வாதசீ, சைத்ர சுக்ல த்ருதீயா, பாத்ரபத சுக்ல த்ருதீயா, பால்குன அமாவாஸ்யா, புஷ்ய சுக்ல ஏகாதசீ, ஆஷாட சுக்ல தசமீ, மாக சுக்ல ஸப்தமீ, ச்ராவண க்ருஷ்ண அஷ்டமீ, ஆஷாட பூர்ணிமா, கார்த்திக பூர்ணிமா, பால்குன பூர்ணிமா, சைத்ர பூர்ணிமா, ஜ்யேஷ்ட பூர்ணிமா, இவைகள் மன்வாதிகள். ச்ராத்தத்திற்கு அக்ஷயமான பலனைச் செய்யக் கூடியவைகள்.

तत्रैव — कृतं श्राद्धं विधानेन मन्वादिषु युगादिषु। हायनानि द्विसाहस्रं पितॄणां तृप्तिदं भवेत्। आसु स्नानं जपो होमः पुण्यानन्त्याय कल्पते इति। महाभारतेऽपि — या मन्वाद्या युगाद्याश्च तिथयस्तासु मानवः । स्नात्वा भुक्त्वा च दत्वा च तदनन्तफलं लभेत् इति । कालादर्शेऽपि — मन्वाद्यासु युगाद्यासु प्रदत्तः सलिलाञ्जलिः । सहस्रवार्षिकीं तृप्तिं पितॄणामावहेत् पराम्। द्विसहस्राब्दिकीं तृप्तिं कृतं श्राद्धं यथाविधि। स्नानं दानं जपो होमः पुण्यानन्त्याय कल्पते इति।

**மத்ஸ்யபுராணத்திலேயே:—** மன்வாதிகளிலும், யுகாதிகளிலும் விதிப்படி செய்யப்பட்ட ச்ராத்தமானது இரண்டாயிரம் வர்ஷங்கள் வரையில் பித்ருக்களுக்கு த்ருப்தியைக் கொடுப்பது ஆகும். இவைகளில் செய்யப்பட்ட ஸ்நானம், ஜபம், ஹோமம், இவைகள் அளவற்ற புண்யத்தின் பொருட்டாகும். **மஹாபாரதத்திலும்:—** மன்வாதிகள், யுகாதிகள் என்ற திதிகள் எவையோ அவைகளில் மனிதர்கள் ஸ்நானம், ஹோமம், தானம், இவைகளைச் செய்தால் அது அனந்த பலனை உடையதாகும். **காலாதர்சத்திலும்:—** மன்வாதிகளிலும், யுகாதிகளிலும் கொடுக்கப்பட்ட ஜலாஞ்ஜலியானது ஆயிரம் வர்ஷம் வரையில் உள்ள சிறந்த த்ருப்தியைப் பித்ருக்களுக்குச் செய்யும். இவைகளில் விதிப்படி செய்யப்பட்ட ச்ராத்தமானது இரண்டாயிரம் வர்ஷம் வரையில் உள்ள த்ருப்தியைச் செய்யும். இவைகளில் செய்யப்பட்ட ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம் இவை அளவற்ற புண்யத்தின் பொருட்டாகும்.

**सङ्ग्रहकारः —** तिथ्यग्नीनतिथिस्तिथ्याशे कृष्णेभोऽनलो ग्रहाः । तिथ्यर्कौ न शिवोऽश्वोऽमातिथी मन्वादयो मताः इति । चैत्रमारभ्य द्वादशमासानामेकैकस्यैकैकं पदं योजनीयम्, तिथिः - पूर्णिमा, अग्निः - तृतीया । चैत्रे पूर्णिमा शुक्लतृतीया चेत्यर्थः । वैशाखे न - नास्ति । ज्येष्ठे, तिथिः - पौर्णमासी । आषाढे, तिथ्याशे - पौर्णमासी शुक्लदशमी च । श्रावणे कृष्णभः - कृष्णाष्टमी । अत्र कृष्णेति विशेषणादितरत्र सर्वत्र शुक्लतिथेर्ग्रहणम् । भाद्रपदे, अनलः - तृतीया । आश्वयुजे, ग्रहाः - नवमी । कार्तिके, तिथ्यर्कौ - पूर्णिमा द्वादशी च । मार्गशीर्षे न - नास्ति । पुष्ये, शिवः - एकादशी । माघे, अश्वः - सप्तमी । फाल्गुने, अमातिथी - अमावास्या पौर्णमासी चेत्यर्थः ।

**ஸங்க்ரஹகாரர்:—** சைத்ர மாஸம் முதற்கொண்டு பன்னிரண்டு மாஸங்களுள் ஒவ்வொரு மாஸத்திற்கு

ஒவ்வொரு பதத்தைச் சேர்க்க வேண்டும். இதன் பொருள்:— திதி: = பூர்ணிமை, அக்னி: = த்ருதீயை; சைத்ர மாஸத்தில் பூர்ணிமையும் த்ருதீயையும் என்பது பொருள். வைசாகத்தில் ந = இல்லை. ஜ்யேஷ்டத்தில் திதி: = பூர்ணிமை. ஆஷாடமாஸத்தில், திதி ஆசே பூர்ணிமை, சுக்ல தசமீ இவைகள். ச்ராவண மாஸத்தில், க்ருஷ்ணேப: க்ருஷ்ணாஷ்டமீ; இவ்விடத்தில் 'க்ருஷ்ண' என்று விசேஷித்ததால் மற்ற இடங்களில் சுக்ல பக்ஷ திதியை க்ரஹிக்க வேண்டும். பாத்ரபத மாஸத்தில் அனல: - த்ருதீயா. ஆச்வயுஜ மாஸத்தில், க்ரஹா: - நவமீ. கார்த்திகை மாஸத்தில், தித்யர்கௌ - பூர்ணிமா, த்வாதசீ இவைகள், மார்க்கசீர்ஷ மாஸத்தில், ந - இல்லை. புஷ்ய மாஸத்தில் சிவ: - ஏகாதசீ, மாகமாஸத்தில் அச்வ: - ஸப்தமீ. பால்குன மாஸத்தில், அமாதிதீ - அமாவாஸ்யை, பூர்ணிமை இரண்டும். இவைகள் மன்வாதிகள் எனப்படுகின்றன.

स्मृत्यन्तरे — अमा पातश्च सङ्क्रान्तिस्तथा वैधृतिरेव च। अष्टकाश्चैव मन्वादिर्युगादिश्च महालयः। चन्द्रसूर्योपरागश्च गजच्छाया तथैव च। द्रव्यब्राह्मणसम्पत्तिः श्राद्धकालाः प्रकीर्तिताः इति।

**மற்றோர் ஸ்ம்ருதியில்:—** அமாவாஸ்யை, வ்யதீபாதம், ஸங்க்ரமணம், வைத்ருதி, அஷ்டகைகள், மன்வாதிகள், யுகாதிகள், மஹாளயபக்ஷம், சந்த்ர ஸூர்ய க்ரஹணங்கள், கஜச்சாயை, த்ரவ்யம், ப்ராம்ஹணன் இவைகளின் லாபம், இவைகள் ச்ராத்த காலங்கள் எனக் கூறப்பட்டுள்ளன.

अमाष्टकाव्यतीपातमन्वादिषु युगादिषु। विद्वान् श्राद्धमकुर्वाणः प्रायश्चित्तीयते द्विजः इति वचनान्मन्वादि युगादिव्यतीपातेषु श्राद्धं नित्यम्, तिथ्यादिषु च यत् श्राद्धं मन्वादिषु युगादिषु। अलभ्येषु च योगेषु तत्काम्यं समुदाहृतम् इति गालववचनं तु न नित्यत्वापाकरणार्थम्, वचनद्वयेनाग्निहोत्रादिवन्नित्यत्वकाम्यत्वयोरविरोधादित्याहुः।

''அமை, அஷ்டகை, வ்யதீபாதம், மன்வாதி, யுகாதி, இவைகளில் அறிந்த ப்ராம்ஹணன் ச்ராத்தம் செய்யாவிடில் ப்ராயச்சித்தத்துக்கு அர்ஹனுகிறுன்'' என்ற வசனத்தால், மன்வாதி, யுகாதி, வ்யதீபாதம் இவைகளில் ச்ராத்தம் நித்யமாகும். ''திதி முதலியவைகளிலும், மன்வாதிகளிலும், யுகாதிகளிலும், அலப்ய யோகங்களிலும் செய்யப்படும் ச்ராத்தம் எதுவோ அது காம்யம் எனப்பட்டுள்ளது'' என்ற காலவரின் வசனமோ வெனில், நித்யத் தன்மையைத் தடுப்பதற்கல்ல. இரண்டு மதம் இருப்பதால், அக்னி ஹோத்ரம் முதலியது போல் நித்யத்வம், காம்யத்வம் இரண்டுகளுக்கும் விரோதமில்லை, என்பதால், என்கின்றனர்.

एवमेव — प्रेतश्राद्धं सपिण्डत्वं संक्रान्तिग्रहणेषु च इति प्रतिपादितस्य नैमित्तिकत्वस्य च संक्रान्तिर्विषुवच्चैव विशेषेणायन-द्वयम्। व्यतीपातोऽथ जन्मर्क्षं चन्द्रसूर्यग्रहस्तथा । इत्येतान् श्राद्धकालांस्तु काम्यानाह प्रजापतिः। श्राद्धमेतेषु यद्दत्तं तदानन्त्याय कल्पते इति विष्णूक्तस्य काम्यत्वस्य चा विरोधः।

இவ்விதமே, ''ப்ரேத ச்ராத்தம், ஸபிண்டீகரண ச்ராத்தம், ஸங்க்ரமணம், க்ரஹணம்'' என்று இவைகளில் சொல்லப்பட்டுள்ள நைமித்திகத் தன்மைக்கும், ''ஸங்க்ரமணம், விஷுவம், இரண்டு அயனங்கள், வ்யதீபாதம், ஜன்ம நக்ஷத்ரம், சந்த்ர ஸூர்ய க்ரஹணம், என்ற இவைகளைக் காம்ய ச்ராத்தங்களாக ப்ரஜாபதி சொன்னுர். இக்காலங்களில் செய்யப்பட்ட ச்ராத்தம் எதுவோ அது அக்ஷய பலனின் பொருட்டாகிறது'' என்று விஷ்ணுவினுல் சொல்லப்பட்ட காம்யத் தன்மைக்கும் விரோதமில்லை.

अत एव कूर्मपुराणे — नैमित्तिकं तु कर्तव्यं ग्रहणे चन्द्रसूर्ययोः। बान्धवानां च मरणे नरकी स्यादतोऽन्यथा। काम्यानि चैव श्राद्धानि शस्यन्ते ग्रहणादिषु इति। तथा च शातातपः — सर्वस्वेनापि कर्तव्यं

श्राद्धं वै राहुदर्शने । अकुर्वाणस्तु तत् श्राद्धं पङ्के गौरिव सीदति । राहुदर्शनदत्तं हि श्राद्धमाचन्द्रतारकम् । गुणवत् सर्वकामीयं पितॄणामुपतिष्ठते इति ।

ஆகையால் தான், கூர்ம புராணத்தில்:— சந்த்ர ஸூர்ய க்ரஹணங்களிலும், பந்துக்களின் மரணத்திலும், நைமித்திக ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். செய்யாவிடில், நரகத்திற்காளாவான். க்ரஹணம் முதலிய காலங்களில் செய்யப்படும் காம்ய ச்ராத்தங்களும் புகழப்படுகின்றன. அவ்விதம். சாதாதபர்:— க்ரஹண காலத்தில் ச்ராத்தத்தை எப்படியாவது செய்தாக வேண்டும். அந்த ச்ராத்தத்தைச் செய்யாதவன் சேற்றில் ஆழ்ந்த எருது போல் வருந்துவான். க்ரஹண காலத்தில் நன்ருகச் செய்யப்பட்ட ச்ராத்தமானது சந்த்ரன் நக்ஷத்ரம் இவைகள் உள்ள வரையில் பித்ருக்களுக்கு த்ருப்தியைச் செய்வதாய்ச் சேருகின்றது.

मार्कण्डेयोऽपि — विशिष्टब्राह्मणप्राप्तौ सूर्येन्दुग्रहणेऽयने । विषुवे रविसङ्क्रान्तौ व्यतीपाते च पुत्रक । श्राद्धार्हद्रव्यसंप्राप्तौ तथा दुःस्वप्नदर्शने । जन्मर्क्षग्रहपीडासु श्राद्धं कुर्वीत चेच्छया इति । यदापि, इच्छा - कामः, तदापि श्राद्धं कुर्वीतेत्यर्थः । एवं च नित्यनैमित्तिकयोः फलेच्छायां सत्यां काम्यत्वं न विरुध्यते ।

மார்க்கண்டேயரும்:— "யோக்யமான ப்ராம்ஹணன் கிடைத்த காலத்திலும், ஸூர்ய சந்த்ர க்ரஹணத்திலும், அயனத்திலும், விஷுவத்திலும், ஸங்க்ரமணத்திலும், வ்யதீபாதத்திலும், ச்ராத்தத்திற்கு யோக்யமான வஸ்துக்கள் கிடைத்த காலத்திலும், கெட்ட ஸ்வப்னம் நேர்ந்த காலத்திலும், ஜன்ம நக்ஷத்ரத்திலும், நவக்ரஹ பீடைகளிலும், விருப்பமுள்ள காலத்திலும், ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்." இவ்விதம் இருப்பதால் நித்ய நைமித்திகங்களுக்கு, பலனில் விருப்பம் இருந்தால் காம்யத் தன்மையானது விருத்தமாகிறதில்லை.

## काम्यश्राद्धकालाः

कृत्तिकादिनक्षत्राणि काम्यश्राद्धकालाः । यदाह याज्ञवल्क्यः — स्वर्गं चापत्यमोजश्च शौर्यं क्षेत्रं बलं तथा। पुत्रान् श्रैष्ठ्यं च सौभाग्यं समृद्धिं मुख्यतां शुभम् । प्रवृत्तचक्रतां चैव वाणिज्यप्रभृतीनपि । अरोगित्वं यशो वीतशोकतां परमां गतिम् । धनं वेदान् भिषक्सिद्धिं कुप्यङ्गामप्यजाविकम् । अश्वानायुश्च विधिवद्यः श्राद्धं सम्प्रयच्छति । कृत्तिकादिभरण्यन्तं स कामानाप्नुयादिमान् । आस्तिकः श्रद्धधानश्च व्यपेत मदमत्सरः इति । प्रवृत्तचक्रता - अप्रतिहताज्ञता कुप्यम् - सुवर्णरजतव्यतिरिक्तताम्रादि।

### காம்ய ச்ராத்த காலங்கள்

க்ருத்திகை முதலிய நக்ஷத்ரங்கள் காம்ய ச்ராத்த காலங்கள். அதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— ஸ்வர்க்கம், பிள்ளை பெண்கள், ஓஜஸ், சௌர்யம், பூமி, பலம், புத்ரர்கள், சிறப்பு, ஸௌபாக்யம், ஸம்ருத்தி, முக்யத்தன்மை, சுபம், தடையற்ற ஆஜ்ஞையுள்ள தன்மை, வ்யாபாரம் முதலியது, ரோகமின்மை, கீர்த்தி, சோகமில்லாத் தன்மை, நற்கதி, தனம், வேதங்கள், வைத்ய ஸித்தி, பொன், வெள்ளி அல்லாத தாம்ரம் முதலியவை, பசு, வெள்ளாடு, செம்மறியாடு, குதிரைகள், ஆயுஸ், இந்தக் காமங்களை அடைகிறான். ஆஸ்திகனும், ச்ரத்தையுடையவனும், மதம் மாத்ஸர்யம் அற்றவனும் (க்ருத்திகை நக்ஷத்ரம் முதல் பரணீ நக்ஷத்ரம் வரையில் உள்ள நக்ஷத்ரங்களில் ச்ராத்தம் செய்பவன்) ஆகிறான்.

विष्णुरपि — स्वर्गं कृत्तिकास्वपत्यं रोहिणीषु ब्राह्मवर्चसं सौम्ये कर्मणां सिद्धिं रौद्रे भुवं पुनर्वसौ पुष्टिं पुष्ये सार्पे सर्वान् कामान् श्रैष्ठ्यं पित्र्ये सौभाग्यं फल्गुनीषु धनमार्यम्णे ज्ञातिश्रैष्ठ्यं हस्ते रूपवतस्सुतांस्त्वाष्ट्रे वाणिज्यवृद्धिं स्वातौ कनकं विशाखासु मित्राणि

मैत्रे शाक्रे राज्यं कृषिर्मूले समुद्रयानसिद्धिमाप्ये सर्वान् कामान् वैश्वदेवे वेदश्रैष्ठ्यमभिजिति सर्वान् कामान् श्रवणे बलं वासव आरोग्यं वारुणे रूपद्रव्यमाजे गृहमहिर्बुध्न्ये गाः पौष्णे तुरङ्गानाश्विने जीवितं याम्ये इति।

**விஷ்ணுவும்:**— க்ருத்திகையில் ஸ்வர்க்கத்தையும், ரோஹிணியில் குழந்தையையும், ம்ருகசீர்ஷத்தில் ப்ரம்ஹவர்ச்சஸத்தையும், திருவாதிரையில் கர்மங்களின் ஸித்தியையும், புனர்வஸுவில் பூமியையும், புஷ்யத்தில் புஷ்டியையும், ஆயில்யத்தில் எல்லாக் காமங்களேயும், மகத்தில் ச்ரேஷ்டத் தன்மையையும், பூரத்தில் ஸௌபாக்யத்தையும், உத்தரத்தில் தனத்தையும், ஹஸ்தத்தில் பந்துக்களுள் சிறப்பையும், சித்திரையில் அழகிய பிள்ளைகளேயும், ஸ்வாதியில் வ்யாபார வ்ருத்தியையும், விசாகத்தில் ஸ்வர்ணத்தையும், அனுஷத்தில் மித்ரர்களேயும், கேட்டையில் ராஜ்யத்தையும், மூலத்தில் க்ருஷியையும், பூராடத்தில் ஸமுத்ர யாத்ரையினுல் ஸித்தியையும், உத்தராடத்தில் எல்லாக் காமங்களேயும், அபிஜித்தில் வேதத்தால் சிறப்பையும், ச்ரவணத்தில் எல்லா காமங்களேயும், அவிட்டத்தில் பலத்தையும் சதயத்தில் ஆரோக்யத்தையும், பூரட்டாதியில் உருவ த்ரவ்யத்தையும், உத்திரட்டாதியில் க்ருஹத்தையும், ரேவதியில் பசுக்களேயும், அச்வினியில் குதிரைகளேயும், பரணியில் ஆயுஸையும் ச்ராத்தம் செய்பவன் அடைகிறுன்.

आदित्यादयो वाराश्च काम्यश्राद्धकालाः। तदाह विष्णुः — सततमादित्येऽह्नि श्राद्धं कुर्वन्नारोग्यमाप्नोति सौभाग्यं चान्द्रे समरविजयं कौजे सर्वान् कामान् बौधे विद्यामभीष्टां जैवे धनं शौक्रे जीवितं शानैश्चरे इति। कूर्मपुराणेऽपि — आदित्यवारे त्वारोग्यं चान्द्रे सौभाग्यमेव च। कौजे सर्वत्र विजयं सर्वान् कामान् बुधस्य तु। विद्यां विशिष्टां च गुरौ धनं वै भार्गवे पुनः। शनैश्चरे भवेदायुरारोग्यमतिदुर्लभम् इति।

பானு வாரம் முதலிய வாரங்களும் காம்ய ச்ராத்த காலங்கள். அதைச் சொல்லுகிறார், **விஷ்ணு:**— ஞாயிற்றுக் கிழமையில் எப்பொழுதும் ச்ராத்தம் செய்பவன் ஆரோக்யத்தை அடைவான். திங்கட்கிழமையில் ஸௌபாக்யத்தையும், செவ்வாய்க் கிழமையில் யுத்தத்தில் ஜயத்தையும், புதன் கிழமையில் எல்லாக் காமங்களையும், வியாழக் கிழமையில் இஷ்டமான வித்யையையும், வெள்ளிக் கிழமையில் தனத்தையும், சனிக்கிழமையில் ஆயுளையும், (ச்ராத்தம் செய்பவன் அடைவான்.) **கூர்மபுராணத்திலும்:**— ஞாயிற்றுக் கிழமையில் ஆரோக்யமும், திங்கட்கிழமையில் ஸௌபாக்யமும், செவ்வாய் கிழமையில் எங்கும் ஜயமும், புதன் கிழமையில் எல்லாக் காமங்களும், வியாழக் கிழமையில் சிறந்த வித்யையும், வெள்ளிக் கிழமையில் தனமும், சனிக் கிழமையில் அரியதான ஆயுள், ஆரோக்யமும் ச்ராத்தம் செய்பவனுக்கு உண்டாகும்.

विष्णुधर्मोत्तरे — अतः काम्यानि वक्ष्यामि श्राद्धानि तव पार्थिव। आरोग्यमथ सौभाग्यं समरे विजयं तथा। सर्वान् कामां स्तथा विद्यां धनं जीवितमेव च । आदित्यादिदिनेष्वेवं श्राद्धं कुर्वन् सदा नरः । क्रमेणैतान्यवाप्नोति नात्र कार्या विचारणा इति। अत्र विशेषमाह मनुः — युक्षु कुर्वन् दिनर्क्षेषु सर्वान् कामानवाप्नुयात्। अयुक्षु तु पितॄनर्च्य प्रजां प्राप्नोति पुष्कलाम् इति। युक्षु - युग्मेषु, दिनेषु - सूर्यादिवारेषु, ऋक्षेषु - कृत्तिकादिनक्षत्रेषु, कुर्वन् श्राद्धमिति शेषः।

**விஷ்ணு தர்மோத்தரத்தில்:**— "ஓ அரசனே! ச்ராத்தங்களை இனி உனக்குச் சொல்லுகிறேன்:— ஆரோக்யம், ஸௌபாக்யம், யுத்தத்தில் ஜயம், ஸகல காமங்கள், வித்யை, தனம், ஆயுள் இவைகளை முறையே ஞாயிற்றுக் கிழமை முதலிய கிழமைகளில் ச்ராத்தம் செய்பவன் அடைகிறான். ஸந்தேஹமில்லை." இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார் **மனு:**—

இரட்டைப்படை வாரங்களிலும், இரட்டைப்படை நக்ஷத்ரங்களிலும், எல்லாக் காமங்களேயும் ச்ராத்தம் செய்பவன் அடைவான். ஒற்றைப் படையான வாரங்ளிலும் நக்ஷத்ரங்களிலும் பித்ருக்களேப் பூஜித்தால் நிறைந்த ப்ரஜைகளே அடைவான்.

प्रतिपदादि तिथयोऽपि काम्यश्राद्धकालाः । तदाह मनुः— कुर्वन् प्रतिपदि श्राद्धं सुरूपान् विन्दते सुतान् । कन्यकां तु द्वितीयायां तृतीयायां तु वन्दिनः । पशून् क्षुद्रांश्चतुर्थ्यां च पञ्चम्यां शोभनान् सुतान् । षष्ठ्यां द्यूतं कृषिं चापि सप्तम्यां लभते नरः । अष्टम्यामपि वाणिज्यं लभते श्राद्धदो नरः । स्यान्नवम्यामेकखुरं दशम्यां द्विखुरं बहु । एकादश्यां तथा रूप्यं ब्रह्मवर्चस्विनस्सुतान् । द्वादश्यां जातरूपं च रजतं रौप्यमेव च । ज्ञातिश्रैष्ठ्यं त्रयोदश्यां चतुर्दश्यां तु कुप्रजाः । प्रीयन्ते पितरश्चास्य ये शस्त्रेण रणे हताः । श्राद्धदः पञ्चदश्यां तु सर्वान् कामानवाप्नुयात् इति ।

ப்ரதமை முதலிய திதிகளும் காம்ய ச்ராத்த காலங்கள். அதைச் சொல்லுகிறூர், மனு:— ப்ரதமையில் ச்ராத்தம் செய்பவன் அழகிய பிள்ளேகளே அடைவான். த்விதீயையில் பெண்ணேயும், த்ருதீயையில் ஸ்துதி பாடகர்களேயும், சதுர்த்தியில் சிறிய பசுக்களேயும், பஞ்சமியில் அழகிய பிள்ளேகளேயும், ஷஷ்டியில் சூதாட்டத்தையும், ஸப்தமியில் க்ருஷியையும், அஷ்டமியில் வ்யாபாரத்தையும், நவமியில் ஒற்றைக் குளம்புள்ள ம்ருகங்களேயும், தசமியில் இரட்டைக் குளம்புள்ள அநேக ம்ருகங்களேயும், ஏகாதசியில் தனத்தையும், ப்ரம்ஹவர்ச்சஸமுள்ள பிள்ளேகளேயும், த்வாதசியில் பொன், வெள்ளியையும், த்ரயோதசியில் ஞாதிகளுள் சிறப்பையும், சதுர்த்தசியில் இழிவான ப்ரஜைகளேயும், ச்ராத்தம் செய்பவன் அடைவான். சதுர்த்தசியில் ச்ராத்தம் செய்தால் யுத்தத்தில் ஆயுதத்தால் கொல்லப்பட்ட பித்ருக்கள் த்ருப்தர்களாகின்றனர்.

அமையில் ச்ராத்தம் செய்பவன் எல்லாக் காமங்களையும் அடைவான்.

कात्यायनोऽपि — सुरूपास्सुताः प्रतिपदि स्त्रियोऽप्रतिरूपा द्वितीयायां वन्दिनस्तृतीयायां चतुर्थ्यां क्षुद्रपशवः पुत्राः पञ्चम्यां द्यूतं षष्ठ्यां कृषिस्सप्तम्यां वाणिज्यमष्टम्यामेकशफा नवम्यां दशम्यां गावः परिचारका एकादश्यां द्वादश्यां धनधान्यरूप्यं ज्ञातिश्रैष्ठ्यहिरण्यानि त्रयोदश्यां युवानस्तत्र म्रियन्ते शस्त्रहतस्य चतुर्दश्याममावास्यायां सर्वम् इति। एतच्च तिथिश्राद्धं कृष्णपक्षे कर्तव्यम्, पित्र्यं श्राद्धं कृष्णपक्षे दिनेऽस्तमययोगिनि इति स्मरणात्।

காத்யாயனரும்:— ப்ரதமையில் அழகிய பிள்ளைகள், த்வீதியையில் அழகிய பெண்கள், த்ருதீயையில் ஸ்துதி பாடகர்கள், சதுர்த்தியில் சிறிய பசுக்கள், பஞ்சமியில் புத்ரர்கள், ஷஷ்டியில் சூதாட்டம், ஸப்தமியில் க்ருஷி, அஷ்டமியில் வ்யாபாரம், நவமியில் ஒற்றைக் குளம்பு ம்ருகங்கள், தசமியில் பசு மாடுகள், ஏகாதசியில் வேலைக்காரர்கள், த்வாதசியில் தனம், தான்யம், பணம், பந்துக்களுள் சிறப்பு, பொன் இவைகள், த்ரயோதசியில் சிறிய பிள்ளைகளுக்கு மரணம், சதுர்த்தசியில் சஸ்த்ரத்தால் மரித்தவனுக்கு ப்ரீதி, அமாவாஸ்யையில், எல்லாக் காமங்களும் (என்ற பலன்கள் ச்ராத்தம் செய்பவனுக்கு முறையே உண்டாகும், என்பது பொருள்.) இந்தத் திதி ச்ராத்தம் க்ருஷ்ண பக்ஷத்தில் செய்யப்பட வேண்டும். ''பித்ருக்களை உத்தேசித்த ச்ராத்தம் க்ருஷ்ண பக்ஷத்தில் அஸ்தமய வ்யாப்தியுள்ள திதியில் செய்யப்பட வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

तथा च मनुः — यथैव चापरः पक्षः पूर्वपक्षा द्विशिष्यते। तथा श्राद्धस्य पूर्वाह्णादपराह्णो विशिष्यते इति। काम्यश्राद्धं प्रकृत्य स्मृत्यन्तरेऽपि — कृष्णपक्षेऽपराह्णे तु रौहिणं तु न लङ्घयेत् इति। अपराह्णः द्वेधा विभक्तस्याह्नो द्वितीयभागः, रौहिणः अह्नो नवमो

मुहूर्तः । एवं च कुतपादिघटिकात्रययुक्तायां प्रतिपदादितिथौ काम्यश्राद्धं कार्यम्, न तु कुतपाद्यसंयुक्तायामिति मन्तव्यम् इति चन्द्रिकायाम्।

**மனு:—** எப்படி சுக்ல பக்ஷத்தை விட க்ருஷ்ண பக்ஷம் சிறந்ததோ, அவ்விதம் ச்ராத்தத்திற்குப் பூர்வாஹ்ணத்தை விட அபராஹ்ணம் சிறந்த காலமாகும். காம்ய ச்ராத்தத்தை ஆரம்பித்து, **மற்றோர் ஸ்ம்ருதியில்:—** க்ருஷ்ண பக்ஷத்தில் அபராஹ்ணத்தில் செய்ய வேண்டும். ரௌஹிண முகூர்த்தத்தைத் தாண்டிச் செய்யக் கூடாது. அபராஹ்ணம் இரண்டாகப் பிரிக்கப்பட்ட பகலின் இரண்டாவது பாகம். ரௌஹிணம். பகலின் (பதினைந்து முஹூர்த்தங்களுள்) ஒன்பதாவது முஹூர்த்தம். இவ்விதம் இருப்பதால், குதபம் முதல் மூன்று நாழிகையுடன் கூடிய ப்ரதமை முதலிய திதியில் காம்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். குதபத்தின் ஆதியுடன் சேராத திதியில் செய்யக் கூடாது, என்றறியவும், என்று சந்த்ரிகையில் உள்ளது.

काम्यश्राद्धं काम्यसिद्धिपर्यन्तं एकवत्सरपर्यन्तं वा यथाकाममुक्तदिनेऽवश्यमनुष्ठेयम् । तथा च देवस्वामिना नक्षत्रश्राद्धमुदाहृत्योक्तम् - नाक्षत्रेषु काम्यश्राद्धेषु तत्कामप्रदनक्षत्र प्राप्तौ आतत्कामप्राप्तेरब्दमेकं वा तस्मिन् ऋक्षे श्राद्धं कुर्यात् इति।

காம்ய ச்ராத்தத்தை, விரும்பிய பலன் ஸித்திக்கும் வரையிலாவது, ஒரு வர்ஷம் வரையிலாவது, இஷ்டப்படி சொல்லப்பட்ட தினத்தில் அவச்யம் செய்ய வேண்டும். அவ்விதமே, தேவஸ்வாமியினால் நக்ஷத்ர ச்ராத்தத்தை உதாஹரித்துச் சொல்லப்பட்டுள்ளது, நக்ஷத்ரங்களில் செய்யப்படும் காம்ய ச்ராத்தங்களில் அந்தக் காமத்தைக் கொடுக்கக் கூடிய நக்ஷத்ரம் ப்ராப்தமாகிய பொழுது, அந்த விருப்பம் அடையும் வரையிலாவது, ஒரு வர்ஷம் வரையிலாவது அந்த நக்ஷத்ரத்தில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

हारीतः — काम्यश्राद्धानि काम्यार्थं सम्यग्यत्नेन साधयेत्। शरीरारम्भहेतुत्वान्न मुहुस्तानि कारयेत् । यथाकथंचिन्नित्यानि कुर्यादिन्दुक्षयादिषु। पात्रद्रव्यादिसंपत्सु सत्सु काम्यफलं लभेत् इति। विष्कम्भादियोगाश्च काम्यश्राद्धकालाः । तत्र कृत्तिकादिनक्षत्रेषूक्तं फलं क्रमात् ज्ञेयम्।

ஹாரீதர்:— காம்ய ச்ராத்தங்களை விரும்பிய பலன் கிடைப்பதற்காக நன்றாக முயற்சியுடன் செய்ய வேண்டும். சரீரத்தை ஆரம்பிப்பதற்குக் காரணமாய் இருப்பதால் அடிக்கடி அவைகளைச் செய்யக் கூடாது. தர்சம் முதலிய காலங்களில் நித்ய ச்ராத்தங்களை எவ்விதத்திலாவது செய்ய வேண்டும். யோக்யமான ப்ராம்ஹணன், த்ரவ்யங்கள் இவைகள் கிடைத்தால் காம்ய பலனையும் அடைவான். விஷ்கம்பம் முதலிய யோகங்களும் ச்ராத்த காலங்கள். அவைகளில் க்ருத்திகை முதலிய நக்ஷத்ரங்களில் சொல்லப்பட்ட பலனானது முறையே அறியத்தகுந்தது.

तदाह मरीचिः— कृत्तिकादिषु ऋक्षेषु श्राद्धे यत् फलमीरितम्। विष्कम्भादिषु योगेषु तदेव फलमिष्यते इति। रव्यादिवारश्राद्धफलं बवादिकरणेषु श्राद्धकरणेऽपि द्रष्टव्यम् । तदाह बृहस्पतिः — रव्यादिवासरेष्वेतत् श्राद्धकृल्लभते फलम् । बवादि करणेष्वेतत् श्राद्धकृच्चाश्नुते फलम् इति।

அதைச் சொல்லுகிறார், மரீசி:— க்ருத்திகை முதலிய நக்ஷத்ரங்களில் செய்யும் ச்ராத்தத்தில் எந்தப் பலன் கூறப்பட்டதோ அதுவே விஷ்கம்பம் முதலிய யோகங்களில் செய்யப்படும் ச்ராத்தத்திலும் சொல்லப்பட்டுள்ளது. பானுவாரம் முதலிய வாரங்களில் செய்யப்படும் ச்ராத்தத்தில் எந்தப் பலனோ அந்தப் பலனே பவம் முதலிய கரணங்களிலும் செய்யப்படும் ச்ராத்தத்தில் சொல்லப்பட்டுள்ளது. அதைச் சொல்லுகிறார்,

ப்ருஹஸ்பதி:— பானுவாரம் முதலிய வாரங்களில் ச்ராத்தத்தைச் செய்பவன் எந்தப் பலனை அடைவானோ அந்தப் பலனை பவம் முதலிய கரணங்களில் ச்ராத்தம் செய்பவன் அடைவான்.

सङ्गृह्य दर्शयति कालादर्शकारः —— पक्षाद्याद्यासु तिथिषु वर्जयित्वा चतुर्दशीम्। कन्यादिकामिनः कुर्युः श्राद्धं पार्वणरूपवत्। कृत्तिकादिषु ऋक्षेषु भरण्यन्तेषु पार्वणम् । कुर्युः श्राद्धं श्रद्दधानाः स्वर्गादिफलकामिनः। विष्कम्भादिषु योगेषु फलं नक्षत्रवत् स्मृतम्। श्राद्धं रव्यादिवारेषु ह्यारोग्यादिफलेप्सवः । कुर्युः फलमिदं ज्ञेयं बवादिकरणेष्वपि इति।

சுருக்கிக் காண்பிக்கிறார், காலாதர்சகாரர்:— ப்ரதமை முதலிய திதிகளில், சதுர்த்தசியைத் தள்ளி, பெண் முதலிய பலன்களை விரும்பியவர்கள் பார்வண விதியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். க்ருத்திகை முதற் கொண்டு பரணி வரையில் உள்ள நக்ஷத்ரங்களில் பார்வண விதியாய் ச்ராத்தத்தை ஸ்வர்க்கம் முதலியவற்றை விரும்பியவர்கள் ச்ரத்தையுடன் செய்ய வேண்டும். விஷ்கம்பம் முதலிய யோகங்களில் ச்ராத்தத்திற்குப் பலன் நக்ஷத்ரங்களில் போல். பானுவாரம் முதலிய வாரங்களில் ஆரோக்யம் முதலிய பலன்களை விரும்பியவர்கள் பார்வண விதியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பவம் முதலிய கரணங்களிலும் ச்ராத்தம் செய்வதில் இதே பலன் அறியத்தக்கது.

काम्यश्राद्धस्य कालान्तरमप्याह गार्ग्यः ——— मासंज्ञे यदा ऋक्षे चन्द्रस्संपूर्णमण्डलः। गुरुणा यदि संयुक्तस्सा तिथिर्महती स्मृता इति। पौर्णमास्यां चन्द्रः तन्मासनक्षत्रे चित्रादौ गुरुणा युक्तश्चेत् सा पौर्णमासी महाचैत्र्यादिसंज्ञेत्यर्थः । स एव —— मेषराशौ यदा सौरिः सिंहे चन्द्रबृहस्पती। भास्करश्श्रवणर्क्षे च महामाघीति सा स्मृता

इति । सौरिः - शनैश्चरः, मेषे यदि स्यात्, गुरुः चन्द्रश्च सिंहे यदि स्यात्, भास्करः श्रवणनक्षत्रे यदि स्यात् तदा पूर्णिमा महामाघीत्यर्थः ।

காம்ய ச்ராத்தத்துக்கு வேறு காலத்தையும் சொல்லுகிறார், கார்க்யர்:— ''மாஸத்தின் பெயரையுடைய நக்ஷத்ரத்தில் சந்த்ரன் எப்பொழுது பூர்ணனாயிருக்கிறானோ, குரு வாரத்துடன் சேர்ந்த அந்தத் திதி மஹா திதியென்று சொல்லப்படுகிறது.'' பூர்ணிமையில் சந்த்ரன் அந்த மாஸத்திய சித்திரை முதலிய நக்ஷத்ரத்தில் குரு வாரத்துடன் சேர்ந்து இருந்தால் அந்தப் பூர்ணிமை மஹாசைத்ரீ முதலிய பெயருடன் கூடியது என்று பொருள். கார்க்யரே:— சனி மேஷ ராசியிலும், சந்த்ரனும் ப்ருஹஸ்பதியும் ஸிம்ஹத்திலும், ஸூர்யன் ச்ரவண நக்ஷத்ரத்திலும் எப்பொழுது இருக்கின்றனரோ அந்தப் பூர்ணிமை மஹாமாகீ என்று சொல்லப்பட்டுள்ளது.

स एव — वृषे वा मिथुने भानौ जीवचन्द्रौ तथेन्द्रभे । पौर्णमासी गुरोर्वारे महाज्येष्ठी प्रकीर्तिता । महाचैत्र्यादिषु कृतं दानं श्राद्धमुपोषणम् । अनन्तफलदं प्राहुर्मुनयो धर्मवेदिनः इति ।

கார்க்யரே:— ஸூர்யன் வ்ருஷபத்திலாவது மிதுனத்திலாவது இருக்கும் பொழுது, குருவும் சந்த்ரனும் கேட்டை நக்ஷத்ரத்திலும் எப்பொழுது இருக்கின்றனரோ அப்பொழுது குரு வாரத்துடன் சேர்ந்த பூர்ணிமை மஹாஜ்யைஷ்டீ என்று சொல்லப்பட்டுள்ளது. மஹா சைத்ரீ முதலிய பூர்ணிமைகளில் செய்யப்படும் ச்ராத்தம், தானம், உபவாஸம் இவைகள் அளவற்ற பலனைக் கொடுக்கக் கூடியவை என்கின்றனர், தர்மம் அறிந்த முனிவர்கள்.

## श्राद्धे भोजनीयवर्जनीयब्राह्मणनिरूपणम् ।

तत्र मनुः - तत्र ये भोजनीयास्स्युर्ये च वर्ज्या द्विजोत्तमाः । यावन्तश्चैव यैश्चान्नैस्तांश्च वक्ष्याम्यशेषतः इति । द्विजोत्तमाः - द्विजेषु

त्रैवर्णिकेषूत्तमाः ब्राह्मणा इति यावत् । भोजनीयानभोजनीयांश्च ब्राह्मणान्वेत्तुं गुणदोषपरीक्षणं कार्यमित्याह एव— दूरादेव परीक्षेत ब्राह्मणं वेदपारगम् । तीर्थं तद्धव्यकव्यानां प्रदाने सोऽतिथिःस्मृतः इति । पात्रपरिग्रहकालात् पूर्वमेव तत्पितृपितामहपरीक्षा कार्या। तीर्थं - उत्तमपात्रम्तथितुल्यश्चेत्यर्थः । वेदपारगग्रहणमुपादेयगुणाना-मुपलक्षणार्थम्।

**ச்ராத்தத்தில் புஜிப்பிக்கத் தகுந்தவரும் வர்ஜிக்கத் தகுந்தவருமான ப்ராம்ஹணர்கள்.**

**மனு:—** ''அந்த ச்ராத்தத்தில் எந்த த்விஜர்கள் போஜனீயர்களோ, எவர்கள் வர்ஜனீயர்களோ, எவ்வளவு ப்ராம்ஹணர்கள் புஜிப்பிக்கத் தகுந்தவர்களோ, எந்த அன்னங்களால் புஜிப்பிக்கத் தகுந்தவர்களோ, அவர்களையும் முழுவதும் சொல்லுகிறேன்.'' த்விஜோத்தமர்கள் - மூன்று வர்ணங்களுள் சிறந்தவர்கள், ப்ராம்ஹணர்கள், என்பது பொருள். போஜ்யர்களும், அபோஜ்யர்களுமான ப்ராம்ஹணர்களை அறிவதற்கு, குணதோஷ பரீக்ஷை செய்யத் தகுந்தது, என்கிறார், **மனுவே:—** ''வேதம் முழுவதையும் அறிந்த ப்ராம்ஹணனை முன்பே பரீக்ஷிக்க வேண்டும். அந்த ப்ராம்ஹணன் ஹவ்ய கவ்யங்களுக்கு உயர்ந்த பாத்ரமாகிறான். அவன் அதிதி எனப்படுகிறான்.'' ப்ராம்ஹணனை வரிப்பதற்கு முன்பே அவனது பிதா பிதாமஹன் முதலியவரைப் பற்றிய பரீக்ஷை செய்ய வேண்டும். தீர்த்தம் - உயர்ந்த பாத்ரம், அதிதி = அதிதிக்கு ஸமமானவன் என்பது பொருள். 'வேதபாரக' என்றது மற்ற குணங்களுக்கும் உபலக்ஷணமாகும்.

अत एव छागलेयः — सर्वलक्षणसंयुक्तैर्विद्याशीलगुणान्वितैः । पुरुषत्रयविख्यातैस्सर्वं श्राद्धं प्रकल्पयेत् इति । यमोऽपि — पूर्वमेव परीक्षेत ब्राह्मणान् वेदपारगान् । शरीरप्रभवैर्दोषैः शुद्धांश्च चरितव्रतान्

इति । शरीरप्रभवा दोषाः - कुष्ठापस्मारकादयः, तद्रहितान् पितामहादारभ्य भोजनीयब्राह्मणपर्यन्तं परीक्षेतेत्यर्थः ।

சாகலேயர்:— எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவர்களும், வித்யை, நல்லொழுக்கம், குணங்கள் இவைகளுடன் கூடியவரும், மூன்று தலைமுறையிலிருந்து ப்ரஸித்தர்களுமான ப்ராம்ஹணர்களுடன் கூடி எல்லா ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். யமனும்:— ''வேதம் முழுவதும் அறிந்த ப்ராம்ஹணர்களை முன்பே பரீக்ஷிக்க வேண்டும். சரீரத்தில் உண்டான தோஷங்களில்லாதவரும், வ்ரதங்களை அனுஷ்டித்தவருமாகியவர்களை முன்பே பரீக்ஷிக்க வேண்டும்.'' சரீரத்தில் உண்டாகிய தோஷங்கள் குஷ்டம், அபஸ்மாரம் முதலியவை. அவையில்லாதவர்களாய் போஜ்ய ப்ராம்ஹணனின் பிதாமஹர் முதற்கொண்டு அவன் வரையில் பரீக்ஷிக்க வேண்டும், என்பது பொருள்.

अत एव पितुः श्रोत्रियत्वेन पुत्रस्य श्रैष्ठ्यमाह मनुः — अश्रोत्रियः पिता यस्य पुत्रस्स्याद्वेदपारगः । अश्रोत्रियो वा पुत्रस्स्यात् पिता स्याद्वेदपारगः । ज्यायांसमनयोर्विद्याद्यस्य स्यात् श्रोत्रियः पिता । मन्त्रसम्पूजनार्थं तु सत्कारमितरोऽर्हति इति । इतरः - अश्रोत्रियपितृकः श्रोत्रिय इत्यर्थः । स एव — न ब्राह्मणं परीक्षेत दैवे कर्मणि धर्मवित् । पित्र्ये कर्मणि तु प्राप्ते परीक्षेत प्रयत्नतः इति । प्रयत्नत इति दैवेऽप्यपकृष्य योजनीयम्, दैवे कर्मणि प्रयत्नतो न परीक्षेत, अनेन किञ्चित् परीक्षणं कार्यमित्युक्तं भवति ।

ஆகையாலேயே, பிதா ச்ரோத்ரியனாக இருப்பதால் புத்ரனுக்கு ச்ரேஷ்டத் தன்மையைச் சொல்லுகிறார், மனு:— எவனது பிதா அச்ரோதரியனோ, புத்ரன் வேதம் முழுவதும் கற்றவனோ, எவன் அச்ரோத்ரியனோ, பிதா வேதம் முழுவதும் கற்றவனோ, இவ்விருவர்களுள் எவனது பிதா

ச்ரோத்ரியனே அந்தப் புத்ரன் சிறந்தவனுவான். மற்றவனேவெனில் (அச்ரோத்ரிய புத்ரனுய் வேதம் கற்றவன்) வேதத்தின் மர்யாதைக்காகப் பூஜைக்கு அர்ஹனுகிருன். இதர: = அச்ரோத்ரிய பித்ருகனுகிய ச்ரோத்ரியன் என்பது பொருள். (ச்ரோத்ரியன் = வேதம் கற்றவன்.) மனுவே:— தர்மம் அறிந்தவன் தேவ கர்மத்தில் ப்ராம்ஹணனைப் பரீக்ஷிக்கக் கூடாது. பித்ர்யகர்மம் ப்ராப்தமாகிய காலத்திலோ வெனில், ப்ரயத்நத்துடன் பரீக்ஷிக்க வேண்டும். 'ப்ரயத்னத:' என்ற பதத்தை 'தைவ கர்மணி' என்ற இடத்திலும் இழுத்துச் சேர்த்துக் கொள்ள வேண்டும். தைவ கர்மத்தில் ப்ரயத்னத்துடன் பரீக்ஷிக்கக் கூடாது. இதனுல் கொஞ்சம் பரீக்ஷை செய்யப்பட வேண்டும் என்று சொல்லியதாய் ஆகிறது.

तथा च स एव — श्रोत्रियायैव देयानि हव्यकव्यानि दातृभिः। अर्हत्तमाय विप्राय तस्मै दत्तं महाफलम्। एकैकमपि विद्वांसं दैवे पित्र्ये च भोजयेत्। पुष्कलं फलमाप्नोति नामन्त्रज्ञान् बहूनपि। सहस्राणि सहस्राणामनृचां यत्र भुञ्जते। एकस्तान् मन्त्रविद्विप्रः सर्वानर्हति धर्मतः। ज्ञानोत्कृष्टाय देयानि कव्यानि च हवींषि च। न हि हस्तावसृग्दिग्धौ रुधिरेणैव शुध्यतः। यत्नेन भोजयेच्छ्राद्धे बह्वृचं वेदपारगम्। शाखान्तगं वाऽप्यध्वर्युं छन्दोगं वा समाप्तिगम्। एषामन्यतमो यस्य भुञ्जीत श्राद्धमर्चितः। पितॄणां तस्य तृप्तिस्स्याच्छाश्वती साप्तपौरुषी। ब्राह्मणो ह्यनधीयानस्तृणाग्निरिव शाम्यति। तस्मै कव्यं न दातव्यं न हि भस्मनि हूयते इति।

மனுவே:— கொடுப்பவர்கள் ஹவ்யகவ்யங்களை ச்ரோத்ரியனின் பொருட்டே கொடுக்க வேண்டும். மிகப் பூஜ்யனுகிய அந்த ச்ரோத்ரிய ப்ராம்ஹணனுக்குக் கொடுக்கப்பட்டது மிகப் பலனைக் கொடுக்கக் கூடியது. தைவ கர்மத்திலும், பித்ர்யகர்மத்திலும் ச்ரோத்ரியனுகிய ப்ராம்ஹணனை ஒருவனையாவது பூஜிப்பிக்க வேண்டும்.

அதனால் பூர்ணமான பலனை அடைவான். வேதம் அறியாதவர்கள் பலராலும் அவர்களைப் புஜிப்பிக்கக் கூடாது. வேதமறியாத ஆயிரம் ப்ராம்ஹணர்கள் எதில் புஜிப்பிக்கின்றனரோ, அவர்களுடைய ஸ்தானத்தில் வேதம் அறிந்த ஒரு ப்ராம்ஹணன் ப்ரீதி உள்ளவனாய்ப் புஜிப்பதற்கு அர்ஹனாகிறான். தர்ம சாஸ்த்ரரீதியாய் கவ்யங்களும் ஹவ்யங்களும் வேதஜ்ஞானத்தால் சிறந்தவனுக்கே கொடுக்கப்பட வேண்டும். ரக்தத்தால் பூசப்பட்ட கைகள், ரக்தத்தாலேயே சுத்தங்களாகா தல்லவா. ச்ராத்தத்தில் வேதம் முழுவதும் கற்ற ருக் வேதியை ப்ரயத்ன பூர்வமாய்ப் புஜிப்பிக்க வேண்டும். யஜுர் வேதம் முழுவதும் கற்ற யஜுர்வேதியையாவது, ஸாமவேதம் முழுவதும் கற்ற ஸாமவேதியையாவது புஜிப்பிக்கவும். இம்மூவருள் ஒருவன் பூஜிக்கப் பட்டவனாய் எவர்களின் ச்ராத்தத்தைப் புஜிக்கின்றானோ அவர்களின் பித்ருக்களுக்கு ஏழு தலைமுறை வரையில் த்ருப்தி உண்டாகும். வேதம் கற்காத ப்ராம்ஹணன் புல்லில் பற்றிய நெருப்புப் போல் அணைந்து விடுகிறான். அவனின் பொருட்டுக் கவ்யத்தைக் கொடுக்கக் கூடாது. சாம்பலில் ஹோமம் செய்யப்படுவது இல்லை அல்லவா.

बृहस्पतिः — यद्येकं भोजयेत् श्राद्धे छन्दोगं तत्र भोजयेत्। ऋचो यजूँषि सामानि त्रयं तत्रतु विद्यते । अटेत पृथिवीं सर्वां सशैलवनकाननाम्। यदि लभ्येत पित्रर्थे साम्नामक्षरचिन्तकः। ऋचा तु तृप्यति पिता यजुषा तु पितामहः। पितुः पितामहस्साम्ना छन्दोगो ह्यधिकस्ततः इति। शातातपः — भोजयेद्यस्त्वथर्वाणं दैवे पित्र्ये च कर्मणि। अनन्तमक्षयं चैव फलं तस्येति वै श्रुतिः इति।

ப்ருஹஸ்பதி:— ச்ராத்தத்தில் ஒருவனைப் புஜிப்பிப்பதானால், அதில், ஸாமவேதியைப் புஜிப்பிக்க வேண்டும். ஸாமவேதியினிடத்தில் ருக்குகள், யஜுஸ்ஸுகள், ஸாமங்கள் என்ற மூன்றும் இருக்கின்றன.

பித்ரு கார்யத்திற்காக ஸாம வேதம் அறிந்தவன் கிடைப்பானாகில் மலைகள், காடுகள், இவைகளுடன் கூடிய பூமி முழுவதும் சுற்றலாம். ருக் வேதத்தால் பிதா த்ருப்தனாகிறான். யஜுர் வேதத்தால் பிதாமஹன் த்ருப்தனாகிறான். ஸாமவேதத்தால் ப்ரபிதாமஹன் த்ருப்தனாகிறான். ஆகையால் ஸாமவேதியே உயர்ந்தவனாகிறான். சாதாதபர்:— தைவகர்மத்திலும், பித்ர்யகர்மத்திலும் அதர்வ வேதியை எவன் புஜிப்பிக்கின்றானோ அவனுக்கு அளவற்றதும், முடிவற்றதுமான பலன் உண்டாகின்றது, என்கின்றது ச்ருதி.

वेदविद्याव्रतस्नाताः श्रोत्रिया वेदपारगाः। स्वधर्मनिरताः शान्ताः क्रियावन्तस्तपस्विनः। तेभ्यो हव्यं कव्यं च प्रसङ्गेभ्यः प्रदीयते। ये सोमपा विरजसः ब्रह्मज्ञाः शान्तबुद्धयः। व्रतिनो नियमस्थाश्च ऋतुकालाभिगामिनः। पञ्चाग्निरप्यधीयानो यजुर्वेदविदेव च। बह्वृचश्च त्रिसौपर्णस्त्रिमधुर्वाथ यो भवेत्। त्रिणाचिकेतो विरजाश्छान्दोगो ज्येष्ठसामगः। अथर्वशिरसोऽध्येता सर्वे ते पङ्क्तिपावनाः। शिशुरप्यग्निहोत्री च न्यायविच्च षडङ्गवित्। मन्त्रब्राह्मणविच्चैव यश्च स्याद्धर्मपारगः। ब्रह्मदेयासुतश्चैव भावशुद्धस्सहस्रदः। चान्द्रायणव्रतचरस्सत्यवादी पुराणवित्। निष्णातस्सर्वविद्यासु शान्तो विगतकल्मषः। गुरुदेवाग्निपूजासु प्रसन्नो ज्ञानतत्परः। विमुक्तस्सर्वदा धीरो ब्रह्मभूतो द्विजोत्तमः। न मित्रो नैव चामित्रो मैत्र आत्मविदेव च। स्नातको जप्यनिरतः सदा पुष्पबलिप्रियः॥ ऋजुर्मृदुः क्षमी दान्तः शान्तस्सत्यव्रतः शुचिः। वेदज्ञस्सर्वशास्त्रज्ञ उपवासपरायणः। गृहस्थो ब्रह्मचारी च चतुर्वेदविदेव च। वेदविद्याव्रतस्नाता ब्राह्मणाः पङ्क्तिपावनाः इति।

யமன்:— 'வேத வித்யையாலும், வேத வ்ரதத்தாலும் நிறைவு செய்தவர்களும், ச்ரோத்ரியர்களும், வேதத்தின் முடிவை அடைந்தவர்களும், தங்கள் கர்மங்களில்

ஆஸக்தர்களும், சாந்தர்களும், அனுஷ்டானபரர்களும், தபஸ்விகளுமாகியவர்களின் பொருட்டு ஹவ்யமும், கவ்யமும் கொடுக்கப்பட வேண்டும். ஸோமபானம் செய்தவர்களும், ரஜோகுணமற்றவர்களும், ப்ரம்ஹஜ்ஞானிகளும், சாந்த புத்தியுடையவர்களும், வ்ரதமுடையவர்களும், நியமம் உடையவர்களும், ருது காலத்தில் பார்யையைச் சேருகிறவர்களும், பஞ்சாக்னிகளை உபாஸிப்பவன், அத்யயனம் செய்பவன், யஜுர்வேத மறிந்தவன், ருக்வேதி, த்ரிஸுபர்ணன், த்ரிமது, த்ரிணாசிகேதன், விரஜஸ், சந்தோகன், ஜ்யேஷ்ட ஸாமம் அறிந்தவன், அதர்வசிரஸ்ஸைக் கற்றவன் என்ற இவர்கள் எல்லோரும் பங்க்தியைச் சுத்தம் செய்பவராவர். பாலாக்னிஹோத்ரியும், ந்யாயசாஸ்த்ரம் அறிந்தவனும், ஆறங்கங்களை அறிந்தவனும், மந்த்ர ப்ராம்ஹணங்களை அறிந்தவனும், தர்மசாஸ்த்ரம் அறிந்தவனும், ப்ரம்ஹதேயாஸுதனும், பாவசுத்தனும், ஆயிரம் பசுக்களைக் கொடுத்தவனும், சாந்த்ராயணம் அனுஷ்டித்தவனும், உண்மை சொல்லுபவனும், புராணம் அறிந்தவனும், எல்லா வித்யைகளிலும் ஸமர்த்தனும், சாந்தனும், பாபமற்றவனும், குரு, தேவர், அக்னி இவர்களைப் பூஜிப்பவனும், ஜ்ஞானத்தில் ஆஸக்தனும், முக்தனும், எப்பொழுதும் தீரனும், ப்ரம்ஹபூதனும், ப்ராம்ஹணோத்தமனும், ஒருவருக்கும் மித்ரனல்லாதவனும், ஒருவருக்கும் சத்ரு அல்லாதவனும், மைத்ரனும், ஆத்மஜ்ஞனும், ஸ்நாதகனும், ஜபசீலனும், எப்பொழுதும் புஷ்பங்களிலும், பலிகளிலும் ப்ரியமுள்ளவனும், ருஜுவாயும், ம்ருதுவாயும், பொறுமை உடையவனும், இந்த்ரியங்களை அடக்கியவனும், மனதை அடக்கியவனும், ஸத்யவாதியும், சுத்தனும், வேதம் அறிந்தவனும், எல்லா சாஸ்த்ரங்களையும் அறிந்தவனும், உபவாஸசீலனும், க்ருஹஸ்தனும், ப்ரம்ஹசாரியும், நான்கு வேதங்களை அறிந்தவனும், வேத வித்யா ப்ரம்ஹசாரியும், நான்கு வேதங்களை அறிந்தவனும், வேத வித்யாவ்ரத

ஸ்நாதர்களுமாகிய ப்ராம்ஹணர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள் ஆகின்றனர்.

ब्रह्म मेतु माम् इत्यादयस्त्रयोऽनुवाकाः प्रत्येकं त्रिसुपर्णसंज्ञाः, तान् त्रीनेकं वा योऽधीते स त्रिसुपर्णः, मधुवाता ऋतायते इत्याद्यास्तिस्र ऋचो योऽधीते स त्रिमधुः । उशन् ह वै वाज श्रवसः इत्यादिभिस्त्रिभिरनुवाकैर्विहितानां नाचिकेतसंज्ञानामग्नीनां चेता वेत्ता वा त्रिणाचिकेतः, ब्रह्मदेयासुतः - ब्राह्मविवाहोढायाः पुत्र इत्यर्थः । शङ्खः — ब्रह्मदेयानुसन्तानो ब्रह्मदेया प्रदायकः । ब्रह्मदेयापतिश्चैव ब्राह्मणाः पङ्क्तिपावनाः । यजुषां पारगो यश्च साम्नां यश्चापि पारगः । अथर्वशिरसोऽध्येता ब्राह्मणाः पङ्क्तिपावनाः इति । बोधायनोऽपि — त्रिमधुस्त्रिणाचिकेतस्त्रिसुपर्णः पञ्चाग्निष्षडङ्ग वित्त्रिशीर्षगो ज्येष्ठसामग इति पङ्क्तिपावनाः इति । त्रिशीर्षगः - सहस्रशीर्षापुरुषः, अद्भ्यः संभूतः, सहस्रशीर्षं देवम् इत्यनुवाकत्रयस्याध्येता ।

''ப்ரம்ஹமேது மாம்'' என்பது முதலிய மூன்று அனுவாகங்கள், தனித்தனியே ''த்ரிஸுபர்ணம்'' என்று மூன்று பெயருடையவைகள். அவைகளைத் தனித் தனியேயாவது மூன்றையுமாவது எவன் கற்கிறானோ, அவன் த்ரிஸுபர்ணன் எனப்படுவான். ''மதுவாதா:'' என்பது முதலிய மூன்று ருக்குகளை எவன் கற்கிறானோ அவன் 'த்ரிமது' எனப்படுவான். ''உசந் ஹவை வாஜ ச்ரவஸ:' என்பது முதலிய மூன்று அனுவாகங்களால் விதிக்கப்பட்ட 'நாசிகேதம்' என்ற பெயருள்ள அக்னிகளைச் சயனம் செய்தவன் அல்லது அறிந்தவன் 'த்ரிணாசிகேதன்' எனப்படுவான். ப்ரம்ஹதேயாஸுதன் = ப்ராம்ஹ விவாஹ விதியால் மணக்கப்பட்டவளின் புத்ரன். சங்கர்:— ப்ரம்ஹதேயாபுத்ரன், ப்ராம்ஹ விதியால் பெண்ணைத் தானம் செய்தவன், ப்ரம்ஹதேயையின் பர்த்தா, இந்த ப்ராம்ஹணர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள்.

யஜுர்வேதம் முழுவதும் கற்றவன், ஸாமவேதம் முழுவதும் கற்றவன், அதர்வசிரஸ்ஸைக் கற்றவன், இந்த ப்ராம்ஹணர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள். போதாயனரும்:— த்ரிமது, த்ரிணாசிகேதன், த்ரிஸுபர்ணன், பஞ்சாக்நி, வேதத்தின் ஆறு அங்கங்களை அறிந்தவன், த்ரிசீர்ஷகன், ஜ்யேஷ்டஸாமம் அறிந்தவன் என்ற இவர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள். த்ரிசீர்ஷகன் = ஸஹஸ்ரசீர்ஷா, அத்ப்யஸ் ஸம்பூத:, ஸஹஸ்ரசீர்ஷம் என்ற மூன்று அனுவாகங்களைக் கற்றவன்.

हारीतोऽपि — स्थितिरविच्छिन्नवेदवेदिता आर्षेयत्वं चेति कुलगुणाः। वेदा अङ्गानि धर्मोऽध्यात्मवित्त्वं विज्ञानं स्मृतिश्चेति षड्विधं श्रुतम्। ब्रह्मण्यता देवपितृभक्तता समता सौम्यता अपरोपतापिता अनसूयता अनुद्धतता अपारुष्यं मित्रता प्रियवादित्वं कृतज्ञता शरण्यता प्रशान्तिश्चेति त्रयोदशविधं शीलम्। क्षमा दमो दया दानमहिंसा गुरुपूजनम्। शौचं स्नानं जपो होमस्तपः स्वाध्याय एव च। सत्यवचनं सन्तोषो दृढव्रतत्वमुपव्रतत्वमिति षोडशगुणं वृत्तम्। तस्मात् कुलीनाः श्रुतशीलवन्तो व्रतस्थास्सत्यवादिनोऽव्यङ्गाः पाङ्क्तेयाः द्वादशोभयत्र श्रोत्रियस्त्रिणाचिकेतस्त्रिसुपर्णस्त्रिमधुस्त्रिशीर्षगो ज्येष्ठसामगः पञ्चाग्निष्षडङ्गविद्रुद्रजाप्यूर्ध्वरेता ऋतुकालगामी तत्वविच्चेति पङ्क्तिपावना भवन्ति इति। स्थितिः अविच्छिन्नसन्तानत्वम्, अविच्छिन्नवेदवेदितेति हविरासादनार्थदेशविशेषवाची वेदिशब्दो हविस्साध्ययागं लक्षयति। आर्षेयत्वं - प्रवरगतऋषिज्ञातृत्वम्। धर्मः - धर्मशास्त्रम्। विज्ञानं वैशेषिकादि शास्त्रज्ञानम्। स्मृतिः - वेदशास्त्राद्य विस्मरणम्।

ஹாரீதரும்:— "ஸ்திதி, விடாமல் வேத வேதிகளையுடைய தன்மை, ஆர்ஷேயத்வம் என்பவைகள் குல குணங்கள். வேதங்கள், அவைகளின் அங்கங்கள், தர்மம், அத்யாத்ம சாஸ்த்ரத்தை அறிந்திருப்பது,

விஜ்ஞானம், ஸ்ம்ருதி என்று ஆறு விதமாய் உள்ளது ''ச்ருதம்''. ப்ராம்ஹண பக்தி, தேவர்கள், பித்ருக்கள் இவர்கள் இடத்தில் பக்தி, ஸமத்தன்மை, ஸௌம்யத் தன்மை, பிறரை வருத்தாமல் இருத்தல், அஸூயையின்மை, கர்வமின்மை, கடுமையின்மை, மித்ரத்தன்மை, ப்ரியமாய்ப் பேசுதல், நன்றியுணர்ச்சி, காப்பாற்றுந்தன்மை, ஒழிவு என்று பதின்மூன்று விதமாயுள்ளது ''சீலம்''. பொறுமை, இந்த்ரிய நிக்ரஹம், தயை, தானம், அஹிம்ஸை, குருபூஜை, சௌசம், ஸ்நானம், ஜபம், ஹோமம், தபஸ், வேதாத்யயனம், உண்மை பேசுதல், ஸந்தோஷம், நழுவாத வ்ரதமுடைமை, சிறிய வ்ரதமுடைமை, என்று பதினாறு விதமுள்ளது ''வ்ரதம்''. ஆகையால், நற்குலத்தில் பிறந்தவர்களும், ச்ருதம் சீலம் இவைகளுடன் கூடியவர்களும், வ்ரதத்தை அனுஷ்டிப்பவர்களும், உண்மை பேசுகிறவர்களும், அங்கஹீனரல்லாதவர்களும், ஹவ்ய கவ்யங்களில் பங்க்திக்கு அர்ஹராவர். ச்ரோத்ரியன், த்ரிணாசிகேதன், த்ரிஸுபர்ணன், த்ரிமது, த்ரிசீர்ஷகன், ஜ்யேஷ்டஸாமம் அறிந்தவன், பஞ்சாக்னி, வேதங்களின் ஆறு அங்கங்களை அறிந்தவன், ருத்ரம் ஜபிப்பவன், ஊர்த்வரேதஸ், ருதுகாலத்தில் பார்யையைச் சேருகிறவன், தத்வம் அறிந்தவன், இந்தப் பன்னிரண்டு பேர்களும் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள்.'' ஸ்திதி = வம்சத்தின் விச்சேதமில்லாமை. அவிச்சின்ன வேதி வேதிதா = வேதி என்ற சப்தம் யாகத்தில் ஹவிஸ்ஸை வைக்கும் இடம். அதனால் வேதியினால் ஸாதிக்கக் கூடிய யாகங்கள் சொல்லப்படும். ஆர்ஷேயத்வம் = ப்ரவரத்திலுள்ள ருஷிகளை அறிந்திருப்பது. தர்மம் = தர்மசாஸ்த்ரம். விஜ்ஞானம் = வைசேஷிகம் முதலிய சாஸ்த்ரஜ்ஞானம். ஸ்ம்ருதி = வேதசாஸ்த்ரம் முதலியவைகளை மறவாமல் இருத்தல்.

विष्णुरपि — ये क्षान्तदान्ताः श्रुतिपूर्णकण्ठा जितेन्द्रियाः प्राणिवधे निवृत्ताः । प्रतिग्रहे सङ्कुचिताग्रहस्ताः ते ब्राह्मणास्तारयितुं समर्थाः इति । मत्स्यपुराणेऽपि — अर्थज्ञो वेदवित् सत्री ज्ञातवंशः कुलान्वितः । पुराणवेत्ता सर्वज्ञः स्वाध्यायजपतत्परः । शिवभक्तः पितृपरस्सूर्यभक्तोऽथ वैष्णवः । ब्रह्मण्यो योगविच्छान्तो विजितात्माऽर्थशीलवान् । श्राद्धे नियोजनीयास्स्युर्यदेते पङ्क्तिपावनाः इति ।

**விஷ்ணுவும்:—** எந்த ப்ராம்ஹணர்கள் பொறுமை உடையவர்களும், இந்த்ரியங்களை அடக்கியவர்களும், வேதத்தினால் நிறைந்தவர்களும், ஜிதேந்த்ரியர்களும், ப்ராணிவதம் செய்யாதவர்களும், ப்ரதிக்ரஹத்தில் குறுகிய கையை உடையவர்களுமாக இருக்கின்றனர்களோ அவர்கள் கொடுப்பவர்களைக் கரையேற்ற ஸமர்த்தர்களாக ஆகின்றனர். **மத்ஸ்யபுராணத்திலும்:—** வேதார்த்தம் அறிந்தவன், வேதம் அறிந்தவன், யாகம் செய்தவன், அறிந்தவன், வம்சத்தை உடையவன், நற்குலத்தை உடையவன், புராணம் அறிந்தவன், எல்லாம் அறிந்தவன், வேதாத்யயனம், ஜபம் இவைகளில் ஆஸக்தி உள்ளவன், சிவபக்தன், பித்ருகார்யம் செய்பவன், ஸூர்யபக்தன், விஷ்ணு பக்தன், ப்ராம்ஹண பக்தன், யோகசாஸ்த்ரம் அறிந்தவன், ஒழிவு உடையவன், மனதை ஜபித்தவன், அர்த்தம் உடையவன், சீலம் உடையவன், இவர்கள் ச்ராத்தத்தில் வரிக்கத் தகுந்தவர்கள். இவர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள்.

याज्ञवल्क्यः — अग्र्यःसर्वेषु वेदेषु श्रोत्रियो ब्रह्मविद्युवा । वेदा(न्त)र्थविज्ज्येष्ठसामा त्रिमधुस्त्रिसुपर्णकः । कर्मनिष्ठास्तपोनिष्ठाः पञ्चाग्निब्रह्मचारिणः । पितृमातृपराश्चैव ब्राह्मणाः श्राद्धसम्पदे इति ।

**யாஜ்ஞவல்க்யர்:—** எல்லா வேதங்களிலும் சிறந்தவன் ச்ரோத்ரியன், ப்ரம்ஹஜ்ஞானி, யௌவனம் உடையவன், வேதார்த்த (வேதாந்தார்த்த) மறிந்தவன், ஜ்யேஷ்ட

ஸாமமறிந்தவன், த்ரிமது, த்ரிஸுபர்ணன், கர்மநிஷ்டர்கள், தபோநிஷ்டர்கள், பஞ்சாக்னிகள், ப்ரம்ஹசாரிகள், பித்ரு மாத்ரு பக்தர்கள் என்ற இந்த ப்ராம்ஹணர்கள் ச்ராத்தத்தின் பூர்ணபலத்தின் பொருட்டு ஆகின்றார்கள்.

मनुः — अपाङ्क्त्योपहता पङ्क्तिः पाव्यते यैर्द्विजोत्तमैः । तान्निबोधत कार्त्स्न्येन द्विजाग्र्यान् पङ्क्तिपावनान्। अग्र्यास्सर्वेषु वेदेषु सर्वप्रवचनेषु च । श्रोत्रियान्वयजाश्चैव विज्ञेयाः पङ्क्तिपावनाः । त्रिणाचिकेतः पञ्चाग्निस्त्रिसुपर्णष्षडङ्गवित् । ब्रह्मदेयात्मसन्तान-श्छन्दोगो ज्येष्ठसामगः । वेदार्थवित् प्रवक्ता च ब्रह्मचारी सहस्रदः । शतायुश्चैव विज्ञेया ब्राह्मणाः पङ्क्तिपावनाः इति । सहस्रदः - गवां सुवर्णानां वा।

மனு:— ''பங்க்திக்கு அர்ஹரல்லாதவர்களால் கெடுக்கப்பட்ட பங்க்தியானது எந்த ப்ராம்ஹணோத்தமர்களால் சுத்தமாக்கப் படுகிறதோ அந்தப் பங்க்திபாவனர்களான ப்ராம்ஹணர்களை முழுவதும் அறிந்து கொள்ளுங்கள். ஸர்வ வேதங்களிலும் முந்தியவர்கள், எல்லா சாஸ்த்ரங்களிலும் முந்தியவர்கள், ச்ரோத்ரியரின் வம்சத்தில் பிறந்தவர்கள், என்ற இவர்கள் பங்க்திபாவனர்கள் என்று அறியப்பட வேண்டும். த்ரிணாசிகேதன், பஞ்சாக்னி, த்ரிஸுபர்ணன், வேதத்தின் ஆறு அங்கங்களை அறிந்தவன், ப்ரம்ஹதேயா புத்ரன், ஸாம வேதம் அறிந்தவன், ஜ்யேஷ்ட ஸாமம் அறிந்தவன், வேதார்த்தம் அறிந்தவன், ப்ரவசனம் செய்பவன். ப்ரம்ஹசாரீ, ஆயிரத்தைக் கொடுத்தவன், நூறு வயதுடையவன் என்ற இவர்கள் பங்க்திபாவனர்கள் என்று அறியத் தகுந்தவர்கள்.'' ஸஹஸ்ரத: = ஆயிரம் பசுக்களையாவது, பொன்னையாவது கொடுத்தவன்.

व्यासोऽपि — अग्निहोत्रपरो विद्वान् न्यायविच्च षडङ्गवित्। मन्त्रब्राह्मणविच्चैव यश्च धर्मस्य पालकः । गुरुदेवाग्नि पूजासु प्रसक्तो

ज्ञानतत्परः । महादेवार्चनरतो वैष्णवः पङ्क्तिपावनाः इति । मनुः — गायत्रीमात्रसारोऽपि वरं विप्रस्सुयन्त्रितः । नायन्त्रितश्चतुर्वेदी सर्वाशी सर्वविक्रयी इति । मत्स्यः — गायत्रीजप्यनिरतं हव्यकव्ये नियोजयेत् । पापं तिष्ठति नो तस्मिन् अब्बिन्दुरिव पुष्करे इति । पुष्करम् - पद्मपत्रम् ।

வ்யாஸரும்:— அக்னிஹோத்ரீ, ந்யாய சாஸ்த்ரம் அறிந்தவன், ஆறு அங்கம் அறிந்தவன், மந்த்ர ப்ராம்ஹணங்களை அறிந்தவன், தர்மத்தை பரிபாலிக்கிறவன், குரு, தேவதை, அக்னி இவர்கள் இடத்தில் பக்தன், ஜ்ஞானம் உடையவன், சிவபூஜாபரன், விஷ்ணு பக்தன், என்ற இவர்கள் பங்க்திபாவனர்கள். மனு:— காயத்ரீயை மட்டில் தெரிந்தவனாய் இருந்தாலும் மிகவும் நியமம் உடைய ப்ராம்ஹணன் சிறந்தவனாவான். நான்கு வேதங்கள் அறிந்தவனாயினும் நியமம் இல்லாமல் எங்கும் எதையும் புஜிப்பவனாயும் எதையும் விற்பவனாயும் இருந்தால் அவன் சிறந்தவனாகான். மத்ஸ்யர்:— காயத்ரீ ஜபத்தில் ஆஸக்தியுள்ளவனை ஹவ்யகவ்யங்களில் வரிக்க வேண்டும். தாமரையில் ஜலம் போல், அவனிடத்தில் பாபம் நிற்பதில்லை.

आश्वलायनः — अविप्लुतब्रह्मचर्यौ पितरौ यस्य तिष्ठतः । सन्ध्याग्निहोत्रनिष्ठश्चेच्छ्राद्धे सोऽर्होऽप्यवेदवित् । त्यक्ताग्निस्त्यक्तसन्ध्यो यो वेदविच्चापि स द्विजः । स्वपित्रोरात्मनः शुद्धिविहीनस्तं च वर्जयेत् इति । व्यासोऽपि — चीर्णव्रता गुणैर्युक्ता भवेयुर्ये च कर्षकाः । सावित्रीज्ञः क्रियावन्तस्ते राजन् केतनक्षमाः । सावित्रीं तु जपेद्यस्तु त्रिकालं भरतर्षभ । भैक्षवृत्तिः क्रियावांश्च स राजन् केतनक्षमः इति । केतनम् - निमन्त्रणम्, क्षमः - योग्य इत्यर्थः ।

ஆச்வலாயனர்:— எந்த ப்ராம்ஹணனின் மாதா பிதாக்கள் ப்ரம்ஹசர்யம் கெடாதவர்களாய்

இருக்கின்றனரோ அவன் வேதம் அறியாதவனுயினும், ஸந்த்யோபாஸனம், அக்னிஹோத்ரம் இவைகளைத் தவருது அனுஷ்டிப்பவனுய் இருந்தால் ச்ராத்தத்தில் அர்ஹனுகிருன். எந்த ப்ராம்ஹணன் வேதம் அறிந்தவனுயினும் ஸந்த்யோபாஸனம், அக்னி கார்யம் இவைகளை விட்டவனுய் இருக்கின்ருனே, அவனையும், எவன் தனது மாதா பிதாக்கள் சுத்தி, தனது சுத்தி இவைகள் இல்லாதவனே அவனையும் தள்ள வேண்டும். வ்யாஸரும்:— வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களும், நற்குணங்களுடையவர்களும், ஆகிய எவர்களோ அவர்கள் க்ருஷி செய்பவர்களாயினும், அவர்கள் காயத்ரீயை அறிந்தவர்களும் கர்மானுஷ்டாயிகளுமாயின் நிமந்த்ரணத்திற்கு யோக்யர்கள். ஓ! அரசனே! எவன் மூன்று காலத்திலும் காயத்ரியை ஜபிப்பவனும், பிக்ஷயினுல் ஜீவிப்பவனும், நற்கிரியைகளைச் செய்பவனும் ஆகின்ருனே அவன் நிமந்த்ரணத்திற்கு யோக்யன்.

यमः —गृहस्थो ब्रह्मचारी च यजुर्वेदविदेव च। वेदविद्याव्रतस्नातो ब्राह्मणाः पङ्क्तिपावनाः इति । च शब्दाद्यतिरप्युक्तः । उक्तं च साक्षाद्वसिष्ठेन - यतीन् गृहस्थान् साधून् वा इति। भोजयेदिति शेषः।

யமன்:— க்ருஹஸ்தன், ப்ரம்ஹசாரீ, யஜுர்வேதம் அறிந்தவன், வேத வித்யா வ்ரதஸ்நாதன், ஆகிய ப்ராம்ஹணர்கள் பங்க்திபாவனர்கள். 'ச' என்பதால் யதியும் சொல்லப்படுகிருன். வஸிஷ்டரால் நேராய்ச் சொல்லப்பட்டு இருக்கிறது, ''யதிகளையாவது, க்ருஹஸ்தர்களையாவது, ஸாதுக்களையாவது புஜிப்பிக்கவும்'' என்று.

ब्रह्माण्डपुरोणे – शिखिभ्यो धातुरक्तेभ्य स्त्रिदण्डिभ्यश्च दापयेत् इति । शिखिनः - ब्रह्मचारिणः, धातुरक्ताः - धातुरक्त वस्त्रधारिणो वानप्रस्थाः, त्रिदण्डिनः - वाक्कायमनो दण्डैरुपेता यतयः अत्र परः परः श्रेष्ठः ।। अत एव नारदः —यो वै यतीननादृत्य भोजयेदितरान् द्विजान्। विजानन् वसतो ग्रामे कव्यं तद्याति राक्षसान् इति।

ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— "ப்ரம்ஹசாரிகள், வானப்ரஸ்தர்கள், ஸந்யாஸிகள், இவர்களின் பொருட்டுக் கொடுக்க வேண்டும்" என்று. சிகிகள் = ப்ரம்ஹசாரிகள். தாதுரக்தா: = காவியினுல் சிவந்த வஸ்த்ரம் தரித்த வானப்ரஸ்தர்கள். த்ரிதண்டிகள் = வாக்தண்டம், சரீரதண்டம், மனோதண்டம் இவைகளுடன் கூடிய யதிகள். இவர்களுள் மேன்மேலுள்ளவன் சிறந்தவன். ஆகையால் தான், நாரதர்:— எவன் க்ராமத்தில் வஸிக்கும் யதிகளை அறிந்திருந்தும் அவர்களை ஆதரிக்காமல் இதரர்களை ச்ராத்தத்தில் புஜிப்பிக்கின்றானே அவனது ச்ராத்தம் ராக்ஷஸர்களை அடைகின்றது.

नागरखण्डे — आमन्त्रयेद्यतीन् पूर्वं वनस्थान् वा त्रिकर्मणः। तदभावे गृहस्थांश्च ब्रह्मज्ञानपरायणान् इति। त्रिकर्मणः - ब्रह्मचारिणः। ब्रह्मपुराणे — अलाभे ध्यानिभिक्षूणां भोजयेद् ब्रह्मचारिणम्। तदलाभे ह्युदासीनं गृहस्थमपि भोजयेत् इति। ध्यानी - वानप्रस्थः, भिक्षुः - यतिः, उदासीनः - दातुरसम्बन्धी।

நாகர கண்டத்தில்:— முதலில் யதிகளை வரிக்க வேண்டும். பிறகு வானப்ரஸ்தர்களை. பிறகு ப்ரம்ஹசாரிகளை. அவர்கள் இல்லாவிடில் ப்ரம்ஹ ஜ்ஞானிகளான க்ருஹஸ்தர்களை வரிக்க வேண்டும். ப்ரம்ஹ புராணத்தில்:— வானப்ரஸ்த பிக்ஷுக்கள் கிடைக்காவிடில் ப்ரம்ஹசாரியைப் புஜிப்பிக்கவும். அவன் கிடைக்காவிடில் உதாஸீனனான க்ருஹஸ்தனையாவது புஜிப்பிக்கவும். த்யானீ = வானப்ரஸ்தன். பிக்ஷு: = ஸந்யாஸீ. உதாஸீன: = கொடுக்கிறவனுக்கு ஸம்பந்தமில்லாதவன்.

तथा चापस्तम्बः — ब्राह्मणान् भोजयेद् ब्रह्मविदो योनिगोत्रमन्त्रान्तेवास्यसम्बन्धान् इति ।योनिसम्बन्धाः - मातुलादयः, गोत्रसम्बन्धाः - सपिण्डाः, मन्त्रसम्बन्धाः - वेदाध्यापकादयः, अन्तेवासिसम्बन्धाः - शिल्पशास्त्रोपाध्यायाः,

एवंविधसम्बन्धव्यतिरिक्तान् ब्राह्मणान् गृहस्थादीन् भोजयेदित्यर्थः। चन्द्रिकायाम् — गृहस्थानां सहस्रेण वानप्रस्थशतेन च। ब्रह्मचारिसहस्रेण यो योगी स विशिष्यते इति।

ஆபஸ்தம்பர்:— "வேதமறிந்தவர்களும், யோனி, கோத்ரம், மந்த்ரம், சிஷ்யத்வம் இவைகளின் ஸம்பந்தம் இல்லாதவர்களுமான ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும்." யோனி ஸம்பந்தர்கள் = அம்மான் முதலியவர்கள். கோத்ர ஸம்பந்தர்கள் = ஜ்ஞாதிகள். மந்த்ர ஸம்பந்தர்கள் = வேதத்தை அத்யயனம் செய்வித்தவர்கள் முதலியவர்கள். அந்தேவாஸி ஸம்பந்தர்கள் = சில்ப சாஸ்த்ரங்களைக் கற்பித்தவர்கள். இவ்விதமான ஸம்பந்தம் இல்லாதவர்களான க்ருஹஸ்தாச்ரம ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும் என்பது பொருள். சந்த்ரிகையில்:— ஆயிரம் க்ருஹஸ்தர்கள், நூறு வானப்ரஸ்தர்கள், ஆயிரம் ப்ரம்ஹசாரிகள் இவர்களை விட ஒரு யோகி சிறந்தவனாவான்.

पाद्मपुराणे — साङ्गान् यश्चतुरो वेदानधीते संस्कृतोऽर्थवित्। कर्मवान् कर्मसंशुद्धः स श्राद्धे प्रथमो मतः। तादृशादयुतात् श्रेयानेको योगसमाश्रयः इति। वृद्धशातातपः — ज्ञानी यस्य सदाऽश्नाति ह्युदकं वा पिबेद्यदि। कृतं तेनेह तत् कृत्यं तारितं च कुलत्रयम्। योगिनं समतिक्रम्य गृहस्थं यदि भोजयेत्। न तत्फलमवाप्नोति स्वर्गस्थमपि पातयेत्। योगिनं तु व्यतिक्रम्य पूजयन्ति परस्परम्। भोक्तारश्च सदातारो नरके स्युः सबान्धवाः इति। तदेतत् सर्वं व्रतस्थ दृष्ट तत्वयोगिविषयम्।

பாத்ம புராணத்தில்:— எந்த ப்ராம்ஹணன் ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டவனாய் அங்கங்களுடன் கூடிய நான்கு வேதங்களையும் கற்றவனாயுள்ளவனோ, அர்த்தமறிந்தவனோ, நற்கர்மங்களை அனுஷ்டிப்பவனோ, கர்மங்களால் சுத்தனாகியவனோ அவன் ச்ராத்தத்தில் முந்தியவனென்று அறியத் தகுந்தவன். அவ்விதமான

பதினாயிரம் ப்ராம்ஹணர்களை விட ஒரு யோகி சிறந்தவனாவான். வ்ருத்த சாதாதபர்:— எவனுடைய அன்னத்தை ஜ்ஞானியானவன் புஜிக்கின்றானோ, ஜலத்தையாவது குடிக்கின்றானோ அவனால் இவ்வுலகில் நற்கார்யம் செய்யப்பட்டதாகின்றது. மூன்று குலங்களும் மீட்கப்பட்டதாகிறது. யோகியை அனாதரித்து க்ருஹஸ்தனைப் புஜிப்பிப்பானாகில் அதன் பலத்தை அடைவதில்லை, ஸ்வர்க்கத்தில் இருக்கும் பிதாவையும் (நரகத்தில்) தள்ளுவான். யோகியைப் புஜிப்பிக்காமல் தாதாக்களும், போக்தாக்களும் ஒருவர்க்கொருவர் பூஜித்துக் கொண்டால் அவர்கள் பந்துக்களுடன் நரகத்தில் இருப்பார்கள். இந்த வசனம் எல்லாம் வ்ரதத்தில் இருப்பவனும், தத்வம் அறிந்தவனுமான யோகியைப் பற்றியது ஆகும்.

तथ च शातातपः — योगिनं भोजयेन्नित्यं दृष्टतत्त्वं मनीषिणम्। तेषां तु दत्तमक्षय्यं भवतीति न संशयः इति। चन्द्रिकायामपि — भोजनीयास्तथा नित्यं ज्ञानिनो ध्यानिनस्तथा। इति। एवं च यथाकथञ्चिदपि यो योगधर्मं समाश्रितः। सम्यग्वर्णाश्रमस्थेभ्यस्तत्पात्रं परमं मतम् इत्युशनसो वचनं योगिप्रशंसापरम्।

அவ்விதமே, சாதாதபர்:— எப்பொழுதும் தத்வம் அறிந்தவனும், நற்புத்தி உடையவனுமாகிய யோகியைப் புஜிப்பிக்க வேண்டும். அந்த யோகிகளுக்குக் கொடுக்கப்பட்டது அழிவற்றதாய் ஆகின்றது, என்பதில் ஸந்தேஹமில்லை. சந்த்ரிகையிலும்:— ''எப்பொழுதும் ஜ்ஞானிகளையும், த்யானிகளையும் புஜிப்பிக்க வேண்டும்'' என்று. இவ்விதம் இருப்பதால் ''எவ்விதமாய் இருந்தாலும் எவன் யோக தர்மத்தை ஆச்ரயித்துள்ளானோ, அவன் நன்றாக வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டிப்பவர்களான

இதரர்களை விடச் சிறந்த பாத்ரமாவான்'' என்ற உசனஸ்ஸின் வசனமானது யோகியை ப்ரசம்ஸை செய்வதில் தாத்பர்யம் உள்ளது.

तथा चाश्वलायनः — त्यक्तसङ्गं मुनिं शान्तं सुनिर्विण्णममत्सरम्। शुद्धमेकाकिनं भिक्षुं सश्रद्धं च निराशिषम्। एषणात्रय निर्मुक्तं लोकवर्त्माविदूषकम्। यतिमेतादृशं यत्नात् श्राद्धे सम्यक् प्रपूजयेत्। आहूतं वाऽप्यनाहूतं सिद्धं वा ब्राह्मणाज्ञया। आत्मना विदितं विप्रं यतिं सिद्धं च योगिनम्। पूजयेदेव मतिमान् श्राद्धेऽपि विदितं बुधः। ये चाप्यविदिताः काले सिद्धाद्याः स्वयमागताः। शिवबुद्ध्याऽर्चयेदेतान् सिद्धान् विप्रानुमोदितान् इति।

அவ்விதமே, ஆச்வலாயனர்:— ஸங்கங்களை விட்டவனும், சாந்தனும், விரக்தனும், முனியும், மாத்ஸர்யமில்லாதவனும், சுத்தனும், ஏகாகியும், பிக்ஷுகனும், ச்ரத்தையுடையவனும், காமனை இல்லாதவனும், ஏஷணாத்ரயம் விட்டவனும், லோக மார்க்கத்தைக் கெடுக்காதவனும் ஆகிய இவ்விதமான யதியை ச்ராத்தத்தில் அவச்யம் பூஜிக்க வேண்டும். அவன் அழைக்கப்பட்டவனாகினும், அழைக்கப்படாதவனாகினும் வந்தால், ப்ராம்ஹணர்களின் ஆஜ்ஞையால் யதியையும், ஸித்தனை யோகியையும் அறிந்தவன் ச்ராத்தத்தில் பூஜிக்க வேண்டும். ஸித்தர் முதலிய எவர்கள் ச்ராத்த காலத்தில் வந்தவர்களோ அவர்கள் அறியப்படாதவராயினும் அவர்களையும் பூஜிக்க வேண்டும். ஸித்தர்களான இவர்களை ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையால் சிவன் என்ற பக்தியுடன் பூஜிக்க வேண்டும்.

हेमाद्रौ — भिक्षार्थमागतांश्चापि काले संयमिनो यतीन्। भोजयेत् प्रणिपाताद्यैः प्रसाद्य यतमानसः इति। यमः — भिक्षुको ब्रह्मचारी च भोजनार्थमुपस्थितः। उपविष्टेष्वनुप्राप्तः कामंतमपि

भोजयेत् इति। वरणानन्तरं प्राप्तमतिथिवत् भोजयेदित्यर्थः। छागलेयः — पूजयेत् श्राद्धकालेऽपि यतिं च ब्रह्मचारिणम्। विप्रानुद्धरते पापात् पितृमातृगणानपि इति।

ஹேமாத்ரியில்:— ச்ராத்த காலத்தில் பிக்ஷைக்காக வந்துள்ள வானப்ரஸ்தர், யதிகள் இவர்களை நமஸ்காரம் முதலிய மர்யாதையுடன் ஸந்தோஷிப்பித்துக் கவனமுள்ளவனாய்ப் புஜிப்பிக்க வேண்டும். யமன்:— ''ஸந்யாஸியும், ப்ரம்ஹசாரியும் போஜனத்திற்காக வந்தால், ப்ராம்ஹணர்கள் உட்கார்ந்திருக்கும் பொழுது வந்தால் அவர்களையும் அவச்யம் புஜிப்பிக்க வேண்டும்.'' வரணத்திற்குப் பிறகு வந்தவனை அதிதியைப் போல் புஜிப்பிக்க வேண்டும் என்பது பொருள். சாகலேயர்:— ச்ராத்த காலத்திலும் (வந்துள்ள) யதி, ப்ரம்ஹசாரி இவர்களைப் புஜிப்பிக்க வேண்டும். அதனால் ப்ராம்ஹணர்களையும், பித்ரு கணங்களையும் மாத்ரு கணங்களையும் பாபத்தினின்றும் மீட்கிறான்.

उपवेशनस्थानविशेषमाह बृहस्पतिः — अभावे स्नातकानां तु व्रतिनं श्राद्धकर्मणि। दैवार्थं केतयेद्योग्यं न पित्रर्थं कदाचन। श्राद्धकाले यतिं प्राप्तं पितृस्थाने तु भोजयेत्। दैवस्थाने न वृणुयात् प्रथमं परिवेषयेत् इति। व्रतिनं - ब्रह्मचारिणमित्यर्थः। यत्तु ब्रह्मकैवर्तवचनम् — मुण्डान् जटिलकाषायान्श्राद्धकाले विवर्जयेत् इति, तदाश्रमाचार-रहितव्यर्थमुण्डिविषयम्, वर्णाश्रमविरुद्धानां धर्माणां ये तु सेवकाः। मुण्डा वसनकाषायास्तांस्तु श्राद्धे विवर्जयेत्। अनाश्रमी तु यो विप्रो जटी मुण्डी वृथा च यः। वृथा काषायधारी यः श्राद्धे तं दूरतस्त्यजेत् इति स्मरणात्।

உட்காரக்கூடிய இடத்தில் பேதத்தைச் சொல்லுகிறார், ப்ருஹஸ்பதி:— ச்ராத்த கார்யத்தில் ஸ்நாதகர்கள்

(க்ருஹஸ்தாச்ரமிகள்) கிடைக்காவிடில் ப்ரம்ஹசாரியைத் தேவஸ்தானத்தில் வரிக்க வேண்டும். பித்ரு ஸ்தானத்தில் ஒரு காலும் வரிக்கக் கூடாது. ச்ராத்த காலத்தில் வந்துள்ள ஸந்யாஸியை பித்ரு ஸ்தானத்தில் புஜிக்கவேண்டும். தேவ ஸ்தானத்தில் வரிக்கக் கூடாது. அவனுக்கு முதலில் பரிமாற வேண்டும். ஆனால், ப்ரம்ஹஹைகைவர்த்த வசனம்:— ''முண்டர்களையும், ஜடையுள்ளவர்களையும், காஷாய வஸ்த்ரம் தரித்தவர்களையும் ச்ராத்த காலத்தில் வர்ஜிக்க வேண்டும்'' என்றுள்ளதே யெனில், அது ஆச்ரம ஆசாரங்கள் இல்லாமல் வீண் முண்டனைப் பற்றியது. ''வர்ணாச்ரமங்களுக்கு விருத்தமான தர்மங்களை ஸேவிப்பவர்கள் எவர்களோ, முண்டிகளாயும், காஷாய வஸ்த்ரம் தரித்தவர்களுமாகிய அவர்களை ச்ராத்தத்தில் வர்ஜிக்க வேண்டும். ஆச்ரம தர்மம் இல்லாமல் எந்த ப்ராம்ஹணன் வீணாக ஜடையுள்ளவனாயும், முண்டனாயும் வீணாகக் காஷாயம் தரித்தவனாயுமிருக்கிறானோ அவனை ச்ராத்தத்தில் வெகு தூரத்தில் பரிஹரிக்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

ब्रह्मचारिणः श्राद्धे एकान्नभोजनमनुजानाति मनुः — व्रतवद्देवदेवत्ये पित्र्ये कर्मण्यथर्षिवत्। काममभ्यर्थितोऽश्नीयाद्व्रतमस्य न लुप्यते इति। देवदेवत्ये - दैविके कर्मणि, अभ्यर्थितो ब्रह्मचारी व्रतवत् - व्रताविरोधेन मधुमांसादिवर्जं भुञ्जीत, पित्र्ये कर्मणि ऋषिवत् - ऋषिरिव मधुमांसादि वर्जयन्, कामं इच्छया भुञ्जीत, एवमस्य ब्रह्मचर्यव्रतं न लुप्यते, अन्यथा लुप्यत इत्यर्थः।

ப்ரம்ஹசாரிக்கு ச்ராத்தத்தில் ஒருவனுடைய அன்னத்தையே புஜித்தலை உத்தரவிடுகிறார், மனு:— ''தேவ ஸ்தானத்தில் வரிக்கப்பட்ட ப்ரம்ஹசாரி வ்ரதத்தில் போல் புஜிக்கவும். பித்ரு ஸ்தானத்தில் ருஷி போல் புஜிக்கவும். ச்ராத்த கர்த்தாவால் ப்ரார்த்திக்கப்பட்டால் புஜிக்கலாம். இவனுடைய ப்ரம்ஹசர்ய வ்ரதம் குறைகிறதில்லை'' என்று.

தேவதேவத்யே = தேவ ஸ்தானத்தில், ப்ரார்த்திக்கப்பட்ட ப்ரம்ஹசாரியானவன், வ்ரதவத் = வ்ரதத்துக்கு விரோதம் இல்லாமல், மது மாம்ஸம் முதலியதைத் தள்ளிப் புஜிக்க வேண்டும். பித்ரு ஸ்தானத்தில், ருஷிவத் = ருஷி போல் மது மாம்ஸம் முதலியதை வர்ஜிப்பவனாய், காமம் = இஷ்டப்படி புஜிக்கலாம். இவ்விதம் புஜிப்பதால் இவனுடைய ப்ரம்ஹசர்ய நியமம் குறைகிறதில்லை. இவ்விதம் இல்லாவிடில் (ப்ரம்ஹசர்ய நியமம்) லோபிக்கின்றது, என்பது பொருள்.

याज्ञवल्क्योऽपि — ब्रह्मचर्ये स्थितो नैक मन्नमद्यादनापदि। ब्राह्मणः काममश्नीयात् श्राद्धे व्रतमपीडयन् इति। व्रतपीडाकरं मधुमांसादि वर्जयन् भुञ्जीतेत्यर्थः। परानुग्रहार्थं यतेरेकान्नभोजनमनुजज्ञे कार्ष्णाजिनिः — अशक्तोऽनुग्रहार्थं वा यतिरेकान्नभुग्भवेदिति। वसिष्ठोऽपि — ब्राह्मणकुलेऽभ्यर्थितो यतिर्भुञ्जीत इति। स्मृत्यन्तरे — मधुमांसं न दातव्यं यतीनां ब्रह्मचारिणाम्। गन्धं माल्यं च ताम्बूलमनुज्ञाप्यान्यतो दिशेत् इति।

யாஜ்ஞவல்க்யரும்:— ''ப்ரம்ஹசர்ய ஆச்ரமத்தில் இருக்கும் ப்ராம்ஹணன் ஆபத்தில்லாத ஸமயத்தில் ஒரே அன்னத்தை எப்பொழுதும் புஜிக்கக் கூடாது. ஆனால் ச்ராத்தத்தில் ப்ரம்ஹசர்ய வ்ரதத்திற்கு லோபம் இல்லாமல் புஜிக்கலாம்'' என்று. ப்ரம்ஹசர்ய வ்ரதத்தைக் கெடுக்கக் கூடிய மது மாம்ஸம் முதலியதை வர்ஜிப்பவனாய்ப் புஜிக்கலாம், என்பது பொருள். பிறருக்கு அனுக்ரஹத்திற்காக யதி ஏகான்னத்தைப் புஜிக்கலாம் என்கிறார், கார்ஷ்ணாஜினி:— ஸந்யாஸீ சக்தியில்லாவிடினும், அல்லது பிறரது அனுக்ரஹத்துக்காகவும் ஏகான்னத்தைப் புஜிப்பவனாக ஆகலாம். வஸிஷ்டரும்:— ஸந்யாஸீ ப்ரார்த்திக்கப்பட்டால் ப்ராம்ஹணன் க்ருஹத்தில் புஜிக்கலாம். மற்றோர் ஸ்ம்ருதியில்:— யதிகளுக்கும், ப்ரம்ஹசாரிகளுக்கும் மது, மாம்ஸம், சந்தனம், புஷ்ப

மாலை, தாம்பூலம் இவைகளைக் கொடுக்கக் கூடாது. அவர்களின் அனுஜ்ஞையைப் பெற்று மற்றவர்க்குக் கொடுக்க வேண்டும்.

मनुः — एष वै प्रथमः कल्पः प्रदाने हव्यकव्ययोः । अनुकल्पस्त्वयं ज्ञेयस्सदा सद्भिरनुष्ठितः । मातामहं मातुलं च स्वस्रीयं श्वशुरं गुरुम् । दौहित्रं विट्पतिं बन्धुमृत्विग्याज्यौ च भोजयेत् इति । एष इति त्रिणाचिकेतः पञ्चाग्निरित्यादिभिरुक्तस्य परामर्शः, अयमिति मातामहं मातुलं चेति वक्ष्यमाणस्य । प्रथमः - श्रेष्ठः कल्पः, अनुकल्पः - प्रथमकल्पादधः, मुख्यस्स्यात् प्रथमः कल्पोऽनुकल्पस्तु ततोऽधमः इत्यमरसिंहेनाभिधानात् । प्रथमकल्पालाभे अनुकल्पोऽप्यनुष्ठेय इत्युक्तं सदा सद्भिरनुष्ठितः इति । विट्पतिः - जामाता, भोजयितुर्मातामहादय इह गृह्यन्ते, न तु भोक्तुः पित्रादेः, तेषां संबन्धिशब्दत्वात् ।

மனு:— ''ஹவ்ய கவ்யங்களைக் கொடுப்பதில் இது முதல் பக்ஷமாகும். மேல் சொல்லப் போகும் பக்ஷம் இரண்டாவது பக்ஷம். இது ஸாதுக்களால் எப்பொழுதும் அனுஷ்டிக்கப்பட்டது. மாதாமஹன், அம்மான், மருமான், மாமனார், குரு, தௌஹித்ரன், மாப்பிள்ளை, பந்து, ருத்விக், யாஜ்யன் இவர்களைப் புஜிப்பிக்கலாம்,'' என்று. மூலத்திலுள்ள ''ஏஷ:'' என்ற பதம் முன் சொல்லிய த்ரிணாசிகேதன், பஞ்சாக்னி என்பது முதலியதைக் குறிக்கின்றது. ''அயம்'' என்ற பதம் மேல் சொல்லப் போகிற ''மாதாமஹம், மாதுலஞ்ச'' என்பதைக் குறிக்கின்றது. ப்ரதம: - உயர்ந்த பக்ஷம். அனுகல்ப: முதல் பக்ஷத்தை விடத் தாழ்ந்தது. ''முதல் பக்ஷம் முக்யமாகும். அனுகல்பம் அதை விடத் தாழ்ந்ததாகும்'' என்று அமரஸிம்ஹனால் சொல்லப்பட்டுள்ளது. முதல் பக்ஷம் கிடைக்காவிடில் இரண்டாவது பக்ஷத்தை அனுஷ்டிக்கலாம் என்று

சொல்லப்பட்டதாகிறது, "ஸதா ஸத்பிரனுஷ்டித:" என்பதனுல். விட்பதி: = மாப்பிள்ளை. புஜிப்பிக்கிறவனுடைய மாதாமஹாதிகள் இங்கு சொல்லப்படுகின்றனர், புஜிக்கிறவர்களான பிதா முதலியவரின் மாதாமஹாதிகள் அல்ல, அவர்கள் ஸம்பந்திகளாகையால்.

आश्वलायनः — सत्पात्राणामलाभे तु पात्रभूतान् स्वबान्धवान् । कृतोपकारिणश्चापि श्राद्धे पूजितुमर्हति । नियतेर्दोषनिर्मुक्ता गुणैश्चोक्तैस्समन्विताः । अनुकल्पेऽर्चनीयाः स्युर्बान्धवाश्चोपकारिणः । एतान्मोहात्तु यः श्राद्धे निर्गुणान् बान्धवान् द्विजान् । कृतोपकारिणश्चार्चेत् श्राद्धहा स भवेन्नरः ॥ दौहित्रस्तु गुणैर्युक्तो विद्वान् प्रेतस्य सम्मतः । अर्च्यः प्रथमकल्पेऽपि निर्गुणो न तु गृह्यते इति ।

ஆச்வலாயனர்:— "யோக்யர்களான ப்ராம்ஹணர்கள் கிடைக்காவிடில், யோக்யர்களான தனது பந்துக்களையும், உபகாரம் செய்தவர்களையும் ச்ராத்தத்தில் பூஜிக்கலாம். பூர்வஜந்ம பாபதோஷங்கள் இல்லாதவர்களும், முன் சொல்லிய குணங்களுடன் கூடியவர்களும், உபகாரம் செய்த பந்துக்களும் இரண்டாவது பக்ஷமாய்ப் பூஜிக்கத் தகுந்தவராய் ஆவார்கள். எவன் ச்ராத்தத்தில் குணமற்றவர்களான தனது பந்துக்களையும், உபகாரகர்களையும் புஜிப்பிக்கின்ருனே அவன் ச்ராத்தத்தைக் கெடுத்தவனுவான். நற்குணங்களுடன் கூடியவனும், இறந்தவனுக்கு இஷ்டமானவனும் ஆகிய தௌஹித்ரன் ச்ராத்தத்தில் முதல் பக்ஷமாகப் பூஜிக்கத் தகுந்தவனுவான். அவன் குணங்களற்றவனுகில் பூஜிக்கத் தகுந்தவனல்லன்," என்று.

संभवति मुख्यकल्पे अनुकल्पो नानुष्ठेयः — प्रभुः प्रथमकल्पस्य योऽनुकल्पेऽनुवर्तते । न सांपरायिकं तस्य दुर्मतेर्विद्यते फलम् इति

स्मरणात्। सांपरायिकं - उत्तरकालीनं स्वर्गादिफलमित्यर्थः। याज्ञवल्क्येनाप्यनुकल्पो दर्शितः — स्वस्रीय ऋत्विग्जामातृयाज्यश्वशुरमातुलाः। त्रिणाचिकेतदौहित्र शिष्यसम्बन्धिबान्धवाः इति। बोधायनः — तदभावे रहस्यविदो यजूंषि सामानीति श्राद्धस्य महिमा तस्मादेवंविधं सपिण्डमप्याशयेत् इति। त्रिभ्य ऊर्ध्वं यस्सपिण्डस्तद्विषयमेतत्।

முதல் பக்ஷம் ஸம்பவிக்குமாகில் இரண்டாவது பக்ஷத்தை அனுஷ்டிக்கக் கூடாது. "முதல் பக்ஷத்தை அனுஷ்டிக்கச் சக்தியுள்ள எவன் இரண்டாவது பக்ஷத்தை அனுஷ்டிக்கின்றானோ, துர்ப்புத்தியான அவனுக்குப் பிற்காலத்தில் வரக்கூடிய பலன் இல்லை," என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஸாம்பராயிகம் = பிற்காலத்தில் வரக்கூடிய ஸ்வர்க்கம் முதலிய பலன் என்பது பொருள். யாஜ்ஞவல்க்யராலும் இரண்டாவது பக்ஷம் சொல்லப்பட்டுள்ளது:— "மருமான், ருத்விக், மாப்பிள்ளை, யாஜ்யன், மாமனார், அம்மான், த்ரிணாசிகேதன், தௌஹித்ரன், சிஷ்யன், ஸம்பந்தி, பந்து" (இவர்கள் புஜிப்பிக்கத் தகுந்தவர்கள்), என்று. போதாயனர்:— "அவர்கள் இல்லாவிடில், ருக், யஜுஸ், ஸாமம் இவைகளின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களைப் புஜிப்பிக்கவும். இது ச்ராத்தத்தின் பெருமை. ஆகையால் இவ்விதம் அறிந்தவன் ஸபிண்டனாயினும் அவனைப் புஜிப்பிக்கலாம்," என்று. மூன்று தலைமுறைக்கு மேற்பட்ட ஸபிண்டனைப் பற்றியது இது.

तथा च सपिण्डमित्यनुवृत्तौ गौतमः — भोजयेदूर्ध्वं त्रिभ्यो गुणवन्तमिति। अत्रिस्तु — षड्भ्यस्तु परितो भोज्याः श्राद्धे स्युर्गोत्रजा अपि। षड्भ्यस्तु पुरुषेभ्योऽर्वागश्राद्धेयास्तु गोत्रिणः इति। यत्तु — पितृव्यगुरुदौहित्रान् ऋत्विक् स्वस्रीयमातुलान्। भोजयेद्धव्यकव्येन वृद्धानतिथिबान्धवान् इति विष्णुपुराणे पितृव्यस्य

भोजनीयत्वमुक्तम्, तत् तस्य गुणवत्तरत्वे वैश्वदैविकस्थाने भोजनीयत्वाभिप्रायेण।

அவ்விதமே ஸபிண்டம் என்று முன்பதம் அனுவர்த்திக்கும் பொழுது, கௌதமர்:— மூன்று தலைமுறைக்கு மேற்பட்டவனும், நற்குணங்கள் உள்ளவனுமானவனை (ஸபிண்டனை)ப் புஜிப்பிக்கலாம். அத்ரியோவெனில்:— ஆறு தலைமுறைக்கு மேற்பட்ட ஸபிண்டர்களும் ச்ராத்தத்தில் புஜிப்பிக்கத் தகுந்தவர்கள். ஆறு தலைமுறைக்குட்பட்ட ஸபிண்டர்கள் ச்ராத்தத்தில் புஜிப்பிக்கத் தகுந்தவர்களல்லர். ஆனால், ''பித்ருவ்யன் (பிதாவின் ப்ராதா), குரு, தௌஹித்ரன், ருத்விக், மருமான், அம்மான், வ்ருத்தர்கள், அதிதி, பந்துக்கள் இவர்களை ஹவ்ய கவ்யங்களில் புஜிப்பிக்கவும்'' என்ற விஷ்ணு புராண வசனத்தால் பித்ருவ்யனுக்குப் போஜனீயத்வம் சொல்லப்பட்டுள்ளதே எனில், அது பித்ருவ்யன் மிகச் சிறந்த குணம் உள்ளவனாகில் வைச்வதேவ ஸ்தானத்தில் புஜிப்பிக்கலாம், என்ற அபிப்ராயத்தால் சொல்லப்பட்டுள்ளது.

तथा चात्रिः — पिता पितामहो भ्राता पुत्रो वाऽथ सपिण्डकः । न परस्परमर्घ्यास्स्युर्न श्राद्धे ऋत्विजस्तथा । ऋत्विक् पुत्रादयो ह्येते सकुल्या ब्राह्मणा द्विजाः । वैश्वदेवे नियोक्तव्या यद्येते गुणवत्तराः इति । एवं च आत्मानं वा नियुञ्जीत पुत्रं वाऽपि गुणान्वितम्। सोदर्यमेव वा श्राद्धे भोजयेत्तु द्विजोत्तमाः इति पराशरवचनम्, योनिगोत्रसम्बन्धानपि कामं श्रुतवृत्तये हि स्वधा निधीयते इति बोधायनवचनम्, भोजयेद् ब्राह्मणान् ब्रह्मविदो योनिगोत्रमन्त्रान्तेवास्यसम्बन्धान् गुणहान्यां तु परेषां समुदेतस्सोदर्योऽपि भोजयितव्य एतेनान्तेवासिनो व्याख्याताः । इत्यापस्तम्बवचनमपि वैश्वदैविकस्थानाभिप्रायम् अन्तेवासिनामपि तत्स्थान एव निवेशः ।

அத்ரி:— ''பிதா, பிதாமஹன், ப்ராதா, புத்ரன், ஸபிண்டன் இவர்கள் ஒருவர்க்கொருவர் ச்ராத்தத்தில் பூஜிக்கத் தகுந்தவர்கள் அல்லர். ச்ராத்தத்தில் ருத்விக்குகளும் பூஜிக்கத் தகுந்தவர்கள் அல்லர். இந்த ருத்விக், புத்ரன் முதலியவர்களும், ஸபிண்டர்களான ப்ராம்ஹணர்களும் மிகச் சிறந்த குணம் உடையவர்களாகில் வைச்வதேவ ஸ்தானத்தில் பூஜிக்கத் தகுந்தவர்களாவர்,'' என்று. இவ்விதம் இருப்பதால் ''ப்ராம்ஹணன் தன்னையாவது, நற்குணங்கள் உள்ள புத்ரனையாவது, ப்ராதாவையாவது ச்ராத்தத்தில் புஜிப்பிக்கலாம்,'' என்ற பராசர வசனமும், ''யோனி கோத்ர ஸம்பந்தம் உள்ளவர்களாயினும் புஜிப்பிக்கலாம், குணம் உள்ளவனுக்கு அல்லவா ச்ராத்தம் சொல்லப்படுகிறது,'' என்ற போதாயன வசனமும், ''ப்ரம்ஹவித்துக்களும், யோனி கோத்ரம், மந்த்ரம், சிஷ்யத்வம் இந்த ஸம்பந்தங்கள் இல்லாதவருமாகியவரை ச்ராத்தத்தில் புஜிப்பிக்கவும். மற்றவர்கள் குணமில்லாதவர்களாகில், நற்குணம் உள்ள ஸஹோதரனும் புஜிப்பிக்கத் தகுந்தவனாவான். இதனால் சிஷ்யர்கள் சொல்லப்பட்டவர்களாகின்றனர்,'' என்ற ஆபஸ்தம்ப வசனமும் வைச்வதேவ ஸ்தானத்தில் புஜிப்பிக்கலாம் என்ற அபிப்ராயத்தையுடையது. சிஷ்யர்களையும் வைச்வதேவ ஸ்தானத்திலேயே வைக்க வேண்டும்.

तथा चामन्त्रयीतेत्यनुवृत्तौ कात्यायनः — अभावे शिष्यान् स्वाचारान् वैश्वदेवार्थम् इति । सगुणानामनुकल्पानां मातामहादीनामभावे निर्गुणानामप्यनुकल्पतया ग्रहणमुक्तं चन्द्रिकायाम्— यस्त्वासन्नमतिक्रम्य ब्राह्मणं पतिताद‍ृते । दूरस्थं भोजयेन्मूर्खो गुणाढ्यं नरकं व्रजेत् । तस्मात् संपूजयेदेनं गुणं तस्य न चिन्तयेत् । केवलं चिन्तयेज्जातिं न गुणान्विततां द्विजः । सन्निकृष्टं द्विजं यस्तु युक्तजातिं प्रियंवदम् । मूर्खं वा पण्डितं वाऽपि वृत्तहीनमथाऽपि

वा। नातिक्रमेन्नरो विद्वान् दारिद्र्याभिहतं तथा इति। सन्निकृष्टं - शरीरतस्सन्निकृष्टम्, दौहित्रादिमित्यर्थः।

அவ்விதமே, ''ஆமந்த்ரயீத'' என்ற பதம் அனுவர்த்திக்கும் பொழுது, காத்யாயனர்:— ''(ப்ராம்ஹணர்கள்) கிடைக்காவிடில், நல்ல நடத்தையுள்ள சிஷ்யர்களை வைச்வதேவ ஸ்தானத்திற்கு (வரிக்கலாம்),'' என்று. நற்குணங்களுள்ள இரண்டாவது பக்ஷத்தில் உள்ள மாதாமஹன் முதலியவர்கள் இல்லாவிடில், குணம் இல்லாதவர்களையும் இரண்டாவது பக்ஷமாய் க்ரஹிக்கலாம் என்றுள்ளது. சந்த்ரிகையில்:— ''எந்த மூர்க்கன் சமீப பந்துவாகிய ப்ராம்ஹணனை, பதிதனைத் தவிர்த்து, அதிக்ரமித்து, தூர பந்துவான ப்ராம்ஹணனைக் குணம் உள்ளவனாயினும் பூஜிப்பிக்கின்றானோ அவன் நரகத்தை அடைவான். ஆகையால் ஸமீப பந்துவைப் பூஜிப்பிக்க வேண்டும். அவனது குணத்தைப் பற்றி விசாரிக்கக் கூடாது. ப்ராம்ஹணன் ஜாதியை மட்டில் கவனிக்க வேண்டும். சிறந்த குணங்களுடன் கூடி இருப்பதைச் சிந்திக்கக்கூடாது. வித்வானாகியவன் ஸமீபத்தில் உள்ளவனும், நல்ல ஜாதி உடையவனும், ப்ரியமாய் பேசுகிறவனுமாகிய ப்ராம்ஹணனை, அவன் மூர்க்கனாயினும், பண்டிதனாயினும், நன்னடத்தை இல்லாதவனாயினும் பூஜிக்க வேண்டும். தரித்ரனாயின் அவனையும் பூஜிக்க வேண்டும்'' என்று. ஸந்நிக்ருஷ்டம் = சரீர ஸம்பந்தத்தால் ஸமீபித்தவன். தௌஹித்ரன் முதலியவரை என்பது பொருள்.

तथा च पुराणे — सम्बन्धिनस्तथा सर्वान् दौहित्रं विट्पतिं तथा। भागिनेयं विशेषेण तथा बन्धुं खगाधिप। नातिक्रामेन्नरस्त्वेतान-मूर्खानपि गोपते। अतिक्रम्य महारौद्रं रौरवं नरकं व्रजेत् इति।

புராணத்தில்:— ஓ கருடா! ஸம்பந்திகள் எல்லோரையும், தௌஹித்ரன், மாப்பிள்ளை, மருமான், பந்து இவர்களையும் மூர்க்கர்கள் அல்லாதவர் ஆகில்

தள்ளக்கூடாது. (அவர்களைத்) தள்ளினால் மிகப் பயங்கரமான ரௌரவ நரகத்தை அடைவான்.

मनुरपि — व्रतस्थमपि दौहित्रं श्राद्धे यत्नेन भोजयेत् इति। व्रतस्थं - केवलं व्रतस्थं, अध्ययनादिरहितमित्यर्थः। दौहित्रस्तु गुणैर्युक्तो विद्वान् प्रेतस्य यत्नतः। अर्च्यः प्रथमकल्पेऽपि निर्गुणो न तु गृह्यते। अज्ञाविहितचारित्रो यः स्वाभिप्रायमाश्रितः। शास्त्रातिगः स्मृतो मूर्खो धर्मतन्त्रोपरोधनात्। अज्ञः - कृत्याकृत्यविवेकशून्यतया संशयात्मा। चारित्रं - अनुष्ठानम्।

மனுவும்:— ''வ்ரதஸ்தனாயினும் தௌஹித்ரனை ச்ராத்தத்தில் அவச்யம் புஜிப்பிக்கவும்'' என்று. வ்ரதஸ்தன் = வ்ரதம் மட்டில் அனுஷ்டிப்பவன். அத்யயனம் முதலியவை இல்லாதவன், என்பது பொருள். (நற்குணங்களுடன் கூடியவனும், வித்வானுமாகிய இறந்தவனின் தௌஹித்ரன் ச்ராத்தத்தில் முதல் பக்ஷமாய் அவச்யம் புஜிப்பிக்கத் தகுந்தவன். குணமற்றவனாகில், அவனை க்ரஹிக்கக் கூடாது. செய்யக் கூடியதும், செய்யக் கூடாததுமாகியதில் விவேகம் அற்றவனாய் ஸம்சயமுள்ளவனும் அனுஷ்டானம் இல்லாதவனும் தனது அபிப்ராயப்படி நடப்பவனும், சாஸ்த்ரங்களை அதிக்ரமித்தவனும், தர்மாசாரங்களை விட்டவனுமாகியவனும் மூர்க்கனெனப்படுவான்.)

शरीरतः सन्निकृष्टदौहित्राद्यभावे तु चन्द्रिकायामुक्तम् — गायत्रीमात्रसारोऽपि ब्राह्मणः पूज्यतां गतः। गृहासन्नो विशेषेण न भवेत् पतितस्स चेत् इति। द्विविधसन्निकृष्टविषयेऽपि गुणादिभिः श्रेष्ठेऽतिक्रान्ते सति भवत्येव दोषातिशयः। तदप्युक्तं तत्रैव — सप्तपूर्वान् सप्तपरान् पुरुषानात्मना सह। अतिक्रम्य द्विजवरान् नरके पातयेत् खग ॥ तस्मान्नातिक्रमेत् प्राज्ञो ब्राह्मणान् प्रातिवेशिकान्। संबन्धिनस्तथा सर्वान् दौहित्रं विट्पतिं तथा इति।

சரீர ஸம்பந்தத்தால் ஸமீபித்துள்ள தௌஹித்ரன் முதலியவர் இல்லாவிடில், சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது:— காயத்ரீயை மட்டில் குணமாக உள்ளவனாகில் ப்ராம்ஹணன் பூஜிக்கத் தகுந்தவனாவான். க்ருஹத்திற்கு ஸமீபத்தில் இருந்தால் அவச்யம் பூஜிக்கத் தகுந்தவனாவான். அவன் பதிதனாய் இல்லாவிடில் இரண்டு விதமான ஸமீபத்திலுள்ள ப்ராம்ஹணன் விஷயத்திலும் குணம் முதலியவைகளால் சிறந்தவனை அதிக்ரமிக்கும் பக்ஷத்தில் அதிகதோஷமவச்யம் உண்டாகும். அதுவும் சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையிலேயே:— சிறந்த ப்ராம்ஹணர்களை அதிக்ரமித்தால், முன்னுள்ள ஏழு புருஷர்களையும், பின்புள்ள ஏழு புருஷர்களையும், தன்னையும் நரகத்தில் தள்ளுவான். ஓ கருடா! ஆகையால் புத்தியுள்ள ப்ராம்ஹணன் க்ருஹத்துக்குச் சமீபத்திலுள்ள ப்ராம்ஹணர்களை அதிக்ரமிக்கக் கூடாது. பந்துக்கள் எல்லோரையும், தௌஹித்ரன், மாப்பிள்ளை இவர்களையும் அதிக்ரமிக்கக்கூடாது.

षट्त्रिंशन्मते — सन्निकृष्टमधीयानं ब्राह्मणं यो व्यतिक्रमेत्। भोजने चैव दाने च हन्यात् त्रिपुरुषं कुलमिति । यस्तु सन्निकृष्टोऽनधीयानस्तस्यातिक्रमे न दोषः। तथा च तत्रैवोक्तम् — यस्य त्वेकगृहे मूर्खो दूरस्थश्च गुणान्वितः। गुणान्विताय दातव्यं न हि मूर्खे व्यतिक्रमः इति। व्यतिक्रमदोषो नास्तीत्यर्थः।

ஷட்த்ரிம்சன்மதத்தில்:— எவன், ஸமீபத்தில் உள்ளவனும், வேதாத்யயனமுமுள்ளவனுமான ப்ராம்ஹணனைப் போஜனத்திலும், தானத்திலும் அதிக்ரமிக்கின்றானோ அவன் மூன்று தலை முறையுள்ள தன் குலத்தை நாசம் செய்வான். எவன் ஸமீபந்தில் இருப்பவனாய் அத்யயனம் இல்லாமல் இருப்பவனோ அவனை அதிக்ரமிப்பதில் தோஷமில்லை. அவ்விதமே ஷட்த்ரிசன்மதத்திலேயே சொல்லப்பட்டுள்ளது:-

எவனுக்கு ஒரே க்ருஹத்தில் மூர்க்கன் இருக்கின்றானோ, தூரத்தில் இருப்பவன் நற்குணங்களுடையவனாய் இருக்கின்றானோ, அவன் குணங்களுடையவனுக்குக் கொடுக்க வேண்டும். குணமற்றவனை அதிக்ரமித்தால் தோஷமில்லை.

भविष्यत्पुराणेऽपि — ब्राह्मणातिक्रमो नास्ति मूर्खे मन्त्रविवर्जिते । ज्वलन्तमग्निमुत्सृज्य न हि भस्मति हूयते इति । मूर्खग्रहणं निर्गुणमात्रोपलक्षणार्थम्। अत एवोक्तं तत्रैव - अतिक्रान्ते न दोषोऽस्ति निर्गुणं प्रति कर्हिचित् इति । आसन्नस्यैवातिथेरपि गुणपरीक्षणं न कार्यमित्याह शातातपः — अविज्ञातं द्विजं श्राद्धे न परीक्षेत् सदा बुधः । सिद्धा हि विप्ररूपेण चरन्तीह महीतले । अतिथिर्यस्य नाश्नाति तच्छ्राद्धं न प्रशस्यते इति। अज्ञातकुलनामानं तत्काले समुपस्थितम् इत्युक्तलक्षणोऽतिथिः।

பவிஷ்யத் புராணத்திலும்:— வேதாத்யயன மில்லாத மூர்க்கனை அதிக்ரமிப்பதால் தோஷமில்லை. ஜ்வலிக்கும் அக்னியை விட்டு விட்டுச் சாம்பலில் ஹோமம் செய்வது இல்லையல்லவா. மூர்க்க சப்தம் நிர்க்குணரெல்லோரையும் சொல்லுகின்றது. ஆகையால் தான் பவிஷ்யத்புராணத்திலேயே சொல்லப்பட்டுள்ளது. குணமற்றவனை அதிக்ரமிக்கும் விஷயத்தில் தோஷம் என்பது ஒருகாலும் இல்லை. ஸமீபத்தில் வந்துள்ள அதிதியையும் குணங்களால் பரீக்ஷிக்கக் கூடாது என்கிறார், சாதாதபர்:— "அறிந்தவன், ச்ராத்தத்தில் அதிதியாய் வந்த ப்ராம்ஹணனை எப்பொழுதும் பரீக்ஷிக்கக் கூடாது. ஸித்த தேவர்கள் ப்ராம்ஹண ரூபத்துடன் இப் பூதலத்தில் ஸஞ்சரிக்கின்றனர் அல்லவா. எவனுடைய ச்ராத்தத்தை அதிதி புஜிப்பது இல்லையோ அந்த ச்ராத்தம் புகழப்படுவது இல்லை," என்று. "குல நாமங்கள் அறியப்படாதவனும், போஜன காலத்தில் வந்தவனும்" என்று சொல்லப்பட்டுள்ள லக்ஷணமுடையவன் அதிதியாவான்.

अनुकल्पान्तरमाह वसिष्ठः — आनृशंस्यं परो धर्मो याचते यत् प्रदीयते। अयाचतस्सीदमानान् सर्वोपायैर्निमन्त्रयेत् इति। आनृशंस्यं उत्कृष्टो धर्मः, तेन सगुणानामनुकल्पानामभावे अयाचतः - अयाचनशीलान् निर्गुणानपि सर्वोपायैर्निमन्त्रयेत, यथा ते निमन्त्रणमङ्गीकुर्वन्ति तादृशैरुपायैर्निमन्त्रयेत, अयाचनशीलानामभावे याचमानाय निर्गुणायापि दीयत इत्यर्थः।

இரண்டாவது பக்ஷத்தில் மற்றொன்றைச் சொல்லுகிறார், வஸிஷ்டர்:— '''ஆந்ருசம்ஸ்யம்' என்பது சிறந்த தர்மம். ''யாசிப்பவனுக்குக் கொடுப்பது என்பது எதுவோ அது. யாசிக்காதவர்களும், வருந்துகிறவர்களும் ஆகியவர்களை எல்லா உபாயங்களாலும் ச்ராத்தத்தில் வரிக்க வேண்டும்,'' என்று. ஆந்ருசம்ஸ்யம் என்பது சிறந்த தர்மமாகும். அதனால், குணங்களுடன் கூடிய இரண்டாவது பக்ஷத்தில் சொல்லப்பட்ட ப்ராம்ஹணர்கள் இல்லாவிடில், அயாசத: = யாசிக்கின்ற ஸ்வபாவம் இல்லாதவர்களை. அவர்கள் நிர்க்குணர்களாயினும் எல்லா உபாயங்களாலும் வரிக்க வேண்டும். அவர்கள் எவ்விதம் வரணத்தை ஒப்புவார்களோ அவ்வித உபாயங்களால் வரிக்க வேண்டும். யாசிக்கிற ஸ்வபாவம் இல்லாதவர்கள் கிடைக்காவிடில் யாசிப்பவன் நிர்க்குணனாயினும் அவனுக்குக் கொடுக்கலாம், என்பது பொருள்.

अनुकल्पान्तरमाह मनुः — कामं श्राद्धेऽर्चयेन्मित्रं नाभिरूपमपि त्वरिम्। द्विषता हि हविर्भुक्तं भवति प्रेत्य निष्फलम् इति। अभिरूपं - विद्वांसमपि, अरिं - शत्रुम्, नार्चयेदित्यर्थः। अयं त्वनुकल्पः पूर्वोक्तानामप्यलाभे द्रष्टव्यः। स्वेनैव निषिद्धस्य मित्रस्य काममर्चयेत् इति सानुशयमेवाभ्यनुज्ञानात्।

மற்றொரு இரண்டாவது பக்ஷத்தைச் சொல்லுகிறார், மனு:— 'மித்ரனாயினும் அவனை ச்ராத்தத்தில்

புஜிப்பிக்கலாம். வித்வானாயினும் சத்ருவைப் புஜிப்பிக்கக் கூடாது. சத்ருவினால் புஜிக்கப்பட்ட ச்ராத்தம் பரலோகத்தில் பலனற்றதாகிறது,'' என்று. இந்த அனுகல்பம், முன் சொல்லியவர்களும் கிடைக்காவிடில் என்று அறிய வேண்டும். தன்னாலேயே நிஷேதிக்கப்பட்ட மித்ரனை, ''காமமர்சயேத்'' என்று தானாகவே பச்சாத்தாபத்துடன் ஒப்பிடுவர்.

तथा हि श्राद्धे मित्रं निषेधति मनुः — न २श्राद्धे भोजयेन्मित्रं धनैः कार्योऽस्य संग्रहः । नारिं न मित्रं यक्ष विद्यात्तं श्राद्धे भोजयेत् द्विजम् इति । धनैः कार्य इति वचनात् गुणवत्तामात्रहेतुकस्य मित्रभोजनस्यानु-ज्ञानमर्थात् सिद्धम् ।

அவ்விதமே ச்ராத்தத்தில் மித்ரனை நிஷேதிக்கின்றார், மனு:— ''மித்ரனை ச்ராத்தத்தில் புஜிப்பிக்கக் கூடாது. அவனைத் தனங்களால் ஸங்க்ரஹிக்கலாம். எந்த ப்ராம்ஹணனைச் சத்ருவென்றும், மித்ரனென்றும் அறிவதில்லையோ அவனை ச்ராத்தத்தில் புஜிப்பிக்க வேண்டும்,'' என்று. ''தனை: கார்ய:'' என்று சொல்லியிருப்பதால் நற்குணங்களுடன் கூடி இருப்பதினால் மட்டில் மித்ரனாகியவனைப் புஜிப்பிக்கலாம், என்ற அனுஜ்ஞை அர்த்தத்தால் ஸித்திக்கின்றது.

यदाह स एव— यस्य मित्रप्रधानानि श्राद्धानि च हवींषि च । तस्य प्रेत्य फलं नास्ति श्राद्धेषु च हविष्षु च । यस्सङ्गतानि कुरुते मोहात् श्राद्धेन मानवः । स स्वर्गाच्च्यवते लोकात् श्राद्धमित्रो द्विजाधमः । संभोजनी साऽभिहिता पैशाची दक्षिणा द्विजैः । इहैवास्ते तु सा लोके गौरन्धेवैकवेश्मनि इति । सा दक्षिणा संभोजनी, बहूनामेकत्र भोजनं सम्भोजनं तद्रूपा, पैशाची पिशाचैरुपभोज्येति द्विजैरभिहिता । इहैवास्ते - इह लोके मित्रमेव संगृह्णाति नामुत्र पितॄन् । अन्यत्र गमनाशक्तौ दृष्टान्त उक्तः गौरन्धेवैकवेश्मति इति । स्मृत्यन्तरेऽपि

— संभोजनी नाम पिशाचभिक्षा नैषा पितॄन् गच्छति नोत देवान्। इहैव सा चरति क्षीणपुण्या शालान्तरे गौरिव नष्टवत्सा इति।

மனுவே:— "எவனுடைய ச்ராத்தங்களும், தைவ கார்யங்களும் மித்ரர்களையே ப்ரதானமாக உடையவைகளோ, அவனுடைய ச்ராத்தங்களிலும், தைவ கார்யங்களிலும் பரலோக பலன் இல்லை. எந்த மனிதன் ச்ராத்தத்தினால் ஸம்பந்தங்களை அறியாமையால் செய்கின்றானோ, அந்த ச்ராத்த மித்ரனான ப்ராம்ஹண அதமன் ஸ்வர்க்கலோகத்தினின்றும் நழுவுகிறான். அந்த ச்ராத்த தக்ஷிணை 'ஸம்போஜனீ' என்கிற பிசாச தக்ஷிணையாய் ப்ராம்ஹணர்களால் சொல்லப்பட்டுள்ளது. அந்தத் தக்ஷிணை இந்த உலகிலேயே, கண்ணில்லாத பசு ஒரே வீட்டிலிருப்பது போல் நின்று விடுகிறது," என்று. அந்தத் தக்ஷிணை ஸம்போஜனீ = அநேகர்கள் சேர்ந்து ஓரிடத்தில் புஜிப்பது ஸம்போஜனம். அது போன்றது. பைசாசீ = பிசாசங்களால் புஜிக்கத் தகுந்தது, என்று ப்ராம்ஹணர்களால் சொல்லப்பட்டுள்ளது. இஹைவாஸ்தே = இந்த லோகத்தில் மித்ரனையே சேர்கிறது. பரலோகத்தில் பித்ருக்களைச் சேர்வதில்லை. வேறிடத்திற்குப் போவதற்குச் சக்தி இல்லாமையில் உதாஹரணம் சொல்லப்பட்டது "கௌரந்தேவ" என்பதனால். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— ஸம்போஜனீ என்ற இந்த பிசாசர்களைச் சேரும் போஜனம் பித்ருக்களை அடைவதில்லை. மற்றும் தேவர்களையும் அடைவதில்லை. அது புண்யமற்றதாய் இவ்வுலகத்திலேயே ஸஞ்சரிக்கின்றது. கன்றற்ற பசு கொட்டிலிலேயே சுற்றுவது போல்.

अथ भोजनीयतयोक्त श्रोत्रियादिषु ये वर्जनीयाः ते निरूप्यन्ते। तत्र कर्मदीपिकायाम् — श्राद्धे निमन्त्रयेद्विद्वान् पितॄणां न सगोत्रिणः। कर्तुस्तु गोत्रिणश्चैव विशेषेण विवर्जयेत्। सहोदराणां पुत्राणां पितुरेकदिने तथा। श्राद्धे निमन्त्रणं वर्ज्यं क्षुरकर्म तथैव च इति।

शङ्खलिखितौ — मातामहादेर्ज्ञातींश्च स्वस्य ज्ञातींश्च वर्जयेत्। गृह्णेत यदि कर्ता च भोक्ता च नरकं व्रजेत्। तत् श्राद्धमासुरं प्रोक्तं पितॄणां नोपतिष्ठते इति।

இனி ச்ரோத்ரியன் முதலியவர்களில் போஜ்யர்களாய்ச் சொல்லப்பட்டவர்களுள் எவர்கள் வர்ஜிக்கத் தகுந்தவர்களோ அவர்கள் சொல்லப்படுகின்றனர். அவ்விஷயத்தில், **கர்மதீபிகையில்:—** அறிந்தவன் ச்ராத்தத்தில் பித்ருக்களுக்கு ஸமான கோத்ரர்களை வரிக்கக் கூடாது. கர்த்தாவின் ஸகோத்ரர்களையும் அவச்யம் வர்ஜிக்க வேண்டும். ஸஹோதரர்களுக்கும், புத்ரர்களுக்கும், பிதாவுக்கும் ஒரே தினத்தில் ச்ராத்தத்தில் நிமந்த்ரணம் வர்ஜிக்கத் தகுந்தது. க்ஷௌரமும் அப்படியே வர்ஜ்யம். சங்கலிகிதர்கள்:— மாதாமஹன் முதலியவரின் ஜ்ஞாதிகளையும், தனது ஜ்ஞாதிகளையும் வர்ஜிக்க வேண்டும். அவர்களை க்ரஹித்தால் கர்த்தாவும், போக்தாவும் நரகத்தை அடைவார்கள். அந்த ச்ராத்தம் ஆஸுரம் என்று சொல்லப்பட்டுள்ளது. அது பித்ருக்களைச் சேருவதில்லை.

वृद्धमनुः — मासिके ह्याब्दिके प्राप्ते वरणे परिवर्जयेत्। योनिजान् गोत्रजांश्चैव ह्युभयोर्वंशजांस्तथा। वर्जयेत् पितृकृत्येषु देवकार्ये यथामति। मातामहादेर्मरणादूर्ध्वं ज्ञातीन्नियोजयेत् इति। नारदः — श्राद्धं दद्यात् सगोत्रे चेत् समानप्रवरे तथा। दातुः प्रतिग्रहीतुश्च कुलक्षयकरं तु तत् इति। कारिकारत्ने — अनग्निं गर्भिणीनाथं पितरं पुत्रमेव च। श्राद्धे निमन्त्रयेन्नैको भ्रातॄनपि च सोदरान्। नित्यश्राद्धे गयाश्राद्धे सोदकुम्भे तथैव च। सगोत्रं भोजयेत् प्राज्ञ इत्युवाच बृहस्पतिः इति।

**வ்ருத்தமனு:—** மாஸிகமும், ஆப்திகமும் ப்ராப்தமாகில் வரணத்தில் ஸம்பந்திகளையும்,

ஸபிண்டர்களையும், இருவர்களுடைய வம்சங்களில் பிறந்தவர்களையும் பித்ரு வரணத்தில் வர்ஜிக்க வேண்டும். தேவ வரணத்தில் இஷ்டம் போல். மாதாமஹன் முதலியவரின் மரணத்திற்குப் பிறகு அவர்களின் ஜ்ஞாதிகளை வரிக்கலாம். நாரதர்:— ஸகோத்ரனிடத்திலும் அவ்விதம் ஸமான ப்ரவரனிடத்திலும் ச்ராத்தத்தைக் கொடுப்பானாகில், அது கொடுப்பவனுக்கும், புஜிப்பவனுக்கும் குல க்ஷயத்தைச் செய்யக் கூடியதாகும். காரிகா ரத்னத்தில்:- அக்னி இல்லாதவனையும், கர்ப்பிணீ பதியையும், பிதா புத்ரர்களையும் ஒருவன் ச்ராத்தத்தில் வரிக்கக் கூடாது. ஸஹோதரர்களான ப்ராதாக்களையும் வரிக்கக் கூடாது. நித்ய ச்ராத்தம், கயா ச்ராத்தம், ஸோதகும்பம் இவைகளில் ஸகோத்ரனை அறிந்தவன் புஜிப்பிக்கலாம், என்றார் ப்ருஹஸ்பதி.

सङ्ग्रहे — रजस्वला च या नारी प्रसूतायाश्च योषितः। दैवे कर्मणि पित्र्ये च तासां भर्तुरशुद्धता इति। स्मृत्यन्तरे — पूर्वेद्युः श्राद्धकर्तारं तद्भोक्तारं परेऽहनि। शवानुगामिनं चैव वर्जयेत् श्राद्धकर्मणि इति। (आब्दिके त्वघमेकाहं मासिकेषु च षड्दिनम्। षाण्मासिके सपिण्डे च ह्येकोद्दिष्टे च वत्सरम् इति।)

ஸங்க்ரஹத்தில்:— எந்த ஸ்த்ரீ ரஜஸ்வலையோ, எந்த ஸ்த்ரீகள் ப்ரஸவித்தவர்களோ அவர்களின் பர்த்தாவுக்குத் தைவ கர்மத்திலும், பித்ரு கர்மத்திலும் அசுத்தி உண்டு. (அவர்கள் அர்ஹரில்லை.) மற்றோர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தம் செய்யப் போகிறவனை முதல் நாளிலும், ச்ராத்தம் புஜித்தவனை மறு நாளிலும், சவத்தைப் பின் தொடர்ந்து சென்றவனையும் ச்ராத்த கர்மத்தில் வர்ஜிக்க வேண்டும். (ப்ரத்யாப்திகத்தில் புஜித்தவனுக்கு ஒரு நாள் அசுத்தி. மாஸிகங்களில் புஜித்தவனுக்கு ஆறு நாள் அசுத்தி. ஷாண்மாஸிகம், ஸபிண்டீகரணம், ஏகோத்திஷ்டம் இவைகளில் புஜித்தவனுக்கு ஒரு வர்ஷம் அசுத்தி.)

याज्ञवल्क्यः —— रोगी हीनातिरिक्ताङ्गः काणः पौनर्भवस्तथा। अवकीर्णी कुण्डगोलौ कुनखी श्यावदन्तकः । भृतकाध्यापकः क्लीबः कन्यादूष्यभिशस्तकः । मित्रध्रुक् पिशुनस्सोमविक्रयी परिविन्दकः । मातापितृपरित्यागी कुण्डाशी वृषलात्मजः । परपूर्वापतिः स्तेनः कर्मदुष्टाश्च निन्दिताः इति। रोगी - उन्मादादिरोगवान्। उन्मादादि रोगाश्च देवलेन दर्शिताः - उन्मादस्त्वग्दोषो राजयक्ष्मा कासो मधुमेहो भगन्दरो महोदरोऽश्मरीत्यष्टौ पापरोगाः इति। हीनमतिरिक्तं वाऽङ्गं यस्यासौ हीनातिरिक्ताङ्गः। एकेनाक्ष्णा यः पश्यति स काणः तेन च बधिरमूकान्धादयो लक्ष्यन्ते। द्विरूढा पुनर्भूः, तस्यां जातः पौनर्भवः। अवकीर्णी - स्खलित ब्रह्मचर्यो ब्रह्मचारी, व्रती यः स्त्रियमभ्येति सोऽवकीर्णी निरुच्यते। गूढलिङ्ग्यवकीर्णी स्याद्यश्च भग्नव्रतस्तथा इति देवलस्मरणात्। कुण्डगोलौ - परदारेषु जायेते द्वौ सुतौ कुण्डगोलकौ। पत्यौ जीवति कुण्डस्तु मृते भर्तरि गोलकः इत्युक्तलक्षणौ। कुनखी - दुष्टनखः। श्यावदन्तकः - स्वभावकृष्णदन्तः, स्वर्णचोरस्तु कुनखी सुरापः श्यावदन्तकः इति पूर्वजन्मनि महापातकित्वात् तयोः प्रतिषेधः । वेतनं गृहीत्वा योऽध्यापयति स भृतकाध्यापकः । तेन भृतकाध्यापितोऽपि लक्ष्यते। तावुपपातकिनौ - भृतकाध्यापको यश्च भृतकाध्यापितश्च यः। उपपातकिनौ द्वौ च स्वाध्यायक्रयविक्रयात् इति देवलस्मरणात्। सताऽसता वा दोषेण कन्यां दूषयिता कन्यादूषी, महापातकाभिशस्तः अभिशस्तकः, मित्रद्रोही - मित्रध्रुक् परदोषसङ्कीर्तनशीलः पिशुनः, परिविन्दकः - परिवेत्ता, कुण्डस्यान्नं योऽश्नाति स कुण्डाशी प्रकीर्तितः इति वचनात्। विहितकर्मपरित्यागी - वृषलः, तत्सुतः - वृषलात्मजः, परपूर्वापतिः - पुनर्भूपतिः, अदत्तादायी - स्तेनः, कर्मदुष्टाः - शास्त्रविरुद्धकारिणः, एते श्राद्धे निन्दिताः वर्ज्या इत्यर्थः।

யாஜ்ஞவல்க்யர்:— ''ரோகமுடையவன், அங்கக் குறைவுடையவன், அங்கம் அதிகமுடையவன், ஒற்றைக் கண்ணன், பௌநர்ப்பவன், அவகீர்ணீ, குண்டன், கோளகன், சொத்தை நகமுடையவன், கறுப்புப் பல் உடையவன், கூலிக்கு அத்யயனம் செய்விப்பவன், நபும்ஸகன், கன்யகையைத் தூஷிப்பவன், அபவாதமுடையவன், மித்ர த்ரோகீ, பிசுனன், ஸோமலதையை விற்பவன், பரிவிந்தகன், மாதா பிதாக்களை விட்டவன். குண்டனின் அன்னத்தைப் புஜிப்பவன், சூத்ர ஸ்த்ரீயின் பிள்ளை, பரபூர்வாபதி, திருடன், கர்மதுஷ்டன் இவர்கள் ச்ராத்தத்தில் நிந்திக்கப்பட்டவர்கள்,'' என்று. ரோகீ = பைத்யம் முதலிய ரோகமுடையவன். பைத்யம் முதலிய ரோகங்கள் தேவலரால் சொல்லப்பட்டுள்ளன:- 'பைத்யம், தோலைப் பற்றிய ரோகம், ராஜ யக்ஷ்மா, காஸம், மதுமேஹம், பகந்தரம், மஹோதரம், அச்மரீ என்ற இந்த எட்டும் பாப ரோகங்கள்,'' குறைந்தோ, அதிகமாகவோ உள்ள அங்கமுடையவன் ''ஹீநாதிரிக்தாங்கன்.'' காணன் = ஒரு கண்ணால் பார்ப்பவன். அதனால் செவிடன், ஊமை, பொட்டை முதலியவர்கள் சொல்லப்படுகின்றனர். இரு முறை விவாஹமாகியவள் 'புநர்பூ' எனப்படுவாள். அவளிடம் பிறந்தவன் பௌநர்ப்பவன். அவகீர்ணீ = ப்ரம்ஹசர்யத்தைத் தவறிய ப்ரம்ஹசாரீ. ''ப்ரம்ஹசாரியாகிய எவன் ஸ்த்ரீயினிடம் செல்லுகின்றானோ அவன் 'அவகீர்ணீ' எனப்படுகிறான். மறைக்கப்பட்ட லிங்கத்தையுடையவன் 'அவகீர்ணீ' எனப்படுகிறான். வ்ரதத்தை இழந்தவனும் அவகீர்ணீ'' என்று தேவலர் ஸ்ம்ருதியால். குண்டகோளௌ = ''பிறனின் பார்யையினிடம் பிறக்கும் இரண்டு பிள்ளைகள் குண்டனென்றும், கோளகன் என்றும். பர்த்தா ஜீவித்து இருக்கும் பொழுது (பரபுருஷனுக்கு) பிறந்தவன் குண்டன். பர்த்தா இறந்த பிறகு (விதவையினிடத்தில்) பிறந்தவன் கோளகன்'' என்று சொல்லப்பட்டவர்கள். குனகீ =

சொத்தை நகமுடையவன். ச்யாவதந்தகன் = இயற்கையாய் கறுத்த பல்லுடையவன். ''ஸ்வர்ணத்தைத் திருடியவன் சொத்தை நகமுடையவனுவான். கள்ளைப் பருகினவன் கறுப்புப் பல்லுடையவனுவான்,'' என்று முன் ஜன்மத்தில் மஹாபாதகிகள் ஆகையால் அவர்களுக்குத் தடை. கூலியைப் பெற்றுக் கொண்டு எவன் அத்யயனம் செய்விக்கின்ருனே அவன் 'ப்ருதகாத்யாபகன்.' அதனுல், அவனிடம் அத்யயனம் செய்தவன் ப்ருதகாத்யாபிகன். அவ்விருவர்களும் உபபாதகிகள். ''ப்ருதகாத்யாபகன் எவனே, ப்ருதகாத்யாபிதன் எவனே அவ்விருவர்களும் வேதத்தை க்ரயம் செய்ததாலும், வாங்கியதாலும் உபபாதகிகளாக ஆகின்றனர்'' என்று தேவலர் ஸ்ம்ருதியால். உண்மையோ, உண்மையல்லாததோ ஒரு தோஷத்தால் கன்யையைத் தூஷிப்பவன் கன்யாதூஷீ. மஹாபாதகமுடையவன் 'அபிசஸ்தகன்.'' மித்ரனுக்கு த்ரோஹம் இழைத்தவன் ''மித்ர த்ருக்.'' பிறரின் தோஷத்தைச் சொல்வதையே இயற்கையாய் உடையவன் ''பிசுனன்.'' பரிவிந்தகன் பரிவேத்தா (தமயனுக்கு விவாஹமாவதற்கு முன் விவாஹம் செய்து கொண்ட இளையவன்.) குண்டனின் அன்னத்தைப் புஜித்தவன் குண்டாசீ. இவ்விதம் கோளகான்னத்தைப் புஜித்தவனும். ''குண்டகோளகரின் அன்னத்தைப் புஜிப்பவன் குண்டாசீ எனப்படுவான்'' என்ற வசனத்தால். விதிக்கப்பட்ட கர்மத்தைவிட்டவன் ''வ்ருஷளன்.'' அவனுடைய பிள்ளை வ்ருஷளாத்மஜன். பரபூர்வாபதி: இரு முறை விவாஹம் செய்யப்பட்டவளின் பர்த்தா. கொடுக்கப்படாததை எடுத்துக் கொள்பவன் ஸ்தேநன். கர்மதுஷ்டா: = சாஸ்த்ரத்துக்கு விரோதமான கார்யங்களைச் செய்பவர்கள். இவர்கள் ச்ராத்தத்தில் நிந்திதர்கள், வர்ஜிக்கத் தகுந்தவர்கள், என்பது பொருள்.

मनुरपि —— ये स्तेनपतितक्लीबाः ये च नास्तिकवृत्तयः । तान् हव्यकव्ययोर्विप्राननर्हान् मनुरब्रवीत् । जटिलं चानधीयानं दुर्ब(र्वा)लं

कितवं तथा । याजयन्ति च ये पूगान् तांश्च श्राद्धे न भोजयेत् । चिकित्सकान् देवलकान् मांसविक्रयिणस्तथा । विपणेन च जीवन्तो वर्ज्यास्स्युर्हव्यकव्ययोः । प्रेष्यो ग्रामस्य राज्ञश्च कुनखी श्यावदन्तकः । प्रतिरोद्धा गुरोश्चैव त्यक्ताग्निर्वार्धुषिस्तथा । यक्ष्मी च पशुपालश्च परिवेत्ता निराकृतिः । ब्रह्मद्विट् परिवित्तिश्च गणाभ्यन्तर एव च । कुशीलवोऽवकीर्णी च वृषलीपतिरेव च । पौनर्भवश्च काणश्च यस्य चोपपतिर्गृहे । भृतकाध्यापको यश्च भृतकाध्यापितस्तथा । शूद्रशिष्यो गुरुश्चैषां वाग्दुष्टः कुण्डगोलकौ । अकारणपरित्यक्ता मातापित्रोर्गुरोस्तथा । ब्राह्मैर्यौनैश्च संम्बन्धैस्संयोगं पतितैर्गतः । अगारदाही गरदः कुण्डाशी सोमविक्रयी । समुद्रयायी वन्दी च तैलिकः कूटकारकः । पित्रा विवदमानश्च कितवो (केकरो) मद्यपस्तथा । पापरोग्यभिशस्तश्च डांभिंको रसविक्रयी । धनुःशराणां कर्ता च यश्चाग्रेदिधिषूपतिः । मित्रध्रुक् द्यूतवृत्तिश्च पुत्राचार्यस्तथैव च । भ्रा(भ्र)मरी गण्डमाली च श्वित्र्यथो पिशुनस्तथा । उन्मत्तोऽन्धश्च वर्ज्यास्स्युर्वेदनिन्दक एव च । हस्तिगोश्वोष्ट्रदमको नक्षत्रैर्यश्च जीवति । पक्षिणां पोषको यश्च युद्धाचार्यस्तथैव च । स्रोतसां भेदको यश्च तेषामावरणे रतः । गृहसंवेशको दूतो वृक्षरोपक एव च । श्वक्रीडी श्येनजीवी च कन्यादूषक एव च । हिंस्रो वृषलवृत्ति(पुत्र)श्च गणानां चैव (यो) याजकः । आचारहीनः क्लीबश्च नित्यं याचनकस्तथा । कृषिजीवी श्लीपदी च सद्भिर्निन्दित एव च । औरभ्रिको माहिषिकः परपूर्वापतिस्तथा । प्रेतनिर्यातकश्चैव वर्जनीयाः प्रयत्नतः । एतान् विगर्हिताचारानपाङ्क्तेयान्नराधमान् । द्विजातिप्रवरो विद्वानुभयत्र विवर्जयेत् इति ।

மனுவும்:— திருடன், பதிதன், நபும்ஸகன், நாஸ்திகன் இவர்களை ஹவ்யங்களிலும், கவ்யங்களிலும் யோக்யரல்லாதவராக மனு சொன்னார். அத்யயனம் இல்லாத ப்ரம்ஹசாரீ, துர்ப்பலன் (துஷ்ட

மயிருடையவன்), சூதாடுபவன், கூட்டத்திற்கு யாஜனம் செய்விப்பவன் இவர்களை ச்ராத்தத்தில் புஜிப்பிக்கக் கூடாது. வைத்யர்கள், கூலிக்குப் பூஜை செய்பவர்கள், மாம்ஸத்தை விற்பவர்கள், ஆபத்தில்லாத காலத்திலும் வ்யாபாரத்தால் ஜீவிப்பவர்கள் என்ற இவர்கள் ஹவ்ய கவ்யங்களில் வர்ஜிக்கத் தகுந்தவர்கள். க்ராமத்திற்கு வேலைக்காரன், அரசனுக்கு வேலைக்காரன், சொத்தை நகமுடையவன், கறுப்புப் பல் உடையவன், குருவை த்வேஷிப்பவன், அக்னியை விட்டவன், வட்டியால் ஜீவிப்பவன், க்ஷயரோகமுடையவன், பசுக்களை வளர்ப்பவன், பரிவேத்தா, நிராக்ருதி, ப்ராம்ஹண த்வேஷி, பரிவித்தி, கணப்யந்தரன், பாடுகிறவன், ப்ரம்ஹசர்ய வ்ரதம் இழந்தவன், வ்ருஷளீபதி, பௌநர்பவன், ஒற்றைக் கண்ணன், வீட்டில் கள்ள புருஷனை வைத்திருப்பவன், ப்ருதகாத்யாபகன், ப்ருதகாத்யாபிதன், சூத்ர சிஷ்யன், இவர்களுக்குக் குருவாயிருப்பவன், துஷ்டமான வார்த்தையை உடையவன், குண்டன், கோளகன், மாதா, பிதா, குரு இவர்களை அகாரணமாக விட்டவன், பதிதர்களுடன் வேதம், விவாஹம் இவைகளால் ஸம்பந்தம் செய்தவன், வீட்டைக் கொளுத்தியவன், விஷம் கொடுப்பவன், குண்டனின் அன்னத்தைப் புஜிப்பவன், ஸோமத்தை விற்பவன், ஸமுத்ர யாத்ரை செய்பவன், ஸ்துதி பாடகன், எண்ணெய்ச் செக்கு உடையவன், வஞ்சனை செய்பவன், தகப்பனுடன் விவாதம் செய்பவன், சூதாடுபவன், (கேகரன்), மத்யபானம் செய்பவன், பாப ரோகமுடையவன், அபிசஸ்தன், டாம்பிகன், ரஸ வஸ்துக்களை விற்பவன், வில் அம்புகளைச் செய்பவன், இரு முறை கல்யாணம் பண்ணப்பட்டவளின் முதல் பர்த்தா, மித்ர த்ரோஹி, சூதாட்டத்தால் பிழைப்பவன், பிள்ளையினிடம் வித்யையைக் கற்பவன், ப்ரமரீ, கண்டமாலை ரோகமுடையவன், குஷ்டரோகீ, பிறர் தோஷத்தைச் சொல்பவன், பைத்யன், குருடன், வேதத்தை

நிந்திப்பவன் இவர்கள் ச்ராத்தத்தில் வர்ஜ்யர்களாவர். யானை, பசு, குதிரை, ஒட்டகம் இவைகளைச் சிக்ஷிப்பவன், ஜ்யௌதிஷிகன், பக்ஷிகளை வளர்ப்பவன், யுத்தாசார்யன், ப்ரவாஹங்களைப் பிரிப்பவன், ப்ரவாஹங்களைத் தடுப்பவன், க்ருஹங்களைக் கட்டுபவன், தூதன், வ்ருக்ஷங்களை வளர்ப்பவன், நாய்களுடன் விளையாடுபவன், பருந்துகளால் ஜீவிப்பவன், கன்யாதூஷகன், ஹிம்ஸை செய்பவன், சூத்ரவ்ருத்தியை உடையவன், கூட்டங்களைச் சேர்ப்பவன், ஆசாரமற்றவன், நபும்ஸகன், எப்பொழுதும் யாசிப்பவன், க்ருஷியால் ஜீவிப்பவன், பெருங் கால் உடையவன், ஸாதுக்களால் நிந்திக்கப்பட்டவன், ஆடுகளை வளர்ப்பவன், மாஹிஷிகன், பரபூர்வாபதி, பிணத்தை அப்புறப்படுத்துபவன், இவர்கள் ப்ரயத்னபூர்வமாய் வர்ஜிக்கத் தகுந்தவர்கள். கெட்ட ஆசாரமுடையவரும், பங்க்திக்கு அர்ஹமல்லாதவரும் ஆகிய இந்த இழிவான மனிதர்களைப் புத்தியுடையவன் ஹவ்ய கவ்யங்களில் வர்ஜிக்க வேண்டும்.

यद्यद्व्याख्यागम्यार्थं तत्तद्व्याख्यायते। पारलौकिक फलदं कर्म नास्तीति मन्यमाना नास्तिकाः, तेभ्यो वृत्तिर्जीविका येषां श्रोत्रियादीनां ते नास्तिकवृत्तयः। जटिलः - ब्रह्मचारी, अनधीयान इति तस्य विशेषणम्। न च अध्ययनरहितस्य ब्रह्मचारिणोऽश्रोत्रियत्वेन श्राद्धे प्रसक्त्यभावात् प्रतिषेधोऽनुपपन्न इति मन्तव्यम्, यतः व्रतस्थमपि दौहित्रं श्राद्धे यत्नेन भोजयेत् इत्यनधीयानस्यापि दौहित्रस्य ब्रह्मचारिणो भोजनीयत्वप्रसक्तौ प्रतिषेध इति। दुर्वालः - खल्वाटः कपिलकेशः अत्यन्तकोपनो वा। तदुक्तं संग्रहे - खल्वाटकश्च दुर्वालः कपिलश्चण्ड एव च इति। कितवः - द्यूतासक्तः। पूगयाजकाः - गणयाजकाः, चिकित्सकाः - जीवनार्थं दृष्टार्थं च भैषज्यकारिणः, तस्मात् ब्राह्मणेन भेषजं न कार्यमपूतो ह्येषोऽमेध्यो यो भिषक् इति निन्दार्थवाददर्शनात्।

எந்தெந்தப் பதம் வ்யாக்யானத்தால் அறியக்கூடிய அர்த்தம் உடையதோ அந்தந்தப் பதம் விவரிக்கப்படுகிறது:— பரலோக பலனைக் கொடுக்கக் கூடிய கர்மம் இல்லை என்று நினைப்பவர்கள் நாஸ்திகர்கள். அவர்களிடமிருந்து பிழைப்பு எந்த ச்ரோத்ரியர் முதலியவர்க்கோ அவர்கள் நாஸ்திக வ்ருத்திகள். ஜடில: = ப்ரம்ஹசாரீ. அத்யயனம் இல்லாதவன் என்ற பதம் அவனுக்கு விசேஷணம் ஆகும். வேத அத்யயனம் இல்லாத ப்ரம்ஹசாரிக்கு அச்ரோத்ரியத் தன்மையால் ச்ராத்தத்தில் ப்ரஸக்தியேயில்லாமையால் மறுப்பு ஸரியாகாது என்று எண்ணவேண்டாம். ஏனெனில், ''ப்ரம்ஹசாரியாயினும் தௌஹித்ரனை ச்ராத்தத்தில் அவச்யம் புஜிப்பிக்க வேண்டும்'', என்பதால், வேதாத்யயனம் இல்லாதவனாயினும் ப்ரம்ஹசாரியாகிய தௌஹித்ரனுக்குப் புஜிப்பிக்கும் தன்மை ப்ராப்தமாகும் பொழுது மறுப்புச் சொல்லப்பட்டுள்ளது. துர்வாலன் = சொட்டைத் தலை அல்லது செம்பட்டை மயிருடையவன், அல்லது மிக்க கோபமுடையவன். அது சொல்லப்பட்டுள்ளது ஸங்க்ரஹத்தில்:— 'கல்வாடன், துர்வாலன், கபிலன், சண்டன்'' என்று. சிகித்ஸகர்கள் = பிழைப்புக்காகவும், வேறு ப்ரயோஜனத்திற்காகவும் மருந்து செய்பவர்கள், 'ஆகையால் ப்ராம்ஹணன் மருந்து செய்யக்கூடாது. எவன் வைத்யனோ அவன் அசுத்தன்', என்று நிந்தையான வேதவாக்யம் உள்ளது.

देवलकस्वरूपं देवलेन दर्शितम्— देवार्चनपरो विप्रो वित्तार्थी वत्सरत्रयम्। असौ देवलको नाम हव्यकव्येषु वर्जितः। देवकोशोपजीवी च नाम्ना देवलको भवेत्। अपाङ्क्तेयः स विज्ञेयस्सर्वकर्मसु सर्वदा इति। अनापदि वाणिज्येन जीवन्तः - विपणजीविनः, न त्वापद्यपि, क्षात्रेण कर्मणा जीवेद्विशाँ वाऽप्यापदि द्विजः, इति वाणिज्यस्यापत्कल्पतया विहितत्वात्। गुरोः प्रतिरोद्धा - गुरुस्पर्धी। त्यक्ताग्निः - विहितत्यागकारणं विना श्रौतस्मार्ताग्निपरित्यक्ता।। अल्पवृद्ध्या धनं

स्वीकृत्याधिक वृद्ध्या धनप्रयोजकः - वार्धुषिः । तथा च यमः - समार्घं धनमुद्धृत्य महार्घं यः प्रयच्छति । स वै वार्धुषिको नाम ब्रह्मवादिषु गर्हितः ।

தேவலகனின் ஸ்வரூபம் தேவலரால் சொல்லப்பட்டுள்ளது:— "எவன் பணத்தை விரும்பி மூன்று வர்ஷம் வரை தேவபூஜை செய்பவனோ அவன் தேவலகன் எனப்படுவான். அவன் ஹவ்ய கவ்யங்களில் வர்ஜிக்கத் தகுந்தவன். தேவத்ரவ்யத்தால் ஜீவிப்பவனும் தேவலகன் என்ற பெயருடையவனாவான். அவன் எல்லாக் கர்மங்களிலும் பங்க்திக்கு அர்ஹனல்லாதவன் என்றறியத் தகுந்தவன்". ஆபத்தில்லாத காலத்தில் வ்யாபாரத்தால் ஜீவிப்பவர்கள் "விபணஜீவிகள்" எனப்படுவர். ஆபத்தில் ஜீவிப்பவர்களல்ல. "ப்ராம்ஹணன் ஆபத்காலத்தில் க்ஷத்ரிய கர்மத்தாலாவது, வைச்ய கர்மத்தாலாவது ஜீவிக்கலாம்", என்று வ்யாபாரத்தை ஆபத்கல்பமாய் விதித்து இருப்பதால். த்யக்தாக்நி: = விதிக்கப்பட்ட காரணமில்லாமல் ச்ரௌத ஸ்மார்த்தாக்னிகளை விட்டவன். வார்த்துஷிகன் = ஸ்வல்ப வட்டிக்குப் பணத்தை வாங்கி அதிக வட்டிக்குக் கொடுத்து வ்யாபாரம் செய்பவன். அவ்விதமே யமன்:— "ஸமமான வட்டியால் பணத்தை வாங்கி அதிக வட்டிக்கு எவன் கொடுக்கின்றானோ அவன் வார்த்துஷிகன் எனப்படுவான். அவன் ப்ராம்ஹணர்களுள் இழிவானவன்.

यश्च निन्द्यात् परान् जीवान् प्रशंसत्यात्मनो गुणान् । स च वार्धुषिको नाम ब्रह्मवादिषु गर्हितः इति । यक्ष्मी क्षयरोगी, ब्रह्महा क्षयरोगी स्यात् इति तस्य पूर्वजन्मनि ब्रह्महन्तृत्वात् प्रतिषेधः । अनापदि वृत्त्यर्थं यः पशून् पालयति स पशुपालकः । परिवेत्तृपरिवित्तिस्वरूपमुक्तं मनुनैव — दाराग्निहोत्र संयोगं कुरुते योऽग्रजे स्थिते । परिवेत्ता स विज्ञेयः परिवित्तिस्तु पूर्वजः । परिवित्तिः

परिवेत्ता स विज्ञेयः परिवित्तिस्तु पूर्वजः । परिवित्तिः परिवेत्ता यया च परिविद्यते । सर्वे ते नरकं यान्ति दातृयाजकपञ्चमाः इति । परिवित्त्यादयः पञ्च वर्जनीया इत्यर्थः । अधीतविस्मृतवेदो निराकृतिः, तथा च देवलः — अधीत्य विस्मृते वेदे भवेद्विप्रो निराकृतिः सति । कात्यायनस्तु — यस्त्वाधायाग्निमालस्याद्देवादीन् यस्तु नेष्टवान् । निराकर्ताऽमरादीनां स विज्ञेयो निराकृतिः इति । गणाभ्यन्तरः - गणस्य नेता, कुशीलवः - गायकादिः ।

எவன் பிறர்களை நிந்திக்கின்றானோ, தனது குணங்களைப் புகழ்கின்றானோ அவனும் வார்த்துஷிகன் எனப்படுவான். ப்ராம்ஹணர்களுள் இழிவானவன்.'' யக்ஷ்மீ = க்ஷயரோகமுடையவன். ''ப்ரம்ஹத்யை செய்தவன் க்ஷயரோக முடையவனாவான்'' என்று அவனுக்கு முன் ஜன்மத்தில் ப்ரம்ஹஹத்யையினால் மறுப்புச் சொல்லப்பட்டது. ஆபத்தில்லாத காலத்தில் பிழைப்புக்காக எவன் பசுக்களைப் போஷிக்கின்றானோ அவன் பசுபாலகன். பரிவேத்தா, பரிவித்தி இவர்களின் ஸ்வரூபம் சொல்லப்பட்டுள்ளது மனுவினாலேயே:— ''தமையன் இருக்கும் பொழுது எவன் விவாஹம் அக்னி ஹோத்ரம் இவைகளைச் செய்கின்றானோ அவன் பரிவேத்தா, தமையன் பரிவித்தி என்றறியவும். பரிவித்தி, பரிவேத்தா அவன் பத்னி இவர்களெல்லோரும், பெண்ணைக் கொடுத்தவன், விவாஹம் செய்வித்தவன் ஆக ஐந்து பேர்களும் நரகத்தையடைகின்றனர்'' என்று. பரிவித்தி முதலிய ஐவர்களும் வர்ஜிக்கத் தகுந்தவர்கள், என்பது பொருள். அத்யயனம் செய்து வேதத்தை மறந்தவன் ''நிராக்ருதி.'' அவ்விதமே தேவலர்:— ''வேதத்தைக் கற்று அதை மறந்தவன் நிராக்ருதி எனப்படுவான்'' என்று. காத்யாயனரோவெனில், ''எவன் ஆதானம் செய்துகொண்டு பிறகு சோம்பலால் தேவர் முதலியவரை

யஜிக்கவில்லையோ, தேவர் முதலியவரை நிராகரித்து அவன் 'நிராக்ருதி' என்று அறியத்தகுந்தவன்''. கணப்யந்தரன் = கூட்டத்தை நடத்துபவன். குசிலவன் = பாடுகிறவன் முதலியவன்.

वृषलीपतिस्तु रजस्वलायाः कन्यायाः पतिः । तदुक्तं देवलेन - वन्ध्या तु वृषली ज्ञेया वृषली च मृत प्रजा । अपरा वृषली ज्ञेया कुमारी या रजस्वला । यस्त्वेनामुद्वहेत् कन्यां ब्राह्मणो ज्ञानदुर्बलः । अश्राद्धेयमपाङ्क्तेयं तं विद्याद्वृषलीपतिम् इति । उपपतिस्वरूपमुक्तं देवलेन - परदाराभिगो मोहात् पुरुषो जार उच्यते । स एवोपपतिर्ज्ञेयो यस्सदा संवसेत् गृहे इति । वाग्दुष्टः - निष्ठुरवाक् । अगारदाही द्वेधा देवलेन दर्शितः - अगारदाही स ज्ञेयः प्रेतदग्धा धनेन यः । स चाप्यगारदाही स्यात् द्वेषाद्यो वेश्मदाहकः इति । तैलिकः - चक्री, कूटकारकः - तुलामानादिषु वञ्चनाकारकः । केकरः - अर्धदृष्टिः ।

வ்ருஷளீபதி = விவாஹத்திற்கு முன் ரஜஸ்வலையான கன்யகையை மணந்தவன். அது சொல்லப்பட்டுள்ளது தேவலரால்:— ''மலடியானவள் 'வந்த்யா' எனப்படுவள். இறந்த குழந்தைகளையுடையவளும் வ்ருஷளீ. எவள் விவாஹத்திற்கு முன் ரஜஸ்வலையாகியவளோ அவள் மற்றொரு வ்ருஷளீ. இந்தப் பெண்ணை எந்த ப்ராம்ஹணன் ஜ்ஞானமில்லாமல் மணக்கின்றானோ அவன் ச்ராத்தத்துக்கு அர்ஹனல்லன். பங்க்திக்கும் அர்ஹனல்லன். அவனை வ்ருஷளீபதி என்றறியவும்,'' என்று. ''உபபதி''யின் ஸ்வரூபம் சொல்லப்பட்டுள்ளது தேவலரால்:— ''மோஹத்தால் பரதாரத்தைச் சேருகிறவன் ஜாரன் எனப்படுகிறான், அறிந்தவர்களால். எவன் எப்பொழுதும் வீட்டிலேயே வஸிக்கின்றானோ அவன் உபபதி எனப்படுகிறான்,'' என்று. வாக் துஷ்டன் கடுஞ் சொல் உள்ளவன். ''அகாரதாஹீ'' என்பவன் தேவலரால் இரண்டு விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளான்:— ''எவன் தனத்தைப்

பெற்று ப்ரேதத்தைத் தஹிக்கின்றனோ அவன் 'அகாரதாஹீ' எனப்படுவான். எவன் த்வேஷத்தால் வீட்டைக் கொளுத்தினவனோ அவனும் 'அகாரதாஹீ' எனப்படுவான்'' என்று. கூடகார: = தராசு முதலியவைகளில் வஞ்சனை செய்பவன். கேகர: = அரைக்கண்ணன்.

अग्रेदिधिष्वाः पतिः - अग्रेदिधिषूपतिः, ज्येष्ठायामनूढायामूढा या कनिष्ठिका साऽग्रेदिधिषूः। तदुक्तं देवलेन — ज्येष्ठायां यद्यनूढायां कन्यायामुह्यतेऽनुजा। सा चाग्रे दिधिषू र्ज्ञेया पूर्वा तु दिधिषूर्मता इति। पुत्राचार्यः - अक्षरपाठकः, पुत्रात् गृहीतविद्यो वा । तथा च चन्द्रिकायाम् - पुत्राचार्यः स विज्ञेयो ग्रामे योऽक्षरपाठकः । पुत्रादवाप्तविद्यो वा पुत्राचार्यो निगद्यते इति । भ्रमरी - वृत्त्यर्थमेव भ्रमरवदर्थार्जकः, अपस्मारीत्यन्ये । गण्डमाली गण्डमालाख्य रोगवान् । श्वित्री - श्वेतत्वक् । हस्त्यादिदमकः - शिक्षकः, गृहसंवेशकः - गृहाणां निर्माता, नानाजातीया अनियतवृत्तयस्संहता गणाः, तेषां योजकः - योजयिता, औरभ्रिकः - अवीनां पालकः, माहिषिकः - व्यभिचारिणीपुत्रः। तदाह देवलः - महिषीत्युच्यते भार्या सा चैव व्यभिचारिणी। तस्यां यो जायते पुत्रस्स वै माहिषिकः स्मृतः इति। एतान् पूर्वोक्तान् उभयत्र - दैवे पित्र्ये च वर्जयेदित्यर्थः।

அக்ரே திதிஷ்வா: = தமக்கை விவாஹம் இல்லாமலிருக்க விவாஹத்தையடைந்த தங்கை அக்ரே திதிஷூ எனப்பட்டுள்ளது. அது சொல்லப்பட்டது. தேவலரால்:— ''தமக்கை விவாஹம் இல்லாமலிருக்க விவாஹத்தையடைந்த தங்கை 'அக்ரே திதிஷூ' எனப்படுவாள். தமக்கை 'திதிஷூ' எனப்படுவாள்'', என்று. புத்ராசார்ய: = அக்ஷர பாடகன், அல்லது புத்ரனிடத்தினின்று வித்யையை க்ரஹிப்பவன். அவ்விதமே சந்த்ரிகையில்: 'க்ராமத்தில் அக்ஷரங்களைப்

படிப்பிப்பவன் எவனோ அவன் 'புத்ராசார்யன்' எனப்படுவான். புத்ரனிடமிருந்து வித்யையை அடைந்தவன் எவனோ அவனும் 'புத்ராசார்யன்' எனப்படுவான்,'' என்று. ப்ரமரீ = பிழைப்புக்காக வண்டு போல் பணத்தை ஸம்பாதிப்பவன். அபஸ்மார ரோகமுடையவன் என்று சிலர். ச்வித்ரீ = வெளுத்த தோலுடையவன். பல ஜாதியுள்ளவர்களும், பல வ்ருத்திகளுள்ளவர்களும் சேர்ந்தால் கணங்கள் எனப்படுகின்றனர். அவர்களைச் சேர்ப்பவன் கணாணும் யோஜகன். மாஹிஷிக: = வ்யபிசாரிணீயின் புத்ரன். அதைச் சொல்லுகிறார் தேவலர்:— ''மஹிஷீ என்பது பார்யையைச் சொல்லும். அவள் வ்யபசாரிணியாயிருந்து அவளிடம் எந்தப் புத்ரன் உண்டாகின்றானோ அவன் 'மாஹிஷிகன்' எனப்படுகிறான்,'' என்று. முன் சொல்லப்பட்ட இவர்களை, உபயத்ர = தைவ கர்மத்திலும் பித்ரு கர்மத்திலும் வர்ஜிக்க வேண்டும், என்பது பொருள்.

मनुरेव — अपाङ्क्त्यदाने यो दातुर्भवत्यूर्ध्वं फलोदयः । दैवे कर्मणि पित्र्ये वा तं प्रवक्ष्याम्यशेषतः । अव्रतैर्यद्द्विजैर्भुक्तं परिवेत्त्रादिभिस्तथा । अपाङ्क्त्यैर्यदन्यैश्च तद्वै रक्षांसि भुञ्जते । अपाङ्क्त्यो यावतः पाङ्क्त्यान् भुञ्जानाननुपश्यति । तावतां न फलं तत्र दाता प्राप्नोति बालिशः । वीक्ष्यान्धो नवतेः काणष्षष्टेः श्वित्री शतस्य तु । पापरोगी सहस्रस्य दातुर्नाशयते फलम् । यावतस्संस्पृशेदङ्गैर्ब्राह्मणान् शूद्रयाजकः । तावतां न भवेद्दातुः फलं दानस्य पौर्तिकम् । सोमविक्रयिणे विष्ठा भिषजे पूयशोणितम् । नष्टं देवलके दत्तमप्रतिष्ठं तु वार्धुषौ । यत्तु वाणिजके दत्तं नेह नामुत्र तद्भवेत् । भस्मनीव हुतं हव्यं तथा पौनर्भवे द्विजे । इतरेषु त्वपाङ्क्त्येषु यथोद्दिष्टेस्वसाधुषु । मेदोऽसृङ्मांसमज्जाऽस्थि वदन्त्यन्नं मनीषिणः इति । वीक्ष्यान्धः - दृश्यमानान्धः नवतेर्भुञ्जानानां दातुर्दानफलं नाशयते । पौर्तिकं पूर्तं - श्राद्धादि, तत्र भवमित्यर्थः ।
यमः - कामी कुब्जाश्च कुनखः कृतघ्नो गुरुतल्पगाः ।

மனுவே:— "பங்க்திக்கு அர்ஹமல்லாதவர்க்குத் தானம் செய்தால் கொடுப்பவனுக்குப் பிறகு எந்தப் பலன் உண்டாகின்றதோ தைவ கர்மத்திலோ பித்ரு கர்மத்திலோ, அது முழுவதையும் சொல்லுகிறேன். வ்ரதமில்லாதவர்களாலும், பரிவேத்தா முதலியவர்களாலும், பங்க்திக்கு அர்ஹரல்லாத மற்றவர்களாலும் எது புஜிக்கப்பட்டதோ அதை ராக்ஷஸர்கள் புஜிக்கின்றனர். பங்க்திக்கு அர்ஹனல்லாதவன், பங்க்திக்கு அர்ஹர்களாகிய புஜிக்கின்ற எவ்வளவு ப்ராம்ஹணர்களைப் பார்க்கின்றானோ அவ்வளவு ப்ராம்ஹணர்களின் தானத்தின் பலனை மூர்க்கனாகிய தாதா அடைவதில்லை. குருடன் பார்த்தால் தொண்ணூறு பேர்களுடையவும், ஒற்றைக்கண்ணுடையவன் பார்த்தால் அறுபது பேர்களுடையவும், குஷ்டரோகமுடையவன் பார்த்தால் நூறு பேர்களுடையவும், பாபரோகமுடையவன் பார்த்தால் ஆயிரம் பேர்களுடையவும், தானத்தால் உண்டாகும் தாதாவின் பலனை நாசமாக்குவான். சூத்ர யாஜகனான ப்ராம்ஹணன் எவ்வளவு ப்ராம்ஹணர்களை அங்கங்களால் ஸ்பர்சிப்பானோ அவ்வளவு ப்ராம்ஹணர்களுக்குத் தானத்தால் உண்டாகும் பூர்த்த பலன் தாதாவுக்கு உண்டாவதில்லை. ஸோம விக்ரயம் செய்தவனுக்குக் கொடுத்தது விஷ்டையாகும். வைத்ய னுக்குக் கொடுக்கப்பட்டது ஊன்தண் ரக்தமுமாகும். தேவலகனிடத்தில் கொடுக்கப்பட்டது அழிந்து விடும். வட்டியால் ஜீவிப்பவனிடத்தில் கொடுக்கப்பட்டது நிலைத்திருப்பதில்லை. வ்யாபாரியினிடம் கொடுக்கப் பட்டது இஹலோகத்திலும் பரலோகத்திலும் நிலைப்பதில்லை. பௌனர்ப்பவனான ப்ராம்ஹணனிடத்தில் கொடுக்கப்பட்டது சாம்பலில் ஹோமம் செய்யப்பட்டது போல். மற்றும் முன் சொல்லப்பட்ட பங்க்திக்கு அர்ஹரல்லாதவரிடத்தில் கொடுக்கப்பட்ட அன்னத்தைக் கொழுப்பு, ரக்தம், மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு என்று

அறிந்தவர்கள் சொல்லுகின்றனர், என்று. வீக்ஷ்யஅந்த: = பார்க்கப்பட்ட குருடன் புஜிக்கின்ற தொண்ணூறு பேர்களின் பலனைத் தாதாவுக்கு நாசப்படுத்துவான். பௌர்த்திகம் = பூர்த்தம் என்பது ச்ராத்தம் முதலியது. அதில் உண்டாகும் பயன் என்பது பொருள்.

ब्रह्मघ्नाश्च सुरापाश्च स्तेना गोघ्नाश्चिकित्सकाः । राष्ट्रकामास्तथोन्मत्ताः पशुविक्रयिणश्च ये। मानकूटास्तुलाकूटाः शिल्पिनो ग्रामयाजकाः । राजभृत्यान्धबधिरा मूकाः खल्वाटपङ्गवः । वृषलीफेनपीताश्च खञ्जाश्च श्रेणियाजकाः । कालोपजीविनश्चैव ब्रह्मविक्रयिणस्तथा । दग्धपूजाश्च ये विप्रा ग्रामकर्मकराश्च ये । अगारदाहिनश्चैव गरदाः शवदाहकाः । कुण्डाशिनो देवलकाः परदाराभिमर्शकाः । श्यावदन्ताः कुनखिनश्शिल्पिनः कुष्ठिनश्च ये। वणिजो मधुहर्तारो हस्त्यश्वदमका द्विजाः । कन्यानां दूषकाश्चैव ब्राह्मणानां च दूषकाः । सूचकाः प्रेषकाश्चैव कितवाश्च कुशीलवाः । समयानां च भेत्तारः प्रदाने ये च बन्धकाः । अजाविका माहिषकाः सर्वविक्रयिणश्च ये। धनुःकर्ता द्यूतवृत्तिर्मित्रधुक् शस्त्रविक्रयी। गण्डमाली च यक्ष्मी च दीर्घरोगी वृथाश्रमी। प्रव्रज्योपनिवृत्तश्च वृथा प्रव्रजितश्च यः । तथा प्रव्रजिताज्जातः प्रव्रज्यावासितश्च यः । तावुभौ ब्रह्मचण्डालौ प्राह वैवस्वतो यमः ।

72. யமன்:— ஒற்றைக் கண்ணன், கூனன், கைநொண்டி, நன்றிமறந்தவன், குருதார காமி, ப்ரம்ஹ ஹத்யை செய்தவன், கள்குடிப்பவன், திருடன், பசுவைக் கொன்றவன், வைத்யன், ராஜ்யத்தை விரும்புகிறவன், பித்தன், பசு விற்பவன், அளவில் வஞ்சிப்பவன், நிறையில் வஞ்சிப்பவன், சில்பி, க்ராமத்திற்கு யாஜனம் செய்பவன், அரசனின் சேவகன், குருடன், செவிடன், ஊமை, வழுக்கைத் தலையன், கால் நொண்டி, சூத்ர ஸ்த்ரீயைச்

சேர்பவன், முடவன், தொழிலாளிகளுக்கு யாஜனம் செய்பவன், ஜ்யௌதிஷிகன், வேதத்தை விற்பவன், மரியாதையில்லாதவன், க்ராமத்துக்கு வேலைக்காரன், வீட்டைக் கொளுத்துகிறவன், விஷம் கொடுப்பவன், பிணத்தை தஹிப்பவன், குண்டனின் அன்னத்தைப் புஜிப்பவன், கூலிக்குப் பூஜை செய்பவன், பர தாரத்தைச் சேருகிறவன், கறுப்புப் பல்லன், சொத்தை நகமுடையவன், சில்பி, குஷ்டரோகி, வ்யாபாரி, தேன் எடுப்பவன், யானை குதிரைகளை அடக்குகிறவன், கன்யகைகளைத் தூஷிப்பவன், ப்ராம்ஹணர்களைத் தூஷிப்பவன், கோட்சொல்பவன், வேலைக்காரன், சூதாடுபவன், பாடுகிறவன், ஆசாரங்களைக் கெடுக்கிறவன், தானத்தைத் தடுப்பவன், வெள்ளாடு, செம்மறியாடு வளர்ப்பவன், எருமை வளர்ப்பவன், எல்லாப் பொருளையும் விற்பவன், வில் செய்பவன், சூதாட்டத்தால் பிழைப்பவன், மித்ரத்ரோஹி, ஆயுதம் விற்பவன், கண்டமாலை ரோகமுடையவன், க்ஷயரோகி, நீடித்தரோகி, ஆச்ரமதர்மத்தை அனுஷ்டிக்காதவன், ஸந்யாஸம் செய்து பிறகு க்ருஹஸ்தாச்ரமத்துக்குத் திரும்பியவன், வீணாக ஸந்யாஸம் செய்து கொண்டவன், ஸந்யாஸிக்குப் பிறந்தவன், ஸந்யாஸ தர்மத்தை விட்டவன், அவ்விருவரும் ப்ரம்ஹசண்டாளர்கள் என்று ஸூர்யபுத்ரனாகிய யமன் சொல்லுகிறார்.

राज्ञः प्रैषकरो यश्च ग्रामस्य नगरस्य च । समुद्रयायी वान्ताशी केशविक्रयिणश्च ये । अवकीर्णी च वीरघ्नो गुरुघ्नः पितृदूषकः । गोविक्रयी च दुर्वालः पूगानां चैव याजकः । मद्यपश्च कदर्यश्च सह पित्रा विवादकृत् । डाम्भिको वर्धकीभर्ता त्यक्तात्मा दारदूषकः । सद्भिश्च निन्दिताचारः स्वकर्मपरिवर्जकः । परिवित्तिः परिवेत्ता भृत्याचारो निराकृतिः । शूद्राचार्यस्सुताचार्यश्शूद्रशिष्यस्तु नास्तिकः । इष्वस्त्रधारकाचार्यो मानकृत्तैलिकस्तथा । चोरा वार्धुषिका दुष्टाः परस्वानां च दूषकाः ।

चतुराश्रमबाह्याश्च सर्वे ते पङ्क्तिदूषकाः । इत्येतैर्लक्षणैर्युक्तां स्तान् द्विजान् न निमन्त्रयेत् इति ।

அரசனுக்கு ஏவல் செய்கிறவன், க்ராமத்துக்கும் நகரத்துக்கும் ஏவல்காரன், ஸமுத்ரத்தில் செல்கிறவன், கக்கியதைத் தின்பவன், மயிர்விற்பவன், ப்ரம்ஹசர்ய வ்ரதமில்லாதவன், வீரனைக் கொன்றவன், குருவைக் கொன்றவன், பெற்றோர்களைத் தூஷிப்பவன், பசுவை விற்பவன், செம்பட்டை மயிருள்ளவன், கூட்டத்துக்கு யாஜனம் செய்பவன், கள்குடிப்பவன், லோபி, தகப்பனுடன் விவாதம் செய்பவன், டாம்பிகன், தச்சனின் மனைவியைச் சேருபவன், நல்ல ஸ்வபாவத்தை விட்டவன், பார்யையைத் தூஷிப்பவன், ஸாதுக்களால் வெறுக்கப்பட்ட ஆசாரமுடையவன், ஸ்வகர்மத்தை விட்டவன், பரிவித்தி, பரிவேத்தா, வேலைக்காரர்கள் நடத்தையுடையவன், கற்ற வேதத்தை மறந்தவன், சூத்ரர்களுக்கு ஆசார்யன், புத்ரனை ஆசார்யனாயுடையவன், சூத்ரனின் சிஷ்யன், நாஸ்திகன், பாணம், ஆயுதம் இவைகளைத் தரிப்பவர்க்கு ஆசார்யன், அளவு ஸாதனங்களைச் செய்பவன், எண்ணெய்ச் செக்கு உடையவன், திருடன், வட்டியால் ஜீவிப்பவன், துஷ்டன், பிறர் சொத்தைக் கெடுப்பவன், நாலு ஆச்ரமங்களினின்றும் வெளியேறியவன், என்ற இவர்களெல்லோரும் பங்க்தியைக் கெடுப்பவர்களாவர். இவ்விதம் சொல்லப்பட்டுள்ள லக்ஷணங்களுடைய ப்ராம்ஹணர்களை ச்ராத்தத்தில் வரிக்கக் கூடாது.

ब्रह्माण्डपुराणेऽपि — षण्डो मूकश्च कुनखः खल्वाटो दन्तरोगवान् । श्यावदन्तः पूतिनासो हीनाङ्गश्चाधिकाङ्गुलिः । गलरोगी गण्डमाली स्फुटिताङ्गश्च सज्वरः । खञ्जतूबरमन्दाश्च गड्डुमान् दीर्घरोगवान् इति । तूबरः - श्मश्रूविहीनः । यमोऽपि — न खैरुपयातस्य न स्वलोत्पन्नपासः । द्व्यङ्गुलातीतकर्णस्य भुञ्जते

पितरो हविः इति । कर्णवेधस्थाने तालपत्रादिप्रवेशेन विवर्द्धनं द्व्यङ्गुलाधिकं निषिद्धम्, अतः द्व्यङ्गुलातीतकर्णः श्राद्धानर्ह इत्यर्थः ।

ப்ரம்ஹாண்டபுராணத்திலும்:— "நபும்ஸகன், ஊமை, சொத்தை நகமுடையவன், வழுக்கைத் தலையன், பல்ரோகமுடையவன், கறுப்புப் பல்லன், நாற்றமுடைய மூக்கன், அங்கஹீனன், அதிக விரல் உடையவன், கழுத்தில் ரோகமுடையவன், கண்டமாலை ரோகமுடையவன், வெடித்த அங்கமுடையவன், ஜ்வரமுடையவன், நொண்டி, மீசையில்லாதவன், மந்தபுத்தி, தேகத்தில் முண்டு உள்ளவன், நீடித்த ரோகமுடையவன்'', என்று. யமனும்:— "கழுதை மேல் ஏறுகிறவன், மிகச் சிவந்த வஸ்த்ரம் தரிப்பவன், இரண்டு அங்குலத்துக்கு மேல் காதில் துளையுள்ளவன், இவர்களுக்குக் கொடுக்கப்பட்ட அன்னத்தைப் பித்ருக்கள் புஜிக்க மாட்டார்கள்'' என்று. காதுகுத்திய இடத்தில் ஓலை முதலியவைகளை நுழைத்து வளர்ப்பது இரண்டு அங்குலத்திற்கு மேல் ஆனால் நிஷித்தமாகும். ஆகையால் இரண்டு அங்குலத்துக்கு மேல் காதில் துளையுள்ள ப்ராம்ஹணன் ச்ராத்தத்திற்கு அர்ஹனாகான் - என்பது பொருள்.

शङ्खोऽपि — अनध्यायेष्वधीयानाः शौचाचारविवर्जिताः । शूद्रान्नरसपुष्टाङ्गा ब्राह्मणाः पङ्क्तिदूषकाः इति । आपस्तम्बः — नीलीकर्षणकारी तु नीलवस्त्रोपधारकः । किञ्चित् तस्मै न दातव्यं चण्डालसदृशो हि सः इति । नीलीसंसर्गजदोषवान् वर्ज्य इत्यर्थः ।

சங்கரும்:— அனத்யயன தினங்களில் அத்யயனம் செய்பவரும், சௌசம் ஆசாரம் இல்லாதவர்களும், சூத்ரர்களின் அன்னத்தால் வளர்ந்த சரீரம் உள்ளவர்களுமாகிய ப்ராம்ஹணர்கள் பங்க்தியைக் கெடுப்பவர்களாகின்றனர். ஆபஸ்தம்பர்:— "அவுரியைப் பயிர் செய்பவனும், அவுரிச்சாயமுள்ள வஸ்த்ரம் தரிப்பவனும் எவனோ அவனுக்கு ஒன்றையும் கொடுக்கக் கூடாது. அவன்

சண்டாளனுக்குச் ஸமனல்லவா,'' என்று. அவுரி ஸம்பந்தமுடையவன் வர்ஜிக்கத்தகுந்தவன் என்பது பொருள்.

स्मृत्यन्तरे — स्तेनाभिशस्तनग्नाखुषण्ड-मार्जारकुक्कुटाः । कुण्डगोलौ देवलककाणान्धाशिष्टगर्हिताः । न वार्यपि प्रयच्छेत्तु बैडालव्रतिके द्विजे । न बकव्रतिके चैव नावेदविदि धर्मवित् । न भ्रातरौ नियुञ्जीत श्राद्धे पितृसुतावपि । विधुरं गर्भवन्तं च विशिष्टमपि वर्जयेत् । मिथ्याचारो गुरुद्रोही नास्तिको वेदनिन्दकः । एते ब्राह्मणचण्डाला जातिचण्डालपञ्चमाः । प्रतिगृह्य तु धर्मार्थं सञ्चयं कुरुते तु यः । धर्मार्थं नोपयुञ्जीत तस्करं तं विवर्जयेत् इति । नग्नादीनां लक्षणं निरूपितमधस्तात् ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— ''திருடன், பாபி, வஸ்த்ரமில்லாதவன், லோபி, நபும்ஸகன், மோசக்காரன், இரண்டு ஜாதிக்குப் பிறந்தவன், குண்டன், கோளகன், தேவலகன், ஒற்றைக்கண்ணன், கண்ணில்லாதவன் இவர்கள் (ச்ராத்தத்தில்) ஸாதுக்களால் நிந்திக்கப்பட்டவர்கள். பிடால வ்ரதமுள்ள ப்ராம்ஹணனிடத்தில் ஜலத்தைக் கூடக் கொடுக்கக் கூடாது. கொக்கின் வ்ரதமுடையவனிடத்திலும், வேதமறியாதவனிடத்திலும் தர்மமறிந்தவன் ஜலத்தைக் கொடுக்கக் கூடாது. ச்ராத்தத்தில் ஸஹோதரர் இருவரையும், பிதாவையும் பிள்ளையையும் வரிக்கக்கூடாது. தாரமிழந்தவன், கர்ப்பிணீபதி, இவர்களைச் சிறந்தவர்களாயினும் வரிக்கக்கூடாது. பொய்யான ஆசாரமுடையவன், குருத்ரோஹி, நாஸ்திகன், வேதத்தை நிந்திப்பவன் இந்நால்வரும் ப்ராம்ஹண சண்டாளர் எனப்படுவர். ஜாதி சண்டாளன் ஐந்தாவதாவான். தர்மத்திற்கு என்று தனத்தை வாங்கிச் செலவிடாமல் சேர்த்து வைத்து, தர்மத்திற்கு உபயோகிக்காமல் இருப்பவன் எவனோ அந்தத் திருடனை வர்ஜிக்க

வேண்டும்'' என்று. நக்னன் முதலியவரின் லக்ஷணம் முன்பே சொல்லப்பட்டுள்ளது.

मनुः — पाषण्डिनो विकर्मस्थान् बैडालव्रतिकान् शठान्। हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेदिति। न केवलं भोजयित्रैव ज्ञानहीनो वर्जनीयः, किं तु स्वयमेव तेन वर्जनीय इत्याह स एव— यावतो ग्रसते पिण्डान् हव्यकव्येष्वमन्त्रवित्। तावतो ग्रसते प्रेत्य दीप्तान् शूलानयोहुलान् इति। दीप्तान् - अग्निमयान्, हुलं - द्विफलपत्राग्रम्।

மனு:— ''பாஷண்டிகன், நிஷித்தகர்மம் செய்பவர், பைடால (பூனை)வ்ரதிகர்கள், வஞ்சகர்கள், வேத விருத்தமாய்க் காரணங்களைக் கேட்பவர்கள், பக(கொக்கு)வ்ருத்திகள் இவர்களை வார்த்தையினால் கூடப் பூஜிக்கக் கூடாது,'' என்று. போஜனம் செய்விப்பவனால் ஞானமில்லாதவன் வர்ஜிக்கத் தகுந்தவன், என்பது மட்டிலலல்ல. ஆனால், தானாகவே அவன் ச்ராத்தத்தை வர்ஜிக்க வேண்டும். என்கிறார் மனுவே:— வேதமறியாதவன் ஹவ்ய கவ்யங்களில் எவ்வளவு அன்ன கபளங்களைப் புஜிக்கின்றானோ அவ்வளவு அளவுள்ள காய்ச்சப்பட்ட நுனியில் இரண்டு இலையுள்ள இரும்பு சூலங்களைப் பரலோகத்தில் விழுங்குகிறான்.

ब्रह्माण्डपुराणे — अस्मान् वृणीष्व श्राद्धार्थं यो वदेत् स द्विजाधमः। तं वृङ्क्ते श्राद्धकर्ता चेत्तावुभौ नरकालयौ। एतावद्दक्षिणां देहि श्राद्धार्थमिति यो वदेत्। तं वृङ्क्ते श्राद्धकर्ता चेत्तावुभौ नरकालयौ इति। उक्तानामेतेषां विद्यादिगुणयोगेऽपि वर्जनीयत्वमुक्तं तत्रैव— श्राद्धार्हगुणयोगेऽपि नैतान् जातु कथञ्चन। निमन्त्रयेत श्राद्धेषु सम्यक् फलमभीप्सता इति।

ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— ''என்னை ச்ராத்தத்திற்காக வரிப்பாயாக, என்று எவன் சொல்லுகின்றானோ அவன் ப்ராம்ஹண அதமன், அவனை

ச்ராத்தம் செய்பவன் வரித்தால் அவ்விருவரும் நரகத்தை அடைவார்கள். எவன் ச்ராத்தத்திற்கு இவ்வளவு தக்ஷிணையைக் கொடு என்கின்றானோ அவனை ச்ராத்த கர்த்தா வரித்தால் அவ்விருவரும் நரகத்தை அடைவார்கள்.'' என்று. முன் சொல்லிய இவர்கள் வித்யை முதலிய குணங்கள் உடையவராயினும் வர்ஜிக்கத் தகுந்தவர்கள், என்று சொல்லப்பட்டுள்ளது. ப்ரம்ஹாண்ட புராணத்திலேயே:— ''ச்ராத்தத்துக்குரிய குணங்கள் இருந்தாலும் முன் சொல்லிய இவர்களை ஒரு காலும், எவ்விதத்தாலும் ச்ராத்தத்தில் வரிக்கக்கூடாது, நல்ல பலனை விரும்பினால்,'' என்று.

आपत्सु अगत्या स्वीकृताः काणादयस्सर्ववेदाग्र्यादिभिः पङ्क्तिपावनैर्यथा मिश्रिता भवन्ति, तथा नियोक्तव्या इत्याह सुमन्तुः— काणाः कुब्जाश्च खञ्जाश्च शिपिविष्टाः खलैर्विना। सर्वे श्राद्धे नियोक्तव्या मिश्रिता वेदपारगैः इति। अत एवोक्तं मनुनाऽपि — अपाङ्क्त्योपहता पङ्क्तिः पाव्यते यै र्द्विजोत्तमैः इति।

ப்ராம்ஹணர்கள் கிடைக்காவிடில், வேறு வழியில்லாததால் வரிக்கப்பட்ட ஒற்றைக் கண்ணன் முதலியவர்கள் எல்லா வேதமும் அறிந்தவர் முதலியவர்களாகிய பங்க்தி பாவனர்களான ப்ராம்ஹணர்களுடன் எப்படிச் சேர்ந்து இருப்பார்களோ அப்படி வரிக்க வேண்டும், என்கிறார் ஸுமந்து:— ஒற்றைக் கண் உடையவர்கள், கூனர்கள், கால் நொண்டிகள், வழுக்கைத் தலையர்கள் இவர்கள் துஷ்டர்களல்லாவிடில், எல்லோரும் ச்ராத்தத்தில் வேதம் அறிந்தவர்களுடன் கலந்தவர்களாய் வரிக்கத் தகுந்தவர்களாவர். ஆகையாற்றான் சொல்லப்பட்டுள்ளது, மனுவினாலும்:— ''பங்க்திக்கு அர்ஹரல்லாதவரால் கெடுக்கப்பட்ட பங்க்தி எந்த ப்ராம்ஹணோத்தமர்களால் சுத்தமாக்கப்படுகிறதோ'' என்று.

मिश्रणे विशेष उक्तश्चन्द्रिकायाम् — काणादीन् भोजयेद्दैवे श्राद्धे पित्र्ये तु वर्जयेत् इति । पैठीनसिरपि — त्रिमधुस्त्रिसुपर्णस्त्रिणाचिकेतश्छन्दोगो ज्येष्ठसामगो ब्रह्मदेयानुसन्तानः सहस्रदो रुद्राध्यायी चतुर्वेदः षडङ्गविदथर्वशिरोऽध्यायी पञ्चाग्निर्वेद जापीति पंक्तिपावनास्तेषां एकैकः पुनाति युक्तः पङ्क्तिं मूर्ध्नि सहस्रैरप्युपहताम् इति।

சேர்ப்பதில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது, சந்த்ரிகையில்:— ஒற்றைக் கண்ணன் முதலியவர்களை ச்ராத்தத்தில் தேவஸ்தானத்தில் புஜிப்பிக்கலாம். பித்ரு ஸ்தானத்தில் ஆனால் வர்ஜிக்க வேண்டும். பைடீநஸியும்:— த்ரிமது, த்ரிஸுபர்ணன், த்ரிணசிகேதன், ஸாமவேதீ, ஜ்யேஷ்டஸாமம் அறிந்தவன், ப்ராம்ஹ விவாஹத்தால் பிறந்தவன், ஆயிரத்தைக் கொடுத்தவன், ருத்ரத்தைக் கற்றவன், நான்கு வேதமறிந்தவன், ஆறங்கங்களை அறிந்தவன், அதர்வசிரஸ்ஸைக் கற்றவன், பஞ்சாக்னி, வேதம் ஜபிப்பவன், என்ற இவர்கள் பங்க்தியைச் சுத்தம் செய்பவர்கள். அவர்களுள் யாராவது ஒருவன் வரிக்கப் பட்டுத் தலைமையில் இருந்தால் ஆயிரம் பேர்களால் கெடுக்கப்பட்டாலும் பங்க்தியைச் சுத்தம் செய்வான்.

गयाश्राद्धे तु जातिमात्रोपजीविनोऽपि तत्रत्या एव ब्राह्मणार्थे परिग्राह्याः । तदुक्तं चन्द्रिकायाम् — यदि पुत्रो गयां गच्छेत् कदाचित् कालपर्ययात् । तानेव भोजयेद्विप्रान् ब्रह्मणा ये प्रकल्पिताः । ब्रह्मकारितसंस्थाना विप्रा ब्रह्मसमाः स्मृताः । अमानुषा गयाविप्रा ब्रह्मणा ये प्रकल्पिताः । तेषु तुष्टेषु सन्तुष्टाः पितृभिस्सह देवताः इति।

கயா ச்ராத்தத்திலோவெனில், ஜாதி மாத்ரத்தால் பிழைப்பவராய் இருந்தாலும் அங்கு வஸிக்கும் ப்ராம்ஹணர்களே ச்ராத்தத்துக்கு வரிக்கத் தகுந்தவர்கள். அது சொல்லப்பட்டுள்ளது, சந்த்ரிகையில்:— புத்ரன் எப்பொழுதாவது காலவசத்தால் கயைக்குச் சென்றால்

அவ்விடத்தில் ஏற்படுத்தப்பட்ட ப்ராம்ஹணர்கள் எவர்களோ அவர்களையே வரிக்க வேண்டும். ப்ரம்ஹாவினுல் ஏற்படுத்தப்பட்ட ப்ராம்ஹணர்கள் ப்ரம்ஹாவுக்கு ஸமமானவர்கள் எனப்படுகின்றனர். கயையிலுள்ள ப்ராம்ஹணர்கள் மனிதர்களல்ல. அவர்கள் ஸந்தோஷப்பட்டால் பித்ருக்களுடன் தேவர்களும் ஸந்துஷ்டர்களாகின்றனர்.

## श्राद्धपूर्वदिनकृत्यम्।

श्राद्धदिनात् पूर्वदिनकृत्यमुक्तं वराहपुराणे — वस्त्रशौचादि कर्तव्यं श्वः कर्ताऽस्मीति जानता। स्थानोपलेपनं कृत्वा भूमिं विप्रान्निमन्त्रयेत्। दन्तकाष्ठं च विसृजेत् ब्रह्मचारी शुचिर्भवेत् इति। श्राद्धभूमिं परिगृह्य गोमयादिना तत्स्थाने लेपनं कृत्वा वस्त्रशुद्ध्यादिकमह्नि कृत्वा रात्रौ विप्रान् निमन्त्रयेत् इत्यर्थः। माधवीयेऽपि — पूर्वरात्रौ तु विप्राग्र्यान् कृतसायन्तनाशनान्। गत्वा निमन्त्रयेद्देवपित्रुद्देशसमन्वितः इति।

### ச்ராத்தத்திற்கு முன் தினத்தில் செய்ய வேண்டிய கார்யம்.

ச்ராத்த தினத்திற்கு முன் தினத்தில் அனுஷ்டிக்க வேண்டிய கார்யம் சொல்லப்பட்டுள்ளது வராஹ புராணத்தில்:— "நாளை ச்ராத்தம் செய்யப் போகிறேன் என்று அறிந்தவன் வஸ்த்ர சுத்தி முதலியதைச் செய்ய வேண்டும். ச்ராத்த ஸ்தான பூமியை மெழுகி ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். பல் குச்சியை உபயோகிக்கக் கூடாது. ப்ரம்ஹசாரியாயும் சுத்தனுயும் இருக்கவேண்டும்", என்று. ச்ராத்தம் செய்ய வேண்டிய ஸ்தலத்தை நிச்சயித்து, கோமயம் முதலியதால் அந்த ஸ்தானத்தை மெழுகி, வஸ்த்ரத்தைச் சுத்தம் செய்வது முதலியதைப் பகலில் செய்து, ராத்ரியில் ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும், என்பது பொருள். மாதவீயத்திலும்:— முதல் நாள் ராத்ரியில், ஸாயங்காலம் போஜனம் செய்தவர்களான ப்ராம்ஹணர்களை (அவர்களிடம்) சென்று

தேவர்கள் பித்ருக்கள் இவர்களை உத்தேசித்து வரிக்க வேண்டும்.

चन्द्रिकायाम् — निमन्त्रयेत पूर्वेद्युः पूर्वोक्तान् द्विजसत्तमान्। दैवे नियोगे पित्र्ये च तांस्तथैवोपकल्पयेत् इति। हारीतः — यतेतैवं विधान् श्राद्धमाहरिष्यन्निमन्त्रयेत् इति। पूर्वेद्युरिति शेषः। देवलः- श्वः कर्तास्मिति निश्चित्य दाता विप्रान्निमन्त्रयेत्। निरामिषं सकृद्भुक्त्वा सर्वभुक्तजने गृहे इति। स्वगृहे यज्जनजातमस्ति तस्मिन् सर्वस्मिन्भुक्तवति सति पश्चान्निमन्त्रयेदित्यर्थः। यमोऽपि-जातिक्रियाऽवबोधार्थे गुणैर्युक्तानलोलुपान्। प्रार्थयेत प्रदोषान्ते भुक्तानशयितान्द्विजान् इति।

சந்த்ரிகையில்:— முதல் நாளில் முன் சொல்லப்பட்ட ப்ராம்ஹணோத்தமர்களைத் தேவஸ்தானத்திலும் பித்ரு ஸ்தானத்திலும் வரிக்க வேண்டும். அவர்களை அவ்விதமே கல்பிக்க வேண்டும். ஹாரீதர்:— (முதல் நாளில்) இவ்விதமான ச்ராத்தத்தைச் செய்யப் போகிறவனாய் ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். தேவலர்:— "நாளைத் தினம் ச்ராத்தம், செய்யப் போகிறேன், என்று நிச்சயித்து, மாம்ஸமில்லாமல் ஒரு வேளை புஜித்து, வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் புஜித்த பிறகு ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும்," என்று. தன் வீட்டில் எவ்வளவு ஜனங்கள் இருக்கின்றனரோ அவர்கள் எல்லோரும் புஜித்த பிறகு வரிக்க வேண்டும் என்பது பொருள். யமனும்:— ஜாதி, ஆசாரம், அறிவு, தனம், இந்தக் குணங்களுடன் கூடியவரும், பேராசை இல்லாதவரும், போஜனம் செய்தவரும், சயனம் செய்யாதவருமான ப்ராம்ஹணர்களை ஸந்த்யா காலத்திற்குப் பிறகு ப்ரார்த்திக்க வேண்டும்.

निमन्त्रणप्रकारः प्रचेतसा दर्शितः — कृतापसव्यः पूर्वेद्युः पितॄन् पूर्वं निमन्त्रयेत्। भवद्भिः पितृकार्यं नः संपाद्यं च प्रसीदत। सव्येन वैश्वदेवार्थं प्रणिपत्य निमन्त्रयेत् इति। पितॄन् पूर्वं निमन्त्रयेदित्यत्र पूर्वशब्दस्य वैश्वदेवार्थं निमन्त्रयेदिति

व्यवहितेनान्वयः । उपवीती ततो भूत्वा देवतार्थं द्विजोत्तमान् । अपसव्येन पित्र्येऽथ स्वयं शिष्योऽथ वा सुतः इति बृहस्पति स्मरणात् । अत्र शिष्योऽथ वा सुतः इत्युक्तत्वात् सवर्णं प्रेषयेदाप्तं द्विजानामुपमन्त्रणे इति प्रचेतःस्मरणाच्च कदाचिन्निमन्त्रणमन्येनापि कारयेत् । प्रणतिपूर्वनिमन्त्रणं शूद्रविषयम् ।

வரிப்பதின் ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது ப்ரசேதஸ்ஸினால்:— ''ப்ராசீனாவீதம் செய்து கொண்டு, முதல் நாளில் பித்ருக்களை முதலில் வரிக்க வேண்டும். தாங்கள் என்னுடைய பித்ருகார்யத்தை ஸம்பாதித்துக் கொடுங்கள், அனுக்ரஹியுங்கள், என்று. உபவீதியாய் விச்வேதேவ ஸ்தானத்திற்காக நமஸ்கரித்து வரிக்க வேண்டும்,'' என்று. பித்ருக்களை முன்பு வரிக்க வேண்டும், என்ற இடத்திலுள்ள ''முன்பு'' என்ற சப்தத்தை விச்வேதேவ ஸ்தானத்திற்கு வரிக்க வேண்டும், என்று தூரத்திலுள்ள அத்துடன் சேர்க்கவேண்டும். (அதாவது விச்வேதேவ ஸ்தான ப்ராம்ஹணனை முன்பு வரிக்க வேண்டும்.) ''பிறகு உபவீதியாயிருந்து தேவவரணத்திற்காக ப்ராம்ஹணர்களை (வரிக்கவும்). பிறகு ப்ராசீனாவீதமாய்ப் பித்ருக்களைத் தானாகவே வரிக்கவும். அல்லது சிஷ்யனாவது, புத்ரனாவது வரிக்கலாம்,'' என்று ப்ருஹஸ்பதியின் வசனத்தால். இவ்விஷயத்தில் ''சிஷ்யன் அல்லது பிள்ளை'' என்று சொல்லி இருப்பதாலும், ''ஸமாந வர்ணனான மித்ரனை ப்ராம்ஹணர்களை வரிப்பதற்காக அனுப்ப வேண்டும்'' என்று ப்ரசேதஸ்ஸின் வசனத்தாலும், ஒரு ஸமயத்தில் வரிப்பதை அன்யனைக் கொண்டும் செய்யலாம். நமஸ்கரித்து வரிப்பது என்பது சூத்ரனைப் பற்றியது.

तथा च पुराणे - दक्षिणं चरणं विप्रस्सव्यं वै क्षत्रियस्तथा । पादावादाय वैश्यो द्वौ शूद्रः प्रणतिपूर्वकम् इति । दक्षिणचरणस्पर्शो जानुप्रदेशे कर्तव्यः । तथा च मत्स्यः - दक्षिणं जानुमालभ्य त्वं मयाऽत्र

निमन्त्रितः इति । स्मृत्यन्तरे — पितृकार्येषु सर्वेषु पूर्वेद्युः स्यान्निमन्त्रणम् । प्रेतकार्येषु सर्वत्र सद्य एव निमन्त्रणमिति । आश्वलायनः — कृतसायमग्निकार्यः कृतसायमाशेभ्यो ब्राह्मणेभ्यो निवेदयेत् इति । आपस्तम्बोऽपि — पूर्वेद्युर्निवेदनमपरेद्युर्द्वितीयं तृतीयमामन्त्रणम् इति ।

அவ்விதமே, புராணத்தில்;— "ப்ராம்ஹணன் வலது காலையும், க்ஷத்ரியன் இடது காலையும், வைச்யன் இரண்டு கால்களையும், தொட்டுக் கொண்டும், சூத்ரன் நமஸ்கரித்தும் வரிக்க வேண்டும்" என்று. காலைத் தொடுவது என்பது முழங்கால் ப்ரதேசத்தில் செய்யப்பட வேண்டும். அவ்விதமே, மத்ஸ்யர்:— "வலது முழங்காலைத் தொட்டுக் கொண்டு இந்த ச்ராத்தத்தில் நீ என்னால் வரிக்கப்பட்டாய்" என்று. மற்றோர் ஸ்ம்ருதியில்:— பித்ருகார்யங்கள் எல்லாவற்றிலும் முதல் நாளில் வரணம் செய்ய வேண்டும். ப்ரேத கார்யங்கள் எல்லாவற்றிலும் அன்றைய தினமே வரணம் செய்ய வேண்டும். ஆச்வலாயனர்:— ஸாயங்காலம் அக்னிகார்யம் செய்தவனாய் ராத்ரிபோஜனம் செய்தவர்களான ப்ராம்ஹணர்களுக்குத் தெரிவிக்க வேண்டும், ஆபஸ்தம்பரும்:— முதல் நாளில் முதல் வரணமும், மறுநாளில் இரண்டாவது வரணமும் மூன்றாவது வரணமும் (செய்யப்பட வேண்டும்.)

याज्ञवल्क्योऽपि — निमन्त्रयेत पूर्वेद्युर्ब्राह्मणानात्मवान् शुचिः । तैश्चापि संयतैर्भाव्यं मनोवाक्कायकर्मभिः इति । पूर्वेद्युः कथञ्चिन्निमन्त्रणासम्भवे अपरेद्युर्निमन्त्रयेत् । तथा च देवलः — असम्भवेऽपरेद्युर्वा ब्राह्मणांस्तान्निमन्त्रयेत् इति । चन्द्रिकायाम् — निमन्त्रयेत पूर्वेद्युस्तदहर्वा द्विजोत्तमान् इति । स्मृत्यन्तरेऽपि — तस्मात्तु प्रथमं कार्यं प्राज्ञेनोपनिमन्त्रणम् । अप्राप्तौ तद्दिने वाऽपि वर्ज्या योषित्प्रसङ्गिनः इति ।

**யாஜ்ஞுவல்க்யரும்:—** முதல் நாளில் சுத்த மனமுடையவனாய், சுத்தனாய் ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். அந்த ப்ராம்ஹணர்களும் மனது, வாக்கு, காயம், கர்மா இவைகளில் சுத்தமாய் இருக்க வேண்டும். முதல் நாளில் எவ்விதத்தாலும் வரணம் செய்ய முடியாவிடில் மறுநாளில் வரிக்க வேண்டும். அவ்விதமே, **தேவலர்:—** முதல் நாளில் வரிக்க முடியாவிடில் மறுநாளிலாவது அந்த ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். **சந்த்ரிகையில்:—** முதல் நாளிலாவது, ச்ராத்த தினத்திலாவது ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். **மற்றோர் ஸ்ம்ருதியிலும்:—** ஆகையால் அறிந்தவன் முதலிலேயே வரணம் செய்ய வேண்டும். கிடைக்காவிடில் அன்றைய தினத்திலாவது வரிக்க வேண்டும். ஸ்த்ரீகளுடன் ஸம்பந்தம் உள்ளவர்கள் வர்ஜிக்கத் தகுந்தவர்கள்.

मनुरपि — पूर्वेद्युरपरेद्युर्वा श्राद्धकर्मण्युपस्थिते । निमन्त्रयेत त्र्यवरान् सम्यग् विप्रान् यथोदितान् इति । याज्ञवल्क्यः — युग्मान् दैवे यथाशक्ति पित्र्येऽयुग्मांस्तथैव च । परिश्रिते शुचौ देशे दक्षिणाप्रवणे तथा इति । पैठीनसिः — ब्राह्मणान् पञ्च सप्त वा श्रोत्रियान्निमन्त्रयेत् इति । यदा पञ्च ब्राह्मणास्तदा दैवे द्वौ पित्र्ये त्रय इति विभागः, द्वौ दैवे पितृकार्थे त्रीन् इति स्मरणात् । यदा सप्त तदा दैवे चत्वारः पित्र्ये त्रयः, अयुग्मान् भोजयेत् श्राद्धे न समान् दैविके समान् इत्यङ्गिरः स्मरणात् । नन्वेतद्वचनं दैवे द्वौ पित्र्ये पञ्चेति विभागेऽप्युपपद्यत इति मैवम्, त्रिषु पञ्चानामयुग्मसंख्यया विभागानुपपत्तेः, दैवे युग्मानयुग्मान् यथाशक्ति पित्र्ये एकैकस्य इति कात्यायनेन पितृपितामहप्रपितामहानां प्रत्येकमयुग्मब्राह्मण-विधानात् ।

**மனுவும்:—** ச்ராத்தம் வந்திருக்கும் பொழுது முதல் நாளிலாவது, மறுநாளிலாவது சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட மூவர்களுக்குக் குறையாத நல்ல

ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— தேவ ஸ்தானத்தில் இரட்டைப் படையாய் உள்ளவரும், பித்ரு ஸ்தானத்தில் ஒற்றைப் படையாயுமுள்ள ப்ராம்ஹணர்களைச் சக்திக்குத் தகுந்தபடி சுத்தமாயும் தெற்குத் திக்கில் தாழ்ந்ததாயுமுள்ள ஸ்தலத்தில் வரிக்க வேண்டும். பைடீநஸி:— ''ஐந்து அல்லது ஏழு ச்ரோத்ரியர்களான ப்ராம்ஹணர்களை வரிக்கவும்,'' என்று. ஐந்து ப்ராம்ஹணர்கள் ஆனால், தேவ வரணத்தில் இருவரும், பித்ரு வரணத்தில் மூவரும் என்பது விரிவு. ''தேவ வரணத்தில் இருவர்கள், பித்ரு வரணத்தில் மூவர்'' என்ற ஸ்ம்ருதி வசனத்தால். ஏழு பேர்களானால், தேவ வரணத்தில் நாலு பேர்கள், பித்ரு வரணத்தில் மூவர்கள்' ''பித்ரு வரணத்தில் இரட்டைப் படையானவர்களை வரிக்கக் கூடாது. தேவ வரணத்தில் இரட்டைப் படையானவர்களை வரிக்க வேண்டும்'' என்ற அங்கிரஸ்ஸின் வசனம் இருப்பதால். இந்த வசனம் தேவ வரணத்தில் இருவர்கள், பித்ரு வரணத்தில் ஐவர் என்ற விபாகத்திலும் பொருந்துமே எனில், அவ்விதமல்ல. மூன்று பேர்கள் விஷயத்தில் ஐந்து பேர்களை விபாகம் செய்வது உபபன்னமாகாதாகையால். ''தேவ வரணத்தில் இரட்டைப் படையாயும், பித்ரு வரணத்தில் ஒற்றைப் படையாயும், யதாசக்தி பித்ரு வரணத்தில் ஒற்றைப் படையாயும், யதாசக்தி பித்ரு வரணத்தில் ஒவ்வொருவருக்கு ஒவ்வொருவரையாவது'' என்று காத்யாயனரால் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்குத் தனித்தனி இரட்டை ப்ராம்ஹணர்களை விதித்துள்ளதால்.

न चैकत्र त्रय इतरत्रैकैक इति विभाग उपपद्येत इति वाच्यम्, समं स्यादश्रुतत्वात् इति न्यायेन विषमविभागस्यान्यायत्वात् । तस्मदयुग्मसंख्यायास्समविभागार्थं पित्र्ये त्रय इत्युक्तम्। पित्रादिस्थानेषु सति सामर्थ्ये एकैकस्य त्रीन् विप्रान् भोजयेत्।

ஒருவர்க்கு மூன்று பேர்களும், மற்ற இருவர்க்கு ஒவ்வொருவரும் என்று விபாகம் உபபன்னமாகும், என்று சொல்லக்கூடாது. 'ஸமம் ஸ்யாத் அச்ருதத்வாத்' என்ற ந்யாயத்தால், வித்யாஸமாகப் பிரிப்பது ந்யாயம் அல்லாததாகையால். ஆகையால், ஒற்றைப் படைக் கணக்குக்கு ஸரியாய்ப் பிரிப்பதற்காகப் பித்ரு ஸ்தானத்தில் மூவர்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. பிதா முதலியவரின் ஸ்தானங்களில் சக்தியிருந்தால் ஒவ்வொருவருக்கு மும்மூன்று ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும்.

तथा च शौनकः — एकैकमेकैकस्य द्वौ द्वौ त्रीन् वा इति। अत्र द्वौ द्वाविति वृद्धिश्राद्धाभिप्रायम्, पार्वण श्राद्धे तु अयुग्मान् भोजयेत् श्राद्धे न समान् इति समसंख्याया निषेधात् । अत्यन्तविभवे सत्येकैकस्य पञ्च सप्त वा ब्राह्मणान् समर्थो भोजयेत्।

அவ்விதமே, சௌனகர்:— ''ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொருவர், அல்லது இருவர்கள், அல்லது மூவர்,'' என்று. இவ்விடத்தில் இருவர் இருவர் என்று சொல்லியது நாந்தீ ச்ராத்தத்தைப் பற்றியது. பார்வண ச்ராத்தத்திலோவெனில், ''ச்ராத்தத்தில் ஒற்றைப் படையானவர்களைப் புஜிப்பிக்க வேண்டும். இரட்டைப் படையாகப் புஜிப்பிக்கக் கூடாது'' என்று இரட்டைப் படைக்கு நிஷேதமிருப்பதால். அதிகம் ஐச்வர்யம் இருந்தால் ஒவ்வொரு வரணத்திற்கு ஐந்து அல்லது ஏழு ப்ராம்ஹணர்களைச் சக்தியுள்ளவர் புஜிப்பிக்கலாம்.

तथा च गौतमः — नवावरान् भोजयेदयुजो वा यथोत्साहम् इति। अस्यार्थः - यथोत्साहं - यथाविभवम्, पित्रादिस्थानेषु त्रिषु प्रत्येकमयुग्मान् - पञ्च सप्त वा ब्राह्मणान् भोजयेत् इति । अयुजो भोजयेदिति सामान्येनोक्तावपि पित्र्ये सप्तस्वेव पर्यवसानम् — सामर्थ्येऽपि नवभ्योऽर्वाक् भोजयेत सति द्विजान् । नोर्ध्वं

कर्तव्यमित्याहुः केचित्तद्दोषदर्शिनः इति वचनात् । एवं शौनकगौतमाभ्यामुक्तोऽयं श्राद्धविस्तरः ।

அவ்விதமே, கௌதமர்:— "ஒன்பதுக்குக் குறையாதவர்களாய் ஒற்றைப் படையாய் ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கலாம் உத்ஸாஹத்திற்குத் தகுந்தபடி" என்று. இதன் பொருள்:— யதோத்ஸாஹம் என்பதற்கு விபவத்தைப் பொறுத்து என்பது பொருள். பிதா முதலியவரின் ஸ்தானங்கள் மூன்றிலும் தனித் தனி ஒற்றைப்படையான ஐந்து, அல்லது ஏழு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும் என்பது பொருள். ஒற்றைப் படையானவர்களைப் புஜிப்பிக்க வேண்டும் என்று ஸாதாரணமாகச் சொல்லி இருந்தாலும் பித்ருவரணத்தில் ஏழு பேர்களிலேயே முடிவு. "விபவம் இருந்தாலும் ஒன்பது பேர்களுக்குக் குறைவாகவே ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். அதற்கு மேல் செய்யக் கூடாது என்கின்றனர் சிலர் அவ்விஷயத்தில் தோஷத்தை அறிந்தவர்கள்" என்று வசனம் இருப்பதால். இவ்விதம் சௌனகராலும் கௌதமராலும் இந்த ச்ராத்த விஸ்தாரம் சொல்லப்பட்டுள்ளது.

मनुना तु सङ्कोच आश्रितः — द्वौ दैवे पितृकार्ये त्रीनेकैकमुभयत्र वा । भोजयेत् सुसमृद्धोऽपि न प्रसज्जेत विस्तरे । सत्क्रियां देशकालौ च शौचं ब्राह्मणसंपदम् । पञ्चैतान् विस्तरो हन्ति तस्मान्नेहेत विस्तरम् इति ।

மனுவோவெனில்:— ச்ராத்தத்தின் சுருக்கத்தை ஆச்ரயித்துள்ளார்:— தேவஸ்தானத்தில் இருவர்களையும், பித்ரு ஸ்தானத்தில் மூன்று பேர்களையும் அல்லது இரண்டு ஸ்தானங்களிலும் ஒவ்வொருவரையும் புஜிப்பிக்க வேண்டும். அதிக விபவம் உள்ளவனுயினும் விரிவு பக்ஷத்தைப் பற்றக்கூடாது. உபசாரம், தேசம், காலம், சுத்தி, நல்ல ப்ராம்ஹணர்களின் லாபம் இந்த ஐந்துகளையும் விரிவு

என்பது கெடுக்கின்றது. ஆகையால் விரிவை விரும்பக்கூடாது.

याज्ञवल्क्योऽपि — द्वौ दैवे प्राक् त्रयः पित्र्ये उदगेकैकमेव वा। मातामहानामप्येवं तन्त्रं वा वैश्वदैविकम् इति। प्राक् - प्राङ्मुखौ, उदक् - उदङ्मुखा उपवेश्याः, एकैकमेव वा वैश्वदैवे पित्र्ये च एकैकमुपवेशयेत्, मातामहश्राद्धमपि एवम् - पितृश्राद्धवत् कर्तव्यम्। पितृमातामहदैवत्ये तु श्राद्धे पृथक् तन्त्रेण वा वैश्वदैविकं कर्तव्यमित्यर्थः। बृहस्पतिरपि — एकैकमथ वा द्वौ त्रीन् दैवे पित्र्ये च भोजयेत्। सत्क्रियाकालपात्रादि न सम्पद्येत विस्तरे इति।

யாஜ்ஞவல்க்யரும்:— ''இரண்டு ப்ராம்ஹணர்களைத் தேவஸ்தானத்தில் கிழக்கு முகமாகவும், பித்ருஸ்தானத்தில் மூவரை வடக்கு முகமாகவும், அல்லது இரண்டு ஸ்தானங்களிலும் ஒவ்வொருவரையாவது வரிக்க வேண்டும். மாதாமஹர்களுக்கும் இவ்விதமே வரிக்கவும். விச்வேதேவவரணம் இருவர்களுக்கும் ஒன்றாய் இருக்கலாம்.'' பித்ருக்களும், மாதாமஹாதிகளும் உத்தேச்யர்களான ச்ராத்தத்தில் விச்வேதேவவரணத்தைத் தனித்தனியும் செய்யலாம். சேர்த்தும் செய்யலாம் என்பது பொருள். ப்ருஹஸ்பதியும்:— தேவவரணத்தில் ஒருவரையும் அல்லது, இருவர்களையும், பித்ருவரணத்தில் மூவர்களையும் அல்லது ஒருவரைப் புஜிப்பிக்க வேண்டும். விரிவு செய்தால் ஸத்காரம், காலம், யோக்ய ப்ராம்ஹணன் முதலியவை ஸரியாக ஏற்படாது.

चन्द्रिकायाम् — देशकालबलाभावादेकैकमुभयत्र वा । शेषान्वित्तानुसारेण भोजयेदन्यवेश्मनि। यस्मात् ब्राह्मण बाहुल्याद्दोषो बहुतरो भवेत् । श्राद्धनाशो मौननाशः श्राद्धतन्त्रस्य विस्मृतिः । उच्छिष्टोच्छिष्टसंस्पर्शो निन्दा चाप्यन्यभोक्तृषु। वितण्डा च परीवादो जल्पास्ते ते पृथग्विधाः इति । अत्र व्यवस्था कृता तत्रैव —

समृद्धावपि यस्य ब्राह्मणबाहुल्ये सत्क्रियादि संपादनासामर्थ्यम्, तद्विषयं मन्वादिवचनम्, यस्य तु संपादनसामर्थ्यमस्ति तद्विषयं शौनकादिवचनम् इति।

**சந்த்ரிகையில்:—** தேசம், காலம், பலம் இவைகள் இல்லாவிடில் இரண்டு ஸ்தானங்களிலும் ஒவ்வொருவரை:ாவது வரிக்கவும். மற்றவர்களை விபவத்துக்குத் தகுந்தபடி வேறு க்ருஹத்தில் புஜிப்பிக்க வேண்டும். ப்ராம்ஹணர்களை அதிகமாக வரித்தல் அதிக தோஷத்தை உண்டாக்கும். ச்ராத்தத்தின் கெடுதி, மௌனபங்கம், ச்ராத்த தந்த்ரத்தின் மறதி, அசுத்தர்களுக்குப் பரஸ்பரம் ஸ்பர்சம், புஜிக்கும் மற்றவர்கள் விஷயமாய் நிந்தை, விதண்டை, அபவாதம், வீண்பேச்சு இவ்விதமான அநேக தோஷங்கள். இவ்விஷயத்தில் வ்யவஸ்தை சொல்லப்பட்டுள்ளது, **சந்த்ரிகையிலேயே:—** ஸம்பத் இருந்தாலும் எவனுக்கு ப்ராம்ஹணர்கள் அதிகமானல் பூஜை முதலியவைகளைச் செய்வதில் ஸாமர்த்தியம் இல்லையோ, அவனைப் பற்றியது மனு முதலியவரின் வசனம். எவனுக்கு முன் சொல்லியவைகளை ஸம்பாதிப்பதில் ஸாமர்த்யம் இருக்கின்றதோ அவனைப் பற்றியது சௌனகர் முதலியவரின் வசனம்.

यत्तु शङ्खेनोक्तम्—भोजयेदथ वाप्येकं ब्राह्मणं पङ्क्तिपावनम् इति, तत् ब्राह्मणालाभविषयम् — पिशाचा राक्षसा यक्षा भूता नानाविधास्तथा । विप्रलुम्पन्ति सहसा श्राद्धमारक्षवर्जितम् । तत्पालनाय विहिता विश्वेदेवाः स्वयंभुवा । महालये चाब्दिके च सापिण्ड्ये मासिके तथा। व्यर्थं भवति तच्छ्राद्धं विश्वेदेव (वासुदेव) विनाकृतम् इति स्मृतेः।

**ஆனால், சங்கரால்:—** "அல்லது, பங்க்திபாவனனான ஒரு ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்கவும்" என்று

சொல்லப்பட்ட வசனமோ வெனில், அது ப்ராம்ஹணர்கள் கிடைக்காத விஷயத்தைப் பற்றியது. ''பிசாசர்கள், ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், பலவிதமான பூதங்கள் ரக்ஷகர்களான விச்வேதேவரில்லாத ச்ராத்தத்தைச் சீக்கிரமாக நாசப்படுத்துகின்றனர். அந்த ச்ராத்தத்தைக் காப்பாற்றுவதற்காக ப்ரம்ஹாவினால் விச்வேதேவர்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனர். மஹாளயம், ஆப்திகம், ஸபிண்டீகரணம், மாஸிகம் இவைகளில் விச்வேதேவர் இல்லாமல் செய்யப்படும் ச்ராத்தம் வீணாகும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்,

यदा त्वेक एव भोक्ता तदैवमाह वसिष्ठः — यद्येकं भोजयेत् श्राद्धे दैवं तत्र कथं भवेत् । अन्नं पात्रे समुद्धृत्य सर्वस्य प्रकृतस्य तु ॥ देवतायतने कृत्वा तत्र श्राद्धं प्रकल्पयेत् । प्रास्येदग्नौ तदन्नं तु दद्याद्वा ब्रह्मचारिणे इति ।

எப்பொழுது போக்தா ஒருவனேயோ அப்பொழுது இவ்விதம் செய்ய வேண்டும் என்கிறார், வஸிஷ்டர்:— ச்ராத்தத்தில் ஒரு ப்ராம்ஹணனைப் புஜிப்பிப்பதானால், தைவ கார்யத்தை எப்படிச் செய்வது ? எனில், போஜன பாத்ரத்தில் போஜ்யம் எல்லாவற்றையும் பரிமாறி, பூஜாக்ருஹத்தில் வைத்து, அவ்விடத்தில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். அந்த அன்னத்தை அக்னியில் போடவும். அல்லது ப்ரம்ஹசாரிக்குக் கொடுக்கவும்.

स्मृत्यन्तरे — एकश्चेत् ब्राह्मणो लब्धः श्राद्धं च प्रकृतं भवेत् । पितरश्च त्रयः प्रोक्ताः कथं तृप्यन्ति ते त्रयः । उरस्यश्नन्ति पितरो वामभागे पितामहाः । प्रपितामहा दक्षिणतः पृष्ठतस्त्वनुयायिनः इति । निमन्त्रणे नियमान्तरमाह मत्स्यः — एवं निमन्त्र्य नियमान् श्रावयेत् पैतृकान् बुधः । अक्रोधनैः शौचपरैस्सततं ब्रह्मचारिभिः । भवितव्यं भवद्भिश्च मया च श्राद्धकारिणा इति । अत्रिरपि — प्रथमेऽह्नि

निवासस्थान् श्रोत्रियादीन्निमन्त्रयेत् । कथयेत्तु तदैवेषां नियमं पितृदैविकम् । सर्वायासविनिर्मुक्तैः कामक्रोधविवर्जितैः । भवितव्यं भवद्भिर्नः श्वोभूते श्राद्धकर्मणि इति । प्रथमेऽह्नि पूर्वेद्युः, निवासस्थान् - स्वीयनिवासस्थितानित्यर्थः ।

மற்ரூர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. ப்ராம்ஹணன் ஒருவனே கிடைத்துள்ளான். பித்ருக்களோ மூன்று பேர்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றனர். அம்மூவர்களும் எப்படி த்ருப்தர்களாவார் எனில், பித்ருக்கள் மார்பிலிருந்து புஜிக்கின்றனர். பிதாமஹர்கள் இடது பாகத்திலும், ப்ரபிதாமஹர்கள் வலது பாகத்திலும், அவர்களைத் தொடர்ந்து வந்தவர்கள் பின்புறத்திலும், இருந்து புஜிக்கின்றனர். வரணத்தில் மற்ரூர் நியமத்தைச் சொல்லுகிரூர், மத்ஸ்யர்:— "இவ்விதம் வரித்து, அறிந்தவன் பித்ருக்களுடைய நியமங்களைத் தெரிவிக்க வேண்டும். 'கோபமற்றவராயும், சுத்தராயும், எப்பொழுதும் ப்ரம்ஹசர்யம் உள்ளவர்களாயும், நீங்கள் இருக்க வேண்டும். ச்ராத்தம் செய்யும் நானும் அவ்விதம் இருக்கிறேன்' என்று" அத்ரீயும்:— "முதல் நாளில் ச்ரோத்ரிய ப்ராம்ஹணர்களை அவர்கள் க்ருஹத்தில் வரிக்க வேண்டும். அப்பொழுதே பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் உரியதாகிய நியமத்தை இவர்களுக்குச் சொல்ல வேண்டும். 'எவ்விதமான தேக ச்ரமம் இல்லாதவரும், காமக்ரோதம் இல்லாதவரும் ஆக, தாங்கள் இருக்க வேண்டும். நாளைய தினம் நான் செய்யும் ச்ராத்த விஷயத்தில்' என்று"

## निमन्त्रितब्राह्मणकर्तव्यम्

निमन्त्रितैर्यत् कर्तव्यम् तदाहात्रिः —ते तं तथैत्यविघ्नेन गतेयं रजनी यदि । यथाश्रुतं प्रतीक्षेरन् श्राद्धकालमतन्द्रिताः इति । ते -

निमन्थिता विप्राः, तं - निमन्त्रणकर्तारम्, तथाऽस्तु यद्यविघ्नेनेयं रजनी गतेत्युक्त्वा धर्मशास्त्रादौ यथा नियमजातं श्रुतं तथैव तं नियमजातं प्रतीक्षेरन् - परिपालयेयुः, श्राद्धकालास्वादितान्न-परिणामपर्यन्तं इत्यर्थः । तथा प्रचेताः — स्यादान्नपरिणामात्तु ब्रह्मचर्यं तयोः स्मृतम्। निमन्त्रितास्तु ये विप्राः श्राद्धकाले उपस्थिते। वसेरन्नियताहारा ब्रह्मचर्यपरायणाः । अहिंसा सत्यमक्रोधोऽदूरे च गमनक्रिया इति।

### வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களின் கார்யம்

வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்கள் செய்ய வேண்டியது எதுவோ அதைச் சொல்லுகிறார், அத்ரி:— "வரிக்கப்பட்ட அந்த ப்ராம்ஹணர்கள் வரித்தவனை அவ்விதமே ஆகட்டும். இந்த இரவு விக்னமில்லாமல் சென்றால் என்று சொல்லி, ஒப்புக் கொண்டபடி ச்ராத்த காலத்தைச் சோம்பலின்றி எதிர்பார்க்கவேண்டும்". தர்ம சாஸ்த்ரம் முதலியவைகளில் சொல்லப்பட்ட நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். ச்ராத்த காலத்தில் புஜிக்கப்பட்ட அன்னம் ஜீர்ணமாகும் வரையில், என்பது பொருள். அவ்விதமே, ப்ரசேதஸ்:— புஜித்த அன்னம் ஜீர்ணம் ஆகும் வரையில் அவ்விருவர்களுக்கும் (கர்த்தா போக்தா) ப்ரம்ஹசர்யம் விதிக்கப்பட்டுள்ளது. வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்கள் ச்ராத்த காலம் வந்தவுடன் ஆஹார நியமம் உடையவராயும், ப்ரம்ஹசர்யம் உடையவராயும், இருக்க வேண்டும். அஹிம்ஸை, ஸத்யம், க்ரோதமின்மை, தூரதேசம் போகாமலிருப்பது இவைகளும் நியமங்கள்.

वृद्धमनुः —निमन्त्र्य विप्रांस्तदहर्वर्जयेन्मैथुनक्षुरे। प्रमत्ततां च स्वाध्यायं क्रोधं शौचं तथाऽनृतम् । अभारोद्वहनं क्षान्तिः श्राद्धस्यौपयिको विधिः । ऋतुकाले नियुक्तो वा नैव गच्छेत् स्त्रियं क्वचित्। तत्र गच्छन् समाप्नोति ह्यनिष्टं फलमेव तु इति।

வ்ருத்தமனு:— ப்ராம்ஹணர்களை வரித்து, அன்றைய தினத்தில் ஸ்த்ரீ ஸங்கம், க்ஷௌரம், கவனமின்மை, அத்யயனம், க்ரோதம், தந்ததாவனம், பொய் பேசுதல் இவைகளை வர்ஜிக்க வேண்டும். சுமை சுமக்காமல் இருப்பது, பொறுமை இவை ச்ராத்தத்திற்கு அவச்யமான விதியாகும். ருது காலமாகினும் ஸ்த்ரீ ஸங்கத்தைச் செய்யக் கூடாது. அக்காலத்தில் சென்றவன் அனிஷ்டமான பலனை அடைவான்.

नारदः — पूर्वेद्युश्चापरेद्युश्च वर्जयेत् स्त्रीनिषेवणम्। व्यवायी रेतसो गर्ते मज्जयेदात्मनः पितॄन्। श्राद्धे निमन्त्रितो यश्च मैथुनं कुरुते यदि। ब्रह्महत्यामवाप्नोति नात्र कार्या विचारणा इति । वृषलीगमने दोषाधिक्यमाह मनुः — निमन्त्रितस्तु यः श्राद्धे वृषल्या सह मोदते। दातुर्यद्दुष्कृतं किञ्चित् तत्सर्वं प्रतिपद्यते इति । यमस्तु — आमन्त्रितस्तु यः श्राद्धे वृषल्या सह मोदते । भवन्ति पितरस्तस्य मांसासृक्छुक्लभोजनाः इति।

நாரதர்:— ச்ராத்தத்திற்கு முதல் நாளிலும் மறுநாளிலும் ஸ்த்ரீ ஸங்கத்தை வர்ஜிக்க வேண்டும். மீறிச் செய்பவன் தனது பித்ருக்களை ரேதஸ்ஸின் குழியில் விழச் செய்வான். ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் ஸ்த்ரீ ஸங்கம் செய்தால் ப்ரம்ஹஹத்யா தோஷத்தை அடைவான். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. சூத்ர ஸ்த்ரீயைச் சேருவதில் அதிக தோஷத்தைச் சொல்லுகிறார், மனு:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் சூத்ர ஸத்ரீயுடன் சேர்ந்தால், ச்ராத்த கர்த்தாவின் பாபம் முழுவதையும் அடைகிறான். யமனோவெனில்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்ட எவன் சூத்ர ஸ்த்ரீயுடன் சேருகிறானோ அவனது பித்ருக்கள் மாம்ஸம், ரக்தம் சுக்லம் இவைகளைப் புஜிப்பவர்களாக ஆகின்றனர்.

गौतमः—सद्यः श्राद्धी शूद्रातल्पगस्तत्पुरीषे मासं नयति पितॄन् इति। श्राद्धी - श्राद्धकर्ता, सद्यः - तत्क्षणमारभ्येत्यर्थः। यमः — आमन्त्रितस्तु यः श्राद्धे ह्यध्वानं प्रतिपद्यते। भवन्ति पितरस्तस्य तन्मासं पांसुभोजनाः। आमन्त्रितस्तु यः श्राद्धे कलहं कुरुते द्विजः। भवन्ति पितरस्तस्य तन्मासं त्वश्रुभोजनाः। आमन्त्रितस्तु यः श्राद्धे भारमुद्वहते द्विजः। भवन्ति पितरस्तस्य तन्मासं स्वेदभोजनाः। आमन्त्रितस्तु यः श्राद्धे हिंसां वै कुरुते द्विजः। भवन्ति पितरस्तस्य तन्मासं रक्तभोजनाः। आमन्त्रितस्तु यः श्राद्धे ह्यायासं कुरुते द्विजः। भवन्ति पितरस्तस्य तन्मासं पित्तभोजनाः। आमन्त्रितस्तु यः श्राद्धे द्यूतं संसेवते द्विजः। भवन्ति पितरस्तस्य तन्मासं मलभोजनाः इति।

கௌதமர்:— ச்ராத்தம் செய்பவன் அது முதற்கொண்டு சூத்ர ஸ்த்ரீயுடன் சேர்ந்தால், அவனின் மலத்தில் பித்ருக்களை ஒரு மாதம் வரையில் இருக்கச் செய்வான். யமன்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்ட எவன் வழி நடக்கின்றானோ அவனது பித்ருக்கள் அந்த மாஸம் முழுவதும் புழுதியைப் புஜிப்பவர்களாய் ஆகின்றனர். எவன் கலஹம் செய்கின்றானோ அவனது பித்ருக்கள் அம்மாஸம் முழுவதும் கண்ணீரைப் புஜிப்பவராகின்றனர். எவன் சுமையைச் சுமக்கின்றானோ அவனது பித்ருக்கள் அம்மாஸம் முழுவதும் வியர்வையைப் புஜிக்கின்றனர். எவன் ஹிம்ஸையைச் செய்கின்றானோ அவனது பித்ருக்கள் அம்மாஸம் முழுவதும் ரக்தத்தைப் புஜிக்கின்றனர். எவன் ச்ரமகரமான கார்யத்தைச் செய்கின்றானோ அவனது பித்ருக்கள் அம்மாஸம் முழுவதும் பித்தத்தைப் புஜிக்கின்றனர். எவன் சூதாடுகின்றானோ அவனது பித்ருக்கள் அம்மாஸம் முழுவதும் மலத்தைப் புஜிக்கின்றவர் ஆகின்றனர்.

मनुः — निमन्त्रितो द्विजः पित्र्ये नियतात्मा भवेत् सदा। न च च्छन्दांस्यधीयीत यस्य श्राद्धं च तत् भवेत् इति। स्मृत्यन्तरे — श्राद्धे

निमन्त्रितो विप्रो मन्त्रमुच्चारयेद्यदि। त्रयस्ते नरकं यान्ति दाता भोक्ता पिता तथा इति। कात्यायनः — अनिन्द्येनामन्त्रितो नापक्रामेत् शक्तेन प्रत्याख्यानं कर्तव्यम् इति। अनेनार्थानिन्द्यामन्त्रणे भोक्तुमसामर्थ्ये च प्रत्याख्यानं कर्तव्यमेवेत्यवगम्यते।

மனு:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்ட ப்ராம்ஹணன் எப்பொழுதும் நியமத்துடன் இருக்க வேண்டும். வேதாத்யயனம் செய்யக் கூடாது. ச்ராத்தம் செய்பவன் எவனோ அவனும் இந்த நியமங்களுடன் இருக்க வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்ட ப்ராம்ஹணன் மந்த்ரத்தைச் சொல்வானாகில், கர்த்தா, போக்தா, பிதா என்ற மூவர்களும் நரகத்தை அடைகின்றனர். காத்யாயனர்:— ''தோஷம் இல்லாதவனால் வரிக்கப்பட்டவன் மறுதலிக்கக் கூடாது. சக்தி உள்ளவன் மறுதலிக்கக் கூடாது,'' என்று. இதனால், கருத்தால் தோஷம் உள்ளவன் வரித்தாலும், புஜிப்பதற்குச் சக்தி இல்லாவிடினும் மறுக்கலாம், என்பது அறியப்படுகிறது.

निमन्त्रणादनन्तरं भोक्तुमसामर्थ्ये सति प्रत्याख्याने न दोष इत्याह स एव— विधिवत् केतनं प्रतिगृह्य शक्तस्सन्नापक्रमेत् इति। केतनं प्रतिगृह्य - आमन्त्रणमङ्गीकृत्येत्यर्थः। अनिन्द्येनामन्त्रितस्य शक्तस्याङ्गीकृतश्राद्धातिक्रमे दोषमाह मनुः — केतितस्तु यथान्यायं हव्यकव्ये द्विजोत्तमः। कथं चिदप्यतिक्रामन् पापी सूकरतां व्रजेत् इति। यमः — आमन्त्रितस्तु यो विप्रो भोक्तुमन्यत्र गच्छति। नरकाणां शतं गत्वा चण्डालेष्वभिजायते इति। नारायणः — आमन्त्रितस्तु यः श्राद्धे कुर्वीतान्यस्य तु क्षणम्। संवत्सरकृतं पुण्यं तस्य नश्यति दुर्मतेः इति। स्मृत्यन्तरेऽपि — विद्यमानधनो विद्वान् भोज्यान्नेन निमन्त्रितः। कथञ्चिदप्यतिक्रामन् पापी सूकरतां व्रजेत् इति। विद्यमानधन इति विशेषणादार्थ्यविषयमेतदिति केचिद्वर्णयन्ति, तदसाधु, निमन्त्रितस्तु

गुणिना निर्द्धनेनापि सद्विजाः। नान्यमृष्टान्नलोभेन तमतिक्रामन्ति हि। निमन्त्रितास्तु येनादौ तस्मात् गृह्णन्तु नान्यतः इति मत्स्यस्मरणात्।

வரித்த பிறகு, புஜிப்பதற்குச் சக்தி இல்லாவிடில் மறுப்பதில் தோஷம் இல்லை, என்கிறார், காத்யாயனரே:— விதிப்படி வரணத்தை அங்கீகரித்து, சக்தி உள்ளவன் அதிக்ரமிக்கக் கூடாது. தோஷமற்றவனால் வரிக்கப்பட்டு ஒப்புக்கொண்டு, சக்தி உள்ளவனாய் இருப்பவன் அங்கீகரிக்கப்பட்ட ச்ராத்தத்தை அதிக்ரமித்தால் தோஷத்தைச் சொல்லுகிறார், மனு:— விதிப்படி ஹவ்யத்திலும் கவ்யத்திலும் வரிக்கப்பட்ட பிராம்ஹணன் எவ்விதத்திலாவது அதிக்ரமித்தால் அந்தப்பாபி பன்றியாய் பிறப்பான். யமன்:— எந்த பிராம்ஹணன் வரிக்கப்பட்ட பிறகு வேறு இடத்தில் புஜிக்கச் செல்வானேயாகில் அவன் அநேக நரகங்களை யடைந்து சண்டாளர்களில் பிறப்பான். நாராயணர்:— சிராத்தத்தில் வரிக்கப்பட்ட எவன் அன்யனுடைய வரணத்தை ஒப்புக்கொள்ளுகிறானோ, அந்தத் துர்ப்புத்தியினுடைய ஒரு வர்ஷத்திய புண்யம் அழிந்துவிடுகிறது. மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— ''பணமுள்ளவனான அறிந்தவன் சிஷ்டனால் வரிக்கப்பட்டு எக்காரணத்தாலாவது அதிக்ரமித்தால், அந்தப் பாபீ பன்றியாகப் பிறப்பான்,'' என்று. பணமுள்ளவன் என்று இருப்பதால், இது பணம் உள்ளவனைப் பற்றியது, என்கின்றனர் சிலர். அது ஸரியல்ல. ''பணம் இல்லாதவனாயினும் சிஷ்டனால் வரிக்கப்பட்ட நல்ல ப்ராம்ஹணர்கள் வேறொருவனுடைய நல்ல அன்னத்தில் ஆசையினால் முதலில் வரித்தவனை அதிக்ரமிக்கக் கூடாது. எவனால் முதலில் வரிக்கப்பட்டார்களோ அவன் இடமிருந்தே அன்னத்தை க்ரஹிக்க வேண்டும். மற்றவனிடமிருந்து க்ரஹிக்கக் கூடாது'', என்று மத்ஸ்ய வசனம்.

कात्यायनः — आमन्त्रितोऽन्यन्न प्रतिगृह्णीयात् इति । पूर्वमन्येन निमन्त्रितस्तदीयादन्नादन्यदन्नं पश्चान्निमन्त्रितस्य तण्डुलादिरूपमपि न प्रतिगृह्णीयादित्यर्थः । यः पुनः प्रतिगृह्णाति तस्य दोषमाह देवलः — आमश्राद्धं गृहीत्वा तु योऽन्यश्राद्धेऽतिमोहितः । पतन्ति पितरस्तस्य लुप्तपिण्डोदकक्रियाः । पूर्वं निमन्त्रितोऽन्येन कुर्यादन्यप्रतिग्रहम् । भुक्ताहारोऽथवा भुङ्क्ते सुकृतं तस्य नश्यति इति ।

**காத்யாயனர்:—** "வரிக்கப்பட்டவன் வேறொன்றையும் ப்ரதி க்ரஹிக்கக் கூடாது," என்று. முதலில் பிறனால் வரிக்கப்பட்டவன் அவன் அன்னத்தைத் தவிர பின்பு வரித்தவனின் அரிசி முதலியதையும் ப்ரதிக்ரஹிக்கக் கூடாது, என்பது பொருள். எவன் அவ்விதம் ப்ரதி க்ரஹிக்கிறானோ அவனுக்குத் தோஷத்தைச் சொல்லுகிறார், தேவலர்:— எவன் ஆமச்ராத்தத்தைப் பெற்றுக் கொண்டு பிறனின் ச்ராத்தத்தில் அதிக மோஹம் உடையவனாய்ப் புஜிக்கின்றானோ, அவனது பித்ருக்கள் உதகம் பிண்டம் இவைகளைப் பெறாமல் நரகத்தில் விழுகின்றனர். பிறனால் முதலில் வரிக்கப்பட்டவன் மற்றொருவன் இடமிருந்து ப்ரதி க்ரஹத்தைப் பெற்றானாகில் அவனுடையவும், ஒரு ச்ராத்தத்தில் புஜித்த பிறகு மற்றொரு ச்ராத்தத்தில் புஜித்தவனுடையவும் புண்யம் நசிக்கின்றது.

स्मृत्यन्तरे — श्राद्धे निमन्त्रितो यस्तु यदि कुर्यात् प्रतिग्रहम् । भक्षयेत् किञ्चिदप्यन्यत् सुकृतं तस्य नश्यति इति । एवं च, इक्षूनपः फलं मूलं ताम्बूलं पय औषधम् । भक्षयित्वापि कर्तव्याः स्नानदानादिकाः क्रियाः इति वचनं श्राद्धव्यतिरिक्तविषयम् । यस्त्वामन्त्रितो विप्र आहूतोऽपि श्राद्धोपक्रम कालातिपत्तिं करोति, तस्य प्रत्यवाय आदित्यपुराणेऽभिहितः — आमन्त्रितश्चिरं नैव कुर्याद्विप्रः कदाचन । देवतानां पितॄणां च दातुरन्यस्य चैव हि । चिरकारी भवेद्द्रोगी पच्यते नरकाग्निना इति ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் ப்ரதி க்ரஹம் செய்தாலும், ஏதாவது ஒன்றைத் தின்றாலும் அவனது புண்யம் நசிக்கின்றது. இவ்விதம் இருப்பதால், ''கரும்பு, ஜலம், பழம், கிழங்கு, தாம்பூலம், பால், மருந்து இவைகளைச் சாப்பிட்டாலும், ஸ்நானம், தானம் முதலிய கர்மங்களைச் செய்யலாம்'' என்ற வசனம் ச்ராத்தத்தைத் தவிர மற்றக் கர்மத்தைப் பற்றியது. வரிக்கப்பட்ட எந்த ப்ராம்ஹணன் அழைக்கப்பட்டிருந்தும் ச்ராத்தம் ஆரம்பிக்கும் காலத்தை அதிக்ரமிக்கின்றானோ அவனுக்குத் தோஷம் சொல்லப்பட்டு உள்ளது. ஆதித்ய புராணத்தில்:— வரிக்கப்பட்ட ப்ராம்ஹணன் ஒரு காலம் தாமதம் செய்யக்கூடாது. தேவதைகள், பித்ருக்கள், கொடுப்பவன் இவர்கள் விஷயத்தில் தாமதம் செய்பவன் ரோகம் உடையவனாவான். நரகத்தில் நெருப்பினால் தஹிக்கப்படுவான்.

निमन्त्रितब्राह्मणपरित्यागे प्रत्यवायमाह नारायणः — केतनं कारयित्वा तु निवारयति दुर्मतिः । ब्रह्महत्यामवाप्नोति शूद्रयोनौ च जायते। निवार्यामन्त्रितं कर्ता ब्राह्मणं नियतं शुचिम् । यतिचान्द्रायणं कृत्वा तस्मात् पापात् प्रमुच्यते इति। यतिचान्द्रायणम् - चान्द्रायणविशेषः। यमः — ब्राह्मणं तु मुखं कृत्वा देवताः पितृभिः सह। समुपाश्नान्ति तस्मात्तं न व्यतिक्रमेत् इति । मनुरपि निमन्त्रितान् हि पितर उपतिष्ठन्ति तान्द्विजान्। वायु भूतास्तु गच्छन्ति तथाऽऽसीनानु पासते इति।

வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களைப் பரித்யாகம் செய்தால், தோஷத்தைச் சொல்லுகிறார், நாராயணர்:— ''ப்ராம்ஹணனை வரித்துப் பிறகு துர்ப்புத்தியுள்ளவனாய் மறுத்தால், ப்ரம்ஹஹத்யா தோஷத்தை அடைகிறான். சூத்ர ஜாதியில் பிறப்பான். ச்ராத்தம் செய்பவன் ப்ராம்ஹணனை வரித்து நியமம் உடையவனும் சுத்தனுமாகிய அவனை

மறுத்தால், யதி சாந்த்ராயணத்தை அனுஷ்டித்தால் அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான்,'' என்று. யமன்:— தேவர்கள் பித்ருக்களுடன் ப்ராம்ஹணனை முகமாகச் செய்து கொண்டு ச்ராத்த கர்த்தாவின் அன்னத்தைப் புஜிக்கின்றனர். ஆகையால் அந்த ப்ராம்ஹணனை அதிக்ரமிக்கக் கூடாது. மனுவும்:— பித்ருக்கள், வரிக்கப்பட்ட அந்த ப்ராம்ஹணர்களை அடைகின்றனர். அவர்கள் செல்லும் போது வாயு ரூபமாய் கூடச் செல்லுகின்றனர். அவர்கள் உட்கார்ந்தால் அவர்களுடன் உட்காருகிறார்கள்.

## श्राद्धदिनकृत्यम्

अथ श्राद्धदिनकृत्यम् — तत्र प्रचेताः — श्राद्धभुक् प्रातरुत्थाय प्रकुर्याद्दन्तधावनम्। श्राद्धकर्ता न कुर्वीत दन्तानां धावनं बुधः इति। देवलः — तथैव यन्त्रितो दाता प्रातः स्नात्वा सहाम्बरः। आरभेत नवैः पात्रैरन्नारम्भं च बान्धवैः इति। तथैव - श्राद्धकर्तुरुक्त-नियमानतिक्रमेणैव यन्त्रितः नवैः - अनुपहतैः - पाकयोग्यैः पात्रैः, अन्नारम्भम् - श्राद्धार्थान्नस्य पाकारम्भम्, पाकोपयोगिभिः बान्धवैरुपेतः कुर्यादित्यर्थः।

### ச்ராத்த தினத்தில் செய்ய வேண்டிய கார்யம்.

இனி ச்ராத்த தின கார்யம் சொல்லப்படுகிறது. அதில், ப்ரசேதஸ்:— ச்ராத்தம் புஜிப்பவன் காலையில் எழுந்து தந்ததாவனம் செய்ய வேண்டும். அறிந்தவனான ச்ராத்தம் செய்பவன் தந்ததாவனத்தைச் செய்யக் கூடாது. தேவலர்:— "நியமம் உடையவனாகிய ச்ராத்த கர்த்தா காலையில் ஸசேல ஸ்நானம் செய்து, பந்துக்களுடன் புதிதான பாத்ரங்களால் ச்ராத்தான்னத்தைச் சமைக்க ஆரம்பிக்க வேண்டும்,'' என்று. ததைவ = ச்ராத்த கர்த்தாவுக்குச் சொல்லிய நியமங்களை அதிக்ரமிக்காமலே நியமம் உடையவனாய். நவை: = புதிதாகிய அசுத்தமல்லாத சமையலுக்கு

யோக்யமான பாத்ரங்களால். அந்நாரம்பம் = ச்ராத்த யோக்யமான அன்னத்தைச் சமைப்பதின் ஆரம்பத்தை, சமையலுக்கு யோக்யர்களான பந்துக்களுடன் சேர்ந்தவனுய்ச் செய்ய வேண்டும், என்பது பொருள்.

स्मृत्यन्तरे — पुराणपात्रपक्वं यद्धविस्तु श्राद्धकर्मणि। भुञ्जते नैव पितरो न देवाश्चासुरं भवेत् इति। तत्रैव — पचेदन्नानि सुस्नातः पात्रेषु शुचिषु स्वयम्। स्वर्णादिधातुजातेषु मृन्मयेष्वपि वा पुनः। नायसेषु न भिन्नेषु दूषितेष्वपि कर्हिचित्। पूर्वं कृतोपयोगेषु मृन्मयेषु न तु क्वचित्।। पच्यमानस्तु भाण्डेषु भक्त्या ताम्रमयेषु च। समुद्धरति वै घोरात्पितॄन् दुःखमहार्णवात्। न कदाचित्पचे दन्नमयःस्थालीषु पैतृकम्। अयसो दर्शनादेव पितरो विद्रवन्ति हि। कर्ता भोक्ता च सर्वत्र नैकवस्त्रो द्विजो भवेत्। तस्माद्वस्त्रादिना श्राद्धे सोत्तरीयः सदा भवेत् इति। (तथा पितृशेषाशनात् पूर्वं श्राद्धकर्तुश्च कर्तृता। प्रत्याब्दिके मासिके च परेऽह्नि स्यात्तिलोदकम्। कर्ता वा स्यादकर्ता वा पुनर्भोजनमैथुने। वर्जयेत् कर्मसिद्ध्यर्थं पितृद्रोह्यन्यथा भवेत्।) तथा - दन्तधावनताम्बूलक्षौराभ्यङ्गमभोजनम्। रत्यौषधपरान्नानि श्राद्धकर्ताऽष्ट वर्जयेत् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— பழமையான பாத்ரங்களில் சமைக்கப்பட்ட அன்னத்தை ச்ராத்தத்தில் பித்ருக்களும் தேவர்களும் புஜிப்பதில்லை. அந்த அன்னம் அஸுரர்களைச் சேர்ந்ததாகும். மற்றொரு ஸ்ம்ருதியிலேயே:— ஸ்நானம் செய்தவனுய், சுத்தமான பாத்ரங்களில் அன்னங்களைத் தானுகவே சமைக்க வேண்டும். தங்கம் முதலிய உலோகங்களால் உண்டாகிய பாத்ரங்களில், அல்லது மண்பாண்டங்களில் சமைக்க வேண்டும். இரும்புப் பாத்திரங்களிலும், உடைந்த பாத்திரங்களிலும், அசுத்தமானவைகளிலும், முன் உபயோகிக்கப்பட்ட மண்

பாண்டங்களிலும், சமைக்கக் கூடாது. தாம்ரபாத்ரங்களில் பக்தியுடன் சமைக்கப்பட்ட அன்னம் பித்ருக்களைப் பயங்கரமானதுக்கஸமுத்ரத்தினின்றும் வெளியேற்றுகிறது. இரும்புப் பாத்ரங்களில் பித்ருக்களுக்குரிய அன்னத்தை ஒரு காலும் சமைக்கக் கூடாது. இரும்பைப் பார்ப்பதினாலேயே பித்ருக்கள் ஓடிவிடுகிறார்களல்லவா. ச்ராத்த கர்த்தாவும் ச்ராத்த போக்தாவும் ச்ராத்தத்தில் எப்பொழுதும் ஒரு வஸ்த்ரம் உள்ளவனாய் இருக்கக் கூடாது. ஆகையால் வஸ்த்ரம் முதலியதால் ச்ராத்தத்தில் எப்பொழுதும் உத்தரீயம் உடையவனாய் இருக்க வேண்டும். (பித்ரு சேஷ அன்னத்தைப் புஜிக்கும் முன் வரையில் ச்ராத்த கர்த்தாவுக்குக் கர்த்ருத்வம். ப்ரத்யாப்திகத்திலும், மாஸிகத்திலும் மறுநாளில் திலதர்ப்பணம். கர்த்தாவாகிலும் கர்த்தா அல்லாதவனாகினும் மறுபடி புஜித்தல், ஸ்த்ரீ ஸங்கம் இவைகளை ச்ராத்தம் ஸித்திப்பதற்காக வர்ஜிக்க வேண்டும் இல்லையெனில் பித்ரு த்ரோஹியாவான்.) அவ்விதம் "ச்ராத்தம் செய்பவன் தந்ததாவனம், தாம்பூலம், க்ஷௌரம், எண்ணெய் தேய்த்துக் கொள்ளல், போஜனம், ஸ்த்ரீ ஸங்கம், ஔஷதம், பரான்னம் இந்த எட்டையும் வர்ஜிக்க வேண்டும்.

न केवलं तद्दिने क्षौरनिषेधः, किन्तु पूर्वमपि पक्षाभ्यन्तरे न कार्यम्। यस्मिन् मासि मृताहस्स्यात्तन्मासं पक्षमेव वा। क्षुरकर्म न कुर्वीत परान्नं च रतिं त्यजेत् इति स्मरणात्। अशक्तो दिनत्रयं परान्नं वर्जयेत्। पूर्वेद्युश्च परेद्युश्च कर्ता श्राद्धदिनेऽपि च। परस्यान्नं तु नाश्नीयादश्नीयात्पितृघातुकः इति।

க்ஷௌரநிஷேதம் ச்ராத்த தினத்தில் மட்டிலுமல்ல. ச்ராத்தத்திற்கு முன் பதினைந்து நாட்களுக்குள் கூடாது. 'எந்த மாஸத்தில் ச்ராத்தம் வருகிறதோ, அதற்கு முன் ஒரு மாஸம் முழுவதும், அல்லது பதினைந்து தினம் முழுவதுமாவது

க்ஷௌரம் செய்து கொள்ளக் கூடாது. பரான்னத்தையும், ஸ்த்ரீ ஸங்கத்தையும் விட வேண்டும்,' என்று ஸ்ம்ருதி உள்ளது. சக்தியற்றவன் மூன்று நாள் முழுவதும் பரான்னத்தை வர்ஜிக்க வேண்டும். "ச்ராத்த தினத்திற்கு முதல் நாளிலும், மறு நாளிலும், ச்ராத்த தினத்திலும் பரான்னத்தைப் புஜிக்கக் கூடாது. புஜித்தால் பித்ருக்களைக் கொன்ற தோஷம் உடையவனுவான்," என்று.

अत्यन्ताशक्तौ सुहृदाद्यन्नभक्षणेऽपि न दोषः । तथा चात्रिः —सुहृदन्नं गुरोरन्नं यदन्नं मातुलस्य च । स्वसुश्श्वशुरयोरन्नं परान्नं न विदुर्बुधाः इति । श्राद्धं कृत्वा परश्राद्धे नाश्नीयात् । श्राद्धं कृत्वा परश्राद्धे यस्तु भुञ्जीत लोलुपः । पतन्ति पितरस्तस्य लुप्तपिण्डोदकक्रियाः इति स्मरणात् ।

அதிக அசக்தியில் ஸுஹ்ருத் (மித்ரன்) முதலியவரின் அன்னத்தைப் புஜிப்பதிலும் தோஷமில்லை. அவ்விதமே, அத்ரீ:— மித்ரன், குரு, அம்மான், ஸஹோதரீ, மாமனுர், மாமியார், இவர்களின் அன்னம் பரான்னம் அல்ல என்கின்றனர் அறிந்தவர்கள். ச்ராத்தம் செய்த பிறகு பிறனின் ச்ராத்தத்தில் புஜிக்கக் கூடாது. "ச்ராத்தம் செய்து விட்டுப் பிறனின் ச்ராத்தத்தில் எவன் ஆசையை உடையவனுய்ப் புஜிக்கின்றுனே, அவனது பித்ருக்கள் பிண்டோதகங்களை இழந்தவர்களாய் நரகத்தில் விழுகின்றனர்" என்பர்.

गोमयालेपनेन महानसादिभूमिशुद्धिं उदकेन भाजनभाण्डशुद्धिं च कुर्यादित्याह उशना— गोमयोदकैर्भूमि-भाजनभाण्डशौचं कुर्यादिति । महानसादिभूमिसंस्कारानन्तर-कृत्यमाह देवलः — तिलानवकिरेत्तत्र सर्वतो बन्धयेच्च तान् । असुरोपहतं सर्वं तिलैः शुध्येज्जलेन च । ततोऽन्नं बहुसंस्कारं नैकव्यञ्जनभक्ष्यवत् ।

चोष्यपेयसमृद्धं च यथाशक्ति प्रकल्पयेत् इति।

கோமயத்தால் மெழுகுவதால் பாகக்ருஹம் முதலிய இடங்களின் சுத்தியையும், ஜலத்திஞல் பாத்ரங்கள், சமையல் பாத்ரங்கள் இவைகளின் சுத்தியையும் செய்ய வேண்டும், என்கிருர், உசனஸ்:— கோமயம், ஜலம் இவைகளால் பூமி, பாத்ரங்கள், சமையல் பாத்ரங்கள் இவைகளின் சுத்தியைச் செய்ய வேண்டும். பாகக்ருஹம் முதலிய பூமியின் சுத்திக்குப் பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிருர், தேவலர்:— அவ்விடத்தில் எள்ளுகளை இறைக்க வேண்டும். அவைகளை எல்லா இடங்களிலும் இருக்கச் செய்யவேண்டும். அஸுரர்களால் கெடுக்கப்பட்ட ஸ்தலம் எல்லாம் திலங்களாலும், ஜலத்தாலும் சுத்தமாகும். பிறகு, அநேகவிதமாயும், அநேகவ்யஞ்ஜனங்கள் பக்ஷ்யங்களுடையதும், சோஷ்யம், பேயம் இவைகளால் நிறைந்ததுமாகிய அன்னத்தை யதாசக்தி சமைக்க வேண்டும்.

## श्राद्धद्रव्याणि

अत्र द्रव्याण्याह प्रचेताः — कृष्णमाषास्तिलाश्चैव श्रेष्ठास्स्युर्यवशालयः। महायवव्रीहियवा गोधूमा मुद्गसर्षपाः। कृष्णाः श्वेता लोहिताश्च ग्राह्यास्स्युः श्राद्धकर्मणि इति। यवाः - सितशूकाः, शालयः - कलमाद्याः, महायवा व्रीहियवाश्च यवविशेषाः, कृष्णाः - स्थलजाः कृष्णवर्णा व्रीहयः, लोहिताः - रक्तशालयः।

### ச்ராத்தத்திற்கு யோக்யமான வஸ்துக்கள்.

ச்ராத்தத்தில் த்ரவ்யங்களைச் சொல்லுகிருர், ப்ரசேதஸ்:— கறுப்பு உளுந்து, எள், யவம், நெல், பெரியயவம், வ்ரீஹியவம், கோதுமை, பயறு, கடுகு, கறுப்புநெல், வெளுப்பு நெல், சிவப்பு நெல் இவைகள் ச்ராத்தத்தில் க்ரஹிக்கத் தகுந்தவைகள்.

मार्कण्डेयोऽपि — यवव्रीहिसगोधूमास्तिलमुद्गास्ससर्षपाः । प्रियङ्गवः कोविदारा निष्पावाश्चात्र शोभनाः इति । अत्र निष्पावः कृष्णेतरः । चतुर्विंशतिमते तु — कोद्रवान् राजमाषांश्च कुलत्थं चणकं तथा । निष्पावांस्तु विशेषेण पञ्चैतांस्तु विवर्जयेत् इति । अत्र निष्पावाः - कृष्णनिष्पावाः, कृष्णधान्यानि सर्वाणि वर्जयेत् श्राद्धकर्मणि । न वर्जयेत्तिलांश्चैव मुद्गमाषांस्तथैव च इति स्मरणात् । अत्रिः - अगोधूमं च यत् श्राद्धं कृतमप्यकृतं भवेत् । विना माषेण यत् श्राद्धं कृतमप्यकृतं भवेत् । क्रव्यादाः पितरो यस्मादभावे पायसादिनः इति ।

**மார்க்கண்டேயரும்:—** யவம், நெல், கோதுமை, எள், பயறு, கடுகு, ப்ரியங்கு, கோவிதாரம், கறுப்பல்லாத அவரை இவைகள் ச்ராத்தத்துக்கு உரியவைகள். **சதுர்விம்சதி மதத்திலோவெனில்:—** "வரகு, மொச்சை, கொள், கடலை, அவரை இந்த ஐந்தையும் அவச்யம் வர்ஜிக்க வேண்டும்." அவரை என்றது கறுப்பு அவரை. "ச்ராத்தத்தின் கறுப்புத் தான்யங்கள் எல்லாவற்றையும் வர்ஜிக்கவும். ஆனால் எள், பயறு, உளுந்து இவைகளை வர்ஜிக்க வேண்டாம்" என்று ஸ்ம்ருதி இருப்பதால். **அத்ரீ:—** கோதுமையில்லாமலும் உளுந்து இல்லாமலும் ச்ராத்தம் செய்யப்பட்டாலும் அது செய்யப்படாததாகவே ஆகும், பித்ருக்கள் மாம்ஸத்தைப் புஜிப்பவர்களாகையால். அவையில்லாவிடில் பாயஸத்தைப் புஜிப்பவர்கள் ஆகின்றனர்.

वायुपुराणे — बिल्वामलकमृद्वीकपनसाम्रकदाडिमाः । चव्यपालेयकाक्षोटखर्जूराणां फलानि च । कशेरुः कोविदारश्च कालकन्दस्तथा बिसम् । कालेयं कालशाकं च सुनिषण्णं सुवर्चला । कट्फलं किङ्किणी द्राक्षा लकुचं मोचमेव च । कर्कन्धूर्ग्रविकं चारुतिन्दुकं मधुसाह्वयम् । वैकङ्कतं नालिकेरं शृङ्गाटकपरूषकम् । पिप्पली च मरीचञ्च पटोलं बृहतीफलम् । सुगन्धिमत्स्यमांसं च कालेयास्सर्वं एव

च । एवमादीनि चान्यानि स्वादूनि मधुराणि च । नागरं चात्र वै देयं दीर्घमूलकमेव च इति । मृद्वीका - द्राक्षा, लकुचः - लिकुचः, मोचं - कदलीफलम्, कर्कन्धूः - बदरी, बृहती - कण्टकारिका, निदिग्धिका स्पृशी व्याघ्री बृहती कण्टकारिका इत्यमरसिंहेनाभिधानात्, नागरं - शुण्ठी, दीर्घमूलम् ।

வாயுபுராணத்தில்:— பில்வம், நெல்லி, த்ராக்ஷை, பலா, மா, மாதுளை, சவ்யம், பாலேயகம், அக்ஷோடம், பேரீச்சை, இவைகளின் பழங்களும், கசேரு, கோவிதாரம், கறுப்புக் கிழங்கு, பிஸம், குங்குமப்பூ, கருவேப்பிலை, ஸுநிஷண்ணம், ஸுவர்ச்சலை, கட்பலம், கிங்கிணீ, த்ராக்ஷை, எலுமிச்சை, வாழை, இலந்தை, க்ராவகம், திந்துகம், மதுஸம், வைகங்கதம், தேங்காய், ச்ருங்காடகம், வருஷகம், திப்பிலி, மிளகு, புடல், கண்டங்கத்திரி, நல்ல கந்தமுள்ள மத்ஸ்ய மாம்ஸம், எல்லாவிதமான காலேயம், இவை முதலிய மற்றவைகளும், இனியவையும் மதுரமுமானவைகளும், சுக்கு, தீர்க்க மூலம் இவைகளும் ச்ராத்தத்தில் க்ராஹ்யங்கள்.

शंखः — आम्रांश्च कदलीभेदान् मृद्वीकां चव्यदाडिमे । विदार्यां च सुरण्डां च श्राद्धकालेऽपि दापयेत् । लाक्षां मघुघृतं दद्यात्सक्तून् शर्करया सह दद्यात् श्राद्धे प्रयत्नेन शृङ्गार्टक कशेरुकान् ॥ आदित्यपुराणे — मधूकं रामठं चैव कर्पूरं मरिचं गुडम् । श्राद्धकर्मणि शस्तानि सैन्धवं त्रपुषं तथा इति ।

சங்கர்:— மா, வாழையின் பேதங்கள், த்ராக்ஷை, சவ்யம், மாதுளை, விதார்யா, ஸுரண்டை, இவைகளை ச்ராத்தத்தில் கொடுக்க வேண்டும். லாக்ஷை, தேன், நெய், சர்க்கரையோடு சேர்த்த மாவு, ச்ருங்காடகம், கசேரு இவைகளை அவச்யம் முயற்சியுடன் ஸம்பாதித்துக் கொடுக்க வேண்டும். ஆதித்ய புராணத்தில்:—

இலுப்பைப்பூ, பெருங்காயம், பச்சைக் கர்ப்பூரம், மிளகு, வெல்லம், கடலுப்பு, த்ரபுஷம் இவைகள் ச்ராத்தத்துக்கு ச்லாக்யமானவைகள்.

१९. चन्द्रिकायाम् - उर्वारुकं कारवल्ली पटोलं कालपत्रिका। कदली कन्दली चैव श्राद्धे ह्यत्यन्तशोभनाः। गवां क्षीरं घृतं शाकं क्षौद्रमिक्षुरसो गुडम्। कालिङ्गं द्रोणपुष्पी च तण्डुली चक्रवर्तिका। वालुका चर्मवलयं कोशातकिफलं शिशुः। श्राद्धे ह्येतानि देयानि तथा पितृरुचीनि च। नागरं वै सदा देयं दीर्घमूलकमेव च। घृतेन भोजये द्विप्रान् घृतं भूमौ समुत्सृजेत्। शर्कराक्षीरसंयुक्ताः पृथुका नित्यमक्षयाः। सर्पिःस्नातानि सर्वाणि पाके संस्कृत्य योजयेत्। मुन्यन्नानि च सर्वाणि वन्यमूलफलानि च। श्राद्धे ह्येतानि यो दद्यात् पितरः प्रीणयन्ति तम् इति।

சந்த்ரிகையில்:— வெள்ளரி, பாகல், புடல், கருவேப்பிலை, வாழை, கந்தளீ இவைகள் ச்ராத்தத்தில் மிகவும் சிறந்தவைகள். பசுவின் பால், நெய், கறிகாய், தேன், கரும்புரஸம், வெல்லம், காளிங்கம் (நீர்வெள்ளரி), தும்பைப்பூ, சிறுகீரை, சக்ரவர்த்திகை, வாலுகை, சர்மவலயம், கோசாதகிபலம், சிசு இவைகள் ச்ராத்தத்தில் கொடுக்கப்பட வேண்டும். இவை பித்ருக்களுக்கு த்ருப்திகரமானவை. சுக்கு, தீர்க்கமூலம் இவைகளை எப்பொழுதும் கொடுக்க வேண்டும். நெய்யுடன் ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். நெய்யைப் பூமியில் விடவேண்டும். பாலுடன் கூடிய சர்க்கரையும் அவல்களும் அளவற்ற த்ருப்தியைக் கொடுப்பதாகும். நெய்யில் முழுகியதாய் எல்லாவற்றையும் சமையலில் சேர்க்க வேண்டும். ருஷிகளின் அன்னங்கள், காட்டில் உண்டாகும் கிழங்குகள் பழங்கள் இவைகளை எவன் பித்ருக்களுக்கு ச்ராத்தத்தில் கொடுக்கின்றானோ அவனை அவனது பித்ருக்கள் ஸந்தோஷிக்கச் செய்கின்றனர்.

स्मृत्यन्तरे — निर्माल्यमपि गङ्गाम्भ उच्छिष्टमपि माक्षिकम्। निर्यासमपि वा हिङ्गु गुग्गुलुं न परित्यजेत्। उत्तमं चैव गोक्षीरं माहिषं चैव मध्यमम्। औष्ट्रमाजाविकं चैव सर्वथा परिवर्जयेत् इति। विष्णुपुराणेऽपि — प्रशाधिकास्सनीवाराःश्यामाका विविधास्तथा। वन्यौषधिप्रधानास्तु श्राद्धार्हाः पुरुषर्षभ। यवाः प्रियङ्गवो मुद्गा गोधूमा व्रीहयस्तिलाः। निष्पावाः कोविदाराश्च सर्षपाश्चात्र शोभनाः। सकण्टकं च वार्ताकिं पितृभ्यो दत्तमक्षयम् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— நிர்மால்யமாய் இருந்தாலும் கங்கா தீர்த்தத்தையும், உச்சிஷ்டமாய் இருந்தாலும் தேனையும், பிசினுயினும் பெருங்காயத்தையும், குங்கிலியத்தையும் தள்ளக்கூடாது. பசுவின்பால் உத்தமமாகும். எருமையின் பால் மத்யமமாகும். ஒட்டகையின் பால், வெள்ளாடு செம்மறியாடுகளின் பால் இவைகளை எவ்வித்திலும் தள்ள வேண்டும். விஷ்ணுபுராணத்திலும்:— ப்ரசாதிகை, நீவாரம், ச்யாமை, காட்டிலுள்ள ஒஷதிகள் இவைகள் ச்ராத்தத்துக்குச் சிறந்தவை. யவை, ப்ரியங்கு, பயறு, கோதுமை, நெல், எள், அவரை, கோவிதாரம், கடுகு, இவைகள், ச்ராத்தார்ஹமானவை. முள்ளுக் கத்தரிக்காய் பித்ருக்களுக்குக் கொடுக்கப்பட்டால் அக்ஷய பலப்ரதமாகும்.

वायुः — जीरकं मरिचं श्राद्धे पटोलं बृहतीशिशुः। कशेरुः कोविदारश्च पनसोर्वारुदाडिमाः। कूश्माण्डं रक्तनालं च प्रदेयं श्राद्धकर्मणि इति। मनुः — गुलांश्च सूपशाकाद्यान् पयो दधि घृतं मधु। विन्यसेत् प्रयतस्सर्वं भूमावेव समाहितः॥ भक्ष्यं भोज्यं च विविधं मूलानि च फलानि च। हृद्यानि चैव मांसानि पापानि सुरभीणि च। यद्यद्रोचेत विप्रेभ्यस्तत्तद्यादमत्सरः इति।

வாயு:— ஜீரகம், மிளகு, புடல், கண்டங்கத்திரி, சிசு, கசேரு, கோவிதாரம், பலா, வெள்ளரி, மாதுளை, பூஷணி, சிகப்புத் தண்டு இவைகளை ச்ராத்தத்தில் கொடுக்க வேண்டும். மனு:— வெல்லம், பருப்பு, கறிகாய் முதலியவை, பால், தயிர், நெய், தேன் இவை எல்லாவற்றையும், சுத்தனுய்க் கவனம் உடையவனுய்ப் பூமியிலேயே வைக்க வேண்டும். நானுவிதமான பக்ஷ்யம், போஜ்யம், கிழங்கு, பழம், ப்ரியமான மாம்ஸம், வாஸனையுள்ள பானம் இவைகளையும் ப்ராம்ஹணர்களுக்கு எது ருசிக்குமோ, அதையும் ப்ராம்ஹணர்களுக்கு மாத்ஸர்யமில்லாமல் கொடுக்க வேண்டும்.

विज्ञानेश्वरः —श्राद्धयोग्यं व्रीहियवशालिगोधूम मुद्गमाषमुन्यन्न कालशाक शुण्ठीमरीच हिङ्गु कर्पूर गुडसैन्धव सागर पनस नालिकेर बदरी गव्यपयो दधिघृतपायस मधुप्रभृति इति । स्मृत्यन्तरे — कदलीजातयः पञ्च चूतं च पनसद्वयम् । उर्वारुकं च जंबीरं पटोलं द्रोणपत्रकम् । कारवल्लीफलं चैव श्राद्धे ह्यत्यन्तमुन्नतम् । अलर्कस्य फलं पुष्पमार्द्रकं सूरणद्वयम् धात्रीफलं चाच्युतं च श्राद्धे चात्यन्तमुन्नतम् इति । पितृमेधसारेऽपि — कदलीजातिभेदकारवल्लीत्रयपन-सोर्वारुकनिष्पावपटोल मुद्गत्रय नालिकेरफलानि हिङ्गु कालशाक महाशाकक्षुद्रकन्दानि मुन्यन्नानि च प्रशस्यन्ते इति ।

விஜ்ஞானேச்வரர்:— நெய், யவை, சாலிநெல், கோதுமை, பயறு, உளுந்து, ருஷிகளின் அன்னம், கருவேப்பிலை, சுக்கு, மிளகு, பெருங்காயம், கர்ப்பூரம், வெல்லம், கடலுப்பு, ஸாகரம், பலா, தேங்காய், இலந்தை, பசுவின்பால், தயிர், நெய், பாயஸம், தேன் முதலியவைகள் ச்ராத்தத்துக்கு யோக்யம் ஆகும். மற்ருேர் ஸ்ம்ருதியில்:— வாழையின் ஐந்து ஜாதிகள், மா, இரண்டு விதமான பலா, வெள்ளரி, எலுமிச்சை, புடல், தும்பை, காரவல்லீ பழம் இவை ச்ராத்தத்தில் மிகச் சிறந்தவை.

அலர்க்கபலம், புஷ்பம், இஞ்சி, இரண்டு வித கரணைக் கிழங்கு, நெல்லிக்காய், சுண்டை இவை ச்ராத்தத்தில் மிகச் சிறந்தவை. பித்ருமேதஸாரத்திலும்:— வாழையின் எல்லா ஜாதிகள், மூன்று விதமான பாகல், பலா, வெள்ளரி, அவரை, புடல், மூன்று விதமான பயறு, தேங்காய் இவைகளும், பெருங்காயம், கருவேப்பிலை, மஹாசாகம், சிறுகிழங்கு, ருஷிகளின் அன்னம், இவைகளும் ச்ராத்தத்தில் ச்லாக்யங்களாகும்.

मनुः — तिलैर्व्रीहियवैर्माषैरद्भिर्मूलफलेन वा । दत्तेन मासं तृप्यन्ति पितरो विधिवन्नृणाम्। संवत्सरं तु गव्येन पयसा पायसेन वा। कालशाकं महाशाकं खड्गलोहामिषं मधु ।। आनन्त्यायैव कल्पन्ते मुन्यन्नानि च सर्वशः इति । स्मृत्यन्तरे — अन्नेन मासं तृप्तिस्स्यान्मांसैष्षण्मासमेव च । आज्येन वत्सरं तृप्तिर्गोधूमाद्वत्सरत्रयम् इति।

மனு:— எள், நெல், யவை, உளுந்து, ஜலம், கிழங்கு, பழம், இவைகளை விதிப்படி கொடுத்தால் பித்ருக்கள் ஒரு மாஸம் வரையில் த்ருப்தி அடைகின்றனர். பசுவின் பால், பாயஸம், இவைகளால் ஒரு வர்ஷம் வரையில் த்ருப்தி அடைகின்றனர். கருவேப்பிலை, மஹாசாகம், கட்கலோஹ ம்ருகங்களின் மாம்ஸம், தேன், முனியன்னம் இவைகள் அளவற்ற த்ருப்தியைக் கொடுக்கின்றன. மற்றொரு ஸ்ம்ருதியில்:— அன்னத்தால் ஒரு மாஸம் திருப்தி, மாம்ஸங்களால் ஆறு மாஸங்கள் த்ருப்தி. நெய்யினால் ஒரு வர்ஷம் த்ருப்தி. கோதுமையால் மூன்று வர்ஷம் வரையில் த்ருப்தி.

याज्ञवल्क्यः — हविष्यान्नेन वै मासं पायसेन तु वत्सरम् । खड्गामिषं महाशल्कं मधु मुन्यन्नमेव च। लोहामिषं महाशाकं मांसं वाध्राणसस्य च । यद्ददाति गयास्थश्च सर्वमानन्त्यमश्नुते इति । मत्स्यपुराणे — अन्नं तु सदधिक्षीरगोघृतं शर्करान्वितम् । मासं

प्रीणाति सर्वान्वै पितृृनित्याह केशवः इति । कात्यायनः — ग्राम्याभिरोषधीभिर्मासं तृप्तिस्तदलाभे मूलफलैरद्भिर्वा सहान्नेनोत्तरास्तर्पयन्ति इति । उत्तराः – मूलफलादयः, ते सहैव किञ्चिदन्नेन मासं तर्पयन्ति न केवला इत्यर्थः ।

**யாஜ்ஞவல்க்யர்:—** ஹவிரன்னத்தால் ஒரு மாஸம் த்ருப்தி, பாயஸான்னத்தால் ஒரு வர்ஷம் த்ருப்தி. கட்கமாம்ஸம், மஹாசல்கம், தேன், முனியன்னம், லோஹமாம்ஸம், மஹாசாகம், வார்த்ராணஸ மாம்ஸம் இவைகளைக் கையிலிருந்து கொடுத்தால் அவையெல்லாம் அனந்தபலப்ரதமாகும். **மத்ஸ்யபுராணத்தில்:—** தயிர், பால் இவைகளுடன் கூடிய அன்னமும், சர்க்கரையுடன் கூடிய பசுவின் நெய்யும் கொடுக்கப்பட்டால் எல்லாப் பித்ருக்களையும் ஒரு மாஸம் வரையில் த்ருப்தர்களாகச் செய்கின்றது, என்றார் கேசவர். **காத்யாயனர்:—** க்ராமத்தில் உண்டாகும் ஒஷதிகளால் ஒரு மாஸம் வரையில் த்ருப்தி. அவை கிடைக்காவிடில், கிழங்கு, பழம், ஜலம் இவைகளோடு கூடிய அன்னத்துடனும் கொடுக்கப்பட்டால் பித்ருக்களை த்ருப்தர்களாக்குகின்றன. அவைகள் சிறிது அன்னத்துடன் சேர்த்துக் கொடுக்கப்பட்டால் த்ருப்தி செய்விக்கும். தனியாய் என்பது அல்ல.

मार्कण्डेयोऽपि — गोधूमैरिक्षुभिर्मुद्गैस्सतिलैश्चणकैरपि । श्राद्धेषु दत्तैः प्रीयन्ते मासमेकं पितामहाः । विदार्या चैव चूतैश्च बिसैश्शृङ्गाटकैस्तथा । केबुकैश्च तथा कन्दैः कर्कन्धुबदरैरपि । पारेवतैरारुचकैश्चाक्षोटैः पनसैस्तथा । काकोल्या क्षीरकाकोल्या तथा पिण्डातकैश्शुभैः । लाक्षाभिश्च शलाभिश्च त्रपुषोर्वारु चित्फलैः । सर्षपा राजशाकाभ्यामिङ्गुदैराजजम्बुभिः । प्रियालामलकैर्मुख्यैः फल्गुभिश्च तिलंबकैः । वेत्राङ्कुरैस्तालकन्दै-श्चक्रिकाक्षीरिकाचवैः । वोचैस्समोचैर्लिकुचैस्तथा वै बीजपूरकैः । मुञ्जातकैः पद्मफलैः

भक्ष्यभोज्यैस्सुसंस्कृतैः । राजषाडबचोष्यैश्च त्रिजातकसमन्वितैः । दत्तैस्तु मासं प्रीयन्ते श्राद्धेषु पितरो नृणाम् इति । विदारी - कृष्णपर्णी, भूकूश्माण्डफलम्, केबुकं - क्षीराख्यं शाकम्, कन्दः - सूरणः, उर्वारु - स्वादुकर्कटी, चित्फलः - तिक्तकर्कटी, सर्षपा इति दीर्घश्छान्दसः । राजशाकं - कृष्णसर्षपः, इङ्गुदी - तापसतरुः, प्रियालः - राजादनम्, चक्रिका - चिञ्चा, क्षीरका - फलाध्यक्षः, मोचा - कदली, लिकुचः - जम्बीरफलतुल्यखर्वफलवान् गुल्मविशेषः, रागषाडबः - पानविशेषः, त्रिजातकं - एलालवङ्गगन्धपत्राणि ।

மார்க்கண்டேயரும்:— கோதுமை, கருப்பு, பயறு, எள், கடலை, இவைகளை ச்ராத்தத்தில் கொடுத்தால் பித்ருக்கள் ஒரு மாஸம் வரையில் த்ருப்தராகின்றனர். விதாரி, மா, தாமரைத் தண்டு, ச்ருங்காடகம், கேபுகம், கிழங்கு, இலந்தை, மற்ரெரு இலந்தை, பாரேவதம், ஆருசகம், அக்ஷோடம், பலா, காகோலி, க்ஷீரகாகோலி, பிண்டானகம், லாகைஷ, சலை, கக்கரி, வெள்ளரி, கசப்பு வெள்ளரி, கடுகு, கறுப்புக் கடுகு, இங்குதீ, உயர்ந்த நாவல், ப்ரியாளம், நெல்லி, பெரியதும் சிறியதுமாகிய திலம்பகம், பிரப்பங் கிழங்கு, பனங்கிழங்கு, சக்ரிகா, க்ஷீரிகா, வோசம், வாழை, எலுமிச்சை மாதிரியுள்ள சிறிய செடியின் பழம், மாதுளை, முஞ்ஜாதகம், பத்மபலம், நன்ருகச் சமைக்கப்பட்ட பக்ஷ்யபோஜ்யங்கள், ராகஷாடபம், (பானங்கள்) சோஷ்யம், ஏலம், லவங்கம், ஜாதிபத்ரி முதலியவைகளுடன் கூடியவைகளாய் இவைகளைக் கொடுத்தால் பித்ருக்கள் ஒரு மாஸம் த்ருப்தியடைகின்றனர்.

प्रचेताः — हरितमुद्गककृष्णमाषश्यामाक-प्रियङ्गुगोधूमेक्षुविकारांश्च दद्यात् इति । विष्णुरपि — शाकश्यामाकप्रियङ्गु नीवारमुद्गैर्मासं प्रीयन्ते, संवत्सरं तु पयसा तद्विकारैश्च इति । पयसा - गव्यपयसा । यत्तु प्रीणातीत्यनुवृत्तौ पैठीनसिनोक्तम् पायसेन

षण्मासान् इति, नीरसपयस्सिद्धपायसविषयमिति चन्द्रिकायाम्। तत्रैव — कालशाकं महाशाकं मांसं वार्ध्राणसस्य च। विषाणवर्जं ये खड्गा आसूर्यं तांस्तु भुञ्जते इति।

ப்ரசேதஸ்:— கடுக்காய், பயறு, கறுப்பு உளுந்து, சாமை, ப்ரியங்கு, கோதுமை, கரும்பின் விகாரங்கள் இவைகளைக் கொடுக்கலாம். விஷ்ணுவும்:— கறி, சாமை, ப்ரியங்கு, நீவாரம், பயறு இவைகளால் ஒரு மாஸம் த்ருப்தியடைகின்றனர். பசுவின் பால், அதன் விகாரங்கள் இவைகளால் ஒரு வர்ஷம் த்ருப்தி என்று. ப்ரீணுதி என்று அனுவர்த்திக்கும் பொழுது, 'பாயஸத்தால் ஆறு மாஸம் த்ருப்தி' என்று பைடீனஸியின் வசனமோவெனில், ரஸமில்லாத பாலினுல் செய்யப்பட்ட பாயஸத்தைப் பற்றியது என்று சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையிலேயே:— கருவேப்பிலை, மஹாசாகம், வார்த்ராணஸமாம்ஸம், கொம்பில்லாத கட்கமாம்ஸம், இவைகள் கொடுக்கப்பட்டால் பித்ருக்களுக்கு ஸூர்யனுள்ள வரையில் த்ருப்தி.

उक्तानां तृप्तितारतम्याभिधायकस्मृतीनां तत्तारतम्यानुसारेण श्राद्धकर्तुः फलेऽपि तारतम्यं भवतीत्येवं तात्पर्यमवगन्तव्यम्। अत एव हारीतेनैकमुदाहृत्योक्तम् — मधुना परमप्रीतास्सर्वान् कामान् दिशन्ति च इति। अत्र व्यवस्थामाह पुलस्त्यः — मुन्यन्नं ब्राह्मणस्योक्तं मांसं क्षत्रियवैश्ययोः। मधु प्रधानं शूद्रस्य सर्वेषां चाविरोधि यत् इति। मुन्यन्नं - नीवारादि, मधु - माक्षिकम्, प्रधानम् - समग्रफलदम्, एतत्त्रितयव्यतिरिक्तं यदविरोधि - अप्रतिषिद्धम्, तत् सर्वेषामित्यर्थः। श्राद्धे मांसस्य कलौ निषिद्धत्वान्नेह तदभिधीयते, तच्च कलियुग धर्मप्रकरणे प्रतिपादितम्।

மேலே சொல்லப்பட்ட த்ருப்தியில் தாரதம்யத்தைச் சொல்லும் ஸ்ம்ருதி வசனங்களுக்குப் பதார்த்தங்களின்

தாரதம்யத்தை அனுஸரித்து ச்ராத்தம் செய்பவனுக்குப் பலனிலும் தாரதம்யம் வருகிறதென்று தாத்பர்யம் அறியத்தக்கது. ஆகையாலேயே, ஹாரீதரால்:— ஒன்றை உதாஹரணமாகக் காட்டிச் சொல்லப்பட்டுள்ளது:— தேனினுல் மிகவும் ப்ரீதியடைந்தவர்களாய் (பித்ருக்கள்) எல்லாக் காமங்களேயும் கொடுக்கின்றனர் என்று. இவ்விஷயத்தில் வ்யவஸ்தையைச் சொல்லுகிறுர், புலஸ்த்யர்:— ''ருஷிகளின் அன்னமாகிய நீவாரம் (புல்லரிசி) முதலியது ப்ராம்ஹணனுக்குச் சொல்லப் பட்டுள்ளது. மாம்ஸம் க்ஷத்ரியனுக்கும் வைச்யனுக்கும் சொல்லப்பட்டுள்ளது. தேன் சூத்ரனுக்கு ப்ரதானம் என்று சொல்லப்பட்டுள்ளது. விரோதமில்லாத பதார்த்தம் எல்லோருக்கும் ப்ரதானமானது'' என்று. ப்ரதாநம் = முழு ப்ரயோஜனத்தையும் கொடுக்கக் கூடியது. இம்மூன்றுகளேத் தவிர்த்து விரோதமற்றதாய் உள்ளது எதுவோ அது எல்லோருக்கும் விதிக்கப்பட்டது என்பது பொருள். ச்ராத்தத்தில் மாம்ஸத்தைக் கொடுப்பதென்பது கலியுகத்தில் நிஷித்தமானதால் அதைப் பற்றி இங்கு சொல்லவில்லே. அதைப் பற்றிக் கலியுகதர்மப்ரகரணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

## श्राद्धे वर्ज्यद्रव्याणि।

अथ श्राद्धे वर्ज्यद्रव्याणि । महाभारते मदालसावाक्यम् — यच्चोत्कोचादिना प्राप्तं पतिताद्यदुपार्जितम्। अन्यायकन्याशुल्कोत्थं द्रव्यं चात्र विगर्हितम्। पित्रर्थं मे प्रयच्छेति ह्युक्त्वा यच्चाप्युपाहृतम्। वर्जनीयं सदा सद्भिस्तत्तद्वै श्राद्धकर्मणि इति।

## ச்ராத்தத்தில் வர்ஜிக்க வேண்டிய த்ரவ்யங்கள்.

இனி ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்த வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன. மஹாபாரதத்தில் மதாலஸையின் வாக்யம்:— லஞ்சம் முதலியதால் அடையப்பட்டதும், பதிதனிடமிருந்து ஸம்பாதிக்கப்பட்டதும், அந்யாயத்தால்

ஸம்பாதிக்கப்பட்டதும், பெண்ணை விற்றுக் கிடைத்ததும் ஆகிய த்ரவ்யம் ச்ராத்தத்தில் நிஷித்தமாகும். ச்ராத்தத்துக்காக எனக்குக் கொடு, என்று யாசித்து ஸம்பாதிக்கப்பட்டதும், எப்பொழுதும் ஸாதுக்களால் ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்தது.

व्यासोऽपि — वेदविक्रयजं दुष्टं स्त्रिया यच्चार्जितं धनम्। न देयं पितृदेवेभ्यो यच्चक्रीवदुपार्जितम्। अश्राद्धेयानि धान्यानि कोद्रवाः पुलकास्तथा। हिङ्गु द्रव्येषु शाकेषु कालानलशुभास्तथा इति। कोद्रवः - कोरदूषकः, पुलकः - पुलाकः, छान्दसो ह्रस्वः, संस्कारद्रव्येषु हिङ्ग्वाख्यं द्रव्यमश्राद्धेयम् कालः कृष्णार्जकः, अनलः - चित्रकः, शुभः - शुभाख्यश्शाकविशेषः, शाकेष्वेतानि शाकान्यश्राद्धेयानीत्यर्थः। हिङ्गुद्रव्यस्य विधिप्रतिषेधयोर्दर्शनाद्विकल्पः। एव मन्यत्रापि यत्र यत्र विधिप्रतिषेधावेकस्य दृश्येते, तन्त्र विकल्पो वेदितव्य इति चन्द्रिकामाधवीयादौ व्यवस्थापितम्।

29. வ்யாஸரும்:— வேதவிக்ரயத்தால் ஸம்பாதிக்கப்பட்டதும், ஸ்த்ரீயினால் ஸம்பாதிக்கப் பட்டதும், கழுதையால் ஸம்பாதிக்கப்பட்டதும் ஆகிய தனம் எதுவோ அது ச்ராத்தத்தில் கொடுக்கத் தகுந்ததல்ல. ச்ராத்தத்துக்கு அர்ஹமல்லாத தான்யங்கள் இவை:— வரகு, புலாகம், பெருங்காயம், கறிகாய்களுள் காலம், அனலம், சுபம் என்ற இவைகள். பெருங்காயத்திற்கு விதி, விலக்கு இரண்டும் இருப்பதால் சேர்க்கலாம் அல்லது சேர்க்காமலும் இருக்கலாம். இவ்விதம் மற்ற விஷயத்திலும். எதில் எங்கெங்கு விதியும் விலக்கும் காணப்படுகின்றனவோ, அவ்விடத்தில் விகல்பம் என்று சந்த்ரிகை, மாதவீயம் முதலிய க்ரந்தங்களில் வ்யவஸ்தை சொல்லப்பட்டுள்ளது.

भरद्वाजोऽपि — मुद्गाढकीमाषवर्जं द्विदलानि दद्यात् इति। यानि पाषाणयन्त्रभ्रमणेन द्राक्षो द्विधा भिद्यन्ते, तानि धान्यानि

द्विदलानि । मुद्गः - कृष्णहरितेतरः, आढकी - तुवरी, माषः - राजमाषः, अलसान्द्रनाम्ना प्रसिद्धः । तथा हि अलसान्द्रो राजमाषः इति वैजयन्तीनिघण्टुः । एतैर्विना द्विदलानि दद्यादित्यर्थः । मरीचिः —कुलत्था वरकाः श्राद्धे न देयाश्चैव कोद्रवाः । कटुकानि च सर्वाणि विरसानि तथैव च । यावनालानपि तथा वर्जयन्ति विपश्चितः इति । चन्द्रिकायाम् — श्राद्धे न देयाः पालंक्या स्तथानिष्पावकोद्रवाः । मसूरक्षारवार्ताक कुलुत्थशणशिग्रवः इति । पालङ्क्या - गन्धद्रव्यविशेषः, क्षारः - यवक्षारादिः, वार्ताकं - क्षुद्रवार्ताकी-संज्ञिकबृहतीफलम्, कण्टकारिकाख्यबृहतीफलात् किञ्चित् स्थूलम् ।

பாரத்வாஜரும்:— பயறு, துவரை, உளுந்து இவைகளைத் தவிர்த்து மற்ற த்விதளங்களைக் கொடுக்கவும். த்விதளம் = இயந்திரத்தினால் இரண்டாக உடைபடும் தான்யங்கள். பயறு என்றது கறுப்பு பச்சை பயறைத் தவிர்த்தது. மாஷம் (உளுந்து) என்பது மொச்சை. இவைகளைத் தவிர்த்த மற்ற த்விதளங்களைக் கொடுக்கலாம் என்பது பொருள். மரீசி:— கொள்ளு, வரகு, கோத்ரவம் இவைகளை ச்ராத்தத்தில் கொடுக்கக்கூடாது. கசப்புள்ள எல்லாப் பதார்த்தங்களையும், ரஸமில்லாதவைகளையும் கொடுக்கக் கூடாது. அவ்விதம் யாவநாளங்களையும் அறிந்தவர் வர்ஜிக்கின்றனர். சந்த்ரிகையில்:— பாலங்க்யம் என்ற வாஸனை த்ரவ்யம், நிஷ்பாவம், கோத்ரவம், மஸூரம், யவக்ஷாரம், கண்டங்கத்தரியை விடப் பெரியதும் கத்தரியை விடச் சிறியதுமாகிய வார்த்தாகம், கொள்ளு, சணல், முருங்கை இவைகள் ச்ராத்தத்துக்கு அர்ஹங்களல்ல.

विष्णुरपि — भूतृणशिग्रूराजसर्षपसुरसार्जक कूश्माण्डालाबु-वार्ताकपालङ्क्यातण्डुलीयक कुसुम्भ महिषीक्षीराणि वर्जयेत् इति । भूतृणं - शाकविशेषः । सुरसा - निर्गुण्डी । मत्स्योऽपि — कुसुम्भं बीजपूरं च कपित्थं मधुकातसी । श्राद्धे नैतानि देयानि पितृभ्यः

प्रीतिमिच्छता इति। बीजपूरः - मातुलङ्गः, कपित्थं - कपित्थफलम्, मधुकः - यष्टिमधुकम्। विष्णुपुराणेऽपि — अकृताग्रयणं यच्च धान्यजातं नरेश्वर। राजमाषानणूंश्चैव मसूरांश्च विवर्जयेत्। अलाबुं गृञ्जनं चैव लशुनं पिण्डमूलकम्। गान्धारककरम्भाणि लवणान्यौषराणि च। आरक्ताश्चैव निर्यासाः प्रत्यक्षलवणानि च। वर्ज्यान्येतानि वै श्राद्धे यच्च वाचा न शस्यते। क्षीरमेकशफानां यदौष्ट्रमाविकमेव च। मातङ्गं माहिषं चैव वर्जयेत् श्राद्धकर्मणि इति।

**விஷ்ணுவும்:—** பூத்ருணம், முருங்கை, பெருங்கடுகு, நொச்சி, அர்ஜகம், பூஷணி, சுரை, கத்திரி, பாலங்க்யம், சிறுகீரை, குஸும்பம், எருமைப்பால் இவைகள் வர்ஜிக்கத் தகுந்தவைகள். **மத்ஸ்யரும்:—** குஸும்பம், மாதுளை, விளா, அதிமதுரம், அதஸீ இவைகளை ச்ராத்தத்தில் பித்ருக்களுக்குக் கொடுக்கக்கூடாது. **விஷ்ணு புராணத்திலும் :—** ஆக்ரயணம் செய்யப்படாத தான்யம் எதுவோ, மொச்சை, அணு, மஸூரம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். சுரை, பூண்டுவகைகள், பிண்டமூலகம், காந்தாரகம், கரம்பம், களர் பூமியில் உண்டாகிய உப்பு, சிவப்புப் பிசின்கள், ப்ரத்யக்ஷலவணம், இவைகள் ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்தவைகள். எது நிந்திக்கப்பட்டுள்ளதோ அதுவும் வர்ஜிக்கத் தகுந்தது. ஒற்றைக் குளம்புப் பசுக்களின் பாலும், ஒட்டகை, ஆடு இவைகளின் பால், யானை, எருமை இவைகளின் பாலும் ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்தவை.

**शङ्खः —** शीतपाकीमपि श्राद्धे कृष्णजीरकमेव च। वर्जयेल्लवणं सर्वं तथा जम्बूफलानि च इति। लवणं - कृतलवणम् सैन्धवं लवणं चैव तथा मानससम्भवम्। पवित्रे परमे ह्येते प्रत्यक्षमपि नित्यशः। कृतं तु लवणं सर्वं वंशाग्रं च विवर्जयेत् इति तेनैवाभिधानात्। सुमन्तुः — वर्ज्याश्चाभिषवा नित्यं शतपुष्पा गवेधुका। जंबीरकं फलं वर्ज्यं कोविदारं च नित्यशः। अभिषवाः - शुष्कास्सन्तः क्लिन्नाः।

சங்கர்:— "சீதபாகி, கருஞ்சீரகம், எல்லாவித உப்பு, நாவல் பழம் இவைகளை வர்ஜிக்க வேண்டும்." உப்பு என்றது செய்கை உப்பு. "கடலுப்பும், மானஸத்தில் உண்டாகிய உப்பும் பரம சுத்தமாகும். ப்ரத்யக்ஷமாகவும் எப்பொழுதும் உபயோகிக்கலாம். செய்கை உப்பு எல்லாவற்றையும், மூங்கில் முளையையும் வர்ஜிக்க வேண்டும்" என்று அவரே சொல்லியுள்ளார். ஸுமந்து:— காய்ந்து பிறகு ஜலத்தால் பதப்படுத்தப்பட்டது, சதபுஷ்பை, கவேதுகை, எலுமிச்சை, கோவிதாரம் இவைகள் வர்ஜிக்கத் தகுந்தவைகள்.

स्मृत्यन्तरे — गान्धारिकपटोलानि श्राद्धकर्मणि वर्जयेत्। औषरं लवणं श्राद्धे कूश्माण्डं बृहतीफलम्। श्लेष्मातकं च शिग्रुं च प्रत्यक्षलवणं त्यजेत्। ताम्रपात्रस्थितं गव्यं क्षीरं च लवणान्वितम्। घृतं लवणसंयुक्तं सर्वदा परिवर्जयेत्। पायसे लवणैर्योगो न दोषस्तद्युतं पचेत् इति। पाद्मेऽपि — पयसा पाचयेदन्नं लवणं तत्र योजयेत् इति। पायसे लवणसंयोगः शिष्टाचारविरोधादुपेक्ष्य इत्याहुः।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— காந்தாரிகம், புடல், ஊஷர பூமியில் உண்டாகிய உப்பு, பூஷணி, கண்டங்கத்தரி, ச்லேஷ்மாதகம், முருங்கை, ப்ரத்யக்ஷ உப்பு இவைகளை வர்ஜிக்க வேண்டும். தாம்ரபாத்ரத்தில் வைத்த பால், உப்புடன் கூடிய பால், உப்புடன் கூடிய நெய், இவைகளை எப்பொழுதும் வர்ஜிக்க வேண்டும். பாயஸத்தில் உப்பைச் சேர்ப்பது தோஷமாகாது. அதைச் சேர்த்துச் சமைக்கலாம். பாத்மபுராணத்திலும்:— "பாலினால் அன்னத்தைப் பாகம் செய்ய வேண்டும். அதில் உப்பைச் சேர்க்கலாம்" என்று. பாயஸத்தில் உப்பைச் சேர்ப்பது என்பது சிஷ்டாசார விருத்தமாகியதால் ஆதரிக்கத் தகுந்ததல்ல, என்கின்றனர்.

उशना — नालीकाशणछत्राककुसुम्भालाबुविड्भवान्। कुम्भी कम्बुकवृन्ताककोविदारांश्च वर्जयेत्। वर्जयेच्च गृही श्राद्धे काञ्जिकां

पिण्डमूलकम् । करञ्जं येऽपि चान्ये वै रसगन्धोत्कटास्तथा इति । पुराणेऽपि — वांशं करीरं सुरसा सर्जकं भूतृणादिकम् । अवेदोक्ताश्च निर्यासाः लवणान्यौषराणि च । श्राद्धकर्मणि वर्ज्यानि याश्च नार्यो रजस्वलाः इति । वांशं करीरं - वंशाङ्कुरम्, अवेदोक्ता निर्यासाः - वेदे ग्राह्यत्वेनोक्त निर्यासव्यतिरिक्त निर्यासाः लोहित निर्यासाः व्रश्चनप्रभवाश्चेति यावत् । अथो खलु य एव लोहितो यो वा व्रश्चनान्निर्येषति तस्य नाश्यं काममन्यस्य इति श्रुतेः । लवणान्यौषराणि - कृतलवणादीनीति यावत् । याश्च नार्यो रजस्वलाः - या नार्यस्त्रिरात्रादूर्ध्वमप्यनिवृत्तरजस्कास्ता वर्ज्या इत्यर्थः ।

உசனஸ்:— நாளிகை, சணல், நாய்க்கொடை, குஸும்பம், சுரை, மலஎருவினால் உண்டாகும் கறிகாய், கும்பீ, கம்புகம், வ்ருந்தாகம், கோவிதாரம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். க்ருஹஸ்தன் ச்ராத்தத்தில் கஞ்சி, பிண்டமூலம், கரஞ்சம், மற்ற அதிக ரஸமும் கந்தமும் உள்ளவைகள் இவைகளை வர்ஜிக்க வேண்டும். புராணத்திலும் — மூங்கில் முளை, ஸுரஸா, ஸர்ஜகம், பூத்ருணம் முதலியவை வேதத்தில் சொல்லப்படாத பிசின்கள், களர் உப்பு, இவை சிராத்தத்தில் தள்ளத் தக்கவை. ரஜஸ்வலா ஸ்த்ரீயும், அவ்வாறே சிவந்த பிசின், வெட்டியதால் உண்டான பிசின், தவிர்க்கத்தக்கது. அவ்வாறு ச்ருதி உள்ளது. களர் உப்பு - செயற்கை உப்பு முதலியவை ரஜஸ்வலா ஸ்த்ரீகள் மூன்று நாட்களுக்குப் பிறகும் ரஜோநி வ்ருத்தி இல்லாதவர்.

भरद्वाजोऽपि — नक्तोद्धृतं तु यत्तोयं पल्वलाम्बु तथैव च । स्थलीकूश्माण्डफलकं ब्रह्मकन्दं च पिप्पली । तण्डुलीयकशाकं च माहिषं च पयो दधि । शिम्बुकानि करीराणि कोविदारं गवेधुकम् । कुलुत्थं शणजम्बीरकरम्भाणि तथैव च । कूश्माण्डमार्द्रपुष्पं च शिग्रुः

क्षारं तथैव च। नीरसानि च सर्वाणि भक्ष्यभोज्यानि यानि च। एतानि नैव देयानि सर्वस्मिन् श्राद्धकर्मणि इति। माहिषं घृतं तु देयम् पयो दधीति विशेषेणाभिहितत्वात् इति चन्द्रिकायाम्।

**பரத்வாஜரும்:—** ''ராத்ரியில் எடுக்கப்பட்ட ஜலமும், குட்டையின் ஜலமும், மேட்டுப் பூசனிக்காய், ப்ரஹ்மகந்தம், திப்பிலீ, சிறுகீரை, எருமைப் பால், தயிர், சிம்புகம், முளைகள், கோவிதாரம், கும்மட்டி, கொள்ளு, சணல், எலுமிச்சை, கரம்பம், பூசனி, ஆர்த்ரபுஷ்பம், முருங்கை, மிளகாய், ரஸமற்ற எல்லா வஸ்துக்களும், பக்ஷ்ய போஜ்யங்களும், இவைகள் எல்லா ச்ராத்தத்திலும் கொடுக்கத் தகாதவைகள்'', என்று. எருமையின் நெய்யைக் கொடுக்கலாம், ''பால், தயிர்'' இவைகளைக் கொடுக்கக் கூடாதென்று விசேஷித்துச் சொல்லியிருப்பதால், என்று சந்த்ரிகையில் உள்ளது.

स्मृत्यन्तरे — अतिशुक्तोग्रलवणं विरसं भावदूषितम्। राजसं तामसं चैव हव्यकव्येषु वर्जयेत् इति। ब्रह्माण्डपुराणे — आसनारूढमन्नाद्यं पादोपहतमेव च। अमेध्यादागतैः स्पृष्टं शुक्तं पर्युषितं च यत्। द्विस्स्विन्नं परिदग्धं च तथैवाग्रेऽवलेहितम्। शर्कराकीटपाषाणैः कैशैर्यच्चाप्युपद्रुतम्। पिण्याकं मथितं चैव तथाऽतिलवणं च यत्। सिद्धाः कृताश्च ये भक्ष्याः प्रत्यक्षलवणीकृताः। दग्धावदुष्टाश्च तथा दुष्टैश्चोपहतास्तथा। वाससा चावधूतानि वर्ज्यानि श्राद्धकर्मणि इति। यदन्नमवस्रवणान्तया पचिक्रियया सिद्धं मार्दवार्थं पुनरुदकं निनीयावस्रावणान्तं पच्यते, तदन्नं द्विःस्विन्नम् न तु यत्सिद्धमौष्ण्यार्थमग्नावधि श्रियते। अध्युष्णं सर्वमन्नं स्यात् इति इति वचनादौष्ण्यार्थं पुनरधिश्रयणाभ्यनुज्ञानात्। अग्रावलेहितम् - यदर्थमुत्पादितं तन्निवृत्तेः प्रागन्येनास्वादितम्। सिद्धाः कृता इति। अभक्ष्यतया सिद्धा आमलकादयः वटकादिरूपेण भक्ष्यतया कृताः,

प्रत्यक्षेण लवणेन लवणीकृताः, एतत् कृतभक्ष्यविशेषणम्, प्रत्यक्षग्रहणाद्दध्यादिना वस्त्वन्तरेण प्रच्छादितलवणेन लवणीकृता ग्राह्या इति गम्यते।

**மற்றோர் ஸ்ம்ருதியில்:—** அதிகமாகப் புளித்ததும், அதிக உப்புள்ளதும், ரஸம் இல்லாததும், மனதிற்கு ருசிக்காததும், ராஜஸமும், தாமஸமுமான வஸ்துக்களை ஹவ்ய கவ்யங்களில் வர்ஜிக்க வேண்டும். **ப்ரம்ஹாண்டபுராணத்தில்:—** "ஆஸனத்தில் வைக்கப் பட்ட அன்னம் முதலியதும், காலால் தொடப்பட்டதும், அசுத்தமான இடத்திலிருந்து வந்தவர்களால் தொடப்பட்டதும், புளித்ததும், பழையதும், இரண்டு தடவை பாகம் பண்ணப்பட்டதும், பொசுக்கப்பட்டதும், முன்னால் சாப்பிடப்பட்டதும், சுக்கான் புழு, கல், மயிர் இவை முதலியவைகளால் கெடுக்கப்பட்டதும், பிண்ணாக்கு, மோர் (ஜலம் விடப்படாத மோர்), அதிக உப்பு உள்ளது, முன்னாளில் தயார் செய்யப்பட்ட பக்ஷயங்கள், நேராக உப்புடன் சேர்க்கப்பட்டதும், கருகிக் கெட்டுப் போனதும், தோஷமுள்ளவர்களால் தொடப்பட்டதும், வஸ்த்ரத்தினால் விசிறப்பட்டதும், இவைகளெல்லாம் ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்தவை". த்வி:ஸ்விந்நம் = எந்த அந்நம் கஞ்சி வடிக்கும் வரையில் சமைக்கப்பட்டு, ம்ருதுவாவதற்காக மறுபடி ஜலத்தை விட்டுக் கஞ்சி வடிக்கும் வரையில் சமைக்கப்படுகிறதோ அது. சமைத்துப் பிறகு உஷ்ணமாயிருப்பதற்காக அக்னியில் வைக்கப்படுவது அல்ல. "அன்னமெல்லாம் உஷ்ணமாகவே இருக்க வேண்டும்" என்ற வசனத்தால், மறுபடியும் அடுப்பின் மேல் வைப்பது ஒத்துக் கொள்ளப்பட்டிருப்பதால். அக்ராவலேஹிதம் = யாருக்காகச் சமைக்கப்பட்டதோ அவர் சாப்பிடுவதற்கு முன் அன்யனால் புஜிக்கப்பட்டது. ஸித்தா: க்ருதா இதி = பக்ஷிக்கமுடியாத நெல்லிக்காய் முதலியவைகள் வடாம்

முதலியதாகச் செய்யப்பட்டவைகள். ப்ரத்யக்ஷ (லவண) என்று சொல்லியிருப்பதால் தயிர் முதலியதுடன் உப்பைச் சேர்த்துச் செய்யப்பட்ட பக்ஷ்யாதிகள் க்ராஹ்யங்கள்.

श्राद्धे कूश्माण्डादिनिषिद्धद्रव्योपादाने प्रत्यवाय उक्तः स्मृत्यन्तरे — कूश्माण्डं माहिषं क्षीरमाढक्यो राजसर्षपाः । चणका राजमाषाश्च घ्नन्ति श्राद्धमसंशयम् इति । चन्द्रिकायाम् — पिण्डालुकं च तुण्डीरं करमर्दांश्च नालिकाम् । कूश्माण्डं बहुबीजानि श्राद्धेः त्वा व्रजत्यधः इति । बहुबीजानि - मातुलङ्गफलानि ।

ச்ராத்தத்தில் பூசனி முதலிய நிஷித்த வஸ்துக்களை க்ரஹிப்பதில் தோஷம் சொல்லப்பட்டது. ஓர் ஸ்ம்ருதியில்:— பூசனி, எருமைப்பால், துவரை, பெரிய கடுகு, கடலை, மொச்சை இவைகள் ச்ராத்தத்தைக் கெடுப்பவைகள், ஸம்சயமில்லை. சந்த்ரிகையில்:— பிண்டாலுகம், துண்டீரம், கரமர்த்தம், நாளிகம், பூசனி, மாதுளை இவைகளை ச்ராத்தத்தில் கொடுத்தால் நரகத்தையடைவான்.

षट्त्रिंशन्मते — क्षीरादि माहिषं वर्ज्यमभक्ष्यं यच्च कीर्तितम् इति । आदिशब्देन माहिषं दधि गृह्यते, अभक्ष्यं यच्च कीर्तितमिति - नित्यभोजने यदभक्ष्यं कीर्तितं तच्च सर्वं श्राद्ध कर्मणि न देयमित्यर्थः । नित्यभोजने यद्वर्ज्यं तन्नित्यभोजनप्रकरणे प्रतिपादितम् । (पित्रोः श्राद्धे तु सम्प्राप्ते दद्यात्तक्रं स मूढधीः । तत्तक्रं रक्तमित्याहुर्गव्यकं वाऽपि गौतमः) ।

ஷட்த்ரிம்சன்மதத்தில்:— எருமையின் பால் முதலியது வர்ஜிக்கத் தகுந்தது. அபக்ஷ்யம் என்று எது சொல்லப்பட்டு உள்ளதோ, அதுவும் வர்ஜ்யம். ஆதி சப்தத்தால் எருமைத் தயிர் சொல்லப்படுகிறது. 'அபக்ஷ்யம் யச்ச கீர்த்திதம்' என்பதால் ப்ரதிதினம் செய்யப்படும் போஜனத்தில் எது அபக்ஷ்யம் என்று

சொல்லப்பட்டுள்ளதோ; அவையெல்லாம் ச்ராத்தத்தில் கொடுக்கத்தகாதவை என்பது பொருள். நித்ய போஜனத்தில் எது வர்ஜ்யமோ, அது போஜன ப்ரகரணத்தில் (ஆஹ்னிக காண்டத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது. (மாதா பித்ரு ச்ராத்தத்தில் எந்த மூடன் மோரைக் கொடுக்கின்றானோ, பசுவினுடையது ஆயினும், அந்த மோர் ரக்தமெனப்படுகிறது, என்றார் கௌதமர்)

देवलः — इष्टापूर्तमृताहेषु दर्शवृद्ध्यष्टकासु च। पात्रेभ्यस्तेषु कालेषु देयं नैव कुभोजनम् इति । चशब्दान्महालयादि विशिष्टकालेष्वपि कुभोजनं न देयमिति समुच्चीयते । एवं च नित्यश्राद्धादौ दरिद्रकर्तृके कुभोजनाभ्यनुज्ञाऽवगम्यते । यमः — भक्ष्यं भोज्यं तथा पेयं यत्कञ्चित् पच्यते गृहे। न भोक्तव्यं पितॄणां तदनिवेद्य कथञ्चन इति।

தேவலர்:— "இஷ்டம், பூர்த்தம், ச்ராத்தம், அமை, நாந்தீ, அஷ்டகை இவைகளில் யோக்ய ப்ராம்ஹணர்களுக்குத் தாழ்ந்த போஜனத்தைக் கொடுக்கக் கூடாது", என்று. 'ச' என்பதால் மஹாளயம் முதலிய சிறந்த காலங்களிலும் தாழ்ந்த போஜனத்தைக் கொடுக்கக் கூடாது என்பது சேர்க்கப்படுகிறது. இவ்விதமிருப்பதால், தரித்ரன் செய்யும் நித்ய ச்ராத்தம் முதலியதில் தாழ்ந்த போஜனத்தைக் கொடுப்பது ஒப்புக் கொள்ளப்படுகிறது. யமன்:— "வீட்டில் சமைக்கப்படும் பக்ஷ்யம், போஜ்யம், பானம் இவை முதலிய வஸ்துக்கள் எல்லாவற்றையும் பித்ருக்களுக்குக் கொடாமல் எவ்விதத்தாலும் புஜிக்கக் கூடாது" என்று.

पक्वान्नोपहतिपरिहाराय पाकस्थानादितो बहिष्कार्यानाह स एव— मद्यपः स्वैरिणी या च परपूर्वापतिस्तथा । नैव श्राद्धे निरीक्षेरन्नापात् प्रभृति कर्हिचित् इति । आपस्तम्बः — पाकं कर्तुं

तण्डुलादीनां पिठरादौ प्रक्षेपः, तत्प्रभृति भोजननिष्पत्तिपर्यन्तम्। कचित् - भोजन स्थाने अन्यत्र वा स्थितान् भोज्यपदार्थान् भुञ्जानांश्च विप्रान् श्राद्धकर्मणि यथा मद्यपादयो नाभिवीक्षेरन् तथा ते दूरत एवापसरणीया इत्यर्थः।

சமைக்கப்படும் அன்னம் முதலியதற்கு அசுத்தி ஏற்படாமல் இருப்பதற்காக வெளியேற்றக் கூடியவர்களைச் சொல்லுகிறார், **யமன்:—** கள் குடிப்பவன், வ்யபிசாரிணீ, பரபூர்வாபதி இவர்கள் ச்ராத்தத்தை ஒரு பொழுதும் பார்க்கக் கூடாது. ஆவாபம் முதற் கொண்டு, ஆவாப: = சமைப்பதற்காக அரிசி முதலியதைப் பானை முதலியதில் போடுவது. அது முதற்கொண்டு போஜனம் முடியும் வரையில். க்வசித் = போஜனம் செய்யுமிடத்திலோ, வேறு இடத்திலோ இருக்கின்ற போஜ்ய பதார்த்தங்களையும், சாப்பிடும் ப்ராம்ஹணர்களையும். ச்ராத்தத்தில் எப்படி கள் குடிப்பவன் முதலியவர்கள் பார்க்கமாட்டார்களோ, அவ்விதம் அவர்கள் தூரத்தில் விலக்கத் தகுந்தவர்கள், என்பது பொருள்.

मनुरपि —— चण्डालश्च वराहश्च कुक्कुटः श्वा तथैव च। रजस्वला च चण्डश्च नेक्षेरन्नश्नतो द्विजान्। होमे प्रदाने भोज्ये च यदेभिरभिवीक्ष्यते। दैवे कर्मणि पित्र्ये वा तद्गच्छत्ययथातथम् इति। उशना अपि —— विड्वराहमार्जारकुक्कुटनकुलशूद्ररजस्वलाशूद्राभर्तारश्च दूरतोऽपनेतव्याः इति। चन्द्रिकायाम् —— कुक्कुटो विड्वराहश्च काकः श्वा च बिडालकः। वृषलीपतिश्च वृषळः षण्डो नारी रजस्वला। एते तु श्राद्धकाले वै वर्जनीयाः प्रयत्नतः इति।

**மனுவும்:—** சண்டாளன், பன்றி, கோழி, நாய், ரஜஸ்வலை, நபும்ஸகன், இவர்கள் சாப்பிடும் ப்ராம்ஹணர்களைப் பார்க்கக் கூடாது. ஹோமத்திலும், கொடுப்பதிலும், போஜனத்திலும், இவர்களால் எது

பார்க்கப்படுகிறதோ, தெய்வகர்மத்திலோ, பித்ருகர்மத்திலோ, அது விபரீதமாக ஆகிறது. உசனஸ்ஸும்:— ஊர்ப்பன்றி, பூனை, கோழி, கீரி, சூத்ரன், ரஜஸ்வலை, சூத்ராபதி இவர்கள் தூரத்தில் விலக்கத் தகுந்தவர்கள். சந்த்ரிகையில்:— கோழி, ஊர்ப்பன்றி, காக்கை, நாய், பூனை, வ்ருஷளீபதி, சூத்ரன், நபும்ஸகன், ரஜஸ்வலை இவர்கள் ச்ராத்த காலத்தில் முயற்சியுடன் விலக்கத் தகுந்தவர்கள்.

व्यासः —— काषायवासाः कुष्ठी वा पतितो भ्रूणहाऽपि वा। सङ्कीर्णयोनिर्विप्रश्च सम्बन्धी पतितस्य वा। वर्जनीयास्तथैवैते निवापे समुपस्थिते इति। निवापः - पितृभ्यो दानम्, पितृदानं निवापस्स्यात् इत्यमरसिंहेनाभिधानात्। उपस्थितशब्दात् पाकोपक्रमप्रभृति वर्जनीया इति गम्यते। स्मृत्यन्तरे —— उदक्यासूतिकाशौचिमृताहारैश्च वीक्षिते। श्राद्धे सुरा न पितरो भुञ्जते पुरुषर्षभ। आदौ माहिषिकं दृष्ट्वा मध्ये तु वृषलीपतिम्। अन्ते वार्धुषिकं दृष्ट्वा निराशाः पितरो गताः। नीचैर्दृष्टं तथा स्पृष्टं पतितैः प्रतिलोमजैः। आशौचवद्भिरपरैः शूद्रान्नं चैव वर्जयेत्। शूद्रैः स्पृष्टं च दृष्टं च तद्धृतं तन्निमन्त्रितम्। तद्दत्तं च तदुच्छिष्टं शूद्रान्नं षड्विधं स्मृतम् इति।

வ்யாஸர்:= "காஷாயம் தரித்தவன், குஷ்டரோகமுடையவன், பதிதன், கர்ப்பத்தைக் கொன்றவன், ஸங்கீர்ண ஜாதியான ப்ராம்ஹணன், பதிதர்களுடன் ஸம்பந்தித்தவன், இவர்கள் ச்ராத்தத்தில் விலக்கத் தகுந்தவர்கள்", என்று. நிவாப: = பித்ருக்களுக்குக் கொடுப்பது. அவ்விதமே அமரத்திலுள்ளது. "உபஸ்திதே" என்றிருப்பதால் சமையல் ஆரம்பம் முதல் விலக்கத் தகுந்தவர்கள், என்று அறியப்படுகிறது. ஓர் ஸ்ம்ருதியில்:— ரஜஸ்வலை, ப்ரஸவித்தவள், ஆசௌசமுடையவள், பிணத்தைச் சுமப்பவன், இவர்களால் ச்ராத்தம் பார்க்கப்பட்டால் தேவர்களும் பித்ருக்களும்

புஜிப்பதில்லை. முதலில் மாஹிஷிகனையும் (பார்யையால் ஜீவிப்பவன்), நடுவில் வ்ருஷளீ பதியையும், கடைசியில் வட்டியால் ஜீவிப்பவனையும் பார்த்தால், பித்ருக்கள் ஆசையற்றவர்களாய்த் திரும்புகின்றனர். நீசர்கள், பதிதர்கள், ப்ரதிலோமஜர்கள், ஆசௌசமுள்ளவர்கள், இவர்களால் பார்க்கப்பட்டதும், தொடப்பட்டதும், சூத்ரான்னமும் வர்ஜிக்கத் தகுந்தது. சூத்ரர்களால் பார்க்கப்பட்டது, அவர்களால் தொடப்பட்டது, அவர்ளால் தரிக்கப்பட்டது, அவர்களால் அழைக்கப்பட்டது, அவர்களால் கொடுக்கப்பட்டது, அவர்கள் சாப்பிட்ட மிகுதி, இவைகள் ஆறும் சூத்ரான்னம் எனப்படும்.

यमः — खञ्जः काणः कुणिः श्वित्री दातुः प्रैषकरो भवेत्। न्यूनाङ्गो वातिरिक्ताङ्गस्तमप्यपनयेत्ततः इति । देवलोऽपि — बीभत्सुमशुचिं नग्नं मत्तं धूर्तं रजस्वलाम्। नीलकाषायवसनं छिन्नकर्णं च वर्जयेत् इति । ब्रह्माण्डपुराणेऽपि — नग्नादयो न पश्येयुः श्राद्धमेतत्कदाचन। श्राद्धे गच्छन्ति तैर्दृष्टे पितरोऽथ पितामहाः इति। नग्नः - वेदपरित्यागी, आदिशब्देन वैदिककर्मानुष्ठान त्यागिनो गृह्यन्ते।

யமன்:— கால்நொண்டி, ஒற்றைக்கண்ணன், கைநொண்டி, குஷ்டீ, கொடுப்பவனின் வேலைக்காரன், அங்கக் குறைவுள்ளவன், அதிக அங்கமுடையவன், இவர்களையும் அவ்விடமிருந்து வெளியேற்ற வேண்டும். தேவலரும்:— வெறுக்கக் கூடியவன், அசுத்தன், வஸ்த்ரமில்லாதவன், மதமுள்ளவன், சூதாடுபவன், ரஜஸ்வலை, நீலவஸ்த்ரமுடையவன், காஷாய வஸ்த்ரமுடையவன், காது அறுந்தவன் இவர்களை வர்ஜிக்க வேண்டும். ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— ''நக்னன் முதலியவர்கள் ச்ராத்தத்தை ஒரு காலும் பார்க்கக் கூடாது. அவர்களால் ச்ராத்தம் பார்க்கப்பட்டால் பித்ருக்கள், பிதாமஹர்கள் எல்லோரும் போய் விடுகிறார்கள்'' என்று.

நக்னன் = வேதத்தை விட்டவன். ஆதி சப்தத்தால் வைதிக கர்மானுஷ்டானத்தை விட்டவர்கள் சொல்லப்படுகின்றனர்.

तथा च तत्रैवोक्तम् — सर्वेषामेव वर्णानां त्रयी संवरणं यतः। ये वै त्यजन्ति तां मोहात् ते वै नग्ना इति स्मृताः। वृथा जटी वृथा मुण्डी वृथाचारश्च यो नरः। महापातकिनो ये च ते वै नग्ना इति स्मृताः इति।

அவ்விதமே அவ்விடத்திலேயே சொல்லப்பட்டுள்ளது :— எல்லா வர்ணத்தாருக்கும் மூன்று வேதமும் ஆவரணமாகையால், அம்மூன்று வேதத்தையும் எவர்கள் அறியாமையால் விடுகின்றனரோ, அவர்கள் நக்னர் எனப்படுகின்றனர். வீணுக ஜடைதரிப்பவன், வீணுக மொட்டை, வீணுன ஆசாரமுடையவன், மஹாபாதகம் செய்தவன் என்ற இவர்களும் நக்னர்கள் எனப்படுகின்றனர்.

यदि तु नग्नादयः श्राद्धार्थं सम्पादितमन्नादिकं पश्येयुस्तदा किं कार्यमित्यपेक्षायां तत्रैवोक्तम् - अन्नं पश्येयुरेते तु यदि वै हव्यकव्ययोः। उत्स्रष्टव्यं प्रधानार्थं संस्कारस्त्वापदि स्मृतः इति । प्रधानार्थं - अग्नौकरण ब्राह्मणभोजन पिण्डदानात्मक प्रधानसंपादनार्थम्, अन्नमेतैर्वीक्षितमुत्सृज्यान्यदन्नं सम्पाद्यम्, अन्नान्तरसंपादनासामर्थ्ये तु नोत्स्रष्टव्यम्, किं तु नग्नादिदर्शनजनितदोषापाकरणार्थं स्मृतस्संस्कारः कर्तव्य इत्यर्थः।

நக்னன் முதலியவர்கள் ச்ராத்தத்திற்காகத் தயாரிக்கப்பட்ட அன்னம் முதலியதைப் பார்ப்பார்களாகில், அப்பொழுது என்ன செய்ய வேண்டும் ? எனில், அவ்விடத்திலேயே சொல்லப்பட்டுள்ளது:— ''ஹவ்ய கவ்யங்களில் அன்னத்தை முன் சொல்லியவர்கள் பார்ப்பார்களாகில், முக்யமான கார்யத்துக்குள்ளதைப் பரிஹரிக்க வேண்டும். ஆபத்காலத்தில் சுத்தியைச் செய்யலாம்,'' என்று. ப்ரதானார்த்தம் = அக்னியில் ஹோமம்,

ப்ராம்ஹண போஜனம். பிண்டதானம் என்ற முக்ய கர்மத்தைச் செய்வதற்கு வேண்டியது. இவர்களால் பார்க்கப்பட்ட அன்னத்தைத் தள்ளி, வேறு அன்னம் ஸம்பாதிக்கப்பட வேண்டும். வேறு அன்னத்தைத் தயாரிக்க ஸாமர்த்தியமில்லாவிடில், அந்த அன்னத்தைத் தள்ள வேண்டாம். ஆனால், நக்னன் முதலியவர்கள் பார்த்ததால் உண்டாகிய தோஷத்தைப் போக்குவதற்காக விதிக்கப்பட்ட சுத்தியைச் செய்ய வேண்டும், என்பது பொருள்.

संस्कारोऽपि तत्रैवोक्तः — हविषामथ पक्वानामशक्तौ स्यादवर्जनम्। मृत्संपृक्ताभिरद्भिश्च प्रोक्षणं तु विधीयते। सिद्धार्थकैः कृष्णतिलैः कार्यं चाप्यवकीरणम्। गुरुसूर्याग्निबस्तानां दर्शनं तु प्रयत्नतः इति। शुद्ध्यन्तरमाह जमदग्निः — शुद्धवत्योऽथ कूश्माण्ड्यः पावमान्यस्तरत्समाः। पूतेन वारिणा दर्भैरन्नदोषानपानुदेत् इति। एतोन्विन्द्रं स्तवाम इत्याद्या ऋचश्शुद्धवत्यः, यद्देवा देवहेलनम् इत्याद्याः कूश्माण्ड्यः, पवमानस्सुवर्जनः इत्याद्याः पावमान्यः, तरत्समन्दी धावति इत्याद्यास्तरत्समाः शुद्धवत्यादिमन्त्राभिमन्त्रितमुदकं दर्भैरुपादायान्नदोषा-पनोदनार्थमवोक्षणं कुर्यादित्यर्थः।

சுத்தி ப்ரகாரமும் அவ்விடத்திலேயே சொல்லப்பட்டுள்ளது:— பக்வமான ஹவிஸ்ஸுகளை வர்ஜிக்கச் சக்தியில்லாவிடில் வர்ஜிக்க வேண்டாம். மண்ணுடன் கூடிய ஜலத்தினால் ப்ரோக்ஷணம் விதிக்கப்படுகிறது. வெண்கடுகு, கறுப்பு எள், இவைகளை இறைக்கவும் வேண்டும். குரு, ஸூர்யன், அக்னி, ஆடு இவைகளின் தர்சனம் அவச்யம் செய்யப்படவேண்டும். மற்றோர் சுத்தியைச் சொல்லுகிறார், ஜமதக்னி:— சுத்தவதிகள், கூச்மாண்டிகள், பாவமானிகள், தரத்ஸமங்கள் என்ற மந்த்ரங்களால் சுத்தமாகிய ஜலத்தால், தர்ப்பங்களைக் கொண்டு ப்ரோக்ஷித்தால் அன்ன

தோஷங்களைப் போக்கலாம். சுத்தவதிகள் = ஏதோன்விந்த்ரம், என்பது முதலிய மந்த்ரங்கள், கூச்மாண்டிகள் = யத்தேவா தேவஹேளநம், என்பது முதலியவைகள். பாவமனிகள் = பவமா நः ஸுவர்ஜந: என்பது முதலியவைகள், தரத்ஸமங்கள் = தரத்ஸம்ந்தீ தாவதி, முதலியவைகள். சுத்தவதி முதலிய மந்த்ரங்களால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தைத் தர்ப்பங்களால் எடுத்து அன்ன தோஷத்தைப் போக்குவதற்காக ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும், என்பது பொருள்.

सुमन्तुरपि – चण्डालाद्यवेक्षितमन्नमभोज्यमन्यत्र मृद्भस्मभिरस्योदकस्पर्शनात् इति । केशाद्युपहतौ तु नित्यभोजनप्रकरणोक्ता शुद्धिर्द्रष्टव्या। अलं प्रसक्तानुप्रसक्त्या।

ஸுமந்துவும்:— சண்டாளன் முதலியவர்களால் பார்க்கப்பட்ட அன்னம் புஜிக்கத் தகுந்ததல்ல. மண், விபூதி இவைகளுடன் கூடிய ஜலத்தால் இதை ப்ரோக்ஷிக்காவிடில். மயிர் முதலியதால் அசுத்தியானால் எனில், நித்யபோஜன ப்ரகரணத்தில் (ஆஹ்னிக காண்டத்தில்) சொல்லப்பட்ட சுத்தியைப் பார்க்கவும். ப்ரஸங்கத்தில் உள்ளதைத் தொடர்ந்து வரும் ப்ரஸங்கம் போதும்.

## निमन्त्रितेभ्यो देयद्रव्याणि

निमन्त्रितेभ्यो यद्देयं तदाह कात्यायनः — तैलमुद्वर्तनं स्नानं दन्तधावनमेव च । कृत्तरोमनखेभ्यस्तु दद्यात्तेभ्यः परेऽहनि इति । उत्तरेद्युः पूर्वाह्णे कृत्तरोमनखेभ्यो निमन्त्रितेभ्यः स्नानसाधनतैलादिकं दन्तकाष्ठं च दद्यादित्यर्थः ।

**வரிக்கப்பட்டவர்களுக்குக் கொடுக்க வேண்டிய வஸ்துக்கள்.**

வரிக்கப்பட்டவர்களுக்கு எது கொடுக்கப்பட வேண்டுமோ அதைச் சொல்லுகிருர், காத்யாயனர்:— ''எண்ணெய், அரைப்பு, ஸ்நானம், தந்தகாஷ்டம் இவைகளை வபனம் செய்து கொண்டவர்களான அவர்களுக்கு முன்நாளில் கொடுக்கவேண்டும்,'' என்று. மறு நாளில், காலையில் வபனம் செய்து கொண்ட வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களுக்கு ஸ்நானத்திற்கு ஸாதனமான தைலம் முதலியதையும், தந்தகாஷ்டத்தையும் கொடுக்க வேண்டும், என்பது பொருள்.

बोधायनोऽपि — श्वः करिष्यामीति ब्राह्मणान्निमन्त्रयेत तान् श्वोभूते श्मश्रुकर्माभ्यञ्जनैः यथोपपातं संपूज्य स्वयमाप्लुत्य शुचौ देशे इति। यत्तु प्रचेतसोक्तम् — तैलमुद्वर्तनं स्नानं दद्यात् पूर्वाह्ण एव तु। श्राद्धभुग्भ्यो नखश्मश्रुच्छेदनं तु न कारयेत् इति, तन्निषिद्धक्षुरकर्मतिथिविषयमिति चन्द्रिकामाधवीयादौ व्यवस्थापितम्।

போதாயனரும்:— ''நாளைய தினம் செய்யப் போகிறேன், என்று ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டும். மறுநாளில் அவர்களை வபனம், அப்யஞ்ஜனம் இவைகளால் கூடியமட்டில் பூஜித்து, தானும் ஸ்நானம் செய்து, சுத்தமான ஸ்தலத்தில்'' என்று. ஆனல், ப்ரசேதஸ்:— ''எண்ணெய், அரைப்பு, ஸ்நானம் இவைகளைப் பூர்வாஹ்ணத்திலேயே ச்ராத்தம் புஜிப்பவர்களுக்குக் கொடுக்க வேண்டும். வபனத்தைச் செய்விக்கக் கூடாது'' என்ருரே எனில், அது க்ஷௌரத்துக்கு நிஷித்தமான திதியைப் பற்றியது, என்று சந்த்ரிகை, மாதவீயம் முதலியவைகளில் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது.

सुधीविलोचने तु — श्मश्रुकमैकोद्दिष्टविषयमित्येके, अष्टकायामित्यपरे, विहितमपि शिष्टाचाराभावान्नान्यश्राद्धेषु वपनमिति वृद्धाः, अनेन निमन्त्रितः स्वयमेव क्षौरी चेत् श्राद्धार्ह एव, मृता वा एषा त्वगमेध्या यत्केशश्मश्रु मृतामेव त्वचममेध्या मपहत्य यज्ञियो भूत्वा मेधमुपैति इति श्रुतेः त्रयोदशवारं तूष्णीं निमज्ज्य शुष्कवस्त्रं परिधाय विधिवत् पुनः स्नानं कृत्वा शुद्धो भवति इति । आश्वलायनः — ताम्बूलकृसरादीनि दत्वाऽभ्यज्य स्नातेष्वेतेषु स्नातः सति । अभ्यज्य स्नापयित्वा एतेषु निमन्त्रितेषु स्नातेषु कर्ता स्नातः इत्यर्थः ।

ஸுதீவிலோசனத்திலோவெனில்:— ''வபனம் என்பது ஏகோத்திஷ்டத்தைப் பற்றியது, என்று சிலர். அஷ்டகையில் என்று மற்றவர். விதிக்கப்பட்டிருந்தாலும் சிஷ்டாசார மில்லாததால் மற்ற ச்ராத்தங்களில் வபனம் இல்லை, என்று பெரியோர்கள். இதனால் வரிக்கப்பட்டவன் தானாகவே வபனம் செய்து கொண்டிருந்தால் ச்ராத்தத்திற்கு அர்ஹன் தான். ''மயிர், மீசை என்பது இறந்த தோலாகும். அது அசுத்தம். ஆகையால், அந்தத் தோலை வபனத்தால் போக்கினால் யஜ்ஞார்ஹனாய் ஆகிறான்,'' என்று வேதமிருப்பதால். பதின்மூன்று தடவை மந்த்ரமில்லாமல் முழுகி, உலர்ந்த வஸ்த்ரம் தரித்து, விதிப்படி மறுபடி ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான், என்று. ஆச்வலாயனர்:— ''தாம்பூலம், க்ருஸரம் முதலியவைகளைக் கொடுத்து, ப்ராம்ஹணர்கள் அப்யஞ்ஜனம் செய்து ஸ்நானம் செய்த பிறகு ஸ்நானம் செய்தவனாய்'' என்று. அப்யஞ்ஜனம், ஸ்நானம் இவைகளைச் செய்வித்து, ப்ராம்ஹணர்கள் ஸ்நானம் செய்த பிறகு, கர்த்தா ஸ்நானம் செய்யவேண்டும், என்பது பொருள்.

अभ्यङ्गस्यावश्यकत्वमुक्तं पुराणेऽपि । पादशौचं विनाऽभ्यङ्गं मुद्रं मन्त्रं विना कृतम् । तत सर्वं त्रिजदे तुभ्यं यच्च श्राद्धमदक्षिणम् इति ।

मार्कण्डेयः — अह्नष्षट्सु मुहूर्तेषु गतेषु त्वथ तान् द्विजान्। प्रत्येकं प्रेषयेत् प्रेष्यान् प्रदायामलकोदकम् इति । द्वादशघटिकाभ्य ऊर्ध्वं निमन्त्रितब्राह्मणानां स्नानार्थं परिचारकाणां हस्तेष्वामलककल्कं प्रदाय निमन्त्रितब्राह्मणेभ्यः प्रत्येकं दीयतामिति तान् द्विजान्प्रति परिचारकान् प्रेषयेदित्यर्थः ।

அப்யங்கம் அவச்யம் என்பது சொல்லப்பட்டுள்ளது, புராணத்தில்:— "பாதப்ரக்ஷாளனம், அப்யங்கம், பயறு, உளுந்து, இவைகள் இல்லாமல் செய்த ச்ராத்தமெல்லாம் உனக்கு, தக்ஷிணையில்லாமல் செய்யப்பட்ட ச்ராத்தமும் உனக்கு, ஓ த்ரிஜடே !" மார்க்கண்டேயர்:— பகலின் ஆறு முஹூர்த்தங்கள் சென்ற பிறகு, அந்த ப்ராம்ஹணர்களைக் குறித்து ஒவ்வொருவருக்கும் நெல்லிக்கனியுடன் கூடிய ஜலத்தைக் கொடுத்து வேலைக்காரர்களை அனுப்பவேண்டும்," என்று. பன்னிரண்டு நாழிகைக்கு மேல், வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களுக்கு ஸ்நானத்திற்குப் பரிசாரகர்களின் கையில் நெல்லிக்கனி கல்கத்தைக் கொடுத்து, வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களுக்குத் தனித் தனி கொடுக்க வேண்டும், என்று அந்த ப்ராம்ஹணர்களைக் குறித்துப் பரிசாரகர்களை அனுப்ப வேண்டும், என்பது பொருள்.

चन्द्रिकामाधवीययोरत्र व्यवस्था कृता — एतदामलककल्कदानं प्रतिषिद्धतैलासु तिथिषु द्रष्टव्यम्, तास्वप्यमावास्याव्यतिरिक्तासु देयम्, धात्रीफलैरमावास्यायां न स्नायात् इत्यामलकोदकस्नानस्याप्यमावास्यायां निषेधात्। अनिषिद्धतैलायां तु तिथौ तैलादिदानम् इति। तथा च स्मृत्यन्तरे — निमन्त्रितानां श्राद्धेषु निषिद्धदिवसेषु तु । अभ्यञ्जनं नैव दद्यात् दद्याद्धात्रीफलोदकम् । तच्चामायां भानुवारे सप्तम्यां परिवर्जयेत् इति ।

சந்த்ரிகா, மாதவீய க்ரந்தங்களில் இவ்விஷயத்தில் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது:- ''இந்த நெல்லிக்கனி கல்கத்தைக் கொடுப்பதென்பது தைலத்துக்கு நிஷேதம் சொல்லப்பட்டுள்ள திதிகளில், என்று அறியவும். அத்திதிகளிலும் அமாவாஸ்யை அல்லாத திதியில் நெல்லிக் கல்கத்தைக் கொடுக்க வேண்டும். அமையில் நெல்லிக்கனிகளால் ஸ்நானம் செய்யக் கூடாது, என்று, நெல்லிக்கனி ஸ்நானத்திற்கும் அமையில் நிஷேத மிருப்பதால். தைலத்துக்கு நிஷேத மில்லாத திதியில் தைலம் முதலியதைக் கொடுக்கவும்,'' என்று. அவ்விதமே, ஓர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவர் களுக்குத் தைலத்துக்கு நிஷேதமுள்ள தினங்களில் தைலத்தைக் கொடுக்கக் கூடாது. நெல்லிக்கல்கத்தைக் கொடுக்க வேண்டும். அதையும், அமையிலும், ஞாயிற்றுக்கிழமையிலும், ஸப்தமியிலும் வர்ஜிக்க வேண்டும்.

अत्र केचित् — अष्टकायामथाष्टम्याममायां श्राद्ध कर्मणि । पित्र्यस्य तु विकारेषु तैलाभ्यङ्गो विधीयते इति वचनमनुसरन्तः श्राद्धेषु निषिद्धदिनेऽपि तैलाभ्यङ्गमाचरन्ति, यथोचितमत्र ग्राह्यम् । तैलादिदाने विशेषो देवलेन दर्शितः — तैलमुद्वर्तनं स्नानं स्नानीयं च पृथग्विधम् । पात्रैरौदुम्बरैर्दद्या द्वैश्वदैविक पूर्वकम् इति । उदुम्बरम् - ताम्रम् ।

53. இவ்விஷயத்தில் சிலர்:— ''அஷ்டகை, அஷ்டமி, அமை இவைகளில் ச்ராத்த விசேஷங்களிலும், மற்ற ச்ராத்தங்களிலும் தைலாப்யங்கம் விதிக்கப்படுகிறது'' என்று வசனத்தைச் சொல்லுகிறவர்களாய் ச்ராத்தங்களில் நிஷித்த தினத்திலும் தைலாப்யங்கம் செய்து கொள்ளுகிறார்கள். இவ்விஷயத்தில் உசிதமாகியதை க்ரஹிக்கவும். தைலம் முதலியதைக் கொடுப்பதில் விசேஷம், தேவலரால் சொல்லப்பட்டுள்ளது:—

எண்ணெய், அரைப்பு, ஸ்நானத்துக்குரியது, பலவிதமான வாஸனை த்ரவ்யம், இவைகளைத் தாம்ரபாத்ரங்களால் விச்வேதேவ ப்ராம்ஹணரை முன்னிட்டுக் கொடுக்க வேண்டும்.

श्राद्धदेशे प्रकल्प्यानि द्रव्याणि पुराणेऽभिहितानि । उपमूलं सकृल्लूनान् कुशांस्तत्रोपकल्पयेत् । यवांस्तिलान् बृसीः कांस्यमापः शुद्धैस्समाहृताः । पार्णराजतताम्राणि पात्राणि स्युस्स-मिन्मधु ।पुष्पधूपसुगन्धादि क्षौमं सूत्रं च मेक्षणम् इति । बृसीः - निमन्त्रितानामुपवेशनार्थन्यासनानि, व्रतिनामासनं बृसी इत्यमरसिंहेनाभिहितत्वात्, कांस्यम् - कांस्यमयं भाजनम् कांस्यपार्णराजतताम्रभाजनेषु यथासामर्थ्यमुपकल्पनं कार्यम्, सुगन्धादीत्यादिग्रहणादक्षतदीपादिकं गृह्यते । मेक्षणं - काष्ठमयी दर्वी, तिला जर्तिला ग्राह्याः, तदसम्भवे ग्रामग्राह्याः । जर्तिललक्षणमुक्तं सत्यव्रतेन - जर्तिलास्तु तिलाः प्रोक्ताः कृष्णवर्णा वनेभवाः इति । स्मृत्यन्तरेऽपि - जर्तिलाश्चैव ते ज्ञेयाः अकृष्टोत्पादितास्तु ये इति । यत्त्वापस्तम्बेनोक्तम् — अटव्यां ये समुत्पन्ना अकृष्टफलितास्तथा । ते वै श्राद्धे पवित्रास्तु तिलास्तेन तिला इति, तत् अपशवो वा अन्ये गो अश्वेभ्यः पशवः, असत्रं वा एतद्यदछन्दोमम् इत्यादिवत् तेषां प्रशंसापरम् ।

ச்ராத்த ஸ்தலத்தில் வைக்கவேண்டிய வஸ்துக்கள், புராணத்தில் சொல்லப்பட்டுள்ளன:— "வேருக்குச்சமீபத்தில் ஒரேதடவை அறுக்கப்பட்ட குசங்களை அங்கு வைக்க வேண்டும். யவை, எள், ஆஸனங்கள், வெண்கலப்பாத்ரம், சுத்தமானவர்களால் கொண்டு வரப்பட்ட ஜலம், இலை, வெள்ளி, தாம்ரம் இவைகளாலாகிய பாத்ரங்கள், ஸமித்து, தேன், புஷ்பம், தூபம், நல்ல சந்தனம் முதலியவை, வெண்பட்டு, கயிறு, மேக்ஷணம்'' என்று. ப்ருஸீ = வரிக்கப்பட்டவர்களுக்கு உட்காருவதற்கான ஆஸனம். வெண்கலம் முதலிய பாத்ரங்களில் கிடைத்ததை

வைக்க வேண்டும். ஸுகந்தாதி என்பதில் உள்ள ஆதி சப்தத்தால் அக்ஷதை, தீபம் முதலியவை சொல்லப் படுகின்றன. மேக்ஷணம் = மரக் கரண்டி. திலங்கள் என்றது ஜர்த்தில திலங்கள். அது கிடைக்காவிடில் க்ராமத்தில் உண்டாகிய திலத்தை க்ரஹிக்கவும். ஜர்த்தில திலத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது, ஸத்யவ்ரதரால், "கறுப்பு நிறமுள்ளவையும் காட்டில் தானே உண்டாகியவையு மாகிய திலங்கள் ஜர்த்திலங்கள், எனப்படும்" என்று. ஓர் ஸ்ம்ருதியிலும்:— உழப்படாத பூமியில் விளைந்த திலங்கள் ஜர்த்திலங்கள் என்றியப்பட வேண்டும். ஆனால் ஆபஸ்தம்பர்:— காட்டில் உழப்படாத பூமியில் விளைந்துள்ள திலங்கள் எவையோ அவைகள் ச்ராத்தத்தில் சுத்தமானவைகள், மற்ற திலங்கள் திலங்களல்ல, என்று சொல்லியுள்ளாரே எனில், அது "கோ, அச்வங்களைத் தவிர்த்த மற்ற பசுக்கள் பசுக்கள் அல்ல," "சந்தோமம் இல்லாதது ஸத்ரமல்ல" என்பது முதலியது போல் அவைகளை ப்ரசம்ஸிப்பதில் தாத்பர்யமுள்ளது.

अत एव ब्रह्माण्डपुराणे — यतिस्त्रिदण्डी करुणा राजतं पात्रमेव च । दौहित्रं कुतपः कालश्छागः कृष्णाजिनं तथा । गौराः कृष्णास्तथाऽऽरण्यास्तथैव त्रिविधास्तिलाः । पितॄणां तृप्तये सृष्टा दशैते ब्रह्मणा स्वयम् इति । दौहित्रलक्षणमुक्तं याज्ञवल्क्येन — वनस्पतिगते सोमे या गौस्संचरते तृणम् । तत्क्षीरसंभवघृतं दौहित्रमिति कथ्यते इति ।

பிரும்ஹாண்டபுராணத்தில்:— த்ரிதண்டி ஸன்யாஸி, கருணை, வெள்ளிப்பாத்திரம், தௌஹித்ரம், குதபகாலம், வெள்ளாடு, கிருஷ்ணாஜிநம், வெள்ளை எள், அரண்யத்தில் விளைந்த எள், இவை பத்தும் கருப்பு எள், பிரும்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்று உள்ளது. யாஜ்ஞவல்க்யரால் தௌஹித்ர லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது:— அமையில் எந்தப் பசு புல்லை மேய்கின்றதோ, அந்தப் பசுவின் பாலினின்றும் உண்டாகிய நெய் "தௌஹித்ரம்" எனப்படுகிறது.

बृसीषु विशेषमाह मनुः — कुतपं चासने दद्यात् इति। कुतपः - नेपालदेश प्रभवरोमादिनिर्मितः कम्बलः। तदुक्तं स्मृत्यन्तरे — मध्याह्नः खड्गपात्रं च तथा नेपालकम्बलः। रूप्यं दर्भास्तिला गावः दौहित्रश्चाष्टमः स्मृतः। पापं कुत्सितमित्याहुस्तस्य सन्तापकारणम्। अष्टावेते यतस्तस्मात् कुतपा इति विश्रुताः इति। चन्द्रिकायाम् — नेपालकम्बलाभावे मेषादिलोमनिर्मितकम्बलमात्रमपि पीठाद्यपेक्षया प्रशस्तम्, आसनोपकल्पनं भोजनार्थोपवेशनस्थानेषु कार्यम्, उपक्लृप्तासनेषु दर्भास्तरणं च कार्यम् सति।

ஆஸனங்களில் விசேஷத்தைச் சொல்லுகிறார், மனு:— ''ஆஸனத்திற்குக் குதபத்தைக் கொடுக்க வேண்டும்'' என்று. குதபம் = நேபாள தேசத்தில் மயிர் முதலியதால் செய்யப்பட்ட கம்பளம். அது சொல்லப்பட்டுள்ளது ஓர் ஸ்ம்ருதியில்:— மத்யாஹ்ன காலம், கட்க ம்ருகத்தின் கொம்பினுல் செய்யப்பட்ட பாத்ரம், நேபாள கம்பளம், வெள்ளி, தர்ப்பங்கள், எள், பசுமாடு, தௌஹித்ரம் இந்த எட்டும் குதபங்கள் எனப்படும். பாபத்தைக் குத்ஸிதம் என்பார்கள். அதைத் தபிக்கச் செய்வதால் இவ்வெட்டும் குதபங்கள் எனப்படுகின்றன. சந்த்ரிகையில்:— நேபாள கம்பளமில்லாவிடில், ஆட்டு மயிர் முதலியதால் செய்யப்பட்ட கம்பளமும் பலகை முதலிய ஆஸனத்தை விடச் சிறந்ததாகும். ஆஸனத்தைப் போடுவதென்பது போஜனத்துக்காக உட்காருமிடங்களில் செய்யத் தகுந்தது, போடப்பட்ட ஆஸனங்களில் தர்ப்பங்களையும் பரப்பவேண்டும்.

तथा च मनुः - आसनेषूपक्लृप्तेषु बर्हिष्मत्सु पृथक् पृथक्। उपस्पृष्टोदकान् सम्यग्विप्रांस्तेषूपवेशयेत् इति। बर्हिष्मत्सु - दर्भवत्सु। स्मृत्यन्तरेऽपि — आसनेषु सदर्भेषु विविक्तेषूपवेशयेत् इति। हेमाद्रौ — यस्त्वासनोपयोगार्थं प्रदद्यात् कम्बलं नवम्।

अष्टाङ्गयोगसंसिद्धिस्तस्य पुंसोऽभिजायते। यस्तृणैः मृदुभिः श्लक्ष्णं निर्माय शुभमासनम्। दद्यात् श्राद्धेषु तस्यापि सुस्थिरास्सर्वतः श्रियः इति।

அவ்விதமே, **மனு:—** தர்ப்பங்களுடையதாய்த் தயாரிக்கப்பட்ட ஆஸனங்களில் தனித்தனியாய் ஆசமனம் செய்த ப்ராம்ஹணர்களை உட்கார வைக்க வேண்டும். **ஓர் ஸ்ம்ருதியில்:—** தர்ப்பங்களுடன் கூடியதும் சுத்தங்களுமான ஆஸனங்களில் உட்கார வைக்க வேண்டும். **ஹேமாத்ரியில்:—** எவன் ஆஸனத்தின் உபயோகத்திற்காகப் புதிதான கம்பளத்தைக் கொடுப்பானோ, அம் மனிதனுக்கு அஷ்டாங்க யோகத்தின் ஸித்தி உண்டாகின்றது. எவன் புற்களால் மெதுவாகிய சுபமான ஆஸனத்தைச் செய்து ச்ராத்தங்களில் கொடுப்பானோ, அவனுக்கும் ஸம்பத்துக்கள் மிகவும் ஸ்திரங்களாய் உண்டாகின்றன.

कांस्य पार्णराजत ताम्रपात्राणि भोजनार्थमर्घ्यार्थं चोपकल्प्यानि। अत्र राजतस्य रजतमिश्रस्य च वैशिष्ट्यमाह मनुः — राजतैर्भाजनैरेषामपि वा रजतान्वितैः। वार्यपि श्रद्धया दत्तमक्षयायोपकल्पते इति। बैजावापः — राजतानि प्रशस्तानि पित्र्ये हैमानि दैविके। अथ वा ताम्रपात्राणि पित्र्ये हैमानि दैविके इति।

வெண்கலம், இலை, வெள்ளி, தாம்ரம் இவைகளால் ஆகிய பாத்ரங்களைப் போஜனத்திற்காகவும், அர்க்யத்திற்காகவும் வைக்க வேண்டும். அதில், வெள்ளிப் பாத்ரத்திற்கும் வெள்ளியுடன் கலந்த பாத்ரத்திற்கும் சிறப்பைச் சொல்லுகிறார், **மனு:—** வெள்ளிப் பாத்ரங்களாலாவது, அல்லது வெள்ளியுடன் கூடிய பாத்ரங்களாலாவது பித்ருக்களுக்கு ச்ரத்தையுடன் கொடுக்கப்பட்ட ஜலமானாலும் அழிவற்றதாயாகும். **பைஜாவாபர்:—** பித்ருகார்யத்தில் வெள்ளிப் பாத்ரங்கள்

ச்ரேஷ்டமாகியவை. தைவகார்யத்தில் ஸ்வர்ண பாத்ரங்கள் ப்ரசஸ்தங்கள் அல்லது பித்ருகார்யத்தில் தாம்ர பாத்ரங்களும், தைவ கார்யத்தில் ஸ்வர்ண பாத்ரங்களும் ச்லாக்யங்களாகும்.

राजतमधिकृत्य मत्स्यः — शिवनेत्रोद्भवं यस्मादतस्तत्पितृवल्लभम्। अमङ्गलं तद्यत्नेन देवकार्येषु वर्जयेत् इति। अमङ्गलं रुद्रनेत्रजलप्रभवत्वादिति भावः । पार्णेषु भोजनार्थं पलाशपत्रपात्राण्येवोपकल्प्यानि नत्वन्यानि पर्णपात्राणि । तथा चात्रिः — (स) न मृन्मयानि कुर्वीत भोजने दैवपित्र्ययोः । पालाशेभ्यो विना न स्युः पर्णपात्राणि भोजने इति । एवं च पलाशपद्मपत्रेषु गृही भुक्त्वै वं चरेत् इति पलाशपत्रनिषेधवचनं श्राद्धव्यतिरिक्तभोजनविषयम्।

வெள்ளிப் பாத்ரத்தைப் பற்றி மத்ஸ்யர்:— "பரம சிவனின் நேத்ரத்திலிருந்து உண்டாகியதால் வெள்ளி பித்ருக்களுக்கு ப்ரியமாகியது. தைவகார்யங்களில் அமங்களமாகிய வெள்ளிப் பாத்ரத்தை ப்ரயத்னபூர்வமாய் வர்ஜிக்க வேண்டும்," என்று. அமங்களம் = ருதரனின் கண்ணீர் ஜலத்தால் உண்டாகியதால், என்பது கருத்து. இலையால் ஆகிய பாத்ரங்களுள் போஜன பாத்ரத்திற்குப் புரசு இலையால் ஆகிய பாத்ரங்களையே உபயோகிக்க வேண்டும். மற்ற இலைகளால் ஆகிய பாத்ரங்களை உபயோகிக்கக் கூடாது. அவ்விதமே, அத்ரி:— "போஜனத்திற்காகத் தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் மண் பாத்ரங்களை உபயோகிக்கக் கூடாது. போஜன விஷயத்தில் பலாச இலைகளைத் தவிர்த்த மற்ற இலைகளால் செய்யப்பட்ட பாத்ரங்களைக் கொடுக்கக் கூடாது." இவ்விதமிருப்பதால், "புரசு, தாமரை இலைகளில் க்ருஹஸ்தன் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்" என்ற பலாச பத்ரநிஷேத வசனம் ச்ராத்தத்தைத் தவிர்த்த மற்ற போஜனத்தைப் பற்றியது.

सदण्डं कदलीपत्रं वामभागाग्रमायतम्। अग्रं चेदन्यदिग्भागे निराशाः पितरो गताः। निर्दण्डं च निरग्रं च पशुचर्मसमं स्मृतम्। तस्मादग्रं च दण्डं च श्राद्धेषु न निकृन्तयेत्। श्राद्धेऽहनि तु सम्प्राप्ते रम्भापृष्ठं न कृन्तयेत्। कृन्तयेद्यदि मूढात्मा निराशाः पितरो गताः इत्यादि वचनैः। श्राद्धे कदलीपत्रभोजनाभ्यनुज्ञानात् न जातिकुसुमानि न कदलीपत्रं श्राद्धे वैकल्पिकमित्याहुः।

''தண்டுடன் கூடிய வாழையிலையை இடது புறத்தில் நுனியுடையதாய் விஸ்தாரமுள்ளதாய்ப் போட வேண்டும். நுனியை வேறு திக்கில் இருக்கும்படி செய்தால் பித்ருக்கள் ஆசையற்றவர்களாகச் செல்வார்கள்.'' ''தண்டம் இல்லாமலும், நுனி இல்லாமலும் உள்ளது பசுவின் தோலுக்குச் சமமாகும். ஆகையால் ச்ராத்தங்களில் இலையின் நுனியையும் தண்டத்தையும் நறுக்கக் கூடாது.'' ''ச்ராத்த தினம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது இலையின் பின் பாகத்தை நறுக்கக் கூடாது. மூடனாய் நறுக்குவானாகில் பித்ருக்கள் ஆசையற்றவராய் செல்லுகின்றனர்.'' என்ற இவை முதலிய வசனங்களால் ச்ராத்தத்தில் வாழையிலையில் போஜனம் விதிக்கப்பட்டிருப்பதாலும், ''ஜாதி புஷ்பங்களை உபயோகிக்கக் கூடாது; வாழை இலையை உபயோகிக்கக் கூடாது'' என்று ப்ரசேதஸ்ஸால் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும், ச்ராத்தத்தில் வாழை இலையில் புஜிப்பது வைகல்பிகம், என்கின்றனர்.

अर्घ्यार्थं त्वन्यपर्णपात्राण्यप्यनिषिद्धानि। अत एव बौजावापः — खादिरौदुम्बराण्यर्घ्यपात्राणि श्राद्धकर्मणि। अप्यश्ममृन्मयानि स्युरपि पर्णपुटास्तथा इति। कात्यायनः — सौवर्णराजतौदुम्बरखड्गमणिमयानां पात्राणामन्यतमेषु यानि वा विद्यन्ते पर्णपुटेषु वा इति। यानि तैजसादीनि, तेषु वेत्यर्थः।

அர்க்யத்திற்கோவெனில், மற்ற இலைகளாலாகிய பாத்ரங்களும் நிஷேதிக்கப்படாதவைகள். ஆகையாற்றான், பைஜாவாபர்:— ச்ராத்தத்தில் அர்க்ய பாத்ரங்கள் கருங்காலி, அத்தி இவைகளாலாகிய பாத்ரங்களை உபயோகிக்கலாம் அல்லது கல், மண், இலை இவைகளாலாகிய பாத்ரங்களும் உபயோகிக்கப்படலாம். காத்யாயனர்:— ''ஸ்வர்ணம், வெள்ளி, தாம்ரம், கட்க ம்ருகத்தின் கொம்பு, ரத்னம் இவைகளாலாகிய பாத்ரங்களுள் ஏதாவது ஒன்றில் எது இருக்கின்றதோ அதில், அல்லது இலையால் ஆகிய பாத்ரத்தில்'' என்று. யாநி என்பதற்கு உலோக பாத்ரங்கள் முதலியவைகள் எவை இருக்கின்றனவோ அவைகளில் என்பது பொருள்.

अत्रोपकल्पनीयानि पुष्पाणि ब्रह्माण्डपुराणे दर्शितानि — शुक्लास्सुमनसः श्रेष्ठास्तथा पद्मोत्पलानि च। गन्धरूपोपपन्नानि यानि चान्यानि कृत्स्नशः। जातीचम्पकलोध्रांश्च मल्लिकाबाणबर्बरीः। चूताशोकाटरूषं च तुलसीं तिलकं तथा। पारन्तीं शतपत्रं च भृङ्गराजं च केतकीम्। यूथिकामतिमुक्तं च दद्यात् पुष्पाण्यमूनि च इति। मार्कण्डेयः — जात्यश्च सर्वा दातव्या मल्लिकाश्वेतयूथिका। जलोद्भवानि सर्वाणि कुसुमानि च चम्पकम् इति। जात्यः मालत्यादयः। यस्त्वङ्गिरसोक्तम् — न जातिकुसुमानि इति। यच्च क्रतुनोक्तम् — असुराणां कुले जाता जातिः पूर्वपरिग्रहे। तस्या दर्शनमात्रेण निराशाः पितरो गताः इति, तत्र जातीकुसुमनिषेधो वैकल्पिकः।

இவ்விடத்தில், உபயோகிக்கக்கூடிய புஷ்பங்களைச் சொல்லுகிறார், ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— வெண்ணிறமான புஷ்பங்கள் சிறந்ததாகும். அவ்விதம் தாமரைப்பூ, நீலோத்பலம், வாஸனையும் அழகுமுள்ள புஷ்பங்கள், மற்ற எல்லாப் புஷ்பங்களும் ஜாதீ, சம்பகம், லோத்ரம், மல்லிகை, பாணம், பர்பரீ, மா, அசோகம், அடரூஷம், துளஸீ, திலகம், பாரந்தீ, சதபத்ரம், ப்ருங்கராஜம்,

தாழை, யூதிகை (முல்லை), அதிமுக்தம் இந்தப் புஷ்பங்களை ச்ராத்தத்தில் கொடுக்கலாம். மார்க்கண்டேயர்:— ''ஜாதீ (மாலதி) புஷ்பத்தில் எல்லா வகைகளும், மல்லிகை, வெள்ளை முல்லை, ஜலத்தில் உண்டாகிய எல்லாப் புஷ்பங்களும், சம்பகம் இவை கொடுக்கத் தகுந்தவைகள்.'' ஆனால், அங்கிரஸ்ஸினால்:— ''ஜாதி புஷ்பங்களைக் கொடுக்கக் கூடாது'' என்று சொல்லப்பட்டது, க்ரதுவினால்:— ''ஜாதி புஷ்பம் முன் ஜன்மத்தில் அஸுரர்களின் குலத்தில் பிறந்தது. அதைப் பார்ப்பதினாலேயே பித்ருக்கள் ஆசையற்றுச் செல்லுகின்றனர்'' என்று சொல்லப்பட்டதும், உள்ளதே எனில் இவ்விஷயத்தில் ஜாதீகுஸுமத்தை நிஷேதித்தது வைகல்பிகம், என்றறியவும்.

सायणीये — तुलसी शतपत्रं च भृङ्गराजं तथैव च। मरुकं मल्लिका चैव पितृणामक्षयं भवेत् इति। सङ्ग्रहे — तुलसी श्राद्धकाले तु यदा शिरसि धारिता। दाता भोक्ता पिता तस्य विष्णुलोके महीयते इति। स्मृत्यर्थसारे तुलस्या वर्ज्यत्वमुक्तम्, तत्र मूलं चिन्त्यमिति चन्द्रिकायाम्।

ஸாயணீயத்தில்:— துளஸீ, தாமரை, ப்ருங்கராஜம், மரு, மல்லிகை, இவைகள் பித்ருக்களுக்கு அளவற்ற த்ருப்தியைக் கொடுப்பதாகும். ஸங்க்ரஹத்தில்:— துளஸீயானது ச்ராத்த காலத்தில் எப்பொழுது சிரஸ்ஸில் தரிக்கப்பட்டதோ அப்பொழுதே தாதா, போக்தா, பிதா மூவரும் விஷ்ணுலோகத்தில் சிறப்பை யடைகின்றனர். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்: துளஸியை வர்ஜிக்க வேண்டுமென்றிருப்பதில் ப்ரமாணம் தேடத்தகுந்ததாயுள்ளது, என்று உள்ளது சந்த்ரிகையில்.

श्राद्धे वर्जनीयानि पुष्पाण्याह शङ्खः — उग्रगन्धीन्यगन्धीनि चैत्यवृक्षोद्भवानि च। पुष्पाणि वर्जनीयानि रक्तवर्णानि यानि च।

जलोद्भवानि देयानि रक्तान्यपि विशेषतः इति । चैत्यवृक्षः श्मशानवृक्षः । विष्णुरपि — न कण्टकिजं दद्यात् कण्टकिजमपि शुक्लं सुगन्धि यत्तद्दद्यान्न रक्तं दद्याद्रक्तमपि कुङ्कुमं जलजं च दद्यात् इति ।

ச்ராத்தத்தில் வர்ஜிக்கத் தகுந்த புஷ்பங்களைச் சொல்லுகிறார், சங்கர்:— வெறுப்பான வாஸனையுடையவகளும், வாஸனையில்லாதவைகளும் ச்மசான வ்ருக்ஷத்தில் உண்டாகியவைகளும், சிவப்பு நிறமானவைகளுமான புஷ்பங்கள், வர்ஜ்யங்களாகும். சிவப்பானாலும் ஜலத்தில் உண்டாகிய புஷ்பங்கள் கொடுக்கத் தகுந்தவை. விஷ்ணுவும்:— முள்ளுள்ள வ்ருக்ஷத்தில் உண்டாகிய புஷ்பத்தைக் கொடுக்கக் கூடாது. முள்ளுள்ளதில் உண்டாகியதானாலும் வெண்ணிறமாயும் வாஸனையுள்ளதுமானால் கொடுக்கலாம். சிவப்புப் புஷ்பத்தைக் கொடுக்கக் கூடாது. ஆனால், சிவப்பு நிறமாயிருந்தாலும், ஜலத்தில் உண்டாகியதையும் குங்குமப்பூவையும் கொடுக்கலாம்.

मत्स्यः — पद्मबिल्वार्कदुर्धूर पारिभद्राटरूषकाः । न देयाः पितृकार्येषु पयश्चाजाविकं तथा इति । पारिभद्रः - मन्दारः । ब्रह्माण्डपुराणेऽपि — जपादिकुसुमं भण्डी रूपिका सकुरुण्टका । पुष्पाणि वर्जनीयानि श्राद्धकर्मणि नित्यशः इति । आदिग्रहणेन जपाकुसुमवद्रक्तानां रक्तकरवीरादि कुसुमानां वर्ज्यत्वमुक्तम् । भण्डी - मञ्जिष्ठा ।

மத்ஸ்யர்:— தாமரை, பில்வம், எருக்கு, ஊமத்தை, மந்தாரை, அடருஷகம் இவைகளை ச்ராத்தத்தில் கொடுக்கக் கூடாது. வெள்ளாடு, செம்மறி ஆடு இவைகளின் பாலும் கொடுக்கத்தக்கதல்ல. ப்ரம்ஹாண்ட புராணத்திலும்:— "செம்பரத்தை முதலிய புஷ்பம், மஞ்சிஷ்டை, ரூபிகை, குரண்டகை இவைகளை ச்ராத்தத்தில் எப்பொழுதும் வர்ஜிக்க வேண்டும்," என்று. ஆதி என்ற பதத்தால் செம்பரத்தை

போல் சிவந்துள்ள அரளி முதலியவைகளுக்கு நிஷேதம் சொல்லப்பட்டுள்ளது.

धूपद्रव्येषूपकल्पनीयानि विष्णुधर्मोत्तरे दर्शितानि— धूपो गुग्गुलुजो देयस्तथा चन्दनसारजः । अगरुश्च स कर्पूरस्तुरुष्कस्त्वक्तथैव च इति । तुरुष्कः - सल्लकीवृक्षः, त्वक् - लवङ्गम् । मरीचिरपि— चन्दनागरुणी चोभे तमालोशीरपद्मकम् इति । वर्जनीयं धूपद्रव्यमाह विष्णुः — जीवजं च सर्वं न धूपार्थे इति । जीवजं - कस्तूर्यादि ।

தூபத்ரவ்யங்களில் சேர்க்கத் தகுந்தவைகள் சொல்லப்பட்டுள்ளன, விஷ்ணுதர்மோத்தரத்தில்:— குங்கிலியத்தால் உண்டாகிய தூபம் கொடுக்கத் தகுந்தது. அவ்விதம் சந்தனம், அகில், கர்ப்பூரம், யானைவணங்கி, லவங்கம் இவைகளாலாகிய தூபம் கொடுக்கத் தகுந்தது. மரீசியும்:— "சந்தனம், அகில், தமாலம், உசீரம், பத்மகம்" என்று. தூபத்ரவ்யத்தில் வர்ஜிக்கத் தகுந்தவைகளைச் சொல்லுகிறார் விஷ்ணு:— ப்ராணியினிடத்தினின்றும் உண்டாகிய கஸ்தூரீ முதலிய எல்லாம் தூபத்துக்குத் தகாதது.

अनुलेपनार्थमुपकल्पनीयद्रव्यमाह मरीचिः — कर्पूरः कुङ्कुमोपेतः सुगन्धि सितचन्दनम् । दैविकेऽप्यथवा पित्र्ये गन्धदाने प्रशस्यते इति । विष्णुरपि — चन्दन कुङ्कुम कर्पूरागरुपद्म-कान्यनुलेपार्थे इति । मार्कण्डेयः — चन्दनागरुकर्पूर कुङ्कुमानि प्रदापयेत् । अश्वमेध मवाप्नोति पितॄणा मनुलेपनात् इति । ब्रह्माण्डपुराणेऽपि — श्वेतचन्दनकर्पूरकुङ्कुमानि शुभानि च । विलेपनार्थं दद्यात्तु प्रीतिदं पितृवल्लभम् इति ।

பூசுவதற்கு உபயோகிக்கக் கூடிய த்ரவ்யத்தைச் சொல்லுகிறார் மரீசி:— கர்ப்பூரம், குங்குமப்பூ, வாஸனையுள்ள வெளுப்புச் சந்தனம், இவை

தேவகார்யத்திலும், பித்ரு கார்யத்திலும் வாஸனைக்காகக் கொடுப்பதில் ச்லாக்யமாகும். **விஷ்ணுவும்:—** சந்தனம், குங்குமப்பூ, கர்ப்பூரம், அகில், பத்மகம் இவைகளைப் பூசிக்கொள்வதற்குக் கொடுப்பது ச்லாக்யமாகும். **மார்க்கண்டேயர்:—** சந்தனம், அகில், கர்ப்பூரம், குங்குமப்பூ இவைகளைக் கொடுக்க வேண்டும். இவைகளைப் பித்ருக்களுக்குக் கொடுப்பதால் அச்வமேத பலனை அடைவான். **ப்ரம்ஹாண்ட புராணத்திலும்:—** வெண்சந்தனம், கர்ப்பூரம், குங்குமப்பூ இவைகளைப் பூசுவதற்காகக் கொடுக்க வேண்டும். இவை பித்ருக்களுக்கு ப்ரீதியைக் கொடுக்கக்கூடியவை.

वर्ज्यानाह मरीचिः — श्राद्धेषु विनियोक्तव्या न गन्धा देवदारुजाः । कल्कीभावं समासाद्य न च पर्युषिताः क्वचित् । न विगन्धाश्च दातव्या भुक्तशेषावशेषिताः । पूतिं च मृगनाभिं च रोचनं रक्तचन्दनम् । कालेयं जाङ्गकं चैव तुरुष्कं चाऽपि वर्जयेत् इति । पूतिः - तृण विशेषः, मृगनाभिः - कस्तूरी, रोचनम् - गोरोचनम् ।

வர்ஜிக்கத் தகுந்தவைகளைச் சொல்லுகிறார், **மரீசி:—** ச்ராத்தங்களில் தேவதாருவினால் உண்டாகிய கந்தங்கள் கொடுக்கத் தகுந்தவைகளல்ல. காலத்தினால் காய்ந்தவைகளைக் கொடுக்கக் கூடாது. வாஸனையற்றவைகளையும், ஒருவரால் அனுபவிக்கப்பட்டு மிகுந்தவைகளையும் கொடுக்கக்கூடாது. பூதி (ஒருவித புல்), கஸ்தூரீ, கோரோசனம், ரக்தசந்தனம், காலேயம், ஜாங்ககம், துருஷ்கம் இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

दीपार्थस्नेहद्रव्येषूपकल्पनीयमाह मरीचिः — घृताद्वा तिलतैलाद्वा नान्यद्रव्यात्तु दीपकमिति । अत्र चान्यद्रव्यनिषेधो वसामेदो रूपद्रव्यविषयः, न पुनः कौसुम्भादि तैलविषयः । यत आह शङ्खः — घृतेन दीपो दातव्यस्त्वथ वाऽप्योषधीरसैः । वसामेदोद्भवं दीपं प्रयत्नेन विवर्जयेत् इति ।

தீபத்திற்கான எண்ணெய்களுள் . சேர்க்கத் தகுந்தவைகளைச் சொல்லுகிருர், மரீசி:— ''நெய், எள் எண்ணெய் இவைகளைத் தவிர்த்து மற்ற த்ரவ்யத்தால் தீபத்தைக் கொடுக்கக் கூடாது'', என்று. இவ்விஷயத்தில் மற்ற த்ரவ்யங்களை நிஷேதிப்பது வஸை, மேதஸ் முதலிய ப்ராணி த்ரவ்யத்தைப் பற்றியது. குஸும்பதைலம் முதலியதைப் பற்றியதல்ல. அவ்விதம் சொல்லுகிருர், சங்கர்:— நெய்யினுல் தீபத்தைக் கொடுக்க வேண்டும் அல்லது பச்சிலைகளின் ரஸங்களால் கொடுக்கவும். கொழுப்பு முதலியதால் உண்டாகிய தீபத்தை முயற்சித்து வர்ஜிக்க வேண்டும்.

आच्छादनार्थमुपकल्पनीयानि चन्द्रिकायां दर्शितानि - आच्छादनं तु यो दद्यादहतं श्राद्धकर्मणि। आयुः प्राकाम्यमैश्वर्यं रूपं च लभते शुभम्। कौशेयं क्षौमकार्पासं दूकूलमहतं तथा। श्राद्धेष्वेतानि यो दद्यात् कामानाप्नोति पुष्कलान् इति। अहतलक्षणमाह प्रचेताः — ईषद्धौतं नवं श्वेतं सदशं यन्न धारितम्। अहतं तु विजानीयात् सर्वकर्मसु पावनम्। स्वयं धौतं च देयं स्यात् सवर्णैः क्षालितं च यत्। प्रदेयं पितृकार्येषु कारुधौतं न जातुचित् इति। स्मृत्यन्तरे — वासांसि वाससी वासो यो न दद्यान्मृतेऽहनि। सप्त जन्मसु नग्नस्स्याद्दरिद्रश्च प्रजायते इति। शङ्खः — यथा विभवसारेण वस्त्रं दद्यात्तु पैतृके। उत्तरीयमभावे तु शोभनं दर्भनिर्मितम् इति। शातातपः — युवा सुवासाः इति वस्त्रं तदभावे यज्ञोपवीतम् इति।

உடுப்பதற்காகக் கொடுக்க வேண்டியவைகள் சொல்லப்படுகின்றன, சந்த்ரிகையில்:— அஹதமான வஸ்த்ரத்தை ச்ராத்தத்தில் எவன் கொடுப்பானே அவன் ஆயுஸ், எல்லாக் காமங்கள், ஐச்வர்யம், நல்ல ரூபம் இவைகளை அடைகிருன். வெண்பட்டு, நார்மடி, பருத்திநூல் வஸ்த்ரம், அஹதமான பட்டு, இவைகளை

அடைகிருன். அஹதத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிருர், ப்ரசேதஸ்:— கொஞ்சம் வெளுக்கப்பட்டதும், புதியதும், வெண்ணிறமுள்ளதும், தலைப்புடன் கூடியதும், ஒருவரால் உடுக்கப்படாததும் ஆகிய வஸ்த்ரத்தை அஹதம் என்றறியவும். அது எல்லாக் கர்மங்களிலும் சுத்திகரமாகும். தன்னுல் வெளுத்ததும் கொடுக்கத் தகுந்தது. ஸமான வர்ணர்களால் வெளுக்கப்பட்டதும் கொடுக்கப்படலாம். ச்ராத்தங்களில் வண்ணுனுல் வெளுக்கப்பட்டது ஒருகாலும் கொடுக்கத் தகுந்ததல்ல. ஓர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்த தினத்தில் மூன்று வஸ்த்ரங்களை அல்லது இரண்டு வஸ்த்ரங்களை அல்லது ஒரு வஸ்த்ரத்தையாவது எவன் கொடுப்பதில்லையோ அவன் ஏழு ஜன்மங்களில் வஸ்த்ரமில்லாதவனுவான். தரித்ரனுயும் பிறப்பான். சங்கர்:— ச்ராத்தத்தில் தனது விபவத்துக்குத் தகுந்தபடி வஸ்த்ரத்தைக் கொடுக்க வேண்டும். இல்லாவிடில் தர்ப்பங்களால் செய்யப்பட்டதும் அழகியதுமாகிய உத்தரீயத்தையாவது கொடுக்கவும். சாதாதபர்:— "யுவா ஸுவாஸா:" என்ற மந்த்ரத்தால் வஸ்த்ரத்தைக் கொடுக்கவும். வஸ்த்ரமில்லாவிடில் யக்ஞோபவீதத்தை யாவது கொடுக்கவும்.

पुराणेऽपि — यज्ञोपवीतं दातव्यं वस्त्राभावे विजानता। पितॄणां वस्त्रदानस्य फलं तेनाप्यतेऽखिलम्। यज्ञोपवीतदानेन विना श्राद्धं तु निष्फलम्। तस्माद्यज्ञोपवीतस्य दानमावश्यकं स्मृतम् इति। एवं दर्भादिमेक्षणान्तद्रव्यमुपकल्प्य स्नात्वा शुक्लं वासः परिदध्यात् स्नातोऽधिकारी भवति दैवे पित्र्ये च कर्मणि, श्राद्धकृच्छुक्लवासाः स्यात् इति च स्मरणात्।

புராணத்திலும்:— வஸ்த்ரமில்லாவிடில் அறிந்தவன் யக்ஞோபவீதத்தைக் கொடுக்கவும். அதனுல் வஸ்த்ரதான பலன் முழுவதும் அடையப்படுகிறது. யஜ்ஞோபவீதம் கொடுக்காமல் செய்த ச்ராத்தம் நிஷ்பலமாகும். ஆகையால்

யஜ்ஞோபவீத தானம் ஆவச்யகம் எனப்பட்டுள்ளது. இவ்விதம் தர்ப்பம் முதல் மரக்கரண்டி வரையில் உள்ள த்ரவ்யங்களைத் தயாரித்து, பிறகு ஸ்நானம் செய்து, வெண்ணிறமான வஸ்த்ரத்தை உடுக்க வேண்டும். ''ஸ்நானம் செய்தவன் தேவ கர்மத்திலும் பித்ரு கர்மத்திலும் யோக்யனாகிறான்'' என்றும், ''ச்ராத்தம் செய்பவன் வெண்ணிறமான வஸ்த்ரமுடையவனாயிருக்க வேண்டும்'' என்றும் ஸ்ம்ருதி இருப்பதால்.

## श्राद्धप्रकारः

स्नानानन्तरं यत् कर्तव्यं तदाह मार्कण्डेयः — स्नातः स्नातान् समाहूतान् स्वागतेनार्चयेत् पृथक् इति । पृथक् पृथक् स्वागतमिति ब्रूयादित्यर्थः । शङ्खश्च — प्रयतोऽपराह्णे शुचिश्शुक्लवासा दर्भहस्तः स्वागतमिति ब्रूयात् इति । अपराह्णशब्दोऽत्रावर्तनादुपरितनभागे प्रयुक्तः, ऊर्ध्वं मुहूर्तात् कुतपाद्यन्मुहूर्तचतुष्टयम् । मुहूर्तपञ्चकं वाऽपि स्वधाभवनमिष्यते इति स्मरणात् ।

## ச்ராத்தத்தின் ப்ரகாரம்.

ஸ்நானத்திற்குப் பிறகு எது செய்யப்பட வேண்டியதோ அதைச் சொல்லுகிறார், மார்க்கண்டேயர்:— ''ஸ்நானம் செய்த கர்த்தா ஸ்நானம் செய்யப்பட்டவரும் அழைக்கப்பட்டவருமாகிய ப்ராம்ஹணர்களை நல்வரவினால் தனியாய்ப் பூஜிக்க வேண்டும்'' என்று. தனித்தனியாக ஸ்வாகதம் சொல்லவேண்டுமென்பது பொருள். சங்கரும்:— ''கவனத்துடன், அபராஹ்ணத்தில் சுத்தனாய் வெள்ளை வஸ்த்ரமுடையவனாய், தர்ப்பங்களைக் கையிலுடையவனாய், ஸ்வாகதம் என்று. சொல்லவேண்டும்'' என்று. இங்கு அபராஹ்ண சப்தம் ஆவர்த்தனத்திற்கு மேல் உள்ள பாகத்தைச் சொல்லுகிறது. (பதினைந்து நாழிகைக்கு மேற்பட்டது ஆவர்த்தனம்) ''குதப முஹூர்த்தத்திற்கு மேல் நாலு முஹூர்த்தங்கள்

எவையோ, அல்லது ஐந்து முஹூர்த்தங்கள் எவையோ இந்தக் காலம் ச்ராத்த காலம் எனப்படுகிறது,'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்,

यमोऽपि ततः स्नात्वा निवृत्तेभ्यः प्रत्युत्थाय कृताञ्जलिः । पाद्यमाचमनीयं च सम्प्रयच्छेद्यथाक्रमम् इति । स्वागतमित्युक्त्वा मार्गकृतोपहतिशुद्ध्यर्थं पादप्रक्षालनार्थमुदक माचमनार्थमुदकं च क्रमेण प्रयच्छेदित्यर्थः । तत आसनं दत्वा पुनर्निमन्त्रयेत । तदुक्तं माधवीये — ओं तथेति विप्रो ब्रूयात्, प्राप्नोतु भवानिति कर्ता पुनर्ब्रूयात्, प्राप्नवानीति पुनर्विप्रो ब्रूयात्, इति । निमन्त्रणं च निरङ्गुष्ठं हस्तं गृहीत्वा कर्तव्यम्, निरङ्गुष्ठं गृहीत्वा तु विश्वान् देवान् समाह्वयेत् इति स्मरणात् ।

**யமனும்:—** ''பிறகு ஸ்நானம் செய்து வந்தவர்களான ப்ராம்ஹணர்களுக்கு அஞ்ஜலியுடன் எழுந்து நின்று பாதப்ரக்ஷாளனார்த்தம் ஜலத்தையும் ஆசமனீயத்தையும் க்ரமப்படி கொடுக்க வேண்டும்,'' என்று. ஸ்வாகதம் என்று சொல்லி, வழியில் வந்த அசுத்தி போவதற்காகக் கால் அலம்புவதற்கு ஜலத்தையும், ஆசனமத்துக்கு ஜலத்தையும் க்ரமப்படி கொடுக்க வேண்டும் என்பது பொருள். பிறகு ஆஸனத்தைக் கொடுத்து, மறுபடி வரிக்க வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது, **மாதவீயத்தில்:—** மறுபடி ஜலத்தைக் கொடுத்து, தைவே க்ஷண: க்ரியதாம் என்று வரிக்கவும். ஓம்ததா என்று ப்ராம்ஹணன் சொல்ல வேண்டும். ப்ராப்நோது பவான் என்று கர்த்தா மறுபடி சொல்ல வேண்டும். ப்ராப்நவாநி என்று மறுபடி ப்ராம்ஹணன் சொல்ல வேண்டும்'' என்று. வரணமும் பெரு விரலில்லாமல் கையைப் பிடித்துச் செய்ய வேண்டும். பெரு விரலில்லாமல் கையை க்ரஹித்து விச்வேதேவர்களை வரிக்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

मण्डलकरणम्।

तदनन्तरं गृहाङ्गणे मण्डलद्वयं कार्यम्, तथा च स्मृत्यन्तरे — संमार्जितोपलिप्ते तु द्वारि कुर्वीत मण्डले। प्राङ्गणे मण्डले कुर्यात् दैवे पित्र्ये च कर्मणि। अन्तरेण प्रकर्तव्यं तयोर्मध्ये षडङ्गुलम्। पादोदकस्य संयोगात् पितृघाती प्रजायते इति। अत्रिः — एकोद्दिष्टे सपिण्डे च कुण्डं कुर्याद्यथाविधि। अन्यश्राद्धेषु सर्वत्र मण्डलं तु विधीयते इति। दक्षः — सपिण्डीकरणादूर्ध्वं मण्डलं तु विधीयते। यावत् कालं प्रेतनाम तावत्कुण्डं प्रकीर्तितम्। सपिण्डीकरणादूर्ध्वं कुण्डेषु क्षालितं यदि। कुलक्षयकरं तत्स्यान्नरके पातयेद्ध्रुवम्। तदूर्ध्वं क्षालनं कुण्डे स्त्रीपुत्रगृहनाशनम् इति।

மண்டலம் செய்வது.

அதற்குப் பிறகு க்ருஹத்தின் முற்றத்தில் இரண்டு மண்டலங்களைச் செய்ய வேண்டும். அவ்விதமே, ஓர் ஸ்ம்ருதியில்:— பெருக்கப்பட்டதும், மெழுகப்பட்டது மான ஸ்தலத்தில் வாயிற்படியின் ஸமீபத்தில் இரண்டு மண்டலங்களைச் செய்ய வேண்டும். தைவ கர்மத்திலும் பித்ரு கர்மத்திலும் முற்றத்தில் இரண்டு மண்டலங்களைச் செய்ய வேண்டும். இரண்டு மண்டலத்திற்கும் நடுவில் ஆறு அங்குல அளவில் இடைவெளி இருக்க வேண்டும். பாத ஜலங்கள் ஒன்று சேர்ந்தால் பித்ருக்களைக் கொன்றவனாவான். அத்ரி:— ஏகோத்திஷ்டத்திலும், ஸபிண்டீகரணத்திலும் விதிப்படி (குழி) குண்டத்தைச் செய்ய வேண்டும். மற்ற எல்லா ச்ராத்தங்களிலும் மண்டலம் விதிக்கப்படுகிறது. தக்ஷர்:— ஸபிண்டீகரணத்துக்குப் பிறகு மண்டலம் விதிக்கப்படுகிறது. ப்ரேதன் என்கிற பெயர் எதுவரையில் உள்ளதோ அதுவரையில் குண்டம் விதிக்கப்படுகிறது. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு குண்டங்களில்

பாதப்ரக்ஷாளனம் செய்தால் அது குலக்ஷயகரமாகும். நரகத்திலும் தள்ளும். இது நிச்சயம். ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு குண்டத்தில் அலம்புவது என்பது பார்யை, புத்ரன், க்ருஹம் இவைகளை நாசப்படுத்துவதாகும்.

मत्स्यः — गृहद्वारसमीपे तु भवनस्याग्रतो भुवि । गोमयेनोपलिप्तायां गोमूत्रेण तु मण्डले इति । गोमयसहितेन गोमूत्रेण मण्डले कार्ये इत्यर्थः । स्मृत्यन्तरे — प्राङ्गणे मण्डलं कुर्यात् देवानां चतुरश्रकम् । वितस्तिमात्रं पित्रर्थं वर्तुलं दक्षिणं भवेत् । नान्तः प्रक्षालयेत् पादौ दैवे पित्र्ये च कर्मणि । नोत्तरे दक्षिणे नैव पश्चिमे न गृहान्तरे । द्वारस्य पूर्वतः कुर्याद्गोमयैर्मण्डलद्वयम् इति । स्मृत्यन्तरे — प्रादेशमात्रं देवानां मण्डलं चतुरश्रकम् । वितस्तिमात्रं पित्रर्थं मण्डलं वर्तुलं भवेत् । देवानामुत्तरे कार्यं पित्रर्थं दक्षिणे तथा । अन्तरालं तु कर्तव्यं तयोर्मध्ये षडङ्गुळम् इति । अत्र विशेषमाह शम्भुः — उदकप्लव मुदीच्यं स्याद्दक्षिणं दक्षिणाप्लवं इति । उदीच्यं - वैश्वदैविकं चतुरश्रं मण्डलं उदक्प्रवणम्, दक्षिणं - पित्र्यं वर्तुलं मण्डलं दक्षिणाप्रवणं कुर्यादित्यर्थः । मण्डलकरणानन्तरं यत् कर्तव्यं तदाह शम्भुः — उत्तरेऽक्षतसंयुक्तान् पूर्वाग्रान् विन्यसेत् कुशान् । दक्षिणे दक्षिणाग्रांस्तु सतिलान् विन्यसेत् द्विजः इति ।

மத்ஸ்யர்:— "வீட்டின் வாயிற்படியின் ஸமீபத்தில், வீட்டின் முன்னிலையில், கோமயத்தால் மெழுகப்பட்ட பூமியில், கோமூத்ரத்தால் மண்டலங்களைச் செய்யவும்" என்று. கோமூத்ரத்துடன் கூடிய கோமயத்தால் மண்டலங்களைச் செய்ய வேண்டுமென்பது பொருள். ஓர் ஸ்ம்ருதியில்:— முற்றத்தில் விச்வேதேவர்களுக்கு நான்கு மூலையுடையதாய் மண்டலத்தைச் செய்யவும். பன்னிரண்டு அங்குலம் உள்ளதாய். பித்ருக்களுக்காக மண்டலத்தை அதற்குத் தெற்கில் புறத்தில் வர்த்துளமாய்ச் (வட்டமாய்)

செய்ய வேண்டும். வீட்டின் உட்புறத்தில். தைவ பித்ருகார்யங்களில் கால்களை அலம்பக்கூடாது. வடக்கிலும் கூடாது, தெற்கிலும் கூடாது, மேற்கிலும் கூடாது, வீட்டின் நடுவிலும் கூடாது. வாயிற்படியின் எதிரில் கோமயத்தால் இரண்டு மண்டலங்களைச் செய்ய வேண்டும். ஓர் ஸ்ம்ருதியில்:— தேவர்களுக்கு ஒட்டையளவும் நான்கு மூலையுள்ளதுமாகிய மண்டலத்தைச் செய்யவும். பித்ருக்களுக்காகிய மண்டலம் பன்னிரண்டு அங்குலம் உள்ளதாய் வட்டமாய் இருக்க வேண்டும். தேவர்களுக்கு வடக்குப் பக்கத்தில் செய்ய வேண்டும். பித்ருக்களுக்குத் தென்புறத்திலும் செய்ய வேண்டும். அவ்விரண்டுக்கும் நடுவில் ஆறு அங்குல இடைவெளி செய்யப்பட வேண்டும். இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், சம்பு:— விச்வேதேவர்களுக்காகிய மண்டலம் வடக்கில் சரிவாக இருக்க வேண்டும். தெற்கில் உள்ள மண்டலம் தெற்கில் சரிவாக இருக்க வேண்டும்.

मण्डलकरणानन्तरं यत्कर्तव्यं तदाह शंभुः - उत्तरेऽक्षतसंयुक्तान् पूर्वाग्रान्विन्यसत्कुशान्। दक्षिणे दक्षिणाग्रांस्तु सतिलान्विन्यसेत् द्विजः इति । पादप्रक्षालनम् - मत्स्योऽपि अक्षताभिस्सपुष्पाभिस्तदभ्यर्च्यापसव्यतः । विप्राणां क्षालयेत् पादानभिवाद्य पुनः पुनः इति। अपसव्यतः - पूर्वमुदङ्मण्डलं पश्चाद् दक्षिणमण्डलमभ्यर्च्येत्यर्थः । एवं च मण्डलकरणं तदर्चनं च पदार्थानुसमयेन कार्यम्, न तु काण्डानुसमयेनेत्युक्तं भवति। व्यासः —अक्षताभिस्सपुष्पाभिर्दर्भाग्रैरद्भिरेव च। विप्राणां क्षालयेत् पादान् दैवे चैव पुरोमुखः। तिलैर्दर्भैस्तथा पुष्पैरद्भिर्गन्धादिमिश्रितैः। पितॄणां क्षालयेत् पादान् तथा प्रत्यङ्मुखः शुचिः इति। पुरोमुखः - प्राङ्मुख इत्यर्थः।

மண்டலம் செய்தபிறகு செய்ய வேண்டியது எதுவோ அதைச் சொல்லுகிறார், சம்பு:— த்விஜன் வடக்கிலுள்ள மண்டலத்தில் அக்ஷதைகளுடன் கூடிய குசங்களைக் கிழக்கு நுனியாகப் போட வேண்டும். தெற்கில் உள்ள மண்டலத்தில் எள்ளுடன் கூடிய குசங்களைத் தெற்கு நுனியாய்ப் போட வேண்டும். பாத ப்ரக்ஷாளநம் — மத்ஸ்யரும்:— "அக்ஷதைகளாலும், புஷ்பங்களாலும் அந்த மண்டலத்தை ப்ராசீனாவீதமாய் அர்ச்சித்து, ப்ராம்ஹணர்களின் பாதங்களை அடிக்கடி நமஸ்கரித்து அலம்ப வேண்டும்," என்று. அபஸவ்யத: = முதலில் வடக்கிலுள்ள மண்டலத்தையும், பிறகு தெற்கிலுள்ள மண்டலத்தையும் பூஜித்து, என்பது பொருள். இவ்விதமிருப்பதால், மண்டலத்தைச் செய்வதையும், அர்ச்சனத்தையும் பதார்த்தத்தை யனுஸரித்துச் செய்ய வேண்டும். காண்டானுஸமயமாய்ச் செய்யக் கூடாது, என்பது சொல்லப்பட்டதாகிறது. (விச்வேதேவர்களுக்கு வரணம் முதல் எல்லா உபசாரங்களும் முந்தியே இருப்பதால் பாத ப்ரக்ஷாளனத்தையும் முந்தியே செய்ய வேண்டும். அந்த வசனத்தில் பித்ருக்களுக்கு முந்தியென்று இருந்தாலும் அவ்விதம் செய்யக் கூடாது.) வ்யாஸர்:— "புஷ்பங்களுடன் கூடிய அக்ஷதைகள், தர்ப்பத்தின் நுனிகள், ஜலம் இவைகளால் ப்ராம்ஹணர்களின் பாதங்களை அலம்ப வேண்டும். தேவஸ்தானத்தில் கிழக்கு முகமாய், சந்தனம், முதலியவைகளுடன் சேர்ந்த எள், தர்ப்பங்கள், புஷ்பங்கள், இவைகளுடன் சேர்ந்த ஜலத்தால் மேற்கு முகமாய்ச் சுத்தனாய்ப் பித்ருக்களின் பாதங்களை அலம்பவேண்டும்," என்று.

अत्र केचित् — अप्रवाहोदकस्नानं विप्रपादावनेजनम्। गायत्र्या जपमर्घ्यं च ह्यादित्याभिमुखं चरेत् इति वचनाद्देवपित्रोरुभयोरपि पादप्रक्षालनमादित्याभिमुखः कुर्यादित्याहुः। अपरे तु — दिवा वा यदि वा रात्रौ न कुर्यात् प्राङ्मुखश्शुचिः । प्रत्यङ्मुखस्तु कुर्वीत

विप्रपादावनेजनम् इति । वचनादादित्याभिमुखयोर्देवपित्रोः पादप्रक्षालनं तदभिमुखः कुर्यात् इति । शिष्टाचारादिह व्यवस्था । घृतयुक्तेन गोमयेनोपलिप्य पादशौचं विशिष्यते - आज्यं गोमयसंयुक्तं पादयोर्लेपयेद्यदि । पितरस्तस्य कल्पान्तममृतेनाभिषेचिताः इति स्मरणात् । (पादप्रक्षालनजलं निक्षिपेद्दक्षिणामुखः । पितॄणामितरेषां तु निक्षिपेदुत्तरामुखः इति स्मृत्यन्तरम् ।)

இவ்விஷயத்தில் சிலர்:— ''ப்ரவாஹமில்லாத ஜலத்தில் ஸ்நானம் செய்வது, ப்ராம்ஹணர்களின் கால்களை அலம்புவது, காயத்ரீ ஜபம், அர்க்யம் இவைகளை ஸுர்யனுக்கு அபிமுகமாக இருந்து செய்ய வேண்டும்'', என்ற வசனத்தால் தேவர்கள் பித்ருக்கள் இருவருக்கும் பாத ப்ரக்ஷாளனத்தை ஸுர்யாபி முகனாய்ச் செய்ய வேண்டும், என்கின்றனர். மற்றவரோவெனில், ''பகலிலாயினும், ராத்ரியிலாயினும் கிழக்கு முகமாய் ப்ராம்ஹணர்களுக்குப் பாத ப்ரக்ஷாளனத்தைச் செய்யக் கூடாது. ஆனால், மேற்கு முகமாக இருந்து செய்ய வேண்டும்,'' என்று வசனமிருப்பதால், ''ஸுர்யனுக்கு அபிமுகமாயுள்ள தேவ பித்ரு ப்ராம்ஹணர்களுக்கு அவர்களுக்கு அபிமுகனாயிருந்து செய்ய வேண்டும்'' என்கின்றனர். இவ்விஷயத்தில், சிஷ்டாசாரத்தால் வ்யவஸ்தையை அறியவும். நெய்யுடன் கூடிய கோமயத்தால் பூசி, பாதப்ரக்ஷாளனம் செய்வது ச்லாக்யமாகும். ''கோமயத்துடன் கூடிய நெய்யை ப்ராம்ஹணர்களின் பாதங்களில் பூசினால், அவனது பித்ருக்கள் கல்பம் முடியும் வரையில் அம்ருதத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டவராகின்றனர்'' என்று ஸ்ம்ருதி உள்ளது. (பித்ருக்களுடைய பாதப்ரக்ஷாளன ஜலத்தைத் தெற்கு முகமாயிருந்து வெளியில் விடவேண்டும். மற்றவர்களின் பாத ப்ரக்ஷாளன ஜலத்தை வடக்கு முகமாயிருந்து வெளியில் விட வேண்டும்,'' என்று ஓர் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டுள்ளது.)

न पवित्रपाणिः प्रक्षालयेत्। सर्वदा दर्भपाणिस्स्याद्दैवे पित्र्ये च कर्मणि। पादशौचं गन्धलेपं न कुर्याद्दर्भपाणिना॥ सपवित्रेण हस्तेन विप्रपादावनेजनात्। यथा वज्रहतो वृत्रस्तथैव पितृदेवताः। ग्रन्थिर्यस्य पवित्रस्य विप्रपादावनेजने। यथा वज्रहतो वृत्रो देवताः पितरस्तथा इत्यादि स्मरणात्। अत्र भरद्वाजः — पादावाजानु वाऽऽजङ्घमपि वा चरणद्वयम्। कूर्परान्तं करौ सम्यक् क्षालयेत् प्रथमं बुधः इति।

பவித்ரத்தைக் கையில் தரித்தவனாய் அலம்பக்கூடாது. ச்ராத்தத்தில் தேவகார்யம் பித்ருகார்யம் இவைகளில் எப்பொழுதும் பவித்ரத்தைக் கையிலுடையவனாய் இருக்க வேண்டும். பாதப்ரக்ஷாளனம், சந்தனம் பூசுவது இவைகளைத் தர்ப்பமுள்ள கையினால் செய்யக் கூடாது,'' ''பவித்ரத்துடன் கூடிய கையினால் காலை யலம்புவதினால், எவ்விதம் வ்ருத்ராஸுரன் வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்டானோ அவ்விதம் பித்ருக்களும் தேவர்களும் அடிக்கப்படுகின்றனர்,'' ''ப்ராம்ஹணர்களின் பாதப்ரக்ஷாளன ஸமயத்தில் பவித்ரத்தின் முடிப்பு இருந்தால், வ்ருத்ராஸுரன் எப்படி வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்டானோ அப்படி பித்ருக்களும் தேவர்களும் அடிக்கப்படுகின்றனர்'' என்பது முதலிய ஸ்ம்ருதி வசனங்களிருப்பதால். இவ்விஷயத்தில், பாரத்வாஜர்:— ப்ராம்ஹணர்களின் பாதங்களை முழங்கால் வரையில், அல்லது கணுக்கால் வரையில், அல்லது பாதங்களைமட்டில், கைகளை மணிக்கட்டு வரையில், அறிந்தவன் முதலில் அலம்ப வேண்டும்.

पारिजाते तु — नान्तः प्रक्षालयेत् पादौ कर्ता पित्र्यादिकर्मसु। अज्ञानाद्यदि कुर्वीत पातयेदुभयं कुलम्। पादप्रक्षालनं श्राद्धे परं गुल्फद्वयाद्यदि। कुर्वीत रोमसंस्पर्शात्तत्तोयं रुधिरं भवेत्। तिष्ठन्न क्षालयेत् पादौ क्षालयेत्तु तथा यदि। नरश्चण्डालयोनिः स्याद्यदि गङ्गां न पश्यति इति। दैवपूर्वकं पादप्रक्षालनं कुर्यात्।

பாரிஜாதத்திலோவெனில்:— ச்ராத்த கர்த்தா, பித்ரு கர்மம் முதலிய கார்யங்களில் ப்ராம்ஹணர்களின் கால்களை உள்புறத்தில் அலம்பக்கூடாது. அறியாமையினால் அவ்விதம் செய்தால், இரண்டு குலத்தையும் நரகத்தில் தள்ளுவான். ச்ராத்தத்தில் பாதப்ரக்ஷாளனத்தைக் கணுக்காலுக்கு மேல் செய்தால், ரோமங்களைத் தொடுவதால், அந்த ஜலம் ரக்தமாக ஆகும். நின்று கொண்டு பாதங்களை அலம்பக் கூடாது. அவ்விதம் அலம்பினால் கங்கையைப் பார்க்காவிடில் மனிதன் சண்டாள ஜாதியில் பிறப்பான், தேவர்களை முன்னிட்டுப் பாதப்ரக்ஷாளனம் செய்ய வேண்டும்.

तथा च ब्रह्मनिरुक्ते — पाद्यं चैव तथा चार्घ्यं दैवमादौ प्रयोजयेत् । शन्नो देवीति मन्त्रेण पाद्यं चैव प्रदापयेत् इति । पाद्यार्घ्ययोर्देवपूर्वानुष्ठानं निमन्त्रणादीनां सर्वेषां प्रदर्शनार्थम् - सदैवं भोजयेत् श्राद्धं तत्पूर्वं च प्रवर्तयेत् । अन्यथा ह्यवलुम्पन्ति सहैवासुरराक्षसाः । देवकार्यात् द्विजातीनां पितृकार्यं विशिष्यते । दैवं हि पितृकार्यस्य पूर्वमाप्यायनं स्मृतम् । तेषामारक्षभूतं तु दैवं पूर्वं नियोजयेत् । उपचारानपि तथा दैवान् पूर्वं प्रयोजयेत् इति क्रतुस्मरणात् ।

அவ்விதம், ப்ரம்ஹ நிருக்தத்தில்:— பாத்யம், அர்க்யம் இவைகளைத் தேவர்களுக்கு முதலில் கொடுக்க வேண்டும். ''சம் நோதேவீ:'' என்ற மந்த்ரத்தால் பாத்யத்தைக் கொடுக்க வேண்டும். பாத்யம், அர்க்யம் இவைகளைத் தேவர்களுக்கு முன்பு கொடுக்க வேண்டுமென்பது, வரணம் முதலிய எல்லாக் கார்யங்களையும் சொல்வதற்காகும். ''தேவர்களுடன் கூடியதாய் ச்ராத்தத்தைப் புஜிப்பிக்க வேண்டும். தேவர்களை முன்னிட்டே செய்ய வேண்டும். அவ்விதம் செய்யாவிடில், அஸுரர்களும் ராக்ஷஸர்களும் சேர்ந்து ச்ராத்தத்தை

நாசமாக்குகின்றனர். தேவகார்யத்தைவிடப் பித்ரு கார்யமென்பது ப்ராம்ஹணர்களுக்குச் சிறந்ததாகின்றது. தைவ கார்யமானது பித்ரு கார்யத்திற்கு முன்புள்ளதாய் வ்ருத்திகரமாகின்றது. பித்ருக்களுக்கு ரக்ஷகமாக ஆகின்ற தேவ கார்யத்தை முன்பு செய்ய வேண்டும். அவ்விதம் தேவர்களின் உபசாரங்களையும் முன்பு செய்ய வேண்டும்,'' என்று க்ரதுவின் ஸ்ம்ருதியிருப்பதால்,

पादप्रक्षालनं कर्ता स्वयमेव कुर्यात्, पादप्रक्षालनं कुर्यात् स्वयमेव विनीतवत् इति यमस्मरणात् । शन्नो देवीरिति मन्त्रान्ते पुरूरवार्द्रवसंज्ञका विश्वेदेवा इदं वः पाद्यमिति सामान्यनाम्ना विशेषनाम्ना च निर्दिश्य वैश्वदैविकब्राह्मणपादयोः पाद्योदकं प्रक्षिप्य, समस्तसंपत्समवाप्ति इत्यादिभिर्मन्त्रैः पादप्रक्षालनं कुर्यात्। विश्वेदेवा इति सामान्यनाम निर्देशः ।

ச்ராத்த கர்த்தா பாதப்ரக்ஷாளனத்தைத் தானே செய்ய வேண்டும். ''பாதப்ரக்ஷாளனத்தை வணக்க முடையவனாய்த் தானாகவே செய்ய வேண்டும்,'' என்று யம ஸ்ம்ருதி உள்ளது. ''சம்நோதேவீ'' என்ற மந்த்ரத்தின் முடிவில் ''புரூரவ.....பாத்யம்'' என்று ஸாமான்ய நாமம், விசேஷ நாமம் இரண்டுகளாலும் சொல்லி, வைச்வதேவ ப்ராம்ஹணர்களின் பாதங்களில் ஜலத்தை விட்டு, ''ஸமஸ்த ஸம்பத்'' என்பது முதலிய மந்த்ரங்களால் கால்களை அலம்ப வேண்டும். விச்வேதேவா: என்பது ஸாமான்ய நாமம்.

विशेषनामानि च बृहस्पतिना दर्शितानि — क्रतुर्दक्षो वसुस्सत्यः कालः काम्यस्तथैव च। धु(नि)रिश्च रोचनश्चैव तथा चैव पुरूरवाः ॥ आर्द्रवश्च दशैते तु विश्वेदेवाः प्रकीर्तिता इति । विभज्य दर्शयति शङ्खः — इष्टिश्राद्धे क्रतुर्दक्षस्सङ्कीर्त्यौ वैश्वदैविके। नान्दीमुखे सत्यवसू काम्ये च धु(नि)रिरोचनौ । पुरूरवार्द्रवौ चैव पार्वणे

समुदाहृतौ। नैमित्तिके कालकाम्यावेवं सङ्कीर्तयेदिति इति। इष्टिश्राद्धं यागादिकर्माङ्ग श्राद्धमित्यर्थः।

விசேஷ நாமங்கள் ப்ரஹஸ்பதியினால் சொல்லப்பட்டுள்ளன:— "க்ரது, தக்ஷர், வஸு ஸத்யர், காலர், காம்யர், துரி(நி), ரோசனர், புரூரவஸ், ஆர்த்ரவர், ஆகிய இந்தப் பத்துப் பேர்களும் விச்வேதேவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். இவர்களைப் பிரித்துச் சொல்லுகிறார் சங்கர்:— இஷ்டி ச்ராத்தத்தில், க்ரது, தக்ஷர் இவர்களை விச்வேதேவ ஸ்தானத்தில் சொல்ல வேண்டும். நாந்தீ ச்ராத்தத்தில், ஸத்யர், வஸு என்றவர்களும், காம்ய ச்ராத்தத்தில் துரி(நி), ரோசனர் என்றவர்களும், பார்வண ச்ராத்தத்தில் புரூரவர், ஆர்த்ரவர் என்றவர்களும், விச்வேதேவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். நைமித்திக ச்ராத்தத்தில் காலர் காம்யர் இவர்கள் விச்வேதேவர்கள். இவ்விதம் சொல்ல வேண்டும்." இஷ்டிச்ராத்தம் என்பதற்கு யாகாதி முதலியவைகளுக்கு அங்கமான நாந்தீ ச்ராத்தம் என்பது பொருள்.

एवं पित्रर्थब्राह्मणपादप्रक्षालनम्। शन्नोदेवीरिति मन्त्रान्ते पितरमुकगोत्र देवदत्तशर्मन्निदन्ते पाद्यम्, पितामहामुकगोत्र यज्ञदत्तशर्मन्निदं ते पाद्यम्, प्रपितामहामुकगोत्र विष्णुमित्रशर्मन्निदं ते पाद्यमिति, एकब्राह्मणपक्षे तु पितृपितामह प्रपितामहा अमुकगोत्रा अमुकशर्माण इदं वः पाद्यमिति विशेषः। पाद्यादि समर्पणे पितॄणां नाम गोत्रं च वक्तव्यम्।

இவ்விதம், பித்ரு ப்ராம்ஹணர்களின் பாத ப்ரக்ஷாளனம் செய்ய வேண்டும். "சம் நோதேவீ" என்ற மந்த்ரத்தின் முடிவில் "பித:....பாத்யம்", "பிதாமஹ.... பாத்யம்", "ப்ரபிதாமஹ....பாத்யம்" என்று. ஒரு ப்ராம்ஹணனாகில், "பித்ருபிதாமஹ ப்ரபிதாமஹா:..... பாத்யம்" என்று விசேஷம். பாத்யம் முதலியவைகளைக்

கொடுக்கும் பொழுது பித்ருக்களின் நாம கோத்ரங்களைச் சொல்லவேண்டும்.

तथा च मत्स्यः — नामगोत्रं पितॄणां तु प्रापकं हव्यकव्ययोः इति । हव्यकव्यग्रहणं पाद्यादीनामपि प्रदर्शनार्थम् - आवाहनेऽर्घ्ये सङ्कल्पे पिण्डदाने तिलोदके । अक्षय्यासनयोः पाद्ये गोत्रं नाम प्रकीर्तयेत् इति स्मरणात् । स्मृत्यन्तरेऽपि — आवाहनासने पाद्ये ह्यन्नदाने तथैव च । अक्षय्ये पिण्डदाने च गोत्रं नाम च कीर्तयेत् इति । हेमाद्रौ — वसुरुद्रादितिसुताः पितरः श्राद्धदेवताः । वस्वादिनामभिस्सार्धं ये कुर्वन्ति समाहिताः । श्राद्धे पितॄन् समभ्यर्च्य ते यान्ति फलमक्षयम् इति ।

அவ்விதமே, மத்ஸ்யர்:— "பித்ருக்களின் நாமம் கோத்ரம் இவைகள் ஹவ்யகவ்யங்களைச் சேர்ப்பிவிப்பதாகும்." ஹவ்ய கவ்யங்களென்றது பாத்யம் முதலியவைகளையும் சொல்வதற்காகும். "ஆவாஹனம், அர்க்யம், ஸங்கல்பம், பிண்டதானம், திலோதகம், அக்ஷய்யம், ஆஸனம், பாத்யம், இவைகளில் கோத்ரம் நாமம் இவைகளைச் சொல்ல வேண்டும்", என்று ஸ்ம்ருதி இருப்பதால், மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஆவாஹனம், ஆஸனம், பாத்யம், அன்னதானம், அக்ஷய்யம், பிண்டதானம் இவைகளில் கோத்ரம் நாமம் இவைகளைச் சொல்ல வேண்டும். ஹேமாத்ரியில்:— வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் இவர்கள் ச்ராத்த தேவர்களான பித்ருக்களாவர். எவர்கள் வஸு முதலியவர்களின் நாமங்களுடன் கவனமுடையவர்களாய் ச்ராத்தத்தைச் செய்கின்றனரோ அவர்கள் ச்ராத்தத்தில் பித்ருக்களைப் பூஜித்துச் சிறந்த கதியையடைகின்றனர்.

पैठीनसिः — वसवः पितरो रुद्राः पितामहा आदित्याः प्रपितामहा य एवं विद्वान् पितॄन् यजते वसवो रुद्रा आदित्याश्चास्य

प्रीता भवन्ति इति । अवश्यं नामगोत्रमन्त्राद्युच्चारणवद्वस्वादिरूपेण पित्रादयो ध्यातव्या इत्युक्तं भवति । निमन्त्रणप्रभृत्याश्राद्धपरि-समाप्तेर्वैश्वदैविकं प्रदक्षिणं यज्ञोपवीतिना कार्यम्, पित्र्यमपसव्यं प्राचीनावीतिना कार्यम्, यज्ञोपवीती देवानां कुर्यात् सर्वं प्रदक्षिणम्। अपसव्यं ततः कृत्वा पितॄणामप्रदक्षिणम्। दक्षिणाग्राश्च दर्भास्स्युः स च वै दक्षिणामुखः इति स्मरणात्।

**பைடீநஸி:**— வஸுக்கள் பித்ருக்களாவர், ருத்ரர்கள் பிதாமஹர்கள், ஆதித்யர் ப்ரபிதாமஹர்கள் ஆவர். இவ்விதமறிந்த எவன் பித்ருக்களைப் பூஜிக்கின்றானோ அவன் விஷயத்தில் வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் இவர்கள் ப்ரீதியுடையவராக ஆகின்றனர். நாமம், கோத்ரம், மந்த்ரம் இவைகளை உச்சரிப்பது போல் வஸு முதலியவர்களின் ரூபத்தால் பிதா முதலியவர்கள் த்யானிக்கப்பட வேண்டும் என்பது சொல்லப்பட்டதாக ஆகின்றது. வரணம் முதல் ச்ராத்தம் முடியும் வரையில் விச்வேதேவர்களைப் பற்றிய கார்யத்தை ப்ரதக்ஷிணமாய், யஜ்ஞோபவீதியாய்ச் செய்ய வேண்டும். பித்ருக்களைப் பற்றிய கார்யத்தை அப்ரதக்ஷிணமாய் ப்ராசீநா வீதியாய்ச் செய்ய வேண்டும். ''தேவர்களுக்கு யஜ்ஞோபவீதியாய் ப்ரதக்ஷிணமாய் எல்லாவற்றையும் செய்ய வேண்டும். பிறகு அபஸவ்யம் செய்து கொண்டு அப்ரதக்ஷிணமாய்ப் பித்ருக்களுடைய கார்யத்தைச் செய்ய வேண்டும். தர்ப்பங்கள் தெற்கு நுனியாக இருக்க வேண்டும். கர்த்தாவும் தெற்கு நோக்கியவனாக இருக்க வேண்டும்,'' என்று ஸ்ம்ருதி உள்ளது.

**पितृमेधसारकृत्**—सर्वं देवार्थमुपचारमुपवीती प्राङ्मुखः प्रदक्षिणं प्रागग्रैर्दर्भैर्देवतीर्थेन पूर्वं कृत्वा पितृभ्यस्सर्वं दक्षिणामुखः कुर्यात् पित्रनन्तरं देववत् सर्वं विष्णोः कुर्यात् इति । स्मृत्यन्तरेऽपि — उदङ्मुखस्तु देवानां पितॄणां दक्षिणामुखः । प्रदद्यात् पार्वणे सर्वं देवपूर्वं

विधानतः इति । बोधायनः — आचमने चाग्निमुखे चाभिश्रवणे चानुव्रजनप्रदक्षिणेषु च पश्चाद्धोमेषु यज्ञोपवीतमन्यत्र प्राचीनावीतम् इति। पश्चाद्धोमः - प्रायश्चित्तहोमः ।

பித்ருமேதஸாரகாரர்:— தேவர்களுக்காகிய உபசாரம் எல்லாவற்றையும் உபவீதியாய், கிழக்கு நோக்கியவனாய், ப்ரதக்ஷிணமாய், கிழக்கு நுனியுள்ள தர்ப்பங்களால், தேவதீர்த்தத்தால் முதலில் செய்து, பித்ருக்களுக்காகிய எல்லாவற்றையும் தெற்கு நோக்கியவனாய்ச் செய்ய வேண்டும். பித்ருக்களுக்குப் பிறகு விச்வேதேவர்களுக்குப் போல் எல்லாவற்றையும் விஷ்ணுவுக்குச் செய்ய வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— தேவர்களுக்கு வடக்குமுகமாகவும், பித்ருக்களுக்குத் தெற்கு முகமாகவும், ச்ராத்தத்தில் எல்லாவற்றையும், தேவர்களை முன்னிட்டு விதிப்படி கொடுக்க வேண்டும். போதாயனர்:— ஆசமனம், அக்னிமுகம், அபிச்ரவணம், பின் செல்வது, ப்ரதக்ஷிணம், ப்ராயச்சித்தஹோமம், இவைகளில் உபவீதம். மற்றவைகளில் ப்ராசீனாவீதம்.

अत्र कपर्दी — आघारदार्व्यग्निमुखाज्यभाग-प्रदक्षिणानुव्रजनेषु तद्वत्। आघारयोः स्विष्टकृतिप्रसिद्धं यज्ञोपवीतं हि कपर्दिनस्स्यात् इति । पितृमेधसारेऽपि — आसमाप्तेः प्राचीनावीतमन्यत्र प्राणायामाघार-होमाज्यभागाग्निमुखस्विष्टकृद्धोमप्रायश्चित्ताहुत्यभि-श्रवणाचमनप्रदक्षिणनमस्कारानु व्रजनेभ्यः इति । भाष्यकारः — निरूहोद्वासनपरिध्याधान लेखोल्लेखनादिकं पित्र्येऽपि समानम् इति। दैवसमानमित्यर्थः ।

இவ்விஷயத்தில், கபர்தீ:— ஆகாரஸமித்துக்கள், அக்னிமுகம், ஆஜ்யபாகங்கள், ப்ரதக்ஷிணம், பின்செல்வது, ஆகாரஹோமங்கள், ஸ்விஷ்டக்ருத் ஹோமம், இவைகளில் உபவீதம் என்பது கபர்தியின் மதம்,

என்பது ப்ரஸித்தம். பித்ருமேதஸாரத்திலும்:— ச்ராத்தம் முடியும் வரையில் ப்ராசீநாவீதம். ப்ராணாயாமம், ஆகாரஹோமம், ஆஜ்யபாகம், அக்னிமுகம், ஸ்விஷ்டக்ருத்ஹோமம், ப்ராயச்சித்த ஆஹுதி, அபிச்ரவணம், ஆசமனம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், பின்செல்வது இவைகளைத் தவிர்த்து. பாஷ்யகாரர்:— நிரூஹம், உத்வாஸனம், பரித்யாதானம், லேகோல்லேகனம் (கோடுகிழிப்பது) முதலியது பித்ருகார்யத்திலும் ஸமமேயாகும். (தைவகார்யத்தில் போல் என்பது பொருள்.)

स्मृत्यन्तरे — सूक्तस्तोत्रजपं त्यक्त्वा विना च परिवेषणम्। विसर्जनं सौमनस्यं स्वागतं प्रार्थनं तथा। विप्रप्रदक्षिणं चैव स्वस्तिवाचनकं तथा। पिण्डाघ्राणं दक्षिणं च प्रत्युत्थानादिकं विना। पित्र्यमन्यत् प्रकर्तव्यं प्राचीनावीतिना सदा इति । मनुः — प्राचीनावीतिना सम्यगपसव्यमतन्द्रिणा। पित्र्यमानिधनात्कार्यं विधिवद्दर्भपाणिना इति । आनिधनात् - आश्राद्धपरिसमाप्तेरित्यर्थः ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஸூக்தங்கள், ஸ்தோத்ரங்கள் இவைகளின் ஜபம், பரிமாறுவது, விஸர்ஜனம், ஸௌமனஸ்யம், ஸ்வாகதம், ப்ரார்த்தனை, ப்ராம்ஹணர்களை ப்ரதக்ஷிணம் செய்வது, ஸ்வஸ்திவாசனம், பிண்டத்தை ஆக்ராணம் செய்வது, தக்ஷிணாதானம், ப்ரத்யுத்தானம் முதலியவைகளைத் தவிர்த்துப் பித்ருக்களைப் பற்றிய மற்றக் கார்யமெலாம் ப்ராசீநாவீதியாய் எப்பொழுதும் செய்ய வேண்டும். மனு:— ப்ராசீநாவீதியாய், சோம்பலில்லாதவனாய், தர்ப்பபாணியாய்ப் பித்ருக்களைப் பற்றிய கார்யம் எல்லாவற்றையும் ச்ராத்தம் முடியும் வரையில் அப்ரதக்ஷிணமாய் விதிப்படி நன்றாகச் செய்ய வேண்டும்.

विशेषान्तरमाह कात्यायनः — दक्षिणं पातयेज्जानु देवान् परिचरन् सदा । पातयेदितरज्जानु पितॄन् परिचरन् सदा इति । बोधायनः — प्रदक्षिणं तु देवानां पितॄणामप्रदक्षिणम् । देवानामृजवो दर्भाः पितॄणां द्विगुणाः स्मृताः इति । द्विगुणाः - मध्यभङ्गेन द्विगुणीकृता इत्यर्थः । तथा शौनकः — दर्भान् द्विगुणभुग्नानासनं प्रदाय इति । आसन ग्रहणं दर्भसाध्यपितृकर्मोपलक्षणार्थम् ।

மற்ருெர் விசேஷத்தைச் சொல்லுகிறுர், காத்யாயனர்:— தேவர்களுக்கு உபசாரம் செய்யும் பொழுதெல்லாம் வலது முழங்காலைப் பூமியில் வைக்க வேண்டும். பித்ருக்களுக்கு உபசாரம் செய்யும் பொழுது இடது முழங்காலைப் பூமியில் வைக்க வேண்டும். போதாயனர்:— தேவர்களுக்கு உபசாரத்தை ப்ரதக்ஷிணமாயும், பித்ருக்களுக்கு அப்ரதக்ஷிணமாயும் செய்ய வேண்டும். தேவர்களுக்குத் தர்ப்பங்கள் மடிக்கப்படாமல் கொடுக்கப்பட வேண்டும். பித்ருக்களுக்குத் தர்ப்பங்கள் நடுவில் இரண்டாக மடிக்கப்பட்டுக் கொடுக்கப்பட வேண்டும். அவ்விதமே, சௌனகர்:— ''இரண்டாக மடிக்கப்பட்ட தர்ப்பங்களை ஆஸனமாகக் கொடுத்து'' என்று. ஆஸனம் என்றது தர்ப்பத்திஞல் செய்யக் கூடிய பித்ரு கர்மங்கள் எல்லாவற்றையும் சொல்வதற்காகும்.

आचमनविधिः — पादप्रक्षालनान्तरं कर्ता मण्डलस्योत्तरभागे ईशानदिग्भागे वा पूर्वमाचामेत्, ततो निमन्त्रित आचामेत् - मण्डलस्योत्तरे भागे विप्रस्याचमनं भवेत् । अमृतं स्याद्धि तत्तोयमन्यत्र रुधिरं भवेत् । (कुण्डस्योत्तरपूर्वे वा द्विजस्याचमनं भवेत् । दक्षिणे तु सुरातुल्यं पश्चिमे रुधिरं भवेत् । कर्तुराचमनात् पूर्वं भोक्तुराचमनं यदि । शुनो मूत्रसमं तोयमित्येवं मनुरब्रवीत् । मण्डलात् पूर्वतो देवाः पितृविप्रस्तु दक्षिणे । कर्ता चैशानभागे तु श्राद्धेष्वाचमनं क्रमात् ।) ॥

कर्तुराचमनं पूर्वं मण्डलस्योत्तरे भवेत् । अपि वैशानदिग्भागे कार्यमाचमनं तदा इति स्मरणात्।

**ஆசமன விதி** பாத ப்ரக்ஷாளனத்திற்குப் பிறகு ச்ராத்த கர்த்தா மண்டலத்துக்கு வடக்குப் பாகத்திலாவது, வடகிழக்குப் பாகத்திலாவது முதலில் ஆசமனம் செய்ய வேண்டும். பிறகு வரிக்கப்பட்டவர்கள் ஆசமனம் செய்ய வேண்டும். அந்த ஜலம் அம்ருதம் போலாகும். மற்ற இடத்திலானுல் ரக்தம் போல் ஆகும். (குண்டத்தின் வடகிழக்கிலாவது ப்ராம்ஹணனுக்கு ஆசமனம் விஹிதமாகும். தெற்குத் திக்கிலானுல் அந்த ஜலம் கள்ளுக்கு ஸமானமாகும். மேற்கிலானுல் ரக்தமாகும். ச்ராத்த கர்த்தா ஆசமனம் செய்வதற்கு முன் ச்ராத்த போக்தா ஆசமனம் செய்தால் அந்த ஜலம் நாயின் மூத்ரத்திற்கு ஸமமாகும், என்றூர் மனு. மண்டலத்திற்குக்கிழக்குத் திக்கில் தேவர்களும், தெற்குத் திக்கில் பித்ரு ப்ராம்ஹணனும், ச்ராத்த கர்த்தா வடகிழக்குத் திக்கிலும், ஆசமனம் செய்ய வேண்டும்.) மண்டலத்துக்கு வடக்கில் ச்ராத்த கர்த்தா முதலில் ஆசமனம் செய்ய வேண்டும் அல்லது வடகிழக்குத் திக்கில் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

आचमनान्तरकर्तव्यमाह क्रतुः — दर्भपाणि र्द्विराचम्य शुक्लवासा जितेन्द्रियः । परिश्रिते शुचौ देशे गोमयेनोपलेपिते । दक्षिणाप्रवणे सम्यगाचान्तान् प्रयतान् शुचीन् । आसनेषु सदर्भेषु विविक्तेषूपवेशयेत् इति । याज्ञवल्क्यः — अपराह्णे समभ्यर्च्य स्वागतेनागतांस्तु तान्। पवित्रपाणि राचान्तानासनेषूपवेशयेत्। द्वौ दैवे प्राक्त्रयः पित्र्ये उदगेकैकमेव वा इति। दैवे वैश्वदेवे, द्वौ प्राक् - प्राङ्मुखौ ब्राह्मणावुपवेश्यौ, पित्र्ये पित्रादिस्थाने त्रयः उदक् - उदङ्मुखाः उपवेश्याः, वैश्वदेवे पित्र्ये चैकैकं वोपवेशयेदित्यर्थः ।

ஆசனமத்திற்குப் பிறகு செய்யவேண்டியதைச் சொல்லுகிறார் க்ரது:— தர்ப்பத்தைக் கையிலுடையவனாய், இரு முறை ஆசமனம் செய்து, வெள்ளை வஸ்த்ரமுடையவனாய், ஜிதேந்த்ரியனாய் மறைக்கப்பட்டதும், கோமயத்தால் மெழுகப்பட்டதுமான தெற்குத் திக்கில் தாழ்ந்ததாயுள்ள சுத்தமான இடத்தில், ஆசமனம் செய்து சுத்தர்களாய் உள்ள ப்ராம்ஹணர்களைத் தர்ப்பங்களுடன் கூடிய சுத்தமான ஆஸனங்களில் உட்கார வைக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— அபராஹ்ண காலத்தில், வந்த ப்ராம்ஹணர்களை நல்வரவு கூறுவதனால் பூஜித்து, பவித்ரம் தரித்தவனாய், ஆசமனம் செய்த ப்ராம்ஹணர்களை ஆஸனங்களில் உட்கார வைக்க வேண்டும். விச்வேதேவ ஸ்தானத்தில் இருவர்களைக் கிழக்கு முகமாகவும், பித்ருஸ்தானத்தில் மூன்று பேர்களை வடக்கு முகமாகவும் உட்கார வைக்க வேண்டும். ஒவ்வொரு ஸ்தானத்திலும் ஒவ்வொரு ப்ராம்ஹணனையாவது உட்கார வைக்க வேண்டும்.

चन्द्रिकायाम् — विप्रौ तु प्राङ्मुखौ दैवे द्वौ तु पूर्वं निवेशयेत्। उत्तराभिमुखान् विप्रांस्त्रीन् पितृभ्यश्च सर्वदा इति। विज्ञानेश्वरः — पित्रादीनां त्रयाणामयुग्मान् कुशान् द्विगुणभुग्नानप्रदक्षिणं वामतो विष्टरार्थमासनोषूदकपूर्वकं दत्वा पुनरुदकं दद्यात्। अपः प्रदाय द्विगुणभुग्नान् कुशान् दत्वाऽपः प्रदाय इत्याश्वलायनस्मरणात्। एतच्चाद्यं तयोरुदकदानं वैश्वदैवे पित्र्ये च प्रतिपादनार्थं द्रष्टव्यम् इति। पितृमेधसारेऽपि — प्राङ्मुखावुदगपवर्गौ वैश्वदेवे पित्र्ये तूदङ्मुखान् प्रागपवर्गान् प्राङ्मुखान् दक्षिणापवर्गान् वा विप्रान् सदर्भोपक्लृप्तेष्वासनेषूदकदानपूर्वं द्विगुणभुग्नान् दर्भान् वामतो विष्टरार्थं दत्वा निवेश्यापः प्रदाय इति।

சந்த்ரிகையில்:— விச்வேதேவ ஸ்தானத்தில் இரண்டு ப்ராம்ஹணர்களைக் கிழக்கு முகமாய் முதலில்

உட்கார வைக்க வேண்டும். பித்ருக்களை உத்தேசித்து மூன்று ப்ராம்ஹணர்களை வடக்கு முகமாய் எப்பொழுதும் உட்கார வைக்க வேண்டும். விஜ்ஞானேச்வரர்:— பிதா முதலிய மூவர்க்கு ஒற்றைப்படையான குசங்களை இரண்டாக மடித்து அப்ரதக்ஷிணமாக இடது புறத்தில் ஆஸனத்திற்காக ஆஸனங்களில் ஜலத்தை முன்னிட்டுக் கொடுத்து, மறுபடி ஜலத்தைக் கொடுக்க வேண்டும். ''ஜலத்தைக் கொடுத்து, இரண்டாக மடித்த குசங்களைக் கொடுத்து, ஜலத்தைக் கொடுத்து'' என்ற ஆச்வலாயன வசனத்தினால். இவ்விதம் முதலிலும் முடிவிலும் ஜலத்தைக் கொடுப்பது விச்வேதேவ கார்யத்திலும் பித்ரு கார்யத்திலும் உண்டு, என்பதைச் சொல்வதற்காகும், என்றறியவும். பித்ருமேதஸாரத்திலும்:— ''விச்வேதேவ ஸ்தானத்தில் கிழக்கு முகமாய், வடக்கில் முடிவுடையவர்களாய், பித்ருஸ்தானத்தில் வடக்கு முகமாய், கிழக்கில் முடிவுடையவர்களாய், அல்லது கிழக்கு முகமாய், தெற்கில் முடிவுடையவர்களாகவாவது, ப்ராம்ஹணர்களைத் தர்ப்பத்துடன் சேர்க்கப்பட்ட ஆஸனங்களில் ஜலத்தை முன் கொடுத்து, இரண்டாக மடிக்கப்பட்ட தர்ப்பங்களை இடது பாகத்தில் ஆஸனத்திற்காகக் கொடுத்து, உட்கார வைத்து, ஜலத்தைக் கொடுத்து'' என்று

बोधायनोऽपि — अयुग्मान् ब्राह्मणान् सुप्रक्षालितपाणिपादानप आचमय्य सदर्भोपक्लृप्तेष्वासनेषु प्राङ्मुखानुपवेशयत्युदङ्मुखान् वा यदि प्राङ्मुखान् प्रागपवर्गम् इति। स एव — प्रदक्षिणं तु देवानाम् इति। देवानां ब्राह्मणाः प्रदक्षिणं दक्षिणदिगुपक्रममुदगपर्गं यथा भवति तथा आसीरन्नित्यर्थः। यमः — दक्षिणासंस्था आसीरन्नस्पृशन्तः परस्परम् इति।

போதாயனரும்:— ''ஒற்றைப்படையான ப்ராம்ஹணர்களை நன்றாக அலம்பப்பட்ட கை கால்கள் உடையவர்களை, ஆசமனம் செய்வித்துத் தர்ப்பத்துடன்

கூடிய ஆஸனங்களில் கிழக்கு முகமாய் உட்கார வைக்கவும். அல்லது வடக்கு முகமாகவாவது உட்கார வைக்கவும். கிழக்கு முகமாக உட்கார வைத்தால் தெற்கில் முடியும் படியும் வடக்கு முகமாக உட்கார வைத்தால் கிழக்கில் முடியும் படியும்,'' என்று. போதாயனரே:— ''விச்வேதேவர்களுக்கு வலமாய்'' என்று. தேவஸ்தானத்தில் உள்ள ப்ராம்ஹணர்கள் தெற்குத் திக்கில் ஆரம்பித்து வடக்குத் திக்கில் முடியும்படியாய் உட்கார வேண்டும், என்பது பொருள். யமன்:— ''தெற்குத் திக்கில் முடிவுடையவர்களாக ஒருவருக்ொருவர் தொடாமல் உட்கார வேண்டும்'' என்று.

दक्षिणासंस्था इत्यस्य प्राक् संस्था इत्यर्थः स्मृत्यन्तरेऽभिहितः— पश्चार्द्धात् समुपक्रम्य प्राच्यां निष्ठा यदा भवेत्। दक्षिणासंस्थितिर्ह्येषा पितॄणां श्राद्धकर्मणि इति निष्ठा - समाप्तिः, अस्पृशन्त इति अनुच्छिष्टदशायामपि परस्परस्पर्शो यथा न भवति यथा आसीरन्नित्यर्थः। तथा च गार्ग्यः — स्पर्शे स्पर्शे भवेत् पापमेकपङ्क्तिनियोगतः। हीनवृत्तादिपङ्क्तौ तु युक्तं तस्माद्विवेचनम् इति। चन्द्रिकायाम् — आसनेष्वासनं दद्यात् न तु हस्ते कदाचन। ददाति यदि मूढात्मा निराशाः पितरो गताः इति। प्रचेताः — दर्भांश्चैवासने दद्यान्न तु पाणौ कदाचन इति। पुराणेऽपि — आसने चासनं दद्याद्वामे वा दक्षिणेऽपि वा। पितृकर्मणि वामे वै दक्षिणे देवकर्मणि इति।

''தெற்குத் திக்கில் முடிவுடையவர்களாய்'' என்பதற்கு, ''கிழக்கில் முடிவுடையவர்களாய்'', என்று அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது, மற்ரோர் ஸ்ம்ருதியில்:— ''மேற்கில் ஆரம்பித்துக் கிழக்கில் முடிவு எப்படியாகுமோ அவ்விதம் தெற்கில் உட்காருவது ச்ராத்தத்தில் பித்ருக்களுக்குரியதாகும்'' என்று. ''தொடாதவர்களாய்''

என்பதால் போஜனத்தைத் தவிர்த்த காலத்திலும் ஒருவரையொருவர், தொடுவது எப்படி நேராதோ அவ்விதம் உட்கார வேண்டும் என்பது பொருள். அவ்விதமே, கார்க்யர்:— ஒரே பங்க்தியில் இருப்பதால் அவர்கள் தொடும் போதெல்லாம் பாபம் உண்டாகும். ஆசாரம் முதலியது குறைந்தவர்களின் பங்க்தியில் இது ஏற்படும். ஆகையால் பிரித்து வைப்பது ஆவச்யகம். சந்த்ரிகையில்:— ஆஸனங்களில் ஆஸனத்தைக் கொடுக்க வேண்டும். ஒரு காலும் கையில் கொடுக்கக் கூடாது. மூடன், கையில் கொடுப்பானுகில் பித்ருக்கள் ஆசையற்றவர்களாகச் செல்லுகின்றனர். ப்ரசேதஸ்:— தர்ப்பங்களை ஆஸனத்திலேயே கொடுக்க வேண்டும். ஒரு பொழுதும் கையில் கொடுக்கக் கூடாது. புராணத்திலும்:— ஆஸனத்திலேயே ஆஸனத்தைக் கொடுக்க வேண்டும். இடது புறத்திலாவது வலது புறத்திலாவது. பித்ரு கார்யத்தில் இடது புறத்திலும், தேவ கார்யத்தில் வலது புறத்திலும் கொடுக்க வேண்டும்.

उपवेशनक्रमः - उपवेशनक्रममाह विष्णुः — विप्रान् स्वागतान् स्वाचान्तान् यथाभूयोविद्यं कुशोत्तरेष्वासनेषूपवेशयेत् इति। यथाभूयोविद्यं - विद्यातारतम्यानुसारेण वैश्वदैविकब्राह्मणपङ्क्तौ पैतृकब्राह्मणपङ्क्तौ च प्रथमद्वितीयादिक्रमेणोपवेशयेदित्यर्थः।

உட்கார வைக்கும் க்ரமம் உட்கார வைக்கும் க்ரமத்தைச் சொல்லுகிறுர், விஷ்ணு:— "நல்வரவு கூறப்பட்டவரும், ஆசமனம் செய்தவருமான ப்ராம்ஹணர்களை, வித்யைக்கு அனுகுணமாய்த் தர்ப்பத்தை மேலாக உள்ள ஆஸனங்களில் உட்கார வைக்க வேண்டும்", என்று. வித்யைக்கு அனுகுணமாய் என்றதற்கு வித்யையின் தாரதம்யத்தை அனுஸரித்து விச்வேதேவ ப்ராம்ஹண பங்க்தியிலும் பித்ரு ப்ராம்ஹண பங்க்தியிலும் முதல்வன் இரண்டாமவன் என்ற க்ரமமாய் உட்கார வைக்க வேண்டும், என்பது பொருள்.

पैठीनसिरपि — विद्यातपोधिकानां वै प्रथमासन मुच्यते। एकपङ्क्त्युपविष्टानां भोजनादि समं स्मृतम्। अयुक्तोऽग्रासनं गच्छन् पङ्क्त्या हरति दुष्कृतम् इति। नियुक्त एव गच्छेदित्यर्थः। हारीतोऽपि — सन्तिष्ठमानेष्वर्हस्तु योऽनर्होऽग्रासनं श्रयेत्। गृह्णाति स मलं पङ्क्तेरायुषा च वियुज्यते इति। तस्मान्मान्यानतिक्रमेणैवाग्रासनं समाश्रयेदित्यभि- प्रायः। चन्द्रिकायाम्- पाणिपादमुखार्द्राश्च स्वाचान्तास्सुसमाहिताः। तेष्वासनेषु संस्थाप्या विप्रास्तेन क्रमेण तु इति। येन क्रमेणोपवेशने कृते मान्यानतिक्रमस्तेन क्रमेणेत्यर्थः।

பைடீநஸியும்:— "வித்யை, தபஸ் இவைகளால் சிறந்தவர்களுக்கு முதல் ஆஸனம் சொல்லப்படுகிறது. ஒரு பங்க்தியில் உட்கார்ந்தவர்களுக்குப் போஜனம் முதலியது ஸமமாகக் கொடுக்கப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. யோக்யதையில்லாதவன் முதல் ஆஸனத்தில் உட்கார்ந்தால் அந்தப் பங்க்தியின் பாபத்தை யடைகிறுன்'', என்று. வரிக்கப்பட்டவனுகவே முதல் ஆஸனத்தை யடையவேண்டும், என்பது பொருள். ஹாரீதரும்:— "யோக்யர்கள் இருக்கும் பொழுது அநர்ஹனுன எவன் முதலில் உட்காருகிறுனே அவன் பங்க்தியின் பாபத்தை அடைகிறுன். ஆயுளாலும் குறைவை யடைகிறுன்'' என்று. ஆகையால் பூஜ்யர்களை அதிக்ரமிக்காமலே முதல் ஸ்தானத்தை அடையவேண்டும், என்பது அபிப்ராயம். சந்த்ரிகையில்:— "கை கால் வாய் இவைகளில் ஈரம் உடையவர்களும், நன்கு ஆசமனம் செய்தவர்களும், சுத்தர்களுமான ப்ராம்ஹணர்களை அந்த ஆஸனங்களில் அந்த க்ரமமாய் உட்கார வைக்க வேண்டும்,'' என்று. எந்த க்ரமத்தால் உட்கார வைத்தால் பூஜ்யர்களுக்கு அதிக்ரமம் நேராதோ அந்த க்ரமமாய், என்பது பொருள். முன்பு ஆஸனத்தின் அமைப்பு செய்யப்படாவிடில்

சொல்லப்பட்டுள்ளது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— அவ்விடத்தில் ஆஸனங்கள் கொடுக்கப்பட வேண்டும். குசங்களுடன் எள்ளும் கொடுக்கப்பட வேண்டும். தனித்தனியே ஆஸனங்களில் எள் எண்ணெயால் தீபங்களும் வைக்கப்பட வேண்டும்.

उपवेशनप्रकारः- तमाह यमः — आसनं संस्पृशन् सव्येन पाणिना दक्षिणेन ब्राह्मणमुपसंगृह्य समाध्वमिति चोक्त्वापवेशयेत् इति । आस्यतामित्युक्त्वा चोपवेशयेदित्यर्थः । आस्यतामिति तान् ब्रूयादासनं संस्पृशन्नपि इति स्मृत्यन्तरेऽभिधानात् । धर्मः — जान्वालभ्य ततो देवानुपवेश्य ततः पितॄन् । समस्ताभि-र्व्याहृतीभिरासनेषूपवेशयेत् इति ।

உட்கார வைக்கும் ப்ரகாரம் சொல்லுகிறார், யமன்:— "இடது கையினால் ஆஸனத்தைத் தொட்டுக் கொண்டு, வலது கையினால் ப்ராம்ஹணனைப் பிடித்து, உட்காருங்கள் என்றும் சொல்லி உட்கார வைக்க வேண்டும்". ஆஸ்யதாம் என்று சொல்லி உட்கார வைக்க வேண்டும் என்பது பொருள். "ஆஸனத்தைத் தொட்டுக் கொண்டு ஆஸ்யதாம் என்று ப்ராம்ஹணர்களை நோக்கிச் சொல்ல வேண்டும்," என்று மற்றோர் ஸ்ம்ருதியில் இருப்பதால். தர்மர்:— முழங்காலைத் தொட்டுக் கொண்டு தேவர்களை உட்கார வைத்து, அவ்விதமே பித்ருக்களையும், சேர்க்கப்பட வ்யாஹ்ருதிகளால் ஆஸனங்களில் உட்கார வைக்க வேண்டும்.

उपविष्टनियमाः — उपविष्टब्राह्मणनियमाश्च स्मृत्यन्तरे दर्शिताः — पवित्रपाणयस्सर्वे ते च मौनव्रतान्विताः । उच्छिष्टोच्छिष्ट संस्पर्शं वर्जयन्तः परस्परम् इति । मौनित्वं च ब्रह्मोद्यकथाव्यतिरिक्तविषयम् । अत एव यमः — ब्रह्मोद्याश्च कथाः कुर्युः पितॄणामेतदीप्सितम् इति ।

உட்கார்ந்த ப்ராம்ஹணர்களின் நியமங்கள் - ஓர் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டுள்ளது:— ''அவர்களெல்லோரும் பவித்ரம் தரித்தவர்களாய், மௌனமுள்ளவர்களாய், ஒருவரையொருவர் தொடாதவர்களாய் உட்கார வேண்டும்'' என்று. மௌனம் என்பதும் ப்ரம்ஹோத்ய மந்த்ரங்களைச் சொல்லுவதைத் தவிர்த்த மற்றதைப் பற்றியது. ஆகையால் தான், யமன்:— ப்ரம்ஹோத்யங்களான கதைகளைச் சொல்ல வேண்டும். இது பித்ருக்களுக்கு ப்ரியமாகியது.

दर्भासनदानात् पूर्वकृत्यम् - कम्बलाद्यासनेषूपवेशनानन्तरं दर्भासनदानात् पूर्वकृत्यमुक्तं स्मृत्यन्तरे— श्राद्धभूमिं गयां ध्यात्वा ध्यात्वा देवं गदाधरम्। ताभ्यां चैव नमस्कृत्य ततः श्राद्धं प्रवर्तयेत् इति। श्राद्धं करिष्य इत्येवमुपविष्टान् ब्राह्मणान् पृच्छेदित्यर्थः। अत एवोक्तं तत्रैव — उभौ हस्तौ समौ कृत्वा जानुभ्यामन्तरे स्थितौ। सप्रश्रयश्चोपविष्टान् सर्वान् पृच्छेत् द्विजोत्तमानिति।

தர்ப்பாஸனம் கொடுப்பதற்கு முன் செய்ய வேண்டிய கார்யம். கம்பளம் முதலிய ஆஸனங்களில் உட்கார வைத்த பிறகு, தர்ப்பாஸனத்தைக் கொடுப்பதற்கு முன் செய்ய வேண்டியது சொல்லப்பட்டுள்ளது, மற்றோர் ஸ்ம்ருதியில்:— ''ச்ராத்த பூமியைக் கயை யென்றும், கதாதரனென தேவனையும் த்யானித்து, அவர்களுக்கு நமஸ்காரம் செய்து, பிறகு ச்ராத்தத்தை ஆரம்பிக்க வேண்டும்,'' என்று. ச்ராத்தத்தைச் செய்யப் போகிறேன், என்று உட்கார்ந்த ப்ராம்ஹணர்களைக் கேட்டுக் கொள்ள வேண்டும், என்பது பொருள். ஆகையாற்றான் அதிலேயே சொல்லப்பட்டுள்ளது:— ''இரண்டு கைகளையும் இரண்டு முழங்கால்களுக்கும் நடுவில் இருப்பதாய் ஸமமாய்ச் செய்து கொண்டு, வணக்கமுடையவனாய், உட்கார்ந்திருக்கும் ப்ராம்ஹணர்கள் எல்லோரையும் கேட்க வேண்டும்'' என்று.

कुरुष्वेति तैरनुज्ञातः, देवताभ्यः पितृभ्यश्च इति मन्त्रं त्रिः पठेत्। तदुक्तं ब्रह्माण्डपुराणे — श्राद्धं करिष्य इत्येवं पृच्छेद्विप्रान् समाहितः। कुरुष्वेति स तैरुक्तो मन्त्रमेतं त्रिरुच्चरेत्। देवताभ्यः पितृभ्यश्च महायोगिभ्य एव च। नमः स्वधायै स्वाहायै नित्यमेव नमो नमः। आद्येऽवसाने श्राद्धस्य त्रिरावृत्तं जपेत् सदा। पठ्यमानमिमं श्रुत्वा श्राद्धकाले उपस्थिते। पितरः क्षिप्रमायान्ति राक्षसाः प्रद्रवन्ति च इति।

''செய்யக்கடவாய்'' என்று அவர்களால் உத்தரவு பெற்று, ''தேவதாப்ய: பித்ருப்யச்ச'' என்ற மந்த்ரத்தை மூன்று தடவை சொல்ல வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது, ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— ''ச்ராத்தத்தைச் செய்யப் போகின்றேன்'' என்று கவனமுடையவனாய் ப்ராம்ஹணர்களைக் கேட்க வேண்டும்.'' ''செய்யக் கடவாய்'' என்று அவர்களால் அனுமதிக்கப்பட்டவனாய் மேல்வரும் மந்த்ரத்தை மூன்று தடவை ஜபிக்க வேண்டும். ''தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும், சிறந்த யோகிகளுக்கும், ஸ்வதா, ஸ்வாஹா என்ற தேவதைகளுக்கும் எப்பொழுதும் நமஸ்காரம், நமஸ்காரம்'' ச்ராத்தத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் இம்மந்த்ரத்தை மூன்று தடவை எப்பொழுதும் ஜபிக்க வேண்டும். ச்ராத்த காலம் ஸமீபத்திலுள்ள போது படிக்கப்படும் இம்மந்த்ரத்தைக் கேட்டுப் பித்ருக்கள் சீக்கிரமாய் வருகின்றனர். ராக்ஷஸர்கள் ஓடுகின்றனர்.

अत्र कर्तव्यान्तरमाह निगमः — अपहता इति तिलान् विकिरेत् इति। अपहता असुरा रक्षाꣳसि पिशाचा ये क्षियन्ति इति मन्त्रेण तिलान् विकीर्य, ब्राह्मणानामासने पूर्वोक्त प्रकारेण दर्भासनं दद्यात्, कुरुष्वेति स तैरुक्तो दद्याद्दर्भासनं ततः इति स्मरणात्। दर्भासनदानं च ब्राह्मणहस्ते अप आसिच्य कार्यम् — पाणिप्रक्षालनं

दत्वा विष्टरार्थान् कुशानपि । आवाहयेदनुज्ञातो विश्वेदेवास इत्यृचा इति याज्ञवल्क्यस्मृतेः । दैवे कर्मणि यवसहितदर्भासनं दद्यात्, देवानां सयवा दर्भाः इति काठकगृह्येऽभिधानात् । कम्बलाद्यासनस्य दक्षिणभागे पुरूरवार्द्रव संज्ञकानां विश्वेषां देवानामिदमासनमिति, वामे तु पितृपितामहप्रपितामहानामिदमासनमिति दर्भासनं दद्यात्। तथा चन्द्रिकायाम् — अक्षय्यासनयोष्षष्ठी द्वितीयाऽऽवाहने स्मृता। अन्नदाने चतुर्थी स्यात् शेषास्सम्बुद्धयः स्मृताः इति।

இவ்விடத்தில் செய்ய வேண்டிய மற்ருேர் கார்யத்தின் நியமத்தைச் சொல்லுகிருர் நிகமர்:— அபஹதா என்ற மந்த்ரத்தால் எள்ளுகளை இறைக்க வேண்டும் என்று. ''அபஹதா.....மந:'' என்ற மந்த்ரத்தால் எள்ளை இறைத்து ப்ராம்ஹணர்களின் ஆஸனங்களில் முன் சொல்லியபடி ஆஸனங்களைக் கொடுக்க வேண்டும். ''செய்யக்கடவாய்'' என்று ப்ராம்ஹணர்களால் சொல்லப்பட்டு, பிறகு தர்ப்பாஸனத்தைக் கொடுக்க வேண்டும் என்று ஸ்ம்ருதியிருப்பதால். தர்ப்பாஸனத்தைக் கொடுப்பதை ப்ராம்ஹணர்களின் கையில் ஜலத்தைக் கொடுத்துச் செய்ய வேண்டும். ''கையில் ஜலத்தைக் கொடுத்து, ஆஸனத்திற்கான குசங்களையும் கொடுத்து, ப்ராம்ஹணர்களின் உத்தரவு பெற்று, விச்வேதேவாஸ: என்ற ருக்கிஞல் ஆவாஹனம் செய்ய வேண்டும்,'' என்று யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி உள்ளது. தேவகர்மத்தில் யவங்களுடன் கூடிய தர்ப்பாஸனத்தைக் கொடுக்க வேண்டும். ''தேவர்களுக்கு யவங்களுடன் கூடிய தர்ப்பங்கள்'' என்று காடக க்ருஹ்யத்தில் சொல்லி உள்ளது. கம்பளம் முதலிய ஆஸனத்திற்கு வலது பாகத்தில் ''புரூரவார்த்ரவ.........ஆஸனம்'' என்றும், இடது பாகத்தில் ''பித்ருபிதாமஹ..........ஆஸனம்'' என்றும் தர்ப்பாஸனத்தைக் கொடுக்க வேண்டும். அவ்விதம், சந்த்ரிகையில்:— அக்ஷய்யம், ஆஸனம் இவைகளில்

ஷஷ்டீ விபக்தி (ஆருவது வேற்றுமை — தேவாநாம் பித்ரூணாம்). ஆவாஹனத்தில் இரண்டாவது வேற்றுமை (விச்வாந்தேவாந், பித்ரூந்). அன்னத்தைக் கொடுக்கும் பொழுது நான்காவது வேற்றுமை (விச்வேப்யோ தேவேப்ய:, பித்ருப்ய:). மற்றவைகள் ஸம்புத்திகள் ஆக வேண்டும். (விச்வேதேவா:, பிதர:) என்று.

आसनदानानन्तरकृत्यम् — अनन्तरकृत्यमाह यमः — यवहस्तस्ततो देवान् विज्ञाप्यावाहनं प्रति। आवाहयेदनुज्ञातो विश्वेदेवास इत्यृचा। विश्वेदेवाः शृणुतेति मन्त्रं जप्त्वा ततोऽक्षतान्। ओधय इति मन्त्रेण प्रकिरेत्तु प्रदक्षिणम् इति। अस्यार्थश्चन्द्रिकायामुक्तः — श्राद्धकर्ता गृहीतयवः पुरूरवार्द्रवसंज्ञकान् विश्वान्देवानावाहयामीति विज्ञाप्य तैरावाहयेत्यनुज्ञातः विश्वेदेवास आगत इत्यनया ऋचा विश्वान् देवान् ब्राह्मणेष्वावाह्य यवान् ब्राह्मणस्य दक्षिणपादे सव्यपादे च दक्षिणे जानुनि सव्यजानुनि च दक्षिणांसे वामांसे च शिरसि च समारोप्य विश्वेदेवाः शृणुतेमꣳहवम् इति मन्त्रं जपित्वा प्रदक्षिणं दक्षिणपादादिमस्तकान्तं औधयः प्रतिमोदध्वम् इति मन्त्रेणाक्षतानारोपयेत् इति।

ஆஸனம் கொடுத்த பிறகு செய்ய வேண்டியது. பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறுர், யமன்:— பிறகு யவங்களைக் கையிலுடையவனாய் விச்வேதேவர்களை ஆவாஹனத்தைக் குறித்து அறிவித்து, அனுஜ்ஞை பெற்றவனாய், 'விச்வேதேவாஸ:' என்ற மந்த்ரத்தால் ஆவாஹனம் செய்ய வேண்டும். ''விச்வேதேவா: ச்ருணுத'' என்ற மந்த்ரத்தை ஜபித்து, பிறகு அக்ஷதைகளை ''ஓஷதய:'' என்ற மந்த்ரத்தால் வலமாக இறைக்க வேண்டும். இதற்குப் பொருள் சொல்லப்பட்டுள்ளது, சந்த்ரிகையில்:— ச்ராத்த கர்த்தா யவங்களை வைத்துக் கொண்டு ''புரூரவ........ஆவாஹயாமி'' என்று அனுஜ்ஞை

செய்யப்பட்டவனுய், ''விச்வேதேவாஸ ஆகத'' என்ற மந்த்ரத்தால் விச்வேதேவர்களை ப்ராம்ஹணர்களிடத்தில் ஆவாஹனம் செய்து, யவங்களை ப்ராம்ஹணனின் வலது காலிலும், இடது காலிலும், வலது முழங்காலிலும், இடது முழங்காலிலும், வலது தோளிலும், இடது தோளிலும், தலையிலும் சேர்த்து, ''விச்வேதேவா: ச்ருணுதேமம் ஹவம்'' என்ற மந்த்ரத்தை ஜபித்து, வலமாய் வலது பாதம் முதல் தலை வரையில் ''ஓஷதய: ப்ரதிமோதத்வம்'' என்ற மந்த்ரத்தால் அக்ஷதைகளைச் சேர்க்க வேண்டும்.

तथा हेमाद्रौ — देवार्चा दक्षिणादिः सात् पादजान्वंसमूर्द्धसु। शिरोंसजानुपादेषु वामाङ्गादिषु पैतृके इति । स्मृत्यन्तरेऽपि — देवेभ्यो निखिलं दद्यात् पादजान्वंसमूर्द्धसु । शिरोंऽसजानुपादेषु वामाङ्गादिषु पैतृके। पितृभ्यो निखिलं दद्यात् स्वधाकारेण सर्वदा। अक्षय्यमासनं चैव वर्जयित्वाऽर्घ्यमेव च इति । कात्यायनस्तु — विश्वान् देवानावाहयिष्यामीति पृच्छत्यावाहयेत्यनुजानाति इति।

ஹேமாத்ரியில்:— தேவர்களின் அர்ச்சனம் வலது புறத்தில் ஆரம்பமுடையதாய்ப் பாதங்கள், முழங்கால்கள், தோள்கள், தலை இவைகளில் செய்யப்படவேண்டும். பித்ருக்களின் அர்ச்சனம் தலை, தோள்கள், முழங்கால்கள், பாதங்கள் இவைகளில் இடது புறத்தை முதலாகக் கொண்டு செய்யப்பட வேண்டும். ஓர் ஸ்ம்ருதியிலும்:— விச்வேதேவர்களுக்கு எல்லாவற்றையும் பாதங்கள், முழங்கால்கள், தோள்கள், தலை இவைகளில் கொடுக்க வேண்டும். பித்ருஸ்தானத்தில் தலை, தோள்கள், முழங்கால்கள், பாதங்கள் இவைகளில் இடது புறத்தை ஆரம்பித்துக் கொடுக்க வேண்டும். பித்ருக்களுக்கு எப்பொழுதும் எல்லாவற்றையும் அக்ஷய்யம், ஆஸனம், அர்க்யம் இவைகளைத் தவிர்த்து. ''ஸ்வதா'' என்ற சப்தத்துடன் கொடுக்க வேண்டும். காத்யாயனரோவெனில் :— ''விச்வாந்தேவாந்

ஆவாஹயிஷ்யாமி'' என்று கேட்க வேண்டும். ''ஆவாஹய'' என்று ப்ராம்ஹணன் அனுஜ்ஞை செய்ய வேண்டும்.

अत्र क्रतुदक्षसत्यादीनां च दक्षपजाप्रतेर्दुहितरि विश्वाख्यायां लोकविश्रुतायामुत्पत्तिस्समभूदित्युत्पत्तिमपि ज्ञात्वाऽऽवाहनं कर्तव्यम्, उत्पत्तिश्च तेषां पुराणेऽभिहिता— दक्षस्य दुहिता साध्वी विश्वानामपरिश्रुता। तस्याः पुत्रा महाभागा विश्वेदेवाः प्रकीर्तिताः इति। उक्तोत्पत्तिरावाहनसमये ज्ञातव्या। अत एव क्रतुदक्षादिसंज्ञां दक्षस्य दुहितर्युत्पत्तिं च ये न विदुरावाहन-कर्तारस्तेषामनुकल्पमाह शङ्खः— नाम चैव तथोत्पत्तिं न विदुर्ये द्विजातयः। श्लोकमेतं पठेयुस्ते ब्राह्मणानां समीपगाः। आगच्छन्तु महाभागा विश्वेदेवा महाबलाः। ये अत्र विहिताः श्राद्धे सावधाना भवन्तु ते इति। विश्वेदेवाः शृणुतेदं॑ हवं मे इति मन्त्रजपानन्तरमेतं श्लोकं पठेयुरित्यर्थः।

இவ்விடத்தில் க்ரது, தக்ஷர், ஸத்யர் முதலியவர்க்குத் தக்ஷப்ரஜாபதியின் புத்ரியான உலக ப்ரஸித்தையான விச்வா என்பவளிடத்தில் உற்பத்தி ஏற்பட்டது என்று உற்பத்தியை யறிந்து ஆவாஹநம் செய்ய வேண்டும். அவர்களின் உற்பத்தியும் சொல்லப்பட்டுள்ளது, புராணத்தில்:— தக்ஷப்ரஜாபதியின் பதிவ்ரதையான பெண் விச்வா என்று சொல்லப்பட்டுள்ளாள். அவளுடைய புத்ரர்கள் மஹாத்மாக்களான விச்வேதேவர்கள் என்று சொல்லப்பட்டுள்ளனர். சொல்லப்பட்டுள்ள உற்பத்தி ஆவாஹன காலத்தில் அறியத் தகுந்தது. ஆகையால்தான், க்ரது, தக்ஷர் முதலிய பெயரையும், தக்ஷ ப்ரஜாபதியின் பெண்ணினிடத்தில் உற்பத்தியையும் ஆவாஹனம் செய்பவர்கள் எவர்கள் அறியவில்லையோ அவர்களுக்கு அனுகல்பம் சொல்லுகிறார், சங்கர்:— ''விச்வேதேவர்களின் பெயரையும், உற்பத்தியையும், எந்த ப்ராம்ஹணர்கள் அறியவில்லையோ, அவர்கள்

ப்ராம்ஹணர்களின் ஸமீபத்திலிருந்து இந்த ச்லோகத்தைப் படிக்க வேண்டும்.'' ''ஆகச்சந்து..........பவந்து தே'' என்று. இதன் பொருள். மஹாத்மாக்களாயும், மஹாபலர்களாயும் உள்ள விச்வேதேவர்கள் இங்கு வரவேண்டும். இந்த ச்ராத்தத்தில் எவர்கள் விதிக்கப்பட்டுள்ளவரோ அவர்கள் கவனமுடன் இருக்க வேண்டும், என்று, விச்வேதேவா: என்ற மந்த்ரத்தைப் படித்த பிறகு இந்த ச்லோகத்தைப் படிக்க வேண்டும், என்பது பொருள்.

तथा च बोधायनेन — विश्वेदेवाः शृणुत आगच्छन्तु इति मन्त्रद्वयं विश्वेदेवावाहने विहितम्। आपस्तम्बिनामपि बोधायनोक्तमेव ग्राह्यम्। बोधायनमतं कृत्वा स्वसूत्रफलभाग्भवेत् इति स्मरणात्। यत्त्विदं वचनम् — ततो मन्त्रं जपेन्मौनी विश्वेदेवास आगत। विश्वेदेवाः शृणुतेति द्वितीयं तदनन्तरं, तृतीयं तु जपेन्मन्त्रमागच्छन्त्वित्यतः परम् इति तदाश्वलायनादि विषयम्।

போதாயனர்:— ''விச்வேதேவா: ச்ருணுத'', ''ஆகச்சந்து'' என்ற இரண்டு மந்த்ரங்கள் விச்வேதேவ ஆவாஹனத்தில் விதிக்கப்பட்டவை, என்று. ஆபஸ்தம்பிகளுக்கும் போதாயனர் சொல்லியதே க்ராஹ்யமாகும். ''போதாயனர் சொல்லியதைச் செய்தால் தனது ஸூத்ரத்தின் பலனை அடைந்தவனாவான்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். பிறகு மௌனியாய் முதலில் ''விச்வேதேவாஸ ஆகத'' இரண்டாவது, ''விச்வேதேவா: ச்ருணுத,'' மூன்றாவது ''ஆகச்சந்து'' என்று மந்த்ரங்களைச் சொல்லவேண்டும், என்ற வசனம் உள்ளதே எனில், அது ஆச்வலாயநீயர் முதலியவரைப் பற்றியது.

यद्यपि न क्वापि दश विश्वेदेवा देवतात्वेनोक्ताः, किं तु द्वौ द्वावेकस्मिन् श्राद्धे देवतात्वेनोक्तौ, तथाऽप्यावाहनादौ



पुरूरवार्द्रवसंज्ञकान् विश्वान् देवानावाहयामीत्येवं बहुवचनान्ततयैव

प्रयोगः कार्यः, विश्वान् देनावाहयिष्यामीति पृच्छति, निरङ्गुष्ठं गृहीत्वा तु विश्वान् देवान् समाह्वयेत् इति बहुवचनान्ततयैव प्रयोगदर्शनात्। एवं पित्रादिषु पितरः पितामहः प्रपितामहा इति सर्वोपचारेषु बहुवचनन्तप्रयोगो युज्यते॥

ஆனால், எவ்விடத்திலும் பத்து விச்வே தேவர்களும் தேவர்களாகச் சொல்லப்படவில்லை. அப்படியானாலும், இரண்டிரண்டு பேர்கள் ஒவ்வொரு ச்ராத்தத்தில் தேவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். ஆனாலும் ஆவாஹநம் முதலியதில் ''புரூரவ........ஆவாஹயாமி'' என்று இவ்விதம் பன்மையாகவே சொல்ல வேண்டும். ''விச்வாந் தேவாந், ப்ருச்சதி,'' ''நிரங்குஷ்டம்......ஸமாஹ்வயேத்'' என்று பன்மையாகவே ப்ரயோகம் காணப்படுவதால். இவ்விதம், பிதாமுதலியவர்களிடத்தில் பிதர:, பிதாமஹா: ப்ரபிதாமஹா: என்று எல்லா உபசாரங்களிலும் பன்மையாய்ச் சொல்வது பொருத்தமாகிறது.

चन्द्रिकायाम् — वैश्वदैविकब्राह्मणानेकत्वेऽपि न प्रतिब्राह्मणमावाहनावृत्तिः, सकृदावाहनेनैवानेकाधिष्ठाने देवता- ध्याससम्भवात्। यद्यद्देवताराधनार्थं क्रियते यवारोपणादि, तत् प्रतिब्राह्मणमावर्तनीयम्, सन्निपत्योपकारकेष्वावृत्तिं विना ब्राह्मणान्तरे कार्यासिद्धेः, विश्वेदेवाः शृणुत इति मन्त्रजपस्तु नावर्तते, सकृज्जपेनैव(जप)मन्त्रसाध्यादृष्टसिद्धेः इति।

சந்த்ரிகையில்:— விச்வேதேவஸ்தான ப்ராம்ஹணர்கள் அநேகர்களாயினும், ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் ஆவாஹனத்தை ஆவ்ருத்தி செய்ய வேண்டியதில்லை. ஒரு தடவை ஆவாஹத்தானலேயே அநேக இடங்களில் தேவதைகளின் த்யானம் ஸம்பவிக்குமாகையால். தேவதைகளை ஆராதிப்பதற்காக யவங்களைப் போடுவது முதலிய எது எது

செய்யப்படுகிறதோ அதை ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் ஆவ்ருத்தி செய்ய வேண்டும். ஸந்நிபத்யோபகாரங்களில் ஆவ்ருத்தி இல்லாவிடில் மற்ற ப்ராம்ஹணனிடத்தில் கார்யம் ஸித்திக்காதாகையால், ''விச்வேதேவா:'' என்ற மந்த்ரம் மட்டில் ஆவ்ருத்தி செய்யப்பட வேண்டியதில்லை. ஒரு தடவை ஜபிப்பதாலேயே மந்த்ரத்தாலுண்டாகும் அத்ருஷ்டம் ஸித்திப்பதால், என்று.

पैतृकानावाहयिष्य इति ब्राह्मणान् पृष्ट्वाऽऽवाहयेति तैरनुज्ञात उशन्तस्त्वेति मन्त्रेणावाह्य नमो वः पितर इति मन्त्रेणोपतिष्ठेत इति। प्रचेताश्च —— शिरः प्रभृति पादान्तं नमो व इति पैतृकम् इति। याज्ञवल्क्यः —— द्विगुणांस्तु कुशान् दत्वा ह्युशन्तस्त्वेत्यृचा पितॄन् आवाह्य तदनुज्ञातो जपेदायन्तु न स्ततः इति। पुराणे —— 'जपेदायन्तु न इति मन्त्रं सम्यगशेषतः । शुद्ध्यर्थं पितृसत्रस्य त्रिःकृत्वस्सर्वतोदिशम्। तिलांस्तु प्रक्षिपेन्मन्त्रमुच्चार्यापहता इति' इति। बोधायनादिभिरायात पितर इति पित्रावाहनमूर्जं वहन्तीरिति तिलोदकप्रक्षेपणं च विहितम्।

பித்ருஸ்தானத்தில் ஆவாஹனத்தைச் சொல்லுகிறார், ஆச்வலாயனர்:— ''பித்ரூந் ஆவாஹயிஷ்யே'' என்று ப்ராம்ஹணர்களைக் கேட்டு, ''ஆவாஹய'' என்று அவர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய், ''உசந்தஸ்த்வா'' என்ற மந்த்ரத்தால் ஆவாஹனம் செய்து, ''நமோ வ:பிதர:'' என்ற மந்த்ரத்தால் உபஸ்தானம் செய்ய வேண்டும். ப்ரசேதஸ்ஸும்:— ''நமோவ:'' என்ற மந்த்ரத்தால் தலை முதல் பாதம் வரையில் பித்ருக்களின் உபஸ்தானம். யாஜ்ஞவல்க்யர்:— இரண்டாக மடிக்கப்பட்ட குசங்களைக் கொடுத்து, அவர்களால் அனுஜ்ஞை பெற்றவனாய், ''உசந்தஸ்தவா'' என்ற மந்த்ரத்தால் பித்ருக்களை ஆவாஹனம் செய்து, பிறகு

''ஆயந்துந:'' என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். புராணத்தில்:— ''ஆயந்துந:'' என்ற மந்த்ரத்தை முழுவதும் ஜபிக்க வேண்டும். ச்ராத்தம் சுத்தமாவதற்காக மூன்று தடவை எல்லாத் திக்குக்களிலும் எள்ளுகளை இறைக்க வேண்டும். ''அபஹதா:'' என்ற மந்த்ரத்தைச் சொல்லி, என்று. போதாயனர் முதலியவர்களால், ''ஆயாதபிதர:'' என்ற மந்த்ரத்தால் பித்ருக்களின் ஆவாஹனமும், ''ஊர்ஜம் வஹந்தீ:'' என்ற மந்த்ரத்தால் திலோதகத்தை விடுவதும் விதிக்கப்பட்டுள்ளன.

अर्घ्यकल्पनम् — अनन्तरकृत्यमाह याज्ञवल्क्यः — यवैरन्ववकीर्याथ भाजने सपवित्रके । शन्नो देव्या पयः क्षिप्त्वा यवोऽसीति यवांस्तथा इति । मत्स्यपुराणे — विश्वान् देवान् यवैः पुष्पैरभ्यर्च्यासनपूर्वकम् । पूरयेत् पात्रयुग्मं तु स्थाप्यं दर्भपवित्रकम् इति । प्रचेताः — एकैकस्य तु विप्रस्य त्वर्घ्यं पात्रे विनिक्षिपेत् । यवोऽसीति यवान्नीत्वा गन्धपुष्पैस्सुपूजितम् इति । अर्घ्यपवित्रं प्रतिपात्रं भेदेन कार्यम् ।

**அர்க்யம் வைப்பது.** பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— ''பவித்ரமுள்ள பாத்ரத்தில் யவங்களைச் சேர்த்து, ''சந்நோதேவீ:'' என்ற மந்த்ரத்தால் ஜலத்தைச் சேர்த்து, ''யவோஸி'' என்ற மந்த்ரத்தால் யவங்களைச் சேர்த்து'' என்று. மத்ஸ்ய புராணத்தில்:— விச்வேதேவர்களை, ஆஸனத்தை முன் கொடுத்து, யவங்களாலும் புஷ்பங்களாலும் அர்ச்சித்து, இரண்டு பாத்ரங்களை ஜலத்தால் நிரப்ப வேண்டும். தர்ப்ப பவித்ரத்தையும் வைக்க வேண்டும். ப்ரசேதஸ்:— ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் தனித்தனி அர்க்யத்தைப் பாத்ரத்தில் வைக்க வேண்டும். ''யவோஸி'' என்ற மந்த்ரத்தால் யவங்களைச் சேர்த்துச் சந்தனம் புஷ்பங்களால் பூஜித்து, என்று. அர்க்ய பவித்ரத்தை ஒவ்வொரு பாத்ரத்திற்கும் தனித்தனியாய்ச் செய்ய வேண்டும்.

तदुक्तं चतुर्विंशतिमते — द्वे द्वे शलाके देवानां पात्रे कृत्वा पयः क्षिपेत् इति। प्रतिदेवपात्रं साग्रौ द्वौ द्वौ दर्भौ निधाय जलं क्षिपेदित्यर्थः। कात्यायनीये तु — विश्वेषां देवानामेकमर्घ्यपात्रं पितॄणां त्रीणि इति। पवित्रकरणप्रकारमाह योगयाज्ञवल्क्यः — पवित्रे स्थ इति मन्त्रेण द्वे पवित्रे च कारयेत्। अन्तर्दर्भे कुशच्छिन्ने कौशे प्रादेशसंमिते इति। कुशच्छिन्ने - कुशमन्तर्धाय छिन्ने, कौशे - कुशमये इत्यर्थः। तथा च यज्ञपार्श्वः — औषधीमन्तरे कृत्वा त्वङ्गुष्ठाङ्गुलिपर्वणोः। छिन्द्यात् प्रादेशमात्रं तु पवित्रं विष्णुदैवतम्। न नखेन न काष्ठेन न लोहेन न मृन्मयात्। नखेन तु भवेद्व्याधिः काष्ठेनार्थो न सिद्ध्यति। आयसेन भवेन्मृत्युर्मृन्मये कलहो ध्रुवम् इति। अनन्तरं स्वाहार्घ्याः इति मन्त्रेण देवतार्थब्राह्मणसमीपे-ऽर्घ्यपात्रं स्थापयेत्।

அது சொல்லப்பட்டுள்ளது, சதுர்விம்சதிமதத்தில்:— "விச்வேதேவர்களின் பாத்ரத்தில் இரண்டிரண்டு தர்ப்பைகளை வைத்து ஜலத்தை விடவேண்டும், என்று. தேவபாத்ரம் ஒவ்வொன்றிலும் நுனியுள்ள இரண்டிரண்டு தர்ப்பங்களை வைத்து ஜலத்தை விட வேண்டும், என்பது பொருள். காத்யாயநீயத்தில்:— விச்வேதேவர்களுக்கு அர்க்யபாத்ரம் ஒன்று, பித்ருக்களுக்கு மூன்று. பவித்ரம் செய்வதின் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார், யோகயாஜ்ஞவல்க்யர்:— "பவித்ரே ஸ்த:" என்ற மந்த்ரத்தால் இரண்டு பவித்ரங்களைச் செய்ய வேண்டும். உள்ளே தர்ப்பைகளை யுடையவை களும், குசத்தால் நறுக்கப்பட்டதும், குசத்தாலாகியதும், ஒட்டை ப்ரமாணமுள்ளதும் என்று. குசச்சிந்நே = குசத்தை நடுவில் வைத்து நறுக்கப்பட்டவைகள். கௌசே = குசத்தால் ஆகியவை. அவ்விதமே, யஜ்ஞபார்ச்வர்:— பெருவிரலின் ரேகைகளின் நடுவில் புல்லை வைத்துக் கொண்டு விஷ்ணுவைத் தேவதையாக உடைய பவித்ரத்தை ஒட்டை

அளவுள்ளதாக நறுக்க வேண்டும். நகத்தினாலும், கட்டையினாலும், உலோகத்தாலும், மண்மயத்தாலும் நறுக்கக் கூடாது. நகத்தால் நறுக்கினால் வ்யாதி உண்டாகும். கட்டையினாலானால் பணம் ஸித்திக்காது. இரும்பினாலானால் ம்ருத்யு உண்டாகும். மண்மயத்தினாலானால் நிச்சயமாகக் கலஹம் உண்டாகும்.

तथा गार्ग्यः —— स्वाहेति चैव देवानां होमकर्मण्युदाहरेत् इति। चन्द्रिकामाधवीययोरिदं व्याख्यातम् —— देवानां होमकर्मणि - अर्घ्यदानकर्मण्युपस्थिते अर्घ्यपात्रं स्थापयितुं स्वाहार्घ्याः इति मन्त्रमुच्चारयेदिति प्रकरणादवगम्यते इति। पैतृकार्घ्यविधिमाह विष्णुः —— दक्षिणाग्रेषु दक्षिणापवर्गेषु चमसेषु त्रिषु पवित्रान्तर्हितेष्वप आसिञ्चति शन्नो देवीरीति ॥ प्रचेता अपि —— यज्ञियवृक्षचमसेषु त्रिषु पवित्रान्तर्हितेषु एकैकस्मिन्नप आसिञ्चेत् इति।

*12.* பிறகு, "ஸ்வாஹார்க்யா:" என்ற மந்த்ரத்தால் விச்வேதேவ ப்ராம்ஹண ஸமீபத்தில் அர்க்ய பாத்ரத்தை வைக்க வேண்டும். அவ்விதமே, கார்க்யர்:— தேவர்களுக்கு ஹோமம் செய்வதில் "ஸ்வாஹா" என்று சொல்ல வேண்டும் என்று. சந்த்ரிகை, மாதவீயம் இவைகளில் இது விவரிக்கப்பட்டுள்ளது:— தேவாநாம் ஹோமகர்மணி அர்க்யதான கார்யமானது வந்தபொழுது, அர்க்யபாத்ரத்தை வைப்பதற்கு "ஸ்வாஹார்க்யா:" என்ற மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும், என்று ப்ரகரணத்தால் அறியப்படுகிறது, என்று. பித்ருக்களுக்காகிய அர்க்யத்தின் விதியைச் சொல்லுகிறார், விஷ்ணு:— தெற்கு நுனியாயுள்ளவைகளும், தெற்கில் முடிவு உடையவைகளும், பவித்ரத்தால் மறைக்கப்பட்டவைகளுமான மூன்று பாத்ரங்களில் "சந்நோதேவீ:" என்ற மந்த்ரத்தால் ஜலத்தை விட வேண்டும். ப்ரசேதஸ்ஸும்:— யாக்ஞமான வ்ருக்ஷங்களால் செய்யப்பட்டதும்,

பவித்ரங்களால் மறைக்கப்பட்டதுமாகிய மூன்று பாத்ரங்களில் ஒவ்வொன்றிலும் ஜலத்தை விடவேண்டும்.

शौनकोऽपि — तैजसाश्ममयमृन्मयेषु पात्रेष्वकद्रव्येष्वनेकद्रव्येषु वा दर्भान्तर्हितेषु शन्नो देवीरिति मन्त्रेणापो निनीय तासु तिलानावपति, तिलोऽसि सोमदेवत्यः इति । अत्र पात्रेष्विति बहुवचनं त्रिष्वेवावतिष्ठते त्रीण्येवोदपात्राणि इति प्रचेतः स्मरणात् । तथा च बैजावापः — कीर्त्वा पितॄणां त्रीण्येव कुर्यात् पात्राणि धर्मवित् । एकस्मिन्वा बहुषु वा ब्राह्मणेषु यथाविधि इति ।

சௌனகரும்:— தாதுவினால் உண்டாகியதும், கல்லினால் உண்டாகியதும், மண்ணால் உண்டாகியதும், ஒரே ஜாதியுள்ளதும், அல்லது அநேக ஜாதியுள்ளதும், தர்ப்பையினால் மறைக்கப்பட்டதும் ஆகிய பாத்ரங்களில் "சந்நோதேவீ:" என்ற மந்த்ரத்தால் ஜலத்தைச் சேர்த்து, அந்த ஜலத்தில் "திலோஸி ஸோம தேவத்ய:" என்ற மந்த்ரத்தால் எள்ளைப் போடவும். இவ்விடத்தில் பாத்ரங்களில் என்ற பன்மை மூன்றிலேயே நிற்கிறது. "அர்க்ய பாத்ரங்கள் மூன்றே" என்று ப்ரசேதஸ்ஸின் ஸ்ம்ருதியால். அவ்விதமே, பைஜாவாபர்:— "தர்மமறிந்தவன் பித்ருக்களுக்கு அர்க்ய பாத்ரங்கள் மூன்றையே செய்ய வேண்டும். ப்ராம்ஹணன் ஒருவனானாலும், பலரானாலும்" என்று.

पित्रादीनां त्रयाणामेकैकस्यानेकब्राह्मणनिमन्त्रणे सर्वेषामेकब्राह्मणनिमन्त्रणेऽपि त्रीण्येवार्घ्यपात्राणि तिलान् कीर्त्वा प्रक्षिप्य कुर्यान्नतु ब्राह्मणसङ्ख्ययेत्यर्थः । (मृत्पात्रेणार्घ्यतोयञ्च मृद्गन्धेनानुलेपनम् । घृतधूपं तु यद्दत्तं निराशाः पितरो गताः इति स्मृत्यन्तरम् । स्मृत्यर्थसारेऽपि — द्रव्याभावे द्विजाभावे यद्येको ब्राह्मणोभवेत् । पात्राणि सादयेत्त्रीणि न तु ब्राह्मणसंख्यया इति ।

பிதா முதலிய மூவருக்கு ஒவ்வொருவருக்கும் அநேக ப்ராம்ஹணர்களை வரிக்கும் விஷயத்திலும், எல்லோருக்கும் ஒரே ப்ராம்ஹணனை வரிக்கும் விஷயத்திலும், மூன்றே அர்க்ய பாத்ரங்களைத் திலங்களைப் போட்டு வைக்க வேண்டும். ப்ராம்ஹணர்களின் கணக்கைக் கொண்டு வைக்கக் கூடாது என்பது பொருள். (மண்பாத்ரத்தால் அர்க்யமும், மண்பாத்ரத்தால் சந்தனமும், நெய்யினுல் தூபமும், கொடுக்கப்பட்டால் பித்ருக்கள் ஆசையற்றவர்களாகச் செல்லுகின்றனர். என்று ஓர் ஸ்ம்ருதியில் உள்ளது.) ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலும்:— த்ரவ்யம் இல்லாவிடினும், ப்ராம்ஹணர்கள் இல்லாவிடினும், ஒரே ப்ராம்ஹணன் இருந்தால் மூன்று அர்க்ய பாத்ரங்களையே வைக்க வேண்டும். ப்ராம்ஹணர்களின் கணக்கைக் கொண்டு வைக்கக் கூடாது.

अत्र विशेषमाह बोधायनः — त्रीणि पितृणामेकमथवा इति। अर्घ्यपात्राणि विवृतानि न कुर्यान्न पुनः पूरयेन्नोद्धरेद्दर्व्याऽऽदायार्घ्यं दद्यात्। तथा च शौनकः — यदा चैवोद्धृतं पात्रं विवृतं वा यदा भवेत्। अभोज्यन्तद्भवेत् श्राद्धं क्रुद्धैः पितृगणैर्गतैः। नोद्धरेत् प्रथमं पात्रं पितृणामर्घ्यपूरितम्। आवृतास्तत्र तिष्ठन्ति पितरश्शौनकोऽब्रवीत्। आपोशनं करे कृत्वा पात्रे कृत्वा तिलोदकम्। पूरणन्तु पुनः कृत्वा सुरापानसमं भवेत् इति।

இவ்விடத்தில் விசேஷத்தைச் சொல்லுகிருர், போதாயனர்:— பித்ருக்களுக்கு அர்க்யபாத்ரம் மூன்று, அல்லது ஒன்று, என்று. அர்க்யபாத்ரங்களைத் திறந்து வைக்கக் கூடாது. மறுபடி நிரப்பக் கூடாது. எடுக்கக் கூடாது. உத்தரணியினுல் எடுத்து அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். அவ்விதமே, சௌனகர்:— எப்பொழுது அர்க்ய பாத்ரம் தூக்கப்பட்டதோ, மூடப்படாமல் இருக்கிறதோ, அப்பொழுது அந்த ச்ராத்தம் பித்ருக்கள்

கோபமுடையவர்களாய்ச் செல்வதால் அவர்களால் புஜிக்கப்படுவதில்லை. அர்க்யத்தால் நிரப்பப்பட்ட பித்ருக்களின் பாத்ரத்தைத் தூக்கக் கூடாது. பித்ருக்கள் அந்தப் பாத்ரத்தில் மறைந்தவர்களாய் இருக்கின்றனர், என்றார் சௌனகர். ஆபோசன ஜலத்தைக் கையில் வைத்துக் கொண்டும், அர்க்ய பாத்ரத்தில் திலோதகத்தைச் சேர்த்த பிறகும் மறுபடி பூர்த்தி செய்தால் அந்தத் தீர்த்தபானம் ஸுராபானத்துக்கு ஸமமாகும்.

पितृमेधसारकृत् — कृत्स्नस्कन्दने प्रणीतावन्मन्त्रवत्पुनरर्घ्यं गृह्णीयात् इति । एकदेशस्कन्दने न दोष इत्यर्थः । पैतृकार्घ्यपवित्र-विशेषोऽभिहितश्चतुर्विंशतिमते— तिस्रस्तिस्रश्शलाकास्तु पितृपात्रेषु पार्वणे इति । शलाकाः - अभिन्नाग्रा दर्भा इति यावत् । अर्घ्यपात्रेषु तिलप्रक्षेपणानन्तरं कर्तव्यमुक्तं ब्राह्मपुराणे— अर्घ्याः पुष्पैश्च गन्धैश्च ताः प्रपूज्याश्च शास्त्रवत् इति । तिलमिश्रा या अर्घ्या आपस्तासु गन्धपुष्पाणि प्रक्षिपेदित्यर्थः ।

பித்ருமேதஸாரகாரர்:— "அர்க்ய பாத்ரஜலம் முழுவதும் கொட்டிப்போனால் ப்ரணீதையைப் போல் மந்த்ரத்துடன் மறுபடி அர்க்யத்தை க்ரஹிக்க வேண்டும்," என்று. ஸ்வல்ப ஜலம் கொட்டிப் போனால் தோஷமில்லை, என்பது பொருள். பித்ருக்களுடைய அர்க்ய பவித்ரத்தில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது சதுர்விம்சதிமதத்தில்:— ச்ராத்தத்தில் பித்ருக்களின் அர்க்ய பாத்ரங்களில் ஒவ்வொன்றிலும் மும்மூன்று சலாகைகள் வைக்கப்பட வேண்டும். சலாகைகள் = நுனியுடன் கூடிய தர்ப்பங்கள் என்பது. அர்க்யபாத்ரங்களில் எள்ளைச் சேர்த்த பிறகு செய்ய வேண்டியது சொல்லப்பட்டுள்ளது, ப்ராம்ஹபுராணத்தில் :— "அந்த அர்க்யஜலம் சந்தனம் புஷ்பம் இவைகளால் விதிப்படி பூஜிக்கத் தகுந்தது" என்று. எள்ளுடன் கூடிய அர்க்ய ஜலத்தில் சந்தன புஷ்பங்களைச் சேர்க்க வேண்டுமென்பது பொருள்.

अनन्तरकर्तव्यमाह शौनकः — ताः प्रतिग्राहयिष्यन् सकृत् सकृत् स्वधाऽर्घ्या इति। ता अपो ब्राह्मणैः प्रतिग्राहयिष्यन्स्वधाऽर्घ्याः इति मन्त्रेण स्थापयेदित्यर्थः । कात्यायनः — पैतृकं प्रथमं पात्रं ततः पैतामहं न्यसेत्। प्रपैतामहं ततो न्यस्य नोद्धरेन्न च चालयेत् इति।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறுர், சௌனகர்:— அர்க்யஜலங்களை ப்ராம்ஹணர்கள் பெற்றுக் கொள்ளும்படி செய்பவனுய் ஒவ்வொரு தடவை "ஸ்வதா அர்க்யா:" என்று வைக்க வேண்டும். காத்யாயனர்:— பித்ருபாத்ரத்தை முதலில் வைக்க வேண்டும் பிறகு பிதாமஹனின் பாத்ரத்தை வைக்க வேண்டும். பிறகு ப்ரபிதாமஹனின் பாத்ரத்தை வைக்க வேண்டும். அவைகளை எடுக்கக் கூடாது, அசைக்கவும் கூடாது.

## अर्घ्यदानम्

अर्घ्यपात्रं स्थापयित्वा विप्रहस्तेऽर्घ्यं दद्यात्। तदाह गार्ग्यः— दत्वा हस्ते पवित्रं तु हस्तेष्वर्घ्यं विनिक्षिपेत् इति। याज्ञवल्क्योऽपि — या दिव्या इति मन्त्रेण हस्तेष्वर्घ्यं विनिक्षिपेत् इति। या दिव्या आपः पयसा सम्बभूवुः इति मन्त्रान्ते पुरूरवार्द्रवसंज्ञका विश्वेदेवा इदं वोऽर्घ्यमित्युक्त्वा वैश्वदैविकब्राह्मणस्यैकैकस्य दक्षिणहस्ते पवित्रेणान्तर्हिते एकैकपात्रस्थमुदकं दद्यादित्यर्थः। पैतृकार्घ्यदानमाह कात्यायनः — सपवित्रेषु हस्तेषु या दिव्या इति पितरेतत्तेऽर्घ्यं पितामहैतत्तेऽर्घ्यं प्रपितामहैतत्तेऽर्घ्यमिति ब्राह्मणाञ्जलिषु पात्राणि निनीय पितृभ्योऽक्षय्यमस्त्विति शेषं दर्भेष्ववनेजयति इति। पात्राणि - पात्रस्थोदकानीत्यर्थः।

## அர்க்யத்தைக் கொடுப்பது.

அர்க்ய பாத்ரத்தை வைத்து, ப்ராம்ஹணன் கையில் அர்க்யத்தைக் கொடுக்கவும். அதைச் சொல்லுகிறுர்

கார்க்யர்:— பவித்ரத்தைக் கையில் வைத்து, கைகளில் அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யரும்:— "யாதிவ்யா:" என்ற மந்த்ரத்தால் கைகளில் அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும், என்று. "யா திவ்யா:" என்ற மந்த்ரத்தின் முடிவில் "புரூரவ.....அர்க்யம்" என்று சொல்லி, விச்வேதேவப் ப்ராம்ஹணர்களின் ஒவ்வொருவரின் பவித்ரத்தால் மறைக்கப்பட்ட வலது கையில் ஒவ்வொரு பாத்திரத்தில் உள்ள ஜலத்தைக் கொடுக்க வேண்டும், என்பது பொருள். பித்ருக்களுக்கு அர்க்யம் கொடுப்பதைச் சொல்லுகிருர். காத்யாயனர்:— பவித்ரங்களுடன் கூடிய கைகளில் "யாதிவ்யா:" என்ற மந்த்ரத்தைச் சொல்லி, "பித: ஏதத்தே அர்க்யம்" "பிதாமஹ ஏதத்தே அர்க்யம்," "ப்ரபிதாமஹ ஏதத்தே அர்க்யம்" என்று ப்ராம்ஹணர்களின் அஞ்ஜலிகளில் பாத்ரங்களில் உள்ள ஜலத்தை விட்டு, "பித்ருப்ய: அக்ஷய்ய மஸ்து" என்று மீதியை தர்ப்பங்களில் விடவும்.

पैठीनसिः — ततो ब्राह्मणहस्तेषूदकपूर्वकं दर्भान् प्रदायोदकपूर्वकमर्घ्योदकं ददाति या दिव्याः इत्युक्त्वाऽसावेतत्ते अर्घ्योदकमित्यप उपस्पृश्यैव वेतरयोः इति। अत्र विशेषमाह यमः — या दिव्या आपः इति पात्रं पाणिभ्यामुद्धृत्य नाम गोत्रञ्च गृहीत्वा सपवित्रमर्घ्यं हस्ते दद्यात् इति। पात्रं - पात्रस्थं जलमिति यावत्। स्पृष्टमुद्धृतमन्यत्र नीतमुद्घाटितं तथा। पात्रं दृष्ट्वा व्रजन्त्याशु पितरः प्रशपन्ति च इति कात्यायनस्मरणात्।

பைடீநஸி:— "பிறகு ப்ராம்ஹணர்களின் கைகளில் ஜலத்தைக் கொடுத்து, தர்ப்பங்களைக் கொடுத்து, ஜலத்தைக் கொடுத்து, அர்க்யஜலத்தைக் கொடுக்க வேண்டும். "யாதிவ்யா:" என்ற மந்த்ரத்தைச் சொல்லி "அஸாவேதத்தே அர்க்யோதகம்" என்று அர்க்யத்தைக் கொடுத்து, ஜலத்தைத் தொடவும். இவ்விதமே

மற்றவர்களுக்கும், என்று. இவ்விடத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், யமன்:— ''யா திவ்யா:'' என்ற மந்த்ரத்தால் பாத்திரத்தில் உள்ள ஜலத்தைக் கைகளால் எடுத்து, நாமம் கோத்ரங்களைச் சொல்லி, பவித்ரத்துடன் கூடிய அர்க்யத்தைக் கையில் கொடுக்க வேண்டும், என்று பாத்ரம் என்பதற்குப் பாத்ரத்தில் உள்ள ஜலம் என்று பொருள். அர்க்ய பாத்ரம் தொடப்பட்டாலும், தூக்கப்பட்டாலும், வேறு இடத்துக்குக் கொண்டு போகப்பட்டாலும், திறக்கப்பட்டாலும், பித்ருக்கள் பார்த்துச் சீக்கிரம் செல்கின்றனர், சபிக்கின்றனர்'' என்று காத்யாயன ஸ்ம்ருதி இருப்பதால்.

प्रचेता अपि —— अप्रदक्षिणमेतेषामेकैकन्तु पितॄन् क्रमात्। संबोध्य नामगोत्राभ्यामेष तेऽर्घ्य इतीरयेत् इति । ब्राह्मण हस्ते प्रथममपो निनीयार्घ्यपवित्रं दक्षिणाग्रतया क्षिस्वा या दिव्याः इति मन्त्रान्ते अमुकगोत्रामुकशर्मन् वसुरूपास्मत्पितरिदन्ते अर्घ्यं रुद्ररूपास्मत्पितामह आदित्यरूपास्मत्प्रपितामह इदन्ते अर्घ्यमिति दक्षिणहस्ते पितृतीर्थेनार्घ्यं दत्वा अप उपस्पृशेदित्यर्थः । श्लोकगौतमः —— पूर्ववत्पृथगेकैकं एकैककेनार्घ्ययेत् क्रमात् इति ।

ப்ரசேதஸ்ஸும்:— ''இவர்களுக்கு அப்ரதக்ஷிணமாக ஒவ்வொருவராகப் பித்ருக்களை வரிசையாக ஸம்போதனமாகச் சொல்லி நாம கோத்ரங்களுடன் 'ஏஷ தே அர்க்ய:' என்ற சொல்ல வேண்டும்.'' என்று. ப்ராம்ஹணர்களின் கையில் முதலில் ஜலத்தை விட்டு, அர்க்ய பாத்ரத்தை தெற்கு நுனியாக வைத்து ''யாதிவ்யா:'' என்ற மந்த்ரத்தின் முடிவில் ''அமுககோத்ர.....அர்க்யம்'' என்று, வலது கையில் பித்ரு தீர்த்தத்தால் அர்க்யத்தைக் கொடுத்து, ஜலத்தைத் தொட வேண்டும் என்பது பொருள். ச்லோக கௌதமர்:— முன் போல் தனியாக ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அர்க்யத்தால் வரிசையாக அர்க்யம் கொடுக்க வேண்டும்.

अनन्तरकर्तव्यमाह याज्ञवल्क्यः — दत्वाऽर्घ्यं संस्रवांस्तेषां पात्रे कृत्वा विधानतः। पितृभ्यः स्थानमसीति न्युब्जं पात्रं करोत्यथ इति। एवमर्घ्यं दत्वा तेषामर्घ्याणां संस्रवान् ब्राह्मणहस्तगलिताघ्योंदकानि पितृपात्रे सङ्गृह्य पितृभ्यःस्थानमसि इत्यनेन मन्त्रेण तत्पात्रम्, न्युब्जम् अधोमुखं कुर्यादित्यर्थः। तथा च प्रचेताः — प्रथमे पितृपात्रे तु सर्वान् संभृत्य संस्रवान्। पितृभ्यः स्थानमसीति कुर्याद्भूमावधोमुखम् इति। गोभिलस्तु — न्युब्जं कुर्यात्पवित्रवत् इति। अर्घ्यपात्रपवित्राण्यादाय पितृपात्रे निधाय तैस्सह भूमौ न्युब्जं कुर्यादित्यर्थः। कात्यायनः — कुशवत्यां भूमावधोमुखं कुर्यात्तस्योपरि च कुशम् इति। निदध्यादिति शेषः। कुशग्रहणं गन्धादेः अपि प्रदर्शनार्थम्। न्युब्जं पात्रं प्रकृत्य गन्धमाल्यैः पात्रमभ्यर्च्य इति शौनकस्मृतेः।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— "அர்க்யத்தைக் கொடுத்து, அர்க்யஜலங்களின் கீழே விழும் பிந்துக்களைப் பாத்ரத்தில் விதிப்படி வைத்து, 'பித்ருப்ய:ஸ்தானமஸி' என்ற அர்க்ய பாத்ரத்தைக் கவிழ்த்து, கீழே வைக்க வேண்டும்", என்று. இவ்விதம் அர்க்யத்தைக் கொடுத்து, அந்த அர்க்யங்களின் கீழேவிழும் பிந்துக்களை, ப்ராம்ஹணர் கையினின்றும் நழுவிய அர்க்ய ஜலத்தை, பித்ரு பாத்ரத்தில் க்ரஹித்து, "பித்ருப்ய:ஸ்தானமஸி" என்ற இந்த மந்த்ரத்தால் அந்தப் பாத்ரத்தைக் கவிழ்த்ததாய்ச் செய்யவேண்டும், என்பது பொருள். அவ்விதமே, ப்ரசேதஸ்:— முதலாவதாகிய பித்ருபாத்ரத்தில் கீழே விழும் எல்லா ஜலபிந்துக்களையும் சேர்த்து, 'பித்ருப்ய:ஸ்தாநமஸி' என்ற மந்த்ரத்தால் பூமியில் கவிழ்க்க வேண்டும். கோபிலரோவெனில்:— 'பவித்ரத்துடன் கூடிய பாத்ரத்தைக் கவிழ்க்க வேண்டும்', என்று. அர்க்யபாத்ரங்களில் உள்ள பவித்ரங்களை எடுத்து, பித்ருபாத்ரத்தில் வைத்து, அவைகளுடன் பூமியில்

கவிழ்க்க வேண்டும், என்பது பொருள். காத்யாயனர்:— ''குசங்களுடன் கூடிய பூமியில் கவிழ்க்க வேண்டும். அதன் மேலும் குசங்களை வைக்க வேண்டும்'', என்று குசம் என்பது சந்தனம் முதலியதையும் சொல்லும். கவிழ்த்த பாத்ரத்தைப் பற்றி ''சந்தனம், புஷ்பம் இவைகளால் பூஜித்து'', என்று சௌனக ஸ்ம்ருதியிருப்பதால்.

न्युब्जीकरणस्य कालान्तरमाहात्रिः — अपसव्यं ततः कृत्वा पिण्डपार्श्वे समाहितः । क्षिप्त्वा दर्भपवित्राणि मोचयेत् संस्रवांस्ततः इति । एवं च पिण्डपार्श्वे सपवित्रसंस्रावमोचनविधानात् न्युब्जीकरणमपि पिण्डप्रदानानन्तरमिति गम्यते । शिष्टाचारानुगुणो विकल्पोऽत्र द्रष्टव्यः ।

கவிழ்ப்பதற்கு வேறொரு காலத்தையும் சொல்லுகிறார், அத்ரி:— பிறகு ப்ராசீனாவீதம் செய்து கொண்டு கவனமுடையவனாய்ப் பிண்டங்களின் பக்கத்தில் தர்ப்ப பவித்ரங்களைப் போட்டு அர்க்ய ஜலபிந்துக்களை விடவேண்டும்' என்று இவ்விதம் இருப்பதால், பிண்டங்களின் பக்கத்தில் பவித்ரங்களுடன் கூடிய ஜலபிந்துக்களை விடுவதை விதித்து இருப்பதால், கவிழ்ப்பதும் பிண்டப்ரதானத்துக்குப் பிறகு, என்று அறியப்படுகிறது, சிஷ்டாசாரத்துக்குத் தகுந்தபடி விகல்பமானது இவ்விஷயத்தில் அறியத்தக்கது.

गन्धादिदानम् — न्युब्जीकरणानन्तरं कर्तव्यमाह बैजावापः — तस्योपरि कुशान् दत्वा प्रदद्याद्देवपूर्वकम् । गन्धपुष्पाणि धूपं च दीपं वस्त्रोपवीतके इति । तस्य - न्युब्जीकृतस्य उपरि कुशगन्धपुष्पाणि दत्वा वैश्वदैविकब्राह्मणपूर्वकं गन्धादि दद्यादित्यर्थः । अनेनैतदुक्तं भवति - वैश्वदैविकासनदानानन्तरं पैतृकासनदानम्, वैश्वदैविकावाहनानन्तरं पैतृकावाहनमित्येवं पदार्थानुसमयेनैवासनावाहनार्घ्यगन्धपुष्पधूपदीपाच्छादनाख्याः पदार्था वैश्वदैविकाः

पैतृकाश्चानुष्ठेयाः, न तु वैश्वदैविकासनाद्याच्छादनान्तपदार्थकाण्डा-दूर्ध्वं पैतृकासनादिपदार्था इति पदार्थानुसमयेनानुष्ठानं न्याय्यम्। एवं हि तेषां प्रधानप्रत्या-सत्तिर्भवति, न वैषम्यं च, अन्यथा केषाञ्चित् प्रधानभूतपैतृक-पदार्थप्रत्यासत्तिः केषाञ्चिन्नेति वैषम्यमापद्यते।

சந்தனம் முதலியதைக் கொடுப்பது. கவிழ்த்த பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிருர், பைஜாவாபர்:— ''அர்க்யபாத்ரத்தின் மேல் குசத்தை வைத்து, விச்வேதேவர் முதலாக சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், வஸ்த்ரம், உபவீதங்கள் இவைகளைக் கொடுக்க வேண்டும்'', என்று. தஸ்ய = கவிழ்க்கப்பட்ட பாத்திரத்தின் மேல் தர்ப்பம், சந்தனம், புஷ்பம் இவைகளைக் கொடுத்து விச்வேதேவ ப்ராம்ஹணனை முதலாகச் சந்தனம் முதலியவைகளைக் கொடுக்க வேண்டும் என்பது பொருள். இதனுல் இது சொல்லப்பட்டதாகிறது — ''விச்வேதேவ ப்ராம்ஹணர்களுக்கு ஆஸனம் கொடுத்த பிறகு பித்ரு ப்ராம்ஹணர்களுக்கு ஆஸனம் கொடுக்க வேண்டும். விச்வேதேவ ஆவாஹனத்திற்குப் பிறகு பித்ருக்களின் ஆவாஹனம் என்று, இவ்விதம் பதார்த்தானு ஸமயத்தாலேயே ஆஸனம், ஆவாஹனம், அர்க்யம், சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், வஸ்த்ரம் என்று பெயருடைய பதார்த்தங்கள் விச்வேதேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் அனுஷ்டிக்கத்தக்கது. விச்வேதேவ ப்ராம்ஹணர்களுக்கு ஆஸனம் முதல் வஸ்த்ரம் வரையிலுள்ள கார்யங்களைச் செய்தபிறகு, பித்ரு ஸ்தான ப்ராம்ஹணர்களுக்கு ஆஸனம் முதலிய பதார்த்தங்கள் செய்வதென்பது இல்லை. பதார்த்த அனுஸமயமாய் அனுஷ்டிப்பதே ந்யாயம் ஆகும். இவ்விதமாகில், அவர்களுக்கு ப்ரதானத்துடன் ஸாமீப்யம் ஏற்படுகிறது. பேதமும் ஏற்படாது. இப்படிச்செய்யாவிடில், சிலவற்றிற்கு ப்ரதான பூதமான பித்ரு ஸம்பந்தமான பதார்த்தங்களுடன் ஸாமீப்யம் ஏற்படும். சிலவற்றிற்கு ஏற்படாது.

अत्र केचिदाहुः — अपसव्यं ततः कृत्वा पितॄणामप्रदक्षिणम् इति याज्ञवल्क्येन वैश्वदैविकपदार्थकाण्डादूर्ध्वं पैतृकार्चनविधानात् काण्डानुसमयो युक्तः इति । यथा शिष्टाचारमिह व्यवस्था । विष्णुनाऽपि गन्धादिदानमुक्तम् — अनुलेपनवस्त्रालङ्करणपुष्प-धूपदीपादि पित्रर्थब्राह्मणहस्ते अपो निनीय इति । विलेपनं विप्राः स्वयं कुर्युः श्राद्धकर्ता वा । तत्र व्यासः - दत्वा विप्रकरे गन्धान् गन्धद्वारेति पूजयेत् इति ।

இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் :— ''பிறகு ப்ராசீனாவீதம் செய்து கொண்டு, பித்ருக்களுக்கு அப்ரதக்ஷிணமாய்'', என்று யாஜ்ஞவல்க்யரால் விச்வேதேவ உபசாரங்களைச் செய்த பிறகு, பித்ரு பிராம்ஹண அர்ச்சனம் விதிக்கப்பட்டிருப்பதால் காண்டானு ஸமயமே யுக்தம் என்கின்றனர்'', என்று. இவ்விஷயத்தில் சிஷ்டாசாரப்படி வ்யவஸ்தையை அறியவும். விஷ்ணுவினாலும் சந்தனம் முதலியதைக் கொடுப்பது சொல்லப்பட்டுள்ளது:— ''சந்தனம், வஸ்த்ரம், அலங்காரம், புஷ்பம், தூபம், தீபம் முதலியதை பித்ரு ப்ராம்ஹணர்களின் கையில் ஜலத்தைக் கொடுத்து'', என்று. சந்தனம் பூசுவதை ப்ராம்ஹணர்கள் தாமே செய்து கொள்ளலாம். ச்ராத்தகர்த்தாவாவது செய்யலாம். அவ்விஷயத்தில், வியாஸர்:— ப்ராம்ஹணர்களின் கையில் ''கந்தத்வாராம்'' என்ற மந்த்ரத்தால் சந்தனத்தைக் கொடுத்துப் பூஜிக்கவும்.

शातातपः — पवित्रं तु करे कृत्वा यस्समालभते द्विजान् । राक्षसानां भवेत् श्राद्धं निराशाः पितरो गताः इति । समालम्भनं - गन्धैर्विलेपनम् । देवलः — यज्ञोपवीतं विप्राणां स्कन्धान्नैवावतारयेत् । गन्धादिपूजासिद्ध्यर्थं दैवे पित्र्ये च कर्मणि इति । शङ्खः — उपवीतं कटौ कृत्वा यः कुर्यात् गात्रलेपनम् । एकवासाश्च योऽश्नीयान्निराशाः पितरो गताः इति ।

சாதாதபர்:— பவித்ரத்தைக் கையில் தரித்து எவன் ப்ராம்ஹணர்களுக்குச் சந்தனம் பூசுகிருனே அவன் செய்யும் ச்ராத்தம் ராக்ஷஸர்களுக்கு என்ருகும். பித்ருக்கள் ஆசையற்றுப் போவார்கள். தேவலர்:— தேவகார்யத்திலும் பித்ருகார்யத்திலும் சந்தனம் முதலியதால் பூஜை செய்வதற்காக ப்ராம்ஹணர்களின் தோளிலிருந்து யஜ்ஞோபவீதத்தை இறக்கக் கூடாது. சங்கர்:— யஜ்ஞோபவீதத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு எவன் பூசிக்கொள்வானே, எவன் ஒரே வஸ்த்ரமுடையவனுகப் புஜிப்பானே, அவனுல் புஜிக்கப்பட்ட அந்த ச்ராத்தத்தில் பித்ருக்கள் ஆசையற்றுப் போகின்றனர்.

क्रतुः — ललाटे वर्तुलं दृष्ट्वा स्कन्धे मालां तथैव च। निराशाः पितरो यान्ति दृष्ट्वा च वृषलीपतिम् इति। एवं च, वर्जयेत्तिलकं फाले श्राद्धकर्मणि सर्वदा। तिर्यग्वाऽप्यूर्ध्वपुण्ड्रं वा धारयेत् श्राद्धकर्मणि इति वर्तुलाकारपुण्ड्रस्य निषेधाच्चन्दनं तु यथा रुचि इति स्मरणादूर्ध्वपुण्ड्रं तिर्यक्पुण्ड्रं वा यथारुचि कर्तव्यम् । मृद्भस्मादिधारणनिषेधस्तु पुण्ड्रनिरूपणावसरे प्रतिपादितः।

க்ரது:— ''நெற்றியில் வட்டமான திலகத்தையும், தோளில் புஷ்பமாலையையும், வ்ருஷளீபதியையும் பார்த்தால் பித்ருக்கள் ஆசையற்றவர்களாகச் செல்லுகின்றனர்,'' என்று இவ்விதம் இருப்பதால், ''ச்ராத்தத்தில் எப்பொழுதும் நெற்றியில் திலகத்தை வர்ஜிக்க வேண்டும். குறுக்கான புண்ட்ரத்தையாவது, ஊர்த்வ புண்ட்ரத்தையாவது ச்ராத்தத்தில் தரிக்கவும்'', என்று வட்டமான புண்ட்ரத்துக்கு நிஷேதம் இருப்பதால், ''சந்தனத்தை இஷ்டம் போல்,'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஊர்த்வ புண்ட்ரத்தையாவது, த்ரிபுண்ட்ரத்தையாவது இஷ்டப்படி தரிக்கவும். மண் விபூதி, முதலியதைத் தரிப்பதின் நிஷேதம் புண்ட்ர நிரூபணம் சொல்லிய பொழுது சொல்லப்பட்டுள்ளது.

स्कन्धे मालाधारणे दोषस्मरणात् शिरस्येव विप्रेण माला धार्या, तत्रापि शिखायामेव धार्या, न नियुक्तश्शिखावर्जं माल्यं शिरसि वेष्टयेत् इति वृद्धमनुस्मरणात्। पुष्पदाने मन्त्रमाह विष्णुः — पुष्पावतीः इति पुष्पं दद्यात् इति। औषधयः प्रतिमोदध्वमेनं पुष्पावतीस्सुपिप्पलाः। अयं वो गर्भ ऋत्वियः प्रत्न९ सधस्थमासदत् इति मन्त्रस्य मध्यप्रतीकोपादानमेतत्। धूपदाने मन्त्रमाह व्यासः — धूपार्थे धूरसीत्युक्त्वा दद्यात् सघृतगुग्गुलुम् इति। हस्तवातप्रदापितो धूपो न विप्रेण सेव्यः। तथा च शातातपः — हस्तवाताहतं धूपं ये पिबन्ति द्विजोत्तमाः। वृथा भवति तत् श्राद्धं तस्मात्तं परिवर्जयेत् इति। स्मृत्यन्तरे — पाददेशे तु यद्दीपं धूपं च मुखदेशतः। यो ददाति स मूढात्मा सोऽन्धे तमसि मज्जति इति।

தோளில் புஷ்ப மாலையைத் தரிப்பதில் தோஷம் சொல்லியிருப்பதால், தலையிலேயே ப்ராம்ஹணனால் புஷ்பமாலை தரிக்கப்பட வேண்டும். தலையிலும் சிகையிலேயே தரிக்கப்பட வேண்டும். ''ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் புஷ்பமாலையைச் சிகையைத் தவிர்த்துச் சிரஸில் தரிக்கக் கூடாது'' என்று வ்ருத்தமனுவின் ஸ்ம்ருதி உள்ளது. புஷ்பத்தைக் கொடுப்பதில் மந்த்ரத்தைச் சொல்லுகிறார், விஷ்ணு:— ''புஷ்பாவதீ:'' என்ற மந்த்ரத்தால் புஷ்பத்தைக் கொடுக்க வேண்டும். தூபத்தைக் கொடுப்பதில் மந்த்ரத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:— ''தூபத்திற்காக ''தூரஸி'' என்ற மந்த்ரத்தைச் சொல்லி நெய்யுடன் கூடிய குக்குலு தூபத்தைக் கொடுக்க வேண்டும்'', என்று. கைக்காற்றினால் தூண்டிய தூபமானது ப்ராம்ஹணரால் ஸேவிக்கத் தகுந்ததல்ல. அவ்விதம், சாதாதபர்:— கைக்காற்றினால் அடைவிக்கப்பட்ட தூபத்தை ப்ராம்ஹணர்கள் அடைந்தால், அந்த ச்ராத்தம் வீணாக ஆகின்றது. ஆகையால் அவ்வித தூபத்தை வர்ஜிக்க

வேண்டும். ஓர் ஸ்ம்ருதியில்:— எந்த மூடன் கால் ப்ரதேசத்தில் தீபத்தையும், முக ப்ரதேசத்தில் தூபத்தையும் கொடுக்கின்றானோ அவன் நரகத்தை யடைகிறான்.

हेमाद्रौ — प्रतिपात्रं द्विजे दीपाः स्थापनीयाः प्रयत्नतः। पितृयानेषु मार्गेषु सदाऽऽलोकः प्रजायते इति। व्यासोऽपि — स्थाप्याः प्रतिद्विजं दीपाः श्वेतसूत्रजवर्तयः। गव्येन माहिषेणापि घृतेन कृततेजनाः। अथवा तिलतैलेन पूरिता विमलार्चिषः। पितॄनुद्दिश्य दातव्याः प्रत्येकं च यथाविधि। तेनाऽऽलोकेन पितरो दीप्यन्ते दिवि सर्वतः। श्राद्धभोजनकाले तु दीपो यदि विनश्यति। पुनरन्नं न भोक्तव्यं भुक्त्वा चान्द्रायणं चरेत्। कर्तुरायुष्यहानिः स्यात् पुनः श्राद्धं समाचरेत् इति।

ஹேமாத்ரியில்:— ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் பாத்ர ஸமீபத்தில் தீபத்தை வைக்க வேண்டும், ப்ரயத்னத்துடன். அவனுக்குப் பித்ருலோக மார்க்கத்தில் எப்பொழுதும் வெளிச்சம் உண்டாகிறது. வ்யாஸரும்:— ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் வெள்ளை நூலினால் திரியுள்ளதுகளும், பசுநெய் அல்லது எருமை நெய் அல்லது தில எண்ணெய் இவைகளுடனும் கூடியதுமான தீபங்கள் நல்ல ஜ்வாலை உடையவைகளாக வைக்கப்பட வேண்டும். பித்ருக்களை உத்தேசித்துத் தனித் தனி விதிப்படி கொடுக்கப்பட வேண்டும். அந்த ப்ரகாசத்தால் பித்ருக்கள் ஸ்வர்க்கத்தில் எங்கும் ப்ரகாசிக்கின்றனர். ச்ராத்த போஜன காலத்தில் தீபம் அணைந்து விடுமானால் மறுபடி அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். கர்த்தாவுக்கு ஆயுஸ் குறையும். மறுபடி ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

विष्णुधर्मोत्तरे — यथा निहन्ति ध्वान्तानि दीपः प्रज्वलितोऽभितः। तथैव सर्वपापानि श्राद्धे दत्तो निहन्ति सः इति। संग्रहे — आसने स्वासनं ब्रूयादर्घ्ये स्वर्घ्यं द्विजो वदेत्। सुगन्धश्च

सुपुष्पाणि सुमाल्यानि सुधूपकः । सुज्योतिश्च सुदीपश्च स्वाच्छादनमिति क्रमात् इति । इदं व आसनमिदं वोऽर्घ्यं इत्येवमासनादिषु कर्त्रा दत्तेषु स्वासनमित्यादीनि निमन्त्रितो ब्रूयात् इत्यर्थः ।

விஷ்ணுதர்மோத்தரத்தில்:— ஜ்வலிக்கின்ற தீபம் எப்படி நாலு புறத்திலும் இருளைப் போக்குகின்றதோ, அவ்விதமே ச்ராத்தத்தில் கொடுக்கப்பட்ட தீபம் பாபங்களைப் போக்குகின்றது. ஸங்க்ரஹத்தில்:— ஆஸனம் கொடுக்கப்பட்டால் ப்ராம்ஹணன் "ஸ்வாஸனம்" என்று சொல்ல வேண்டும். அர்க்யத்தில் "ஸ்வர்க்யம்" என்றும், "ஸுகந்தம்", "ஸுபுஷ்பாணி", "ஸுமால்யானி", "ஸுதூப:", "ஸுஜ்யோதி:", "ஸுதீப:", ஸ்வாச்சாதனம், என்று முறையே ஒவ்வொரு உபசாரத்திலும் சொல்லவேண்டும். "இதம்வ ஆஸனம்", "இதம்வோ அர்க்யம்" என்று இம்மாதிரி ஆஸனம் முதலியவைகள் கர்த்தாவினால் கொடுக்கப்பட்ட பொழுது, "ஸ்வாஸனம்" என்பது முதலியதை வரிக்கப்பட்ட ப்ராம்ஹணன் சொல்ல வேண்டும், என்பது பொருள்.

स्मृत्यन्तरे — अर्चयेत् ब्राह्मणान् पूर्वं प्रतिसांवत्सरादिके । भूमिशुद्धिं ततः कुर्यात् पश्चात् पात्रं तु निक्षिपेत् । पूर्वं पात्रं तु निक्षिप्य पश्चादभ्यर्चने कृते । यदन्नं पात्रनिक्षिप्तं सुरामांससमं हि तत् इति । गन्धादिभिर्ब्राह्मणानभ्यर्च्याग्नौकरणं कृत्वा भूमिशुद्धिं कृत्वा पश्चात् भोजनपात्रं निक्षिपेदित्यर्थः । अपेतवीत इति मन्त्रेण भूमिशुद्धिमाचरन्ति शिष्टाः । अन्ये तु अपेतवीत इति भूमिशुद्धेर्बोधायनादिभिरत्रानुक्तत्वात् अपहता असुरा रक्षांसि पिशाचा ये क्षियन्ति इति तिलप्रक्षेप एव भूमिशुद्धिरित्याहुः ।

ஓர் ஸ்ம்ருதியில்:— "ப்ரத்யாப்திகம் முதலியதில் முதலில் ப்ராம்ஹணர்களை அர்ச்சிக்க வேண்டும். பிறகு

ஸ்தல சுத்தியைச் செய்ய வேண்டும். பிறகு போஜன பாத்ரத்தை வைக்க வேண்டும். முதலில் போஜன பாத்ரத்தை வைத்து, பிறகு அர்ச்சனம் செய்யப்பட்டால், பாத்ரத்தில் வைக்கப்பட்ட அன்னம் எதுவோ அது ஸூரைக்கும் மாம்ஸத்திற்கும் ஸமமாகும்'', என்று. சந்தனம் முதலியவைகளால் ப்ராம்ஹணர்களைப் பூஜித்து, அக்னியில் ஹோமம் செய்து, ஸ்தல சுத்தி செய்து, பிறகு போஜன பாத்ரத்தை வைக்க வேண்டும், என்பது பொருள். ''அபேதவீத'' என்ற மந்த்ரத்தால் சிஷ்டர்கள் ஸ்தல சுத்தியைச் செய்கின்றனர். சிலரோவெனில், ''அபேதவீத'' என்று ஸ்தலசுத்தியைப் போதாயனர் முதலியவர்கள் ச்ராத்தத்தில் சொல்லாததால், ''அபஹதா அஸூரா:'' என்ற மந்த்ரத்தால் எள்ளை இறைப்பதே பூமி சுத்தி என்கின்றனர்.

अग्नौकरणाम् - गन्धपुष्पादिभिर्ब्राह्मणानभ्यर्च्य अग्नौकरणाख्यं कर्म कुर्यात् । तदाह कात्यायनः — गन्धान् ब्राह्मणसात्कृत्वा पुष्पाण्यृतुभवानि च । धूपं चैवानुपूर्व्येण ह्यग्नौ कुर्यादतः परम् इति । ऋतुभवानि - स्वोद्भवकालत्वेन प्रसिद्धवसन्तादिकालभवानि पुष्पाणि । चशब्देन दीपादिकं गृह्यते । हारीतः — अथोद्धृत्यान्नं पङ्क्तिमूर्धन्यं सर्वान् वा पृच्छत्यग्नौ करिष्य इति ।

அக்னியில் ஹோமம். சந்தனம், புஷ்பம் முதலியவைகளால் ப்ராம்ஹணர்களைப் பூஜித்து, அக்னௌகரணம் என்கிற கார்யத்தைச் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார், காத்யாயனர்:— ''சந்தனத்தை ப்ராம்ஹணர்களுக்கு ஸமர்ப்பித்து, அந்தந்த வஸந்தாதி காலங்களில் கிடைக்கும் புஷ்பங்களையும், தூபத்தையும் க்ரமமாகக் கொடுத்து, பிறகு அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும், என்று. ''ச'' என்றதால் தீபம் முதலியது சொல்லப்படுகிறது. ஹாரீதர்:— பிறகு அன்னத்தை எடுத்துக் கொண்டு பங்க்தியில் முதலில் இருக்கும் ப்ராம்ஹணனையாவது எல்லோரையுமாவது கேட்க வேண்டும், ''அக்னௌ கரிஷ்யே'' என்று.

पारस्करः — दत्वा गन्धादि धूपांश्च सर्पिष्मद्धविरुद्धरेत् । पैतृकैरभ्यनुज्ञातो जुहोति पितृयज्ञवत् इति । पैतृकैर्ब्राह्मणैरिति शेषः । तथा च मनुः — तेषामुदकमानीय सपवित्रांस्तिलानपि । अग्नौ कुर्यादनुज्ञातो ब्राह्मणो ब्राह्मणैस्सह इति । सह पैतृकैर्ब्राह्मणैस्सर्वैर्युगपदनुज्ञात इत्यर्थः । आश्वलायनः — उद्धृत्य घृताक्तमनुज्ञापयत्यग्नौ करिष्ये करवै करवाणीति वा प्रत्यभ्यनुज्ञा क्रियतां कुरुष्व कुर्वित्यथाग्नौ जुहोति यथोक्तं पुरस्तात् इति ।

பாரஸ்கரர்:— ''சந்தனம் முதலியதையும் தூபத்தையும் கொடுத்து, நெய்யுடன் கூடிய ஹவிஸ்ஸை எடுக்க வேண்டும். பித்ரு ஸ்தான ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய், பித்ரு யஜ்ஞம் போல் ஹோமம் செய்ய வேண்டும்'', என்று. அவ்விதமே, மனு:— அவர்களுக்குத் தீர்த்தத்தைக் கொடுத்து, பவித்ரங்களுடன் கூடிய எள்ளையும் கொடுத்து, எல்லா ப்ராம்ஹணர்களாலும் சேர்ந்து அனுஜ்ஞை செய்யப்பட்டவனாகிய கர்த்தா அக்னியில் ஹோமத்தைச் செய்ய வேண்டும். ஆச்வலாயனர்:— நெய்யுடன் கூடிய அன்னத்தை எடுத்துக் கொண்டு, ''அக்னௌ கரிஷ்யே'' என்று ப்ராம்ஹணர்களைக் கேட்கவும். ''கரவை'' அல்லது ''கரவாணி'' என்றாவது கேட்கவும். அவர்களால் அனுஜ்ஞை ''க்ரியதாம்'' அல்லது ''குருஷ்வ'' அல்லது ''குரு'' என்றாவது சொல்லப்பட வேண்டும். பிறகு முன் சொல்லியபடி அக்னியில் ஹோமத்தைச் செய்யவும்,

कात्यायनः — उद्धृत्य घृताक्तमन्नं पृच्छत्यग्नौ करिष्य इति कुरुष्वेत्यनुज्ञातः पिण्डपितृयज्ञवद्धुत्वा इति । प्रचेताः — ओं कुरुष्वेत्यनुज्ञातो हुत्वाऽग्नौ पितृयज्ञवत् इति । उद्ध्रियतामग्नौ च क्रियतामित्यामन्त्रयते काममुद्ध्रियतां काममग्नौ च क्रियताम् इत्यतिसृष्ट उद्धरेज्जुहुयाच्च इत्येवं बोधायनोऽपि ॥ याज्ञवल्क्यः — अग्नौ

करिष्यन्नादाय पृच्छेदन्नं घृताप्लुतम्। कुरुष्वेत्यभ्यनुज्ञातो हुत्वाऽग्नौ पितृयज्ञवत्। हुतशेषं प्रदद्यात्तु भाजनेषु समाहितः। यथालाभोपपन्नेषु रौप्येषु तु विशेषतः इति।

காத்யாயனர்:— ''நெய்யுடன் கூடிய அன்னத்தை எடுத்துக் கொண்டு ''அக்னௌ கரிஷ்யே'' என்று கேட்க வேண்டும். ''குருஷ்வ'' என்று அவர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டு, பிண்ட பித்ரு யஜ்ஞத்திற்போல் ஹோமம் செய்து'' என்று. ப்ரசேதஸ்:— ''ஓம் குருஷ்வ'' என்று அனுஜ்ஞை செய்யப்பட்டு, பிண்ட பித்ருயஜ்ஞத்திற் போல் ஹோமத்தைச் செய்து'' என்று. ''உத்ரியதாமக்னௌ ச க்ரியதாம்'' என்று கர்த்தா கேட்க வேண்டும். ''காமமுத்ரியதாம் காமமக்னௌ ச க்ரியதாம்'' என்று ப்ராம்ஹணர்கள் அனுஜ்ஞை செய்த பிறகு எடுக்க வேண்டும். ஹோமம் செய்யவேண்டும்'' என்றார் போதாயனரும். யாஜ்ஞவல்க்யர்:— அக்னியில் ஹோமம் செய்யப்போகிறவனாய் நெய்யினால் நனைக்கப்பட்ட அன்னத்தை எடுத்துக் கேட்க வேண்டும். ''குருஷ்வ'' என்று அவர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய் அக்னியில் பிண்ட பித்ரு யஜ்ஞத்திற் போல் ஹோமத்தைச் செய்யவும். ஹோம சேஷத்தைக் கவனமுடையவனாய்க் கிடைத்த போஜன பாத்ரங்களில் (இலை) வைக்க வேண்டும். வெள்ளிப் பாத்ரங்களில் வைப்பது விசேஷமாகும்.

अत्र विज्ञानेश्वरः — अग्नौ करिष्यन् घृताप्लुतमन्नमादायाग्नौ करिष्य इति ब्राह्मणान् पृच्छेत्, घृतग्रहणं सूपशाकादि निवृत्त्यर्थम्, ततस्तैः कुरुष्वेत्यभ्यनुज्ञातस्समिधमुपसमाधाय मेक्षणेनादायावदान-सम्पदा सोमाय पितृमते स्वधानमः, अग्नये कव्यवाहनाय स्वधानमः इति पिण्डपितृयज्ञकल्पेनाग्नौ जुहुयात्ततो मेक्षणमग्नौ प्रहृत्य हुतशेषं मृन्मयवर्जं यथालाभोपपन्नेषु विशेषतो रौप्येषु पित्रादिभाजने दद्यात् न तु वैश्वदेवभाजनेष्वित्यर्थः।

இவ்விஷயத்தில், விஜ்ஞானேச்வரர்:— அக்னியில் ஹோமம் செய்யப் போகிறவனாய், நெய்யினால் நனைந்த அன்னத்தை எடுத்துக்கொண்டு, ''அக்னௌகரிஷ்யே'' என்று ப்ராம்ஹணர்களைக் கேட்க வேண்டும். ''நெய்'' என்று சொல்லியது பருப்பு கறிகாய் முதலியதை நிவர்த்திப்பதற்காக. பிறகு அவர்களால் ''குருஷ்வ'' என்று அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய், ஸமித்தை அக்னியில் வைத்து, (கட்டையினால் செய்யப்பட்ட கரண்டி) மேக்ஷணத்தினால் அன்னத்தை எடுத்து, அவதான விதியாய், ''ஸோமாய பித்ருமதே ஸ்வதா நம:'' ''அக்னயே கவ்யவாஹனாய ஸ்வதா நம:'' என்று பிண்ட பித்ருயஜ்ஞ விதிப்படி அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். பிறகு மேக்ஷணத்தை அக்னியில் வைத்து, ஹோமசேஷ அன்னத்தை மண்மயமல்லாததாய், கிடைத்தபடி உள்ளதுமாகிய பித்ரு ப்ராம்ஹண பாத்ரங்களில் வைக்கவும். வெள்ளிப் பாத்ரங்களானால் விசேஷமாகும். விச்வேதேவ ப்ராம்ஹண பாத்ரங்களில் வைக்கக் கூடாது, என்பது பொருள்.

हारीतः — कुरुष्वेत्यनुज्ञातः पूर्वोद्धृतेऽग्नौ सकृदाच्छिन्नैरुपमूललूनैः परिस्तीर्णे समित्तन्त्रेण प्राङ्मुखो मेक्षणेनाहुतिद्वयं हुत्वा मेक्षणमग्नावेव कुर्यात् इति । पूर्वोद्धृते - परिस्तरणात् पूर्वमेवोद्बोधिते, समित्तन्त्रेण - आहुति द्वयार्थमेकामेव समिधमाधायेत्यर्थः । बैजावापः — आज्यमासिच्योद्वास्य यज्ञोपवीती द्वे आहुती जुहोत्यग्नय इति पूर्वां सोमायेत्युत्तराम् इति । आश्वलायनः – प्राचीनावीतीध्ममुपसमाधाय मेक्षणेनादायावदान-सम्पदा जुहुयात्, सोमाय पितृमते स्वधानमः, अग्नये कव्यवाहनाय स्वधा नमः इति ।

ஹாரீதர்:— ''குருஷ்வ'' என்று அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய் முன்பே எடுக்கப்பட்டதும், வேரின்

ஸமீபத்தில் ஒரே தடவையாக நறுக்கப்பட்ட தர்ப்பங்களால் பரிஸ்தரணம் போடப்பட்டு உள்ளதுமான அக்னியில் ஒரு ஸமித்துடன் கிழக்கு நோக்கியவனாய் மேக்ஷணத்தினால் இரண்டு ஆஹுதிகளைச் செய்து, மேக்ஷணத்தை அக்னியிலேயே வைத்துவிட வேண்டும், என்று. முன்பே எடுக்கப்பட்டது என்பதற்கு, பரிஸ்தரணத்திற்கு முன்பே ஜ்வலிக்கச் செய்யப்பட்ட என்று பொருள். ஸமித் தந்த்ரத்தால் என்பதற்கு இரண்டு ஆஹுதிக்கும் ஒரே ஸமித்தை வைத்து, என்று பொருள். பைஜாவாபர்:— நெய்யை அன்னத்தில் சேர்த்து எடுத்துக் கொண்டு, யஜ்ஞோபவீதியாய் இரண்டு ஆஹுதிகளைச் செய்யவும். ''அக்னயே'' என்று முதல் ஆஹுதியையும், ''ஸோமாய'' என்று இரண்டாவது ஆஹுதியையும் செய்யவும். ஆச்வலாயனர்:— ப்ராசீனாவீதியாய் இத்மத்தை வைத்து, மேக்ஷணத்தினால் அவதான விதிப்படி எடுத்து, ''ஸோமாய பித்ரு மதே ஸ்வதாநம:'' என்றும், ''அக்னயே கவ்ய வாஹனாய ஸ்வதா நம:'' என்றும் ஹோமம் செய்ய வேண்டும்.

अत्र पितृयज्ञधर्मकाग्नौकरणे प्राचीनावीतित्वोप-वीतित्वयोर्यथा स्वसूत्रं व्यवस्था द्रष्टव्या। अत्राहुतित्रयमाह मनुः — अग्निसोमयमानां च कृत्वा चाप्यायनं द्विजः। हविर्दानेन विधिवत् पश्चात् सन्तर्पयेत् पितॄन् इति। आप्यायनम् - होममिति यावत्। स्मृत्यन्तरेऽपि — अन्नं निधाय समिधं जुहुयाज्जातवेदसि। अग्नये कव्यवाहनाय स्वधा नम इति ब्रुवन्। सोमाय पितृमते स्वधा नम इति ब्रुवन्। यमायाङ्गिरस्वते स्वधा नम इति ब्रुवन्। इत्येते होममन्त्रास्तु त्रयाणामनुपूर्वशः इति।

இந்த, பித்ருயஜ்ஞதர்மகப்படிச் செய்யும் அக்னௌகரணத்தில் ப்ராசீனாவீதம் உபவீதம் இவைகளுக்கு அவரவர் ஸூத்ரப்படி வ்யவஸ்தையை

அறியவும். இவ்விடத்தில் மூன்று ஆஹுதிகளைச் சொல்லுகிறார், மனு:— ப்ராம்ஹணன், அக்னி, ஸோமன், யமன் இவர்களுக்கு ஹவிஸ்ஸை விதிப்படி ஹோமம் செய்து, பிறகு ப்ராம்ஹணர்களை அன்னதானத்தால் த்ருப்தி செய்விக்க வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— அக்கினியில் ஸமித்தை வைத்து அன்னத்தை ஹோமம் செய்ய வேண்டும். ''அக்நயே.....நம:'' ''ஸோமாய.......நம:'' ''யமாய.....நம:'' என்னும் மந்த்ரங்களால். இந்த மந்த்ரங்கள் மூவர்களுக்கும் க்ரமமாயுள்ளது.

पुराणेऽपि — जुहुयाद्व्यञ्जनक्षारवर्जमन्नं ततो द्विजः । अनुज्ञातो द्विजैस्तैस्तु त्रिः कृत्वो भरतर्षभ इति। अत्र व्यवस्थामाह कात्यायनः — स्वाहा स्वधानमः सव्यमपसव्यं तथैव च । आहुतीनां च या सङ्ख्या साऽवगम्या स्वसूत्रतः इति । पराशरोऽपि — अग्नौ करिष्ये इत्युक्त्वा तैरुक्तः क्रियतामिति । गृह्योक्तेनैव विधिना हुत्वा पात्रे प्रदापयेत् इति । हुत्वा हुतशेषं पितृब्राह्मणभोजनपात्रेषु दद्यात् न वैश्वदैविक ब्राह्मणपात्रे इत्यर्थः ।

**புராணத்திலும்:**— பிறகு கர்த்தா வ்யஞ்ஜனங்கள், உறைப்பு இவைகளில்லாத அன்னத்தை அந்த ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டு, மூன்று தடவை ஹோமம் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், காத்யாயனர்:— ஸ்வாஹா, ஸ்வதா, நம:, உபவீதம், ப்ராசீனாவீதம் இவைகளும், ஆஹுதிகளின் ஸங்க்யைகளும் அவரவர்கள் ஸூத்ரப்படி அறியப்பட வேண்டும். பராசரரும்:— ''அக்னௌகரிஷ்யே'' என்று கேட்டு, அவர்களால் ''க்ரியதாம்'' என்று அனுஜ்ஞை செய்யப்பட்டு, க்ருஹ்யத்தில் சொல்லிய விதிப்படி ஹோமம் செய்து, போஜன பாத்ரத்தில் வைக்க வேண்டும் என்று. ஹோமம்

செய்து, ஹோமம் செய்த மீதியை, பித்ரு ப்ராம்ஹண போஜன பாத்ரங்களில் வைக்க வேண்டும். விச்வேதேவ ப்ராம்ஹண போஜன பாத்ரங்களில் வைக்கக் கூடாது, என்பது பொருள்.

तथा च पुराणे — हुतावशिष्टमल्पाल्पं विप्रपात्रेषु निक्षिपेत्। अग्नौ करणशेषं तु न दद्याद्वैश्वदैविके इति । गृह्योक्तेनैव विधिनेत्युक्तत्वादापस्तम्बेन पार्वणप्रकृतिभूते मासिश्राद्धे यन्मे माता इत्यादि मन्त्राणामाम्नातत्वात् अन्नस्योत्तराभिर्जुहोत्याज्याहुतीरुत्तराः इति चोदितत्वाच्चापस्तम्बसूत्रिणामन्यसूत्रिणामिव पितृयज्ञधर्मकाग्नौकरणहोमो न युक्तः।

அவ்விதமே, புராணத்தில்:— ஹோமம் செய்த மீதியை ஸ்வல்பம் ஸ்வல்பமாய் ப்ராம்ஹணர்களின் போஜன பாத்ரங்களில் வைக்க வேண்டும். ஹோம சேஷத்தை விச்வேதேவ ப்ராம்ஹண போஜன பாத்ரத்தில் வைக்கக் கூடாது. ''க்ருஹ்யத்தில் சொல்லிய விதிப்படி, என்று சொல்லி இருப்பதால். ஆபஸ்தம்பரால், பார்வண ப்ரக்ருதிபூதமான மாஸி ச்ராத்தத்தில் ''யந்மே மாதா'' முதலிய மந்த்ரங்கள் சொல்லப்பட்டு இருப்பதாலும் 'மேல் மந்த்ரங்களால் அன்னத்தை ஹோமம் செய்யவும், அதற்கு மேல் உள்ள மந்த்ரங்களால் ஆஜ்ய ஆஹுதிகளைச் செய்யவும்' என்று விதிக்கப்பட்டு இருப்பதாலும், ஆபஸ்தம்ப ஸூத்ரிகளுக்கு அன்ய ஸூத்ரிகளுக்குப் போல் பித்ரு யஜ்ஞ தர்மகமான அக்னௌகரண ஹோமமானது யுக்தமல்ல.

तथा च सङ्ग्रहकारः — अग्नीन्धनादि प्रतिपद्य कर्म कृत्वाऽऽज्यभागान्तमथावदाय । यन्मेति मन्त्रैः प्रतिमन्त्रमग्नौ कार्यस्तथा सप्तभिरन्नहोमः। स्वाहादिमन्त्रैरपि सर्पिषा स्यु र्होमास्ततः स्विष्टकृतं च हुत्वा । भस्म व्यपोह्योत्तरतोऽन्नहोमो लेपे तु दर्भस्य

समञ्जनादि । शेषं च कृत्वा परिषेचनान्तं पात्रेषु दद्याद्धुतशेषमन्नम् इति । सप्तभिरन्नहोम इत्येकवर्गोद्देशपार्वणाभिप्रायेणोक्तम्, दर्शमहालयादौ तु ऊहितमन्त्रसाहित्ये त्रयोदशसंख्यासम्पत्तेः । तत्र च यन्मे मातामही प्रलुलोभ, तन्मे रेतो मातामहो वृङ्क्ताम्, अन्तरन्यं मातामहाद्दधे, यन्मे मातुः पितामही, इत्येवमूहः कार्यः । अमुष्मा इत्येवमूहः कार्यः । अमुष्मा इत्यत्र मातामहादेश्चतुर्थ्यन्ततया नामग्रहणं कर्तव्यम् । मातामहमातामह्योर्मृताहश्राद्धे चोहेन होमः कर्तव्यः ।

அவ்விதமே, ஸங்க்ரஹகாரர்:— ''அக்னீந்தனம் முதலாகிய கார்யத்தைச் செய்து, ஆஜ்ய பாகம் முடியும் வரையில் செய்து, பிறகு ஹவிஸ்ஸை அவதானம் செய்து. ''யந்மே மாதா'' என்பது முதலாகிய ஏழு மந்த்ரங்களால் ஒவ்வொரு மந்த்ரத்திற்கும் அக்னியில் அன்ன ஹோமம் செய்ய வேண்டும். ''ஸ்வாஹா பித்ரே'' என்பது முதலிய மந்த்ரங்களாலும் ஆஜ்ய ஹோமத்தைச் செய்யவும். பிறகு ஸ்விஷ்ட க்ருத் ஹோமத்தைச் செய்து, பஸ்மத்தை ஒதுக்கி, வடக்குப் பக்கத்தில் அஹவிஷ்ய ஹோமம் செய்யவும். லேப கார்யம் முதலியது செய்யவும். பாக்கியுள்ள ஹோமத்தையும் செய்து, பரிஷேசனம் முடியும் வரையில் செய்து, பித்ரு போஜன பாத்ரங்களில் ஹுதசேஷ அன்னத்தை வைக்கவும்,'' என்று ஏழு மந்த்ரங்களால் ஹோமம், என்பது ஒரு வர்க்கத்தை உத்தேசித்துச் செய்யப்படும் பார்வண ச்ராத்த விஷயமாய்ச் சொல்லப்பட்டது. தர்ச ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம் முதலியதில் ஊஹிக்கப்பட்ட மந்த்ரங்களைச் சேர்த்தால் பதின்மூன்று என்ற கணக்கு வருகிறதால். அந்தத் தர்ச மஹாளய ச்ராத்தங்களில் ''யந்மே மாதாமஹீ....மாதாமஹாத் ததே'', ''யந்மே மாது: பிதாமஹீ'' என்று இம்மாதிரி ஊஹம் செய்யப்பட வேண்டும். அமுஷ்மை என்ற இடத்தில் மாதாமஹன் முதலியவர்க்கு நான்காவது வேற்றுமையை

முடிவுடையதாய் (க்ருஷ்ண சர்மணே) பெயரைச் சொல்ல வேண்டும். மாதாமஹன் மாதாமஹீ இவர்களின் ப்ரத்யாப்திக ச்ராத்தத்திலும் ஊஹத்தினால் ஹோமம் செய்யப்பட வேண்டும்.

तथा च सङ्ग्रहकारः — योज्यः पित्रादि शब्दानां स्थाने मातामहादिकः । अन्नाहुतौ तथा स्पर्शे जलपिण्डादिदानके । यन्मे मातामहीत्यादि तत्रोदाहरणं भवेत् इति । स्पर्शे - एष ते तत मधुमाँ ऊर्मिः इत्यादिभिरन्नस्पर्शे मार्जयन्ताम् इति जलदाने, एतत्ते तत इति पिण्डदाने च पित्रादिशब्दस्थाने मातामहादिशब्द ऊह्य इत्यर्थः । पितृसपिण्डीकरणे जीवपितृकर्तृकश्राद्धे च यन्मे पितामही प्रलुलोभ, पितामहो वृङ्क्ताम्, यन्मे पितुः पितामही, पितुः प्रपितामहीत्येव मूहः । तस्मादृचं नोहेत् इत्यूहप्रतिषेधः प्रकृतिभूतमासिश्राद्धविषयः न प्रकृतावूहो विद्यते इति प्रकृतावूहनिषेधात् । मासिश्राद्धव्यतिरिक्ते द्विपितृकेणोहः कार्य इत्येके ।

அவ்விதமே, ஸங்க்ரஹகாரர்:— ''பிதா முதலிய சப்தங்களின் ஸ்தானத்தில் மாதாமஹ என்பது முதலிய சப்தம் சொல்லப்பட வேண்டும். அன்ன ஹோமத்திலும், அன்ன ஸ்பர்சத்திலும், ஜல தானத்திலும், பிண்ட தானம் முதலியதிலும் அவ்விடத்தில் யந்மே மாதா மஹீ என்பது முதலியது உதாஹரணமாகும்'', என்று. ஸ்பர்சே = ''ஏஷதேதத'' என்பது முதலிய மந்த்ரங்களால் அன்ன ஸ்பர்சத்தில். ஜலதானம் = ஏஷதே தத என்று பிண்டதானத்தில். பிதா முதலிய சப்தங்களின் ஸ்தானத்தில் மாதாமஹ முதலிய சப்தங்களை ஊஹிக்க வேண்டும், என்பது பொருள். பிதாவின் ஸபிண்டீகரணத்திலும், ஜீவபித்ருகன் செய்யும் ச்ராத்தத்திலும் ''யந்மே பிதாமஹீ ப்ரலுலோப,...... பிதாமஹோ வ்ருங்தாம்'', ''யந்மே பிது: பிதாமஹீ'',''யந்மே பிது:ப்ரபிதாமஹீ'' என்று இவ்விதம் ஊஹம் செய்யப்பட வேண்டும். ஆகையால், ''ருக்கை

ஊஹிக்கக் கூடாது'' என்று ஊஹத்தின் நிஷேதம் ப்ரக்ருதியாயுள்ள மாஸி ச்ராத்தத்தைப் பற்றியது. ''ப்ரக்ருதியில் ஊஹமில்லை'' என்று ப்ரக்ருதியில் ஊஹத்தை நிஷேதித்து உள்ளது. மாஸி ச்ராத்தம் தவிர்த்த ச்ராத்தங்களில் இரண்டு பித்ருக்களை உடையவன் ஊஹம் செய்ய வேண்டும், என்கின்றனர் சிலர்.

एतदग्नौकरणं प्राचीनावीतिना कार्यं पैतृकत्वात् । तथा चापस्तम्बः — अपरपक्षे पित्र्याणि प्राचीनावीतिना प्रसव्यं दक्षिणतोऽपवर्गः इति । स्मृत्यन्तरे — अकृत्वा पार्वणं होमं श्राद्धं कुर्यात् द्विजोत्तमः । तत् श्राद्धमासुरं ज्ञेयं कर्ता च नरकं व्रजेदिति ।

அந்த அக்னி ஹோமத்தை ப்ராசீனாவீதியாய்ச் செய்ய வேண்டும், பித்ரு கர்மம் ஆகியதால், அவ்விதமே, ஆபஸ்தம்பர்:— க்ருஷ்ண பக்ஷத்தில் பித்ரு கர்மங்களைச் செய்ய வேண்டும். ப்ராசீநாவீதியாய்ச் செய்ய வேண்டும். அப்ரதக்ஷிணமாய்ச் செய்ய வேண்டும். தெற்கில் முடிக்க வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— பார்வண ஹோமத்தைச் செய்யாமல் ப்ராம்ஹணன் ச்ராத்தத்தைச் செய்தால் அந்த ச்ராத்தம் அஸுரர்களைச் சேர்ந்தது, என்று அறியவும். ச்ராத்த கர்த்தாவும் நரகத்தை அடைவான்.

अथ परिवेषणविधिः – तत्र तावदमत्राणि सति सम्भवे भोजने हैमरौप्याणि दैवे पित्र्ये यथाक्रमम् इति प्रतिपादितानि श्रेष्ठानि सम्पाद्यानि, तेषामलाभे तैजसानीति उपकल्पनिरूपणे प्रतिपादितम्। तानि पात्राणि द्भिः प्रक्षालयेत्। तथा च ब्रह्माण्डपुराणे — प्रक्षाल्य हस्तपात्रादि पश्चादद्भिर्विधानवित् । प्रक्षालनजलं दर्भांस्तिलैर्मिश्रं क्षिपेच्छुचौ इति । हस्तनिर्मृष्टपात्रादीति मध्यमपदलोपी समासः, प्रथममपो निनीय हस्तेन निर्मृज्यानन्तरं जलेनैव प्रक्षालयेदित्यर्थः, आदिशब्देन घृतादिधारणार्थानि गृह्यन्ते । एवं प्रक्षालितेषु पात्रेषु

चतुरश्रमण्डलस्थापितेषु हुतशेषं किञ्चित् प्राचीनावीती पितृपात्रेषु निधाय सम्पादितान् पदार्थान् परिवेषयेत् इति।

**பரிமாறுவதின் விதி.** இனி பரிமாறும் விதி சொல்லப்படுகிறது. அதில் போஜன பாத்ரங்கள் கிடைக்குமாகில் "போஜனத்தில் தேவர்களுக்கு ஸ்வர்ணபாத்ரமும், பித்ருக்களுக்கு வெள்ளிப் பாத்ரமும்" என்று சொல்லப்பட்டது. அதுபோல் ச்ரேஷ்டங்களாக ஸம்பாதிக்க வேண்டும். அவைகள் கிடைக்காவிடில் (பித்தளை, வெண்கலம் முதலிய) தாது பாத்ரங்கள் அனுகல்பத்தைச் சொல்லுமிடத்தில் சொல்லப் பட்டுள்ளது. அந்தப் பாத்ரங்களை இருமுறை அலம்ப வேண்டும். அவ்விதமே, ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— "கையால் அலம்பப்பட்ட பாத்ரம் முதலியதைப் பிறகு விதிப்படி ஜலத்தினால் அலம்பி, அலம்பிய ஜலத்தைத் தர்ப்பங்களுடனும் எள்ளுடனும் கூடியதாய், சுத்தமான இடத்தில் விடவேண்டும்", என்று. முதலில் ஜலத்தை விட்டுக் கையினால் துடைத்து, பிறகு ஜலத்தினாலேயே அலம்ப வேண்டும், என்பது பொருள். ஆதி என்ற சப்தத்தால் நெய் முதலியதின் பாத்ரங்கள் சொல்லப்படுகின்றன. இவ்விதம் அலம்பப்பட்டுள்ள பாத்ரங்களைச் சதுரமான மண்டலத்தில் ஸ்தாபித்து, அவைகளில் ஹோமசேஷமாகிய ஸ்வல்ப அன்னத்தை ப்ராசீனாவீதியாய், பித்ரு போஜன பாத்ரங்களில் வைத்து, ஸம்பாதிக்கப்பட்டுள்ள பதார்த்தங்களைப் பரிமாற வேண்டும்.

तथा च शौनकः — हुत्वाऽग्नौ परिशिष्टं तु पितृपात्रेष्वनन्तरम्। निवेश्यैवापसव्येन परिवेषणमाचरेत् इति । अपसव्येनेति हुतशेषनिवेशनेनान्वेति न परिवेषणेन। तथा च कार्ष्णाजिनिः — अपसव्येन कर्तव्यं पित्र्यं कर्म विशेषतः । अन्नदानादृते सर्वमेवं मातामहेष्वपि इति। अन्नदानं - परिवेषणम्। स्मृत्यन्तरेऽपि —

अपसव्येन यस्त्वन्नं ब्राह्मणेभ्यः प्रयच्छति। विष्ठामश्नन्ति पितरो दाता च नरकं व्रजेत् इति।

சௌனகர்:— "அக்னியில் ஹோமத்தைச் செய்து, பிறகு மீதியுள்ளதைப் பித்ரு போஜன பாத்ரங்களில் ப்ராசீனுவீதியாய் வைத்துப் பரிமாற வேண்டும்," என்று. ப்ராசீனுவீதியாய் என்றது ஹோமசேஷத்தை வைத்து என்பதுடன் சேருகிறது. பரிமாற வேண்டும் என்பதுடன் சேருவதில்லை. அவ்விதமே, கார்ஷ்ணுஜினி:— பித்ருக்களை உத்தேசித்த கார்யம் எல்லாவற்றையும் அவச்யம் ப்ராசீனுவீதியாயச் செய்ய வேண்டும். பரிமாறுவதைத் தவிர்த்து. மாதாமஹர்கள் விஷயத்திலும் இவ்விதமே. மற்ருேர் ஸ்ம்ருதியிலும்:— ப்ராசீனுவீதியாய் அன்னத்தை ப்ராம்ஹணர்களுக்கு எவன் கொடுக்கின்ருனே அவனது பித்ருக்கள் மலத்தைப் புஜிக்கின்றனர். கொடுத்தவனும் நரகத்தை யடைவான்.

होमाज्यशेषेण नोपस्तरणाभिघारणे कुर्यात्, अग्नौकरणशेषेण यदन्नमभिघारितम्। निरङ्गुष्ठं च यद्दत्तं न तत्प्रीणाति वै पितॄन् इति स्मरणात्।

ஹோமம் செய்த நெய்யின் மீதியால் உபஸ்தரணம், அபிகாரம் இவைகளைச் செய்யக்கூடாது. "அக்னியில் ஹோமம் செய்த நெய்யின் மீதியால் எந்த அன்னம் அபிகாரம் செய்யப்பட்டதோ, அங்குஷ்டம் இல்லாமல் எந்த அன்னம் கொடுக்கப்பட்டதோ அந்த அன்னம் பித்ருக்களை ப்ரீதி செய்விப்பதில்லை", என்று ஸ்ம்ருதி உள்ளது.

परिवेषणप्रकारो मनुना दर्शितः — पाणिभ्यामुपसङ्गृह्य स्वयमन्नस्य वर्धितम्। विप्रान्तिके पितॄन् ध्यायन् शनकैरुपनिक्षिपेत्। एकेनैव तु हस्तेन यदन्नमुपनीयते । तद्विप्रलम्पन्त्यसुरास्सहसा दुष्टचेतसः इति । अन्नस्य वर्धितम् - अन्नस्य पूर्णं

परिवेषणार्थपात्रमित्यर्थः। स्वयमिति वचनात् स्वयं परिवेषणं मुख्यम्, अत एव वायुपुराणम् — फलस्यानन्तता प्रोक्ता स्वयं तु परिवेषणे इति। यत्तु तत्रैवोक्तम् — परिवेषणं प्रशस्तं भार्यया पितृतृप्तये। पितृदेवमनुष्याणां स्त्री सहाया यतः स्मृता इति तदितरापेक्षया वेदितव्यम्। भार्ययाऽपि सवर्णयैव परिवेषणं कार्यम्।

பரிமாறும் ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது, மனுவினுல்:— ''அன்னபாத்ரத்தை இரண்டு கைகளாலும் தானுகவே எடுத்துக் கொண்டு, ப்ராம்ஹணர்களின் ஸமீபத்தில் பித்ருக்களை த்யானித்துக் கொண்டு, மெதுவாக வைக்க வேண்டும். ஒரே கையினுல் எந்த அன்னம் கொடுக்கப்படுகிறதோ அந்த அன்னத்தைத் துஷ்ட சித்தமுள்ள அஸுரர்கள் சீக்கிரமாக அழிக்கின்றனர்,'' என்று. ''அன்னஸ்ய வர்த்திதம்'' என்பதற்கு அன்னத்தால் நிறைந்த பரிமாறுவதற்கான பாத்ரம், என்பது பொருள். தானுகவே என்று சொல்லியிருப்பதால் தான் பரிமாறுவதே முக்யமாகும். ஆகையால் தான், வாயு புராணம்:— ''தானுகப் பரிமாறும் விஷயத்தில் பலன் அளவற்றது என்பது சொல்லப்பட்டுள்ளது'', என்கின்றது. ஆனுல், அதிலேயே — பித்ருக்களின் த்ருப்தியின் பொருட்டு பார்யையால் பரிமாறச் செய்வது ச்லாக்யம். ஏனெனில் பித்ருக்கள், தேவர்கள், மனுஷ்யர்கள் இவர்களின் கார்யத்தில் ஸ்த்ரீயே ஸஹாயமாகியவளாய்ச் சொல்லப்பட்டிருக்கிருள், என்று சொல்லப்பட்டுள்ளதே எனில், அது அந்யர்களை விடப் பார்யை ச்லாக்யம், என்று அறியவும். பார்யையாலும் ஸவர்ணைதான் பரிமாற வேண்டும்.

तथा च नारायणः — यद्द्रव्यं यत्पवित्रं च यत् पित्र्यं यत् सुखावहम्। द्विजातिभ्यस्सवर्णाया हस्तेनैव तु दीयते इति। हस्तेन - हस्तद्वयेनेत्यर्थः, उभाभ्यामपि हस्ताभ्यामाहृत्य परिवेषयेत् इति स्मरणात्। हस्तद्वयेनापि न साक्षाद्देयम्, किन्तु दर्व्यादिद्वारा। अत एव

वृद्धशातातपः — हस्तदत्तास्तु ये स्नेहा लवणव्यञ्जनादयः । दातारं नोपतिष्ठन्ति भोक्ता भुञ्जीत किल्बिषम् । नापवित्रेण हस्तेन नैकेन न विना कुशम् । नायसे नायसेनैव श्राद्धे तु परिवेषयेत् इति । आयसे - अयोमये पात्रे नैव परिवेषयेदित्यर्थः ।

அவ்விதமே, நாராயணர்:— "எந்த வஸ்துவானாலும் எது பரிசுத்தமான வஸ்துவோ, எது பித்ருக்களுக்காகியதோ, எது ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதோ அதெல்லாம் ஸவர்ண பார்யையின் கையினாலேயே ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும். கையினால் என்பதற்கு இரண்டு கைகளாலும் என்பது பொருள். "இரண்டு கைகளாலும் கொண்டு வந்து பரிமாற வேண்டும்" என்று ஸ்ம்ருதி உள்ளது. இரண்டு கைகளால் கொடுத்தாலும் கையாலேயே நேராகக் கொடுக்கக் கூடாது. ஆனால் கரண்டி முதலியதின் மூலமாக. ஆகையால் தான், வ்ருத்தசாதாதபர்:— கையினால் கொடுக்கப்பட்ட ஸ்நேஹ பதார்த்தங்களும், உப்பு வ்யஞ்சனம் முதலியவைகளும் கொடுத்தவனை அடைவதில்லை. புஜிப்பவன் பாபத்தைப் புஜிப்பான். பவித்ரம் இல்லாத ஹஸ்தத்தாலும், ஒரு கையினாலும், குசம் இல்லாமலும், இரும்புப் பாத்ரத்திலும், இரும்புப் பாத்ரத்தாலும், ச்ராத்தத்தில் பரிமாறக் கூடாது.

प्रशस्तानि परिवेषणपात्राण्याह विष्णुः — घृतादिदाने तैजसानि पात्राणि फल्गुपात्राणि वा प्रशस्तानि । अत्र च पितृगाधा भवति - सौवर्णराजताभ्यां च खाड्गेनौदुम्बरेण वा । दत्तमक्षयतां याति फल्गुपात्रेण वा पुनः इति । खाड्गेन - खड्गमृगशृङ्ग कृतदर्व्यादिना, फल्गुपात्रेण - काकोदुम्बरिकाख्यदारुकृतदर्व्यादिना । अनिषिद्धदर्व्याद्यसम्भवे च चन्द्रिकायामुक्तम् — कृत्वा वान्तरितं देयं पर्णेनाथ तृणेन वा इति । हस्तेनाहृत्य दानस्य निषिद्धत्वात् पर्णादिनाऽन्तरितं कृत्वा देयमित्यर्थः ।

சிறந்ததான பரிமாறுவதற்கான பாத்ரங்களைச் சொல்லுகிறார், விஷ்ணு:— நெய் முதலியதைக் கொடுப்பதில் தாது பாத்ரங்களாவது, பல்கு பாத்ரங்களாவது ச்லாக்யங்கள். இவ்விஷயத்தில் பித்ருக்களின் வசனம் இருக்கிறது:— ''ஸ்வர்ணம், வெள்ளி, கட்க ம்ருகத்தின் கொம்பு, அத்தி, பல்கு இவைகளாலாகிய பாத்ரத்தினுல் கொடுக்கப்பட்டது க்ஷயமற்ற தன்மையையடையும்,'' என்று. காட்கேந = காண்டா ம்ருகத்தின் கொம்பினுல் செய்யப்பட்ட கரண்டி முதலியதால். பல்கு பாத்ரேண = பேயத்தியின் கட்டையினுல் செய்யப்பட்ட கரண்டி முதலியதால். நிஷேதிக்கப்படாத கரண்டி முதலியது கிடைக்காவிடில், சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது:—''இலையினுலாவது புல்லினுலாவது கையை மறைத்துக் கொண்டாவது கொடுக்க வேண்டும்'', என்று கையினுல் எடுத்துக் கொடுப்பதை நிஷேதித்து இருப்பதால் இலை முதலியதால் மறைத்துக் கொடுக்க வேண்டும், என்பது பொருள்.

शौनकः —पाकं सर्वमुपानीय संवेद्य च पृथक् पृथक्। विधिना देवपूर्वं तु परिवेषणमारभेत् इति । संवेद्य - भोक्तॄणामन्नगुणान् संवेदितान् कृत्वेत्यर्थः - भक्ष्यभोज्यगुणानुक्त्वा भोजयेत् ब्राह्मणान् शनैः इति बृहस्पतिस्मरणात्। पुराणे —तप्यमानास्तपस्तीव्रं प्रेषिता ब्रह्मशासनात्। विश्वेदेवास्तु रक्षार्थं पितृयज्ञेषु सर्वदा । अतः पूर्वं प्रदातव्यं तेभ्योऽन्नं पितृकर्मणि इति। मनुः —गुणांश्च सूपशाकाद्यान् पयो दधि घृतं मधु। विन्यसेत् प्रयतस्सम्यक् भूमावेव समाहितः इति। गुणान् - अन्नानुग्राहकतया गुणभूतान् सूपादीन् भूमौ निहितेषु स्वल्पभाजनेषु प्रक्षिपेन्न प्रधानान्नार्थमहाभाजने निहितेष्वित्यर्थः।

சௌனகர்:— ''பக்குவமாகியது முழுவதையும் கொண்டு வந்து போஜன பாத்ரத்தில் சேர்த்துத் தனித்தனியாகத் தெரிவித்து விதிப்படி விச்வேதேவர்களை

முன்னிட்டுப் பரிமாறுவதை ஆரம்பிக்க வேண்டும்.'' ஸம்வேத்ய - புஜிப்பவர்களுக்கு அன்னத்தின் குணங்களைத் தெரிவித்து என்பது பொருள். ''பக்ஷ்ய போஜ்யங்களின் குணங்களைச் சொல்லி மெதுவாக ப்ராம்ஹணர்களைப் புஜிக்கச் செய்யவும்,'' என்று ப்ருஹஸ்பதி ஸ்ம்ருதி இருப்பதால். புராணத்தில்:— கடுமையான தபஸ் செய்து கொண்டிருக்கின்ற விச்வேதேவர்கள் ப்ரம்ஹாவின் ஆஜ்ஞையினுல் பித்ருயஜ்ஞங்களில் எப்பொழுதும் ரக்ஷணத்திற்காக அனுப்பப்பட்டுள்ளார்கள். ஆகையால் ச்ராத்தத்தில் அவர்களுக்கு அன்னத்தை முன்பு கொடுக்க வேண்டும். மனு:— ''குணங்களான பருப்பு, கறி முதலியவையையும், பால், தயிர், நெய், தேன் இவைகளையும் சுத்தனுயிருந்து கவனமுடையவனுய், பூமியிலேயே நன்ருய் வைக்க வேண்டும்.'' குணுந் - அன்னத்தை அனுக்ரஹிப்பதால் அப்ரதானங்களான பருப்பு முதலியவைகளைப் பூமியில் வைக்கப்பட்ட சிறிய பாத்ரங்களில் வைக்க வேண்டும். முக்யமாகிய அன்னத்திற்காகவாகிய பெரிய போஜன பாத்ரங்களில் வைக்கக் கூடாது என்பது பொருள்.

तथा च हारीतः — भूमावेव निदध्यान्नोपर्युपरि पात्राणि इति। चन्द्रिकायामिदं व्याख्यातम् — यान्युपरि पात्राणि महाभाजनोपरि निधेयानि घृताद्याधारभूतानि स्वल्पपात्राणि तानि श्राद्धे भूमावेव निदध्यान्न महाभाजनस्योपरि इति । स्मृत्यन्तरे — भोज्यपात्र नाज्यपात्रे मुपपात्रे तु निक्षिपेत्। भोज्ये निक्षिप्य चेद्भुङ्क्ते सुरापानसमं हि तत्। अन्ने च पायसे चैव सूपे च स्थापितं घृतम्। मोहाद्यदि च भुञ्जीत सुरापायिसमो भवेत्। सूपं च पायसं चाज्यं दद्यात् भोक्तुश्च दक्षिणे। तैलपक्वं तथा वामे शेषेष्वनियमः स्मृतः इति।

ஹாரீதர்:— பாத்ரங்களைப் பூமியிலேயே வைக்க வேண்டும். மேல் மேல் வைக்கக் கூடாது. சந்த்ரிகையில்

இது விவரிக்கப்பட்டுள்ளது:— மேலே வைக்க வேண்டியதும், பெரிய போஜன பாத்ரத்தின் மேல் வைக்க வேண்டியதும், நெய் முதலியவைகளுக்கு ஆதாரமாகியதுமாகிய அந்தச் சிறிய பாத்ரங்களை ச்ராத்தத்தில் பூமியிலேயே வைக்க வேண்டும். பெரிய பாத்ரத்தின் மேல் வைக்கக் கூடாது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— போஜனம் செய்யும் பாத்ரத்தில் நெய்ப் பாத்ரத்தை வைக்கக் கூடாது. உபபாத்ரத்தில் வைக்க வேண்டும். போஜன பாத்ரத்தில் வைத்துப் புஜித்தால் அது ஸுராபானத்துக்கு ஸமமாகும். அன்னத்திலும், பாயஸத்திலும், பருப்பிலும் வைக்கப்பட்ட நெய்யை அறியாமையால் புஜிப்பானாகில் அவன் ஸுராபானம் செய்தவனுக்கு ஸமனாவான். பருப்பு, பாயஸம், நெய் இவைகளைப் புஜிப்பவனின் வலது பக்கத்தில் கொடுக்க வேண்டும். தைல பக்வமான வஸ்துவை இடது பக்கத்தில் கொடுக்க வேண்டும். மற்றவைகளில் நியமமில்லை.

पात्राभिमन्त्रणादि। संपादितं सर्वं पात्रेषु प्रक्षिप्य पात्राभिमन्त्रणं कुर्यात्। तदाह प्रचेताः —सर्वं प्रकृतं दत्वा पात्रमालभ्य जपेत् इति। तत्र विशेषमाह याज्ञवल्क्यः — दत्वाऽन्नं पृथिवी ते पात्रमिति पात्राभिमन्त्रणम्। कृत्वेदं विष्णुरित्यन्ने द्विजाङ्गुष्ठं निवेशयेदिति। पृथिवी ते पात्रम् इत्यादिना मन्त्रेण पात्राभिमन्त्रणं कृत्वा इदं विष्णुः इत्यनयर्चा अन्ने द्विजाङ्गुष्ठं निवेशयेदित्यर्थः। कात्यायनः — वैष्णव्यर्चा यजुषा च द्विजाङ्गुष्ठमन्नेऽवगाह्य इति।

பாத்ரத்தைத் தொட்டு ஜபிப்பது முதலியது. தயாரிக்கப்பட்ட எல்லாவற்றையும் போஜன பாத்ரங்களில் வைத்து, பாத்ரத்தை அபிமந்த்ரிக்க வேண்டும். அதைச் சொல்லுகிறார், ப்ரசேதஸ்:— தயாரிக்கப்பட்ட எல்லாவற்றையும் பரிமாறி, போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்து ஜபிக்க வேண்டும். அதில் விசேஷத்தைச்

சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— 'அன்னத்தைப் பரிமாறி, ''ப்ருதிவீ தே பாத்ரம்' என்று போஜன பாத்ரத்தை அபிமந்த்ரணம் செய்ய வேண்டும். அபிமந்த்ரணத்தைச் செய்து, ''இதம் விஷ்ணு:'' என்று ப்ராம்ஹணனின் பெருவிரலை அன்னத்தில் வைக்கச் செய்யவேண்டும்,' என்று ''ப்ருதிவீதே பாத்ரம்'' என்ற மந்த்ரத்தால் பாத்ரத்தை அபிமந்த்ரித்து, ''இதம் விஷ்ணு:'' என்ற ருக்கினால் அன்னத்தில் ப்ராம்ஹணன் அங்குஷ்டத்தை வைக்க வேண்டும், என்பது பொருள். காத்யாயனர்:— ''விஷ்ணு தேவதாகமான ருக்கினாலும் யஜுஸ்ஸினாலும் ப்ராம்ஹணனின் அங்குஷ்டத்தை அன்னத்தில் வைத்து'', என்று.

यमस्तु सार्थवादकमङ्गुष्ठनिवेशनविधिं वदन्नत्र विनियुक्तयजुर्मन्त्रस्वरूपमाह — अङ्गुष्ठमात्रो भगवान् विष्णुः पर्यटते महीम्। राक्षसानां वधार्थाय कोपवान् प्रहरिष्यति। तस्मात् श्राद्धेषु सर्वेषु ह्यङ्गुष्ठग्रहणं स्मृतम्। विष्णो हव्यं च कव्यं च ब्रूयाद्रक्षेति च क्रमात् इति। तत्र दैवेऽन्ने अङ्गुष्ठनिवेशनात् प्राक्, विष्णो हव्यꣳरक्षस्व इति यजुर्ब्रूयात्, पित्र्येऽन्ने विष्णो कव्यꣳरक्षस्व इति यजुर्ब्रूयादित्यर्थः।

யமனோவெனில்:— அர்த்தவாதத்துடன் அங்குஷ்டம் வைக்கும் விதியைச் சொல்லுகிறவராய் இவ்விடத்தில் விதிக்கப்பட்ட யஜுர் மந்த்ரத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார். ''அங்குஷ்ட பரிமாணரான விஷ்ணுபகவான் பூமியைச் சுற்றுகிறார், ராக்ஷஸர்களை வதைப்பதற்காகக் கோபமுடையவராய் அடிப்பார். ஆகையால் ச்ராத்தங்களில் எல்லாவற்றிலும் அங்குஷ்டத்தைப் பிடிப்பது என்பது விதிக்கப்பட்டுள்ளது. ''விஷ்ணோ ஹவ்யம் ரக்ஷ'', ''விஷ்ணோ கவ்யம் ரக்ஷ'' என்று முறையே சொல்ல வேண்டும்,'' என்று அவ்விடத்தில் விச்வே தேவான்னத்தில் அங்குஷ்டத்தை வைப்பதற்கு முன், ''விஷ்ணோ ஹவ்யம் ரக்ஷஸ்வ'' என்ற மந்த்ரத்தைச் சொல்ல

வேண்டும். பித்ர்யன்னத்தில் ''விஷ்ணோ கவ்யம் ரக்ஷஸ்வ'' என்ற மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும், என்பது பொருள்.

अत्र वृद्धाचारानुसारी प्रयोगः — भोजनपात्रेषूपस्तीर्य पित्रादिपात्रेषु हुतशेषं निधाय सर्वेषु पात्रेषु अन्नादि दत्वाऽभिघार्य पात्रस्याधस्तादुपरिष्टाच्च दर्भान्निक्षिपेत्। एष ते तत इत्यादिभिर्मन्त्रैः प्रतिपुरुषं क्रमात् पित्रादिपात्रदत्त पदार्थोपस्पर्शनं केचिदिच्छिन्ति। अपरे तु होमानन्तरं एष ते तत इत्यादिभिस्सर्वान्नाभिमर्शनमाहुः, सर्वमुत्तरैरभिमृशेत् क्लृप्तान् वा प्रतिपूरुषम् इत्यापस्तम्बस्मरणात्। तत उपवीती दक्षिणं जान्वाच्य उदङ्मुखः प्रथमं देवार्थमन्नमभ्युक्षणेनावोक्ष्य पात्रमालभ्य पृथिवी ते पात्रम् इत्यभिमन्त्र्य इदं विष्णुर्विचक्रमे इत्यृचा विष्णो हव्यꣳरक्षस्व इति यजुषा च द्विजाङ्गुष्ठं निवेश्य प्राचीनावीती सव्यञ्जान्वाच्य दक्षिणामुखः पित्र्यं परिविष्टमन्नमभ्युक्षणेनावोक्ष्य पात्रमालभ्य जपाद्यङ्गुष्ठनिवेशनान्तं कुर्यात्। एतच्च दैवे पित्र्ये च ब्राह्मणानेकत्वे प्रतिब्राह्मणपात्रं कार्यम् एकैकस्याथ विप्रस्य गृहीत्वाऽङ्गुष्ठमादरात् इति स्मृतेः।

இவ்விஷயத்தில் பெரியோரின் ஆசாரத்தைத் தழுவியுள்ள ப்ரயோகம் இது:— போஜன பாத்ரங்களில் அபிகாரம் செய்து (நெய் சேர்த்து), பித்ராதி போஜன பாத்ரங்களில் ஹோமசேஷ அன்னத்தை வைத்து, எல்லாப் போஜன பாத்ரங்களிலும் அன்னம் முதலியதைப் பரிமாறி, அபிகாரம் செய்து, போஜன பாத்ரத்தின் கீழிலும் மேலிலும் தர்ப்பங்களைப் போட வேண்டும், ''ஏஷ தே தத'' என்பது முதலிய மந்த்ரங்களால் ஒவ்வொருவருக்கும் க்ரமமாய்ச் சொல்லி, பித்ராதி போஜன பாத்ரத்தில் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களின் உப ஸ்பர்சனத்தைச் சிலர் விரும்புகின்றனர். சிலரோவெனில், ஹோமத்திற்குப் பிறகு ''ஏஷதே தத'' என்பது முதலிய மந்த்ரங்களால் எல்லா

அன்னத்தையும் அபிமர்சனம் செய்வதைச் சொல்லுகின்றனர். "எல்லா அன்னத்தையும் மேலுள்ள மந்த்ரங்களால் தொட வேண்டும் அல்லது ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட்டவைகளைத் தொடவேண்டும்", என்று ஆபஸ்தம்பர் சொல்லி இருப்பதால். பிறகு, உபவீதியாய் வலது முழங்காலைக் கவிழ்த்து, வடக்கு முகமாய், முதலில் விச்வேதேவான்னத்தை ஜலத்தால் ப்ரோக்ஷித்து, போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்துக் கொண்டு, "ப்ருதிவீதேபாத்ரம்" என்று அபிமந்த்ரித்து, "இதம் விஷ்ணு:" என்ற ருக்கினாலும் "விஷ்ணோஹவ்யம் ரக்ஷஸ்வ" என்ற யஜுஸ்ஸினாலும் ப்ராம்ஹணனின் அங்குஷ்டத்தை அன்னத்தில் வைத்து, ப்ராசீனா வீதியாய், இடது முழங்காலைக் கவிழ்த்து, தெற்கு முகமாய், பரிமாறப்பட்ட பிதர்யான்னத்தை ஜலத்தால் ப்ரோக்ஷித்து, போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்து, ஜபம் முதல் அங்குஷ்டத்தை அன்னத்தில் வைப்பது வரையில் செய்ய வேண்டும். இந்தக் கார்யம் தேவ கார்யத்திலும், பித்ரு கார்யத்திலும், அநேக ப்ராம்ஹணர்களை வரித்திருக்கும் பக்ஷத்தில் ஒவ்வொரு ப்ராம்ஹண போஜன பாத்ரத்திலும் செய்ய வேண்டும். "ஒவ்வொரு ப்ராம்ஹணனுடையவும் அங்குஷ்டத்தை ஆதரவுடன் க்ரஹித்து", என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

अनन्तरकर्तव्यमाह विष्णुः — नमो विश्वेभ्यो देवेभ्य इत्यन्नमादौ प्राङ्मुखयोर्निवेदयेत्, पित्रे पितामहाय प्रपितामहाय च नामगोत्राभ्यामुदङ्मुखेषु इति । चतुर्विंशतिमतेऽपि — पात्रालम्भं द्विजः कुर्यादिदं वोऽन्नमितीरयन् इति । पात्रालम्भनं वामहस्तेन कृत्वा आऽन्नत्यागात् पात्रमनुत्सृजन्नेव विश्वेदेवा इदं वोऽन्नम् इत्युच्चारयन् अन्नत्यागं कुर्यादित्यर्थः ।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், விஷ்ணு: — "நமோ விச்வேப்யோ தேவேப்ய:" என்று

அன்னத்தை முதலில் கிழக்கு முகமாயுள்ள ப்ராம்ஹணர்களுக்குத் (விச்வேதேவர்களுக்கு) தெரிவிக்கவும். பிதா, பிதாமஹன், ப்ரபிதாமஹன் இவர்களுக்கு நாமகோத்ரங்களைச் சொல்லி வடக்கு நோக்கிய ப்ராம்ஹணர்கள் இடத்தில் தெரிவிக்கவும். சதுர்விம்சதிமதத்திலும்:— ''பாத்ராலம்பம் .......... இதீரயந்'' என்று இதன் பொருள்:— போஜன பாத்ரத்தை இடது கையால் ஸ்பர்சித்துக் கொண்டு, அன்னத்தைக் கொடுக்கும் வரையில் பாத்ரத்தை விடாமலே 'விச்வேதேவா இதம் வோ அந்நம்'' என்று உச்சரிப்பவனாய், அன்னத்தைக் கொடுக்க வேண்டும், என்று.

वैश्वदैविकान्नत्यागप्रकारमाहात्रिः – हस्तेन मुक्तमन्नाद्य-मिदमन्नमितीरयेत् । स्वाहेति च ततः कुर्यात् स्वसत्ताविनिवर्तनम् इति । परिवेषकहस्तेन मुक्तं परिविष्टमन्नाद्यं इदमन्नमिति विश्वेभ्यो देवेभ्य इति देवोद्देश्यक शब्दोच्चारणानन्तरं उच्चारयेत्, तत इदमन्नमित्युदीरणानन्तरं हविर्दानप्रकाशकं स्वाहेति मन्त्रमुच्चारयेत्, ततो न ममेति स्वत्वपरित्यागं कुर्यादित्यर्थः ।

விச்வேதேவர்களுக்கான அன்னதான ப்ரகாரத்தைச் சொல்லுகிறார், அத்ரி:— 'கையினால் கொடுக்கப்பட்ட அன்னத்தை ''இதம் அன்னம்'' என்று சொல்ல வேண்டும். ''ஸ்வாஹா'' என்பதால் பிறகு தன்னுடையது என்பதை நிவர்த்திப்பதைச் சொல்ல வேண்டும்,' என்று. பரிமாறுகிறவனின் கையினால் கொடுக்கப்பட்ட அன்னம் முதலியதை ''இதமன்னம்'' என்று ''விச்வேப்யோ தேவேப்ய:'' என்ற தேவதைகளை உத்தேசிப்பதான சப்தத்தைச் சொல்லிய பிறகு ஹவிஸ்ஸைக் கொடுப்பதை ப்ரகாசப்படுத்தும் ''ஸ்வாஹா'' என்ற மந்த்ரத்தை உச்சரிக்க வேண்டும். பிறகு ''நமம'' என்று தன்னுடையது என்பதின் பரித்யாகத்தைச் செய்ய வேண்டும், என்பது பொருள்.

पित्रादिभ्योऽन्नत्यागप्रकारमपि स एवाह— गोत्रसम्बन्धनामानि इदमन्नं नमः स्वधा। पितृक्रमादुदीर्यैति स्वसत्तां विनिवर्तयेत् इति। पित्रादिक्रमात् गोत्रसम्बन्धनामोच्चारण पूर्वकं देवतोद्देशं कृत्वा इदमन्नम् इति प्रदेयद्रव्यं निर्दिश्य स्वधा इति कव्यदानप्रकाशकमन्त्रमुच्चार्य न मम इति स्वत्वपरित्यागं कुर्यादित्यर्थः। सङ्ग्रहे — अन्नं ब्रह्मात्मकं ध्यात्वा द्विजमात्मानमेव च। श्राद्धभूमिं गयां ध्यात्वा भोक्तारं च गदाधरम्। उदीर्य गोत्रसंबन्धनामानि च ततः परम्। इदमन्नं ततः स्वाहास्वधाशब्दौ यथोचितम्। उदीर्य च नमश्शब्दं न ममेति ततो वदेत् इति।

பிதா முதலியவர்க்கு அன்னத்தைக் கொடுக்கும் ப்ரகாரத்தையும் அவரே சொல்லுகிருர்:— ''கோத்ரம், ஸம்பந்தம், நாமம், இதமன்னம், நம:, ஸ்வதா இவைகளைப் பிதா முதல் சொல்லி தன்னுடையதென்பதை (ந மம என்று) நிவர்த்திக்க வேண்டும்'', என்று பிதா முதலியவரின் வரிசையாய்க் கோத்ரம், ஸம்பந்தம், நாமம் இவைகளை முதலில் உச்சரித்து, தேவதோத்தேசம் செய்து, ''இதமன்னம்'' என்று கொடுக்கக் கூடிய அன்னம் முதலிய வஸ்துவைக் காண்பித்து, ''ஸ்வதா'' என்று கவ்யதானத்தை ப்ரகாசப்படுத்தும் மந்த்ரத்தை உச்சரித்து, ''நமம'' என்று ஸ்வத்வபரித்யாகத்தைச் செய்ய வேண்டும், என்பது பொருள். ஸங்க்ரஹத்தில்:—அன்னம், ப்ராம்ஹணன், தான் இவர்களை ப்ரம்ஹ ரூபமாகவும், ச்ராத்த பூமியைக் கயையாகவும், போக்தாவைக் கதாதரராகவும் த்யானித்து, கோத்ரம், ஸம்பந்தம், நாமம் இவைகளையும் சொல்லி, 'இதமன்னம்' என்றும் சொல்லி, பிறகு 'ஸ்வாஹா' 'ஸ்வதா' சப்தங்களை யதோசிதமாய்ச் சொல்லி நம:, நமம என்றும் சொல்ல வேண்டும்.

अत्र प्रयोगश्चन्द्रिकादावुक्तः - अन्नेऽङ्गुष्ठनिवेशनानन्तरं दक्षिणहस्तेन यवसहितमुदकमादाय सव्यहस्तेन पात्रमालभ्य इदमन्नं

हविर्ब्राह्मण आहवनीयार्थे इयं भूर्गया, अयं भोक्ता ब्राह्मणो गदाधरः पुरूरवार्द्रवसंज्ञकेभ्यो विश्वेभ्यो देवेभ्य इदं परिविष्टमन्नमातृप्तेः परिवेक्ष्यमाणं च स्वाहा नमो न ममेति त्यक्त्वा, भाजनसमीपे यवसहितमुदकं निनीय भक्त्या प्रणामं कुर्यात् । ततः पैतृकब्राह्मणसन्निधौ दक्षिणामुख उपविश्य दक्षिणहस्तेन तिलानुदकं चादाय वामहस्तेन पात्रमालभ्य ब्राह्मणो गदाधर इत्यन्तमुक्त्वा अस्मत्पित्रे अमुकगोत्रायामुकशर्मणे वसुरूपाय इदं परिविष्टमन्नमातृप्तेः परिवेष्यमाणं च स्वधा नमो न ममेति त्यक्त्वा भाजनसमीपे तिलसहितं जलं निनीय प्रणामं कुर्यात् । पितामहायामुकशर्मणे रुद्ररूपाय, प्रपितामहायामुकशर्मणे आदित्यरूपायेति विशेषः इति। (अदत्तमन्नं विप्रस्तु पाणिना स्पृशते यदि । त्रयस्ते नरकं यान्ति दाता भोक्ता तथा पिता इति स्मृत्यन्तरम् ।।)

இவ்விடத்தில் ப்ரயோகம் சொல்லப்பட்டுள்ளது, சந்த்ரிகையில்:— அன்னத்தில் பெருவிரலை வைத்த பிறகு, வலது கையினுல் யவையுடன் கூடிய ஜலத்தை யெடுத்து, இடது கையினுல் போஜன பாத்ரத்தை ஸ்பரிசித்து, ''இதமன்னம்.....நமம'' என்று சொல்லி, போஜன பாத்ரத்தின் ஸமீபத்தில் யவையுடன் கூடிய ஜலத்தை விட்டு, பக்தியுடன் நமஸ்கரிக்கவும். பிறகு பித்ருப்ராம்ஹணன் எதிரில் தெற்கு முகமாக உட்கார்ந்து, வலது கையினுல் எள், ஜலம் இவைகளை க்ரஹித்து, இடது கையால் போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்து, ப்ராம்ஹணோ கதாதர: என்ற வரையில் சொல்லி, ''அஸ்மத் பித்ரே....நமம'' என்றவரையில் சொல்லி, போஜன பாத்ர ஸமீபத்தில் எள்ளுடன் கூடிய ஜலத்தை விட்டு, நமஸ்கரிக்க வேண்டும். பிதாமஹாய ப்ரபிதாமஹாய என்பதில்....சர்மணே....ரூபாய என்பது விசேஷம்.

(கொடுக்கப்படாத அன்னத்தைப் போக்தாவான ப்ராம்ஹணன் கையினுல் தொட்டால் தாதா, போக்தா, பிதா என்ற மூவரும் நரகத்தை யடைகின்றனர்.)

अत्र विष्णुपुराणम् — पिता पितामहश्चैव तथैव प्रपितामहः । तृप्तिं प्रयान्तु मे भक्त्या यन्मयैतदुदाहृतम् । यज्ञेश्वरो हव्यसमस्तकव्यभोक्ताऽव्ययात्मा हरिरीश्वरोऽत्र । तत्सन्निधानादपयान्तु सद्यो रक्षांस्यशेषाण्यसुराश्च सर्वे इति । पुराणान्तरे — ईशान विष्णु कमलासन कार्तिकेय वह्नित्रयार्करजनीशगणेश्वराणाम् । क्रौञ्चामरेन्द्रकलशोद्भवकाश्यपानां पादान्नमामि सततं पितृमुक्तिहेतोः । एको विष्णुर्महद्भूतं पृथग्भूतान्यनेकशः । त्रीन् लोकान् व्याप्य भूतात्मा भुङ्क्ते विश्वभुगव्ययः इति ।

இவ்விஷயத்தில், விஷ்ணுபுராணம்:— "எனது பிதா, பிதாமஹன், ப்ரபிதாமஹன் இவர்கள் நான் பக்தியுடன் சொல்லிய வசனத்தால் த்ருப்தியை அடைய வேண்டும். யஜ்ஞேச்வரன், எல்லா ஹ்வய கவ்யங்களையும் புஜிப்பவர். நாசமற்றவர். ஈச்வரன் ஹரி: இங்கு இருக்கிறுர். அவருடைய ஸந்நிதியால் எல்லா ராக்ஷஸர்களும் எல்லா அஸுரர்களும் இதை விட்டுச் செல்ல வேண்டும்," என்று மற்ருேர் புராணத்தில்:— "ஈசானன், விஷ்ணு, கமலாஸனன், கார்த்திகேயன், மூன்று அக்னிகள், ஸூர்யன், சந்த்ரன், கணேசன், க்ரௌஞ்சன், அமரேந்த்ரன், கலசோத்பவன், காச்யபன் இவர்களின் பாதங்களை எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றேன், பித்ருக்களின் முக்திக்காக. விஷ்ணு ஒருவரே மஹாபூதத்தையும், தனித்தனியாயுள்ள அநேக ப்ராணிகளையும், மூன்று உலகங்களையும் வ்யாபித்து, பூதஸ்வரூபனுய் உலகத்தைப் அனுபவிப்பவனுய் அழிவற்றவனுய்ப் புஜிக்கின்ருன்," என்று.

अनन्तरकृत्यमाह यमः — अन्नहीनं क्रियाहीनं मन्त्रहीनं च यद्भवेत् । सर्वमच्छिद्रमित्युक्त्वा ततो यत्नेन भोजयेत् इति । अच्छिद्रं

जायताम् इत्येतावदेव बोधायनेनोक्तम्। एतच्च प्रागेवापोशनदाना-द्वक्तव्यम्। आपोशनकराग्राणामच्छिद्रस्य तु भाषणात्। निराशाः पितरो यान्ति देवैस्सह न संशयः इति प्रचेतः स्मरणात्।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிருர், யமன்:— ''எது அன்னத்தால் குறைந்ததோ, க்ரியையினுல் குறைந்ததோ, மந்த்ரத்திஞல் குறைந்ததோ அதெல்லாம் குறைவில்லாததாய் ஆக வேண்டும், என்று சொல்லி, பிறகு ச்ரத்தையுடன் புஜிப்பிக்க வேண்டும்,'' என்று. குறைவில்லாததாய் ஆக வேண்டும், என்ற இவ்வளவே போதாயனரால் சொல்லப்பட்டு உள்ளது. இந்த மந்த்ரத்தை ஆபோசனத்தைக் கொடுப்பதற்கு முன்பே சொல்ல வேண்டும். ''ஆபோசனத்தைக் கையில் வைத்துக் கொண்டு ப்ராம்ஹணர்கள் 'அச்சித்ரம் ஜாயதாம்'' என்று சொன்னுல், பித்ருக்கள் தேவர்களுடன் ஆசையற்றவர்களாய்த் திரும்பிச் செல்கின்றனர். ஸம்சயமில்லை'' என்று ப்ரசேதஸ்ஸின் ஸ்ம்ருதி உள்ளது.

अनन्तरकर्तव्यमाह पारस्करः — गायत्रीं त्रिः सकृद्वापि जपेद्व्याहृतिपूर्विकाम्। मधुवाता इति त्र्यृचं मध्वित्येतत्त्रिकं तथा इति। प्रचेताः — आपोशनं प्रदायाथ सावित्रीं त्रिर्जपेदथ। मधुवाता इति त्र्यृचं मध्वित्येतत्त्रिकं तथा इति। आपोशनविधानान्नित्य-भोजनाश्रितनियमाः परिषेचन प्राणाहुत्यादयो भोक्तॄणामत्रापि सन्तीति गम्यते।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிருர், பாரஸ்கரர்:— வ்யாஹ்ருதியுடன் கூடிய காயத்ரியை மூன்று தடவையாவது அல்லது ஒரு முறையாவது ஜபிக்க வேண்டும். மதுவாதா: என்ற மூன்று ருக்குகளையும், மது என்ற சப்தத்தை மூன்று முறையும் ஜபிக்கவும். ப்ரசேதஸ்:— ''ஆபோசனத்தைக் கொடுத்து, பிறகு

காயத்ரியை மூன்று முறை ஜபிக்கவும். பிறகு, மதுவாதா: என்ற மூன்று ருக்குகளையும், மது என்ற பதத்தை மூன்று தடவையும் ஜபிக்கவும்,'' என்று. ஆபோசனத்தைக் கொடுப்பதை விதிப்பதால் நித்ய போஜனத்தை அடைந்துள்ள நியமங்கள் பரிஷேசனம், ப்ராண ஆஹுதி முதலியவைகள் புஜிக்கும் ப்ராம்ஹணர்களுக்கு இங்கும் உண்டு, என்று அறியப்படுகிறது.

अत एव कस्यचिद्भोजननियमस्यात्र प्रतिषेधार्थं तदनुष्ठाने दोषमाह भरद्वाजः —— पितृणामन्नमादाय बलिं यस्तु प्रयच्छति । स्तेयेन ब्राह्मणस्तेन स सर्वस्तेयकृत् भवेत् इति । बलिं - भोजनात् किञ्चिदन्नाग्रं धर्मराजाय वै बलिः इत्युक्तमित्यर्थः । अत्रिरपि —— दत्ते वाऽप्यथ वाऽदत्ते न भूमौ निक्षिपेद्बलिम् । तदन्नं निष्फलं याति निराशैः पितृभिर्गतैः इति । स्मृत्यन्तरे —— आपोशने धार्यमाणे यस्तु भूमौ जलं क्षिपेत् । तदन्नमासुरं प्रोक्तं न दातुः पारलौकिकम् इति । (आपोशनं न गृह्णीयात् स्वयमेव नृपोत्तम । अन्यैर्दक्षिणपार्श्वस्थैरन्नस्योपरि गृह्यताम् इति ब्रह्माण्डपुराणम् ।)

ஆகையாலேயே, ஒரு போஜன நியமத்தை இங்கு விலக்குவதற்காக அதை அனுஷ்டிப்பதில் தோஷத்தைச் சொல்லுகிறார், பரத்வாஜர்:— ''பித்ருக்களின் அன்னத்தை யெடுத்து எவன் பலியைக் கொடுக்கின்றானோ, அவன் அந்தத் திருட்டுத் தனத்தால் எல்லாத் திருட்டையும் செய்தவனாக ஆகிறான்'' என்று. பலிம் = ''போஜன அன்னத்தினின்று மேல் உள்ள கொஞ்சம் அன்னமானது தர்மராஜனின் பொருட்டுப் பலியாக வேண்டும்'' என்று சொல்லப்பட்ட பலியை, என்பது பொருள். அத்ரியும்:— அன்னம் கொடுக்கப்பட்ட பின்பாவது, முன்பாவது அதிலிருந்து அன்னத்தை யெடுத்து எவன் பூமியில் பலியை வைப்பானோ, அவனது அன்னம் பித்ருக்கள் ஆசையற்றுப் போவதால் வீணாக ஆகின்றது. மற்றோர் ஸ்ம்ருதியில்:—

ஆபோசனம் கையில் தரிக்கப்பட்டிருக்கும் பொழுது, எவன் பூமியில் ஜலத்தை விடுவானோ, அவனது அன்னம் அஸுரர்களுடையது என்று சொல்லப்படுகிறது. கொடுப்பவனுக்குப் பரலோகத்திற்காக ஆகிறதில்லை. (ஓ அரசனே ! ஆபோசனத்தைத் தானாகவே க்ரஹித்துக் கொள்ளக்கூடாது. பிறர்கள் போஜன பாத்ரத்தின் வலது புறத்திலிருந்து கொடுக்க வேண்டும். போஜன பாத்ரத்தின் மேலே க்ரஹிக்கப்பட வேண்டும், என்று ப்ரம்ஹாண்ட புராணம் கூறுகிறது.)

प्राणाहुत्यनन्तरकर्तव्यमाह याज्ञवल्क्यः — सव्याहृतिकां गायत्रीं मधुवाता इति त्र्यृचम्। जप्त्वा यथासुखं वाच्यं भुञ्जीरंस्तेऽपि वाग्यताः इति। यथासुखमित्यत्र जुषध्वमिध्याहरः। अत एव व्यासः — जुषध्वमिति ते चोक्ता सम्यग्विधृतभाजनाः। कृतमौनास्समश्नीयुरा-पोशनादनन्तरम् इति। विधृतभाजनाः - वामहस्तधृतभोजनपात्रा इत्यर्थः। एतच्चान्ननिवेदनप्रभृति कर्तव्यम्।

ப்ராணாஹுதிக்குப் பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— வ்யாஹ்ருதிகளுடன் கூடிய காயத்ரியையும், மதுவாதா: என்ற மூன்று ருக்குகளையும் ஜபித்து, 'யதாஸுகம் ஜுஷத்வம்' என்று சொல்லவேண்டும்; ப்ராம்ஹணர்களும் மௌனிகளாகப் புஜிக்க வேண்டும். ஆகையால் தான், வ்யாஸர்:— ஜுஷத்வம் என்று சொல்லப்பட்ட அந்த ப்ராம்ஹணர்கள் இடது கையில் நன்றாகப் பாத்ரத்தைப் பிடித்தவர்களாய், மௌனிகளாய் ஆபோசனத்திற்குப் பிறகு புஜிக்க வேண்டும். இது அன்னத்தைக் கொடுத்தது முதல் செய்யப்பட வேண்டும்.

यदाह वसिष्ठः — उभयोर्हस्तयोर्मुक्तं पितृभ्योऽन्नं निवेदितम्। तदन्नं सम्प्रतीच्छन्ति ह्यसुरा नष्टचेतसः। तस्मादशून्यं हस्तेन कुर्यादन्नमुपस्थितम्। भाजनं तु समालभ्य तिष्ठेदोच्छेषणात् द्विजः

इति । अङ्गुष्ठनिवेशनप्रभृति भोजनसमाप्तिपर्यन्तं वामहस्तेन भाजनमपरित्यजन्नेव वर्तेत, कण्डूयनाद्यर्थं वामहस्तव्यापारसमये तु दक्षिणहस्तेन भोजनपात्रं समालभ्य वर्तेतेत्यर्थः ।

வஸிஷ்டர்:— "பித்ருக்களுக்குத் தெரிவிக்கப்பட்ட அன்னத்தை இரண்டு கைகளாலும் விட்டுவிட்டால், அந்த அன்னத்தைத் துஷ்டர்களான அஸுரர்கள் க்ரஹித்துக் கொள்ளுகிறார்கள். ஆகையால் அன்னத்தைக் கையினால் விலகாததாகச் செய்ய வேண்டும். போக்தா போஜனம் முடியும் வரை போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்துக் கொண்டிருக்க வேண்டும்." பெருவிரலை வைப்பது முதல் போஜனம் முடியும் வரை இடது கையினால் போஜன பாத்ரத்தை விடாமலே இருக்க வேண்டும். சொரிந்து கொள்வது முதலியதற்காக இடது கையை உபயோகிக்கும் ஸமயத்தில் வலது கையினால் போஜன பாத்ரத்தை ஸ்பர்சித்துக் கொண்டு இருக்க வேண்டும் என்பது பொருள்.

अङ्गुष्ठनिवेशनात् पूर्वं भोक्त्राऽन्नस्पर्शो न कर्तव्यः, अन्नस्पर्शो न कर्तव्यः प्रागङ्गुष्ठनिवेशनात् इति स्मृतेः । विष्णुपुराणे — ततोऽन्नं मृष्टमत्यर्थमभीष्टमतिसत्कृतम् । दत्वा जुषध्वमिच्छातो वाच्यमेतदनिष्ठुरम् । भोक्तव्यं तैश्च तच्चित्तैर्मौनिभिस्सुमुखैस्सुखम् । अक्रुद्ध्यता चात्वरता देयं तेनापि भक्तितः इति । पारस्करः — सङ्कल्प्य पितृदेवेभ्यस्सावित्रीमधुमज्जपः । श्राद्धं निवेद्यापोशनं जुषिप्रैषोऽथ भोजनम् इति ।

பெருவிரலை வைப்பதற்கு முன், புஜிப்பவன் அன்னத்தைத் தொடக்கூடாது. 'அங்குஷ்டத்தை வைப்பதற்கு முன் அன்னத்தை ஸ்பர்சிக்கக் கூடாது', என்று ஸ்ம்ருதி இருப்பதால். விஷ்ணு புராணத்தில்:— பிறகு சுத்தமாயும், அதிகமாயும், இஷ்டமாயும், ஸத்காரமுள்ளதாயும் உள்ள அன்னத்தைக் கொடுத்து

இஷ்டப்படி புஜியுங்கள் என்று ம்ருதுவாய்ச் சொல்ல வேண்டும். அவர்களும் கவனமுடைய வர்களாயும் மௌனிகளாயும், ஸுமுகர்களாயும் இருந்து ஸுகமாய்ப் புஜிக்க வேண்டும். கர்த்தாவும் கோபமில்லாமல் வேகமில்லாமல் பக்தியுடன் கொடுக்க வேண்டும். பாரஸ்கரர்:— பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் ஸங்கல்பித்து, காயத்ரீ, மதுவாதா இவைகளின் ஜபம், ச்ராத்த நிவேதனம், ஆபோசனம், ஜுஷத்வம் என்பது, பிறகு போஜனம், என்ற இவைகள் முறையே செய்யப்பட வேண்டும்.

अभिश्रवणम्—भोजनोपक्रमादनन्तरं कर्तव्यमाह कात्यायनः — अश्नत्सु जपेद्व्याहृतिपूर्वां गायत्रीं सप्रणवां सकृत्त्रिर्वा रक्षोघ्नीः पित्र्यमन्त्रान् पुरुषसूक्तमप्रतिरथमन्यानि च पवित्राणि इति। रक्षोघ्नीः - कृणुष्वपाजः प्रसृतिं न पृथ्वीं इत्याद्या ऋचः, पित्र्यमन्त्राः - उदीरतामवर उत्परासः इत्यादयः अप्रतिरथम् - आशुश्शिशानः इति सूक्तम्।

அபிச்ரவணம். போஜனம் ஆரம்பித்த பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், காத்யாயனர்:— ப்ராம்ஹணர்கள் புஜிக்கும் பொழுது வ்யாஹ்ருதிகளை முன்னுடையதும், ப்ரணவத்துடன் கூடியதுமான காயத்ரியை மூன்று முறை அல்லது ஒரு முறை ஜபிக்க வேண்டும். ரக்ஷோக்நிகள் (க்ருணுஷ்வ பாஜ: என்பது முதலிய ருக்குகள்), பித்ர்ய மந்த்ரங்கள் (உதீரதாம் என்பது முதலியவைகள்), புருஷ ஸூக்தம், அப்ரதிரதம் (ஆசுஶ்ஶிசாந: என்ற ஸூக்தம்), மற்றும் பவித்ரங்களான மந்த்ரங்கள், இவைகளை ஜபிக்க வேண்டும்.

मनुरपि — स्वाध्यायं श्रावयेत् पित्र्ये धर्मशास्त्रेण चैव हि। आख्यानानीतिहासांश्च पुराणानि खिलानि च इति। याज्ञवल्क्यः -

अन्नमिष्टं हविष्यं च दद्यादक्रोधनोऽत्वरः । आतृप्तेस्तु पवित्राणि जप्त्वा पूर्वजपं तथा इति ।

மனுவும்:— வேதம், தர்மசாஸ்த்ரங்கள், ஆக்யானங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், கிலங்கள் (ஸ்ரீ ஸூக்தம், சிவ ஸங்கல்பம் முதலியவை) இவைகளை ச்ராத்தத்தில் புஜிக்கும் ப்ராம்ஹணர்களைக் கேட்கச் செய்ய வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— இஷ்டமாயுள்ள ஹவிரன்னத்தைக் கோபமில்லாதவனும், வேகமில்லாதவனும் த்ருப்தியாகும் வரையில் கொடுக்க வேண்டும். பவித்ர மந்த்ரங்களையும் ஜபித்து த்ருப்திக்குப் பிறகு முன் சொல்லிய மந்த்ரங்களையும் ஜபிக்கவும்.

अत्र विज्ञानेश्वरः — आतृप्तेः पवित्राणि - श्रीपुरुषसूक्तपवमान प्रभृतीनि जपित्वा, तृप्तान् ज्ञात्वा पूर्वोक्तजपं च सव्याहृतिकां गायत्रीं मधुवाता इत्यृचम् जपेत् इति । सायणीये — श्राद्धभोजनकाले तु कर्ता भ्राता सुतोऽपि वा । दौहित्रो वाऽथ पुत्रो वा सपिण्डो वा विचक्षणः । यत्राभिश्रावयेद्वेदोक्तांस्तच्छ्राद्धं पावनं भवेत् । अन्यं वाऽऽहूय तं वृत्वा श्रावयेत्तन्निरीक्षयेत् । श्राद्धक्रियासमाप्तौ तु प्रदद्याज्जपदक्षिणाम् । अत्युच्चैरतिशीघ्रं च हित्वैव श्रावयेद्बुधः । रक्षोघ्नं पैतृकं चैव दिवाकीर्त्ययुतं तथा । वैष्णवं त्रिसुपर्णं च नाचिकेतं तथा पठेत् । रक्षोघ्नादि जपेऽशक्तो जपेत् पुरुषसूक्तकम् । तत्राप्यशक्तो गायत्री मातृप्ते रसकृज्जपेत् । एकोद्दिष्टे च सापिण्ड्ये षोडशेष्वनुमासिके । एषु न श्रावयेत् सूक्तमन्यत्र श्रावयेत् बुधः इति । (अभिश्रवणहीनं यः श्राद्धं कुर्वीत मूढधीः । तदन्नं मांसतुल्यं स्यात्तद्देहमसुरालयम् इति स्मृत्यन्तरम् ।।)

விஜ்ஞானேச்வரர்:— த்ருப்தியாகும் வரையில் பவித்ராணி = சுத்தமான புருஷஸூக்தம் பவமானம் முதலியவைகளை ஜபித்து. த்ருப்தர்களாயறிந்து பிறகு முன்

சொல்லிய ஜபத்தையும், அதாவது வ்யாஹ்ருதியுடன் கூடிய காயத்ரீ, மதுவாதா: என்ற மூன்று ருக்குகள் இவைகளையும் ஜபிக்க வேண்டும், என்றார். ஸாயணீயத்தில்:— ச்ராத்த போஜன காலத்தில் கர்த்தா அல்லது ப்ராதா, பிள்ளை, தௌஹித்ரன், பௌத்ரன், ஸபிண்டன், இவர்களுள் யாராவது அறிந்தவன் எந்த ச்ராத்தத்தில் மந்த்ரங்களைப் புஜிப்பவர்களைக் கேட்கச் செய்கிறானோ அந்த ச்ராத்தம் சுத்தமாகியதாக ஆகும். அல்லது வேறொரு ப்ராம்ஹணனை அழைத்து அவனை வரித்து ச்ரவணம் செய்யும்படி செய்யவும். அவனைப் போக்தாக்களைப் பார்க்கச் செய்ய வேண்டும். ச்ராத்தம் முடிந்த பிறகு, ஜபத்திற்குத் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். அறிந்தவன் அதிகமாக உரக்கவும், அதி சீக்ரமாகவும் சொல்லக் கூடாது. ரக்ஷோக்நம், பைத்ருகம், திவாகீர்த்யம், வைஷ்ணவம், த்ரிஸுபர்ணம், நாசிகேதம் இவைகளைப் படிக்க வேண்டும். ரக்ஷோக்நாதிகளை ஜபிக்கச் சக்தியற்றவன் புருஷ ஸூக்தத்தை ஜபிக்கவும். அதிலும் சக்தியற்றவன் காயத்ரியை ப்ராம்ஹணர்கள், த்ருப்தி ஆகும் வரையில் அடிக்கடி ஜபிக்க வேண்டும். ஏகோத்திஷ்டம், ஸபிண்டீகரணம், ஷோடச ச்ராத்தங்கள், அனுமாஸிகம் இவைகளில் அபிச்ரவணம் கூடாது. மற்ற ச்ராத்தங்களில் விதிக்கப்பட்டுள்ளது. (மூடனாகிய எவன் அபிச்ரவணம் இல்லாமல் எந்த ச்ராத்தத்தைச் செய்கின்றானோ, அந்த ச்ராத்தத்தின் அன்னம் மாம்ஸத்துக்கு ஸமமாகும். அவனுடைய தேஹம் அஸுரர்களுக்கு வீடாகும். என்கிறது, ஓர் ஸ்ம்ருதி)

स्मृत्यर्थसारे — नान्दीमुखे गयाश्राद्धे नवश्राद्धे च मासिके। सपिण्डीकरणश्राद्धे न जपेत् पितृसूक्तकम् इति। जपोऽयमुपवीतिना कर्तव्यः। अत एव जमदग्निः - अपसव्येन कर्तव्यं सर्वं श्राद्धं यथाविधि। सूक्तस्तोत्रजपं मुक्त्वा विप्राणां च विसर्जनम् इति।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:— நாந்தீச்ராத்தம், கயாச்ராத்தம், நவச்ராத்தம், மாஸிகம், ஸபிண்டீகரண ச்ராத்தம், இவைகளில் அபிச்ரவணம் கூடாது. இந்த ஜபத்தை உபவீதியாய்ச் செய்ய வேண்டும். ஆகையால் தான், ஜமதக்னி:— ஸூக்த ஜபம், ஸ்தோத்ர ஜபம், ப்ராம்ஹணர்களை அனுப்புவது இவைகளைத் தவிர்த்து. ச்ராத்தம் முழுவதையும் விதிப்படி ப்ராசீனாவீதியாய்ச் செய்ய வேண்டும்.

दातृभोक्तृनियमः — दातृभोक्तृनियममाह वृद्धशातातपः — अपेक्षितं यो न दद्यात् श्राद्धार्थमुपकल्पितम्। कृपणो मन्दबुद्धिस्तु न च श्राद्धफलं लभेत्। अपेक्षितं याचितव्यं श्राद्धार्थमुपकल्पितम्। न याचते द्विजो मूढस्स भवेत् पितृघातुकः इति। स्मृत्यन्तरेऽपि — अपेक्षितं द्विजो मोहात् भुञ्जानो यो न याचते। अपेक्षितं यो न दद्यात्तावुभौ पितृघातुकौ इति। निगमेऽपि — अवश्यमर्चयेत् श्राद्धे पित्रर्थमुपकल्पितम्। न याचते द्विजो मूढस्स भवेत् पितृघातुकः। अपेक्षितं यो न दद्यात् श्राद्धार्थमुपकल्पितम्। अधः कृच्छ्रासु घोरासु तिर्यग्योनिषु जायते इति।

ச்ராத்தம் செய்பவன் புஜிப்பவன் இவர்களின் நியமங்கள். தாதா போக்தா இவர்களின் நியமத்தைச் சொல்லுகிறார், வ்ருத்தசாதாதபர்:— ச்ராத்தத்திற்காகத் தயாரித்ததில் ப்ராம்ஹணர்கள் அபேக்ஷித்ததை எவன் கொடுக்கவில்லையோ, அந்தப் புத்தியற்ற க்ருபணன் ச்ராத்தத்தின் பலனை அடைவதில்லை. ச்ராத்தத்திற்காகத் தயாரிக்கப்பட்டதில் அபேக்ஷையுள்ளதை ப்ராம்ஹணன் கேட்க வேண்டும். யாசிக்காவிடில் அந்த மூடன் பித்ருக்களைக் கொன்றவனாவான். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— புஜிக்கும் ப்ராம்ஹணன் அபேக்ஷையுள்ளதை மோஹத்தால் கேட்காவிடினும், அபேக்ஷித்ததைக் கொடுக்காவிடினும் அவ்விருவர்களும்

பித்ருக்னர்களாகின்றனர். நிகமத்திலும்:— ச்ராத்தத்தில் பித்ருக்களுக்காகத் தயாரிக்கப்பட்டதைப் போக்தா அவச்யம் கேட்க வேண்டும். எந்த மூடன் கேட்பதில்லையோ அவன் பித்ருக்நனுவான். ப்ராம்ஹணர்களின் அபேக்ஷித்ததை எவன் கொடுக்கவில்லையோ அவன் பயங்கரமான பசு பக்ஷி முதலிய ஜாதிகளில் பிறப்பான்.

यत्तु यमेनोक्तम् — कृच्छ्रद्वादशरात्रेण मुच्यते कर्मणस्ततः। तस्माद्विद्वान्नैव दद्यान्न याचेन्न च दापयेत् इति। यद्यप्युक्तं वायुपुराणे — याचते यदि दातारं ब्राह्मणो ज्ञानदुर्बलः। पितरस्तस्य कुप्यन्ति दातुर्भोक्तुर्न संशयः इति, तत् श्राद्धार्थमकल्पितवस्तुविषयम्, सामान्येनाभिधानात्।

ஆனுல், யமன்:— 'ப்ராஜாபத்யக்ருச்ரத்தை அனுஷ்டித்தால் அப்பாவத்தினின்றும் விடுபடுவான். ஆகையால் அறிந்தவன் கொடுக்கக் கூடாது, கேட்கவும் கூடாது, கொடுக்கச் செய்யவும் கூடாது', என்றதும். வாயுபுராணத்தில்:— ''ஞானமற்ற ப்ராம்ஹணன் தாதாவை யாசித்தால், அந்தத் தாதாவினுடையவும் போக்தாவினுடையவும் பித்ருக்கள் கோபத்தை அடைகின்றனர். ஸம்சயமில்லை'' என்றதும் உள்ளதேயெனில், அது ஸாமான்யமாய்ச் சொல்லியிருப்பதால் ச்ராத்தத்திற்காகத் தயாரிக்கப்படாத வஸ்துவைப் பற்றியது.

श्राद्धार्थमुपकल्पितवस्तुविषयेऽपि अत्यन्ताधिकं दाता न दद्यात् भोक्ता च न प्रतिगृह्णीयात्। तथा च शङ्खलिखितौ — नात्यधिकं दद्यान्न प्रतिगृह्णीयात् इति। अनपेक्षितवस्तुनो निवारणप्रकारमाह निगमः — नान्नपानादिकं श्राद्धे वारयेन्मुखतः क्वचित्। अनिष्टत्वाद्बहुत्वाच्च वारणं हस्तसंज्ञया इति।

ச்ராத்தத்திற்காகத் தயாரிக்கப்பட்ட வஸ்துக்கள் விஷயத்திலும் மிகவும் அதிகமாக தாதா கொடுக்கக் கூடாது. போக்தாவும் க்ரஹிக்கக் கூடாது. அவ்விதமே, சங்க லிகிதர்கள்:— மிகவும் அதிகமாகக் கொடுக்கக் கூடாது. க்ரஹிக்கவும் கூடாது. அபேக்ஷையில்லாத வஸ்துவைத் தடுப்பதின் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார், நிகமர்:— ச்ராத்தத்தில் அன்னபானம் முதலியதை ஒரு காலும் வார்த்தையினால் தடுக்கக்கூடாது. இஷ்டமில்லாததாலும், அதிகமாகியதாலும், தடுப்பதென்பது கையின் ஸமிஜ்ஞையால் செய்ய வேண்டும்.

शङ्खलिखितावपि — अन्नपानं प्रभूतमिति न ब्रूयुरन्यत्र हस्तसंज्ञायाः इति । एवं याचनमपि न मुखतः कुर्यात्, याचनं प्रतिषेधश्च कर्तव्यं हस्तसंज्ञया इति स्मृतेः । मौन भङ्गप्रसङ्गाच्च । अपेक्षितं वस्तु ददामीत्युक्त्वा न दद्यात्। तथा यमः — यावद्धविष्यं भवति यावदिष्टं प्रदीयते। तावदश्नन्ति पितरो यावन्नाह ददाम्यहम् इति ।

சங்கலிகிதர்களும்:— அன்னபானங்கள் அதிகமாயுள்ளதென்று கையின் ஸமிஜ்ஞையால் அல்லாது வாயினால் சொல்லக்கூடாது. இவ்விதம் கேட்பதையும் வாயால் சொல்லக்கூடாது. "கேட்பதும், மறுப்பதும் கையின் ஸமிஜ்ஞையினாலேயே செய்யப்பட வேண்டும்" என்று ஸ்ம்ருதி உள்ளது, மௌனத்திற்குப் பங்கம் ஏற்படும். அபேக்ஷிக்கப்பட்ட வஸ்துவைக் கொடுக்கிறேனென்று சொல்லி விட்டுக் கொடுக்கக் கூடாது. அவ்விதமே, யமன்:— எதுவரையில் ஹவிஸ் இருக்கின்றதோ, எது வரையில் இஷ்டமான வஸ்து கொடுக்கப்படுகிறதோ, எதுவரையில் நான் கொடுக்கிறேன் என்று சொல்லவில்லையோ, அதுவரையில் பித்ருக்கள் புஜிக்கின்றனர்.

परिविष्टवस्तुषु यन्निरवशेषतया भुक्तं यच्च भोक्तुं पुनर्गृह्यते तत्तस्येष्टमनुमाय प्रदर्श्य प्रतिषेधसूचनाभावे देयम्। तथा च स एव — यद्यद्रोचेत विप्रेभ्यस्तद्दद्यादविमत्सरी। न चात्यन्ताधिकं दद्याद्ददामीति न कीर्तयेत्। आनीय दर्शयेदग्रे ज्ञात्वेच्छां परिवेषयेत् इति। देवलः — अन्नपानकशीतोदं दद्यादेवावलोकितः। वक्तव्ये कारणे संज्ञां कुर्वन् भुञ्जीत पाणिना इति।

பரிமாறப்பட்ட வஸ்துக்களில் எது மீதியில்லாமல் புஜிக்கப்பட்டுள்ளதோ, எந்த வஸ்து புஜிப்பதற்கு மறுபடி க்ரஹிக்கப்படுகிறதோ, அந்த வஸ்து அவனுக்கு இஷ்டமென்று அனுமானித்து, காண்பித்து, மறுப்பைக் காண்பிக்காவிடில் கொடுக்கப்பட வேண்டும். அவ்விதம், யமனே:— ப்ராம்ஹணர்களுக்கு எதெது ருசிக்குமோ அதை மாத்ஸர்யமில்லாமல் கொடுக்க வேண்டும். மிகவும் அதிகமாகக் கொடுக்கக்கூடாது. கொடுக்கிறேன் என்று சொல்லக்கூடாது. கொண்டு வந்து எதிரில் காண்பிக்க வேண்டும். வேண்டுமென்பதைப் பரிமாற வேண்டும். தேவலர்:— கர்த்தா பார்க்கப்பட்டவனாய் அன்னம், பானம், குளிர்ந்த ஜலம் இவைகளைக் கொடுக்க வேண்டும். புஜிப்பவன் காரணம் சொல்ல வேண்டுமானால் கையினால் ஜாடை செய்து கொண்டு புஜிக்க வேண்டும்.

ब्रह्माण्डपुराणे — निराशोऽनित्यभुग्विप्रः श्राद्धकर्ताऽथ याचितः। विष्णुस्सर्वात्मको भुङ्क्ते इति मत्वा न दोषभाक्। न चाश्रु पातयेज्जातु न शुक्तांगिरमीरयेत्। न चोदीक्षेत भुञ्जानं न च कुर्वीत मत्सरम्। न दीनो नापि वा क्रुद्धो न चैवान्यमना नरः। एकाग्रमाधाय मनः श्राद्धं कुर्यात्सदा बुधः इति। शुक्तां - निष्ठुराम्।

ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— ஆசையற்றவனாயும், ப்ரதி தினம் புஜிக்காதவனாயும் இருக்கிற ப்ராம்ஹணன் ச்ராத்தம் செய்பவனால் வேண்டப்பட்டவனாய், ஸர்வ

ஸ்வரூபியான விஷ்ணு புஜிக்கின்றார் என்று எண்ணினால் தோஷத்தை யடைபவனாகான். கர்த்தா கண்ணீரை விடக்கூடாது. ஒரு பொழுதும் கடுமையான வார்த்தையைப் பேசக்கூடாது. புஜிக்கின்ற ப்ராம்ஹணனை உற்றுப் பார்க்கக் கூடாது. மாத்ஸர்யத்தை அடையக் கூடாது. அறிந்தவனான கர்த்தா ஏழ்மையில்லாதவனாயும், கோபமில்லாதவனாயும், வேறு இடத்தில் மனமில்லாதவனாயும் இருக்க வேண்டும். எப்பொழுதும் ஏகாக்ர மனமுள்ளவனாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்.

मनुः — नास्रमापातयेज्जातु न कुप्येन्नानृतं वदेत्। न पादेन स्पृशेदन्नं न चैतदवधूनयेत्। अस्रङ्गमयति प्रेतान् कोपोऽरीननृतं शुनः। पादस्पर्शस्तु रक्षांसि दुष्कृतीनवधूननम् इति। अस्रं - बाष्पः, तदन्नं प्रेतान् - पिशाचान् गमयति, न पितॄनित्यर्थः। व्यासः — क्रोधेनैव च यद्दत्तं यद्दत्तं त्वरया पुनः। यातुधाना विलुम्पन्ति जल्प्य वाचोपपादितम्। स्विन्नगात्रो न तिष्ठेत्तु सन्निधौ च द्विजन्मनाम् इति।

மனு:— கண்ணீரை ஒருகாலும் விடக்கூடாது. கோபிக்கக் கூடாது. பொய் சொல்லக்கூடாது. பாதத்தால் அன்னத்தைத் தொடக்கூடாது. அன்னத்தை உதறக் கூடாது. கண்ணீர் அன்னத்தைப் பிசாசங்களிடம் சேர்க்கும். கோபம் சத்ருக்களிடம் சேர்க்கும். பொய் ச்வானங்களிடம் சேர்க்கும். காலால் தொடுவது ராக்ஷஸர்களிடம் சேர்க்கும். உதறுவது பாபிகளிடம் சேர்க்கும். அன்னத்தைப் பித்ருக்களிடம் சேர்ப்பிப்பதில்லை என்பது பொருள். வ்யாஸர்:— கோபத்துடன் எது கொடுக்கப்பட்டதோ, வேகத்துடன் எது கொடுக்கப்பட்டதோ, வாக்கினால் பேசி எது கொடுக்கப்பட்டதோ அதையெல்லாம் ராக்ஷஸர்கள் கெடுக்கின்றனர். வியர்வையுள்ள சரீரத்துடன் ப்ராம்ஹணர்களுடைய எதிரில் நிற்கக் கூடாது.

काष्र्णाजिनिः —— भक्ष्यभोज्यानि चोष्याणि पेयलेह्ययुतानि च। सर्वश्रेष्ठानि यो दद्यात्सर्वश्रेष्ठो भवेन्नरः इति। स्मृत्यन्तरे —— अदत्तमन्नं विप्रस्तु पाणिना स्पृशते यदि। त्रयस्ते नरकं यान्ति दाता भोक्ता तथा पिता। मृत्पात्रगतमर्घ्यं च मृत्तिकागन्धलेपनम्। मार्जारोच्छिष्टशेषं च निराशाः पितरो गताः। न वदेन्मानुषीं वाचं न चैवाश्रूणि पातयेत्। तर्जन्यां रजतं धृत्वा यत्पितृभ्यः प्रदीयते। अन्तोऽस्ति परमाणूनामस्यान्तो न हि विद्यते। श्राद्धकर्ता वृतानां चेत् पङ्क्तावन्यं तु भोजयेत्। पितरस्तस्य षण्मासं चण्डालोच्छिष्टभोजनाः इति।

கார்ஷ்ணாஜினி:— எவன் பக்ஷ்யம், போஜ்யம், சோஷ்யம், பேயம், லேஹ்யம் இவைகளை மிகச் சிறந்ததாய்க் கொடுப்பானோ அவன் மிகச் சிறந்தவனாவான். மற்றோர் ஸ்ம்ருதியில்:— கொடுக்கப்படாத (தானம் பண்ணுவதற்கு முன்) அன்னத்தைப் போக்தா கையினால் ஸ்பர்சித்தால் தாதா, போக்தா, பிதா என்ற மூவர்களும் நரகத்தை அடைகின்றனர். மண்பாத்ரத்தில் வைக்கப்பட்ட அர்க்யமும், மண்பாத்ரத்தில் வைக்கப்பட்ட சந்தனமும், பூனையினால் உச்சிஷ்டமாகியதைக் கொடுப்பதும் என்ற இவைகளால் பித்ருக்கள் ஆசையற்றவர்களாய்ச் செல்லுகின்றனர். கர்த்தா மனுஷ்யவார்த்தையைப் பேசக் கூடாது. கண்ணீரை விடக்கூடாது. ஆள்காட்டி விரலில் வெள்ளியைத் தரித்து எந்த வஸ்து பித்ருக்களுக்குக் கொடுக்கப்படுகிறதோ, அந்த வஸ்துவுக்கு முடிவென்பதில்லை. பரமாணுக்களுக்கு அந்தம் உண்டு. இந்த அன்னத்துக்கு அந்தம் இல்லை. ச்ராத்த கர்த்தா வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களின் பங்க்தியில் வேறொருவனைப் புஜிக்கச் செய்தால் பித்ருக்கள் ஆறுமாஸம் வரையில் சண்டாளனின் உச்சிஷ்டத்தைப் புஜித்தவராகின்றனர்.

यत्तु मनुवचनम् — ब्राह्मणं भिक्षुकं वाऽपि भोजनार्थमुपस्थितम्। ब्राह्मणैरभ्यनुज्ञातश्शक्तितः प्रतिपूजयेत् इति। यदपि स्मृत्यन्तरवचनम् — उपविष्टेषु विप्रेषु यद्यागच्छेद्द्विजोऽतिथिः। निमन्त्रितैरनुज्ञातः कामं तमपि भोजयेत् इति, तत् पङ्क्त्यन्तरे तदैव भोजनीयत्वपरम्। अत एव चन्द्रिकायाम् — यदा अतिथिर्भोजनार्थमुपविष्टस्तदा तं गन्धपुष्पादिभिरर्चयित्वा पितृभ्योऽन्नत्यागानन्तरमस्मै ब्राह्मणाय विष्णुरूपाय शिवरूपाय वेदमन्नं परिविष्टमातृप्तेः परिवेक्ष्यमाणं न ममेति तदर्थं परिविष्टमन्नं त्यजेत् इति।

ஆனல், மனுவின் வசனம்:— ''போஜனத்திற்காக ப்ராம்ஹணனாவது ஸந்யாஸியாவது வந்தால் அவனை ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞை பெற்று யதாசக்தி பூஜிக்க வேண்டும்,'' என்றும், மற்றோர் ஸ்ம்ருதியில்:— ''ப்ராம்ஹணர்கள் உட்கார்ந்த பிறகு அதிதியான ப்ராம்ஹணன் வந்தானாகில், வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞை பெற்று அவனையும் புஜிப்பிக்க வேண்டும்'' என்றும் வசனமுள்ளதே யெனில், அது வேறுபங்க்தியில் அப்பொழுதே புஜிப்பிக்கலாம் என்பதில் தாத்பர்யமுள்ளது. ஆகையால் தான், சந்த்ரிகையில்:— எப்பொழுது அதிதி போஜனத்திற்காக உட்கார்ந்துள்ளானோ, அப்பொழுது அவனைச் சந்தனம், புஷ்பம் முதலியவைகளால் பூஜித்து, பித்ருக்களுக்கு அன்னதானம் செய்த பிறகு, ''அஸ்மை...நமம'' என்று மந்த்ரத்தால் அவனுக்காகப் பரிமாறப்பட்ட அன்னத்தைக் கொடுக்க வேண்டும்.

अन्नपानदाता लवणादिषु न्यूनाधिकभावेन हविषस्साद्गुण्यं पुनः प्रदानार्थं न पृच्छेदित्याह शङ्खः - श्राद्धे नियुक्तान् भुञ्जानान्न पृच्छेल्लवणादिषु। उच्छिष्टाः पितरो यान्ति पृच्छतो नात्र संशयः। बाहुः पतति दातुर्वै जिह्वा भोक्तुस्तु भिद्यते इति।

அன்ன பானங்களைக் கொடுப்பவன் உப்பு முதலியவைகளில் குறைவு அதிகம் இருப்பதால் அன்னத்தை நன்ருக்குவதற்காக மறுபடி கொடுப்பதற்குக் கேட்கக்கூடாது, என்கிருர், சங்கர்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டுப் புஜிப்பவர்களை உப்பு முதலிய விஷயமாய்க் கேட்கக் கூடாது. கேட்டால் பித்ருக்கள் உச்சிஷ்டர்களாய்ச் செல்லுகின்றனர், ஸம்சயமில்லை. கொடுப்பவனின் கை ஒடிந்துவிடுகிறது. புஜிப்பவனின் நாக்கும் வெடித்து விடுகிறது.

## भोक्तृनियमाः

भोक्तृनियममाह प्रचेताः — पीत्वाऽऽपोशनमश्नीयात् पात्रे दत्तमगर्हितम्। सर्वेन्द्रियाणां चापल्यं न कुर्यात् पाणिपादयोः इति। भोजनार्थव्यापारादधिकव्यापार इन्द्रियाणां चापल्यम्। तत्र दोषमाह हारीतः — उद्धृत्य पाणिं विहरन् सक्रोधो विस्मयान्वितः। श्राद्धकाले तु यत् भुङ्क्ते न तत् प्रीणाति वै पितॄन् इति।

## புஜிப்பவரின் நியமங்கள்.

புஜிப்பவனின் நியமத்தைச் சொல்லுகிருர், ப்ரசேதஸ்:— "புஜிப்பவன் ஆபோசனம் க்ரஹித்த பிறகு போஜன பாத்ரத்தில் கொடுக்கப்பட்ட நிந்திக்கப்படாத வஸ்துவைப் புஜிக்க வேண்டும். இந்த்ரியங்கள் எல்லாவற்றிலும் சாபலத்தைச் செய்யக் கூடாது. கை கால்களின் சாபலத்தையும் செய்யக்கூடாது," என்று. இந்த்ரியசாபலம் என்பது போஜன கார்யத்தைத் தவிர மற்ற வ்யாபாரமாகும். அதில் தோஷத்தைச் சொல்லுகிருர், ஹாரீதர்:— புஜிப்பவன் கையை எடுத்துக் கொண்டும், விளையாட்டுடனும், கோபமுடையவனுயும், ஆச்சர்யமுடையவனுயும் ச்ராத்த காலத்தில் எந்த அன்னத்தைப் புஜிக்கின்ருனே அது பித்ருக்களுக்கு த்ருப்தியைச் செய்வதில்லை.

बोधायनः — पादेन पादमाक्रम्य यो भुङ्क्तेऽनापदि द्विजः । नैवाऽसौ भोज्यते श्राद्धं निराशाः पितरो गताः इति । निगमेऽपि — तूष्णीं भुञ्जीरन्नविलोकमाना अनुद्धृत्य पात्रम् इति । तूष्णीं - वाग्व्यापारमन्तरेण । अविलोकमाना दिश इत्यर्थः । मनुरपि — अभ्युष्णमन्नं सर्वं स्यात् भुञ्जीरंश्चैव वाग्यताः । न च द्विजातयो ब्रूयुर्दात्रा पृष्टा हविर्गुणान् । यावदुष्णं भवत्यन्नं यावदश्नन्ति वाग्यताः । तावद्धि पितरोऽश्नन्ति यावन्नोक्ता हविर्गुणाः इति । वाग्यमनविधानादेव हविर्गुणावचने सिद्धे पुनर्निषेधो हस्तसंकेतेनापि हविर्गुणसूचन निषेधार्थः ।

போதாயனர்:— எவன் ஆபத்தில்லாத ஸமயத்தில் பாதத்தால் பாதத்தை அமிழ்த்திக் கொண்டு புஜிக்கின்றானோ அவன் ச்ராத்தத்தைப் புஜிப்பவனாகான். பித்ருக்கள் ஆசையற்றவர்களாய்ச் செல்லுகின்றனர். நிகமத்திலும்:— மௌனிகளாய், திக்குகளைப் பார்க்காமல், போஜன பாத்ரத்தைத் தூக்காமல் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். மனுவும்:— ''அன்னமெல்லாம் உஷ்ணமாக இருக்க வேண்டும். போக்தாக்கள் மௌனிகளாய்ப் புஜிக்க வேண்டும். ச்ராத்த கர்த்தாவினால் கேட்கப்பட்டாலும் புஜிப்பவர்கள் அன்னத்தின் குணங்களைச் சொல்லக்கூடாது. அன்னம் எதுவரையில் உஷ்ணமாய் உள்ளதோ, புஜிப்பவர்கள் எதுவரையில் மௌனிகளாய்ப் புஜிக்கின்றனரோ, அதுவரையிலேயே பித்ருக்கள் புஜிக்கின்றனர். அன்னத்தின் குணங்கள் எதுவரையில் சொல்லப்படவில்லையோ,'' என்று மௌனத்தை விதித்ததாலேயே அன்னத்தின் குணங்களைச் சொல்வதின் ப்ரதிஷேதம் ஸித்தித்திருக்க, மறுபடி அன்னத்தின் குணங்களைச் சொல்வதை ப்ரதிஷேதித்தது, கையின் ஜாடையினாலுங்கூட அன்னத்தின் குணங்களைச் சொல்லக்கூடாது, என்பதற்காக.

यदाहात्रिः — हुङ्कारेणाऽपि यो ब्रूयाद्धस्ताद्वाऽपि गुणान् वदेत्। भूतलाच्चोद्धरेत् पात्रं मुञ्चेद्धस्तेन वाऽपि तत्। प्रौढपादो बहिःकक्षो बहिर्जानुकरोऽथ वा। अङ्गुष्ठेन विनाऽश्नाति मुखशब्देन वा पुनः ॥ पीतावशिष्टं तोयादि पुनरुद्धृत्य वा पिबेत्। खादितार्धं पुनः खादेन्मोदकादि फलादि वा। मुखेन वा धमेदन्नं निष्ठीवेद्भोजनेऽपि वा। इत्थमन्नं द्विजः श्राद्धे भुक्त्वा गच्छत्यधोगतिम्। भूतलात् पात्रोद्धरणे दोषः अन्नाधारमहाभाजनविषयः। प्रौढपादः - आसनाद्यारोपितपादः, बहिः कक्षः - उत्तरवासो बहिर्भूत कक्ष इत्यर्थः।

அதைச் சொல்லுகிறார், அத்ரி:— "ஹுங்காரத்தினாலாவது, கையின் ஜாடையினாலாவது அன்னத்தின் குணங்களை எவன் சொல்வானோ, போஜன பாத்ரத்தைப் பூமியினின்றும் எவன் எடுப்பானோ, போஜன பாத்ரத்தை எவன் கையினால் விட்டுவிடுவானோ, ஆஸனத்தின் மேல் கால்வைத்தவனாய், கச்சத்தை உத்தரீயத்துக்கு வெளியில் தரித்தவனாய், முழங்காலுக்கு வெளியில் கையையுடையவனாய், கட்டைவிரல் இல்லாமல் எவன் புஜிக்கின்றானோ, வாயினால் சப்தம் செய்து கொண்டும் எவன் புஜிக்கின்றானோ, குடித்த மீதியாகிய ஜலம் முதலியதை மறுபடி எவன் எடுத்துக் குடிக்கின்றானோ, பாதி புஜிக்கப்பட்டு மீதியுள்ள மோதகம் முதலியதையவது பழம் முதலியதையாவது எவன் புஜிக்கின்றானோ, வாயினால் எவன் அன்னத்தை ஊதுகின்றானோ, போஜன பாத்ரத்தில் எவன் துப்புகின்றானோ இவ்விதம் அன்னத்தை எவன் புஜிக்கின்றானோ அவன் நரகத்தை யடைவான்." போஜன பாத்ரத்தைப் பூமியினின்றும் எடுக்கக் கூடாது, என்றது அன்னத்திற்கு ஆதாரமான பெரிய பாத்ரத்தைப் பற்றியது.

वृद्धशातातपः — आसने पादमारोप्य यो भुङ्क्ते तु द्विजोत्तमः। हन्ति दैवं च पित्र्यं च तदन्नं च प्रजां पशून् इति। प्रचेताः — न स्पृशेद्वामहस्तेन भुञ्जानोऽन्नं कदाचन। न पादौ न शिरोवस्तिं न पदा भाजनं स्पृशेत् इति। निगमेऽपि — मांसापूपफलेक्ष्वादि दन्तच्छेदैर्न भक्षयेत्। ग्रासशेषं न पात्रेऽस्येत् पीतशेषं तु नो पिबेत् इति। ग्रासशेषं - आस्यार्पितग्रासशेषम्, भोजनपात्रे न निक्षिपेदित्यर्थः।

வ்ருத்தசாதாதபர்:— எந்த ப்ராம்ஹணன் ஆஸனத்தின் மேல் பாதத்தை வைத்துக் கொண்டு புஜிக்கின்றானோ, அவன் தைவ கார்யத்தையும், பித்ரு கார்யத்தையும், அந்த அன்னத்தையும், ப்ரஜைகளையும், பசுக்களையும் நாசமாக்குகிறான். ப்ரசேதஸ்:— புஜிப்பவன் இடது கையினால் அன்னத்தை ஒரு பொழுதும் தொடக்கூடாது. பாதங்களையும், தலையையும், நாபிக்குக் கீழுள்ள ப்ரதேசத்தையும் தொடக்கூடாது. காலினால் பாத்ரத்தைத் தீண்டக்கூடாது. நிகமத்திலும்:— மாம்ஸம், அபூபம், பழம், கரும்பு முதலியவைகளைப் பல்லினால் கடித்து வைத்து விட்டுப் பிறகு புஜிக்கக் கூடாது. வாயில் போட்ட கபளத்தின் மீதியைப் போஜன பாத்ரத்தில் போடக்கூடாது. குடித்து மீதியாகிய ஜலத்தை மறுபடி குடிக்கக் கூடாது.

सुमन्तुः — अक्रोधनो रसान् सम्यगद्याद्यत् स्वस्य रोचते। आतृप्तेर्भोजनं तेषां कामतोऽनवशेषणम् इति। स्मृत्यन्तरे — श्राद्धे भुञ्जन् द्विजो यस्तु बहुभाषी मिताशनः। स पापी नरकं याति श्राद्धहन्ता भवेद्ध्रुवम् इति। आश्वलायनः — भोक्ता भोजयिता श्राद्धे मौनी स्याच्चासमासितः। तद्युक्तपाणिरुक्त्वा तु शनैर्दोषो न विद्यते इति। व्यासः — न किञ्चिद्वर्जयेत् श्राद्धे नियुक्तस्तु द्विजोत्तमः। न मांसं प्रतिषेधेत न चान्यस्यान्नमीक्षयेत् इति।

ஸுமந்து:— கோபமில்லாதவனாய், ரஸபதார்த்தங்களில் எது பிடித்துள்ளதோ அதைப் புஜிக்க வேண்டும். த்ருப்தியுண்டாகும் வரையில் போஜனம் செய்ய வேண்டும். மீதியில்லாமல் புஜிப்பது இஷ்டப்படி. மற்றோர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தத்தில் புஜிக்கும் எவன் அதிகமாகப் பேசுகிறவனும், ஸ்வல்பமாகப் புஜிப்பவனுமாக இருக்கிறானோ, அந்தப் பாபி நரகத்தை யடைவான். ச்ராத்தத்தையும் கெடுத்தவனாவான். நிச்சயம். ஆச்வலாயனர்:— ச்ராத்தத்தில் புஜிப்பவனும், புஜிப்பிப்பவனும் ச்ராத்தம் முடியும் வரையில் மௌனியாயிருக்க வேண்டும். போஜனம் செய்விப்பவன் மெதுவாய்ச் சொன்னால் தோஷமில்லை. வ்யாஸர்:— ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் ஒன்றையும் வர்ஜிக்கக் கூடாது. மாம்ஸத்தை மறுக்கக் கூடாது. பிறனின் அன்னத்தையும் பார்க்கக் கூடாது.

प्रचेताः — दन्तच्छेदं हस्तपानं वर्जयेच्चातिभोजनम् इति। हस्तपानं - हस्तेन पेयादिपानं वर्जयेत्, अपि तु लघुपात्रेणैव कुर्यात्। अतिभोजनम् - क्लृप्तौ सत्यामपि भोजनमित्यर्थः। उशनाः — भोजनं तु न निश्शेषं कुर्यात् प्राज्ञः कथञ्चन। अन्यत्रदघ्नःक्षीराद्वा क्षौद्रात् सक्तुभ्य एव च इति। यत्तु जमदग्निनोक्तम् — न निन्देयुर्नाविशेषयेयुः इति, तदधिकावशेषविषयम्। यतोऽनन्तरमाह स एव — अल्पं पुनरुत्स्रष्टव्यं तस्यासंस्कृतप्रमीतानां भागधेयत्वात् इति। असंस्कृतप्रमीतानां - अनुपनीत मृतानामित्यर्थः।

ப்ரசேதஸ்:— "பற்களால் கடிப்பது, கையினால் குடிப்பது, அதிகமாகப் புஜிப்பது இவைகளை வர்ஜிக்க வேண்டும்." ஹஸ்தபானம் கையினால் குடிக்கக் கூடியவைகளைக் குடிப்பதை வர்ஜிக்க வேண்டும். ஆனால் சிறிய பாத்ரத்தாலேயே செய்ய வேண்டும். அதிபோஜனம் த்ருப்தியான பிறகும் புஜிப்பது, என்பது பொருள்.

உசனஸ்:— அறிந்தவன் போஜனத்தை மீதியில்லாமல் எவ்விதத்திலும் செய்யக் கூடாது. தயிர், பால், தேன், மா இவைகளில் மீதி வைக்கவேண்டியதில்லை. ஆனால், ஜமதக்னியினால்:— ''நிந்திக்கக் கூடாது, மீதி வைக்கக் கூடாது'' என்று சொல்லப்பட்டுள்ளதே யெனில், அது அதிகமாக மீதி வைக்கக் கூடாது என்பதைப் பற்றியது. ஏனெனில், பிறகு சொல்லுகிறார் அவரே:— ''ஸ்வல்பமாய் மீதிவைக்க வேண்டும். அது அஸம்ஸ்க்ருத ப்ரமீதர்களுக்குப் பாகமாகியதால்,'' என்று அஸம்ஸ்க்ருத ப்ரமீதர்கள் = உபநயனமாகாமல் இறந்தவர்கள், என்பது பொருள்.

उच्छिष्टस्यासंस्कृतप्रमीतादिभागधेयत्वं च मनुराह — असंस्कृतप्रमीतानां त्यागिनां कुलयोषिताम्। उच्छिष्टं भागधेयं स्याद्दर्भेषु विकिरेच्च यत् इति । त्यागिनां सन्यासिनाम् । किञ्चिदुच्छिष्टं दासवर्गतृप्तये भूमिगतं कुर्यात् । यत आह स एव — उच्छेषणं भूमिगतमजिह्मस्याशठस्य च। दासवर्गस्य तत्पित्र्ये भागधेयं प्रचक्षते इति। आश्वलायनः — शेषयेत् भाजने भुक्त्वा तदश्नन्त्यतिहर्षिताः। दासा मृतस्य येऽन्नादि तस्मात्तत् परिशेषयेत् इति।

உச்சிஷ்டமானது அஸம்ஸ்க்ருத ப்ரமீதர்களுக்குப் பாகம் என்பதைச் சொல்லுகிறார், மனு:— ''உபநயனம் இல்லாமல் இறந்தவர்களுக்கும், ஸந்யாஸிகளுக்கும், குலஸ்த்ரீகளுக்கும், உச்சிஷ்டமானது பாகமாகும். அதைத் தர்ப்பத்தில் இறைக்க வேண்டும்,'' என்று கொஞ்சம் உச்சிஷ்டத்தைப் பூமியில் சேர்க்க வேண்டும். ஏனெனில் சொல்லுகிறார், மனுவே:— பூமியில் வைக்கப்பட்ட உச்சிஷ்டம் ருஜுவாயும் வஞ்சனையில்லாததுமாகிய வேலைக்காரர்களின் கூட்டத்திற்கு ச்ராத்தத்தில் பாகம் ஆகும் என்கின்றனர். ஆச்வலாயனர்:— புஜித்த பிறகு போஜன பாத்ரத்தில் எல்லாப் பதார்த்தங்களையும் கொஞ்சம் மீதி வைக்க வேண்டும். போஜன பாத்ரங்களில் மீதியுள்ளது

எதோ அதை, இறந்தவனின் தாஸர்கள் மிக ஸந்தோஷத்துடன் புஜிக்கின்றனர். ஆகையால் அன்னம் முதலியதைக் கொஞ்சம் மீதி வைக்க வேண்டும்.

प्रमादात् भोक्तॄणां परस्परस्पर्शे उच्छिष्टस्पर्शे अपि भोजनोपरमो न कार्य इत्याह शङ्खः– श्राद्धपङ्क्तौ तु भुञ्जानो ब्राह्मणो ब्राह्मणं स्पृशेत्। तदन्नमत्यजन् भुक्त्वा गायत्र्यष्टशतं जपेत् । उच्छिष्टलेपनस्पर्शे प्रक्षाल्यान्येन वारिणा। भोजनान्ते द्विजः स्नात्वा गायत्रीत्रिशतं जपेत् इति।

புஜிப்பவர்களுக்குக் கவனமின்மையால் ஒருவர்க்கொருவர் ஸ்பர்சம் ஏற்பட்டாலும், உச்சிஷ்ட ஸ்பர்சமானாலும் போஜனத்தை விட வேண்டாம், என்கிறார், சங்கர்:— ச்ராத்த பங்க்தியில் புஜிப்பவன் மற்றொருவனைத் தொட்டால் அந்த அன்னத்தை விடாமல் புஜித்துப் பிறகு காயத்ரியை 108 முறை ஜபிக்க வேண்டும். உச்சிஷ்டத்தின் பற்றினால் ஸ்பர்சமுண்டாகில் வேறு ஜலத்தால் அலம்பி, போஜனத்திற்குப் பிறகு ஸ்நானம் செய்து, காயத்ரியை 300 முறை ஜபிக்க வேண்டும்.

पात्रेऽन्योच्छिष्टपतनेऽपि स एव —— उच्छिष्टस्पर्शनं ज्ञात्वा तत् पात्रं परिहृत्य च। अस्पृष्ट्वा पाणिना पात्रं भूमिं समनुलिप्य च। अन्यत् पात्रं निधायात्र सर्वान्नं परिवेषयेत्। परिषिच्य ततः पश्चाद्भोजयेच्च न दोषकृत् इति । व्यासोऽपि —— उच्छिष्टोच्छिष्टसंस्पर्शे स्पृष्ट पात्रं विसृज्य च । सर्वान्नं पूर्ववद्दत्वा भोजयेत्तु द्विजोत्तमम् इति । उच्छिष्टस्पर्शे पात्रद्वयं परित्यज्य पात्रान्तरयोर्द्वावपि भोजयेदित्यर्थः। अत्र भोक्तुरुच्छिष्टस्पर्शाभावे उच्छिष्टपात्रं परित्यज्य पात्रान्तरे भोजयेत्, तत्स्पर्शे तु भोजनान्ते द्विजः स्नात्वा गायत्रीत्रिशतं जपेत् इत्युक्तं प्रायश्चित्तमपि कुर्यात्।

போஜன பாத்ரத்தில் பிறனின் உச்சிஷ்டம் விழுந்தால், சங்கரேः— உச்சிஷ்டத்தினுல் ஸ்பர்சம் ஏற்பட்டதை அறிந்தால், அந்தப் போஜன பாத்ரத்தை எடுத்துப் பரிஹரித்து, கையினுல் பாத்ரத்தைத் தொடமல் பூமியை மெழுகி, இவ்விடத்தில் வேறு போஜன பாத்ரத்தை வைத்து அன்னம் எல்லாவற்றையும் பரிமாற வேண்டும். பிறகு பரிஷேசனம் செய்து புஜிக்கச் செய்ய வேண்டும். இதனுல் தோஷமில்லை. வ்யாஸரும்:— ''உச்சிஷ்டத்துக்கும் உச்சிஷ்டத்துக்கும் ஸ்பர்சமேற்பட்டால், தொடப்பட்ட பாத்ரத்தை எடுத்து விட்டு, அன்னமெல்லாவற்றையும் முன் போல் கொடுத்து ப்ராம்ஹணனைப் புஜிக்கச் செய்யவும்,'' என்று. உச்சிஷ்டங்களுக்கு ஸ்பர்சமானுல், இரண்டு பாத்ரங்களையும் பரிஹரித்து, வேறு இரண்டு பாத்ரங்களில் இருவர்களையும் புஜிப்பிக்கவும், என்பது பொருள். இவ்விடத்தில் புஜிப்பவனுக்கு உச்சிஷ்ட ஸ்பர்சமில்லாவிடில், உச்சிஷ்ட போஜன பாத்ரத்தை எடுத்து விட்டு, வேறு பாத்ரத்தில் புஜிப்பிக்கவும். அவனுக்கு ஸ்பர்சம் ஏற்பட்டிருந்தாலோ வெனில், முன் சொல்லப்பட்டபடி போஜனத்திற்குப் பிறகு ஸ்நானம் செய்து 300 முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும், என்று சொல்லப்பட்ட ப்ராயச்சித்தத்தையும் செய்ய வேண்டும்.

स्मृत्यन्तरे — श्राद्धपङ्क्तौ तु भुञ्जानो विण्मूत्रोत्सर्जनं प्रति । व्रजेद्यदि हि मूढात्मा श्राद्धघाती भवेद्ध्रुवम् । उपोष्य तद्दिने कर्ता परेद्युः श्राद्धमाचरेत् इति । पितृस्थानीयव्यतिरिक्तस्य वमने स्मृत्यन्तरम् — विश्वेदेवा द्वितीयो वा तृतीयो वान्तिकृद्भवेत् । प्राणादिपञ्चभिर्मन्त्रैर्यावद्द्वात्रिंशसंख्यकम् । होमशेषं समाप्याथ श्राद्धशेषं समापयेत् इति । अन्यत्रापि — एक एव यदा विप्रो भाजने छर्दितो यदि । तदैवाग्निं समाधाय होमं कुर्याद्यथाविधि । तत्स्थान नामगोत्रेण चासनादिभिरर्चयेत् । अन्नत्यागं प्रकुर्वीत ततोऽग्नौ

जुहुयाच्चरुम्। प्राणादिपञ्चभिर्मन्त्रैर्यावत् द्वात्रिंशसङ्ख्यकम्। होमशेषं समाप्याथ श्राद्धशेषं समापयेत् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்த பங்க்தியில் புஜிப்பவன் மலமூத்ர விஸர்ஜனத்தைக் குறித்துச் சென்றுனேயானால் அந்த மூடன் ச்ராத்தத்தைக் கெடுத்தவனாவான். நிச்சயம். கர்த்தா அன்று உபவாஸமிருந்து மறுநாளில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பித்ருஸ்தான ப்ராம்ஹணனைத் தவிர்த்த ப்ராம்ஹணன் வாந்தி செய்தால், மற்றோர் ஸ்ம்ருதியில்:— விச்வே தேவ ப்ராம்ஹணர்களாவது, இரண்டாவது ப்ராம்ஹணனாவது, மூன்றாவது ப்ராம்ஹணனாவது வாந்தி செய்தானாகில், ப்ராணாய என்பது முதலிய ஐந்து மந்த்ரங்களால் முப்பது முறை ஹோமம் செய்து, ஹோம சேஷத்தை முடித்து, ச்ராத்தத்தின் மீதியை முடிக்க வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— ''எப்பொழுது ஒரே ப்ராம்ஹணன் போஜனத்தில் வாந்தி செய்தவனாகின்றானோ அப்பொழுது அக்னியை உபஸமாதானம் செய்து, விதிப்படி ஹோமத்தைச் செய்யவும். அந்த ப்ராம்ஹணனின் ஸ்தானம், நாமம், கோத்ரம் முதலியதாலும், ஆஸனம் முதலியவைகளாலும் அர்ச்சிக்க வேண்டும். அன்னத்யாகம் செய்ய வேண்டும். பிறகு அன்னத்தை அக்னியில் ஹோமம் செய்யவும். ப்ராணாய என்பது முதலிய ஐந்து மந்த்ரங்களால் முப்பது தடவை ஹோமம். பிறகு ஹோம சேஷத்தை முடித்து ச்ராத்த சேஷத்தை முடிக்கவும்.'' என்று.

छर्दितब्राह्मणभोजनपात्रं त्यक्त्वा लौकिकाग्निं समाधाय तत्राग्नौ तत्स्थाननामगोत्रोच्चारणपूर्वकमासनादिभिरभ्यर्च्य हुतशेषं चरुं प्राणादिपञ्चभिर्मन्त्रैःषडावृत्तैः पुनरुदानसमानाभ्यां च हुत्वा श्राद्धशेषं समापयेदिति व्याख्यातारः। सङ्ग्रहे — श्राद्धपङ्क्तौ तु भुञ्जानो ब्राह्मणो वमते यदि। लौकिकाग्निं प्रतिष्ठाप्य त्वर्चयेच्च हुताशनम् इति।

வாந்தி செய்த ப்ராம்ஹணனின் போஜன பாத்ரத்தை எடுத்து விட்டு, லௌகிகாக்னியை ப்ரதிஷ்டை செய்து, அந்த அக்னியில் அந்த ப்ராம்ஹணனின் ஸ்தானம், நாமம், கோத்ரம் இவைகளைச் சொல்லி, ஆஸனம் முதலியவைகளால் அர்ச்சித்து, ஹோமம் செய்து, மீதியுள்ள அன்னத்தை ப்ராணுய என்பது முதலிய ஐந்து மந்த்ரங்களை ஆறுமுறை ஆவ்ருத்தி செய்து, பிறகு உதாநாய, ஸமாநாய என்ற மந்த்ரங்களாலும் ஹோமம் செய்து, ச்ராத்த சேஷத்தை முடிக்க வேண்டும், என்று வ்யாக்யானகாரர்கள் சொல்லுகின்றனர். ஸங்க்ரஹத்தில்:— ச்ராத்த பங்க்தியில் புஜிப்பவன் வாந்தி செய்தானாகில், லௌகிகாக்னியை ப்ரதிஷ்டை செய்து, அந்த அக்னியைப் பூஜிக்க வேண்டும்.

पितृस्थानीयस्य वमने त्रयाणां वा वमने पुनः श्राद्धमुक्तं तत्रैव— पितॄणां तत्र सर्वेषां पितुर्वा वमनं यदि। तद्दिने चोपवासश्च पुनःश्राद्धं परेऽहनि इति। एतच्च पिण्डदानात् प्राग्वमने वेदितव्यम्, अकृते पिण्डदाने तु पिता यदि वमेत्तदा। पुनः पाकं प्रकुर्वीत श्राद्धं कुर्याद्यथाविधि इति स्मरणात्।

பித்ரு ஸ்தானத்திலுள்ள ப்ராம்ஹணன் வாந்தி செய்தாலும், பித்ரு ஸ்தானத்திலுள்ள மூன்று பேர்களும் வாந்தி செய்தாலும், மறுபடி ச்ராத்தம் செய்ய வேண்டும் என்றுள்ளது. ஸங்க்ரஹத்திலேயே:— "ச்ராத்தத்தில் பித்ரு ஸ்தானீயர்களான எல்லோருமாவது, பித்ரு ஸ்தானத்திலுள்ள ஒருவனாவது வாந்தி செய்தால், அன்று கர்த்தா உபவாஸமிருந்து, மறுநாளில் மறுபடி ச்ராத்தத்தைச் செய்யவேண்டும்." இதுவும் பிண்டதானத்திற்கு முன் வாந்தி செய்த விஷயத்தில் என்றறியவும். "பிண்டதானம் செய்யாமலிருக்கும் பொழுது, பித்ரு ஸ்தானத்திய ப்ராம்ஹணன் வாந்தி செய்தால், மறுபடி பாகம் செய்ய வேண்டும். விதிப்படி ச்ராத்தத்தைச் செய்யவும்", என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

यत्तु वचनम् — अकृते पिण्डदाने तु भुञ्जानो ब्राह्मणो वमेत्। पुनः पाकात्तु कर्तव्यं पिण्डदानं यथाविधि इति । अत्र द्वितीयः पिण्डदानशब्दः श्राद्धपरः । तस्मिन्नहनि पुनः पाकेन श्राद्धविधायकमिदं वचनद्वयं दर्शादिश्राद्धविषयम्, क्षयाहश्राद्धस्य परदिने विहितत्वात्। दर्शादौ पुनः पाकेन श्राद्धकरणासम्भवे आमेन वा कार्यम्, श्राद्धविघ्ने द्विजातीनामामश्राद्धं प्रकीर्तितम् । अमावास्यादिनियतं माससंवत्सराहते इति मरीचिस्मरणात्।

ஆனால், ''பிண்டதானம் செய்வதற்கு முன் புஜிக்கும் ப்ராம்ஹணன் வாந்தி செய்தால், மறுபடி பாகம் செய்து அதனால் விதிப்படி பிண்டதானத்தைச் செய்யவும்'', என்ற வசனம் உள்ளதே எனில், இவ்வசனத்தில் உள்ள இரண்டாவது பிண்டதான சப்தம் ச்ராத்தத்தைப் பற்றியது. அன்றே மறுபடி பாகம் செய்து ச்ராத்தத்தை விதிக்கும் இரண்டு வசனமும் தர்சாதி ச்ராத்தத்தைப் பற்றியது. ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை மறுதினத்தில் விதித்து இருப்பதால். தர்சம் முதலியதில் மறுபடி பாகம் செய்து ச்ராத்தம் செய்ய முடியாவிடில், ஆமத்தினாலாவது செய்யவும். ''ப்ராம்ஹணர்களுக்கு ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் ஆம ச்ராத்தம் விதிக்கப்பட்டுள்ளது. அமாவாஸ்யை முதலிய ச்ராத்தங்களைச் செய்யலாம். மாஸிகம், ப்ரத்யாப்திகம் இவைகளைச் செய்யக் கூடாது,'' என்று மரீசியின் ஸ்ம்ருதி உள்ளது.

सङ्कल्पश्राद्धेऽपि त्रयाणां वमने पितुरेकस्य वा वमने पुनःकरणमुक्तं स्मृत्यन्तरे — भुक्तिक्रियायाः प्राधान्यं श्राद्धे सङ्कल्पसंज्ञके । अत्रैवं पितृविप्राणामुपघाते पुनःक्रिया इति । यत्तु वचनम् — प्राधान्यं पिण्डदानस्य भोजनस्य तदङ्गता । अतो भुक्तिक्रियाहानौ श्राद्धावृत्तिं न मन्वते इति, तत् सङ्कल्प-श्राद्धव्यतिरिक्तपार्वणश्राद्धे पितृस्थानीयव्यतिरिक्तब्राह्मणभुक्ति-क्रियाहानिविषयम्।

ஸங்கல்ப ச்ராத்தத்திலும் மூன்று பேர்களாவது அல்லது பித்ரு ஸ்தானீயனுன ப்ராம்ஹணன் ஒருவனுவது வாந்தி செய்தால், மறுபடி ச்ராத்தத்தைச் செய்ய வேண்டுமென்பது சொல்லப்பட்டுள்ளது. மற்றோர் ஸ்ம்ருதியில்:— ஸங்கல்ப ச்ராத்தத்தில் போஜன கார்யம் ப்ரதானமாகும். இந்த ச்ராத்தத்தில் பித்ரு ஸ்தானத்தில் உள்ளவர்களுக்கு உபகாதம் ஏற்பட்டால் மறுபடி ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். ஆனுல், "பிண்டதானம் முக்யமாகும், போஜனம் அதற்கு அங்கம் ஆகும். ஆகையால், போஜனம் நிறைவேருவிடில் ச்ராத்தம் மறுபடி செய்ய வேண்டுமென்பதைச் சாஸ்த்ரகாரர்கள் விதிக்கவில்லை," என்று வசனமுள்ளதே எனில், அது ஸங்கல்ப ச்ராத்தத்தைத் தவிர்த்த பார்வண ச்ராத்தத்தில் பித்ரு ஸ்தான ப்ராம்ஹணனைத் தவிர்த்த ப்ராம்ஹணரின் போஜன ஹானியைப் பற்றியது.

ऋग्विधाने तु — इन्द्राय सोमसूक्तेन श्राद्धविघ्नो यदा भवेत्। अग्न्यादिभिर्भोजनेन श्राद्धं संपूर्णमेव हि इति । अत्र इन्द्राय सोमसूक्तजपेन होमेन भोजनेन चेति विधानत्रयमुक्तम्, तत्र व्यवस्था व्याख्यातृभिर्दर्शिता - पिण्डदानात् परं वमनेन श्राद्धविघ्ने सूक्तजपेन श्राद्धं सम्पूर्णतामेति, पिण्डदानात् प्राक्तु पितृव्यतिरिक्तस्यैकस्य वमनेन श्राद्धविघ्ने होमेन, अनेकस्य वमनेन तद्विघ्ने होमसूक्तजपाभ्याम्, पितृस्थानोपवेशितस्य वमनेन तद्विघ्ने तु परदिने पुनः श्राद्धभोजनेन इति।

ருக்விதானத்திலோவெனில்:— "ச்ராத்த விக்னம் நேர்ந்த பொழுது இந்த்ராய ஸோம என்று ஸூக்தத்திஞலும், அக்னியில் ஹோமம் செய்வது முதலியதாலும், போஜனத்தாலும் ச்ராத்தம் ஸம்பூர்ணமாகும்" என்றுள்ளது. இவ்விஷயத்தில் இந்த்ராய ஸோம ஸூக்த ஜபத்திஞலும்,

ஹோமத்திஞலும், போஜனத்தாலும் என்று மூன்று விதி சொல்லப்பட்டுள்ளது. அவ்விஷயத்தில் வ்யவஸ்தை வ்யாக்யானகாரர்களால் சொல்லப்பட்டுள்ளது:— ''பிண்டதானத்துக்குப் பிறகு வாந்தியிஞல் ச்ராத்த விக்னம் ஏற்பட்டால், ஸூக்த ஜபத்திஞல் ச்ராத்தம் பூர்த்தியை யடைகிறது. பிண்டதானத்திற்கு முன் பித்ரு ஸ்தானீயில்லாத ஒருவனின் வாந்தியிஞல் ச்ராத்த விக்னம் ஏற்பட்டால், ஹோமத்தால். அநேக ப்ராம்ஹணர்களின் வாந்தியிஞல் ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் ஹோமம், ஸூக்த ஜபம் இவ்விரண்டிஞலும், பித்ரு ஸ்தானத்தில் வரிக்கப்பட்டவனின் வாந்தியிஞல் ச்ராத்த விக்னம் ஏற்பட்டால், மறுநாளில் மறுபடி ச்ராத்தம் செய்து புஜிப்பிப்பதால்'' என்று.

तथा च शौनक एव — भोजनोपरमात् पूर्वं प्रक्रमात् परतो यदि । श्राद्धविघ्ने पुनः कार्यं जपहोमौ न तृप्तिदौ इति । (अग्निनाशो यदा श्राद्धे ज्योतिर्यत्र विनश्यति । तद्दिने चोपवासं च पुनः श्राद्धं परेऽहनि इति स्मृत्यन्तरम् ।।)

அவ்விதம், சௌனகரே:— போஜனம் முடிவதற்கு முன் போஜன ஆரம்பத்திற்குப் பிறகு ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் மறுபடி செய்யவேண்டும். ஜபமும், ஹோமமும் த்ருப்தியைக் கொடுப்பதாய் ஆகாது. (மற்ருேர் ஸ்ம்ருதியில்:— ச்ராத்தத்தில் அக்னி நஷ்டமாஞலும் தீபம் அணைந்தாலும் அந்தத் தினத்தில் கர்த்தா உபவாஸமிருந்து மறுநாளில் மறுபடி ச்ராத்தம் செய்ய வேண்டும்.)

अन्नविकिरणादिविधिः — तत्र प्रचेताः — तृप्तिं बुध्वाऽन्नमादाय सतिलं पूर्ववज्जपेत् । तृप्तिं पृच्छेत्ततः पृष्टा ब्रूयुस्तृप्ताः स्म इत्यपि इति । पूर्ववज्जपेदित्यस्यार्थः कात्यायनेन प्रपञ्चितः - गायत्रीं मधुमतीं मधुमध्विति जप्त्वा तृप्ताः स्थेति पृच्छति इति । व्यासः — तृप्ताः स्थेति च पृष्टास्ते ब्रूयुस्तृप्ताः स्म इत्यथ इति ।

அன்னத்தை இறைப்பது முதலியதின் விதி. இனி அன்ன விகிரணம் முதலியதின் விதி சொல்லப்படுகிறது. அதில், ப்ரசேதஸ்:— ப்ராம்ஹணர்களின் த்ருப்தியை யறிந்து, எள்ளுடன் கூடிய அன்னத்தை க்ரஹித்து, முன் போல் ஜபிக்க வேண்டும். பிறகு த்ருப்தியைக் கேட்க வேண்டும். பிறகு கேட்கப்பட்ட ப்ராம்ஹணர்கள் ''த்ருப்தா:ஸ்ம:'' என்று சொல்ல வேண்டும். முன் போல் ஜபிக்க வேண்டுமென்பதற்குப் பொருள் சொல்லப்பட்டுள்ளது. காத்யாயனரால்:— காயத்ரியையும், 'மதுமதீ'களையும், 'மது மது மது' என்பதையும் ஜபித்து, 'த்ருப்தா:ஸ்த' என்று கேட்க வேண்டும், என்று. வ்யாஸர்:— 'த்ருப்தா:ஸ்த' என்று கேட்கப்பட்ட ப்ராம்ஹணர்கள் 'த்ருப்தா:ஸ்ம:'' என்று சொல்ல வேண்டும்.

अनन्तरं कर्तव्यमाह मनुः — सार्ववर्णिकमन्नाद्यं सन्नीयाप्लाव्य वारिणा । समुत्सृजेद्भुक्तवतामग्रतो विकिरन् भुवि इति । सन्नीय - व्यञ्जनैस्सह संयोज्य, सार्ववर्णिकम् - सर्ववर्ण हितार्थमुत्सृजेदित्यर्थः । मत्स्यपुराणे – भुक्तवत्सु ततस्तेषु भाजनोपान्तिके नृप । प्रोक्ष्य भूमिमथाद्भिस्तु भूमौ पितृपरायणः । ततो विकिरणं कुर्याद्विधिदृष्टेन कर्मणा इति । मार्कण्डेयः — उदङ्मुखानां विप्राणां पुरतस्सोदकं ततः । अन्नं तु विकिरेत् भुक्त्या पुनर्दद्यात्तिलोदकम् इति ।

பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், மனு:— எல்லாப் பதார்த்தங்களுடன் கூடிய அன்னம் முதலியதைச் சேர்த்து. ஜலத்தினால் நனைத்து, புஜித்த பிறகு போஜன பாத்ரத்தின் ஸமீபத்தில் பூமியை ஜலத்தால் ப்ரோக்ஷித்து, பித்ருக்களிடம் பக்தியுடையவனாய் பூமியில் விகிரணத்தை விதிப்படி செய்ய வேண்டும். மார்க்கண்டேயர்:— வடக்கு நோக்கிய ப்ராம்ஹணர்களின் முன்னால் ஜலத்துடன் கூடிய அன்னத்தைப் பக்தியுடன் இறைக்க வேண்டும். மறுபடி எள்ளுடன் கூடிய ஜலத்தை விட வேண்டும்.

विष्णुपुराणे — तृप्तेष्वेतेषु विकिरेदन्नं विप्रेषु भूतले । दद्यादाचमनार्थाय तेभ्यो वारि सकृत् सकृत् इति । आचमनार्थाय - नित्यभोजन नियमेषूक्तम्, अमृतापिधानमसि इति मन्त्रपूर्वकं यद्गण्डूषं तदर्थम्, वैश्वदैविकविप्रपूर्वकं प्रतिविप्रं सकृत्सकृज्जलं दद्यादित्यर्थः ।

விஷ்ணுபுராணத்தில்:— "ப்ராம்ஹணர்கள் த்ருப்தர்களான பிறகு பூமியில் அன்னத்தை இறைக்க வேண்டும். ஆசமனத்திற்காக அவர்களுக்கு ஒவ்வொரு முறை ஜலத்தைக் கொடுக்க வேண்டும்", என்று ஆசமனத்திற்காக = நித்ய போஜன நியமங்களில் சொல்லப்பட்டுள்ள "அம்ருதாபிதாநமஸி" என்ற மந்த்ரத்தை உச்சரித்து, குடிக்கும் ஜலம் எதுவோ அதற்காக விச்வேதேவ ப்ராம்ஹணர்கள் முதலாக ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் ஒவ்வொரு முறை ஜலத்தைக் கொடுக்க வேண்டும், என்பது பொருள்.

याज्ञवल्क्यः — अन्नमादाय तृप्ताःस्थ शेषं चैवानुमान्य च । तदन्नं विकिरेत् भूमौ दद्याच्चापस्सकृत्सकृत् इति । व्याख्यातमेतद्विज्ञानेश्वरेण — सर्वमन्नमादाय तृप्ताःस्थेति तान् पृष्ट्वा तृप्ताः स्म इति तैः प्रत्युक्तश्शेषमप्यस्ति किं क्रियतामिति पृष्ट्वा इष्टैस्सहोपभुज्यतामित्यभ्युपगमय्य तदन्नं पितृस्थानीयस्य ब्राह्मणस्य पुरस्तादुच्छिष्टसन्निधौ दक्षिणाग्र दर्भान्तर्हितायां भूमौ तिलोदकप्रक्षेपपूर्वकं ये अग्निदग्धाः इत्यनयर्चा निक्षिप्य पुनस्तिलोदकं प्रक्षिपेत् । तदनन्तरं ब्राह्मणहस्तेषु गण्डूषार्थं सकृत् सकृदपो दद्यात् इति ।

யாஜ்ஞவல்க்யர்:— "அன்னத்தை யெடுத்து, 'த்ருப்தா:ஸ்த' என்று கேட்டு, ச்ராத்த சேஷத்தைப் புஜிக்க அனுமதிபெற்று, அந்த அன்னத்தைப் பூமியில் இறைக்கவும். ஜலத்தையும் ஒவ்வொரு முறை கொடுக்கவும்," என்று.

விஜ்ஞானேச்வரரால்:— இது வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. எவ்விதமெனில்:— அன்னம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு த்ருப்தா:ஸ்த என்ற ப்ராம்ஹணர்களைக் கேட்டு, த்ருப்தா:ஸ்ம: என்று அவர்களால் சொல்லப்பட்டவனாய், மீதியுமிருக்கின்றது, அதை என்ன செய்வது என்று கேட்டு, இஷ்டர்களுடன் புஜிக்கப்படட்டும் என்று அவர்களின் அனுஜ்ஞை பெற்று, அந்த அன்னத்தைப் பித்ரு ஸ்தானீய ப்ராம்ஹணனின் எதிரில், உச்சிஷ்டத்தின் ஸமீபத்தில் தெற்கு நுனியுள்ள தர்ப்பங்களால் மறைக்கப்பட்ட பூமியில் எள்ளுடன் கூடிய ஜலத்தை முன்புவிட்டு, பிறகு ''யே அக்நி தக்தா:'' என்ற மந்த்ரத்தினால் வைத்து, மறுபடி எள்ளுடன் கூடிய ஜலத்தை விட வேண்டும். அதற்குப் பிறகு ப்ராம்ஹணர்களின் கைகளில் ஆசமனத்திற்காக ஒவ்வொரு முறை ஜலத்தைக் கொடுக்க வேண்டும், என்று.

बोधायनस्तूत्तरापोशनानन्तरं विकिरदानमाह — स्वधायुक्तानि ब्राह्मणान्यभिश्रावयन् रक्षोघ्नानि च नैर्ऋतानि च तृप्तानप आचमय्याशनेष्वन्नशेषान् प्रकिरति ये अग्निदग्धा येऽनग्निदग्धाः इति। प्रचेताश्च — ये अग्नीति भुवि क्षिपेत् इति । स्मृत्यन्तरेऽपि — पितृदेवतयोर्मध्ये, भुवं प्रोक्ष्य तिलान् क्षिपेत्। ततो दर्भान् समास्तीर्य तूष्णीं दत्वा तिलोदकम् । उच्छिष्टं तिलमिश्रेण पिण्डं दद्यात् समाहितः । ये अग्निदग्धा येनेति दद्यादुच्छिष्टसन्निधौ इति।

போதாயனரோவெனில் உத்தராபோசனத்திற்குப் பிறகு விகிரதானத்தைச் சொல்லுகிறார்:- ஸ்வதா சப்தத்துடன் கூடியவைகளையும், ரக்ஷோக்னங்கள், நைருதங்கள் இவைகளையும் ப்ராம்ஹணர்களைக் கேட்கச் செய்து, த்ருப்தர்களாகிய அவர்களுக்கு ஆபோசனத்தைக் கொடுத்து, மீதியன்னத்தை 'யே அக்னி தக்தா:' என்ற மந்த்ரத்தால் இறைக்கவும். ப்ரசேதஸ்ஸூம்:— யே அக்னி

என்ற மந்திரத்தால் பூமியில் போட வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— பித்ருக்கள் தேவர்கள் இவர்கள் நடுவில் பூமியை ப்ரோக்ஷித்து எள்ளுகளைப் போடவும். பிறகு தர்ப்பங்களைப் பரப்பி மந்த்ரமில்லாமல் எள்ளுடன் கூடிய ஜலத்தை விட்டு, எள்ளுடன் கூடிய புக்த சேஷான்னத்தைக் கவனமுள்ளவனாய் ''யே அக்னி தக்தா:'' என்ற மந்த்ரத்தால் உச்சிஷ்ட ஸந்நிதியில் பிண்டமாகக் கொடுக்கவும்.

अत्र केचिदाहुः —— मनुयाज्ञवल्क्यबोधायन-चन्द्रिकामाधवीय विज्ञानेश्वरीयादिषु ये अग्निदग्धाः इत्यनेनैव विकिरदान-विधानादन्यस्यानुक्तेस्तावन्मात्रेणैव विकिरदानं कार्यमिति। अन्ये तु —— प्रतिब्राह्मणमुच्छिष्टसन्निधौ मन्त्रान्तरेण विकिरदानं कृत्वा ये अग्निदग्धाः इत्येनेनोच्छिष्टपिण्डदानं च कार्यमित्याहुः । तदाहाश्वलायनः —— श्रावयित्वा च पृष्ट्वा च देवानां विकिरं चरेदिति। मधुमतीः अक्षन्नमी मदन्त इति च श्रावयित्वा संपन्नं पृष्ट्वा अनन्तरं वैश्वदैविकं विकिरं चरेदित्यर्थः।

இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:— மனு, யாஜ்ஞவல்க்யர், போதாயனர் இவர்களின் க்ரந்தங்களிலும் சந்த்ரிகா, மாதவீயம், விஜ்ஞானேச்வரீயம் முதலிய க்ரந்தங்களிலும் 'யே அக்னி தக்தா:' என்ற மந்த்ரத்தினாலேயே விகிரதானம் விதிக்கப்பட்டிருப்பதாலும், வேறொன்றைச் சொல்லாததாலும், அதனாலேயே மட்டில் விகிரதானம் செய்யப்பட வேண்டும், என்று. மற்றவரோவெனில்:— ஒவ்வொரு ப்ராம்ஹணனுக்கும் உச்சிஷ்டத்தின் எதிரில் வேறு மந்த்ரத்தால் விகிரத்தைக் கொடுத்து ''யே அக்னி தக்தா:'' என்ற மந்த்ரத்தினால் உச்சிஷ்ட பிண்டதானம் செய்யப்பட வேண்டும் என்று அதைச் சொல்லுகிறார் ஆச்வலாயனர்:— ''மந்த்ரங்களைக் கேட்கச் செய்து, த்ருப்தியைக் கேட்டு, தேவர்களுக்கு விகிரத்தைப்

போடவும்'', என்று. ''மது வாதா'' என்ற மந்த்ரங்களையும், ''அக்ஷந்நமீமதந்த'' என்ற மந்த்ரத்தையும் கேட்கச் செய்து, ஸம்பந்நம் என்று. கேட்டு, பிறகு விச்வேதேவ ஸ்தானத்தில் விகிரத்தைக் கொடுக்க வேண்டும், என்பது பொருள்.

स्मृत्यन्तरे — मन्त्रेण विकिरं कुर्यान्मुख्यब्राह्मण सन्निधौ । असोमपाश्च ये देवा यज्ञभागविवर्जिताः । तेषामन्नं प्रदास्यामि विकिरं वैश्वदैविकम् इति विश्वेदेवार्थ ब्राह्मणयोर्मुख्यः प्रथमं वृत इत्यर्थः । रत्नावल्याम् — उच्छिष्टैरेव विकिरं सदैवं प्रतिपादयेत् । अन्यथा कुरुते यस्तु निराशास्तस्य देवताः इति । स्मृत्यन्तरे तु — पात्रे यवकुशास्तीर्णे देवानां विकिरं चरेदिति ।

மற்ருெர் ஸ்ம்ருதியில்:— முக்ய ப்ராம்ஹண ஸந்நிதியில் மந்த்ரத்தால் விகிரதானத்தைச் செய்யவும். ஸோமபானம் இல்லாதவரும், யாகத்தில் பாகம் இல்லாதவருமான தேவர்கள் எவரோ அவர்களுக்கு விச்வேதேவ ஸ்தானத்தில் விகிரான்னத்தைக் கொடுக்கிறேன், என்ற மந்த்ரத்தால். விச்வேதேவ ப்ராம்ஹணர்களுள் முதலில் வரிக்கப்பட்டவன் முக்யன் எனப்படுகிருன். ரத்னுவளியில்:— புக்த சேஷங்களாலேயே விகிரத்தைத் தேவர்களுக்கும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். எவன் மாறிச் செய்கிருனே அவனது தேவதைகள் ஆசையற்றவராகின்றனர், என்று. மற்ருெர் ஸ்ம்ருதியில்:— யவம் குசம் இவைகளால் பரப்பப்பட்ட பாத்திரத்தில் விச்வேதேவர்களுக்கு விகிரத்தைக் கொடுக்க வேண்டும்.

२पाद्मे – अनन्तरं सुतृप्तेषु तेषु विप्रेषु भक्तितः । अन्नशेषं प्रविकिरेद्दर्भेषु विधिवन्नृप । असोमपेति मन्त्रेण विकिरं वैश्वदैविकम् । असंस्कृतेति मन्त्रेण पैतृकं विकिरं क्षिपेत् । असंशयो भवेद्विष्णुमनुना वैष्णवं क्षिपेत् इति । स्मृत्यन्तरे — असंस्कृतप्रमीता ये त्यागिन्यो याः

कुलस्त्रियः । दास्यामि तेभ्यो विकिरमन्नं ताभ्यश्चपैतृकम् । एतेन विकिरेत् पित्र्ये मुख्यब्राह्मणसन्निधौ इति ।

பாத்மத்தில்:— பிறகு ப்ராம்ஹணர்கள் நன்றாக த்ருப்தர்களாயிருக்கும் பொழுது, பக்தியுடன் தர்ப்பங்களில் விதிப்படி அன்ன சேஷத்தைப் போட வேண்டும். அஸோமபா: என்ற மந்த்ரத்தால் விச்வேதேவ ஸ்தானத்தில் விகிரத்தையும், அஸம்ஸக்ருத என்ற மந்த்ரத்தால் பித்ருஸ்தானத்தில் விகிரத்தையும் போடவும். விஷ்ணு என்ற மந்த்ரத்தால் விஷ்ணு ஸ்தானத்தில் விகிரத்தைப் போ. _வும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— எவர்கள் உபந. னமில்லாமல் இறந்தவர்களோ, எவர்கள் ஸந்யா. பிகளோ, எவர்கள் குலஸ்த்ரீகளோ அவர்களுக்கும் பைத். கமான விகிரான்னத்தைக் கொடுக்கிறேன், என்ற இந்த மந்த்ரத்தால் பித்ரு ஸ்தானத்தில் முதலில் இருப்பவனுடைய எதிரில் விகிரான்னத்தைப் போடவும் என்று.

तथा विकिरभागिनो दर्शयति मनुः — असंस्कृतप्रमीतानां त्यागिनां कुलयोषिताम् । उच्छिष्टं भागधेयं स्याद्दर्भेषु विकिरेच्च यत् इति । मार्कण्डेयस्तु – ये चापमृत्युना केचिन्मृत्युं प्राप्ताः स्ववंजाः । विकिरेण प्रदत्तेन तृप्तिं यान्ति च तेऽखिलाः । ये चादन्ताः कुले बालाः क्रियायोग्या ह्यसंस्कृताः । सपिण्डास्ते तु विकिरसंमार्जनजलाशिनः इति । विकिरदानन्तरमुपवीती भूत्वा आचामेत् ।

அவ்விதம் விகிரான்னத்தை அடைபவர்களைச் சொல்லுகிறார், மனு:— அஸம்ஸ்க்ருத ப்ரமீதர்களுக்கும், ஸந்யாஸிகளுக்கும், குலஸ்த்ரீகளுக்கும், ச்ராத்த சேஷ அன்னம் பாகமாகும், தர்ப்பங்களில் எதை இறைக்கின்றானோ. மார்க்கண்டேயரோவெனில்:— தன் வம்சத்தில் பிறந்த எவர்கள் அபம்ருத்யுவினால் இறந்தார்களோ, அவர்கள் எல்லோரும் கொடுக்கப்பட்ட

விகிரான்னத்தால் த்ருப்தியை யடைகின்றனர். குலத்தில் பல் முளைக்காத சிறு குழந்தைகள் க்ரியைக்கு யோக்யராயிருந்து ஸம்ஸ்காரத்தைப் பெறவில்லையோ, அவர்கள் அந்த ஸபிண்டர்கள் விகிரத்திற்காக மார்ஜனம் செய்யப்படும் ஜலத்தை யடைகின்றனர். விகிரம் கொடுத்த பிறகு உபவீதியாயிருந்து ஆசமனம் செய்ய வேண்டும்.

अत एव मरीचिः — श्राद्धेषु विकिरं दत्वा यो नाचामेन्मतिभ्रमात्। पितरस्तस्य षाण्मासं भवन्त्युच्छिष्टभोजिनः इति। अनन्तरमुत्तरापोशनार्थमुदकं दद्यात्। तथा च मदालसावाक्यम् — तदन्वाचमनार्थाय दद्याच्चापस्सकृत् सकृत् इति। अत्र मरीचिः — हस्तं प्रक्षाल्य गण्डूषं यः पिबेदविचक्षणः। आसुरं तद्भवेत् श्राद्धं पितॄणां नोपतिष्ठते इति। गण्डूषं यः पिबेत् भोजनान्ते अमृतापिधानमसि इति मन्त्रेणापो यः पिबेदित्यर्थः।

ஆகையால் தான், மரீசி:— ச்ராத்தங்களில் விகிரத்தைக் கொடுத்த பிறகு எவன் மோஹத்தால் ஆசமனம் செய்யவில்லையோ அவனது பித்ருக்கள் ஆறு மாஸம் வரையில் உச்சிஷ்டத்தைப் புஜிப்பவராகின்றனர். பிறகு உத்தராபோசனத்திற்காக ஜலத்தைக் கொடுக்கவும். அவ்விதம், மதாலஸையின் வாக்யம்:— "பிறகு உத்தராபோசனத்திற்காக ஒவ்வொரு முறை ஜலத்தைக் கொடுக்கவும்", என்று. இவ்விஷயத்தில், மரீசி:— "எந்த மூடன் கையை யலம்பி உத்தராபோசன ஜலத்தைப் பருகுகின்றானோ அந்த ச்ராத்தம் அஸுரர்களுடையதாகும். பித்ருக்களைச் சேருவதில்லை", என்று. போஜனத்தின் முடிவில் "அம்ருதாபிதாநமஸி" என்ற மந்த்ரத்தால் ஜலத்தை எவன் குடிப்பானோ, என்பது பொருள்.

गण्डूषकरणात् पूर्वं हस्तलेपनिमार्जनं तत् क्षालनमासनादुत्थानं च न कार्यमित्याहाश्वलायनः - प्राग्गण्डूषलाद्भुक्त्वा व हस्तं निर्मृजेद्बुधः। प्रक्षालयेच्च नोत्तिष्ठेत् पीठाद्विप्रस्सदैव हि। यो

भुक्त्वोत्थायाचामति पीठाद्विप्रस्तदा ऽशुचिः । स्नात्वा शुचिर्भवेत् श्राद्धे श्राद्धहा च नराधम इति। अस्यार्थः प्रयोगसारकृताऽभिहितः — यो भुक्त्वा पीठादुत्था-योत्तरापोशनार्था अप आचामति, स तदा अशुचिर्भवेत्, स्नात्वैव शुचिर्भवेत् इति।

உத்தராபோசனம் செய்வதற்கு முன் கையில் உள்ள பற்றை அலம்புவதையும், கை யலம்புவதையும், ஆஸனத்திலிருந்து எழுந்திருப்பதையும் செய்யக்கூடாது என்கிறார், ஆச்வலாயனர்:— "போஜனம் செய்து, உத்தராபோசனத்திற்கு முன் அறிந்தவன் கையைத் துடைக்கக் கூடாது. கையை அலம்பவும் கூடாது. ஆஸனத்திலிருந்து எழுந்திருக்கவும் கூடாது. எவன் போஜனம் செய்த பிறகு ஆஸனத்திலிருந்து எழுந்து ஆசமனம் செய்கிருனே அவன் எப்பொழுதும் அசுத்தனுகிருன். ஸ்நானம் செய்தால் சுத்தனுவான். அந்த இழிவானவன் ச்ராத்தத்தைக் கெடுத்தவனுவான்'', என்று இதற்குப் பொருள் சொல்லப்பட்டுள்ளது, ப்ரயோகஸாரகாரரால்:— எவன் புஜித்த பிறகு பீடத்தினின்றும் எழுந்து, உத்தராபோசனத்துக்காகிய ஜலத்தைக் குடிக்கின்ருனே, அவன் அப்பொழுது அசுத்தனுவான். ஸ்நானம் செய்தால் தான் ச்ராத்தத்தில் சுத்தனுவான்.

गण्डूषकरणप्रकारश्च तेनैवोक्तः — अर्धं पिबति गण्डूषमर्धं त्यजति भूतले । प्रीणन्ति पितरस्सर्वे ये चान्ये भूमिदेवताः इति । (ब्रह्माण्डपुराणे — उत्तरापोशनात् पश्चादुच्छिष्टं संस्पृशेद्यदि। हस्तं प्रक्षाल्य वा पेयात्तदपेयसमं विदुः । आपोशनं न गृह्णीयात् स्वयमेव नृपोत्तम इति।)

உத்தராபோசனத்தின் ப்ரகாரமும் சொல்லப் பட்டுள்ளது, ப்ரயோகஸாரகாரராலேயே:— உத்தராபோசன ஜலத்தைப் பாதி பருக வேண்டும்.

பாதியைப் பூமியில் விட வேண்டும். அதனால் பித்ருக்கள் எல்லோரும், பூமிதேவர்களான மற்றவர்களும் த்ருப்தராகின்றனர், என்று. (ப்ரம்ஹாண்ட புராணத்தில்:— உத்தராபோசனத்திற்குப் பிறகு உச்சிஷ்டத்தைத் தொட்டாலும், கையையலம்பிப் பிறகு உத்தராபோசனத்தைப் பருகினாலும், அதை அபேயத்திற்கு ஸமமாகச் சொல்லுகின்றனர். தானாகவே ஆபோசனத்தை க்ரஹிக்கக் கூடாது.)

उच्छिष्टपिण्डं वायसेभ्यो दद्यात्। बलिं बलिभुजो यत्र प्रदत्तं नैव भुञ्जते । नैव तृप्ताः प्रयास्यन्ति पितरस्तस्य सानुगाः इति शङ्खलिखितस्मरणात् । (एतदुच्छिष्टपिण्डं तु काकेभ्यो दिशन्ति काकपिण्डमिति च व्यवहरन्ति । काकैः स्वीकारे यत्नं कुर्वन्ति । वायसास्वीकृते पिण्डे शुना शूद्रेण दूषिते। तद्दिनं चोपवासश्च पुनः श्राद्धं परेऽहनि इति च पठन्ति। स्मृत्यन्तरे – काकैरभक्षितं पिण्डं जन्तुरन्यः स्पृशेद्यदि। तद्दिनं चोपवासश्च पुनः श्राद्धं परेऽहनि इति ।।)

உச்சிஷ்ட பிண்டத்தைக் காக்கைகளுக்குக் கொடுக்க வேண்டும். ''எந்த ச்ராத்தத்தில் கொடுக்கப்பட்ட பலியை காக்கைகள் உண்ணவில்லையோ அந்த ச்ராத்தத்தில் பித்ருக்கள் கூடவந்தவர்களுடன் த்ருப்தியுள்ளவர்களாய்ச் செல்லமாட்டார்கள்'', என்று சங்கலிகித ஸ்ம்ருதி இருப்பதால். (இந்த உச்சிஷ்ட பிண்டத்தைக் காக்கைகளுக்குக் கொடுக்கின்றனர். வாயஸபிண்டம் என்றும் சொல்லுகின்றனர். காக்கைகள் புஜிக்கும்படி முயற்சி செய்கிறார்கள். ''உச்சிஷ்ட பிண்டம் காக்கைகளால் ஸ்வீகரிக்கப்படாவிடினும், நாய் அல்லது சூத்ரன் இவர்களால் துஷ்டமானாலும் அன்று உபவாஸமிருந்து மறுநாளில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்'', என்றும் சொல்லுகின்றனர். மற்றோர் ஸ்ம்ருதியில்:— காக்கைகளால் பக்ஷிக்கப்படாத பிண்டத்தை வேறு ப்ராணி தொட்டால்,

அன்று உபவாஸமிருந்து மறுநாளில் மறுபடி ச்ராத்தம் செய்ய வேண்டும்.)

हस्तप्रक्षालने विशेषमाह शातातपः - विश्वेदेवनिविष्टानां चरमं हस्तधावनम्। विसर्जनं च निर्दिष्टं तेषु रक्षा यतः स्थिता। दैवपूर्वं तु यो दद्याद्धस्तप्रक्षालनोदकम्। निराशाः पितरो यान्ति देवरक्षाविवर्जिताः इति । विष्णुरपि — उदङ्मुखेष्वाचमनमादौ दद्यात्ततः प्राङ्मुखेषु ततस्सुप्रोक्षितमिति श्राद्धदेशं प्रोक्ष्य दर्भपाणिस्सर्वं कुर्यात् इति । अस्यार्थश्चन्द्रिकायामुक्तः — पैतृकब्राह्मणेषु प्रथमं हस्तप्रक्षालन-पूर्वक-माचमनार्थमपो दत्वा पश्चाद्वैश्वदैविकब्राह्मणेषु दत्वा सुप्रोक्षितमिति मन्त्रेण श्राद्धदेशं प्रोक्ष्य दर्भपाणिस्सर्वमुपरितनं कर्मजातं कुर्यात् इति।

கையலம்புவதில் விசேஷத்தைச் சொல்லுகிறார், சாதாதபர்:— விச்வேதேவ ஸ்தானத்தில் இருந்தவருக்குக் கை அலம்புவதற்கு ஜலம் பின்பு கொடுக்க வேண்டும். விஸர்ஜனமும் பின்பே சொல்லப்பட்டுள்ளது. ரக்ஷணம் என்பது அவர்களிடம் இருப்பதால் கையலம்புவதற்கு ஜலத்தை விச்வேதேவர்களுக்கு முன்பு எவன் கொடுப்பானோ அவனது பித்ருக்கள் தேவர்களின் ரக்ஷணம் இல்லாததால் ஆசையற்றவராய்ச் செல்லுகின்றனர். விஷ்ணுவும்:— வடக்கு நோக்கிய ப்ராம்ஹணர்களுக்கு முதலில் ஆசமனம். பிறகு கிழக்கு நோக்கியவர்களுக்கு ஸுப்ரோக்ஷிதம் என்று ச்ராத்த ஸ்தலத்தை ப்ரோக்ஷித்து, தர்ப்பத்தைக் கையில் உடையவனாய் எல்லாவற்றையும் செய்யவும். இதன் பொருள் சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையில்:— பித்ரு ஸ்தான ப்ராம்ஹணரிடத்தில் முன்பு கையலம்புவதை முதலாக ஆசமனத்திற்காக ஜலத்தைக் கொடுத்துப் பிறகு விச்வேதேவ ப்ராம்ஹணர்களிடத்தில் கையலம்புவதற்கும், ஆசமனத்துக்கும் ஜலத்தைக் கொடுத்து, ஸுப்ரோக்ஷிதம் என்ற மந்த்ரத்தால் ச்ராத்த

ஸ்தலத்தை ப்ரோக்ஷித்து, தர்ப்பத்தைக் கையில் தரித்து மேல் செய்ய வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்ய வேண்டும்.

## हस्तप्रक्षालनानन्तरविधिः

अनन्तरकृत्यमाहागस्त्यः — अथाचान्तेषु चाचम्य वारि दद्यात्सकृत्सकृत् इति। मार्कण्डेयः – पितॄणां नामगोत्रेण जलं देयमनन्तरम् ब्राह्मणानां द्विजैर्वाच्यमिदमक्षय्यमस्त्विति इति। स्मृत्यन्तरे — रोचत इति वैश्वदेवान् वाचयित्वा पितॄन् स्वदितमिति वाचयेत् इति।

**கை அலம்பிய பிறகு செய்ய வேண்டியதின் விதி.** பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், அகஸ்த்யர்:— பிறகு ப்ராம்ஹணர்கள் ஆசமனம் செய்த பிறகு ஆசமனம் செய்து, ஒவ்வொரு முறை ஜலத்தைக் கொடுக்க வேண்டும். மார்க்கண்டேயர்:— பிறகு பித்ருக்களுடைய நாமகோத்ரங்களைச் சொல்லி, ப்ராம்ஹணர்களுக்கு ஜலத்தைக் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹணர்கள் 'இதம் அக்ஷய்யம் அஸ்து' என்று சொல்ல வேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியில்:— விச்வே தேவ ப்ராம்ஹணர்களை 'ரோசதே' என்று சொல்லச் செய்து, பித்ர்ய ப்ராம்ஹணர்களை 'ஸ்வதிதம்' என்று சொல்லச் செய்ய வேண்டும்.

मत्स्यः — स्वस्तिवाचनकं दद्यादक्षयोदकमेव च। सलिलं नाम गोत्रेण दद्याच्छक्त्या च दक्षिणाम्। गोभू हिरण्यवासांसि नवानि शयनानि च। दद्याद्यदिष्टं विप्राणामात्मनः पितुरेव हि। वित्तशाठ्येन रहितः पितृभ्यः प्रीतिमाचरन् इति। जमदग्निः — सलिलं नामगोत्रेण दद्याच्छक्त्या च दक्षिणाम्। हिरण्य(धन)धान्यवासांसि धर्म्याणि शयनानि च इति। चन्द्रिकायां तु — ब्राह्मणान् भोजयित्वा तु दद्याच्छक्त्या च दक्षिणाम्। यद्यदिष्टतमं लोके यच्चास्य दयितं गृहे। तत्तद्गुणवते देयं तदेवाक्षयमिच्छता इति।

**மத்ஸ்யர்:—** ஸ்வஸ்திவாசனத்தைக் கொடுக்கவும். அக்ஷய்யோதகத்தையும் விட வேண்டும். நாம கோத்ரத்தைச் சொல்லி ஜலத்தை விடவும். யதாசக்தி தக்ஷிணையையும் கொடுக்கவும். பசு, பூமி, ஸ்வர்ணம், வஸ்த்ரம், புதிய படுக்கை இவைகளைக் கொடுக்கவும். ப்ராம்ஹணர்களுக்கும் தனக்கும் பித்ருக்களுக்கும் எது ருசிக்கின்றதோ அதைக் கொடுக்கவும். பணத்தில் வஞ்சனையில்லாதவனாய், பித்ருக்களுக்கு ப்ரீதியைச் செய்பவனாயிருக்க வேண்டும். **ஜமதக்னி:—** நாம கோத்ரங்களைச் சொல்லி ஜலத்தைக் கொடுக்க வேண்டும். யதாசக்தி தக்ஷிணையையும் கொடுக்க வேண்டும். பொன், தான்யம், வஸ்த்ரம், வீடு, படுக்கை இவைகளையும் கொடுக்க வேண்டும். **சந்த்ரிகையிலோவெனில்:—** ப்ராம்ஹணர்களைப் புஜிப்பித்து, சக்திக்குத் தகுந்தபடி தக்ஷிணையையும் கொடுக்க வேண்டும். அது அக்ஷய்யமாயிருக்க வேண்டுமென்று விரும்பினால் உலகில் எதெது அதிக இஷ்டமாயுள்ளதோ, இவனுடைய வீட்டில் எது இஷ்டமாயுள்ளதோ, அததை நற்குணமுள்ள ப்ராம்ஹணனுக்குக் கொடுக்க வேண்டும்.

पारस्करः — हिरण्यं विश्वेभ्यो देवेभ्यो रजतं पितृभ्यो अन्यच्च गोकृष्णाजिनादिकं यावच्छक्नुयात्। एकपङ्क्त्युपविष्टानां विप्राणां श्राद्धकर्मणि । भक्ष्यं भोज्यं समं देयं दक्षिणात्वनुसारतः इति । निमन्त्रितब्राह्मण विद्यागुणतारतम्येनेत्यर्थः। (दासीं दासं च विविधं तथैवोष्ट्रमजाविकम्।। हस्त्यश्वरथयानं च श्राद्धकर्मणि नित्यशः। तिलांश्च विविधान् दत्वा लभते फलमक्षयम्। पितृकर्मणि दत्वा तु शालीन् (शोभ) भोजनपुण्यभाक् । धनपुष्पफलोपेतं दत्वा शोभनमश्नुते। कूपारामतटाकानि क्षेत्रघोषगृहाणि च। दत्वानुमोदते स्वर्गे नित्यमाचन्द्रतारकम् । स्वास्तीर्णं शयनं दत्वा श्राद्धकार्ये विभूषितम्। पितरस्तस्य तुष्यन्ति स्वर्गे चानन्त्यमश्नुते। पट्टकौशेय

पत्रोर्णं तथा प्रच्छदकम्बलम्। अजिनं रौरवं पट्टं प्रवेणं मृगरोमजम्। दत्वा चैतानि विप्रेभ्यो भोजयित्वा यथाविधि। प्राप्नोति श्रद्धधानस्तु वाजपेयस्य यत् फलम्। कौशेयक्षौममार्गाणि दुकूलमहतं तथा। श्राद्धेष्वेतानि यो दद्यात् कामानाप्नोत्यनुत्तमान्। भक्ष्याणि च करम्भं च मृष्टान्नं घृतशर्कराः। कृसरं मधुपर्कं च पयः पायसमेव च। स्निग्धमुष्णं च यो दद्यात् सोऽग्निष्टोमफलं लभेत् इति।

**பாரஸ்கரர்:—** விச்வேதேவர்களுக்குப் பொன்னையும், பித்ருக்களுக்கு வெள்ளியையும், தவிர பசு, க்ருஷ்ணாஜினம் முதலியதையும் யதாசக்தி கொடுக்கவும். ''ச்ராத்தத்தில் ஒரே பங்க்தியில் உட்கார்ந்த ப்ராம்ஹணர்களுக்குப் பக்ஷ்யம் போஜ்யம் முதலியதை ஸமமாகக் கொடுக்க வேண்டும். தக்ஷிணையை மட்டில் யோக்யதையை அனுஸரித்துக் கொடுக்கவும்'', என்று, வரிக்கப்பட்ட ப்ராம்ஹணர்களின் வித்யை, குணம் இவைகளின் தாரதம்யத்தை அனுஸரித்து, என்பது பொருள். (வேலைக்காரி, வேலைக்காரன், ஒட்டகை, வெள்ளாடு, செம்மறி ஆடு, யானை, குதிரை, தேர், வண்டி இவைகளை ச்ராத்தத்தில் எப்பொழுதும் கொடுக்கலாம். பலவிதமான எள்ளையும் கொடுத்தால் அக்ஷயமான பலனை அடைவான். ச்ராத்தத்தில் நெல்லைக் கொடுத்தால் போஜனத்தைக் கொடுத்த புண்யத்தை அடைவான். பணம், புஷ்பம், பழம் இவைகளைக் கொடுத்தால் சுபத்தை அடைகிறான். கிணறு, பூந்தோட்டம், குளம், வயல், சேரி, வீடு இவைகளைக் கொடுத்தால் சந்த்ரன் நக்ஷத்ரங்கள் உள்ள வரையில் ஸ்வர்க்கத்தில் ஸந்தோஷத்தை அடைவான். ச்ராத்தத்தில் நல்ல விரிப்புள்ள அலங்கரிக்கப்பட்ட படுக்கையைக் கொடுத்தால் அவனது பித்ருக்கள் ஸந்தோஷிக்கின்றனர். கொடுப்பவன் ஸ்வர்க்கத்தில் அழிவற்றவனாய் இருப்பான். பட்டு, வெண்பட்டு, திரைச்சீலை, போர்த்திக் கொள்ளும் கம்பளம், க்ருஷ்ணாஜினம், ருரு ம்ருகத்தின் தோல்,

பட்டம், மானின் ரோமத்தால் செய்யப்பட்ட கம்பளம் இவைகளை ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்து விதிப்படி போஜனம் செய்வித்தால் வாஜபேய யாக பலனை அடைவான். வெண்பட்டு, நார்மடி, க்ருஷ்ணாஜினம், புதிதாகிய துகூலம் இவைகளை ச்ராத்தத்தில் கொடுப்பவன் சிறந்த காமங்களை அடைவான். பக்ஷ்யங்கள், இட்லி, அதிகமான அன்னம், நெய், சர்க்கரை, க்ருஸரம் (வெல்லத்துடன் கூடிய எள்), மதுபர்க்கம் (தயிருடன் கூடிய தேன்), பால், பாயஸம், நெய்யுடன் கூடியதும் உஷ்ணமுமாகிய போஜனம் இவைகளைக் கொடுப்பவன் அக்னிஷ்டோம யாக பலனை அடைவான்.

हेमाद्रौ-लोके श्रेष्ठतमं पूर्वमात्मनश्चापि यत् प्रियम्। सर्वं पितॄणां दातव्यं तेषामेवाक्षयार्थिना। जाम्बूनदमयं दिव्यं विमानं सूर्यसन्निभम्। दिव्याप्सरोभिस्संपूज्यमन्नदो लभतेऽक्षयम् । आच्छादनं तु यो दद्यान्मृदुलं श्राद्धकर्मणि । आयुः प्रकृष्टमैश्वर्यं रूपं च लभते शुभम्। यज्ञोपवीतं यो दद्यात् पादुके श्राद्धकर्मणि । पवित्रं शोभनं यानं पादयोस्सुखमेव च। व्यजनं तालवृन्तं च दत्वा विप्राय संस्कृतम्। प्राप्नुयात्तल्पसंयुक्तं शयनीयं सुखावहम्।। श्राद्धेषूपानहौ दत्वा ब्राह्मणेषु सदा भुवि। दिव्यं स लभते चक्षुर्वाजियुक्तं रथं तथा। श्रेष्ठं छत्रं च विमलं पुष्पमालाविभूषितम् । श्राद्धे दत्वा पितृभ्यस्तु नाकपृष्ठे महीयते । मुक्तावैडूर्यवज्राणि रत्नानि विविधानि च। लवणाज्यसुवर्णानि श्राद्धे पात्राणि योऽददात्। रसास्तमनुतिष्ठन्ति ह्यायुस्सौभाग्यमेव च। पात्रं वै तैजसं दत्वा मनोज्ञं श्राद्धकर्मणि। पात्रं भवति कामानां विद्यानां च धनस्य च। रजतं काञ्चनं चैव दद्यात् श्राद्धे तु कर्मणि। प्रभुत्वं लभते दत्वा प्राकाम्यं धनमेव च। धेनुं श्राद्धेषु यो दद्याद्दृष्टिं कुम्भोपदोहनाम्। गावस्तमनुतिष्ठन्ति गवां पुष्टिस्तथैव च । गन्धवन्ति विचित्राणि स्थानानि सुरभीणि च। पूजयित्वा तु पात्राणि श्राद्धे सत्कृत्य दापयेत्।

गन्धवाहा महानद्यस्सुखानि विविधानि च । दातारमुपतिष्ठन्ति स्त्रियश्चापि पतिव्रताः (स्वर्गेलोके महीयते) । शयनासनयानानि भूमिं वाहनमेव च । श्राद्धेष्वेतानि यो दद्यात् सोऽश्वमेधफलं लभेत् । सर्पिः पूर्णानि पात्राणि श्राद्धे सत्कृत्य दापयेत् । कुम्भोपदोहिनीनां च सहस्रं लभते गवाम् । रम्यानावसथान् दत्वा राजसूयफलार्थभाक् । तथाऽऽभरणसंपूर्णां सोपधानां स्वलङ्कृताम् । शय्यां च सुखदां दत्वा (द्विज इन्द्रत्वमाप्नुयात्) द्विजोऽग्निष्टोमभाग्भवेत् इति ।)

**ஹேமாத்ரியில்:—** உலகத்தில் சிறந்தது எதுவோ, தனக்கும் ப்ரியமாகியது எதுவோ அவைகளைப் பித்ருக்களுக்குக் கொடுக்க வேண்டும். அவைகள் குறைவற்றிருக்க வேண்டுமென்று விரும்புகிறவன். தங்கமயமாயும், ஸூர்யனுக்கொப்பாயும், அப்ஸரஸ்ஸுகளுடன் கூடியதாயுமுள்ள அழிவற்ற விமானத்தை அன்னத்தைக் கொடுப்பவன் அடைவான். ச்ராத்தத்தில் மெதுவான போர்வையை எவன் கொடுப்பானோ அவன் உயர்ந்த ஆயுள், ஐச்வர்யம், உருவம் இவைகளை அடைவான். யஜ்ஞோபவீதம், பாதுகை, சுத்தமாயும், சுபமாயும், பாதங்களுக்கு ஸுகமாயுமுள்ள வாஹனம், பனைவிசிறி இவைகளைக் கொடுப்பவன் கட்டிலுடன் கூடிய ஸுகமான படுக்கையை அடைவான். ச்ராத்தங்களில் பாதரக்ஷைகளைக் கொடுத்தால் நல்ல கண்ணையும், குதிரையுடன் கூடிய தேரையும் அடைவான். புஷ்ப மாலையால் அலங்கரிக்கப்பட்ட சிறந்த குடையைக் கொடுத்தால் ஸ்வர்க்கத்தில் சிறப்பை அடைவான். முத்து, வைடூர்யம், வஜ்ரம், பலவித ரத்னங்கள், உப்பு, நெய், ஸ்வர்ணம், பாத்ரங்கள் இவைகளைக் கொடுப்பவனை ரஸங்களும், ஆயுள், ஸௌபாக்யம் இவைகள் வந்தடைகின்றன. அழகிய உலோக பாத்ரத்தைக் கொடுப்பவன் இஷ்டங்களுக்கும், வித்யைகளுக்கும், தனங்களுக்கும் இருப்பிடமாகிறான். வெள்ளி, பொன்

இவைகளைக் கொடுப்பவன் ப்ரபுத் தன்மையையும், எல்லா இஷ்டங்களையும், தனத்தையும் அடைவான். புதிதாய்க் கன்று போட்ட பசுவைக் கறக்கும் பாத்ரத்துடன் கொடுப்பவனைப் பசுக்கள் வந்தடைகின்றன. பசுக்களின் வ்ருத்தியும் அடைகிறது. வாஸனையுள்ள பதார்த்தங்களையும், அநேகவிதமாயும், வாஸனையுள்ளதுமான இடங்களையும் பாத்ரங்களையும் கொடுப்பவனைச் சந்தனமணத்தைப் பெருக்கும் பெரிய நதிகளும், பலவித ஸுகங்களும், பதிவ்ரதையான ஸ்த்ரீகளும் வந்தடைகின்றனர். ஸ்வர்க்க லோகத்தில் இவைகளுடன் சிறப்புறுகிறான். படுக்கை, ஆஸனம், பூமி, வாஹனம் இவைகளைக் கொடுப்பவன் அச்வமேத யாக பலனை அடைவான். நெய்யினால் நிறைந்த பாத்ரங்களைக் கொடுப்பவன் குடம் பால் கறக்கும் ஆயிரம் பசுக்களை அடைவான். அழகிய வீடுகளைக் கொடுத்தால் ராஜஸூய யாகத்தின் பாதி பலனை அடைவான். ஆபரணங்களுடன் கூடியதும், தலையணையுடன் கூடியதும், நன்றாக அலங்கரிக்கப்பட்டதும், அழகியதுமாகிய படுக்கையைக் கொடுப்பவன் அக்னிஷ்டோம யாக பலனை அடைவான்.

अनिमन्त्रितविप्रेभ्योऽपि दक्षिणादानमाह बृहस्पतिः - ज्ञातयो बान्धवा निःस्वास्तथैवाथ च ये परे । प्रदद्याद्दक्षिणां तेषां सर्वेषामनुरूपतः इति । देवलः — आचान्तेभ्यो द्विजेभ्यस्तु प्रयच्छेदथ दक्षिणाम् इति । स एव — दक्षिणां पितृविप्रेभ्यो दद्यात् पूर्वं ततो द्वयोः । सर्वं कर्मापसव्येन दक्षिणादानवर्जितमिति । जमदग्निस्तु — अपसव्यं तु तत्रापि मत्स्योऽपि भगवान् यमः इति ।

வரிக்கப்படாத ப்ராம்ஹணர்களுக்கும் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டுமென்கிறார், ப்ருஹஸ்பதி:— ஜ்ஞாதிகள், பந்துக்கள், தரித்ரர்கள், ஸம்பந்தமில்லாத மற்றவர்கள் இவர்கள் எல்லோருக்கும் யோக்யதானுஸாரமாய்த் தக்ஷிணையைக் கொடுக்க

வேண்டும். தேவலர்:— பிறகு ஆசமனம் செய்த ப்ராம்ஹணர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். தேவலரே:— பித்ருஸ்தான ப்ராம்ஹணர்களுக்குத் தக்ஷிணையை முன்பு கொடுக்க வேண்டும். பிறகு விச்வேதேவ ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்கவும். தக்ஷிணை கொடுப்பதைத் தவிர்த்து எல்லாக் கார்யமும் ப்ராசீநாவீதமாய் செய்யப்பட வேண்டும். ஜமதக்னியோவெனில்:— தக்ஷிணா தானத்திலும் ப்ராசீநாவீதத்தை மத்ஸ்யர், யமன் இவர்கள் சொல்லுகின்றனர்.

अत्र व्यवस्था दर्शिता माधवीये —— ब्राह्मणोद्देशेन दक्षिणादाने पितृपूर्वः क्रम उपवीतं च पित्रुद्देशेन दक्षिणादानं प्राचीनावीतिना कार्यं तच्च वैश्वदैविकब्राह्मणपूर्वकमिति।

இதில் வியவஸ்தை சொல்லப்பட்டுள்ளது மாதவீயத்தில்:— ப்ராம்ஹணர்களை உத்தேசித்துத் தக்ஷிணை கொடுக்கும் பொழுது உபவீதமாய்ப் பித்ருக்களுக்கு முன்பு கொடுக்க வேண்டும். பித்ருக்களை உத்தேசித்து தக்ஷிணை கொடுப்பதை ப்ராசீநாவீதியாய்ச் செய்ய வேண்டும். அது விச்வேதேவ ப்ராம்ஹணர்களுக்கு முன்பு செய்யப்பட வேண்டும் என்று.

ब्रह्माण्डपुराणे —— श्राद्धभुक् दक्षिणां नेच्छेत् कर्ता दद्यात्तु दक्षिणाम्। तावुभौ पूर्णकर्माणौ श्राद्धभुक् न तु दोषभाक्। श्राद्धभुक् श्राद्धमध्ये यो नालं मे दक्षिणेति च। तस्मिंस्तन्न प्रदा (ता चेत्तावुभौ) तव्यं दत्ते तौ नरकालयौ। अदत्वा दक्षिणां श्राद्धे श्वो दास्यामीति यो वदेत्। दिने दिने भवेद्वृद्धिर्दक्षिणापरिमाणतः। तस्मादवश्यं दातव्यमदाता रौरवं व्रजेत्। श्राद्धभुक् श्राद्धकर्तारं सवृद्धिं दक्षिणां ततः। एकवारं त्रिवारं वा शृणुयाद्दिनपञ्चकम्। ततः परं न शृणुयात्कर्तारं हन्ति दक्षिणा। पुनः श्राद्धं चरेत्कर्ता षष्ठेऽह्न्यायुर्विवृद्धये। अथ नायुष्यहोमं

वा चरेत् प्रोक्तं महर्षिभिः । यत्किञ्चिद्दक्षिणाकाले स्वस्वशक्त्यनुसारतः । तदक्षयं भवेत्तृप्तिं ददाति स्वपितॄन् प्रति । लक्षं लक्षपतिर्दद्याद्दरिद्रस्तु वराटिकाम् । वित्तशाठ्यं न कुर्वीत श्राद्धकाले समाहितः । सत्यां सम्पदि लोभाद्यः श्राद्धं न कुरुते द्विजः । स विज्ञेयो नरपशुर्गार्दभीं योनिमाविशेत् । तस्य पङ्क्तौ न भोक्तव्यं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ।

**ப்ரம்ஹாண்ட புராணத்தில்:—** ச்ராத்தத்தில் புஜித்தவன் தக்ஷிணையை விரும்பக்கூடாது. ச்ராத்தம் செய்தவன் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். அவ்விருவர்களும் ச்ராத்தத்தைப் பூர்த்தி செய்தவராகின்றனர். ச்ராத்தத்தில் புஜித்தவன் தோஷத்தை அடைவதில்லை. ச்ராத்தத்தில் புஜித்தவன் ச்ராத்தத்தின் மத்தியில் எனக்குத் தக்ஷிணை போதாது என்று சொல்வானாகில் அவனுக்கு அதைக் கொடுக்கக் கூடாது. கொடுத்தால் இருவரும் நரகத்தை அடைவார்கள். ச்ராத்தத்தில் தக்ஷிணையைக் கொடாமல் நாளைக்குக் கொடுக்கின்றேன் என்று சொல்வானாகில், ஒவ்வொரு நாளிலும் தக்ஷிணையின் அளவுப்படி வ்ருத்தியாகும். ஆகையால் தக்ஷிணையை அவச்யம் கொடுக்க வேண்டும். கொடாதவன் ரௌரவ நரகத்தை அடைவான். ச்ராத்தத்தில் புஜித்தவன் ச்ராத்தம் செய்தவனை வட்டியுடன் கூடிய தக்ஷிணையை ஐந்து நாள் வரையில் ஒரு முறை அல்லது மூன்று முறை கேட்க வேண்டும். ஐந்து நாட்களுக்குப் பிறகு கேட்கக் கூடாது. கொடாத ச்ராத்த கர்த்தாவைத் தக்ஷிணை கொல்லுகின்றது. ஆறுவது நாளில் ச்ராத்த கர்த்தா மறுபடி ச்ராத்தம் செய்ய வேண்டும், ஆயுஸ் வ்ருத்திக்காக அல்லது மஹர்ஷிகளால் சொல்லப்பட்ட ஆயுஷ்ய ஹோமத்தையாவது செய்ய வேண்டும். ச்ராத்தத்தில் தக்ஷிணை கொடுக்கும் காலத்தில் தன் சக்திக்குத் தகுந்தபடி ஸ்வல்ப தக்ஷிணையையாவது கொடுக்க வேண்டும். அது

அக்ஷயமாகும். தனது பித்ருக்களுக்கு த்ருப்தியையும் கொடுக்கின்றது. லக்ஷாதிபதி லக்ஷத்தைக் கொடுக்க வேண்டும். தரித்ரனேவெனில் சோழியைக் கொடுக்கலாம். ச்ராத்த காலத்தில் கவனமுள்ளவனாய், தானத்தில் வஞ்சனை செய்யக்கூடாது. ஸம்பத் இருக்கும் பொழுது லோபத்தினால் எவன் ச்ராத்தத்தைச் செய்வதில்லையோ அவனை நரபசு என்று அறியப்படவேண்டும். அவன் கழுதைப் பிறப்பை அடைவான். அவனது பங்க்தியில் புஜிக்கக் கூடாது. புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

स्वधावाचनादि। अनन्तरकर्तव्यमाह याज्ञवल्क्यः — दत्वा तु दक्षिणां शक्त्या स्वधाकारमुदाहरेत्। वाच्यतामित्यनुज्ञातः प्रकृतेभ्यः स्वधोच्यताम्। ब्रूयुरस्तु स्वधेत्युक्ते भूमौ सिञ्चेत्ततो जलम्। विश्वेदेवाश्च प्रीयन्तां विप्रैश्चोक्त इदं जपेत्। दातारो नोऽभिवर्द्धन्तां वेदास्सन्ततिरेव च। श्रद्धा च नो मा व्यपगात् बहु देयं च नोऽस्त्विति। इत्युक्त्वोक्त्वा प्रिया वाचः प्रणिपत्य विसर्जयेत्। वाजे वाजे इति प्रीतः पितृपूर्वं विसर्जयेत्। प्रदक्षिणमनुव्रज्य भुञ्जीत पितृसेवितम्। ब्रह्मचारी भवेत्तान्तु रजनीं ब्राह्मणैस्सह इति।

ஸ்வதாவாசனம் முதலியது. பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— யதாசக்தி தக்ஷிணையைக் கொடுத்து, ஸ்வதா என்ற சப்தத்தைச் சொல்ல வேண்டும். வாச்யதாம் (சொல்லப்படட்டும்) என்று அனுஜ்ஞை பெற்றவனாய் ஸ்வதோச்யதாம் என்று சொல்லி, அஸ்து ஸ்வதா என்று அவர்கள் சொல்ல வேண்டும். பிறகு பூமியில் ஜலத்தை ''விச்வேதேவா:ப்ரீயந்தாம்'' என்று விடவேண்டும். பிறகு ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை பெற்று இதை ஜபிக்க வேண்டும். 'எங்களுக்குக் கொடுப்பவர்கள்

வ்ருத்தியடைய வேண்டும். வேதங்களும் எமது ஸந்ததியும் வ்ருத்தியடைய வேண்டும். எமது ச்ரத்தை குறைய வேண்டாம். கொடுக்கக் கூடிய வஸ்து அதிகமாய் எங்களுக்கு உண்டாக வேண்டும்' என்று இவ்விதம் ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லி, நமஸ்கரித்து, அனுப்ப வேண்டும். ஸந்துஷ்டனாய் 'வாஜே வாஜே' என்ற மந்த்ரத்தால் பித்ருக்களை முன்பு அனுப்ப வேண்டும். வலமாய்ப் பின் தொடர்ந்து பிறகு பித்ருசேஷத்தைப் புஜிக்க வேண்டும். அன்று இரவில் ப்ராம்ஹணர்களுடன் கர்த்தா ப்ரம்ஹசர்யத்துடன் இருக்க வேண்டும்.

मत्स्यः — दक्षिणां दिशमाकाङ्क्षन् पितॄन् याचेत मानवः। दातारो नोऽभिवर्धन्तां वेदास्सन्ततिरेव च। श्रद्धा च नो मा व्यपगात् बहुदेयं च नोऽस्त्विति। अन्नं च नो बहु भवेदतिथींश्च लभेमहि। याचितारश्च नस्सन्तु मा च याचिष्म कञ्चन। एवमस्त्विति तैर्वाच्यं मूर्ध्ना ग्राह्यं च तेन तत्। पश्चाद्विसर्जयेद्देवान् पूर्वं पैतामहान् द्विजान् इति।

**மத்ஸ்யர்:—** தெற்குத் திக்கை நோக்கியவனாய், கர்த்தா பித்ருக்களை யாசிக்க வேண்டும். ''தாதாரோ......நோஸ்து'' அன்னமும் எங்களுக்கு அதிகமாக உண்டாகவேண்டும், அதிதிகளையும் அடையக் கடவோம், யாசிப்பவர்களும் எங்களுக்கு வேண்டும். நாங்கள் ஒருவனையும் யாசிக்காமல் இருக்கக் கடவோம், என்று, ப்ராம்ஹணர்கள் ''ஏவம் அஸ்து'' (இப்படியே இருக்கட்டும்) என்று சொல்ல வேண்டும். கர்த்தா அவர்கள் வார்த்தையைச் சிரஸ்ஸினால் க்ரஹிக்க வேண்டும். பின் தேவர்களை அனுப்ப வேண்டும். பித்ர்ய ப்ராம்ஹணர்களை முன்பு அனுப்ப வேண்டும்.

षट्पिण्डदानविधिः — विप्रविसर्जनानन्तरं पिण्डदान-

माहापस्तम्बः — भुक्तवतोऽनुव्रज्य प्रदक्षिणीकृत्य द्वैधं दक्षिणाग्रान् दर्भान् सङ्स्तीर्य तेषूत्तरैरपो दत्वोत्तरैर्दक्षिणापवर्गान् पिण्डान् दत्वा

पूर्ववदुत्तरैरपो दत्वोत्तरैरुपस्थायोत्तरयोरुदपात्रेण त्रिः प्रसव्यं परिषिच्य न्युब्ज्य पात्राण्युत्तरं यजुरनवानं त्र्यवरार्ध्यमावर्तयित्वा प्रोक्ष्य पात्राणि द्वन्द्वमभ्युदाहृत्य सर्वतः समवदाय उत्तरेण यजुषा शेषस्य ग्रासवरार्ध्यं प्राश्नीयात् इति।

**ஆறு பிண்டங்களைக் கொடுக்கும் விதி.** ப்ராம்ஹணர்களை அனுப்பிய பிறகு பிண்ட தானத்தைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர்:— ''புஜித்த ப்ராம்ஹணர்களைப் பின் தொடர்ந்து, ப்ரதக்ஷிணம் செய்து, இரண்டு ப்ரகாரமாய்த் தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களைப் பரப்பி, அவைகளில் அடுத்த மந்த்ரங்களால் ஜலத்தைச் சேர்த்து, அடுத்த மந்த்ரங்களால் தெற்குத் திக்கில் முடிவாகும்படி பிண்டங்களை வைத்து, முன் போல் அடுத்த மந்த்ரங்களால் ஜலத்தைச் சேர்த்து, அடுத்த மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்து, அடுத்த மந்த்ரத்தால் ஜல பாத்ரத்திஞல் மூன்று தடவை அப்ரதக்ஷிணமாய்ப் பரிஷேசனம் செய்து, பாத்ரங்களைக் கவிழ்த்து, அடுத்த மந்த்ரத்தை மூச்சுவிடாமல் மூன்று தடவைக்குக் குறையாமல் ஆவ்ருத்தி செய்து, கவிழ்த்த பாத்ரங்களை ப்ரோக்ஷித்து, இரண்டிரண்டாய் எடுத்து, அன்ன சேஷம் எல்லாவற்றிலிருந்தும் கொஞ்சம் எடுத்து, அடுத்த மந்த்ரத்தால் ஒரு கபளத்துக்குக் குறையாமல் ப்ராசனம் செய்ய வேண்டும்,'' என்று

अथ भुक्तवतो व्रजतो ब्राह्मणान् यज्ञोपवीती आगृहसीमान्तादनुव्रज्य प्रदक्षिणीकरोति, अथ प्रत्येत्य प्राचीनावीती पिण्डदानदेशे दक्षिणाग्रान् दर्भान् द्वेधा संस्तृणाति, तत्र पुरस्तात् पित्राद्यर्थं पश्चान्मात्राद्यर्थम्, ततस्तेषु मार्जयन्तां मम पितर इत्यादिभिस्त्रिभिर्मार्जयन्तां मम मातर इत्यादिभिश्च यथादर्भं दक्षिणापवर्गमपो दत्वाऽनन्तरमुत्तरैरेतत्ते ततासावित्यादिभिष्षड्भिः षट्पिण्डान् ददाति, अथ पूर्ववन्मार्जयन्तामित्यादिभिरेवापो ददाति,

अथोत्तरैर्ये च वोऽत्रेत्यादिभिः षड्भिर्मन्त्रैर्यथालिङ्गं पितॄन् मातॄश्च त्रिरुपतिष्ठते तृप्यतेत्यनेन त्रिरावृत्तेन उभयांस्तन्त्रेण, तत उत्तरया पुत्रान् पौत्रान् अभितर्पयन्तीः इत्युभयेषां पिण्डान् युगपदुदपात्रेण त्रिः प्रसव्यमविच्छिन्नं परिषिञ्चति, अनन्तरं पात्राणि होमार्थानि पिण्डार्थानि च न्युब्ज्य - अधो बिलानि कृत्वा, उत्तरं यजुस्तृप्यत तृप्यत तृप्यतेत्याम्नान एव त्रिरभ्यस्तमनवानमनुच्छ्वसंस्त्र्यवरार्ध्यं त्रिरभ्यावृत्तिरवमा मात्रा यस्यावर्तनस्य तत्त्र्यवरार्ध्यं यथा भवति तथा आवर्तयति, ततश्चावमयाऽपि मात्रया तृप्यतेति नवकृत्वोऽभ्यसितव्यं भवति, एवमनवानं यावच्छक्त्यावर्त्य ततः पात्राणि न्यग्भूतानि प्रोक्ष्य द्वंद्वमभ्युदाहरति, अथ शेषस्यान्नस्य ग्रासवरार्ध्यं सर्वतः - सर्वेभ्योऽन्नभेदेभ्यस्समवदाय उत्तरेण यजुषा प्राणे निविष्ट इत्यनेन प्राश्नीयात् इदं प्राशनं भोजनेच्छायामसत्यामपि कार्यम्, कर्माङ्गत्वात् इति तात्पर्यदर्शनेऽस्यार्थोऽभिहितः।

''பிறகு புஜித்தவர்களாய்ச் செல்லுகின்ற ப்ராம்ஹணர்களை உபவீதியாய் வீட்டின் எல்லை முடியும் வரையில் பின் சென்று ப்ரதக்ஷிணம் செய்யவும். பிறகு திரும்பி வந்து ப்ராசீனவீதியாய்ப் பிண்டதானம் செய்யும் இடத்தில் தெற்குத் திக்கில் நுனியுள்ள தர்ப்பங்களை இரண்டு வரிசையாகப் பரப்பவும். அவைகளில் கிழக்கில் பிதா முதலியவர்க்கும், மேற்கில் மாதா முதலியவர்க்கும், பிறகு அவைகளில் 'மார்ஜயந்தாம் மம பிதர:' என்பது முதலிய மூன்று மந்த்ரங்களாலும், 'மார்ஜயந்தாம் மம மாதர:' என்பது முதலிய மூன்று மந்த்ரங்களாலும் அந்தந்தத் தர்ப்பங்களில் தெற்கில் முடிவாக ஜலத்தைக் கொடுத்து, பிறகு அடுத்த மந்த்ரங்களால் 'ஏதத்தேதத' என்பது முதலிய மந்த்ரங்களால் ஆறு பிண்டங்களைக் கொடுக்கவும். பிறகு முன்போல் 'மார்ஜயந்தாம்' என்பது முதலியவைகளாலேயே ஜலத்தைக் கொடுக்கவும். பிறகு

அடுத்த 'யேசவோऽத்ர' என்பது முதலிய ஆறு மந்த்ரப்படி பித்ருக்களேயும் மாதாக்களேயும் மூன்று தடவை உபஸ்தானம் செய்யவும். 'த்ருப்யத' என்றதை மூன்று தடவை சொல்லி இருவர்களேயும் உபஸ்தானம் செய்யவும். பிறகு அடுத்த 'புத்ராந் பௌத்ராந்' என்ற ஜல பாத்ரத்தால் மூன்று தடவை அப்ரதக்ஷிணமாய் இடைவிடாது பரிஷேசனம் செய்யவும். பிறகு பாத்ரங்களே, அதாவது ஹோமத்திற்காகவும் பிண்டத்திற்காகவும் உள்ள பாத்ரங்களேக் கவிழ்த்து, (தலேகீழாகச் செய்து), அடுத்த ருக்கை, 'த்ருப்யத த்ருப்யத த்ருப்யத' என்றதை, மந்த்ர பாடத்திலேயே மூன்று தடவையாய் உள்ளதை மூச்சுவிடாதவனுய் மூன்று ஆவ்ருத்திக்குக் குறையாமல் ஜபிக்க வேண்டும். ஆகையால் குறைந்த பக்ஷத்திலும் 'த்ருப்யத' என்ற பதத்தை ஒன்பது தடவை சொல்ல வேண்டும். இவ்விதம் மூச்சுவிடாமல் சக்தி உள்ளவரையில் ஆவ்ருத்தி செய்யவும். பிறகு கவிழ்த்த பாத்ரங்களே ப்ரோக்ஷித்து, இரட்டையாய் எடுக்க வேண்டும். பிறகு பித்ருசேஷ அன்னத்தை ஒரு கபளத்துக்குக் குறையாததாய் எல்லாவற்றினின்றும் எடுத்து அடுத்த 'ப்ராணே நிவிஷ்ட:' என்ற மந்த்ரத்திஞல், ப்ராசனம் செய்யவும். இந்த ப்ராசனத்தைப் போஜன இச்சை யில்லாவிடினும் செய்ய வேண்டும். ச்ராத்த கர்மத்துக்கு அங்கமாகியதால்'' என்ற தாத்பர்யதர்சனத்தில் பொருள் சொல்லப்பட்டுள்ளது.

## कात्यायनादीनां त्रिपिण्डदानादिविधिः।

पिण्डत्रयदानमवघ्राणं चाह मनुः — त्रींस्तु तस्माद्धविश्शेषात् पिण्डान् कृत्वा समाहितः। औदकेनैव विधिना निवपेद्दक्षिणामुखः। न्युप्य पिण्डांस्ततस्तांस्तु प्रयतो विधिपूर्वकम्। तेषु दर्भेषु तं हस्तं निमृज्याल्लेपभागिनाम्। उदकं निनयेच्छेषं शनैः पिण्डान्तिके पुनः। अवजिघ्रेच्च तान् पिण्डान् यथान्युप्तान् समाहितः इति।

காத்யாயன ஸூத்ரிகள் முதலியவர்க்கு மூன்று பிண்ட தான விதி. மூன்று பிண்டங்களைக் கொடுப்பதையும், முகர்ந்துபார்க்கிறதையும் சொல்லுகிறார், மனு:— அந்த ஹவிஸ் சேஷத்திலிருந்து கவனமுள்ளவனாய் மூன்று பிண்டங்களைச் செய்து, உதகதானத்துக்குச் சொல்லிய விதிப்படி தெற்கு நோக்கியவனாய்க் கொடுக்க வேண்டும். சுத்தனாய் விதியுடன் அந்தப் பிண்டங்களைக் கொடுத்து, அந்தத் தர்ப்பங்களில் அந்தக் கையை லேபபாகிகளுக்காகத் துடைக்க வேண்டும். மறுபடி மீதியுள்ள ஜலத்தைப் பிண்டங்களின் ஸமீபத்தில் விட வேண்டும். அந்தப் பிண்டங்களைக் கவனமுடையவனாய் முகர்ந்து பார்க்க வேண்டும்.

आचमनात् पूर्वं पिण्डत्रयदानमाह याज्ञवल्क्यः - सर्वमन्नमुपादाय सतिलं दक्षिणामुखः । उच्छिष्टसन्निधौ पिण्डान् दद्याद्धि पितृयज्ञवत्। मातामहानामप्येवं दद्यादाचमनं ततः इति । अत्र विज्ञानेश्वरः — पिण्डपितृयज्ञकल्पातिदेशेन चतुःश्रपणसद्भावे अग्नौकरणशिष्टचरुशेषेण सह सर्वमन्नमुपादायाग्निसन्निधौ पिण्डान् दद्यात्तदभावे ब्राह्मणार्थसाधितमन्नमुपादाय तिलमिश्रं दक्षिणाभिमुख उच्छिष्टसन्निधौ पिण्डपितृयज्ञकल्पेन पिण्डान् दद्यात्, मातामहानामपि तत् श्राद्धवैश्वदेवावाहनादि पिण्डप्रदानपर्यन्तं कर्मैवमेव कर्तव्यमनन्तरं ब्राह्मणानामप्याचमनं दद्यात् इति।

ஆசமனத்துக்கு முன் மூன்று பிண்டங்களின் தானத்தைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— "எள்ளுடன் கூடியதாய் எல்லா அன்னத்தையும் க்ரஹித்து, தெற்கு நோக்கியவனாய் உச்சிஷ்டத்துக்கு எதிரில் பிண்ட பித்ரு யஜ்ஞ கல்பப்படி பிண்டங்களைக் கொடுக்கவும். மாதாமஹர்களுக்கும் இவ்விதமே பிண்டதானத்தைச் செய்யவும். பிறகு ப்ராம்ஹணர்களுக்கு ஆசமனத்தைக் கொடுக்கவும்" என்று. இவ்விடத்தில், விஜ்ஞானேச்வரர்:—

பிண்ட பித்ரு யஜ்ஞ கல்பத்தை அதிதேசம் செய்து இருப்பதால் சருவைப் பாகம் செய்யும் பக்ஷத்தில் அக்னியில் ஹோமம் செய்து மீதியுள்ள அன்னத்துடன் கூட எல்லா அன்னத்தையும் எடுத்து அக்னியின் எதிரில் பிண்டங்களைக் கொடுக்கவும். அதில்லாவிடில், ப்ராம்ஹண போஜனத்திற்காகப் பக்குவமாகிய அன்னத்தை யெடுத்து, எள்ளுடன் கூடியதாய், தெற்கு நோக்கியவனாய், உச்சிஷ்ட ஸந்நிதியில் பிண்ட பித்ரு யஜ்ஞ கல்பத்தால் பிண்டங்களைக் கொடுக்கவும். மாதாம்ஹர்களுக்கும் அவர்களின் ச்ராத்தத்தில் விச்வேதேவ ஆவாஹனம் முதல் பிண்ட ப்ரதானம் முடியும் வரையில் உள்ள கார்யத்தை இவ்விதம் செய்ய வேண்டும். பிறகு ப்ராம்ஹணர்களுக்கும் ஆசமன ஜலத்தைக் கொடுக்க வேண்டும்.

आश्वलायनः — भुक्तवत्स्वनाचान्तेषु पिण्डान्निदध्यादाचान्तेषु इत्येके इति । मनुस्तु — पिण्डनिर्वापणं केचित् पुरस्तादेव कुर्वते इति । चन्द्रिकामाधवीययोरिदं व्याख्यातम् - भोजनात् पुरस्तात् ब्राह्मणानामर्चनानन्तरमग्नौकरणानन्तरं वा पिण्डनिर्वापणं केचिदिच्छन्ति । केचिदिति वचनादपरे ब्राह्मणभोजनानन्तर माचमनादर्वाग्वा ब्राह्मणविसर्जनात् पश्चाद्वा पिण्डनिर्वापणं कुर्वत इत्यवगम्यते इति । अत्र यथास्वशाखं व्यवस्था ।

ஆச்வலாயனர்:— ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு ஆசமனம் செய்யாமல் இருக்கும் பொழுது பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். ஆசமனம் செய்த பிறகு என்கின்றனர் சிலர். மனுவோவெனில்:— 'சிலர் முன்பே பிண்டதானத்தைச் செய்கின்றனர்' என்றார். சந்த்ரிகை, மாதவீயம் என்ற க்ரந்தங்களில் இது வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது:- 'போஜனத்திற்கு முன், ப்ராம்ஹணர்களுக்கு அர்ச்சனம் செய்த பிறகு அல்லது அக்னியில் ஹோமம் செய்த பிறகு, பிண்டதானத்தைச் சிலர் விதிக்கின்றனர். மற்றவர் 'கேசித்' என்று சொல்லியதால்,

ப்ராம்ஹண போஜனத்திற்குப் பிறகு ஆசமனத்திற்கு முன்பாவது, ப்ராம்ஹணர்களை அனுப்பிய பிறகாவது பிண்ட ப்ரதானம் செய்கின்றனர், என்று அறியப்படுகிறது' என்று. இவ்விஷயத்தில் அவரவர் சாகைப்படி வ்யவஸ்தை அறியத்தக்கது.

तथा च स्मृत्यन्तरम् — मुनिभिर्भिन्नकालेषु पिण्डदानं तु यत् स्मृतम्। तत्स्वशाखामतं यत्र तत्र कुर्याद्विचक्षणः इति। लोकाक्षिस्तु — अप्रशस्तेषु यागेषु पूर्वं पिण्डावनेजनम्। भोजनस्य प्रशस्तेषु पश्चादेवोपकल्पयेत् इति। अप्रशस्तेषु - सपिण्डीकरणात् प्राग्विहितेषु श्राद्धेषु भोजनात् पूर्वं पिण्डनिर्वापणम्, सपिण्डीकरणादिषु प्रशस्तश्राद्धेषु पश्चादेव पिण्डनिर्वापणमित्यर्थः। एतच्च येषां स्वगृह्येषु पिण्डदानकालो नोक्तस्तद्विषयमित्याहुः।

மற்றோர் ஸ்ம்ருதி:— முனிகளால் கால பேதங்களில் பிண்ட தானம் எது சொல்லப்பட்டுள்ளதோ, அதில் அவரவர் சாகையில் எவ்விதம் சொல்லப்பட்டுள்ளதோ அவ்விதம் அறிந்தவன் செய்ய வேண்டும், என்று. லோகாக்ஷியோவெனில்:— ''அப்ரசஸ்தங்களான ச்ராத்தங்களில் பிண்டதானம் முதலில் விதிக்கப்பட்டுள்ளது. ப்ரசஸ்தங்களான ச்ராத்தங்களில் போஜன்த்திற்குப் பிறகே பிண்டதானத்தைச் செய்யவும்'', என்று. அப்ரசஸ்தங்கள் = ஸபிண்டீகரணத்திற்கு முன் விதிக்கப்பட்டுள்ள ச்ராத்தங்கள். அவைகளில் போஜனத்திற்கு முன் பிண்டதானம். ஸபிண்டீகரணம் முதலிய ப்ரசஸ்த ச்ராத்தங்களில் போஜனத்திற்குப் பிறகே பிண்டதானம், என்பது பொருள். இதுவும் எவர்களுக்குத் தமது க்ருஹ்யங்களில் பிண்டதானம் சொல்லப்படவில்லையோ அதைப் பற்றியது, என்கின்றனர்.

पराशरः — सुतृप्तैस्तैरनुज्ञातस्सर्वेणान्नेन भूतले। सतिलेन ततः पिण्डान् सम्यक्कृत्वा समाहितः। पितृ तीर्थेन सलिलं तत्र

सिञ्चेद्यथाक्रमम् । दक्षिणाग्रेषु दर्भेषु पुष्पधूपादिपूजितम् । स्वपित्रे प्रथमं पिण्डं दद्यादुच्छिष्टसन्निधौ । पितामहाय चैवान्यत्तत्पत्रे च तथापरम् । दर्भमूले लेपभुजः प्रीणयेल्लेपकर्षणैः इति । स्मृत्यन्तरे — उपमूलान् समास्तीर्य दर्भानुच्छिष्टसन्निधौ । कृत्वाऽवनेजनं दद्यात्त्रींस्त्रीन् पिण्डान् यथाक्रमम् इति ।

பராசரர்:— நன்ருக த்ருப்தியடைந்த ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனுய், பூமியில் எள்ளுடன் கூடிய எல்லா அன்னத்தாலும் பிண்டங்களை நன்ருகக் கொடுத்து, கவனமுடையவனுய், பித்ருதீர்தத்தால் ஜலத்தைப் பிண்டங்களில் க்ரமப்படி விடவேண்டும். தெற்குநுனியாயுள்ள தர்ப்பங்களில் புஷ்ப தூபாதிகளால் பூஜிக்கப்பட்ட பிண்டத்தைத் தனது பிதாவுக்கு முதல் பிண்டத்தை உச்சிஷ்டத்தின் ஸந்நிதியில் கொடுக்க வேண்டும். மற்ருெரு பிண்டத்தைப் பிதாமஹனுக்கும் மற்ருெரு பிண்டத்தை ப்ரபிதாமஹனுக்கும் கொடுக்க வேண்டும். தர்ப்பங்களின் அடியில் பற்றைத் துடைப்பதால் லேபபாகிகளான பித்ருக்களை ப்ரீதி செய்விக்கவும். லேபபாகிகள் = ப்ரபிதாமஹனின் பிதாமுதல் மூவர். மற்ருேர் ஸ்ம்ருதியில்:— வேருக்கு ஸமீபத்தில் நறுக்கப்பட்ட தர்ப்பங்களை உச்சிஷ்ட ஸந்நிதியில் பரப்பி, ஜலத்தைக் கொடுத்து, வரிசையாக மூன்று மூன்று பிண்டங்களைக் கொடுக்கவும்.

भारतेऽपि — सतिलेन ततोऽन्नेन पिण्डांस्त्रीनेव पुत्रकः । पितॄनुद्दिश्य दर्भेषु दद्यादुच्छिष्टसन्निधौ इति । देवलः — ततस्सर्वाशिनं पात्रे गृहीत्वा विधिवत्स्वयम् । तेषामुच्छेषणस्थाने तेन पात्रेण निक्षिपेत् । पात्राणां खड्गपात्रेण पिण्डदानं विधीयते । राजतौदुम्बराभ्यां वा हस्तेनैवाथ वा पुनः । मधुसर्पिस्तिलयुतांस्त्रीन् पिण्डान् निर्वपेद्बुधः । जानु कृत्वा तथा सव्यं भूमौ पितृपरायणः इति ।

यथा स्वगृह्यं पिण्डसङ्ख्याऽवगन्तव्या । आपस्तम्बसूत्रिणां तु मासिश्राद्धकल्पेनानुष्ठातॄणां पिण्डषट्कम्, पिण्डपितृयज्ञकल्पनानुष्ठातॄणां पिण्डत्रयमिति विवेकः ।

பாரதத்திலும்:— பிறகு புத்ரன் எள்ளுடன் கூடிய அன்னத்தால் மூன்று பிண்டங்களையே பித்ருக்களை உத்தேசித்து உச்சிஷ்ட ஸந்நிதியில் தர்ப்பங்களில் கொடுக்கவும். தேவலர்:— பிறகு எல்லா அன்னத்தையும் விதிப்படி பாத்ரத்தில் தானே எடுத்து, பித்ருக்களின் உச்சிஷ்ட ஸந்நிதியில் அந்தப் பாத்ரத்துடன் வைக்கவும். பாத்ரங்களுள் காண்டாம்ருக பாத்ரத்தால் பிண்டதானம் செய்வது விதிக்கப்படுகிறது அல்லது வெள்ளி, தாம்ரம் இவைகளாலான பாத்ரத்தாலாவது, கையினுலாவது விதிக்கப்படுகிறது. தேன், நெய், எள் இவைகளுடன் கூடிய மூன்று பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். இடது முழங்காலைப் பூமியில் வைத்துப் பித்ருக்களிடத்தில் பக்தி உடையவனுய்க் கொடுக்க வேண்டும். அவரவர் க்ருஹ்யப்படி பிண்டத்தின் எண்ணிக்கை அறியத் தக்கது. மாஸி ச்ராத்த விதியாய் அனுஷ்டிக்கும் ஆபஸ்தம்ப ஸூத்ரிகளுக்கோவெனில் பிண்டங்கள் ஆறு, பிண்டபித்ரு யஜ்ஞ கல்ப விதியாய் அனுஷ்டிப்பவர்களுக்குப் பிண்டங்கள் மூன்று, என்பது விளக்கம்.

ननु उच्छिष्टसन्निधिरशुचिदेशो भवतीति तत्र कथं पिण्डदानं विधीयते इत्याशङ्क्याहात्रिः— पितॄणामासनस्थानादग्रत स्त्रिष्वरत्निषु । उच्छिष्ट सन्निधानं तन्नोच्छिष्टासनसन्निधौ इति । त्रिष्वरत्निष्विति उच्छिष्टसम्पर्करहितासन्न देशोपलक्षणार्थम् । अत एव जातुकर्णिः — व्याममात्रं समुत्सृज्य पिण्डांस्तत्र प्रदापयेदिति । भास्करोऽपि — पात्राणां बाहुमात्रे वा पिण्डदानं विधीयते इति ।

உச்சிஷ்ட ஸமீபமானது அசுத்தமாய் இருக்கிறது என்பதால் அவ்விடத்தில் எப்படி பிண்டதானம்

விதிக்கப்படுகிறது ? என்று ஆசங்கித்துச் சொல்லுகிறார், அத்ரி:— பித்ருக்கள் உட்கார்ந்துள்ள இடத்திலிருந்து முன்னால் மூன்று முழத்திற்கு அப்பால் உள்ள ஸ்தலம் உச்சிஷ்ட ஸ்தானம் எனப்படுகிறது. உச்சிஷ்ட ஆஸனத்தின் ஸமீபத்தில் என்பது இல்லை. மூன்று முழம் என்றது உச்சிஷ்ட ஸம்பந்தம் இல்லாத ஸமீப ப்ரதேசத்தைச் சொல்வதாகும். ஆகையால்தான், ஜாதுகர்ணி:— ஒரு பாகம் அளவு தள்ளி அந்த ஸ்தலத்தில் பிண்டங்களைக் கொடுக்கவும். பாஸ்கரரும்:— போஜனபாத்ரங்களின் ஒரு முழத்திற்கு அப்புறமுள்ள ப்ரதேசத்திலாவது பிண்டதானம் விதிக்கப்படுகிறது.

व्यासोऽपि — अरत्निमात्रमुत्सृज्य पिण्डांस्तत्र प्रदापयेत् । यत्रोपस्पर्शनं वाऽपि प्राप्नोति न हि पिण्डदः इति । व्याघ्रः – गन्धपुष्पाणि धूपं च दीपं चैव निवेदयेत् । यत्किञ्चित् पच्यते गेहे भक्ष्यं भोज्यमगर्हितम् । अनिवेद्य न भोक्तव्यं पिण्डमूले कथञ्चन इति ।

வ்யாஸரும்:— போஜன பாத்ரங்களிலிருந்து ஒரு முழம் தள்ளி அவ்விடத்தில் பிண்டங்களைக் கொடுக்கவும். எந்த இடத்தில் பிண்டத்தைக் கொடுப்பவன் உச்சிஷ்டத்தைத் தொடாமல் இருக்க முடியுமோ அவ்விடத்திலாவது கொடுக்கவும். வ்யாக்ரர்:— சந்தனம், புஷ்பம், தூபம், தீபம் இவைகளைக் கொடுக்க வேண்டும். நிஷித்தமல்லாததாய் க்ருஹத்தில் பக்ஷ்யம் போஜ்யம் முதலியது எது சமைக்கப்படுகிறதோ அதைப் பிண்டங்கள் ஸமீபத்தில் நிவேதனம் செய்யாமல் புஜிக்கக்கூடாது.

## द्वितीयावनेजनमध्यमपिण्डप्राशनादिविधिः

अनन्तरकृत्यमाह बृहस्पतिः — समभ्यर्च्योदपात्रं तु तेषामुपरि निक्षिपेत् इति । विष्णुः — पिण्डानां निर्वपणं कृत्वा अर्घ्यपुष्पधूपानुलेपान्नादिभक्ष्यं निवेदयेदुदपात्रमासिञ्चेदिति । एतच्च

द्वितीयावनेजनं पिण्डपात्रप्रक्षालनोदकेन कार्यम्, पात्रनिर्णेजनेनैव पुनः प्रत्यवनेजयेत् इति स्मरणात्। पुत्रार्थी मध्यमं पिण्डं पत्न्यै दद्यात्। तथा च वायुपुराणे — पत्न्यै प्रजार्थं दद्यात्तु मध्यमं मन्त्रपूर्वकम् इति। मध्यमं पिण्डमित्यर्थः।

இரண்டாவது அவநேஜனம், நடுப்பிண்டத்தைப் புஜிப்பது முதலியவைகளின் விதி. பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், ப்ருஹஸ்பதி:— பூஜை செய்து பாத்ர ஜலத்தால் பிண்டங்களின் மேல் நனைக்க வேண்டும். விஷ்ணு:— பிண்டதானத்தைச் செய்து, அர்க்யம், புஷ்பம், தூபம், சந்தனம், அன்னம் முதலியது, பக்ஷ்யம் இவைகளைக் கொடுக்க வேண்டும். ஜலபாத்ரத்தையும் விட வேண்டும். இந்த இரண்டாவது அவநேஜனம் பிண்டபாத்ரத்தை அலம்பிய ஜலத்தால் செய்யப்பட வேண்டும். ''பிண்டபாத்ரத்தை அலம்பிய ஜலத்தாலேயே இரண்டாவது அவநேஜனத்தைச் செய்ய வேண்டும்,'' என்று ஸ்ம்ருதி உள்ளது. புத்ரனை விரும்புகிறவன் நடுப்பிண்டத்தைப் பத்னிக்குக் கொடுக்க வேண்டும். அவ்விதமே, வாயுபுராணத்தில்:— ப்ரஜை உண்டாவதற்காக நடுப்பிண்டத்தை மந்த்ர பூர்வமாய்ப் பத்னிக்குக் கொடுக்கவும்.

मन्त्रस्तु मत्स्येन दर्शितः — आधत्त पितरो गर्भमत्र सन्तानवर्धनम् इति। मनुः — पतिव्रता धर्मपत्नी पितृपूजनतत्परा। मध्यमं तु ततः पिण्डमद्यात् सम्यक् सुतार्थिनी। आयुष्मन्तं सुतं विन्देद्यशोमेधासमन्वितम्। धनवन्तं प्रजावन्तं धार्मिकं सात्विकं तथा इति। यमः — यत्तथा मध्यमं पिण्डं पत्नी प्राश्नाति वाग्यता। पुत्रकामां सुपुत्रां तां कुर्वन्ति प्रपितामहाः इति।

மத்ஸ்யரால் மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது:— ''ஆதத்த....வர்த்தனம்'' என்று. (இதன் பொருள்:- ஓ

பித்ருக்களே! ஸந்ததியை வ்ருத்தி செய்யும் கர்ப்பத்தை இவளிடம் வைக்கத் கடவீர்கள்.) மனு:— பதிவ்ரதையாயும், பித்ருக்களின் பூஜையில் ச்ரத்தையுள்ளவளாயும் உள்ள தர்மபத்னியானவள் புத்ரனை வேண்டியவளாய் நடுப்பிண்டத்தைப் பக்ஷிக்க வேண்டும். ஆயுஷ்மானுயும், யசஸ், மேதை இவைகளுடன் கூடியவனுயும், தனவானுயும், ப்ரஜையுள்ளவனுயும், தார்மிகனுயும், ஸாத்விகனுயும் உள்ள புத்ரனை அடைவாள். யமன்:— புத்ரனை விரும்பிய பத்னியானவள் மௌனமுள்ளவளாய் நடுப்பிண்டத்தைப் பக்ஷித்தால், பித்ருக்கள் அவளைப் புத்ரனுடன் கூடியவளாய்ச் செய்கின்றனர்.

शङ्खलिखितौ — पत्नी मध्यमपिण्डमश्नीयदार्तवस्नाता इति। अगृहीतगर्भा आर्तवस्नातेत्युच्यते। ततश्च गृहीतगर्भा पत्नी नाश्नीयात्। अत एवैवंविधे विषये मध्यमपिण्डस्य प्रतिपत्त्यन्तरमाह बृहस्पतिः। अन्यदेशगता पत्नी गर्भिणी रोगिणी तथा। तदा तं जीर्णवृषभश्छागो वा भोक्तुमर्हति इति। जीर्णः - गतरेताः। अत एव वायुपुराणे — गतवीर्यश्च यो ह्यश्वोऽनड्वांश्चैव तथाविधः। तयोः पिण्डः प्रदातव्यो यथावीर्यं न रोहति इति।

சங்கலிகிதர்கள்:— "ஆர்த்தவஸ்நாதையான பத்னீ நடுப்பிண்டத்தைப் பக்ஷிக்க வேண்டும்," என்று. கர்ப்பம் தரிக்காதவள் ஆர்த்தவஸ்நாதை எனப்படுகிருள். ஆகையால், கர்ப்பம் தரித்திருந்த பத்னீ சாப்பிடக் கூடாது. ஆகையாலேயே இவ்விதமான விஷயத்தில் நடுப் பிண்டத்திற்கு வேறு விநியோகத்தைச் சொல்லுகிருர், ப்ருஹஸ்பதி:— பத்னீ அந்ய தேசத்தில் இருந்தாலும், கர்ப்பிணியாய் இருந்தாலும், ரோகமுள்ளவளாய் இருந்தாலும், அப்பொழுது நடுப்பிண்டத்தைக் கிழ எருதாவது, ஆடாவது பக்ஷிப்பதற்கு உரியதாகிறது. ஜீர்ண = ரேதஸ்ஸில்லாதது (கிழம்). ஆகையால் தான்,

வாயுபுராணத்தில்:— வீர்யம் எப்படி உற்பத்தி ஆகாமல் இருக்குமோ, வீர்யம் இல்லாத குதிரை, அல்லது அவ்விதமான எருது இவைகளுக்குப் பிண்டத்தைக் கொடுக்கவும்.

प्रतिपत्त्यन्तरमाहापस्तम्बः — यदि पत्नी विदेशस्था ह्युच्छिष्टा यदि वा मृता। दुरात्माऽननुकूला वा तस्य पिण्डस्य का गतिः। आकाशं गमयेत् पिण्डं जलस्थो दक्षिणामुखः। पितॄणां स्थानमाकाशं दक्षिणा दिक् तथैव च इति। यत्तु देवलेनोक्तम्— ततः कर्मणि निर्वृत्ते पिण्डांश्च तदन्तरम्। ब्राह्मणोऽग्निरजो गौर्वा भक्षयेदप्सु वा क्षिपेत् इति, तत् पुत्रार्थित्वाभावविषयम्, तत्सद्भावे मध्यमपिण्डव्यतिरिक्त-पिण्डान्तरविषयं वा। तीर्थश्राद्धे पिण्डानामप्स्वेव प्रक्षेपः। तदुक्तं विष्णुधर्मोत्तरे - तीर्थश्राद्धे सदा पिण्डान् क्षिपेत्तीर्थे समाहितः। दक्षिणाभिमुखो भूत्वा पित्र्या दिक् सा प्रकीर्तिता इति।

ஆபஸ்தம்பர் வேறு விநியோகத்தைச் சொல்லுகிறார்:— பத்னீ வேறு தேசத்தில் இருந்தாலும், அசுத்தையானாலும், இறந்து இருந்தாலும், துஷ்டையாய் இருந்தாலும், ப்ரதிகூலையாய் இருந்தாலும், அந்த மத்யம பிண்டத்திற்கு என்ன வழி? எனில், ஜலத்தில் நின்று, தெற்கு நோக்கியவனாய், ஆகாசத்தில் பிண்டத்தைப் போட வேண்டும். பித்ருக்களுக்கு இருப்பிடம் ஆகாசம்; திசை தெற்கு (ஆகியதால்). ஆனால், தேவலர்:— "பிறகு, ச்ராத்தம் முடிந்த பிறகு பிண்டங்களை ப்ராம்ஹணன், அக்னி, ஆடு, பசு, இவைகளுள் யாராவது பக்ஷிக்கலாம் அல்லது ஜலத்திலாவது பிண்டங்களைப் போடலாம்", என்று சொல்லி உள்ளாரே எனில், அது புத்ரனை விரும்புதல் இல்லாததைப் பற்றியது. புத்ரனை விரும்பினால், நடுப் பிண்டத்தைத் தவிர்த்த மற்ற பிண்டங்களைப் பற்றியதாவது. தீர்த்த ச்ராத்தத்தில் பிண்டங்களை ஜலத்திலேயே போட

வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது, விஷ்ணு தர்மோத்தரத்தில்:— தீர்த்த ச்ராத்தத்தில் எப்பொழுதுமே பிண்டங்களைக் கவனமுடையவனாய் ஜலத்தில் தெற்கு நோக்கியவனாய் போட வேண்டும். அந்தத் திசை பித்ருக்களுடையது எனப்பட்டது.

## उच्छिष्टसंमार्जनादि

अनन्तरमुच्छिष्टदेशं संमार्जयेत्। अत एव याज्ञवल्क्यः — पिण्डांस्तु गोऽजविप्रेभ्यो दद्यादग्नौ जलेऽपि वा। प्रक्षिपेत् सत्सु विप्रेषु द्विजोच्छिष्टं न मार्जयेत् इति। अयमर्थः - सत्सु विप्रेषु - विप्रविसर्जनात् प्रागुच्छिष्टं न मार्जयेत्, किन्तु तेषु विसर्जितेषु पिण्डप्रतिपत्तौ च कृतायां शोधयेदिति।

புஜித்த இடத்தைச் சுத்தி செய்வது முதலியது. பிறகு புஜித்த இடத்தை மெழுக வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— ''பிண்டங்களைப் பசு, ஆடு, ப்ராம்ஹணன், இவர்களுக்காவது கொடுக்க வேண்டும் அல்லது அக்னியிலாவது ஜலத்திலாவது போட வேண்டும். ப்ராம்ஹணர்கள் இருக்கும் பொழுது போஜன ஸ்தானத்தைச் சுத்தி செய்யக் கூடாது'' என்று. இதன் பொருள்:- ப்ராம்ஹணர்கள் இருக்கும் பொழுது = ப்ராம்ஹணர்களை அனுப்புவதற்கு முன் போஜனஸ்தலத்தைச் சுத்தி செய்யக் கூடாது. ஆனால், அவர்களை அனுப்பிய பிறகு, பிண்ட தானமும் செய்யப்பட்ட பிறகு சுத்தி செய்ய வேண்டும், என்று.

यत्तु व्यासेनोक्तम् — उच्छिष्टं न प्रमृज्यात्तु यावन्नास्तमितो रविः इति । यच्च वसिष्ठेनोक्तम् — श्राद्धे नोद्वासनीयानि ह्युच्छिष्टान्यादिनक्षयात् । च्योतन्ते वै स्वधाकारास्तान् पिबन्त्यकृतोदकाः इति, तत् गृहान्तरसद्भावविषयम्। अत एव प्रचेताः — भुक्तवत्सु ततो भुङ्क्ते कव्यशेषं स्वगोत्रजैः। आसायं श्राद्धशालायां द्विजोच्छिष्टं न मार्जयेत् इति। बन्धुभिस्सह पितृसेवित शेषभोजनार्थं

गृहान्तरसद्भावे आसायमुच्छिष्टदेशशोधनं न कार्यम्, गृहान्तराभावे ब्राह्मणेषु विसर्जितेषु पिण्डप्रतिपत्तौ च कृतायां कर्तव्यमित्युक्तं भवति।

ஆனால், வ்யாஸரால்:— ''ஸூர்யன் அஸ்தமயம் ஆகாதவரையில் உச்சிஷ்டத்தைச் சுத்தி செய்யக் கூடாது,'' என்று சொல்லப்பட்டதும், வஸிஷ்டரால்:— ''ச்ராத்த தினத்தில் உச்சிஷ்டங்கள் பகல் முடியும் வரையில் சுத்தம் செய்யப்படக் கூடாது. ஸ்வதாகாரங்கள் பெருகுகின்றன. அவைகளை உதகதானம் செய்யப்படாத பித்ருக்கள் பருகுகின்றனர்'', என்று சொல்லப்பட்டதும் உள்ளதே யெனில், அது வேறு வீடு இருக்கும் விஷயத்தைப் பற்றியது. ஆகையால், ப்ரசேதஸ்:— ''ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு ச்ராத்த அன்னத்தை ஜ்ஞாதிகளுடன் புஜிக்க வேண்டும். ச்ராத்தம் செய்த இடத்தில் ஸாயங்காலம் வரையில் ப்ராம்ஹணர்களின் உச்சிஷ்டத்தைச் சுத்தி செய்யக்கூடாது'', என்று. பந்துக்களுடன் பித்ருசேஷ போஜனத்திற்காக வேறு இடம் இருந்தால், ஸாயங்காலம் வரையில் உச்சிஷ்ட ஸ்தல சுத்தியைச் செய்யக்கூடாது. வேறு இடம் இல்லாவிடில், ப்ராம்ஹணர்களை அனுப்பிய பிறகு, பிண்ட தானமும் செய்யப்பட்ட பிறகு (ஸ்தல சுத்தி) செய்யப்படவேண்டும், என்று சொல்லியதாகிறது.

## पात्रचालनादि

पात्रचालनमात्रं सत्सु विप्रेषु स्वस्तिवाचनात् पूर्वमवश्यं कर्तव्यं, अन्यथा दोषस्मरणात्। तथा च नारायणः - अचालयित्वा तत् पात्रं स्वस्ति कुर्वन्ति ये द्विजाः। निराशाः पितरस्तेषां शप्त्वा यान्ति यथागतम् इति। बृहस्पतिरपि – भाजनेषु च तिष्ठत्सु स्वस्ति कुर्वन्ति ये द्विजाः। तद्दत्तमसुरैर्भुक्तं निराशैः पितृभिर्गतैः इति।

**போஜன பாத்ரத்தை அசைப்பது முதலியது.**
போஜன பாத்ரத்தை அசைப்பதை மட்டில் ப்ராம்ஹணர்கள்

இருக்கும் பொழுது, ஸ்வஸ்திவாசனத்திற்கு முன், அவச்யம் செய்ய வேண்டும். இல்லாவிடில் தோஷம் சொல்லப்பட்டு இருப்பதால். அவ்விதம், நாராயணர்:— போஜன பாத்ரத்தை அசைக்காமல் இருக்கும் பொழுது ஸ்வஸ்திவாசனம் செய்தால், பித்ருக்கள் ஆசையற்றவர்களாய்ச் சபித்து வந்த வழியாகச் செல்லுகின்றனர். ப்ருஹஸ்பதியும்:— போஜன பாத்ரங்கள் இருக்கும் பொழுது ஸ்வஸ்திவாசனம் செய்யப்பட்டால், பித்ருக்கள் ஆசையற்றுச் சென்றதால், அந்த ச்ராத்தம் அஸுரர்களால் புஜிக்கப்படுகிறது.

पात्रचालने विशेषमाह जातुकर्णिः — पात्राणि चालयेत् श्राद्धे स्वयं शिष्योऽथवा सुतः । न स्त्रीभिर्न च बालेन नासजात्या कथञ्चन इति । भुक्तिपात्राणि निखनेत् । भुक्तिपात्रं समुद्धृत्य निखनेत्तु प्रयत्नतः । अलब्धप्रेतकार्येषु तस्य त्यागो विधीयते इति स्मरणात् । प्रयत्नत इति यथा श्वादिस्पर्शाभावस्तथा निखनेदित्यर्थः । श्राद्ध उच्छिष्टपात्राणि गर्ते निक्षिप्य गोपयेत् । मृद्भिराच्छादयेच्छ्वादिर्यथा न स्पृशते तथा इति स्मरणात् ।

போஜன பாத்ரத்தை அசைப்பதில் விசேஷத்தைச் சொல்லுகிறார், ஜாதுகர்ணி:— "ச்ராத்தத்தில் போஜன பாத்ரங்களைத் தானே அசைக்க வேண்டும். சிஷ்யனாவது புத்ரனாவது அசைக்கலாம். ஸ்திரீகளாவது, பாலர்களாவது, ஞாதியில்லாதவனாவது எவ்விதத்திலும் அசைக்கக் கூடாது" என்று போஜன பாத்ரங்களைப் புதைக்க வேண்டும். "போஜன பாத்ரத்தை யெடுத்து ப்ரயத்னத்துடன் பூமியில் புதைக்க வேண்டும். ப்ரேத கார்யம் செய்யப்படாதவர்கள் விஷயத்தில் போஜன பாத்ரத்தை எறிய வேண்டும்," என்று ஸ்ம்ருதி இருப்பதால். ப்ரயத்னத்துடன் என்பதால், எவ்விதம் இருந்தால் நாய் முதலியதின் ஸ்பர்சம் ஏற்படாதோ

அவ்விதம் புதைக்க வேண்டும், என்பது பொருள். ''ச்ராத்தத்தில் போஜன பாத்ரங்களைக் குழியில் வைத்து மறைக்க வேண்டும். மண்களால் மூடவேண்டும். நாய் முதலியது எவ்விதம் இருந்தால் தொடாமல் இருக்குமோ அவ்விதம்,'' என்று ஸ்ம்ருதி உள்ளது.

न शूद्राय श्राद्धशेषं दद्यात्। श्राद्धं दत्वा य उच्छिष्टं वृषलाय प्रयच्छति। पितरस्तस्य (तन्मा)षण्मासं भवन्त्युच्छिष्टभोजिनः इति स्मृतेः। स्मृत्यन्तरेऽपि — भुक्तिपात्रस्थमुच्छिष्टं बालेभ्यो यः प्रयच्छति। भृत्येभ्यो वृषलेभ्यो वा स श्राद्धं हन्त्यसंशयम्। (भुक्तिपात्रस्थमुच्छिष्टं पशुभ्यो यः प्रयच्छति। अजेभ्यो महिषीभ्यो वा स श्राद्धं हन्त्यसंशयम् इति। आश्वलायनः — न शूद्रं भोजयेत्तस्मिन् गृहे यत्नेन तद्दिने। श्राद्धशेषं न शूद्रेभ्यो ददाति च खलेष्वपि इति।

ச்ராத்த சேஷத்தைச் சூத்ரனுக்கு கொடுக்கக் கூடாது. ''ச்ராத்தம் செய்த பிறகு உச்சிஷ்டத்தைச் சூத்ரனுக்கு எவன் கொடுக்கின்றானோ, அவனுடைய பித்ருக்கள் ஆறுமாஸம் வரையில் உச்சிஷ்டத்தைப் புஜிப்பவர்களாய் ஆகின்றனர்'', என்று ஸ்ம்ருதி உள்ளது. மற்றோர் ஸ்ம்ருதியிலும்:— ப்ராம்ஹணர்களின் போஜன பாத்ரத்தில் உள்ள மீதியை எவன் பாலர்களுக்காவது, வேலைக்காரர்களுக்காவது, சூத்ரர்களுக்காவது கொடுக்கின்றானோ, அவன் ச்ராத்தத்தை நாசம் ஆக்குகின்றான். ஸம்சயம் இல்லை. (போஜன பாத்ரத்தில் உள்ள மீதியை எவன் பசுக்களுக்காவது, ஆடுகளுக்காவது, எருமைகளுக்காவது கொடுக்கின்றானோ அவன் ச்ராத்தத்தை நாசம் ஆக்குகிறான். ஆச்வலாயனர்:— ச்ராத்த தினத்தில் அந்த க்ருஹத்தில் சூத்ரனைப் புஜிப்பிக்கவே கூடாது. ச்ராத்த சேஷத்தை, சூத்ரர்களுக்குக் கொடுக்கக் கூடாது. துஷ்டர்களுக்கும் கொடுக்கக் கூடாது.)

## श्राद्धदिने नित्यश्राद्धादिविधिः।

श्राद्धदिने नित्यश्राद्धमधिकृत्य मार्कण्डेयेनोक्तम् — पृथक् पाकेन नेत्यन्ये इति। पृथक् पाकेन नित्यश्राद्धं कार्यम्, नेत्यन्ये - पृथक्पाकेन न कार्यम्। किन्तु श्राद्धशेषेणैव कार्यमित्यन्ये मन्यन्त इत्यर्थः। एतच्च नित्यश्राद्धं श्राद्धान्तरे कृते सत्यनियतम्।

**ச்ராத்த தினத்தில் நித்யச்ராத்தம் முதலியதின் விதி.**

ச்ராத்த தினத்தில் நித்யச்ராத்தத்தைக் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது. மார்க்கண்டேயரால்:— "தனிப் பாகத்தால் நித்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். தனிப்பாகம் வேண்டியது இல்லை என்று சிலர்" என்று. தனிப்பாகத்தால் நித்ய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். தனிப்பாகத்தால் செய்ய வேண்டியது இல்லை. ஆனால், ச்ராத்த சேஷத்தாலேயே செய்ய வேண்டும், என்று சிலர் நினைக்கிறார்கள் என்று பொருள். இந்த நித்ய ச்ராத்தம் வேறு ச்ராத்தம் செய்யப்பட்டிருக்கும் பொழுது நியதமல்ல.

यदाह स एव — नित्यक्रियां पितॄणां च केचिदिच्छन्ति मानवाः। न पितॄणां तथैवान्ये शेषं पूर्ववदाचरेत् इति। पितॄणां नित्यक्रियाम् - नित्यश्राद्धं केचिदिच्छन्ति, अन्ये नेच्छन्ति, शेषं - वैश्वदेवादिकम्, पूर्ववदाचरेत् - नियमेनैव कुर्यादित्यर्थः। अत्र पैठीनसिः — श्राद्धं निर्वर्त्य विधिवद्वैश्वदेवादिकं ततः। कुर्यात् भिक्षां ततो दद्याद्धन्तकारादिकं तथा इति। ततः - पितृपाक-समुद्धृतादन्नादित्यर्थः। आश्वलायनः — दानाध्ययनदेवार्चाजपहोमादिकाः क्रियाः। न कुर्यात् श्राद्धदिवसे प्राग्विप्राणां विसर्जनात्। श्राद्धेऽहि भोजयेद्दास्तौ न बालानपि यत्नतः। प्राक् पिण्डदानाद्गन्धाद्यैर्नालङ्कुर्यात् स्वविग्रहम् इति।

அதைச் சொல்லுகிறார், மார்க்கண்டயரே:— பித்ருக்களுக்கு நித்ய ச்ராத்தத்தையும் சிலர் செய்ய

வேண்டும் என்கின்றனர். சிலர் வேண்டாம் என்கின்றனர். வைச்வதேவம் முதலியதை முன் போல் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில், பைடீனஸி:— ''ச்ராத்தத்தை முடித்து, பிறகு வைச்வதேவம் முதலியதை விதிப்படி செய்ய வேண்டும். பிறகு பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். மனுஷ்ய யஜ்ஞும் முதலியதையும் செய்ய வேண்டும்,'' என்று. இதில் மூலத்திலுள்ள தத: என்ற பதத்திற்கு பித்ருக்களுக்குச் செய்யப்பட்ட பாகத்திலிருந்து எடுக்கப்பட்ட அன்னத்தில் இருந்து, என்பது பொருள். ஆச்வலாயனர்:— தானம், அத்யயனம், தேவபூஜை, ஜபம், ஹோமம் முதலிய கார்யங்களை ச்ராத்த தினத்தில் ச்ராத்த ப்ராம்ஹணர்களை அனுப்புவதற்கு முன் செய்யக் கூடாது. ச்ராத்த தினத்தில் க்ருஹத்தில் வேறு இடத்திலும் பிண்டதானத்திற்கு முன் குழந்தைகளுக்குக் கூட போஜனத்தைக் கொடுக்கவே கூடாது. தனது தேகத்தைச் சந்தனம் முதலியதால் அலங்கரித்துக் கொள்ளக்கூடாது.

यत्तु पैठीनसिवचनम् — पितृपाकात् समुद्धृत्य वैश्वदेवं करोति यः। आसुरं तद्भवेत् श्राद्धं पितॄणां नोपतिष्ठते इति, तच्छ्राद्धस्यादौ पृथक् पाकादेव वैश्वदेवकरणम्, न पितृपाकादित्येवं परम्। अत एव श्राद्धभोजनात् पूर्वं पितृपाकात् वैश्वदेवकरणे दोषोऽभिहितः पुराणे— प्रातिवासरिको होमः श्राद्धादौ क्रियते यदि। देवा हव्यं न गृह्णन्ति कव्यं च पितरस्तथा इति। (आनुशासनिके — यदा श्राद्धं पितृभ्यश्च दातुमिच्छति मानवः। तदा पश्चात् प्रकुर्वीत निर्वृत्ते श्राद्धकर्मणि। ततोऽन्नेनावशिष्टेन भोजयेदतिथीनपि इति।)

ஆனால், பைடீனஸி வசனம்:— ''பித்ருபாகத்தில் இருந்து எடுத்து எவன் வைச்வதேவத்தைச் செய்கிறானோ அவனது ச்ராத்தம் அஸுரர்களைச் சேர்ந்ததாகும். பித்ருக்களைச் சேருவதில்லை,'' என்று உள்ளதே எனில், அது ச்ராத்தத்தின் ஆரம்பத்தில் தனிப் பாகத்தாலேயே

வைச்வதேவம் செய்ய வேண்டும், பித்ரு பாகத்தில் இருந்து செய்யக் கூடாது, என்பதைப் பற்றியது. ஆகையால் தான், ச்ராத்த போஜனத்திற்கு முன் பித்ரு பாகத்தினின்று வைச்வதேவம் செய்வதில் தோஷம் சொல்லப்பட்டு உள்ளது. புராணத்தில்:— வைச்வதேவ ஹோமமானது ச்ராத்தத்திற்கு முன் செய்யப்படுமாகில் தேவர்கள் ஹவிஸ்ஸை க்ரஹிப்பது இல்லை. பித்ருக்களும் கவ்யத்தை க்ரஹிப்பதில்லை, என்று. (ஆனுசாஸநிகத்தில்:— மனிதன் எப்பொழுது பித்ருக்களுக்கு ச்ராத்தத்தைக் கொடுக்க விரும்புகிறானோ, அப்பொழுது ச்ராத்தம் செய்து முடிந்த பிறகு (வைச்வதேவத்தைச்) செய்ய வேண்டும். பிறகு மீதியுள்ள அன்னத்தால் அதிதிகளையும் பூஜிக்க வேண்டும்.)

ब्राह्मणभोजनात् पूर्वं वैश्वदेवकरणं च स्मृत्यन्तरेऽभिहितम्— वैश्वदेवाहुतीरग्नावर्वाक् ब्राह्मणभोजनात्। जुहुयात् भूतयज्ञादि श्राद्धं कृत्वा ततः स्मृतम् इति। एतच्चाहिताग्नि विषयम्। एवं च श्राद्धादौ अग्नौकरणानन्तरं वा पृथक् पाकादेव वैश्वदेवहोमः। निर्वृत्ते तु श्राद्धे पितृपाकादिति चन्द्रिकादौ निर्णीतम्।

ப்ராம்ஹண போஜனத்திற்கு முன்பு வைச்வதேவம் செய்வது என்பது ஓர் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டுள்ளது:— "வைச்வதேவ ஆஹுதிகளை ப்ராம்ஹண போஜனத்திற்கு முன்பு அக்னியில் செய்யவும். பூதயஜ்ஞம் முதலியதை ச்ராத்தம் செய்த பிறகு செய்ய வேண்டும்," என்று. இது ஆஹிதாக்னியைப் பற்றியது. இவ்விதம் இருப்பதால், ச்ராத்தத்தின் முன்பாவது, அக்னௌகரணத்திற்குப் (ச்ராத்த ஹோமம்) பிறகாவது செய்யப்படும் வைச்வதேவம் தனிப் பாகத்திலிருந்தே செய்யப்பட வேண்டும். ச்ராத்தம் முடிந்த பிறகு செய்வதானால் பித்ருசேஷத்தினின்றே செய்ய வேண்டும் என்று சந்த்ரிகை முதலியதில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

यत्तु लोकाक्षिणोक्तम् — पित्रर्थं निर्वपेत् पाकं वैश्वदेवार्थमेव च। वैश्वदेवं न पित्रर्थं न दार्शं वैश्वदैविकम् इति। अस्यार्थः — पैतृकब्राह्मणभोजनार्थं वैश्वदैविकब्राह्मणभोजनार्थं च पृथक् पृथक् पाकं कुर्यात्, दार्शं - अमावास्याश्राद्धार्थं निरुप्तमन्नं कृतेऽपि श्राद्धे न वैश्वदेवहोमार्थं भवतीति। अत्र न दार्शं वैश्वदैविकम् इत्येतदाहिताग्निदर्शश्राद्धविषयम्, तस्य दर्शश्राद्धात् प्रागेव वैश्वदेवविधानेन श्राद्धान्ते श्राद्धशिष्टेन वैश्वदेवायोगात्।

ஆனால் லோகாக்ஷி:— "பித்ருக்களுக்காகப் பாகத்தைச் செய்ய வேண்டும். வைச்வதேவத்திற்காகவும் பாகத்தைச் செய்ய வேண்டும். வைச்வதேவ அன்னம் பித்ருக்களுக்கு ஆகாது. பித்ருக்களுக்காகப் பக்வமான அன்னம் வைச்வதேவார்த்தமாகாது, தர்ச ச்ராத்த அன்னம் வைச்வதேவத்திற்காகாது, என்ற வசனமுள்ளதே யெனில், இதன் பொருள்:— பித்ரு ப்ராம்ஹண போஜனத்திற்காகவும், விச்வேதேவ ஸ்தானத்திலுள்ள ப்ராம்ஹண போஜனத்திற்காகவும் தனித்தனியே பாகத்தைச் செய்ய வேண்டும். தார்சம் = அமாவாஸ்யை ச்ராத்தத்திற்காகச் செய்யப்பட்ட அன்னம், ச்ராத்தம் செய்யப்பட்டிருந்த பிறகும் வைச்வதேவ ஹோமத்திற்காகாது. இவ்விடத்தில் 'ந தார்சம் வைச்வதைவிகம்' என்றது ஆஹிதாக்னியைப் பற்றியது. ஆஹிதாக்னிக்கு தர்ச ச்ராத்தத்திற்கு முடிவில் ச்ராத்த சேஷான்னத்தால் வைச்வதேவம் செய்வது என்பது நேராததால்.

अग्निमतां दर्शश्राद्धात् प्रागेव वैश्वदेवविधिश्च तेनैव दर्शितः - पक्षान्तं कर्म निर्वर्त्य वैश्वदेवं च साग्निकः। पिण्डयज्ञं ततः कुर्यात्ततोऽन्वाहार्यकं बुधः इति। पक्षान्तं कर्म - अग्न्यन्वाधानम्, अन्वाहार्यकं अमावास्याश्राद्धमित्यर्थः। एवं च

साग्निकामावास्याश्राद्धे वैश्वदेवार्थं पृथगेव पाक इति चन्द्रिकायाम्। आदौ तु समकाले वा नैवेद्यं यो निवेदयेत्। तत्कर्ता श्राद्धहन्ता स्यात् तत् श्राद्धमसुरालयम् इति स्मृत्यन्तरम्। अत्र यच्चान्यद्वक्तव्यं तद्वैश्वदेवप्रकरणेऽभिहितम्।

ஆஹிதாக்னிகளுக்கு, தர்ச ச்ராத்தத்திற்கு முன்பே வைச்வதேவ விதியும் லோகாக்ஷியினுலேயே சொல்லப்பட்டுள்ளது:— ''ஆஹிதாக்னி, அன்வாதான கர்மாவை முடித்து, வைச்வதேவத்தையும் முடித்து, பிண்ட பித்ருயஜ்ஞத்தைப் பிறகு செய்யவும். பிறகு அமாவாஸ்யா ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்,'' என்று இவ்விதம் இருப்பதால், ''ஆஹிதாக்னி செய்யும் அமாவாஸ்யா ச்ராத்தத்தில் வைச்வதேவத்திற்காகத் தனியாகவே பாகம்'', என்று சந்த்ரிகையிலுள்ளது. (ச்ராத்தத்தின் ஆதியிலாவது, ஸம காலத்திலாவது, எவன் நைவேத்யத்தை நிவேதனம் செய்கிருனே, அதைச் செய்பவன் ச்ராத்தத்தைக் கெடுத்தவனுவான். அந்த ச்ராத்தம் அஸுரர்களைச் சேர்ந்ததாகும்,'' என்று ஓர் ஸ்ம்ருதியில் உள்ளது.) இவ்விஷயத்தில் சொல்ல வேண்டிய மற்ற விஷயமும் வைச்வதேவ ப்ரகரணத்தில் (ஆஹ்னிக காண்டம்) சொல்லப்பட்டு உள்ளது.

## पितृशेषभोजनम्।

वैश्वदेवार्थं पृथक्पाके कृतेऽपि पितृपाकशेषादेव भोजनम्। प्रदक्षिणमनुव्रज्य भुञ्जीत पितृसेवितम् इति याज्ञवल्क्यस्मरणात्। अभोजने दोषमाह देवलः — श्राद्धं कृत्वा तु यो विप्रो न भुङ्क्तेऽथ कदाचन। देवा हव्यं न गृह्णन्ति कव्यानि पितरस्तथा इति। एतच्च पितृसेवितभोजनं सर्वविधात् पितृसेवितादुपादाय कर्तव्यम्। तथा च मत्स्यः — ततश्च वैश्वदेवान्ते सभृत्यसुतबान्धवः। भुञ्जीतातिथिसंयुक्तस्सर्वं पितृनिषेवितम् इति।

### பித்ரு சேஷ போஜனம்.

வைச்வதேவத்திற்காகத் தனிப்பாகம் செய்தாலும், பித்ருபாகசேஷத்தினின்றே போஜனம் செய்யப்பட வேண்டும். 'ப்ராம்ஹணர்களை ப்ரதக்ஷிணமாய்ப் பின் தொடர்ந்து சென்று பித்ரு சேஷான்னத்தைப் புஜிக்க வேண்டும்', என்று யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியிருப்பதால். போஜனம் செய்யாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார், **தேவலர்:—** ''ச்ராத்தத்தைச் செய்த பிறகு பித்ரு சேஷத்தை எவன் புஜிக்கவில்லையோ அவனது ஹவிஸ்ஸைத் தேவர்கள் க்ரஹிப்பதில்லை. கவ்யங்களைப் பித்ருக்களும் க்ரஹிப்பதில்லை'', என்று. இந்த பித்ரு சேஷான்ன போஜனம் பித்ருசேஷமான எல்லாவற்றினின்றும் எடுத்துச் செய்யப்பட வேண்டும். அவ்விதமே, **மத்ஸ்யர்:—** பிறகு வைச்வதேவம் செய்து, வேலைக்காரர்கள், பிள்ளைகள், பந்துக்கள் இவர்களுடன் கூடியவனாய் அதிதிகளுடன் கூடியவனாய், பித்ருசேஷம் எல்லாவற்றினின்றும் எடுத்துப் புஜிக்க வேண்டும்.

अतिथ्यादीनां शेषभोजने दोष इति चन्द्रिकादौ वचनपुरस्सरं प्रतिपादितम् — पितृशेषं तु यो भुङ्क्ते सोऽन्यो ज्ञाति कुलोद्भवात्। प्रदाय कर्त्रे स्वं पुण्यं पापमादाय गच्छति इति। यथाशिष्टाचारस्तथा कर्तव्यम्। अतिथ्यादीनां वैश्वदेवशिष्टान्नं व्यञ्जनं पितृशेषमेव दातव्यम्। फलशाकव्यञ्जनानि पयो दधि घृतं मधु। पक्वापक्वानि यानि स्युस्तेषां शेषो न विद्यते इति।

அதிதி முதலியவர்கள் பித்ருசேஷ போஜனம் செய்தால் தோஷமுண்டென்று சந்த்ரிகை முதலியதில் வசனத்தை முன்னிட்டு நிர்ணயிக்கப்பட்டுள்ளது:— ''ஞாதிகளைத் தவிர்த்த மற்றவன் பித்ருசேஷத்தைப் புஜித்தால் ச்ராத்த கர்த்தாவுக்குத் தனது புண்யத்தைக் கொடுத்து அவனது பாபத்தைப் பெற்றுச் செல்லுகிறான்,''

என்று. சிஷ்டாசாரம் எப்படியோ அப்படிச் செய்யவும். அதிதி முதலியவர்களுக்கு வைச்வதேவ சிஷ்டாந்நத்தையும், பித்ருசேஷமான வ்யஞ்ஜநத்தையும் கொடுக்க வேண்டும். பழம், கறிகாய், வ்யஞ்ஜனங்கள், பால், தயிர், நெய், தேன், பக்குவங்களாயும், அபக்குவங்களாயும் உள்ள இவைகளில் சேஷதோஷம் இல்லை.

यदाऽपि क्षुन्न विद्यते तदा शेषभोजनस्यावार्यकत्वात् सर्वमेव पितृसेवितं लेशतो भोक्तव्यम् । अत एवाहापस्तम्बः — सर्वतस्समवदायोत्तरेण यजुषा शेषस्य ग्रासवराध्यं प्राश्नीयात् इति । असति तु पितृशेषे पाकान्तरं कृत्वा भोक्तव्यमेव । भुञ्जीतैव कृते श्राद्धे पुत्री नोपवसेत् गृही इति स्मरणात् । अत एवैकादश्यादौ भोजनप्रत्याम्नायः स्मर्यते — उपवासो यदा नित्यः श्राद्धं नैमित्तिकं भवेत् । उपवासं तदा कुर्यादाघ्राय पितृसेवितम् इति । एतदाघ्राणं च कर्तृव्यतिरिक्त-विषयम् ।

எப்பொழுது பசியில்லையோ அப்பொழுதும் பித்ருசேஷ போஜனம் ஆவச்யகம் ஆகையால் பித்ருசேஷம் எல்லாவற்றிலும் கொஞ்சமாவது புஜிக்க வேண்டும். ஆகையால் தான், ஆபஸ்தம்பர்:— பித்ருசேஷம் எல்லாவற்றினின்றும் எடுத்து அடுத்த மந்த்ரத்தால் குறைந்து ஒரு கபளமாவது ப்ராசனம் செய்ய வேண்டும், என்றார். பித்ருசேஷம் இல்லாவிடில் வேறு பாகம் செய்து அவச்யம் சாப்பிட வேண்டும். ''ச்ராத்தம் செய்த பிறகு புத்ரனுள்ள க்ருஹஸ்தன் அவச்யம் போஜனம் செய்ய வேண்டும், உபவாஸம் இருக்கக்கூடாது'', என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஆகையாலேயே, ஏகாதசி முதலியதில் போஜனத்திற்கு ப்ரத்யாம்நாயம் (பதில்) சொல்லப்படுகிறது:— ''எப்பொழுது நித்யமான உபவாஸமும் நைமித்திகமான ச்ராத்தமும் சேருகின்றதோ

அப்பொழுது பித்ருசேஷத்தை ஆக்ராணம் (மோந்து பார்ப்பது) செய்து விட்டு உபவாஸத்தை அனுஷ்டிக்கவும்'', என்று. இவ்விதம் ஆக்ராணம் செய்வது என்பது ச்ராத்த கர்த்தாவைத் தவிர்த்தவரைப் பற்றியது.

तथा च ब्रह्माण्डपुराणे — कर्तृभ्योऽन्यैर्न भोक्तव्यं श्राद्धे प्राप्ते हरेर्दिने। पितृशेषं तमाघ्राय ह्युपवासफलाप्तये इति। कर्ता नोपवसेत्श्राद्धे पित्र्येऽप्येकादशीदिने। तयोरप्यधिकं ब्रूयुः पितृशेषं महर्षयः इति च। एकादशीव्यतिरिक्तदिने ज्ञातिभिरप्यवश्यं पितृशेषं भोक्तव्यमित्याह देवलः। पितृशेषं न यो भुङ्क्ते को वा ज्ञातिकुलोद्भवः। पितृद्रोही स विज्ञेयः पुत्रपौत्रैर्विना कृतः। अकिञ्चनोऽपि कर्ता स्यात् स्वान्नमादाय तद्गृहे। भोक्तव्यमेव सत्पुंभिः पुत्रपौत्राभिवृद्धये। पितृशेषं तु यो भुङ्क्ते कर्ता तु ज्ञातिभिर्विना। यमस्य शमलं भुङ्क्ते दाता प्राशयते पितॄन् इति।

ப்ரம்ஹாண்டபுராணத்தில்:— ''ச்ராத்த தினத்தில் ஹரிதினம் (ஏகாதசி) நேர்ந்தால் ச்ராத்த கர்த்தாவைத் தவிர்த்த மற்றவர்கள் ச்ராத்த சேஷத்தைப் புஜிக்கக்கூடாது. அதை ஆக்ராணம் செய்யலாம். உபவாஸபலன் ஸித்திப்பதற்காக'', என்று. ''ச்ராத்த கர்த்தா ச்ராத்த தினத்தில் ஏகாதசி நேர்ந்தால் உபவாஸம் செய்யக்கூடாது. மாதா பிதாக்களின் ச்ராத்த சேஷ போஜனம் அதை விட அதிகம் என்கின்றனர் மஹர்ஷிகள்'', என்றும். ஏகாதசி அல்லாத தினத்தில் ஞாதிகளும் அவச்யம் ச்ராத்த சேஷ போஜனம் செய்ய வேண்டும் என்கிறார், தேவலர்:— ஞாதி குலத்தில் பிறந்த எவனொருவன். பித்ரு சேஷத்தைப் புஜிப்பதில்லையோ அவன் பித்ரு த்ரோஹீ என்று அறியப்பட வேண்டும். அவன் புத்ரர் பௌத்ரர்கள் இல்லாதவனாவான். ச்ராத்த கர்த்தா தரித்ரனாய் இருந்தால், அவனுடைய ஞாதிகள் தங்கள் அன்னத்தை எடுத்துக் கொண்டு ச்ராத்த கர்த்தாவின் வீட்டில் புஜிக்க வேண்டும், புத்ரர்கள் பௌத்ரர்கள் வ்ருத்தியாவதற்காக. ச்ராத்தம்

एवमादिनिमित्ते भावयेद्वेति योजयेत् इति । हावयेद्वेति यद्गोभिलादिभिरुक्तं तदेवमादिनिमित्तेषु योजयेदित्यर्थः । (परेद्यवि च तत्प्रीत्यै ब्राह्मणान् भोजयेत् द्विजः । अनपेक्ष्य स्थितस्यैव शापं दत्वा व्रजन्ति ते इति स्मृत्यन्तरम् ।)

ஆகையால், பவிஷ்யத்புராணம்:— ச்ராத்தம் புஜித்த ப்ராம்ஹணன் பத்துத் தடவை காயத்ரியினால் ஜலத்தைப் பானம் செய்ய வேண்டும். பிறகு ஸந்த்யோபாஸனம், ஜபம், ஹோமம், இவைகளைச் செய்யலாம் என்று. ஹோமம் செய்யலாமென்றது, ஹோமம் செய்ய மற்றொருவன் கிடைக்காவிடில், என்றறியவும். வேறொருவன் கிடைத்தால் அவனாலேயே ஹோமத்தைச் செய்விக்க வேண்டும். காத்யாயனர்:— ஆசௌசம், யாத்ரை, அசக்தி, ச்ராத்த போஜனம், இதுபோன்ற நிமித்தங்களில் ஹோமம் செய்விக்கவும் என்பதைச் சேர்க்கவும் என்றார். ஹோமம் செய்விக்கலாம் என்று கோபிலர் முதலியவர்களால் சொல்லப்பட்டதை இது போன்ற நிமித்தங்களில் சேர்க்க வேண்டும், என்பது பொருள். (மறுநாளிலும் பித்ருக்களின் ப்ரீதிக்காக ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். அவ்விதம் செய்யாமல் இருப்பவனுக்குப் பித்ருக்கள் சாபத்தைக் கொடுத்துச் செல்லுகின்றனர்,'' என்று ஓர் ஸ்ம்ருதி சொல்லுகிறது.)

## यथाशक्ति श्राद्धानुष्ठानम् ।

यथाशक्ति श्राद्धानुष्ठानमाह शातातपः — यथा कथञ्चिन्नित्यं यत्कुर्यादिन्दुक्षयादिषु । पात्रद्रव्यादिसंपत्सु संत्सु काम्यफलं लभेत् इति । अमावास्यादिषु चोदितं श्राद्धं पात्रद्रव्यादि संपत्त्यभावेऽपि यथाशक्ति कुर्यादिति पूर्वार्धस्यार्थः ।

சக்திக்கு இயன்றபடி ச்ராத்தத்தை அனுஷ்டிப்பது.

சக்திக்கு இயன்றபடி ச்ராத்தானுஷ்டானத்தைச்

சொல்லுகிறார், சாதாதபர்:— ''அமாவாஸ்யை முதலிய காலங்களில் யோக்யனான ப்ராம்ஹணன், த்ரவ்யங்கள் முதலியவைகள் கிடைத்தால் நித்யமான ச்ராத்தத்தை யதாசக்தி செய்ய வேண்டும். செய்தால் கோரிய பலனை யடைவான்'', என்று அமாவாஸ்யை முதலிய காலங்களில் விதிக்கப்பட்ட ச்ராத்தத்தை ப்ராம்ஹணர்கள், த்ரவ்யம் முதலியவை கிடைக்காவிடினும், சக்திக்கு இயன்றபடி செய்ய வேண்டும், என்பது ச்லோகத்தின் முதல் பாதிக்குப் பொருள்.

देवलः — पात्राभावे परं कृत्वा पितृयज्ञविधिं नरः । निर्दिश्याप्यन्नमुद्धृत्य यत्र पात्रं ततो गतिः । पात्राभावे क्षिपेदग्नौ गवे दद्यादथाप्सु वा । न तु प्राप्तस्य लोपोऽस्ति पैतृकस्य विशेषतः इति । अस्यार्थः - पात्राभावे - अनुकल्पतयाप्युक्तपात्रस्यालाभे, पितृयज्ञविधिम् - अग्नौकरणं कृत्वा अन्नं भाजने उद्धृतमन्नं त्यक्त्वा, अदूरे विप्रोऽस्ति चेत्तत्रनीत्वा तस्मै तदन्नं समर्पयेत्, दूरस्थे तु पात्रे निर्दिष्टमन्नमग्नौ क्षिपेत्, अथवा गवे भक्षणार्थं प्रयच्छेत्, नद्याद्युदके वा क्षिपेत्, न तु पात्राभावमात्रेण कर्मणो लोपः कार्यः इति ।

தேவலர்:— ''ப்ராம்ஹணன் கிடைக்காவிடில், மற்ற பித்ரு யஜ்ஞ விதியைச் செய்து, அன்னத்தை யெடுத்து, தானம் செய்து, எந்த இடத்தில் ப்ராம்ஹணனிருக்கின்றானோ அங்குச் சேர்க்கவும். ப்ராம்ஹணன் கிடைக்காவிடில், அக்னியில் ஹோமம் செய்யவும் அல்லது பசுவுக்குக் கொடுக்கவும் அல்லது ஜலத்தில் போடவும், ப்ராப்தமான ச்ராத்தத்திற்கு லோபம் என்பது இல்லை'', என்று இதன் பொருள்:— ப்ராம்ஹணன் கிடைக்காவிடில் = அனுகல்பமாகச் சொல்லப்பட்ட ப்ராம்ஹணனும் கிடைக்காவிடில், பித்ரு யஜ்ஞவிதியை = அக்னியின் ஹோமத்தைச் செய்து, அன்னத்தைப் பாத்ரத்தில் எடுத்து, தானம் செய்து = நான்காவது

வேற்றுமையுடைய (விச்வேப்யோதேவேப்ய:, பித்ராதிப்ய:) நாமத்தினுல் சொல்லி, தேவர்களையும் பித்ருக்களையும் உத்தேசித்து எடுக்கப்பட்ட அன்னத்தைத் தானம் செய்து, ப்ராம்ஹணன் ஸமீபத்தில் இருந்தால் அவ்விடத்தில் சேர்த்து, அந்த ப்ராம்ஹணனுக்கு அந்த அன்னத்தைக் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹணன் தொலைவில் இருந்தால், பாத்ரத்தில் வைக்கப்பட்ட அன்னத்தை அக்னியில் போடவும் அல்லது மாட்டுக்குத் தின்பதற்குக் கொடுக்கவும். நதி முதலிய ஜலத்திலாவது போட வேண்டும். ப்ராம்ஹணன் கிடைக்கவில்லை என்ற காரணத்தினுல் மட்டும் ச்ராத்த கர்மத்துக்கு லோபம் செய்யக் கூடாது, என்று.

## सङ्कल्प श्राद्धविधिः

विस्तृत पार्वणानुष्ठानासम्भवे तु व्यासेनोक्तम् — त्यक्ताग्नेः पार्वणं नैव नैकोद्दिष्टं सपिण्डनम्। अत्यक्ताग्नेस्तु पिण्डोक्तिस्तस्मात् सङ्कल्प्य भोजयेत् इति । त्यक्ताग्नेः - अविधानेनोत्सृष्टाग्नेः पार्वणैकोद्दिष्टसपिण्डीकरणात्मकश्राद्धकर्मणि नैवाधिकारः, पिण्डोक्तिः - श्राद्धं कर्तव्यमित्युक्तिः, अत्यक्ताग्नेरेव श्राद्धाधिकार इति यावत्, तस्मादत्यक्ताग्निरेवाशक्तौ सङ्कल्पविधानेन श्राद्धं कुर्यादित्यर्थः। तत्स्वरूपमधस्तात् प्रतिपादितम्।

### ஸங்கல்ப ச்ராத்தத்தின் விதி.

விஸ்தாரமாய்ப் பார்வண ச்ராத்தத்தைச் செய்ய முடியாவிடில், வ்யாஸர் சொல்வது:— "அக்னியை த்யாகம் செய்தவனுக்குப் பார்வணம் என்பது இல்லை. அக்னியை விடாதவனுக்கே பிண்டங்களைக் கொடுக்கலாமென்ற வசனம். ஆகையால், அக்னியை விட்டவன் ஸங்கல்ப ச்ராத்தத்தைச் செய்யவும்," என்று. அக்னியை த்யாகம் செய்தவன் = விதியில்லாமல் அக்னிகளை விட்டவனுக்கும் பார்வணம்,

ஏகோத்திஷ்டம், ஸபிண்டீகரணம் என்ற ச்ராத்தங்களைச் செய்வதில் அதிகாரம் இல்லை. பிண்டங்களைக் கொடுக்கலாம், ச்ராத்தம் செய்யலாம் என்றது அக்னி த்யாகம் செய்யாதவனுக்கே ச்ராத்தத்தில் அதிகாரம் என்பது பொருள். ஆகையால், அக்னியை விடாதவனே அசக்தி விஷயத்தில் ஸங்கல்ப விதானமாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும், என்பது பொருள். ஸங்கல்ப ச்ராத்த ஸ்வரூபம் கீழே சொல்லப்பட்டது.

## आमश्राद्धविधिः

पक्वद्रव्यसम्पादनासम्भवे तु सुमन्तुः — पाकाभावेऽधिकारस्स्या-द्विप्रादीनां नराधिप। अपत्नीनां महाबाहो विदेशगमनादिभिः। सदा चैव तु शूद्राणामामश्राद्धं विदुर्बुधाः। आत्मनो देशकालाभ्यां विप्लवे समुपागते। आपद्यनग्नौ तीर्थे च प्रवासे पुत्रजन्मनि। चन्द्रसूर्यग्रहे चैव दद्यादामं विशेषतः इति। विप्रादीनां त्रैवर्णिकानां पत्नीरहितानां विदेशगमनादिभिश्च कारणैः पाकसम्पादनासम्भवे आमश्राद्धेऽधिकारस्स्यात्, चन्द्रसूर्यग्रहे अपि यस्य पाकासम्भवः, भोक्तृब्राह्मणस्य वा अलाभः स आमं दद्यादित्यर्थः।

ஆமச்ராத்தத்தின் விதி. பக்வமான வஸ்துக்களை ஸம்பாதிக்க முடியாவிடில், ஸுமந்து:— "பத்னியில்லாவிடினும், தூரதேசம் சென்று இருப்பது முதலியதாலும் பாகம் ஸம்பவிக்காவிடில், ப்ராம்ஹணர் முதலியவர்க்கு ஆமச்ராத்தத்தில் அதிகாரம். சூத்ரர்களுக்கு எப்பொழுதுமே ஆமச்ராத்தத்தில் அதிகாரம். ஆபத்திலும், அக்னியில்லாவிடினும், தீர்த்தத்திலும், யாத்ரையிலும், புத்ர ஜனனத்திலும், சந்த்ர ஸூர்ய க்ரஹணத்திலும், ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்," என்றார். பத்னி இல்லாத ப்ராம்ஹணர் முதலிய மூன்று வர்ணத்தாருக்கும்,

யாத்ரை முதலிய காரணங்களால் பாகத்தை ஸம்பாதிக்க முடியாவிடில் ஆம ச்ராத்தத்தில் அதிகாரம் உண்டாகும். சந்த்ர ஸூர்ய க்ரஹணத்திலும் எவனுக்குப் பாகம் முடியவில்லையோ, புஜிக்கும் ப்ராம்ஹணனாவது கிடைக்கவில்லையோ அவன் ஆமத்தைக் கொடுக்க வேண்டும், என்பது பொருள்.

उशना — अपत्नीकः प्रवासी च यस्य भार्या रजस्वला। सिद्धान्नेन न कुर्वीत ह्यामं तस्य विधीयते इति। सिद्धान्नेन - लब्धक्रीतादिपक्वान्नेन न कुर्वीतेति चन्द्रिकायां व्याख्यातम्। जमदग्निः — न भवेद्यस्य सामग्री दारा वा गृहमेव च। आमश्राद्धं प्रकुर्वीत वृद्धो बालश्च यो भवेत्। यावत् स्यान्नाग्निसंयुक्त उत्सन्नाग्निरथापि वा। आमश्राद्धं तदा कुर्याद्धस्तेऽग्नौकरणं भवेत् सति।

உசனஸ்:— "பத்னியில்லாதவனும், யாத்ரிகனும், ரஜஸ்வலாபதியும் பக்வான்னத்தால் செய்யக் கூடாது. அவனுக்கு ஆமச்ராத்தம் விதிக்கப்படுகிறது", என்று. ஸித்தான்னத்தால் = கிடைத்ததாவது, விலைகொடுத்து வாங்கியதாவது ஆகிய பக்வ அன்னத்தால் செய்யக்கூடாது, என்று சந்த்ரிகையில் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. ஜமதக்னி:— எவனுக்கு ஸாதனங்களில்லையோ, பத்னியோ, க்ருஹமோ இல்லையோ அவனும், வ்ருத்தனும், பாலனும், ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். எது வரையில் அக்னி இல்லாதவனாய் இருக்கின்றானோ அல்லது அக்னியை விட்டவனாய் இருக்கின்றானோ அதுவரையில் ஆமச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். அக்னி ஹோமத்தை ப்ராம்ஹணனின் கையில் செய்யவும்.

हारीतः — श्राद्धविघ्ने द्विजातीनामामश्राद्धं प्रकीर्तितम्। अमावास्यादि नियतं माससंवत्सरादृते इति। अनेन मासिकं सांवत्सरिकं च श्राद्धमवश्यं पक्वेन कार्यमित्युक्तं भवति। एतच्च

प्रतिपादितमधस्तात्। यत्तु जमदग्निनोक्तम् — आब्दिकं श्रद्धया श्राद्धं श्राद्धकाले यथाविधि। शृतेन वाऽशृतेनापि नूनं कुर्यात् सुतः पितुः इति, तत् श्राद्धया अवश्यं कार्यमित्येवंपरम्। अन्यथा - माससंवत्सरादृते, न तत् कुर्यान्मृतेऽहनि, आपद्यपि च नामेन, तन्मासि हरिवासरे। कृष्ण इन्दुक्षये वाऽपि कुर्यादन्नेन वार्षिकम् इत्यादि बहुस्मृति विरोध प्रसङ्गः।

ஹாரீதர்:— "த்விஜர்களுக்கு ச்ராத்த விக்னம் ஏற்பட்டால் ஆமச்ராத்தம் சொல்லப்பட்டுள்ளது. அது அமாவாஸ்யை முதலிய ச்ராத்த விஷயம். மாஸிகம், ப்ரத்யாப்திகம் இவைகளைத் தவிர்த்து", என்று இதனால், மாஸிக ச்ராத்தமும், ப்ரத்யாப்திக ச்ராத்தமும் அவச்யம் பக்வான்னத்தாலேயே செய்யப்பட வேண்டும், என்று சொல்லியதாய் ஆகிறது. இது கீழேயே சொல்லப்பட்டுள்ளது. ஆனால், ஜமத்கனி:— "புத்ரன் பிதாவுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை ச்ராத்த காலத்தில் விதிப்படி பக்வத்தினாலாவது, ஆமத்தினாலாவது அவச்யம் செய்ய வேண்டும்", என்று சொல்லி உள்ளாரே எனில், அது ச்ரத்தையுடன் அவச்யம் செய்ய வேண்டும் என்பதில் தாத்பர்யம் உள்ளது. இல்லாவிடில், "மாஸிகம் ப்ரத்யாப்திகம் தவிர்த்து", "ப்ரத்யாப்திகத்தில் ஆமச்ராத்தத்தைச் செய்யக் கூடாது", "ஆபத் காலத்திலும் ஆமத்தினால் செய்யக் கூடாது' அந்த மாஸத்தில் க்ருஷ்ண ஏகாதசியில் அல்லது அமையில் ப்ரத்யாப்திகத்தை அன்னத்தால் செய்ய வேண்டும்", என்பது முதலிய அநேக ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் நேரிடக்கூடும்.

आमश्राद्धे विशेषमाह व्यासः — चतुर्थस्यैव पाथेयं सपिण्डीकरणात् परम्। आमेनैव तु कर्तव्यं पुनः श्राद्धं न सोऽर्हति। आमं ददत्तु कौन्तेय दद्यादन्नाच्चतुर्गुणम्। सिद्धान्ने तु विधिर्यस्स्यादामश्राद्धेऽप्यसौ विधिः। आवाहनादि सर्वं स्यात् पिण्डदानं च भारत। दद्याच्च द्विजातिभ्यश्शृतं वाऽशृतमेव वा।

तेनाग्नौकरणं कुर्यात् पिण्डांस्तेनैव निर्वपेत् । आमश्राद्धं यदा कुर्यात् विधिज्ञः श्राद्धदस्तदा । हस्तेऽग्नौकरणं कुर्यात् ब्राह्मणस्य विधानतः इति । षट्त्रिंशन्मते तु — आमश्राद्धं यदा कुर्यात् पिण्डदानं कथं भवेत् । गृहपाकात् समुद्धृत्य सक्तुभिः पायसेन वा इति ।

ஆமச்ராத்தத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:— ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு நான்காமவனுக்கே பாதேய ச்ராத்தத்தை ஆமத்தினாலேயே செய்ய வேண்டும். அவன் மறுபடியும் ச்ராத்தத்திற்கு உரியவனாகான். ஆமத்தைக் கொடுத்தால் அன்னத்தை விட நான்கு மடங்கு அதிகமாகக் கொடுக்க வேண்டும்; பக்வான்ன ச்ராத்தத்தில் எது விதியோ அதே விதி ஆமச்ராத்தத்திலும், ஆவாஹனம் முதலியது எல்லாம் உண்டு. பிண்டதானமும் உண்டு. ப்ராம்ஹணர்களுக்குப் பக்வம் அல்லது அபக்வம் எதைக் கொடுக்கிறானோ அதனாலேயே அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். அதனாலேயே பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். விதியை யறிந்த ப்ராம்ஹணன் ஆமச்ராத்தத்தை எப்பொழுது செய்கின்றானோ அப்பொழுது ப்ராம்ஹணனின் கையில் விதிப்படி ஹோமத்தைச் செய்ய வேண்டும். ஷட்த்ரிசன்மதத்திலோவெனில்:— ஆமச்ராத்தத்தை எப்பொழுது செய்கின்றானோ அப்பொழுது பிண்டதானத்தை எப்படிச் செய்வது ? க்ருஹத்திலுள்ள அன்னத்திலிருந்து எடுத்து ஹோமம் செய்யவும் அல்லது மா, பாயஸம் இவைகளாலாவது.

हिरण्यश्राद्धादिविधिः - आमश्राद्धासंभवे तु हेमश्राद्धमाह व्यासः — द्रव्याभावे द्विजाभावे प्रवासे पुत्रजन्मनि । हेमश्राद्धं प्रकुर्वीत यस्य भार्या रजस्वला इति । अत्राप्यामश्राद्धोक्ता विशेषा यथासम्भवमनुसन्धेयाः ।

ஹிரண்ய ச்ராத்தம் முதலியதின் விதி. ஆமச்ராத்தம் செய்ய முடியாவிடில் ஹிரண்ய ச்ராத்தத்தைச் சொல்லுகின்றார். வ்யாஸர்:— ''த்ரவ்யம் இல்லாவிடினும், ப்ராம்ஹணர்கள் கிடைக்காவிடினும், யாத்ரையிலும், புத்ர ஜனனத்திலும், பார்யை ரஜஸ்வலையாய் இருந்தாலும் ஹிரண்ய ச்ராத்தத்தைச் செய்யவும்'' என்று. இந்த ஹிரண்ய ச்ராத்தத்திலும் ஆமச்ராத்தத்தில் சொல்லப்பட்ட விசேஷங்கள் கூடியமட்டில் அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

हेमद्रव्यालाभेऽप्युक्तं स्मृत्यन्तरे — तृणानि वा गवे दद्यात् पिण्डान् वाऽथापि निर्वपेत् । तिलोदकैः पितॄन् वाऽपि तर्पयेत् स्नानपूर्वकम् । अग्निना वा दहेत् कक्षं श्राद्धकाले समागते । तस्मिंश्चोपवसेदह्नि जपेद्वा श्राद्धसंहिताम् । अङ्गानि पितृयज्ञस्य यदा कर्तुं न शक्नुयात् । स तदा वाचयेद्विप्रान् सकला सिद्धिरस्त्विति इति । एवमनुकल्पानुष्ठानेऽपि शाठ्याभावे सति मुख्यकल्पानुष्ठानं भवति । श्राद्धानुकल्पं यः कुर्याज्ज्ञात्यवस्थाद्यपेक्षया । श्राद्धाङ्गांशेऽप्यवाप्नोति मुख्यश्राद्धफलं नरः इति स्मरणात् । श्राद्धाङ्गांशे - यथाशक्ति कतिपयाङ्गानुष्ठानेऽपि कृत इत्यर्थः ।

ஹிரண்யமும் கிடைக்காவிடில், சொல்லப்பட்டுள்ளது, ஓர் ஸ்ம்ருதியில்:— ''பசுவின் பொருட்டுப் புல்லையாவது கொடுக்கவும் அல்லது பிண்டங்களையாவது கொடுக்கவும். ஸ்நானம் செய்து எள்ளுடன் கூடிய ஜலங்களால் பித்ருக்களுக்குத் தர்ப்பணமாவது செய்யவும். நெருப்பினால், காய்ந்த புதரையாவது தஹிக்கவும். ச்ராத்தம் வந்தால், அந்தத் தினத்தில் உபவாஸம் இருக்கவும். ச்ராத்த மந்த்ரங்களையாவது ஜபிக்கவும். ச்ராத்தத்தின் அங்கங்களைச் செய்வதற்கு எப்பொழுது முடியவில்லையோ அப்பொழுது ப்ராம்ஹணர்களை ச்ராத்த ஸித்தி உண்டாகட்டும், என்று சொல்லும்படி செய்யவும்,'' என்று இவ்விதம் செய்தால்,

அனுகல்பத்தையும் அனுஷ்டிக்க முடியாவிடில், முக்ய கல்பத்தை அனுஷ்டித்த பலன் உண்டாகின்றது. ''ச்ராத்தத்தின் அனுகல்பத்தை எவன் ஜாதி, அவஸ்தை முதலியதை அபேக்ஷித்துச் செய்கின்றானோ அவன் ச்ராத்தத்தின் சில பாகத்தை அனுஷ்டித்தாலும், முக்ய கல்பத்தை யனுஷ்டித்த பலனை யடைகிறான்'' என்று ஸ்ம்ருதி யிருப்பதால்.

## श्राद्धप्रशंसा

— श्राद्धं प्रशंसति सुमन्तुः — श्राद्धात् परतरं नान्यत् श्रेयस्करमुदाहृतम्। तस्मात् सर्वप्रयत्नेन श्राद्धं कुर्या द्विचक्षणः इति। देवलः — अरोगः प्रकृतिस्थश्च चिरायुः पुत्रपौत्रवान् । अर्थवानर्थकामश्च श्राद्धकामो भवेदिह। परत्र च परां तुष्टिं लोकांश्च विविधान् शुभान्। श्राद्धकृत् समवाप्नोति यशश्च विपुलं नरः इति। यमोऽपि — ये यजन्ति पितॄन् देवान् ब्राह्मणान् सहुताशनान्। सर्वभूतान्तरात्मानं विष्णुमेव यजन्ति ते। आयुः पुत्रान् यशः स्वर्गं कीर्तिं पुष्टिं बलं श्रियम्। पशून् सुखं धनं धान्यं प्राप्नुयात् पितृपूजनात् इति।

## ச்ராத்தத்தின் ப்ரசம்ஸை

ச்ராத்தத்தைப் புகழ்கிறார் ஸுமந்து:— ச்ராத்தத்தை விட நன்மையைச் செய்யும் கர்மம் வேறொன்றில்லை. ஆகையால், எவ்வித முயற்சி செய்தாவது அறிந்தவன் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். தேவலர்:— ரோகமற்றவனாயும், இயற்கையில் இருப்பவனாயும், தீர்க்க ஆயுஸ்ஸாயும், புத்ர பௌத்ரர்களை உடையவனாயும், செல்வத்தை விரும்பினால் செல்வம் உடையவனாயும் ஆவான், ச்ராத்தத்தைச் செய்பவன். ச்ராத்தத்தைச் செய்யும் மனிதன் பரலோகத்தில் அதிக ஸந்தோஷத்தையும், பல விதமான சிறந்த உலகங்களையும், அதிகமான யசஸ்ஸையும்

அடைவான். யமனும்:— எவர்கள் பித்ருக்களையும், தேவர்களையும், அக்னியுள்ள ப்ராம்ஹணர்களையும், பூஜிக்கின்றனர்களோ அவர்கள் ஸர்வ ப்ராணிகளுக்கும் அந்தர்யாமியாயுள்ள விஷ்ணுவையே பூஜிக்கின்றனர். பித்ருக்களைப் பூஜிப்பதால் ஆயுஸ், புத்ரர்கள், யசஸ், ஸ்வர்க்கம், கீர்த்தி, தேஹபுஷ்டி, பலம், பாக்யம், பசுக்கள், ஸுகம், தனம், தான்யம் இவைகளை யடைவான்.

बृहस्पतिः — य एवं वेत्ति मतिमांस्तस्य श्राद्धफलं भवेत्। उपदेष्टाऽनुमन्ता च लोके तुल्यफलौ स्मृतौ इति। हारीतोऽपि — इमं श्राद्धविधिं पुण्यं कुर्याद्वापि पठेत् तु यः। सर्वकामैस्समृध्नोति ह्यमृतत्वं च गच्छति इति।

ப்ருஹஸ்பதி:— புத்திமானாகிய எவன் இவ்விதம் அறிகின்றானோ அவன் ச்ராத்தம் அனுஷ்டித்த பலனை அடைவான். உபதேசிப்பவன், அனுமதிப்பவன் உலகில் ஸமான பலனுடையவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். ஹாரீதரும்:— எவன் புண்யமாகிய இந்த ச்ராத்த விதியைச் செய்வானோ அல்லது படிப்பானோ அவன் ஸகல காமங்களையும் அடைவான், மோக்ஷத்தையும் அடைவான்.

अकरणेऽपि दोषस्तेनैव दर्शितः — न तत्र वीरा जायन्ते नारोगा न शतायुषः। न च श्रेयोऽधिगच्छन्ति यत्र श्राद्धं विवर्जितम् इति। आदित्यपुराणेऽपि — न सन्ति पितरश्चेति कृत्वा मनसि यो नरः। श्राद्धं न कुरुते तत्र तस्य रक्तं पिबन्ति ते इति।

ச்ராத்தத்தைச் செய்யாவிடில் தோஷமும் ஹாரீதராலேயே சொல்லப்பட்டுள்ளது:— எந்த இடத்தில் ச்ராத்தம் விடப்பட்டுள்ளதோ, அவ்விடத்தில் புத்ரர்கள் பிறப்பதில்லை. மனிதர்கள் ரோகமில்லாமல் இருப்பது இல்லை. தீர்க்காயுஸ்ஸாக இருப்பது இல்லை. நன்மையை அடைவது இல்லை. ஆதித்ய புராணத்திலும்:— எந்த மனிதன் பித்ருக்கள் இல்லை, என்று மனதில் எண்ணி

ச்ராத்தத்தைச் செய்வதில்லையோ அவனுடைய ரக்தத்தை அவனது பித்ருக்கள் குடிக்கின்றனர்.

मार्कण्डेयः — अन्यायोपार्जितद्रव्यैर्यत् श्राद्धं क्रियते नरैः । तृप्यन्ति तेन च चण्डालाः पुल्कसाद्याश्च योनयः इति । ननु, प्रातिस्विकशुभाशुभकर्मवशेन स्वर्गनरकादिगतानां दूरस्थकव्य-भोक्तृत्व सामर्थ्यरहितानां मनुष्याणां पुत्रादिभिर्दत्तैरन्नपानादि-भिस्तृप्त्यसंभवात् सम्भवेऽपि स्वयमात्मनामप्यनीशानाः कथं स्वर्गादिफलं प्रयच्छन्ति ।

மார்க்கண்டேயர்:— மனிதர்கள் அந்யாய மார்க்கத்தால் ஸம்பாதிக்கப்பட்ட த்ரவ்யங்களால் எந்த ச்ராத்தத்தைச் செய்கின்றனரோ அந்த ச்ராத்தத்தினுல் சண்டாளர்களும், புல்கஸர் முதலியவர்களும் த்ருப்தி அடைகின்றனர் (பித்ருக்கள் த்ருப்தி யடைவதில்லை.) அவரவர்களுடைய புண்ய பாப கர்மவசத்தால் ஸ்வர்க்கம் நரகம் முதலியதை யடைந்துள்ளவரும், தூரத்தில் உள்ள ச்ராத்தான்னத்தைப் புஜிக்க ஸாமர்த்யம் அற்றவர்களுமாகிய மனிதர்களுக்குப் புத்ரன் முதலியவர்களால் கொடுக்கப்பட்ட அன்னபானம் முதலியவைகளால் த்ருப்தி உண்டாகா தென்பதாலும் த்ருப்தி உண்டானுலும் தாங்கள் தன் விஷயத்தில் கூட, சக்தியற்ற அவர்கள் ஸ்வர்க்கம் முதலிய பலனை எப்படிக் கொடுப்பார்கள் எனில்

तत्राह याज्ञवल्क्यः — वसुरुद्रादितिसुताः पितरः श्राद्धदेवताः । प्रीणयन्ति मनुष्याणां पितॄन् श्राद्धेन तर्पिताः । आयुः प्रज्ञां धनं विद्यां स्वर्गं मोक्षं सुखानि च । प्रयच्छन्ति तथा राज्यं प्रीता नृणां पितामहाः इति ।

அவ்விஷயத்தில் சொல்லுகிருர், யாஜ்ஞவல்க்யர்:— வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் என்றவர்கள் ச்ராத்த தேவதைகளான பித்ருக்களாவர். அவர்கள் ச்ராத்தத்தினுல்

த்ருப்தி செய்யப்பட்டவராய் மனுஷ்யர்களின் பித்ருக்களை த்ருப்தி செய்விக்கின்றனர். மனிதர்களின் பித்ருக்கள் த்ருப்தர்களாய் ஆயுஸ், ப்ரஜ்ஞை, தனம், வித்யை, ஸ்வர்க்கம், மோக்ஷம், ஸுகங்கள், ராஜ்யம் இவைகளைக் கொடுக்கின்றனர்.

अत्र विज्ञानेश्वरः — न ह्यत्र देवदत्तादय एव श्राद्धकर्मणि सम्प्रदानभूताः पित्रादिशब्दैरुच्यन्ते । किन्त्वधिष्ठातृवस्वादि देवतासहिता एव। यथा देवदत्तादि शब्दैर्न शरीरमात्रं नाप्यात्ममात्रम्, किं तु शरीरविशिष्टा आत्मान उच्यन्ते, एवमधिष्ठतृदेवतासहिता एव देवदत्तादयः पित्रादिशब्दैरुच्यन्ते। अतश्चाधिष्ठातृदेवता वस्वादयः पुत्रादिभिर्दत्तान्नपानादितृप्तास्सन्तस्तानपि देवदत्तादीन् तर्पयन्ति, कर्तृंश्च पुत्रादीन् फलेन योजयन्ति इति।

இவ்விஷய்த்தில், விஜ்ஞானேச்வரர்:— இந்த ச்ராத்த கர்மத்தில் தேவதத்தன் முதலியவர்களே நாலாம் வேற்றுமையால் குறிக்கப்பட்டவர்களாய், பிதா முதலிய சப்தங்களால் சொல்லப்படுவதில்லை. ஆனால், அதிஷ்டாதாக்களான வஸு முதலிய தேவதைகளுடன் கூடியவர்களாகவே சொல்லப்படுகின்றனர். எவ்விதம் தேவதத்தன் முதலிய சப்தங்களால் சரீரம் மட்டும் சொல்லப்படுவது இல்லையோ, ஆத்மா மட்டும் சொல்லப்படுவது இல்லையோ, ஆனால், சரீரத்துடன் கூடிய ஆத்மாக்களே சொல்லப்படுகின்றனரோ, இவ்விதம் அதிஷ்டாத்ரு தேவதைகளுடன் கூடிய தேவதத்தன் முதலியவர்கள் பித்ராதி சப்தங்களால் சொல்லப்படுகின்றனர். ஆகையால், அதிஷ்டாத்ரு தேவதைகளான வஸு ருத்ராதித்யர்கள் புத்ரன் முதலியவரால் கொடுக்கப்பட்ட அன்னபானாதிகளால் த்ருப்தர்களாய் இருந்து, அந்தத் தேவதத்தன் முதலியவர்களையும் த்ருப்தி செய்கின்றனர். ச்ராத்த

கர்த்தாக்களான புத்ரன் முதலியவர்களையும் ச்ராத்த பலத்துடன் சேர்க்கின்றனர்.

शातातपः — वसवः पितरो ज्ञेया रुद्रा ज्ञेयाः पितामहाः । प्रपितामहास्तथाऽऽदित्या इत्येषा वैदिकी श्रुतिः इति ।

சாதாதபர்:— வஸுக்களைப் பித்ருக்கள் என்று அறியவும். ருத்ரர்களைப் பிதாமஹர்களென்று அறியவும். ஆதித்யர்களை ப்ரபிதாமஹர்கள் என்று அறியவும். இது வேதத்தின் அபிப்ராயம்.

पैठीनसिः — वसवः पितरो रुद्राः पितामहा आदित्याः प्रपितामहा य एवं विद्वान् पितॄन् यजते वसवो रुद्रा आदित्याश्चास्य प्रीता भवन्ति इति। मनुरपि — वसून् वदन्ति तु पितॄन् रुद्रानेव पितामहान्। प्रपितामहांस्तथाऽऽदित्यान् श्रुतिरेषा सनातनीति। व्यासः — यथा गोषु प्रणष्टो वै वत्सो विन्दति मातरम्। एवं श्राद्धेऽन्नमुद्दिष्टं मन्त्रः प्रापयते पितॄन् इति।

பைடீனஸி:— வஸுக்கள், பித்ருக்கள். ருத்ரர்கள் பிதாமஹர்கள். ஆதித்யர்கள், ப்ரபிதாமஹர்கள் என்று எவன் இவ்விதம் அறிந்தவனாய் ச்ராத்தம் செய்கிறானோ, அவனுக்கு வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் ப்ரீதி உடையவர்களாக ஆகின்றனர். மனுவும்:— வஸுக்களைப் பித்ருக்களாகவும், ருத்ரர்களைப் பிதாமஹர்களாகவும், ஆதித்யர்களை ப்ரபிதாமஹர்களாகவும் சொல்லுகின்றனர், என்று இவ்விதம் ஸநாதனமான வேதம் சொல்லுகிறது. வ்யாஸர்:— எவ்விதம் வழி தவறிப்போன கன்றானது பல மாடுகளுள் தனது தாயான பசுவையே அடைகின்றதோ இவ்விதம் ச்ராத்தத்தில் கொடுக்கப்பட்ட அன்னத்தை மந்த்ரமானது பித்ருக்களை அடைவிக்கின்றது.

मत्स्योऽपि — नामगोत्रं पितॄणां तु प्रापकं हव्यकव्ययोः । नाममन्त्रास्तथाऽऽदेशा भवान्तरगतानपि । प्राणिनः प्रीणयन्त्येते

तदाकारत्वमागतान् । देवो यदि पिता नातः शुभकर्मानुयोगतः । तस्यान्नममृतं भूत्वा देवत्वेऽप्युपगच्छति । देवत्वे भोग्यरूपेण पशुत्वे तु तृणं भवेत् । श्राद्धान्नं वायुरूपेण नागत्वेऽप्युपतिष्ठति । पानं भवति यक्षत्वे गृध्रत्वे च तथामिषम् । दनुजत्वे तथा मांसं प्रेतत्वे रुधिरोदकम् । मानुषत्वेऽन्नपानादि नानाभोगकरं तथा । रतिशक्तिः स्त्रियः कान्ता भोज्यं भोजनशक्तता । दानशक्तिः सविभवा रूपमारोग्यमेव च । श्राद्धपुष्पमिदं प्रोक्तं फलं ब्रह्मसमागमः इति । नामानि - देवदत्तयज्ञदत्तादीनि, मन्त्राः - पृथिवी ते पात्रम् इत्यादयः, आदेशाः - इदमन्नादिकममुष्मै भवत्वित्येवमादि निर्देशाः, पुष्पम् - अवान्तरफलम् ब्रह्मसमागमः - ब्रह्मप्राप्तिः, परमफलं प्रोक्तमित्यर्थः ।

**मत्स्यरुम्:—** "நாமம் கோத்ரம் இவைகள் ஹவ்யகவ்யங்களைப் பித்ருக்களுக்கு அடைவிப்பவைகளாகும். நாமம், மந்த்ரம், ஆதேசம் இவைகள் வேறு ஜன்மத்தை யடைந்து அந்த ஆகாரத்தை யடைந்துள்ள ப்ராணிகளை ப்ரீதர்களாகச் செய்கின்றன. பிதா சுப கர்மத்தால் தேவத் தன்மையை அடைந்திருந்தால், அவனுக்கு ச்ராத்தான்னம் அம்ருதமாய்ப் பரிணமித்து, தேவத் தன்மையிலும் சேருகிறது. தேவத்தன்மையில் புஜிக்கக் கூடிய வஸ்துவாய்ச் சேருகிறது. பசுத் தன்மையில் புல்லாக ஆகின்றது. ஸர்ப்பத் தன்மையில் ச்ராத்தாந்நமானது காற்று ரூபமாய்ச் சேருகிறது. யக்ஷத் தன்மையில் பானமாக ஆகிறது. கழுகுத் தன்மையில் மாம்ஸமாக ஆகிறது. அஸுரத் தன்மையில் மாம்ஸமாக ஆகிறது. ப்ரேதத் தன்மையில் ரக்த ஜலமாக ஆகிறது. மனுஷ்யத் தன்மையில் பலவித ஸுகத்தை உண்டாக்கும் அன்னபானம் முதலியதாய் ஆகிறது. ரதி சக்தி, அழகிய ஸ்த்ரீகள், சாப்பிடக் கூடிய வஸ்து, போஜன சக்தி, தான சக்தி, விபவம், ரூபம், ஆரோக்யம் என்ற இவை ச்ராத்தம் என்ற மரத்திற்குப் புஷ்பங்கள் ஆகும். பலம் ப்ரம்ஹ

ப்ராப்தியாம்'', என்று நாமங்கள் = தேவதத்தன், யஜ்ஞதத்தன் என்பது முதலிய பதங்கள். மந்த்ரங்கள் = 'ப்ருதிவீ தே பாத்ரம்' என்பது முதலிய மந்த்ரங்கள், ஆதேசங்கள் = இது இவனின் பொருட்டு ஆகட்டும் என்று கொடுப்பது. புஷ்பம் = அவாந்தர பலம். ப்ரம்ஹப்ராப்தி சிறந்த பலன் என்று சொல்லப்பட்டுள்ளது.

हारीतः — कालेऽन्यथागतं पात्रे विधिना प्रतिपादितम् । प्राप्नोत्यन्नं तथा दत्तं जन्तुर्यत्रोपतिष्ठते । यन्नाम्ना पातयेत् पिण्डं तं नयेत् ब्रह्म शाश्वतम् इति ।

ஹாரீதர்:— புண்ய காலத்தில், யோக்யனான ப்ராம்ஹணன் இடத்தில், விதிப்படி கொடுக்கப்பட்ட அன்னம் வேறு விதமாக மாறி உத்தேச்யனான ஜந்து எங்கிருக்கின்றானோ அங்குச் சேருகின்றது. எவனுடைய பெயரைச் சொல்லிப் பிண்டத்தைக் கொடுக்கின்றானோ அவனைச் சாச்வதமான ப்ரம்ஹத்தை யடைவிக்கும்.

श्राद्धकाण्डस्य उत्तरभागः समाप्तः

ச்ராத்த காண்டத்தின் உத்தரபாகம் முற்றிற்று.

स्मृतिमुक्ताफलाख्ये धर्मशास्त्रे

श्राद्धकाण्डो नाम चतुर्थः परिच्छेदः ।

—*—

